# கந்தர் அநுபூதி

## அருணகிரிஹ்ருதயம்

விரிவுரை:
தாராகாடு கிருஷ்ணய்யர்
**ஸ்ரீ. பத்மனாபன்**





கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ்

3-5

# கந்தர் அநுபூதி

## அருணகிரிஹ்ருதயம்

விரிவுரை:
தாராகாடு கிருஷ்ணய்யர்
ஸ்ரீ. பத்மநாபன்




கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ்

எமது
ஆருவது வெளியீடு

விலை ரூ. 12-50



கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ்
279, தம்பு செட்டி தெரு,
சென்னை-1

3-5

ஓம் முருகா

# சமர்ப்பணம்

தாய்மார்களே! பக்தகோடிகளே!

அடியார்களின் பெருமையே ஆண்டவனின் பெருமையாகயிருப்பதால் உங்கள் ஒவ்வொருவரையும் அடியார்களாகக் கருதி எல்லாம்வல்ல முருகப் பெருமானின் பரிபூரண வடிவமாகிய

## கந்தர் அநுபூதியை

# அருணகிரி ஹ்ருதயம்

என்னும் வேதப்ரமாண விரிவுரையுடன் கூட, இந்த தமிழ் வருடப் பிறப்பு புத்தாண்டு புண்ணிய தினத்திலே எங்களது ஆருவது வெளியீடாக உங்களிடம் பெருமையுடனும், மகிழ்ச்சியுடனும் அளவிலா அன்புடனும் அளிக்கிறேம்.

இதில் ஏதேனும் குறையிருக்குமாஞல் பொருளின் மகத்துவத்தை எண்ணி பொருத்து அருளுமாறு தாழ்மையுடன் வேண்டிக் கொள்கிறேம்.

வணக்கம்

**வள்ளியம்மை - அண்ணுமலே**

பதிப்பாளர்

# பொருளடக்கம்

# கந்தர் அநுபூதி

# பதிப்புரை

பக்த கோடிகளுக்கு வணக்கம்,

ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிய நூல்களில் மிகச் சிறந்தது 'கந்தர் அநுபூதி' என்னும் மந்திர நூலே யாகும். ஸம்ஸ்க்ருதத்தில் அக்ஷரங்கள் ஐம்பத்து ஒன்று. ஐம்பத்தொரு அக்ஷரங்களும் ஐம்பத்தொரு மந்திரமேயாகும். அந்த 51 மந்திராக்ஷரங்களே கந்தர் அநுபூதியில் 51 பாடல்களாக விரிவடைந்திருக் கின்றன.

புத்தக வெளியீடு ஆரம்பித்த தினத்திலிருந்தே 'கந்தர் அநுபூதியை' வேதப்ரமாண உரையுடன் ஒரு மாபெரும்புத்தகமாக வெளியிடவேண்டும்என்ற அவா என் உள்ளத்திலிருந்து கொண்டே இருந்தது. முருகனின் திரு அருளினால் இவ்வருடம் என்னுடைய அவா பூர்த்தியானது.

ஆழ்ந்தகடலில் எண்ணற்ற ரத்தினங்கள் அமுங்கி யிருப்பதுபோல் இந்த நூலில் ஆழ்ந்த உபநிஷத் கருத்தினைக் கொண்ட வேதாந்த தத்வங்களே அடங்கி யுள்ளன. இருளைப் போக்கும் ஞானச் சுடரே கந்தர் அநுபூதியாகும்.

முருக பக்தர்களுக்கு இது ஒரு ஒப்பில்லாத பொக் கிஷம். ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்க வேண்டிய நூல்.

"ஞால மெல்லாம் முருகனின்" பெருமை திகழ வேண்டும் என்றும், எல்லோரும் கந்தர் அநுபூதியைப் பொருளுணர்ந்து அனுபவிக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்தில் உரை ஆசிரியர் தாராகாடு கிருஷ்ணய்யர் ஸ்ரீ பத்மனுபன் அவர்கள் இப் புத்தகத்தை பாமர ஜனங்களிலிருந்து சுலபமாகப் புரிந்து கொள்ளும்படி மிகவும் எளிய தமிழ்நடையில் பக்திச்சுவை குன்ருமல் அதிகரித்துக் கொண்டிருக்கும் வண்ணம்

## அருணகிரிஹ்ருதயம்

என்னும் தத்துவார்த்த விரிவுரை எழுதியிருக்கிருர்கள்.

உரை ஆசிரியர் ஸ்ரீ பத்மனுபன் அவர்கள் ஆழ்ந்த ஸம்ஸ்க்ருத ஞானமும் தமிழ் ஞானமும் உடையவர்கள்.

ஸ்ரீமத் வால்மீகிராமாயணத்தில் வால்மீகி மஹர்ஷியானவர் யுத்தகாண்டத்தில் கடைசி ச்லோகத்தில் 'இராமாயணத்தை ஒவ்வொருவரும் கையாலே எழுத வேண்டும், தான் எழுதாவிட்டால் பிறரையாவது இராமாயணம் முழுமையும் எழுதும்படி செய்யவேண்டும் என்று சொல்லியிருக்கிருர்கள். வால்மீகி முனிவர் அருளிய வண்ணமே உரை ஆசிரியர் தாராகாடு கருஷ்ணய்யர் ஸ்ரீ பத்மனுபன் அவர்கள் தன்கையாலே 24000 ச்லோகம் கொண்ட ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் முழுவதையும் மிகவும் அழகாக எழுதி ஐந்து பெரிய புத்தகங்களாக பைண்டு செய்து வைத்திருக்கிருர்கள். காணவேண்டிய அத்புதமான காட்சி அது.

ஆசிரியர் அவர்களுடைய குடும்பமே ஸ்ரீராம பிரானை குலதெய்வமாகக்கொண்டு ராமாயணத்தில் மிகவும் ஈடுபாடுள்ளவர்கள். ஆசிரியர் அவர்கள்,

ஸ்ரீ ஆதிசங்கரபகவத் பூஜ்யபாதாள் அருளிய சிவானந்தலஹரீ, மனீஷா பஞ்சகம், அம்பாபஞ்சரத்தினம், சிவ பஞ்சாக்ஷரஸ்தோத்திரம், ஏகச்லோகி முதிய உயர்ந்த நூல்களுக்கு விரிவான தத்வார்த்த வியாக்யானம் எழுதியிருக்கிறார்கள்.

அப்படியே பெரியபுராணம் முழுமையும் கதாரூபத்தில் 'சேக்கிழார் தந்த செல்வம்' என்று எழுதிக் கொண்டிருக்கிறார்கள், அச்சிலிருக்கிறது.

இறைவனுடைய பெருமையைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதையே பெரும் பாக்கியமாகவும் செல்வமாகவும் எண்ணிவருகிற ஆசிரியர் ஸ்ரீ பத்மனுபன் அவர்களுக்கும் அவர் குடும்பத்தினர்களுக்கும் சகல விதமான நன்மைகளையும் அருள்புரியுமாறு எல்லாம் வல்ல அருள் தெய்வமாகிய முருகப்பெருமான் பொற்பாதங்களை இடைவிடாமல் வாழ்த்தி வணங்குகின்றேன்.

இவ்வரிய நூலைப் படித்து பக்தர்கள் முருகப் பெருமானின் கருணைக்குப் பாத்திரமாகி எல்லா ஐச்வர்யங்களுடன் விளங்கவேண்டும் மென்பதேஎன்னுடைய சிறந்த ஆசையாகும். இதையே மேலான எனது பாக்ய மாகவும் நான் மனபூர்வமாக கருதுகிறேன்.

இப் புத்தகமானது ஸ்ரீஜகத் குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் அவர்களுடைய ஸ்ரீ முகத்தினுல் அலங்கரிக்கப்பட்டிருப்பது மல்லாமல், திருச்செந்தூர்-பழநிமலை-ஸ்வாமிமலை-திருத்தணியாகிய நாலு படை வீடுகளிலிருந்து வந்தநல் வாழ்த்துக்களினுலும் அலங்கரிக்கப் பட்டிருக்கிறது என்பதை மிகப்பெருமையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

மற்றும் திருப்பரங்குன்றம் — பழமுதிர்சோலை ஆகிய இரண்டு படைவீடுகளிலிருந்து நல்வாழ்த் தானது ஸமயத்தில் வராதபடியினாலும், புத்தாண்டு புண்ணிய தினத்தில் புத்தகத்தை வெளியிடவேண்டும் என்பதினாலும், திருப்பரங்குன்றம்-பழமுதிர்சோலை ஆகிய படைவீடுகளில் அருளைப்பொழிந்து கொண்டிருக்கும் முருகனை உள்ளமுருகி வரகவி திரு. அ. சுப்ரமணியபாரதியார் பாடியருளியதெய்வீகபாடலையே திருப்பரங்குன்றம்-பழமுதிர்சோலை ஆகிய படைவீடுகளிலிருந்து வந்த நல்வாழ்த்தாக கருதி இப்புத்தகத்தை அலங்கரித்துயிருக்கிறோம்.

தவிர, இப்புத்தகத்திற்கு மதிப்புரையும், நல்வாழ்த்தும் எழுதியனுப்பிய, தர்மசீலரான ப்ரும்மஸ்ரீ பரூர். வைத்யநாத கனபாடிகள் அவர்களுக்கும்

தத்துவசக்ரம்—கல்கத்தா—செயலாளர் ஸ்ரீ E. C. சந்திரசேகரசாஸ்திரி அவர்களுக்கும், அப்படியே தமிழ் மாணவர் மன்றம்-தலைவர், திரு. மு. நாராயணஸ்வாமி அவர்களுக்கும் எமது நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

அப்படியே முக்கியமாக 'ஸௌந்தரா பிரிண்டர்ஸ்' உரிமையாளர் ஸ்ரீ முருகப்பன் அவர்களும் மேனேஜர் ஸ்ரீ தெய்வசிகாமணி அவர்களும், அப்படியே அங்கு பணியாற்றிவரும் அன்பர்கள் அனைவரும், கந்தர் அநுபூதியை அச்சிட்டு முடித்துதரும் விஷயத்தில் எடுத்துக்கொண்ட முயற்சியை என்னால் மறக்கவே முடியாது. முருகனுடைய அருள் அவர்களுக்குத் துணையாகயிருக்க முருகப்பெருமானை வேண்டிக் கொள்கிறேன்.

நிற்க, கந்தர் அநுபூதியை இப்பொழுது வெளி யிட்டதுபோலவே, அன்னை பராசக்தியின் அழகினை பாதாதிகேசம் வரையில் வர்ணிக்கின்ற, ஸ்ரீ அபிராம பட்டர் அருளிய 100 தெய்வீகப் பாடல்களைக்கொண்ட **அபிராமி அந்தாதி**யையும் 1500 பக்கங்களில் **(In Demi Size)** ஒரு மாபெரும் புத்தகமாக வெளியிட இச்சைகொண்டு, ஆசிரியர் தாராகாடு கிருஷ்ணய்யர் ஸ்ரீபத்மனுபன் அவர்களிடம் என் அவாவைத் தெரிவித் தேன். அவரும் என் இச்சைக்கு இணங்கி 'அபிராமி அந்தாதியிற்கு'

## ஸௌந்தர்ய ஸமுத்திரம்

என்னும் தத்வார்த்த விரிவுரை எழுதிக்கொண்டிருக் கிருர்.

பக்தகோடிகளாகிய உங்களுடைய அன்பும் நல்லாசியும் ஆதரவும் இருக்குமானுல் கூடிய சீக்கிரத்திலே 'அபிராமி அந்தாதியும்' வெளிவரும்.

வீரவேல் வெற்றிவேல்

வணக்கம்.

**திருமதி வள்ளியம்மை-அண்ணுமலை**

வெள்ளிக்கிழமை, 31—3—1967

உரிமையாளர், கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ்.

உ

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரியார் ஸ்வாமிகள்
ஸ்ரீ மடம்

# காஞ்சீபுரம்

முத்திரை

முகாம் - ஸ்ரீசைலம் தேதி 27—3—1967
கர்னூல் ஜில்லா

To

ஸ்ரீ K. R. அண்ணுமலை
கார்த்திகேயன் ப்ரசுராலயம்
279, தம்பு செட்டித் தெரு.
சென்னை—1

தாங்கள் ஸ்ரீசைலம் முகாமில் நேரில் ஸமர்ப்பித்துள்ள கந்தர் அநுபூதி—(அருணகிரி ஹ்ருதயம் என்னும் உரையுடன் கூடியது.) நூல் பரிசீலிக்கப்பட்டு இதற்கு ஸ்ரீ மஹாஸந்நிதானத்தில் அனுக்ரஹித்துள்ள ஸ்ரீ முகத்தை இத்துடன் அனுப்பியிருக்கும் விவரம் தெரிவிக்கலான கார்யம்.

ஆக்ஞைப்படி
Sd.
மானேஜர்

# ஸ்ரீ சைலத்திலிருந்து ஸ்ரீ ஜகத்குருவின் ஸ்ரீமுகம்

முத்திரை

ஸ்ரீ மத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாச்சார்யவர்ய ஸ்ரீமத் சங்கர பகவத் பாதப்ரதிஷ்டித ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிப ஜகத்குரு ஸ்ரீமத் சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ பாதாதேசா நுஸாரேண ஸ்ரீமத் ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ பாதை:

க்ரீயதே நாராயணஸ்ம்ருதி :

தேவர்களின் ப்ரார்த்தனைக்கு இணங்கிய சிவ பிரானுக்கும் ஸர்வமங்களையான அம்பாளுக்கும் குமாரராக ஆவிர்பவித்து சூரபத்மன் முதலிய அஸுரர்களை நிக்ரஹித்து படைவீடுகளில் விசேஷஸான்னித்யத்துடன் அமர்ந்து அடியார் களுக்கு அனுக்ரஹம் புரிந்து வரும் முருக பிரானின் பூர்ண அருளைப் பெற்ற பக்தரான ஸ்ரீ அருணகிரி யாரிடமிருந்து தன் அனுபவ ருபமாக ஆவிர்பவித்துள்ள **கந்தர் அநுபூதி** என்னும் உத்தம நூல் முருக பிரானின் வாக்குக்கு எட்டாத ஸ்வரூபம். ஞானப்பழமாய் நின்று ஈசருடன் ஞான மொழி பேசும் திருவிளையாடல்,

முருகத்யானத்தின் மேன்மை, எல்லா ஜாதியின ருக்கும் தாய் தந்தையாயிருந்து கருணை புரியும் மாண்பு, முருகனடியார் திருக் கூட்டத்தில் சேர்வ தால் ஏற்படும் நற்பயன் முதலிய உயர்ந்த விஷயங்களை தெய்விகத் தமிழ் செய்யுள்கள் ரூபமாய் விளக்குகிறது.

முருக பக்தர்களால் பாராயணம் செய்யப் படும் இவ்வுயர்ந்த நூலுக்கு தாராகாடு கிருஷ் ணய்யர் குமாரரும் ஆழ்ந்த சாஸ்திர ஞான முடைய வருமான ஸ்ரீ பத்மநாபன் இயற்றி யிருக்கும் **அருணகிரிஹ்ருதயம்** என்னும் உரையானது பதவுரை, தாத்பர்யம் இவைகளின் மூலம் இவ்வனுபூதியின் தத்வார்த்தங்களை பல் வேறு உபநிஷதகள், பகவத் கீதை, சங்கர பகவத் பாதாளின் ஸூக்திகள், தேவாரம், திருவாசகம் முதலிய ப்ராசீன ஸம்ஸ் கிருத-தமிழ் நூல்களைப் ப்ரமாணங்களாகக் கொண்டு விவரிக்கிறது.

அந்த அந்த இடங்களில் உரை ஆசிரியர் அஞ்ஞானம்-அத்வைத தத்வஞானம்-அருள்-எண் குணங்கள் - கொடை-தியாகம்-காவடி ஆட்டம் முதலியவைகளை விஸ்தாரமாக வர்ணித்திருக் கிறார்.

இத்துடன் ஆரம்பத்தில் உரை ஆசிரியர் எழுதியிருக்கும் அருணகிரியார் சரித்ரமும், கடைசியில் சேர்க்கப்பட்டிருக்கும் கந்தர் அநுபூதி மஹா அனுக்ரஹ சக்ரம், இதை பூஜிப்பவர் களுக்கு அனுகூலமாக உரை ஆசிரியர் வர்ணித்

திருக்கும் இதன் மஹிமை, பூஜாவிதி இவை களும் பக்தர்களுக்கு முருகன் வழிபாட்டிற்கு உற்ற துணையாகும்.

இத்தகைய மஹிமை வாய்ந்த கந்தர் அனு பூதியை உரையுடன் படிக்கும் பக்தர்களும், உரை ஆசிரியரும்; இதை வெளியிடும் கார்த்தி கேயன் என்னும் பொருத்தமான பெயரையுடைய ப்ரசுராலயத்தினரும் முருகன் அருளைப் பெற்று எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

யாத்ராஸ்தானம்<br>ஸ்ரீசைல க்ஷேத்ரம் }

பராபவ பால்குன<br>பஹுள த்விதீயை } **நாராயணஸ்ம்ருதி:**





ஆறுபடை வீடுகளிலிருந்து
நல்வாழ்த்துக்கள்



திருச்செந்தூர்

திருப்பரங்குன்றம்

பழனி

சுவாமிமலை

திருத்தணிகை

பழமுதிர்சோலை



ஸ்ரீ

சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம்

# திருச்செந்தூர்

திரு. T. S. சங்கரநாராயணன் B.A.,
நிர்வாக அதிகாரி தேதி. 17-3-1967

To

திருமதி வள்ளியம்மை-அண்ணுமலை
கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ்
279, தம்புசெட்டி தெரு
MADRAS-1

அம்மையீர்,

பொருள்:— புத்தக வெளியீடு – அருணகிரிஹ்ருதயம் மதிப்புரை.

குறிப்பு:— தங்கள் 8–3–67 கடிதம்

தங்களின் பணிக்குச் செந்திலாண்டவன்
**திருவருள் சுரக்க**
அவனது திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

(Sd) T. S. SANKARANARAYANAN
நிர்வாக அதிகாரி
17-3-67

திருமண திருக்கோலத்துடன்
கல்யாண சுப்பிரமணியனுய்
முருகப் பெருமான் எழுந்தருளியிருக்கும்

# திருப்பரங்குன்றம்

சீர்த்தியாய்த் துதிகள் பாடித்
திருவடிக் கலர்கள் தூவி
ஆர்த்தியாய் வழிபா டாற்றும்
அன்பரின் இதயக் கோவில்
மூர்த்தியாய் விளங்கும் எங்கள்
முதிர்பரங் குன்றில் வாழும்
கார்த்தி கேயன் கைவேலைக்
காண்பதே யெமக்கு வேலை.

—வரகவி திரு. அ. சுப்ரமணிய பாரதி

ஸ்ரீ தண்டாயுதபாணி தேவஸ்தானம்

# பழனி

ஸ்ரீ கே. கே. மேனோன்,
பி. ஏ. பி. எல்.,

நிர்வாக அதிகாரி. தேதி 14—3—1967

திருமதி வள்ளியம்மை—அண்ணாமலை,
கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ்,
279, தம்பு செட்டித் தெரு,
சென்னை.

அன்புடையீர்!

**கந்தர் அநுபூதி** எனும் நூல் வெளியிட எடுத்துக்கொண்ட முயற்சி பாராட்டத்தக்கது.

**கந்தன் கருணையை** விளக்க எல்லா முயற்சியும் எடுத்துக்கொண்ட தொண்டு சிறக்க வாழ்த்துகின்றேன்.

(Sd)
நிர்வாக அதிகாரிக்காக,

ஸ்ரீ

சுவாமிநாதஸ்வாமி தேவஸ்தானம்

# சுவாமிமலை

திரு. எஸ். சோமசுந்தரம் B. A. B. L., தேதி: *13-3-1967*
நிர்வாக அதிகாரி

முருகபக்தி அண. வள்ளியம்மை அவர்கள்
கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ்
*279*, தம்பு செட்டி தெரு,
சென்னை–*1*.

## நல்வாழ்த்து

தங்களின் 8-3-1967ந் தேதி கடிதம் கிடைக்கப் பெற்றேன். மிக்க மகிழ்ச்சி. தாங்கள் வெளியிடயிருக்கும் கந்தர் அனுபூதி என்னும் வெளியீட்டிற்கு என்னுடைய நல்வாழ்த்தினை இத்துடன் அனுப்பியுள்ளேன். ஸ்ரீ சுவாமிநாதன் திருவருளால் யாவும் இனிதே நிறைவேர பிரார்த்திக்கின்றேன்.

அருள்வடிவான முருகப்பெருமான் திருவருளால் ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் ஆட்கொள்ளப்பட்டு ஞானக்கண் கொண்டு கந்தப் பெருமானைப் பார்த்து பரவசப்பட்டு நினைந்து உருகி அனுபவித்து பாடப்பட்டது கந்தரனுபூதியாகும்.

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகளால் பாடப் பட்ட திருப்புகழில் சகல சாத்திரக் கருத்துக் களும் விரித்து ஒவ்வோர் இடங்களிலும் சொல்லப் பட்டுள்ளது. அப்படிப்பட்ட திருப்புகழ் 16,000 என்பர். இப்போது இருப்பது 1360 ஆகும். இதில் பேசப்பட்ட வேத, ஆகம, இதிகாச கருத் துக்களை அனுபூதி 51 பாடலில் சுருக்கியும், ஆழ்ந்த கருத்துடனும் பக்தி வெள்ளத்தில் மூழ்க வைக்கின்றார் அருணகிரியார்.

அத்துணைச் சிறப்புக்கொண்ட அநுபூதியை நீங்கள் பாராயணஞ் செய்து பக்தி வெள்ளத்தில் திளைத்து அனுபூதிக்கு விரிந்த தத்துவார்த்தக் கருத்துக்களை விளக்கி இருக்கின்றீர்கள்.

ஸ்ரீ முருகப்பெருமான் தங்களின் முதிர்ந்த பக்தி அன்பிற்கு திருவருள் துணை இருப்பார் என்பதில் சந்தேகமில்லை.

"வரும் அடியவர்கள் திருமுறையின் அபயம்
தெரிந்து அன்னவர்க்கு வரம் அருளும்
கருணைத் திருநகையும் புரியும்."

என்ற சிதம்பர சுவாமிகள் வாக்கின்படி அருளை வாரி வழங்கும் **ஸ்ரீ சுவாமிநாதன்** எல்லா நல னும் தங்களுக்கு கொடுக்கும்படி வேண்டு கின்றேன்.

தங்கள்,

Sd. எஸ். டி. சோமசுந்தரம் B.A., B.L.
நிர்வாக அதிகாரி.

## ஸ்ரீ சுப்பிரமண்ய ஸ்வாமி தேவஸ்தானம்

# திருத்தணி

SRI. V. K. VELUSAMY, BA
EXECUTIVE OFFICER

தேதி. 9—3—1967

### நல் வாழ்த்து

எல்லாம் வல்ல முருகப் பெருமானின் பேரருளைப் பரிபூரணமாகப் பெற்ற ஸ்ரீ அருணகிரி நாதர் அருளிய 'கந்தர் அநுபூதி'யிற்கு தாராகாடு கிருஷ்ணய்யர் ஸ்ரீ பத்மனுபன் "அருணகிரி ஹ்ருதயம்" என்னும் தத்துவார்த்த விரிவுரை யொன்றை மிகச் சிறந்த முறையில் ஆக்கியுள்ளார்கள்.

ஒவ்வொரு பாடலிலும் முருக பக்தியை வாரிச் சொரிந்துள்ளார்கள்.

ஸ்ரீ அருணகிரி நாதருடைய கந்தர் அநுபூதியை பக்த கோடிகள் அனைவரும் நன்குணர்ந்து படித்து, பேரின்பம் அடையுமாறு அமைத்துள்ள "அருணகிரிஹ்ருதயம்" ஒரு சிறந்த தத்துவார்த்த விரிவுரை நூலாகும்.

இச்சிறந்த நூலை ஆக்கித் தந்த ஸ்ரீ பத்ம ஞபன் அவர்களுக்கு எங்கள் நன்றி கலந்த வாழ்த்துக்கள் உரித்தாகுக.

பெரு முயற்சி செய்து இந்நூலைச் சிறப்புற அச்சிட்டு வெளியிடும் 'கார்த்திகேயன் பப்ளி கேஷன்ஸ்' உரிமையாளர் திருமதி அண. வள்ளி யம்மை அவர்களையும் பாராட்டுகிறோம்.

Sd. வி. கே. வேலுசாமி.
EXECUTIVE OFFICER
ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமி
தேவஸ்தானம் திருத்தணி

*வியாழக்கிழமை*
*மஹாசிவராத்திரி*
*புண்ணியதினம்*
*9—3—1967*



மஹா ஸாநித்ய மஹிமையுடன்
முருகப் பெருமான் எழுந்தருளியிருக்கும்

# பழமுதிர்சோலை

புவனமோர் மூன்றும் வாழப்
புராரிதன் நுதற்கண் நோக்கில்
அவிர்சுடர் ஒளியாய்த் தோன்றி
அறுமுகத் தேவாய் அன்பர்
பவபயம் ஒழித்துக் காக்கப்
பழமுதிர் சோலை மேவும்
சிவசுப்ர மண்யன் வேலைச்
சேவிப்ப தெமக்கு வேலை.

—வரகவி திரு. அ. சுப்ரமணிய பாரதி

# Tatwa Chakra

SEAL

K. R. RADHAKRISHNAN,
President.

E. C. SHASTRY,
Secretary.

P-82, Sardar Shankar
Road, Culcutta-29.

Dated 13—3—1967

TATWAM VIDHUSHAM PRIYAM

## நல்வாழ்த்து

வடமொழியிலும் தமிழிலும் புலவர் மணியாய் பக்த சிரோமணியாய் விளங்குகின்ற திரு. தாராகாடு கிருஷ்ணய்யர் பத்மனுபன் அவர்கள் கடந்த பத்து ஆண்டுகளுக்கு மேலாக சிவானந்தலஹரி, மனீஷாபஞ்சகம், ஏகச்லோகி, சேக்கிழார் தந்த செல்வம், அம்பா பஞ்சரத்தினம், சிவபஞ்சாக்ஷரம் போன்ற பல அரிய பெரிய நூல்களுக்கு விரிவான தத்துவப்பொருளேயும் அவற்றை ஓதுவதால் அடையும் பயனேயும் நன்கு விளக்கியிருப்பது மூலம் ஆஸ்தீகப் பெருமக்களுக்கு மிகச்சிறந்த தொண்டாற்றியுள்ளார் என்பது தெளிவு.

பக்தகோடிகளுக்கென்றே பணி செய்வதை மூச்சாய்க்கொண்ட திரு. பத்மனுபன் அவர்கள் தான்

பெற்ற இன்பத்தை—அனுபவித்ததை பிறரும் பெற வேண்டும் என்ற கருத்துக் கிணங்கி 'கந்தர் அநுபூதி அல்லது அருணகிரிஹ்ருதயம்' என்ற அன்னாரின் அருள்மொழிகளை வேதம், உபநிஷத், ஸ்ம்ருதி—சாஸ்திரம்—தேவாரம் திருப்புகழ்-திருமந்திரம் ஆகிய வற்றிலிருந்து தக்க மேற்கோள்கள் ஆதாரங்களுடன் பதவுரை-தத்துவப்பொருள் விளக்கங்கள் இவை அத்தனையும் கொண்ட மிகப்பெரிய விரிவுரை நூலாக சுமார் 1000 பக்கங்களில் இன்னும் சில தினங்களில் வெளியிடுவதுபற்றி பாமரனான அடியேனுக்கு பரமானந்தம் அளிக்கிறது.

**முருகா** என்று ஒருமுறை தன்னை மறந்து பக்திச் சுவை சொட்டச்சொட்ட கூவி அழைத்தால் உள்ளம் உருகும். உடனே கந்தனின் கருணைவடிவம் கண் முன்னே வந்து நிற்கும். இந்நிலையை பக்தகோடிகள் பெறவேண்டும் என்றே 'கந்தர் அநுபூதியை வெகுவிரிவாக பக்திரஸத்துடன் வேதம் உபநிஷத்துப்ரமாணங்களுடன் நூதன முறையில் நமக்கு வழங்குகின்றார் திரு. பத்மனாபன் அவர்கள் பெருமைக்குரிய கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ் மூலமாக.

அவர் நம்மிடையே பல்லாண்டிருந்து தமிழுக்கு, தமிழினத்துக்கு, ஏன், பாரதத்துக்குமே பலப்பலபணி புரிந்துவர அன்னை பராசக்தி கல்கத்தா காளி அருள் கோரி பிரார்த்தனை செய்கிறேன்.

அன்பு
வங்கத் தமிழன்
**(Sd) ஈசுவர சந்திரசேகர சாஸ்திரி**
*தத்துவ வட்ட நிறுவனர்-செயலாளர்*

# தமிழ் மாணவர் மன்றம்

# கல்கத்தா

M. NARAYANASWAMY,
President

8-B, Shyamananda
Road, Bhowanipur.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

'முருகு' என்ற இளவழகன் பெருமையை ஓதி ஓதி உணர்ந்து தெளிந்து ஞானோதயம் பெற்றவர் தாராக்காடு கிருஷ்ணய்யர் திரு பத்மனாபன் அவர்கள். அன்னாரது சிறந்த அருட்புலமையை ஆற்றலை நன்குணர்ந்த "கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ்" உரிமையாளர் ஸ்ரீ அருணகிரியார் அருளிச்செய்த அமுத வெள்ளமாம் 'கந்தர் அநுபூதி'க்கு இதுவரையிலும் வெளிவராதமுறையில் தக்கவர்வழி அருணகிரியின் அமுதவெள்ளத்தை வாரியிரையச் செய்திருக்கின்றனர் அதன் பயனாக நாம் பெற்றதுதான் இந்த அருமையான "அருணகிரிஹ்ருதயம்" என்ற நூல்.

மானிடப்பிறவியெடுத்து; பிறவியினால் அல்லற்படும் மக்களுக்கு, கொழுகொம்பின்றி அலைந்தாடும் கொடிகள் போன்று மனம்போன போக்கில் உழன்று திரியும் மக்களுக்கு—இறைவன் திருவடியின் பெரு

மையை உணர்த்துவதற்கு "அருணகிரிஹ்ருதயம்" என்ற நூல் கலங்கரை விளக்கமாகும்.

மாயை நிறைந்த மண்ணுலகில் நல்ல வண்ணம் வாழ 'அருணகிரிஹ்ருதயம்' என்னும் இந்த நன்னூல் மக்களுக்கு மிகவும் பயனுள்ள துணைமிகுந்த பெரு நூலாகும்.

கந்தன் கருணையை நினைந்து நினைந்து, உள்ளத்தில் அன்பு சுரக்க நனைந்து நனைந்து நெக்குருகி அருள் வெள்ளம் பெருக்கி, வார்கடலாக ஆக்கி இன்புருகு சிந்தையினின்று எழும் பக்தியூற்றுகவரும் எண்ணம் என்ற மைவண்ணத்தால்

## அருணகிரி ஹ்ருதயம்

என்ற அழியா பக்தி இலக்கியப் பெருநூலை நமக்கு அன்புடன் வழங்கியிருக்கிறார் இந்த நூலாசிரியர்.

கந்தன் கருணையாகிய அமுத வெள்ளத்தை தனது அன்பு என்ற எழுதுகோல்கொண்டு "அருணகிரி ஹ்ருதயம்" ஆக்கிய ஆசிரியரின் பெருமையை என்ன வென்று சொல்லி பாராட்டுவது.

சொன்னவர் வாய்மணக்க, கேட்டவர் காதினிக்க எடுத்தவர்—தொட்டவர் கைமணக்க—பார்த்தவர் கண் மணக்க, கொடுப்பவர் இதயம் மணக்க வைத்த இடம் மணக்க ஒவ்வொரு பாடலிலும் கந்தன் கருணையாம் அமுதவெள்ளம் கரைபுரண்டு ஓடிக்கொண்டேயிருக்கும் வண்ணம் இந்த நூலின் பெருமை விளங்குகின்றது.

ஆன்மீக வாழ்வு பெற ஆதீனத்தவர் பலர்கூடி "தெய்வீகப்பேரவை" நிர்மாணம் செய்தனர்.

சொல்வதைவிட செய்துகாட்டுவது சிறந்தது என்பதை உணர்ந்துவபோல;

"ஆடும் பரிவேல் அணிசேவல் எனப்
பாடும் பணியே பணியாய் அருள்வாய்"

என்ற அருணகிரியின் அருள்மொழிக்கு ஏற்ப தாராகாடு கிருஷ்ணய்ய்யர் திருபத்மனுபன் அவர்கள்.

"தாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக" என்று நமக்கு இந்த நூலை வழங்கியுள்ளார்கள்.

சடையப்ப வள்ளல்போல கார்த்திகேயன் பதிப்பகத்தார், சுந்தரதீங்கலைக் கடலாம் வால்மீகி இராமாயணத்தை முற்றும் மாந்தி தூயதொரு மெஞ்ஞான உணர்வுகொண்ட திரு. பத்மனுபன் அவர்களை துணைகொண்டு இந்நூலை அருளாளர் பலருக்கும் ஈந்து அறியாமை இருளை அகற்ற எடுத்துக்கொண்ட பணி கந்தன் கருணையினுல் வெற்றிபெற்றது. வாழ்க! திருவினைகள்.

வையகம் உய்ய அன்னை பராசக்தி

**கல்கத்தாகாளி**

அருள்புரிவாளாக.

(Sd) மு. நாராயணசாமி
தமிழ் மாணவர் மன்றம்—தலைவர்

# வைதீச்வர நிலையம்

எல்லையம்மன் காலனி
No. 27 3rd Cross Road.,
வேளாள தேனும்பேட்டை
சென்னை.

வேதோ நித்யமதீயதாம்
ததுதிதம் கர்மஸ்வநுஷ்டீயதாம்—ஸ்ரீ ஆதிசங்கரர்.

## நல்வாழ்த்து

'கந்தர் அநுபூதி' முருகப் பெருமானின் ஸ்வருபமே ஆகும். ஸ்ரீ முருகப் பெருமானின் திருவருளைப் பெற்று முருகப் பெருமான் வலது தோளில் கிளிருபத்தில்யிருந்து கொண்டு வேதங்களிலுள்ள மஹாவாக்கியங்களின் ஸாரத்தை கந்தர் அநுபூதி வடிவில் ஒரு அற்புதமான திவ்ய பாமாலையாக தந்து அருளியிருக்கிறார் ஸ்ரீ அருணகிரி நாத சுவாமிகள்.

இத்தகைய புண்ணியமான நூலிற்கு தர்மானுஷ்டான பரரும் ஆசார சீலரும், மேலான சாஸ்திர ஞானமுடையவரும், ஸதா ராம நாமத்தில் மூழ்கிக் கிடப்பவரும் ஆன ஸ்ரீ தாராகாடு கிருஷ்ணய்யர் அவர்களுடைய புத்திரர் ஸ்ரீ பத்மநாபன் அவர்கள் 'அருணகிரிஹ்ருதயம்' என்னும் அபூர்வமான வேதப்ரமாண வ்யாக்யானம் எழுதி தந்திருக்கிறார்கள்.

இந்த வியாக்யானத்தை நடமாடும் கண் கண்ட தெய்வமாகிய ஸ்ரீ ஜகத்குரு காமகோடி சங்கராச்சார்ய சுவாமிகள் பார்த்து மனம் மகிழ்ந்து அநுக்ரஹித்துயிருக்கிறார்கள். ஸ்ரீ ஜகத்குருவின் திவ்ய அருளுடன் விளங்கும் இந்த

**அருணகிரி ஹ்ருதயம்**

என்ற புண்ணிய நூல்எல்லா பக்த கோடிகளையும்

**கந்தன் கருணையில்**

மூழ்க வைக்கும் என்பதில் சந்தேகமில்லை.

இத்தகைய 'அருணகிரிஹ்ருதயத்தை' தந்த தாராகாடு கிருஷ்ணய்யர் ஸ்ரீ பத்மநாபன் குடும்ப ஸமேதம் அவர்களுக்கு, ' ஆறுபடை வீடுகளில் மஹாஸாந்நித்யத்துடன் விளங்கி வரும் எல்லாம் வல்ல முருகப் பெருமான், ஸகல விதமான ஐச்வர்யங்களுடன் நோயற்ற வாழ்வையும் குறைவற்ற செல்வத்தையும் தந்து அருள வேண்டும்

என்று எல்லாம் வல்ல ஆறுபடை வீடுடையோ ஞுகிய அந்த **ஸ்ரீ வைதீச்வரனே** மனமாரப்ராத் தித்துக்கொண்டு ஸ்ரீ பத்மஞபன் அவர்கள் மேன் மேலும் ச்ரேயஸ்ஸை அடையும்பொருட்டு மனப் பூர்வமாக அனுக்கிரஹிக்கின்றேன்.

மேலும் இத்தகைய மாபெரும் அருள் நிறைந்த புத்தகத்தை வெளியிடும் கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ் மேன்மேலும் சிறப்படைந்து வருவதற்கு முருகப்பெருமான் திருவருள் புரி வாராக.

*ஸ்ரீவைத்தீச்வரஸ்வாமியின்*
*திருவடியே துணே.*

செவ்வாய் கிழமை *4—4—1967*

(Sd) ப்ரும்மஸ்ரீ
பரூர். வைத்யநாத கனபாடிகள்



வேதம் நிறைந்த தமிழ்நாடு —பாரதியார்

மந்திரவடிவமான

# கந்தர் அநுபூதி

அதற்கு

# அருணகிரி ஹ்ருதயம்

என்னும்

ஒரு மாபெரும் விரிவுரை புத்தகமாக

இதுவரையிலும் வெளிவராத முறையில்

முதன்முதலாக

எங்களுடைய அச்சகத்தில்

உருவாகியிருக்கிறதென்ருல் அது எங்களுடைய

பெரிய பாக்கியமேயாகும்.

AND WE CANNOT BUT ECHO

ARUNAGIRIHIRUDAYAM



M. Murugappan,

Partner,

SOUNDARA PRINTERS,

12, USMAN ROAD :: T. NAGAR.

## செந்தூர் வேலனின்

# ஜாதி பேதமற்ற மாபெருங்கருணை

---

முநீநாம்முதாஹோ ந்ருணும் பக்திபாஜா
மபீஷ்டப்ரதாஸ்யந்தி ஸர்வத்ர தேவா:
ந்ருணாமந்த்யஜாநாமபி ஸ்வார்த்ததாதே
குஹாத்தைவமந்யம் நஜாநே நஜாநே.

பக்தி செய்கிற மனிதர்களுக்கும், முனிவர்களுக்கும் அவரவர்களுடைய இஷ்டத்தைக் கொடுக்கக் கூடிய தெய்வங்கள் எல்லாலோகங்களிலும் இருக்கின்றன. சண்டாள ஜாதியில் பிறந்த மனிதர்களுக்கும் இஷ்டத்தை பூர்த்திசெய்பவர் முருகக் கடவுளைக் காட்டிலும் வேருன தெய்வத்தை நான் அறியவில்லை. நான் அறியவில்லை.

—ஸ்ரீ ஆதி சங்கரர்.



ஸ்ரீ ராம ஜெயம்

3, Abyudaya,
13th Road, Chembur,
Bombay-71 AS

My Dear Padmanabhan,

I fervently invoke the Infinite Blessings of the Almightly Murugavel.

ஆடும் பரிவேல் அணிசேவலெனப்
பாடும் பணியே பணியாய் அருள்வாய்.

I have received with joy and pride the Two Sets of Arunagirihirudayam and I am reading them Day and Night with great care.

As I am reading I feel the Atmoshere of Kanthan-Karunai.

The commentary is very grand and inspiring and ultimately touches the Heart of Arunagiri.

When asked to explain Tiruvasagam Sri Manikka-vachakar pointed to the Lord's blessed feet and nothing but else.

So I simply pointed to the Almightly Vel for the Meaning of the Kandar Annubuthi.

**Vel is Murugan—Murugan is Vel**
**Both are identical**

Being out of sight, with you I feel very anxious but I am sure with Lord Muruga's grace every thing and every inch of your attempt will be a succes.

Lastly may the Grace of the Almighty Vel be always with the Karthikeyan Publications.

ஸ்ரீராம ஜெயம்

Yours Affectionately,

T. V. Krishna Iyer, B.A.,B.L.,
Father of T. K. Padmanabhan,
Author of the Commentary.

5—1—1967




# முன்னுரை




மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினைவார்
கின்னங் களையும் க்ருபை சூழ்சுடரே.

அண்டசராசரங்களையும், கோடான கோடி உயிர் களையும் ஆட்டிவைத்து 'எல்லாம் தந்து வாங்க வல் லானுகிய' வீர ஸேனுதிபதியாகிய முருகப் பெருமானை அநன்ய பக்தியினுல் குழந்தை குமரனுகச் செய்து அக்குழந்தை குமரனின் 'இனிமையான புன்னகை பார்வை ஒன்று போதுமே' என்று சொல்லும் அளவில் முருகப் பெருமானை கந்தர் அநுபூதி என்னும் பாமாலையினுல் கட்டி' அழகு பார்த்து ஆனந்த வெள் ளத்தில் மூழ்கி விளையாடுகிருர் அருணகிரிநாதர். சிவ பெருமானுல் உண்டு உண்டு தெவிட்டாத ஞானப் பழத்தின் வடிவமே கந்தர் அநுபூதியாகும். அந்த ஞானப் பழத்தின் மழலைச் சொற்களை நமது இரு செவிகளினுலும் கேட்டுக்கேட்டு நமது உள்ளத்தை நிரப்பி வைத்துக்கொள்ளவேண்டும்.

பனிக்கட்டி கரைவதுபோல் நமது உள்ளம் முருக னிடத்தில் கரைய வேண்டும். அப்பொழுதுதான் நாம் கந்தன் கருணையாகிய ஸமுத்திரத்தை காணமுடியும்.

சாதாரண பக்தியிலிருந்து படிப்படியாக எல்லா வற்றிற்கும் மேலான அநன்ய பக்தி வரையிலும் உள்ள பக்தியின் பெருக்கை வாரி வழங்குகிறது ஒவ் வொரு பாடலும் கந்தர் அநுபூதியில். அதுமட்டுமல்ல, எந்த பக்தியைக் காட்டிலும் ஒரு மேலான பக்தியின் பெருமையை வேதங்களினுலேயே எடுத்து சொல்ல முடியாதோ அத்தகைய மஹாபெருமையினைக்கொண்ட பக்தியை போதிக்கின்ற 'தத்வமஸி' என்னும் மஹா வாக்கியத்தினுல் ஜீவப்ரும்ம ஐக்கிய ஸாக்ஷாத் காரத்தை போதிக்கப்படுகின்ற 'அத்வைத பக்தியே மிகவும் சாலச் சிறந்தது' என்றும் அந்த அத்வைத பக்தியாகிய ஞானக் கண்ணினுல்தான் கந்தர் அநு பூதியில் கந்தன் கருணையை நாம் காணமுடியும்மென் றும் ஸித்தாந்தம் செய்கிருர்

தன்னந்:தனி நின்றதுதான் அறிய
இன்னம் ஒருவர்க் கிசைவிப் பதுவோ.

என்னும் 49வது அநுபூதியில் அருணகிரிநாதர்.

'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்று சொல்கிருர் அப்பர் சுவாமிகள். இவ்வரிதாகிய மானி டப் பிறவியில் நாம் பேசவேண்டியது இறைவனின் பெருமையை பற்றியே. இதனுல்தான் பரமஞானியாகிய திருவள்ளுவர்,

தோன்றின் புகழொடு தோன்றுக அஃதுஇலார்
தோன்றலின் தோன்ருமை நன்று.

என்று சொல்கிருர். புகழ் என்ருல் என்ன? இறைவனைப் பற்றி வாயாற பேசிக்கொண்டிருப்பவனே புகழை யடைந்தவனுக ஆகிருன். இப்பிறவியில் இறைவனைப் பற்றி பேசும் பாக்கியம் நமக்கு கிடைக்கவில்லையென்ருல் இம் மானிடப் பிறவியே நமக்கு தேவையில்லை. எனவே இறைவனைக் குறித்து ஏதாவது ஒரு வழியில் நாம் இறைவனை பக்தி செய்ய வேண்டுமென்பதே இக்குறலின் பரமதாத்பர்யமாகும். அவ்விதம் இறைவனை குறித்து செய்யும் தொண்டே புகழாகும்.

அருள் நிறைந்த இக்குறலின் பெருமையை என் தந்தையார் ஒரு நாளெல்லாம் பேசிக்கொண்டேயிருந்தார். எனினும் என் தந்தையாருக்கு பேசினது போதும் என்று தோன்றவில்லை. முடிவில் இக்குறலில் புதைந்துயிருக்கும் கருத்தினை ஒரு தனிப் பாடலாக எழுதினுர். அப்பாடலே 'என்னயிருந்து என்னடா' என்பது.

நாவிருந்து என்னடா
ராம ராம என்று சொல்லடா
கையிருந்து என்னடா
கரம் குவித்து நில்லடா
காலிருந்து என்னடா
திருகோவிலிற்கு செல்லடா
கண்ணிருந்து என்னடா
திருவிழாவைப் பாரடா
காதிருந்து என்னடா
ராம கதையை கேளடா
பொருளிருந்து என்னடா
அடியார்களுக்கு அமுதூட்டடா

அறிவிருந்து என்னடா
அறியாதவர்க்கு சொல்லடா
முடிவில் கையிருந்து என்னடா
ராம நாமம் எழுதடா
ராம நாமம் எழுதடா

எனவே ஆண்டவனுக்கு ஆண்டவனுய் திகழும் முருகப் பெருமானை வர்ணிக்காத கவிகளேயில்லை. எங்கு சென்ருலும் குமரனின் பெருமைதான் கோஷிக்கப்படுகின்றது. அதிகம் சொல்வானேன்.

எண்ணிலா அருந்தவத்தோராகிய விச்வாமித்திர மஹர்ஷியானவர் செல்வக் குமரனின் அவதார ரகஸ்யத்தைச் சொல்லி ராமலக்ஷ்மணர்களுக்கு முருகப் பெருமானின் தியான மஹிமையை சொல்லுகின்ருர்.

அஞ்சா நெஞ்சம் படைத்தவனுயும், மும்மூர்த்திகளினுலும் கொல்லப்படாதவனுயுமுள்ள சூரபத்மாஸுரனின் மலையினைபோல் அசைக்கமுடியாத மார்பினை பிளந்து தள்ளிய வீர வேலினை கையில் தாங்கி வரும் அந்த சிந்தனைக்கு எட்டாத மஹாபராக்ரமமுள்ள வீர ஸேனுதிபதியாகிய எல்லாம்வல்ல முருகப் பெருமானையே,

நமஸ்க்ருத்ய குமாராய
ஸேநாங்யே சக்திபாணயே |
அஹம் ஸேநாபதிஸ்தேத்ய
பவிஷ்யாமி நஸம்சய :

என்று தியானம் செய்கிருர் பாரதயுத்தத்தில் ஸேனுதிபதி பதவியை ஏற்றுக்கொள்ளும்போது ப்ரும்மசர்ய நிஷ்டரான பீஷ்மாச்சாரியர் ஆனவர்.

அதுபோலவே, கிருஷ்ணபரமாத்மாவானவர் கீதை யை உபதேசிக்கும் தருணத்தில் ''அர்ஜுனு! ஸேநா நீநாம் அஹம் ஸ்கந்த: என்று சொல்லி, சேனுதிபதி களுக்குள் நான் முருகப் பெருமானுக இருக்கிறேன் என்று உபதேசிக்கிருர்.

இவ்விதம் முருகப்பெருமானின் பெருமையே எங்கு பார்த்தாலும் தலே தூக்கி நிற்கின்றது. கலியுகத் தில் கண்கண்ட தெய்வமாகவும், ஒவ்வொருவருடைய உள்ளத்தில் பேசும் தெய்வமாகவும், வேல்முருகா—வேல் முருகா என்று துதிக்கப்படும் தெய்வமாகவும் இருந்துகொண்டு விசேஷமான ஸாநித்ய மஹிமையுடன்

திருச்செந்தூர் - திருப்பரங்குன்றம்-பழநி மலே
ஸ்வாமி மலே-பழமுதிர் சோலே-திருத்தணி

ஆகிய ஆறுபடை வீடுகளில் எழுந்தருளி ஆறு படை வீடுடையோன் என மும்மூர்த்திகளினுலும் போற்றப் பட்டு பிறவிக் பெருங் கடலில் மூழ்கி அல்லல்படும் எல்லா உயிர்களேயும் ஜாதிபேத மற்ற அபரிமிதமான கருணேயினுல் கை கொடுத்து பிறவிப் பெருங்கடலி லிருந்து தூக்கி பேரின்பமதனே அளிக்கின்ற ஞானப் பழமாகிய குழந்தை குமரன் அல்லவா நம்மையெல் லாம் ஒரு குறையுமில்லாமல் வாழவைக்கின்ருன்.

உண்மை இவ்விதம் இருப்பதினுல்தான் அருண கிரிநாதர் குழந்தை குமரனின் புன்நகை முகத்தைப் பார்த்துப் பார்த்து உள்ளம் மகிழ்ந்து

## வைதாரையும் அங்கு
## வாழவைப்போன்

என்று புகழ்கிருர். ஆதலால் கந்தன் கருணையை கரை புரண்டு ஓடச்செய்யும் கந்தர் அநுபூதியை பிரதிதினமும் விபூதி தாரியாக யிருந்துகொண்டு பாராயணம் செய்யுங்கள். குன்றுதோறும் சென்று குமரனின் திருவிளையாடலை கண்ணுரக் கண்டு களியுங்கள். பஞ்சாம்ருதத்திஞல் செல்வக்குமரனை அபிஷேகம் செய்யுங்கள். காவடியை எடுத்து ஆடிக்கொண்டே அநுபூதியை பாடுங்கள். இன்னிசையில் அநுபூதியை அமைத்து பாருங்கள். ஸாமகான ஒலியினை நீங்கள் கேட்பீர்கள். கந்தர் அநுபூதியை கையிஞல் எழுதி அதனை முருகப் பெருமாஞகவே பாவித்து அதன்மேல் ஒரு பில்வ தளத்தை வையுங்கள். கந்தர் அநுபூதியின் பெயரைச் சொல்லி அன்னதானம் செய்யுங்கள். குமரனின் முன் நிலையில் 51ன்று திருவிளக்குகளை வைத்து கந்தர் அநுபூதியிஞல் முருகனை அழையுங்கள். அப்போது குமரனின் கருணையை கண்முன்பு காண்பீர்கள்.

இந்த சடலத்தை விட்டு உயிர்போகும் பொழுது உடன் துணையாக வருபவன் குழந்தை குமரனே ஆவான் என்னும் திருடமான எண்ணத்துடன் கடைசி மூச்சிருக்கும் வரையில் வேல் முருகா-வேல் முருகா என்று சொல்லிக்கொண்டேயிருங்கள். அந்த வேல் முருகா என்னும் நாம ஒலியில் அடங்காத தத்துவமேயில்லை. சிந்தனைக்கு எட்டாத மந்திரம் அது.

'அவனின்று அணுவும் அசையாது'

என்று எந்த ஒரு பரம்பொருளை வேதங்கள் சுட்டிக் காட்டுகின்றதோ அந்த பரம்பொருள் தான் முருகப் பெருமான். அப்பரம் பொருளாகிய முருகனை மஹா கவிகள் எப்படி வர்ணிக்கின்ருர்கள் தெரியுமா.

சொல்லச் சொல்ல இனிக்கும் தெய்வமென்றும்-உண்டு உண்டு தெவிட்டாத அமுத மென்றும்-ஈசருடன் ஞான மொழி பேசும் ஞானப்பழ மென்றும்-மழலைச் சொற்களினால் ஔவைத்தாயின் அறியாமையை சுட்டிக் காட்ட 'சுட்டப் பழம் வேண்டுமா-சுடாத பழம் வேண்டுமா' என கேட்கும் இடையனென்றும்-கண் கண்ட கருணை நிறைந்த தெய்வமென்றும்-கந்தன் கருணை யென்றும்-பன்னிரு கை பாலனென்றும்-வெற்றிவேலனென்றும்-ஞான குருவென்றும்-ஆண்டவனுக்கு ஆண்டவனென்றும்-பழனி ஆண்டியென்றும்-செம்மான் மகளை திருடும் திருடனென்றும்-எங்கள் தெய்வம் மென்றும்-ஆட்கொள்ள வந்த அருட்கடலென்றும்-மூவருக்கும் முதல்வனென்றும்-முருகனென்றும் குமரனென்றும்-கந்தன்னென்றும்-அழியாத செல்வமென்றும்-அடியார்களுக்கு எளியவனென்றும்-உயிரினை எடுக்க வரும் காலனுடன் வாதம் செய்யும் குழந்தை வேல் முருகனென்றும் வர்ணித்துக் கொண்டே யிருக்கிறார்கள்.

தவிர, சிவத்தையும் சக்தியையும்எவ்விதம் பிரிக்க முடியாதோ அதுபோலவே வேத மொழியாகிய ஸம்ஸ்க்ருத பாஷையையும், தேன் சொட்டச் சொட்ட தித்திக்கும் தமிழ் மொழியையும் ஒரு காலும் ஒருவராலும் பிரிக்க முடியாது என்பது உண்மை பொருளாக இருப்பதினாலும், அதை பக்தகோடிகளுக்கு எடுத்துக் காட்டவே 51 பாடல்களைகொண்ட கந்தர் அநுபூதியில் சுமார் 160திற்கு மேல் வேத மொழியை வாரி இரைத்திருக்கிறார் அருள்தெய்வமாகிய அருணகிரிநாதர்.

இப்படியாக முருகப் பெருமானின் பெருமை முழுவதையும் 51 பாடல்களில் வர்ணித்து அதற்கு கந்தர்

அநுபூதி என்னும் திவ்ய நாமத்தை சூட்டி அருளி யிருக்கிருர் அன்பின் வடிவமான அருணகிரிநாதர்.

மேலும் இந்த கந்தர் அநுபூதி ஆகிய மந்திரத்தில் சுடர்விட்டுக்கொண்டு மிளிர்கின்ற கந்தன் கருணையே 'சும்மா இரு சொல் அற' என்ற மந்திரமாகும். ஆகை யினுல் தத்வமஸி என்னும் மஹா வாக்யத்தின் வடி வமே 'சும்மா இரு சொல் அற' என்னும் மந்தரம்.

எனவே கந்தர் அநுபூதியிற்கு வெகுகாலமாகவே ஒரு விரிவுரை எழுதவேண்டுமென்ற அவா என் உள் ளத்தில் ஊற்றெடுத்துக்கொண்டேயிருந்தது. இதைப் பற்றி நான் கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ் உரிமை யாளர் திருமதி வள்ளியம்மை அவர்களுடைய இணை பிரியாத வாழ்கை துணைவர் திரு. அண்ணுமலை அவர்களிடம் தெரிவிக்க அவர் கடந்த வருடம் தமிழ் வருடப் பிறப்பு அன்று என்னுடைய இல்லத்திற்கு வந்தார். மதிப்புக்குரிய அவரை தக்கமரியாதையுடன் வரவேற்றினேன்.

புத்தாண்டு புண்ணிய தினத்தில் செல்வக் குமரனை என்னுடைய இல்லத்தில் பிரமாதமாக அர்சனை செய்து அலங்கரித்துயிருந்தேன். வந்த திரு. அண்ணுமலை அவர்களை முதன் முதலில் குமரனை கண்டு களிக்க வேண்டினேன். அதன் பின்பு அவரிடம் என் மனதி லுள்ள அவாவை தெரிவித்தேன்.

உடனே அவர் சிறிதும் தயங்காமல் செல்வக் குமரனுடைய அருள்யிருக்க நாம் கண்டிப்பாக கந்தர் அநுபூதியை அருணகிரிஹ்ருதயம் என்ற வ்யாக்யானத் துடன் உம்முடைய மனே விருப்பம் போலவே இது வரையிலும் வெளிவராத முறையில் ப்ரமாதமாக

வெளியிடுவோம். மேல் நடக்க வேண்டியது நடக்கட்டும் என்று சொன்னார்.

அவருடைய அந்த இன்பச் சொல்லிலே நான்கண்ட மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. சுருக்கமாகச் சொன்னால், கார்த்திகேயனே என்னுடைய இல்லத்தில் வந்து கந்தர் அநுபூதியில் கரைபுரண்டு ஒடும் கந்தன் கருணையை வாரி வழங்கு என்று சொல்வதுபோலவேதான் இருந்தது.

எத்தனை பெரிய மனப்பான்மையை கொண்டுள்ளது அவருடைய உள்ளம்.

கந்தன் கருணையாகிய கந்தர் அநுபூதியின் பெருமையை எழுதத்துடங்குகிறேமே, ஏதாவது காரணத்தை முன்னிட்டு கந்தன் கருணையின் பெருமையை குறிக்கி எழுதவேண்டி வருமோ என எண்ணியிருந்த எனக்கு அவர் அநபாய சோழனைப் போல் உடனிருந்து அவருடைய பரந்த மனப்பான்மையினைக் கொண்ட உள்ளத்தினுல் எனக்கு புத்துயிர் அளித்து 'அன்புடையீர்! கந்தன் கருணையையும் அருணகிரிஹ்ருதயத்தையும் உங்களால் முடிந்தவரையிலும் வார்க்கடலாக பெருக்கி எழுதுங்கள். எக்காரணமும் இவ்விஷயத்தில் தடங்கலாக இருக்காது என்று சொல்லிய இத்தகைய பெறும் ஆற்றலையுடைய திரு. அண்ணுமலை அவர்களுடைய பரந்த உள்ளத்தை மனமாரப் பாராட்டுகின்றேன்.

நினைத்தபடி பாராட்ட சொற்கள் கிடைக்கவில்லை. கிடைத்த சொற்கள் போதவில்லை.

இத்தகைய மாபெரும் புண்ணிய காரியத்தை செய்த திரு. அண்ணுமலை அவர்களுக்கு பக்தகோடி

களுடைய நல்லாசி என்றென்றும் இருக்கும் என்பதில் ஐயமில்லை.

என் நெஞ்சுருக்கும் வரையில் திரு. அண்ணுமலை அவர்களுக்கு என் நெஞ்சில் இடமிருக்கும் என்பது திண்ணம்.

எல்லாம் வல்ல முருகப் பெருமானின் பூர்ண ஸாநித்யம் திரு. அண்ணுமலை அவர்களுடைய இல்லத்தில் நிரந்தரமாக இருக்க வேண்டுமென்றும் அப்படியே முருகப் பெருமானின் பொற்கரத்தில் மின்னிக் கொண்டிருக்கும் சக்தி வேலானது குடும்ப ஸமேதம் திரு. அண்ணுமலை அவர்களின்மேல் அருளை இடைவிடாமல் வாரி யிரைத்துக்கொண்டே இருக்க வேண்டும் என்றும் நாங்கள் எங்கள் குடும்பத்துடன் ஒரே மனப்பான்மையுடன் பரம மங்கள மூர்த்தியாய் விளங்கும் ஸ்ரீஸ்வாமிநாதனை மனமார பிரார்த்திக்கின்ருேம்.

இப்புத்தகத்தை அச்சிடும் விஷயத்தில் எத்தனையோ இடையூறுகள் இருந்தபோதிலும்கூட அனைத்தையும் கடுகளவுகூட பொருட்படுத்தாமல் எங்கள் மனவிருப்பப்படியே ஒருவிதமான குறையுமில்லாமல் மேலான பக்திச்ரத்தையுடன் 'ஸௌந்தரா ப்ரண்டர்ஸ்' உரிமையாளர் திரு. முருகப்பன் அவர்கள் மிகவும் அழகான முறையில் அச்சிட்டு தந்தார்கள். முருகனுடைய அருள் அவர்களிடத்தில் அதிகரித்துக் கொண்டேயிருந்து வரும் என்பதில் ஐயமில்லை.

அதுபோலவே ஸௌந்திரா ப்ரண்டர்ஸ் மேனேஜரும், சுமார் இருபத்தைந்து புஸ்தகங்களுக்கு மேல் ஆசிரியருமான ஸ்ரீ தெய்வசிகாமணி அவர்கள் அச்சுப்

பிரதிகளைத் திருத்தி மிகவும் நன்முறையில் இப்புத்தகம் வெளிவர முயற்ச்சி எடுத்துக்கொண்டதை முருகப் பெருமானுக்கு செய்துவரும் தொண்டாகவே கருதி வரும் அவருக்கு இறைவன் அருள் புரிவாராக.

மற்றும் அன்புடனும் மிக்க ஊக்கத்துடனும் குறிப்பிட்ட காலத்தில் கந்தர் அநுபூதியை முடித்துத் தந்த ஸௌந்திரா அச்சக போர்மென்னுக பணியாற்றி வரும் திரு. P.S. குப்புசாமி முதலிய என் அன்பர்களுக்கு உரிமையாளர் திரு. முருகப்பன் மூலமாக என் மனமார்ந்த நன்றியையும் இணைபிரியாத வணக்கத்தையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

அப்படியே கந்தர் அநுபூதி மஹா அநுக்ரஹயந்திர சக்கரத்தை பரம சந்தோஷத்துடனும் குதூஹலத்துடனும் வரைந்துதந்த ஸ்ரீ C. N. பாலகிருஷ்ணய்யர் அவர்கள் கந்தர் அநுபூதியை பாராயணம் செய்வதையே மூச்சாகக் கொண்டவர். முருகப் பெருமானின் சக்தியினையெல்லாம் கந்தர் அநுபூதியில் கண்டு அநுபவித்து மகிழுபவர். உலக சாந்தியை முன்னிட்டு தாரகநாமமாகிய ராமநாமத்தை இரண்டு கோடி பன்னிரண்டு லக்ஷம் எழுதியிருக்கிறுர். இன்னும் எழுதிக்கொண்டே யிருக்கிறுர். அவர் செய்து வரும் முடிவில்லாத திருப்பணிக்கு **'ராமஸாகரம்'** என்னும் திவ்யநாமத்தை வைத்திருக்கிறுர். தவிர தேவீ மாஹாத்ம்யத்தை தொடர்ந்து ஆயிரம் தடவை பாராயணம் செய்தவர்.

முருக பக்தர்கள் அனைவரும் பொக்கிஷமாக வைத்து ஸ்ரீகந்தர் அநுபூதி மஹா அனுக்ரஹ சக்ர பூஜையிலீடுபட்டு எல்லாம் வல்ல முருகப்பெருமானு

டைய பூர்ண அருளை பெறவேண்டும் என்று தன்னுடைய தேகச்ரமத்தை கொஞ்சமும் பாராமல் அநுக்ரஹ சக்ரத்தை சாஸ்திர முறையில் வரைந்து தந்த ஸ்ரீ C.N. பாலகிருஷ்ணய்யருக்கு நாம் என்றென்றும் நமது நன்றியையும் வணக்கத்தையும் செலுத்த கடமைபட்டிருக்கிறோம்.

## தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை

என்பதனைத் தலைமேல் வகித்து என்னை ஈன்றெடுத்தவளும் எல்லாம் வல்ல முருகப் பெருமானின் பாதாரவிந்தங்களில் இரண்டறக் கலந்த வளாயுமுள்ள என் ஒப்பிலா தாயின் அருள் ஒன்றையே ஆரம்பத்திலிருந்து முடிவுவரையிலும் பலமாகவும் பெருந்துணையாகவும் கொண்டு ஸ்ரீ அருணகிரிநாதர் திருவாய் மலர்ந்தருளிய மந்திரவடிவமான

# கந்தர் அநுபூதி

அதற்கு வேதசாஸ்திர ப்ரமாணங்களுடன் அருணகிரிஹ்ருதயம் என்னும் வியாக்யானம் எழுதி முடிவடையப்பட்டது

# அருணகிரிஹ்ருதயம்

என்னும் இந்த வியாக்யானத்தை அன்பு மிகுந்த பக்தகோடிகள் படித்து ஒரு பெரும் செல்வமாகக்

கருதி உள்ளம் மகிழுவார்களேயானுல், அந்த புண்ணியவான்களுடைய மகிழ்ச்சியொன்றையே நான் இப்பிறவியில் அடைந்த மேலான பெருஞ் செல்வமாகவும் பாக்கியமாகவும் எண்ணுகிறேன்.

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புரிய வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணசலம் அமர்ந்த பெருமாளே.

## வென்று பகை கெடுக்கும்
## நின்கையில் வேல் போற்றி

SATHYANAMA
7/1, Virupakshesswarar
Koil St.,
Mylapore, Madras-4.

T. K. PADMANABHAN
Author of the Commentary

# வேல்முருகா





# பிரார்த்தனை

ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று
பேசுவார் உறவுகலவாமை வேண்டும்
பெருமை பெறும் நினதுபுகழ் பேசவேண்டும்
பொய்மை பேசாதிருக்கவேண்டும்
பெருநெறி பிடித்தொழுகவேண்டும்
மதமான பேய் பிடியா திருக்கவேண்டும்
மருவுபெண்ணாசையை மறக்கவேவேண்டும்
உனைமறவா திருக்கவேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும்
நோயற்ற வாழ்வில்நான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையிற் கந்தகோட்டத்துள்
வளர்தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச்
சைவ மணி சண்முகத் தெய்வமணியே.

# வேல்முருகா



ஸ்ரீ

கந்தர் அநுபூதி

மஹா அநுக்ரஹ சக்ரம்

உ

வேலும் மயிலும் துணை



அண்ணாமலை—அது எண்ணவொண்ணாதது—எண்ணவொண்ணாத அண்ணாமலை தந்த அருட்செல்வமே புண்ணியமூர்த்தியாகிய அருணகிரியார்.

# அருணகிரி - யார்?

வேலும் மயிலும் துணை

ஸ்ரீ

# அருணகிரிநாதர்

## திவ்ய சரிதம்

அயனும் அரியும் அறியாவண்ணம் ஒரே அக்னி ரூபமாய் சிவபெருமான் ஓங்கி நிற்கும் புண்ணிய ஸ்தலமே திருவண்ணாமலையாகும்.

இந்தப் புண்ணிய ஸ்தலத்தில் சுமார் 500 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு மஹான் இருந்தார். சீலமான குணத்தை உடைய அவருடைய மனைவியார் திருவண்ணாமலையில் குடிகொண்டிருக்கும் முருகப் பெருமானின் கோயிலுக்குச் சென்று மனமுருகி வலம் வந்து ஸ்துதி செய்து வீடு திரும்புவார்.

இறைவனுடைய அருளால் இவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது.

இருந்தும் ஒரு ஆண் குழந்தை இல்லையே என்ற ஏக்கம் அவர்களை வாட்டியது.

## திரு அவதாரம்

வழக்கம்போல் மனைவியார் திருக்கோயிலை வலம் வரும்போது வானிலிருந்து ஒரு ஜோதி கீழிறங்கி அவருடைய உடலில் கலந்தது. அதைக்கண்டு அம்மையார் மிக்க மனமகிழ்ச்சியடைந்து முருகப் பெருமானின் திருவருளை எண்ணி எண்ணிப் போற்றி வந்தாள். அதற்கறிகுறியாக அவளுடைய தேகம் தேஜோமயமாக நாளுக்கு நாள் அதிகமாகவே காணப் பட்டது.

முருகப்பெருமானின் அருளினால் எல்லாம் கூடிய ஒரு நல்ல நாளில் அம்மையாருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது.

விதிப்படி ஒரு குறையுமில்லாமல் தன்குழந்தைக்கு அருணகிரி என்று நாமஞ் சூட்டினார்கள். குழந்தையோ வெனில் நாளொருமேனியும் பொழுதொருவண்ணமு மாய் வளர்ந்து வந்தது. பொன்னிறமான தேகத்தை யுடைய அக்குழந்தை வர்ணிக்க இயலாத அழகு வாய்ந்தது.

இவ்விதம் கம்பீரமான தோற்றத்துடன் அருணகிரி நாதர் வளர்ந்து வந்தார்.

தந்தையார் காலமான பின்பு அருணகிரிநாதரும் அவருடைய தமக்கையாரும் தங்களுடைய தாயாரின் பார்வையிலேயே வளர்ந்து வந்தார்கள்.

குழந்தைக்கு ஐந்து வருடங்கள் பூர்த்தியானதும் அவருடைய தாயார் அவரைப் பள்ளிக்குக் கொண்டு

போய்விட்டார். இவர் இளமையிலேயே தேவாரம், திருமந்திரம் முதலிய அரிய பாடல்களைப்பாடிவருவார். இனிமையான இவருடைய குரல் கேட்டு எல்லோரும் மகிழ்வார்கள்.

## தாயின் பிரிவு

ஆனால் இவருக்கு ஏழாண்டு பூர்த்தியானதும் இவரது அன்னையார் காலமாகிவிட்டார். உயிர்போகும் தருணத்தில் அன்னையார் இவரது சகோதரியை அழைத்து

"என் அன்புக்குரிய மகளே! இன்னும் சிறிது நேரத்தில் நான் காலமாகி விடுவேன். எனவே என் அருமைப் புதல்வனும், உன் அருமை சகோதரனுமான என் செல்வத்தை உன்னிடத்தில் ஒப்படைக்கிறேன். நீ உன் உயிர் இருக்கும் வரையில் அருணகிரியை காப்பாற்றுவாயாக" என்று சொல்லி மறைந்தார்.

தாயின் பிரிவை தாங்கமுடியாமல் அம்மா! எங்கே போய்விட்டாய்! எங்களைத் தன்னந்தனியாகத் தவிக்க விட்டு போய் விட்டாயே, நான் உன்னை மீண்டும் காண முடியுமா-பேசமுடியுமா! அம்மா நீ இல்லாமல் நான் எப்படி இருப்பேன் என்று பலவாருகப் புலம்பிப் புலம்பித் தாயின்மேல் விழுந்து புரண்டு அழுதார்.

குழந்தை அருணகிரியின் துக்கத்திற்கு எல்லையே இல்லை. அலறும் அருணகிரியைத் தமைக்கையார் எவ்வளவோ சமாதானம் சொல்லிப்பார்த்தார். இருந்தும் தாயின் பிரிவு அவரை வாட்டியது.

கல்லினையும் கரைக்கும் துக்கத்துடன் தன் சகோதிரியிடம், "நாம் அநாதையாகி விட்டோம்" என்று சொல்லிச்சொல்லி புலம்பினர்.

உடனே தமக்கையார் அப்பா அருணகிரி, அநாதை யாய் இருக்கும் நம்மைக் கைகொடுத்துத் தூக்க நம் முருகப்பெருமான் இருக்கிறார் அப்பனே என்று பல வாறு சொல்லிச் சமாதானப்படுத்தினாள்.

தவிர தாயில்லாமை என்ற குறை தெரியாவண்ணம் தாயினும் அன்புடன் தம்பியைக் கண்ணும் கருத்து மாய் வளர்த்து வந்தாள்.

## காளைப்பருவம்

சில ஆண்டுகள் ஓடின. அருணகிரியார் காளைப் பருவத்தை அடைந்தார். அகன்ற நெற்றியும், நீண்ட புருவங்களும், தாமரை இதழ் போன்ற பெரிய கண் களும், அழகான மூக்கும், கோவைப்பழம் போன்ற உதடுகளும், முத்துப்போன்ற பற்களும் உடைய அருணகிரியார் அழகே வடிவானவர். ஒப்பற்ற ஒளி பொருந்திய மன்மதனைப்போல் தோன்றினார்.

இவரிடத்தில் இவர் சகோதரியார் தம் உயிரையே வைத்திருந்தார். அருந்ததியைப்போல் கற்பிற் சிறந்த வளும், மஹாலட்சுமியைப்போல் அழகு வாய்ந்தவளு மான ஒரு பெண்ணை இவருக்கு திருமணம் செய்து வைத்த பிறகே தாம் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்று எண்ணியிருந்தார்.

ஆனால் நாம் ஒன்று நினைக்க இறைவன் ஒன்று நினைக்கிறான் அன்றோ!

நிற்க, பிராரப்த கர்மாவை அனுபவித்தே தீர வேண்டுமென்று இருப்பதால், முருகப்பெருமான் அருணகிரிநாதரை அவருடைய பிராரப்தத்தை அனுப விக்குமாறு செய்தார்.

இதற்குக் காரணமோவெனில், அதை அவர் அனுப வித்த பிறகே அவரைத் தடுத்து ஆட்கொள்ள வேண்டுமென்பது. அதற்கு முதன் முதலாக அருண கிரிநாதரின் உள்ளத்தில் பெண்ணுசையை உண்டு பண்ணி அதை மலைபோல் வளரச்செய்து வந்தார்.

இறைவனின் இச்சை இப்படி யிருக்குமானுல் அதை யாரால் மாற்றமுடியும்.

முருகப்பெருமானின் திருவருள் அருணகிரிநாதரி டத்தில் விழ ஆரம்பித்தது.

இதற்கு முதன் முதலாக கோயிலில் அவர் ஒரு நாள் நடனமாடும் ஒரு தாசியைக் கண்டார். அவளது பேரழகில் ஈடுபட்டு மயங்கி நின்ருர். அவளிடத்தில் நாளுக்கு நாள் அவருடைய காதல் வளர்ந்து கொண் டிருந்தது.

என் கண்முன் வந்து என்னுடைய உள்ளத்தை கொள்ளைகொண்ட இவள் யார்! காமன்தன் இளங் கரும்பு வில்லோ! அல்லது கற்பகக்கொடியோ! என்று திகைத்தார்.

பிறகு அன்றிரவெல்லாம் துயில் கொள்ளாமல் காமவேதனையில் மூழ்கிக்கிடந்தார். மறுநாள் காலை யில் அவளை சந்தித்துத் தன் மனேநிலையைத் தெரிவித் தார். அவளும் இவருடைய அழகில் மயங்கி, இவருக்கு மேன்மேலும் பெண்ணுசையை உண்டுபண்ணிளுள்.

இதன் விளைவாக இவர் பல்வேறு தாசிகளின் அழகில் மயங்கித் தன் புத்தியை இழந்தார்.

இவருடைய நடத்தையில் மாறுதலைக் கண்ட தமக்கையாருக்கு இவரிடத்தில் சந்தேகம் உண்டா யிற்று. அதற்கு ஏற்றவாறு இவரும் சரியான வேலை

யில் வீடுதிரும்பாமல் தோன்றியபொழுது வருவதும் போவதுமாக இருந்தார்.

வீட்டிலுள்ள பொருள்களையெல்லாம் வேசியர் களுக்கே கொடுத்து வந்தார். தம் சகோதரியிடம் பேசக்கூட நேரமில்லாமல் வேசியர்களுடைய வீட்டி லேயே அடைந்திருந்தார்.

தன் தமக்கையாரைப்பற்றி நினைந்தார் இல்லை. ஆனால் தமக்கையார் தன் தம்பி அருணகிரியைப்பற் றியே எண்ணி எண்ணி மனம் நொந்து வாடினார்.

## தமக்கையார் புத்திமதி கூறுதல்

நாளுக்கு நாள் அருணகிரியாருடைய நீசச் செயல் ஊர் எங்கும் பரவலாயிற்று. அருணகிரியோ கருங் கூந்தலையுடைய வேசியர்களுடன் சல்லாபம் செய்த வண்ணமாய் இருந்தார்.

ஒருநாள் தமக்கையார் அருணகிரியிடம் "அப்பா அருணகிரி! வேசியரிடத்தில் உன் புத்தியை இழந்து அவர்களுடைய காமப் பார்வையினால் சுடப்பட்டுஇருக் கிறாயே. வீட்டிலுள்ள பொருள்களை எல்லாம் ஒவ் வொன்றாக அவர்களுக்கே கொடுத்து ஒழிக்கின்றாய். அருணகிரி! நினைத்துப்பார். அன்னையார் உன்னை என் னிடத்தில் ஒப்படைத்துவிட்டு உயிர் விட்டார். உன்னை நல்வழியில் கொண்டுபோக வேண்டியது என் கடமை அல்லவா! நீ இவ்விதம் தகாத வழியில் தாசிகளிடம் சென்று வருகிறாயே. நீ இப்படிச் செய்வதால் என் மனம் வருத்தமடைகிறது.

வேசியர்களிடத்தில் நீ அனுபவிக்கும் சுகமெல்லாம் கானல் நீர் போன்றது. முடிவில் இந்த சுகம் பாம்பின்

வாயில் அகப்பட்டுக் கொண்ட தவளை போலாகும். இதன் காரணமாக உடல் முழுவதும் பற்பல வியாதி களும் வரக்கூடும்.

பிறந்திடத்தை தேடுதே பேதைமட நெஞ்சம்
கறந்த இடத்தை நாடுதே கண்.

என்று பெரியோர்கள் சொல்வதுபோல் நீ பரத்தையர் மோகப்புழுத் தொளையில் உன் புத்தியை இழந்து வந்த வழியையே நினைத்து அலைகின்றாயே. நீ இவ்விதம் செய்வது தகுமா? சொல்லப்பா அருணகிரி'' என்று பல வாறு புத்திமதி கூறினாள்.

ஆனால் அவையெல்லாம் நீரில் எழுதின எழுத்தா கவே ஆயிற்று. அருணகிரியாரின் செவியில் எது வுமே செல்லவில்லை.

தனக்குக் காம சுகத்தைத் தரும் தாசிகளையேஅவர் தெய்வமாகக் கருதினார். அவர்களுடைய அம்புபோன்ற பார்வையும், குடம் போன்ற தனங்களின் ஸ்பர்சத்தா லுண்டாகும் சுகமும் அவரை ஆட்டி வைத்தன.

இதன் பலனாக அவர் தம் உடல் பொருள் ஆவி அனைத்தையும் பரத்தையருக்கே அர்பணம் செய்தார்.

தமக்கையாரோவெனில் அருணகிரியார் இத்தீய செயலிலிருந்து திருந்த வேண்டும் என்று அல்லும் பகலும் முருகப் பெருமானையே வாழ்த்தி வணங்கி வந்தார்.

ஒவ்வொரு வினாடியும் தம் அன்பு தம்பிக்குத் தீங்கு எதுவும் வரக்கூடாது என்று மனம் துடித்த வண்ண மாய் இருப்பார்.

அருணகிரியாருக்குப் பரத்தையர்களின் சேர்க்கையினுல் தீராநோய் வராமலிருக்க வேண்டுமென்று இறைவனை நினைக்காத நாளே இல்லை.

தன் சகோதரியார் என்ன சொல்லியும் புண்ணியமில்லை. "அவன் இச்சையின்றி அணுவும் அசையாது" அன்ருே"

பெரிய செல்வந்தராக இருந்தும் நாளுக்கு நாள் அவருடைய செல்வங்கள் எல்லாம்குறைந்துகொண்டே வந்தன. எனினும் அவருடைய உள்ளம் வேசியர்களிடத்தையே நாடிச் சென்றது.

பொருள் இல்லாமல் வெறுங்கையுடன் வரக்கூடாதென்று தாசிகள் கூறிவிட்டார்கள். தவிர அருகில் வரவோ பேசவோ விடமாட்டேன் என்றும் அருணகிரியாருக்கு நிபந்தனை இட்டார்கள்.

மோகமாகிய மாயையில் விழுந்து காமவேகம் தணியாமல் அருணகிரியார்இருந்தமையால், தம் உடன் பிறந்த சகோதரியின் நகைகளைத் திருடி எடுத்துச் செல்ல முயன்ருர்.

இதையறிந்த தமைக்கையார் மனவருத்தம் தாங்காமல் தம் தம்பியை அழைத்து "அப்பா அருணகிரி! உனக்காகவே உயிர்வாழும் எனக்கு இந்நகைகள்எதற்கப்பனே. என்னைக் கேட்டிருந்தாலே தந்திருப்பேனே! இதைக் களவாட வேண்டுமா!" என்று சொல்லி நகைப் பெட்டியை அவரிடம் கொடுத்தார்.

மறுகணமே அவர் அனைத்தையும் தாசிகளிடத்தில் கொடுத்து ஒழித்தார்.

மீண்டும் வேசியர்கள் அவரைப் பொருள் கொண்டு வருமாறு வற்புறுத்தினுர்கள்; இல்லையெல் வர அனுமதிக்க மறுப்போம் என்ருர்கள்.

உடனே வேகமாய் வீட்டிற்கு ஓடோடி வந்தார். தன் மனோவேகத்தை தெரிவித்துத் தம் சகோதரியை வற்புறுத்தி அவள் அணிந்திருக்கும் நகைகள் யாவையும் கழற்றித் தருமாறும், அப்படி தர மறுத்தால் அவள் காலடியிலேயே உயிரை மாய்த்துக் கொள்வேன் என்றும் கூறினர்.

தம் தம்பி எங்கேயாவது உயிரை விட்டு விடுவனோ வென்று பயந்து தாம் அணிந்திருந்த நகைகள் அனைத்தையும் கழற்றிக் கொடுத்துவிட்டார்.

அவைகளையும் எடுத்துக் கொண்டு அருணகிரி நாதர் மனோவேகத்தினும் வேகமாய்ப் பரத்தையரை நாடி ஓடினர். நகைகளைக் கொடுத்து வேசியர்களுக்கு அடிமையானர்.

## தீராநோயை அடைதல்

தடுத்தாட்கொள்ள இன்னும் தாமதிக்கக்கூடா தென்று முருகப்பெருமான் கருதி தீரா.நோயை அருண கிரிநாதருக்கு வரவழைத்தார்.

இறைவன் இச்சைபோல் தீராநோய் அவரை வந்து அணுகியது. நோயுற்ற அருணகிரியை வேசியர்கள் போ என்று தள்ளிவிட்டார்கள்.

சிலர் கடுமையான மொழியினல் இவரை நோக்கி "அற்பனே! இறந்தால் உன் பிணத்தை நாய்கூட தீண்டாது" என்று சொன்னர்கள். மனம் தாளாமல் வீடு நோக்கி ஓடிவந்தார்.

தீராநோய் துன்பத்தை தாங்கமுடியாமல் தவித்தார். ஆனல் அந்நோய் முன்னிலும் அதிகப்பட்டது.

ஒருபக்கம் நோய் அருணகிரியாரை வாட்டியது. மற்றொருபக்கம் அவரைக் காமம் வாட்டியது. அதன் காரணமாக அவருக்கு மீண்டும் பரத்தையர்பால் சென்று அனுபவிக்க வேண்டுமென்ற எண்ணம் பிறந்தது. உடனே பழைய வேசியர்களுக்கும் தமக்கும் நடந்த பழைய சம்பவங்கள் நினைவிற்கு வந்தன.

உடனே காம அதிதப்தனாக தவித்துக்கொண்டு வேசியர் வீட்டினை நோக்கிச் செல்லப் புறப்பட்டார். ஆனால் அவர்களுடைய இழிவுச்சொல் அவருக்கு நினைவு வந்தது. தன்னந்தனியாக காமப்பரவசனாய்,

"ஐயோ! காமவேதனை என்னக் கொல்லுகின்றதே! என்னை காமுகன் என்றெல்லாம் வர்ணித்த வேசியர்கள் என்னைத் தொட மறுத்துவிட்டார்களே! அவர்களுக்காக என் பொருள் அனைத்தையும் வாரி இறைத்தேனே! நான் இப்பொழுது வறுமையினாலும் பிணியினாலும் கஷ்டப்படுகிறேன். இந்நிலையில் அவர்கள் என்னை வெறுக்கிறார்களே!" என்று பலவாறு மனம் நொந்து தமக்கையாரிடம் எங்கிருந்தாவது நிறைய பொருள் கொண்டு வரும்படி மன்றாடினார். மேலும் அவளிடம் கூறலானார்.

என் அன்புச் சகோதரியே! நான் காமப்பரவசனாகி என் அன்புக்குரிய வேசியர்களைப் புணர்ந்து சுகமனுபவிப்பதற்கு என் மனம் துடிக்கிறது. அவர்களுடைய பார்வையிலே நான் இன்பம் காண்கிறேன். அவர்களது பேச்சிலே நான் மெய் மறந்து நிற்கிறேன்.

அவர்கள் இப்பொழுது என்னைப் பார்த்து தீண்டமாட்டேன் என்கிறார்கள். ஏன்! என்னிடம் செல்வமில்லை! அழகு இல்லை என்றல்லவா?

ஆதலால் நீ எங்கிருந்தாவது நிரம்பச் செல்வம் கொண்டுவந்தால் அதை அவர்களிடம் கொடுத்து என் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்வேன். அப்படி நீ கொண்டு வரவில்லையென்ருல் என் உயிரே போய் விடும் என்று கரையிலிட்ட மீன் போல் துடித்தார்.

**இவ்வாறு மொழிந்த அருணகிரியை நோக்கித் தமக்கையார் உள்ளம் துடித்து:—**

அப்பா அருணகிரி! இருந்த செல்வங்கள் எல்லாம் அழிந்து ஒருவேளைகூட உண்ணவழியில்லாமல் தவித்துக்கொண்டிருக்கிற நாம் எங்கப்பா போகிறது நீ கேட்குமளவில் செல்வத்திற்கு. உனக்காக அல்லவா என் உடலில் உயிர் ஊசலாடிக்கொண்டிருக்கிறது. இதை நீ அறியாதவனு! அப்பா அருணகிரி! உன் சுகத்திற்காக நான் எதையும் செய்யத்தயாரரக இருக்கிறேன். ஆனுல் காமப்பரவசனுய் தவித்துக்கொண்டிருக்கும் உனக்குக் காமசுகத்தை தந்து திருப்தி செய்து வைக்க முடியாதவளாய் நான் உனக்கு உடன் பிறந்த அன்பு சகோதரியாக இருக்கிறேனே. நான் என்ன செய்வேன்! அருணகிரி! என்று தாரை தாரையாகக் கண்ணீர் விட்டாள்.

அவளுடைய உண்மையான சொல் அவரைப் பிரமிக்க வைத்தது.

மீண்டும் தமக்கையார் தம்பியிடம், அப்பா அருணகிரி! நான் எவ்வளவு சொல்லியும் நீ கேட்கவில்லையே. தீராவியாதியை அடைந்திருக்கிருயே!

நீ கஷ்டப்படும் நிலையைக் காண என் நெஞ்சிற்கு சக்தியில்லையே. அப்பா அருணகிரி நம் அன்னையார் கடைசித்தருவாயில் உன்னை என்னிடத்தில் தந்து

மேலான அன்புடனும் உன் மனம் கோணுமலும் உன்னைச் செல்லமாக வளர்க்குமாறு கூறி உயிர் விட்டார்.

அன்னையாரின் வாக்கை இதுவரையிலும் சத்திய மாகவே காப்பாற்றி வந்தேன். அப்பனே நான் என்ன செய்வேன். என்ஞல் இயன்றவரையிலும் புத்திமதி கூறினேன் ஆஞல் நீ எதையுமே காமவசத் திஞல் செவிகொடுத்து கேட்கவில்லை.

என்ருவது ஒரு நாள் என் அப்பன் முருகன் உனக்கு அருள்புரிவான் என்று நம்பியிருந்தேன். ஆஞல் விதியானது உன்னை விட்டதாய் இல்லை. நீ இவ்வளவு நாள் தாசிகளிடத்தில் வைத்து இருந்த அன்பில் கடுகளவாவது என் அப்பன் முருகனிடத்தில் வைத்திருந்தால் நீ இந்தக் கதிக்கு வந்திருப் பாயா.

சகோதர வாஞ்சையானது உன்னை மீண்டும் என் னுடன் பிணைத்து வைக்கிறது. எல்லாம் வல்ல முருகப் பெருமான் உனக்கு அருள் புரிவாராக. போனதெல் லாம் போகட்டும். இனியாவது ஈச்வரசிந்தனையில் இரு அப்பனே! முருகன் உனக்கு அருள்புரிய அந்த முருகனை நான் மனமார பிரார்த்திக்கிறேன் என்று சொன்ஞள்.

## மனம் மாறுதல்

சகோதரியின் அன்பு வார்த்தையானது அருணகிரி நாதரின் உள்ளத்தில் எரிவேல் பாய்ந்தது போல் இருந்தது. அவளுடைய சொல்லானது அவருடைய அகக்கண்ணைத் திறந்தது. சிந்திக்கலானஞர்.

அவளுடைய முகத்தைப் பார்த்துபேச அவருக்கு நாணமாக இருந்தது. உடனே அவ்விடத்தைவிட்டு அகன்றார். தான் செய்த குற்றங்களை நினைத்து நினைத்து மனம் நொந்து அழுதார்.

"முருகா! முருகா! நீ எங்கே இருக்கிறாய்?" என்று அலறினார். யாது செய்வது என்று பெருமூச்சுவிட்டார். சிறிது தூரம் சென்றார். மயங்கிக் கீழே விழுந்தார். பிறகு மயக்கம் தெளிந்து "ஐயனே! நான் என்ன செய்வேன்! முருகா உன்னை அருட்கடல் அன்புக்கடல் என்றெல்லாம் வர்ணிக்கிறார்களே அனைத்தும் பொய்யா? என் அப்பனே"

அண்ணாமலைக் கோபுரவாயிலை கட்டித் தழுவிக் கொண்டு தாரைதாரையாக கண்ணீர் விட்டார். வாய் விட்டு கதறி அழுதார். என் உயிரினும் சிறந்த முருகா! காமக்கண்கள் உன்னை பார்க்கவோ, நினைக்கவோ! உன்னை புகழ்ந்து பாடவோ விடவில்லை.

வாழ்நாள் முழுவதும் தாசிகளிடத்திலேயே கழித்துவிட்டேன் அப்பனே!

ஐயனே! என் ஜன்மம் சாபல்யம் அடைவதற்கு வழியே கிடையாதா. நான் இப்படியே தீராவியாதியினால் கஷ்டப்படத்தான் வேண்டுமா. அடியார்களுக்கு எளியவன் முருகன் என்று சொல்லுகிறார்களே! அது என்னிடத்தில் மட்டும் பொய்யா. சொல் அப்பனே. முருகா! என்னைப்பார்! இந்நிலையில் என்னைப் பத்து மாதகாலம் சுமந்து பெற்றெடுத்த தாயும்கூட இச்சிக்க மாட்டாள்.

ஐயனே! கருணைக்கடலே! உன்னுடைய திவ்ய ரூபத்தைக் கண்டுகளிக்க எனக்கு கண்ணுண்டு, உன்

மகிமையை தெரிந்துகொள்ள நல்ல கருத்துண்டு, உன்னை நினைத்துக் கசிந்துருகிப்பாட நல்ல பாடலுண்டு உன் புகழ்மாலையைக் கேட்க்க எனக்கு செவியுண்டு, புஷ்பத்தினால் அர்ச்சனை செய்ய உனக்கு எண்ணற்ற நாமங்கள் உண்டு, உன் திருக்கோயில்களுக்கு வந்துவழிபட எனக்கு கால்கள் உண்டு.

இவை யாவையும் நீ எனக்குத் தந்தும், அவைகள் பயன் அற்றவைகளாகவே ஆகிவிட்டன. எது இருந்தால் என்ன! ஐயோ! உன் அருள் எனக்கு இல்லையே.

கண்ணிருந்தும் கண்ணற்றவனாகவே ஆகிவிட்டேனே, என்னுயிர் இன்னும் என்னைவிட்டு அகலாமல் இருக்கிறதே, என் அப்பனே! முருகா! வெற்றிவேலா! உன் அருளை இதுவரையில் கடுகளவும் பெறாத நான் இனி ஏன் உயிர் வாழவேண்டும். இத்தீராவியாதியையுடைய எனக்கே என்னை பிடிக்கவில்லையே.

என் அன்புக்குரிய சகோதரி எவ்வளவு கூறியும் காமவசத்தினால் கண்ணிழந்து என் வாழ்நாள் முழுவதும் தாசிகளிடத்திலேயே கழித்துவிட்டு அதன் பலனாய் இத்தீரா நோயை அடைந்து அல்லல் படுகின்றேனே. கரையிலிட்ட மீன்போல் என் உள்ளம் துடிக்கிறது முருகா! கருணை செலுத்தமாட்டாயா'' என்று கதறிக்கதறி துடித்தார்.

முடிவில் தன் உயிரை மாய்த்துக்கொள்ளும் பொருட்டு வேகமாக அண்ணாமலை கோபுரத்தின் உச்சியில் ஏறி அங்கிருந்து முருகா முருகாவெனக் கதறிக் கொண்டே தலைகீழாக விழுந்தார்.



திருக்கரங்கள் தாங்கின.

## திருக்கரங்கள் தாங்கின

ஆனுல் உள்ளுருகிக் கதறும் அருணகிரிநாதரின் அழுகைக்குரல் முருகப்பெருமானின் செவியில் செல்லாமலா இருக்கும்? தஞ்சம் அடைந்தவர்களுடைய துயரத்தை துடைப்பதையே தனது குறிக்கோளாகக் கொண்டுள்ளவன் அன்ருே முருகப்பெருமான்.

கோபுரத்திலிருந்து விழும் அருணகிரிநாதரின் பெருமையையும் மகிமையையும் உலகிற்கு விளக்கும் பொருட்டு ஆறுபடை வீட்டினையுடைய முருகப்பெருமான் ஒரு வயோதிகர் வேடம் தாங்கி தனது பொற்கைகளினுல் அருணகிரியைத் தாங்கினுர்.

எண்ணற்ற பாபங்களைச் செய்த தனது நீச சரீரத்தைத் தாங்கின வயோதிகரை அருணகிரியார் பார்த்தார். அவரும் அருணகிரியைக் கருணையுடன் பார்த்தார்.

வயோதிகரே! இந்த நீசனைக் காப்பாற்ற உங்களுக்கு ஏன் கருணை வரவேண்டும். நான் மாபாவி ஆயிற்றே! அருவருப்போடு கூடிய இந்த சரீரத்தை எப்படிச் சகித்துக்கொண்டு தாங்கினீர். மாபெரும் கருணையுள்ளம் கொண்ட தாங்கள் யார்? இந்தப் பாவி தங்களை யார் என்று அறியலாமா!

ஆனுல் என்ன ஆச்சரியம்! இமைப்பொழுதில் வயோதிகரை அருணகிரியார் கண்டாரில்லை. சாகும் தருவாயில் காப்பாற்ற வந்த வள்ளலார் எங்கே போய்விட்டார்! கண்முன் நின்றவர் காணுமற்போனது விந்தையிலும் விந்தையாக இருக்கிறதே! என்று வியந்து மருண்டு எட்டுத் திசைகளையும் நோக்கிய வண்ணமாகவே இருந்தார்.

## முருக தரிசனம்

உடனே வானில் ''அப்பா அருணகிரி'' என்று தன்னை யாரோ இனிமையாக அழைக்கும் குரல் கேட்டது.

கோடி சூரியனுக்கு ஒப்பாகவுள்ள பிரகாசத்துடன் மகா மகிமை தாங்கிய வேலை தன்கையில் தாங்கிக் கொண்டு பாலமுருகன் கோபுரத்திலிருந்து காட்சி தந்தார்.

அருணகிரிநாதரின் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர்பெருகலாயிற்று. கையாற இறைவனை தொழுதார். அவருடைய செங்கை தலைமேல் குவிந்தது. உடம்பெல்லாம் மயிர்க்கூச்சல் உண்டாயிற்று. அவர் பூமியில் விழுந்து புரண்டு வணங்கினர்.

அருணகிரிநாதரின் அன்பு முருகனிடத்தில் மலை போல் வளர்ந்து கொண்டே இருந்தது. அன்புக் கடலும், அருட் கடலும் அவர் உள்ளத்தில் இறைவனை புகழ்ந்து பாடவேண்டும் என்று அலைமோதிக் கொண்டே இருந்தது. ஆனல் நாவெழவில்லை.

அருணகிரியின் அன்பின் பெருக்கைக் கண்ணுற கருணைகூர்ந்து நோக்கினர் முருகப்பெருமான். முருகனுடைய திருவருள்ளானது அருணகிரியினிடத்தில் விழுந்தது.

உடனே முருகப்பெருமான் அருணகிரியின் நிலையைக் கண்டு மனம் தாங்காமல் ''ஆ! இனியும் அருணகிரியை சோதிக்கலாகாது'' என்று,

''அப்பா கிருணகிரி! அன்பின் உருவமே! இந்தக் கணமே எம்முடைய திருவருளினல் நீ நோயற்றவ

னாக மாறி, எல்லோருடைய உள்ளங்களையும் கவரும் வண்ணம் அற்புதமான இளமைபெற்று என்றென்றும் என் புகழைப் பாடிக்கொண்டே இரு'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

உடனே முருகனின் அருளினால் அருணகிரியார் நோயற்றவராய் மாறி தெய்வீகத்தன்மையை கொண்ட இளமை பெற்று ஞானக்கடலாய்த் தோன்றினார்.

முருகனுடைய கருணை அவருடைய உள்ளத்தில் உரம் பெற்று வளர்ந்து கொண்டிருந்தது. தாயின் குரலைக் கேட்ட கன்றினைப் போல் அவர் முருகனை நினைத்துக் கதறினார். அவருடைய அங்கங்களெல்லாம் சிலிர்த்தன.

கருணைக்கடலே! இவ்வாறு என்னை வலியவந்து ஆட்கொண்டது தங்களுடைய கருணையன்றோ!

ஈசருடன் ஞான மொழி பேசும் பரம்பொருளே! ஹே முருகா! கையார உன்னைத்தொழுகின்றேன். புத்துயிர் அளித்த புண்ணியனே! இதுவரையிலும் காமபர வசனாய் மங்கையர்களின் கண்பார்வையாகிய அம்புகளினால் குத்தப்பட்டு புத்தி இழந்து உன் பெருமையும் சக்தியும் தெரியாமல் இருந்து விட்டேன். இனியும் மீண்டும் என்னை அங்நிலையில் வை
அப்பா!

செந்தூர் வேலா! ஆறுபடை வீடுயு
உன்னுடைய லீலைகளாகிய பெருஞ்ச தோன்றின.
எதனை அறிவேன்! என்னால் அறிய
எவ்விதம் உன்னை அழைத்து பாடு முகத்தில் தாண்ட
பவனும் நீயே! பாடுவதும் நீயே ம் அவரை வந்து

உன்னைப்பாட உன் அருள் வேண்டும். அன்றியில் நான் எவ்விதம் பாடுவேன் என்று சொல்லி கண்குளிர முருகனைப் பார்த்துக் கொண்டே இருந்தார்.

அப்போது மங்கலஒலி ஆகாயமெங்கும் பரந்தது. தேவர்கள் பூமழை பொழிந்தனர். நான்மறைகள் முழங்கின. மண்ணுலகோர் பெரும் மகிழ்ச்சி கொண்டனர். ''வேல்முருகா வேல் முருகா'' என்ற மந்திர ஒலி வானை நிரப்பியது.

## ஞானவேலினல் எழுதுதல்

அன்பின் உருவமான கார்த்திகை பாலன் அருணகிரிநாதரை நோக்கி இனிமையான குரலில்,

''அப்பா அருணகிரி உன்பெருமை உனக்குத் தெரியாது! அடியார்கள் நம்மை அன்பினுல் அழைத்து பாடும் பாடல்களே அருச்சனை யாகும். அன்பே உருவமான நீ அருள்கிரியாக இருந்து கொண்டு இன்தமிழ்ச் சொற்களால் எம்மை புகழ்ந்து பாடுவாயாக'' என்று திருவருள் புரிந்து, அந்த க்ஷணமே அருணகிரியாரின் **நாக்கில் தம்கையில் தாங்கி வரும் ஞானவேலினல் 'முருகா' என்று எழுதி அருளினர்.**

அவ்வேளையில் ஸரஸ்வதி தேவியானவள் அவர்
கருஃ... வந்து நின்ருள்.
னுடைய
விழுந்தது... தேன்சொட்டச் சொட்ட எலும்பினை உருக்
அருந்தமிழ் சொற்களால்
உடனே
நிலையைக் கண்டு தெத் தரு பத்தித் திருநகை
அருணகிரியை சேப்புகழைப் பாடி அருளி முருகப்பிரா
''அப்பா கிருணும் உருக்கித் தேனுவருவமாக
கணமே எம்முடைய .

## மஹாவாக்ய உபதேசம்

ஆழ்ந்த கருணையின் உறைவிடமாகத் திகழ்ந்த அருணகிரிநாதரை நோக்கி முருகப்பெருமான்,

"அப்பா அருணகிரி! ஞானசக்தியிலிருந்து தோன்றிய உன்னுடைய முதல்பாட்டானது அபரிமிதமான வசீகரத் தன்மையைக் கொண்டது. அதுவே எமக்கு அர்ச்சனையாகும். அது எம்மை ஆனந்தக் கடலில் முழுகச்செய்கிறது.

இவ்விதம் கூறி, ஒரு ஜெபமாலையை அளித்து,

"சும்மா இரு சொல்லற"

என்னும் ஞானுேபதேசத்தையும் தந்தருளி மறைந்தார்.



முருகனின் பூர்ணமான அருளைப்பெற்ற அருணகிரிநாதர் ஒரேஜோதி மயமாகவும் தபோமயமாகவும், ஞான மயமாகவும் அருள் மயமாகவும், விளங்கினுர். இங்நிலையில் அவருக்கு அன்பும் முருகன்—அருளும் முருகன்—அழகும் முருகன்—அறிவும் முருகன்—இசையும் முருகன்—கலையும் முருகன் என்று யாவும் முருகனுகவே தோன்றின.

பக்தியும், சாந்தமும் அவர் முகத்தில் தாண்டவம் ஆடின. எல்லாவித சித்திகளும் அவரை வந்து அடைந்தன.

ஒரே நெருப்பு பிம்பமாய் வானளாவ திருவண்ணு மலேயில் ஓங்கி நிற்கும் அருணுசலேச்வரக் கடவுள் இவர் முன்னிலேயில் தோன்றித் திருநீறு அளித்து அப்பா அருணகிரி! இன்றுடன்

நின் துயர் ஒழிக

என அநுக்கிரகித்தார். அவ்விதமே தேவி உண்ணு முலேயம்பிகையும் தோன்றி

நின் பிறப்பு ஒழிக

என திருவள் புரிந்து மறைந்தார்.

இறைவனின் திருவருளேப் போற்றி முருகப்பெரு மானின் நாமத்தை உச்சரிப்பதனுலேயே உலகத்தின் இன்னல்களேப் போக்கிவிட முடியுமென்ற உன்னத மான தத்துவத்தின் உறைவிடமாக அருணகிரிநாதர் விளங்கினுர்.

அருணகிரியின் நிலேயை அறிந்த அவருடைய தமக்கையார் தம் தம்பியை பார்க்க ஓடோடி வந்தாள். ஞான ஒளி வீசும் அவருடைய தேகம் பொன்னிறமாக காட்சியளித்தது. அவ்வேளேயில் எண்ணற்ற மக்கள் குவிந்த கைகளுடன் கண்ணருவி பெருக அருணகிரி நாதரை போற்றிய வண்ணமாய் இருந்தார்கள்.

தூயமான உள்ளத்தையடைந்த அருணகிரிநாதர் தம் அன்புச் சகோதரியை அளவிலாத கருணேயினுல் நோக்கி வாழ்த்தினுர்.

அங்குக் கூடியிருந்த மக்களுக்கு அவர் சில தத்து வங்களே போதித்தார்.

அறிவின் லட்சியம் இந்த அழியும் உலகை அறிவ தற்கல்ல. ஆண்டவனின் பெருமை, மகிமை இவை

களை அறிவதற்கு. உயிர் தேகத்தைவிட்டு பிரியும் போது செல்வமோ மனிதர்களோ, ஒன்றும் கூடச் செல்வதில்லை. ஆதலால் ஞானிகள் பற்றுதலில்லாமல் எல்லாவற்றையும் துறந்து துறவிகள் ஆகிவிடுகிறார் கள்.

தூய்மையான சிந்தனையுடன் இறைவனை வழிபட வேண்டும். எல்லாம் முருகப்பெருமானின் ஸ்வரூபமே என்று தொழவேண்டும். எல்லா உயிர்களிடத்தும் அன்புபூண்டு முருகனையே பூர்ணமான பரம்பொருள்—அடியார்களுக்கு எளியவன்—கலியுகவரதன்—ஆராத அருள்மலை—அன்புமலை என்று இரவும் பகலும் மனமார வழிபாடு செய்யவேண்டும்.

இவ்வுபதேசங்களைக் கேட்ட தமக்கையார் ஒன்றும் சொல்ல நாவெழாதவளாய் முருகனின் அருளை நினைத்த வண்ணமாகவே வீடு திரும்பினாள்.

## ஸ்தல யாத்திரை

நிற்க அருணகிரியாரின்புகழ் நாடெங்கும் பரவலா யிற்று. இனிமையான மொழிகளால் முருகப்பெரு மானை பலவாறாக பாடிப்பாடிப் போற்றி வந்தார். அணு வுக்குள் அணுவாயும் உலகெலாம் பரவி விளங்கும் அந்த முருகப்பெருமானை பற்பல வகைகளில் தரிசனம் செய்து மனங்களித்தார்.

அருணகிரியின் ஒவ்வொரு பாடலும் உயிர்களை முருகனிடம் பின்னிப்பிணைத்து வைக்கும் மஹிமையை வாய்ந்தது.

இவ்விதம் தவவேடத்தில் நின்ற அருணகிரியார்

ஞாலமெல்லாம் நின் புகழே
மிக வேண்டும்.

என்ற ஒரே எண்ணமாய் எங்கும் முருகப்பெருமானின் தனிப்பெருமை நிலவி இருக்கவேண்டும் என ஆசைகொண்டு தென்னுட்டில்லுள்ள எல்லா புண்ணிய ஸ்தலங்களையும் கண்டு களித்து புகழ்மாலை பாடிவர திருவண்ணுமலையிலிருந்து புறப்பட்டார்.

ஒவ்வொரு ஸ்தலங்களாக தர்சனம் செய்து கொண்டு வருகையில் மஹாக்ஷேத்திரமான தில்லை மாநகரை வந்தடைந்தார். பேரானந்தங் கொண்டு இறைவனைப் புத்துயிர் அளிக்கும் வண்ணம் பாடிஆடி மகிழ்ந்தார்.

இதன் காரணமாக நடராஜப் பெருமானே முருகப் பெருமானுயும்— முருகப்பெருமானே நடராஜப்பெருமானுயும் இவருக்கு தோன்றி காட்சியளித்தனர்.

அக்காட்சியைக் கண்ட மகிமையினுல் "அவகுண விரகனே" என்னும் ஒரே திருப்புகழில்

மலைமகள் உமைதரு வாழ்வே நமோநம

எனகுகனையும்

திரிபுரமெரி செய்த கோவே நமோ நம

என சிவனையும், ஒரே மூர்த்தியாக வைத்து பாடியருளினுர். என்னே அவர் தம் பெருமை.

பின்பு அங்கிருந்து கிளம்பி ஒவ்வொரு தலங்களையும் பார்த்து புண்ணிய மூர்த்தியான திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் அவதரித்து ஞானப்பாலுண்ட தலமாகிய சீர்காழியை வந்தணைந்தார்.

ஞானசம்பந்தப் பெருமானை முருகனின் அவதார மென்றே தமது வாயார எடுத்து திருப்புகழில்பாடினர்.

பின்பு திரு மண்ணிப் படிக்கரைக்கு வந்தார். இங்கு இவருடைய கனவில் முருகபெருமான் தோன்றி அப்பா அருணகிரி! எம்மை நீ வயலூரில் வந்து காண் பாயாக. நமதுமஹிமையைகூறும் சக்தியை வயலூரில் நீ அடைவாய். நீ அங்கு வந்து சேருக என்று கூறி மறைந்தார்.

'அடியேனை தடுத்தாட்கொண்டு கனவில் தோன் றிய பெருங்கருணை கொண்ட முருக பெருமானே! மாபெரும் புண்ணிய மனைத்தும் திரண்டு விளங்கும் அவ்வயலூர் எங்கேவுளது. அதை எப்பொழுது காண் பேன் என உள் உருகி வேண்டினர்.

வயலூரில் வீற்றிருக்கும் முருகனைக் கண்டு களிக்க அவர்வுள்ளம் அவரை உந்தியது. உடனே புறப்பட்டார்.

வைத்தீச்வரன் கோயிலை அடைந்தார். தீராநோய் தீர்த்தருள வல்லானன முருகப் பெருமானை துதித்து, வழியில் அநேக புண்ணிய தலங்களைத் தரிசித்துக் கொண்டு முருகனை போற்றிய வண்ணமாய் சுவாமி மலையை (திருஏரகம்) வந்தடைந்தார்.

சுவாமிமலையாகிய திருஏரகமே ஆறுபடை வீடுகளில் நான்காவதாகும்.

இங்குதான் முருகப்பெருமானின் பாததிரிசனம் அருணகிரியாருக்குக் கிடைத்தன. இந்த அற்புதமான காட்சியை

தகையா தெனக்கு உன் அடி காண
வைத்த தனியேரகத்தின் முருகோனே

என்று புகழ்ந்து பாடினர்.

பின்பு நீங்கமன மில்லாதவராய் சுவாமிமலையை விட்டு தஞ்சை மாநகர் வந்து சேர்ந்தார். இறைவனின் ராஜகோபுரத்தின் அழகு இவர் உள்ளத்தை அள்ளின.

உடனே அக்கோபுரத்தில் வீற்றிருக்கும் முருகப் பெருமானை

வண்டுலாவிய நீப மாலை
சற்றி லங்க வருவாயே
தஞ்சை மாநகர் ராஜ கோபு ரத்தில்
அமர்ந்த பெருமாளே

எனப் புகழ்ந்தார்.

பிறகு திருச்செங்கோட்டினை அடைந்து உயர்ந்த மலைமேல் குடிகொண்டிருக்கும் முருகபெருமானின் திவ்யமான மங்கள ரூபத்தை தமது இருகண்களினு லும் பருகிபரவசமுற்ருர்.

அப்பனே! உனது திவ்ய ரூபத்தைக்கண்டு களிக்க இரண்டு கண்கள் போதுமோ! எண்ணற்ற கண்கள் இருந்தாலும் போதாதே என வருந்தி

மாலோன் மருகனை மன்ருடி மைந்தனை
வானவர்க்கு மேலான தேவனை
மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியிற்
சேலார் வயற் பொழிற் செங்கோடனைச்
சென்று கண்டு தொழ நாலாயிரங்கண்
படைத்திலனே அந்தநான்முகனே

என்னும் ஆழ்ந்த கருத்தினைக் கொண்ட அருமையானப் பாடலை பாடி மனம் கசிந்து செங்கோட்டுப் பெரு

மானே! நான் உன்னை எந்த இடத்தில் கந்தா என அழைக்கின்றேனே அந்த இடத்தில் மின்னல்போல் துணைக்கு அறிகுறியாகும் நினது சேவலுடன் நீ வந்து என்னை ஆட்க் கொள்ளவேணும் என்று வேண்டிக் கொண்டார்—

செங்கோடமர்ந்த பெருமாளே!
சென்றே யிடங்கள் கந்தா எனும்
பொ செஞ்சேவல் கொண்டு
வரவேணும்.

இவ்விதம் முருகனுடன் நேரில் பேசும் தன்மை வாய்ந்த அருணகிரியாரின் திருப்புகழ் பாடல்களில் சொல்லழகையும், பொருட்சுவையையும் கண்டு ஞானிகளும், யோகிகளும், புலவர்களும் வியந்தனர். பாடிப் பாடி மகிழ்ந்தனர்.

நிற்க அருணகிரியார் இறைவன் சொல்லிய வயலூரை என்று கண்ணுறக் காண்பேனென உள்ளம் கசிந்து இரவும் பகலும் வயலூரிலிருக்கும் முருகனையே நினைத்து இருந்தார்.

அங்கிருந்து வயலூருக்கு புறப்பட்டார். போகும் வழியில் ஹேவயலூர்ப் பெருமானே! யமதூதர் என்னை தொட்டுகட்ட வரமுன் நீ உன் கையில் ஞானவேலுடன் மயிலேறி என் முன் வரவேணுமென வேண்டினர்.

வயலூரில் இருக்கும்பொழுது வயலூரா, வயலூரா என்று வயலூரை தமது பாடல்களில் வைத்து புகழ்ந்து பாடுவாராயினர். இங்கே கொஞ்ச காலம் தங்கினர். வயலூரிலிருந்து கொண்டே அருகாமையிலுள்ள புண்ணியதலங்களை தர்சித்து வந்தார்.

ஒரு நாள் முருகப்பெருமான் அருணகிரிநாதருடைய கனவில் மிகவும் அதிசயிக்கும் வண்ணம் தமது

செங்கையில் வடிவேலுடன் தோன்றி அப்பா அருண கிரி! நீ பாடிவரும் திருப்புகழ் பாடல்களை கேட்டுக் கேட்டு யாம் திருப்தி அடைந்தோமில்லை. ஞான அமுதை ஊட்டும் அதனை நீ எப்பொழுதும் பாடிக் கொண்டே இரு.

யாம் கருணை பொழியுமிடம் விராலிமலையே ஆகும். நீ அங்கே வந்து என்னை கனிந்து பாடுவாயாக. என்று சொல்லி மறைந்தருளினர்.

கல்லினையும் உருக்கும் கருணைவடிவான முருகா! நின்கருணை என்னை விராலி மலைக்கு அழைக்கின்றது. நான் செல்லுகிறேன் என்று வயலூரப்பனிடம் விடை பெற்று விராலிமலைக்கு வந்து நண்ணினர்.

மனக்கவலையேதுமின்றி உனக்கடிமையாகயிருந்து உன் பெருமையை பாடுவதையே எனக்குப் பணியாக அருளவேண்டுமென முருகனை வேண்டினர். இறைவ னும் அவ்விதமே அருளினர். பிறகு கருவூருக்குமேற்கே சுமார் 4 மைல் தூரத்தில் தான்தோன்றிமலை என்னும் மலையில் உள்ளமுருகனை கசிந்து துதி செய்தார். அங் குள்ள முருகப்பெருமான் அருணகிரியாரின் உள்ளத் தில் அமிர்தமாகத் தோன்றினர்.

தான்தோன்றி மலையிலிருந்து நீங்கி ஞான மலையில் எழுந்தருளியிருக்கும் முருகனை காணப் போகும் வழியில் ஒரு பெரிய அடர்ந்த காட்டைக் கடந்து செல்லுகையில் வழி தப்பி அருணகிரியார் திகைத்து செங்கோட்டை குமரனை நினைத்தார்.

உடனே சூரியனுக்கொப்பான குமரனுடைய வேல் அவருக்கு இரவும் பகலும் துணையாக வந்து வழி காட்டியருளியது.

இத்தகைய வேலின் வைபவத்தையே அவர்

தனித்து வழி நடக்கும் எனது
இடத்தும் ஒரு வலத்தும்—இருபுறத்தும்
அருகு அடுத்து இரவு பகல்
துணைய தாகும்

என்று ஸ்வானுபவத்தை வேல் வகுப்பில் சொல்கிறார்.

அங்கிருந்து கிளம்பி உள்ளத்தையும் உயிரையும் கொள்ளை கொள்ளும் பழநி மலையை வந்தடைந்தார். அப்போது அவருடைய எண்ணமெல்லாம் பழநியிலே— அவருடைய கருத்தெல்லாம் பழநியிலே— அவருடைய சக்தியெல்லாம் பழநியிலேயே இருந்தது.

திருவாவினன் குடியாகிய பழநியில் உள்ள எல்லாக் குன்றுகளிலும் முருகன் விளையாடுகின்றான். **ஆறுபடை வீடுகளில் மூன்றாவதே மஹா மஹிமை தாங்கிய பழனி மலையாகும்.**

பழநிமலையில் வீற்றிருக்கும் கலியுகவரதனை ஞானக் கொழுந்தை, ஆறு அமுதே என்று கந்தர் அநுபூதியில் உடல் சிலிர்க்கப் பாடுகிறார்.

தேன் பழநி அமுதத்தைப் போற்றி தேன் சொட்ட சொட்ட அருந்தமிழ் மொழிகளால் அதிகமாகவே பாடியருளினார் அருணகிரியார்.

அங்கிருந்து மதுரை மாநகர் வந்து சேர்ந்தார். இறைவனின் திருவிளையாடல்களையும் மற்றும் மதுரை மாநகரில் நடந்த அற்புத நிகழ்ச்சிகளையும் பற்றிப் பல பாடல்கள் பாடினார்,

மதுரையிலிருந்து கிளம்பி திருப்பரங்குன்றத்துக்குப்போய் முருகபெருமானை தரிசித்து, இறைவன் தேவ

சேனையை திருக்கல்லியாணம் செய்து கொண்ட மஹோத்ஸவத்தை புகழ்ந்து பாடினுர்.

**திருப்பரங்குன்றமே ஆறுபடை வீடுகளில் முதலாவதாகும்.**

அதன் பின்பு ஆருவது படை வீடாகிய பழமுதிர் சோலை மலையை வந்து அடைந்தார். அளவில்லாத புகழினைக்கொண்டபாடல்களினுல்முருகனைப்பாராட்டினுர். பேரன்பினுல் மயிர்ப்புளகம் கொள்ள ஆனந்தக் கண்ணீர் விட்டார். ஆடும் மயில் மந்திர ரூபங்கொண்டது என்பதை சொல்லி முருகனை வணங்கினுர்.

**ஆருவதுபடை வீடே பழமுதிர்சோலை க்ஷேத்திரமாகும்.**

பின்பு திருச்செந்தூரை வந்து நண்ணினுர்.

**ஆறுபடை வீடுகளில் இரண்டாவது வீடே மஹா சக்தி வாய்ந்த திருச்செந்தூர் க்ஷேத்திரமாகும்.**

இங்கு முருகப்பெருமான் ஆறுமுகங்களுடன் காட்சி அளித்து அருள்கிருர்.

அருணகிரியாரின் உள்ளத்தில் செந்தூர் வேலன் அன்பாகிய கடலை அலைமோதும்படி செய்து எல்லையற்ற ஆனந்தத்தை அளித்தார்.

அற்புதமாகிய திருவருளைப் பெற்ற அருணகிரியார் திருச்செந்தூர் வேல்முருகனின் முன்பு நின்று கையாறத் தொழுது கண்ணுர தரிசித்து முருகனை கலை ஞானக்கடலே! அக்கடலில் தோன்றிய ஆராத அமுதே! வேதங்கள் ஐயா என ஓங்கி அழைக்கும் புண்ணியனே என்று புகழ்ந்து கீழே விழுந்து செந்தூர் வேலனை வணங்கி எழுந்தார்.

பழநிக்கு அடுத்தபடியாக செந்தூர் வேலனையே போற்றி அதிகம் பாடல்கள் பாடியுள்ளார்.

இங்கு செந்தூர் வேலன் ஞானத்தின் திருவுருவாய் எல்லாவித ஸௌந்தர்யங்களுடன் குழந்தை முருகனுக தோன்றி கொஞ்சிக் கொஞ்சி நடன தரிசனமளித்து அருணகிரிநாதரை மகிழவைத்தார்.

குழந்தை முருகனை தரிசித்த அவர், முருகா! எப்பொழுதும் இந்த குழந்தை கோலத்துடனேயே என் நெஞ்சில் நிறைந்திருப்பாய் என்று உள்ளம் குழைந்து பிரார்த்தித்தார்.

திருச்செந்தூர் வேலனை விட்டு பிரிய மனமில்லாமல் பிரிந்து கடல்தாண்டி ஈழநாட்டை அடைந்துஅருக்கொணமலை, திருக்கோணமலை முதலிய தலங்களை தரிசித்து அருணகிரியார் கதிர் காமத்தை அடைந்து அங்குள்ள கதிர்வேல் முருகனை கனகமாணிக்க வடிவனே என்று வாழ்த்தி வணங்கினுர். கதிர்காமத்திருப்புகழில் முருகனை

இதமொழி பகரினும் மதமொழி பகரினும்
ஏழைக் கிரங்கும் பெருமாளே

என்று இன்ப ரசமாக ஊற்' எழும் தெய்வீகப் பாடலை பாடினுர் அருணகிரியார். கதிர்காமத்தில் கொஞ்ச நாள் தங்கி அங்கு வீற்றிருக்கும் கதிர்வேல் முருகனை இடைவிடாமல் தரிசித்து அத்தலத்தின்று தென்னுட்டிற்கு வந்தார்.

இராமேசுரம் முதலான திவ்ய க்ஷேத்திரங்களை தரிசித்த வண்ணமாய் குற்ருலத்திற்கு வந்து சேர்ந்தார். இத்தலம் மூவர் தேவாரத்தினுல் போற்றப்பட்டது.

இங்கே முருகப் பெருமான் அருணகிரிநாதரின் கனவில் வந்து அப்பா அருணகிரி! உன் விருப்பம்

போல் உன் தோள்களில் நமது வேற்பொறி மயிற் பொறி இரண்டையும் தந்தோம்.

முக்தி தரவல்ல நமது திருவிளையாடல்களின் பெருமையையும், அருள்வடிவமான நமது திருப்புகழையும் திருப்பித் திருப்பிபாடும் பணியாகக்கொண்டு நீ இருந்து வருவாயாக என்று மறைந்தார்.

கனவு நீங்கி அருணகிரியார் தமது தோளில் வேல் மயில் இவைகளின் அடையாளம் இருக்கக் கண்டார். மெய் சிலிர்த்து முருகா! ஞாலம் பதிநான்கிலும் நின் புகழேமிகவேண்டும்.

நாயிற் கடையாய்க் கிடந்த அடியேனையும் ஒரு பொருளாகக்கொண்டு வேல் மயில் தந்து அருளினுயே. நான் உன்னை எவ்விதம் போற்றுவேன் என்று சொல்லி அங்கிருந்து கிளம்பி திருப்போரூருக்கு வந்தார். இதுவே சமராபுரி.

இங்கிருந்துகொண்டு, போர் கோலத்திலிருக்கும் முருகனைவாழ்த்தி மஹா க்ஷேத்திரமான காஞ்சிமா நகரைவந்துநண்ணினுர். இங்கு சிலகாலம் தங்கி பின்பு திருவான்மியூரைத் தொழுது மயிலாப்பூருக்கு வந்தார். திருமயிலையில் குடிகொண்டிருக்கும் சிங்கார வேலனை பலவாருகப் போற்றி வள்ளிமலை வந்து அம்மலையை வலம் வந்து திருத்தணியை வந்தடைந்து முருகனை வாழ்த்தி மகிழ்ந்தார்.

**ஆறுபடை வீடுகளில் ஐந்தாவதுஆன குன்றுதோருடல் என்று பிரசித்தியடைந்த புண்ணியஸ்தலமே திருத்தணிகையாகும்.**

பிறகு திருத்தணிகையில் பலநாள் தங்கி அங்கிருந்து புறப்பட்டு திருவேங்கடம் என புகழப்படும்

திருப்பதி மலையை வந்தடைந்தார். அம்மலையில் விஷ்ணு ருபத்தில் வீற்றிருக்கும் முருகப்பெருமானை பலவாறு துதி செய்து மகிழ்ந்தார். அங்கு அருணகிரி நாதரின் கனவில் முருகப்பெருமான் தோன்றி அப்பா அருணகிரி! யாமே இங்கு விஷ்ணுருபத்தில் விளங்குகிறோம் என்று அருளி மறைந்தார்.

அதன் பின்பு திருவேங்கடத்தை விட்டு திருக்காளதிக்கு வந்து இறைவனை துதித்து தென்கயிலாயம் என்று புகழ்பெற்ற காளஹஸ்தியை விட்டு வெகுதூரம் சென்று மஹாக்ஷேத்திரமாகிய ஸ்ரீசைலத்தை அடைந்தார். இம்மஹிமைவாய்ந்த க்ஷேத்திரத்தில் சிவபிரானும் பார்வதியும் வண்டு ருபமாக உருவங்கொண்டு, பழம் கிடைக்கவில்லையே என்று கோபத்துடன்சென்ற குமரனை,தேடிக்கொண்டே குமரன்எங்கே குமரன் எங்கே என்று ரீங்காரம் செய்து கொண்டேயிருக்கிறார்கள். இறைவனின் திருவிளையாடலையும் குமரனின் திவ்யலீலையையும் மனதில் தியானம் செய்தவண்ணமாகவே கொஞ்சநாள் ஸ்ரீசைலத்தில் தங்கினார்.

## இமயம்வரை

பிறகு ஸ்ரீசைலத்தை விட்டு வடதிசையை நோக்கி புறப்பட்டார். போகும் வழியில் வேல் முருகா—வேல் முருகா என்பதையே மந்திரமாகவே ஜெபம் செய்து கொண்டு பெரியபெரிய காடுகளையும் மலைகளையும் ஆறுகளையும் கடந்துசென்றார். பயங்கரமான கொடிய விலங்குகளும், ஸர்ப்பங்களும் அருணகிரியைத் தலை வணங்கி உடன் சென்றது. இரவில் முருகனுடைய வேல் மட்டும் அவருக்கு துணையாக இருந்தால் போதாதென்ற எண்ணத்துடன் ஸர்ப்பங்கள் எல்லாம் தங்களு

டைய மாணிக்கத்தைக் கக்கி அதன் ஒளியினுல் அருணகிரிநாதருக்கு வழிகாட்டியது. இரவில் அருணகிரிநாதர் துயில் கொள்ளும் பொழுது ஸர்ப்பங்கள் வள்ளளாரைச் சுற்றித் தங்களுடைய படங்களை எடுத்துக் கொண்டு காப்பாற்றி வந்தன.

என்னே முருகப்பெருமானின் கருணை. இவ்விதம் சில நாட்கள் கழிந்தன. முடிவில் மஹா புண்யக்ஷேத்திரமாகிய காசியை அடைந்து விசாலக்ஷிஸமேதரான விசுவநாதரைக் கண்குளிரக் கண்டு ஆனந்தஸமுத்திரத்தில் மூழ்கி நின்ருர். காசி விசுவநாதரை பலவாறு துதித்து, ஹரித்துவார் என்கிற திவ்ய க்ஷேத்திரத்தை தரிசனம் செய்துவிட்டு ஸரஸ்வதி நதிக்கரையிலுள்ள பைரவி வனத்தை அடைந்தார். இங்கே கோடிக்கணக்கான ஸர்ப்பங்கள் இருக்கின்றன. அவைகளுடன் தழுவி விளையாடுகிருன் இன்றும் செல்வக்குமரன் அவ்வித வனத்தில் வீற்றிருக்கும் வடிவேலனை வாயார வாழ்த்தி தொழுதுவணங்கினுர்.

பிறகு அங்கிருந்து அநேக புண்ணியஸ்தலங்களைக் கண்டு தரிசித்து முடிவில் இமயமலையை அடைந்தார். இமயமலையில் விளையாடிக்கொண்டிருக்கும் குமரனைக் கண்ணுரக்கண்டு "ஹே செல்வக்குமரா! நினதுபெருமை தான் என்னே. குமரியிலிருந்து இமயம்வரையில் நினது பெருமைதான் வானளாவ நிலவி நிற்கின்றது அப்பனே" என்று புகழ்ந்து, அங்கிருந்தவாறே மஹா கைலாஸத்தையும் தொழுது வணங்கி, பின்பு ஒவ்வொரு ஸ்தலங்களாகத் தரிசித்துக் கொண்டே தென்னகத்தை நோக்கி வந்துகொண்டிருந்தார்.

முடிவில் அருணகிரிநாதர், மொழியும் அடியார்களின் குறைகளைத் தீர்த்து வைக்கும் தமது சொந்த ஸ்தலமான திருவண்ணுமலையை வந்தடைந்தார்.

நிற்க, அருணகிரியாரின் காலத்தில் திருவண்ணு மலையை பிரபுடதேவ மஹாராஜா ஆண்டு வந்தார். அருணகிரிநாதரிடம் அவர் மிக்க அன்பும் பக்தியும் கொண்டவர்.

எனவே வெகுகாலமாகப் பிரிந்திருந்த அருணகிரி யார் வருகிருர் என்பதைக் கேட்டு அரசன் அவரை ராஜமரியாதையுடன் வரவேற்ருர். கண் இழந்தான் மீண்டும் கண்ணை அடைந்ததுபோல் அருணகிரியாரி டம் மகிழ்ந்து சல்லாபம் செய்து களித்தான்.

திருவண்ணுமலையிலிருந்து கொண்டே உலகி லுள்ள முருகப்பெருமானின் ஆலயம் ஒன்றுகூட விடுபடக்கூடாதென்று எண்ணித் தொகைத்தலங் களாக சேர்த்துப் பாடினுர்.

## வில்லிபுத்தூரரின் தோல்வி

அருணகிரிநாதருடைய பெருமையும் புகழும் நாடெங்கும் பரவலாயிற்று. இவருடைய திருப்புகழ் களை யாவரும் புகழ்ந்து பாடிக்கொண்டே இருந்தார் கள்.

இவ்வாறு இருக்கும்கால் மாபெரும் மஹா பாரதத்தை அருந்தமிழில் பாடியவருமான வில்லிபுத் தூரர் அருணகிரிநாதரின் பெருமையையும் மகிமையை யும் கேள்விப்பட்டார். மிக்கப் போற்றப்பட்டவரும் பெருமையான கவித்வம் கொண்டவரும், தமது கல்வி செருக்கால் அகம்பாவம் கொண்டு தம்முடன் வாது செய்து தோற்றுப் போகிறவர்களுடைய காதை குறடு கொண்டு அறுத்து தள்ளுபவருமான வில்லிபுத்தூரர் அருணகிரிநாதரை வாதத்தில் வெல்லவேண்டுமென்று எண்ணங்கொண்டார்.

தாம் எண்ணியவாறே வில்லிபுத்தூரர் திருவண்ணு மலையை வந்தடைந்தார். அரசன் பிரபுடதேவனை சந்தித்து தாம் அருணகிரியாரிடம் வாதம் செய்ய வந்திருப்பதாகக் கூறினர்.

வாதத்திற்கு தகுந்த ஏற்பாடுகள்செய்யப்பட்டன. வாதில் தோற்றவருடைய காதுகள் குறடு கொண்டு அறுக்கப்படும் என்று நிபந்தனை செய்யப்பட்டது.



இருவருக்கும் வெகுநேரம் வாதம் நிகழ்ந்தது ஒருவரையொருவர் சலித்தார்கள் இல்லை.

வில்லிபுத்தூரர் அபூர்வமான கேள்விகளைக் கேட்டார்.

அனைத்துக்கும் அருணகிரியார் முருகப்பெரு மானின் அருளினுல் பதிலளித்தார்.

பிறகு அருணகிரியார் வில்லிபுத்தூரர் அவர்களை நோக்கி "தாம் அந்தாதி சொல்லிவருவதாகவும் அதற்கு பொருள் கூறுமாறும் கேட்டுக்கொண்டார்.

ஆனுல் "திதத்தத்த" என்னும் கவிக்குப் பொருள் கூற முடியாமல் வில்லிபுத்தூரர் மயங்கி நின்ருர். எவ்வளவு சிந்தித்தும் அவருக்கு பொருள் விளங்க வில்லை. திகைத்துப் பேசமுடியாதவராஞர்.

அவருடைய மமதை அடங்கியது. அப்போது அருணகிரியார் அவரை நோக்கி,

புலவர்பெருமானே! இப்பொழுது இப்பாடலுக்கு என்ன பொருள் கூறப்போகிறீர்கள். யாம் காத்திருக் கவோ அல்லது நீர் உமது தோல்வியை ஒப்புக்கொள் கிறீர்களா என்று சொன்ஞர்.

தமக்கு நிகரான புலவர் உலகிலேயேயில்லை என்று மமதை கொண்டு கருணை அற்று இருந்த வில்லிபுத் தூரர் அருணகிரியாரைப் பார்த்து முருகப்பெருமானின் திருவருளைபெற்ற வள்ளலே! உம்முடன் என்ஞல் வாது செய்து வெற்றிபெற இயலுமோ.

தங்களுடைய கருணையினுல் உண்மையை உணர்ந்து அகங்கார மற்றவஞக நான் இருக்கிறேன். எனவே நான் பூர்ணமனதுடன் தோல்வியை ஒப்புக் கொள்கிறேன். நம் இருவர் செய்துகொண்ட நிபந்தனை படி நீர் உம்முடைய கையினுலேயே எமது இரண்டு செவிகளையும் அறுத்து வீழ்த்தலாம். இதற்கு யாம் சித்தமாக இருக்கிரேம் என்று சொல்லிக் காதை அறுக்கும் குறடினை எடுத்து அருணகிரியாரிடம் நீட்டி தலைகுனிந்தவண்ணமாய் இருந்தார்.

ஆனால் தஞ்சத்தருள் ஷண்முகனைப்பற்றிப் புகழ் மாலை பாடிவரும் அருணகிரிநாதர் இத் தீயசெயலை செய்யத் துணிவாரா.

வில்லிபுத்தூராரிடம், பெரியவரே! இனியாவது இவ்வித பாபகர்மாவை செய்யாதீர்கள். இவ்விதம் நீர் செய்வதால் அடையப்போகும் பலன் ஒன்றுமே இல்லை.

இதனால் உமக்கு மக்களிடம் பகைமையே உண்டாகும். ஆதலால் இடைவிடாமல் இறைவனைப்போற்றி அவன் நாமத்தை உச்சரியுங்கள். நாம் பிறரிடம் மதிப்பும் மரியாதையும் எதிர்பார்ப்பதைவிட நாம் அவர்களுக்கு மதிப்பைக் கொடுத்து கௌரவிப்பதே மேலானதாகும்.

எனவே மீண்டும் இத்தீய செயலை செய்யாதீர்கள் என்று அவருக்கு உண்மையான தத்துவத்தைக் கூறி அவர் கையிலிருந்து குறடாவை வாங்கி உடைத்தெரிந்தார்.

அருணகிரியாருடைய ஒப்பற்ற குணங்களைக் கண்ட வில்லிப்புத்தூரார் அவரிடம், வள்ளலே! தங்களுடைய கருணையால் இந்தக்ஷணமே என்னுடைய தீய வினைகள் யாவும் ஒழிந்து போய்விட்டன. உங்களிடம் என்றென்றும் எனக்கு அன்பும் பக்தியும் குன்றா வண்ணம் வளர்ந்துகொண்டே இருக்க அருள்புரியுங்கள். இதுவே என்னுடைய மேலான ஆசை-என்று சொல்லிக் கடைசியாக அவர் அருணகிரியாரிடம் தாம் தோல்வியுற்ற அந்தாதிக்கு பொருள் கூறுமாறு வேண்டிக்கொண்டார்.

அதனைக் கீழ்க்கண்டவாறு பக்தர்கள் அறியவும்.

திதத்தத்தத் தித்தத் திதிதாதை
தாததுத் தித்தத்திதா
திதத்தத்தத் தித்த திதித்தித்த
தேதுத்து தித்தி தத்தா
திதத்தத்தத் தித்தத்தை தாததி
தேதுதை தாததத்து
திதத்தத்தத் தித்தித்தி தீதீ
திதிதுதி தீ தொத்ததே.

பதவுரை :—திதத்தத்தத்தித்த—திதத்தத்தத்தித்த என்னும் தாள பிரமாணங்களை, திதி—திரு நடனத்தினுல் காப்பாற்றி வருகின்ற, தாதை—சிவபிரானும், தாத—நான்முகனும் துத்தி—படப்பொறியினையுடைய, தத்தி—பாம்பின், தா—இடத்தையும், தித—நிலைபெற்றுக்கொண்டு தத்து—ததும்புகின்ற அத்தி—சமுத்திரத்தை பாலாகக் கொண்டு ததி—தயிரானது, தித்தித்ததே—தித்திக்கின்றதென்று, து—உண்ட கண்ணபிரானும் துதித்து—துதி செய்து வணங்குகின்ற இதத்து—பேரின்ப சொரூபியான ஆதி—மூலப்பரம்பொருளே! தத்தத்து — தந்தத்தையுடைய அத்தி — அயிராவதத்தால் வளர்க்கப்பட்ட தத்தை—கிளியைப்போலுள்ள தெய்வயானைக்கு தாத—தொண்டனே! திதே—தீமையை துதை—நெருங்கிய தாது—சப்ததாதுகளால் நிறைந்ததும் அதத்து—மரணத்தோடும் உதி—ஜனனத்தோடும் தத்து—பலதத்துகளோடும் அத்து—இசைவுற்றதுமான அத்தி—எலும்புகளை மூடிய, தித்தி—பையாகிய இந்த உடல் தீ—நெருப்பினுல் தீ—தகிக்கப்படுகின்ற திதி—அந்த நாளிலே துதி—உன்னைத் துதிக்கும் தீ—புத்தியானது தொத்தது—உனக்கே எந்நாளும் அடிமையாக இருக்க வேண்டும்.

இவ்விதம் தகர இன எழுத்து மட்டும் வரும்படி மேற்கூறிய பாடலுக்கு அருணகிரிநாதரே பொருள்

கூறினுர். இங்ஙனம் இவர் பாடல்கள் முழுமையும் திறம் விளங்கிவரும்.

மிகவும் உயர்வான கருத்தினைக் கொண்ட அந்தாதியின் தத்துவத்தைக் கேட்ட வில்லிபுத்தூரார் உள்ளங் குளிர்ந்தார். அருணகிரியாரை மனமாரப் புகழ்ந்து பாராட்டினுர்.

இதனைப் பார்த்துக் கொண்டிருந்த அரசன் பிரபுட தேவராஜன் எழுந்துவந்து அருணகிரிநாதரை வணங்கி தழுவிக் கொண்டு வள்ளலே! என்னே உம்பெருமையும் கருணையும். கங்கையைப் போல உமது வாக்கிலிருந்து கருணை பெருகி வருகின்றனவே. உலகம் முழுவதும் பாராட்டக் கூடிய அளவில் இறைவனின் அருளைப் பெற்ற உம்மை அடைந்த நான் மிக்க பெருமை கொள்கிறேன். 'கருணைக்கு அருணகிரி' என்று உலகம் உம்மைப் போற்றட்டும் என்று சொன்னுர்.

வில்லிப்புத்தூராரும் அருணகிரியாரிடம் விடை பெற்றுக் கொண்டு தம்மிருப்பிடம் திரும்பிச் சென்ருர்.

## சம்பந்தாண்டானின் பொருமையும் சூழ்ச்சியும்

நிற்க அருணகிரியாரின் புகழ் நாடெங்கும் பரவி மன்னன் பிரபுடதேவனுல் ராஜமரியாதையுடன் போற்றப்பட்டு வருவதை தேவி உபாஸகனுன சம்பந்தாண்டான் கண்டு பொருமை கொண்டான். அதன் காரணமாக அருணகிரியாரின் புகழைக் குறைக்க வேண்டுமென்றும், மன்னனின் ஆதரவு அவருக்கு இருக்கக் கூடாதென்றும், மன்னனின் அன்பிற்குத் தாமே பாத்திரமாக வேண்டுமென்றும் நினைத்தான்.

உடனே சம்பந்தாண்டான் கணக்கற்ற சீடர்களுடன் திவ்வியமாகத் தன்னை அலங்கரித்துக் கொண்டு மனத்தில் தீயஎண்ணங்கொண்டு மன்னனின் அரண்மனை வாயிலை அடைந்தான்.

'சம்பந்தாண்டான் வாழ்க! சம்பந்தாண்டான் வாழ்க!' என்று சீடர்கள் கோஷித்தார்கள். பிறகு அவர்கள் தம் குருவின் வருகையை மன்னனுக்குத் தெரிவித்தார்கள். மன்னனும் சம்பந்தாண்டனைத் தேவி உபாசகன் என்று வணங்கி மரியாதை செலுத்தி அரண்மனைக்குள் அழைத்துச் சென்று "இங்கு தேவரீர் எழுந்தருளிய நோக்கம் என்னவோ! அதை யாம் அறியலாமோ?" என்று பணிவுடன் வினவினர்.

உடனே பொருமை கொண்ட சம்பந்தாண்டான், "அரசே! அருணகிரிநாதர் உண்மையில் உமது அன்பைப் பெறத்தகுதி அற்றவர். அவரிடம் யாம் எவ்வளவோ குறைகளைக் காண்கிருேம். அவைகளை எடுத்து உம்மிடம் கூற நாம் இச்சிக்கவில்லை. முருக பக்தன் போல் தோன்றுகிருரே தவிர அனைத்தும் வெறும் நடிப்பேயாகும்.

மகுடிவாசிப்பதினுல் பாம்பு கட்டுப்படுவதுபோல் அவருடைய இனிமையான பேச்சில் மன்னவனை நீங்கள் கட்டுப்பட்டு நாளடைவில் அரசருக்குள்ள மதிப்பை இழந்து மக்கள் அனைவரும் தங்களைக் கேவலமாகப் பேசக் கூடாதென்பதே எமது சிறந்த அபிப்பிராயம். எனவே இதைக்கூற யாம் இங்கு வந்தோம்" என்று உரை செய்தான்.

அருணகிரியாரிடம் உயர்ந்த எண்ணமும் பக்தியும் கொண்ட மன்னன் சம்பந்தாண்டானிடம் "பெரியவரே! நீர் நன்கு கூறினீர் இல்லை. வள்ளலார் அன்

பிற்கு இருப்பிடம். முருகப்பெருமானின் திருவருளைப் பூர்ணமாகப் பெற்றவர். மீண்டும் இவ்விதம் கூருதீர்கள்'' என்று மொழிந்தார்.

அருணகிரியாரிடத்தில் பிரபுடதேவராஜன் வைத்திருக்கும் உண்மையான அன்பினை நேரில் கண்ட சம்பந்தாண்டான்,

''அரசே! உமது நன்மையைக் கருதியே யாம் இங்கு வந்தோம். தவிர வேறெண்ணம் கொண்டல்ல. நீர் சொல்லும் வண்ணம் அருணகிரியார் முருகனின திருவருளைப் பெற்றிருந்தால், அந்த முருகனைத் தங்கள் கண்முன்னுலே சபையில் வரவழைக்கட்டும். அவ்விதமே நானும் உபாஸிக்கிற தேவி பராசக்தியைத் தங்கள் கண்முன்னுல் வரவழைக்கின்றேன். இதிலிருந்து உண்மை உமக்கு நன்கு விளங்கும்'' என்று கடுமையான குரலில் பேசினுன்.

அவ்வேளையில் அருணகிரியார் வந்து கொண்டிருப்பதைக் கண்ட மன்னன் அவரிடம் விஷயத்தைக் கூறினுன்.

அவரும் அரசனிடம், ''அடியார்களுக்கு முருகப் பெருமான் என்றும் எளியவன்'' என்று கூறி இதனை ஒட்டி ''மேல் நடக்கவேண்டியது நடக்கட்டும்'' என்று சொல்லி அண்ணுமலைக் கோயிலினை அடைந்தார்.

## போட்டி தொடங்குதல்

மறுநாள் அரசன் ஒரு பெரும் சபையைக் கூட்டினுர். எண்ணற்ற மக்கள் சபைக்கு வந்து கூடினுர்கள். யாவரும் அதிசயித்த வண்ணமாய் இருந்தார்கள்.

அவ்வேளையில் சம்பந்தாண்டான் சீடர்கள் சூழ கோலாகலத்துடன் ராஜ சபைக்கு வந்து சேர்ந்தான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அருணகிரிநாதரும் சபைக்கு வந்து சேர்ந்தார். ராஜசபையில் எங்கும் ஒரே அமைதி நிலவியது. அப்போது மன்னன் சம்பந்தாண்டானை நோக்கி, ''பெரியவரே! தாங்கள் உபாசித்து வரும் தேவி பராசக்தியை யாவரும் காணும் வண்ணம் வரவழையுங்கள்'' என்று வேண்டிக் கொண்டார்.

கெட்ட எண்ணங்களையுடைய சம்பந்தாண்டான் தான் உபாசிக்கும் தேவி பராசக்தியை வரவழைக்க பல வழிகளில் முயன்ருன். மகாமந்திரங்களை உச்சரித்தான். தேவி வரவில்லை. அவன் உடம்பில் நடுக்கம் உண்டாயிற்று.

மீண்டும் மீண்டும் விடாமல் தேவியை அழைத்துக் கொண்டே இருந்தான். கண்ணீர்விடலானுன். இதனைக் கண்ட தேவி பராசக்தி ராஜசபைக்கு வரக் கிளம்பிளுள்.

''அன்புள்ளோர் அருளைப் பெறுவார்'' என்று மகான்கள் கூறிய வண்ணம், அன்பில்லாத சம்பந்தாண்டான் தேவியின் அருளைப் பெறத் தகுதியற்றவனே ஆவான்.

எனவே பிரபுடதேவராஜன் சபைக்கு வரக் கிளம்பிக்கொண்டிருக்கும் தேவிபராசக்தியை, முருகப்பெருமான் பாலகுமரனுக இருந்து கொண்டு தன்னுடைய கொஞ்சிக் கொஞ்சிப்பேசும் மழலைச் சொற்களால் ''அம்மா! என்னைத் தன்னந்தனியாக விட்டு விட்டு எங்கே இவ்வளவு வேகமாகச் செல்லுகிருய்? நீ இல்

லாமல் நான் எவ்விதம் இங்கு தனிமையில் இருப்பேன்?'' என்று சொல்லிக் கொண்டே வழியைத் தடுத்து நின்றார்.

குழந்தை குமரனின் தேனூறும் மழலைச்சொல்லிலே தேவி இலயித்து மயங்கித் தன்னுடைய காரியத்தையே மறந்து நின்றாள்.

நிற்க சம்பந்தாண்டான் தேவியைத் தியானிக்கலானான். அப்போது அவன் தியானத்தில் தோன்றிய தேவியானவள் பின்வருமாறு கூறினாள்:—

''சம்பந்தாண்டனே! யாம் பக்திக்கு அடிமை. தூயமனமும் அதன் வடிவமான அன்பு செய்கைகளுமே நம்மை மகிழவைக்கும். எண்ணங்களுக்குப் பெரும் சக்தி உண்டு. ஆனால் நீயோ தீய எண்ணங்களைக் கொண்டவனாக இருக்கிறாய்.

அன்பே வடிவாயும், எல்லாம் முருகனின் செயல் என்று நினைத்து இருப்பவருமான அருணகிரியாரிடம் பொறாமையும் பகைமையும் கொண்டாய். எனவே கெட்ட எண்ணங்கொண்ட உன்னுடைய வாக்கை நிலை நாட்ட யாம் பிரபுடதேவராஜன் சபைக்கு வருவோம் இல்லை. இதுவே எம்முடைய இறுதிமொழி'' என்று சொன்னாள்.

உடனே மனங் கலங்கியவனாய் சம்பந்தாண்டான் ''தாயே! ராஜசபையில் உண்டாகும் தோல்வியை அடியேனால் தாங்க முடியாது. ஆதலால் தாங்கள் சபையில் வந்து தரிசனம் தர மறுத்தாலும், முருகப்பெருமான் சபைக்கு வந்து தரிசனம் தந்து அருள்வதையாவது இல்லாத வண்ணம் செய்யவேண்டும். இதுவே எனது தாழ்மையான வேண்டுகோள்'' என்று பிரார்த்தித்துக் கொண்டான்.

தேவியும் அவன் வேண்டுகோளுக்கு இணங்கி முருகன் தரிசினம் தருவதை தடுக்க உதவி புரிவதாக உறுதிமொழி தந்து மறைந்தனள்.

நிற்க மன்னன் சம்பந்தாண்டானிடம், குறிப்பிட்ட வேளையில் "நீர் உபாஸிக்கும் தேவி ஏன் வரவில்லை. காலதாமதம் உம்முடைய தோல்வியையே எடுத்துக் காட்டுகிறது என்று சொன்னார்.

இதனைக் கேட்ட சம்பந்தாண்டான், மன்னனிடம் உயர்ந்த குரலில் "அரசே! வெற்றியோ தோல்வியோ தீர்மானம் செய்ய இன்னும் நேரம் வரவில்லை. அருண கிரியர் கூறியபடி இன்னும் முருக தரிசனம் ஏற்பட வில்லை. அருணகிரியார் அவருடைய முயற்சியை ஆரம் பிக்கட்டும். அதுவரையில் யாவரும் வெற்றியையோ தோல்வியையோ பற்றிக் கூற முடியாது.

நான் உபாஸித்து வரும் தேவி வராமலிருக்க எத் தனையோ காரணங்கள் உண்டு. அதனை யாம் பின்பு கூறுவோம்! என்று சொல்லி ஒருவாறு சமாளித்துக் கொண்டான்.

## வள்ளலார் முருகனை அழைத்தல்

பிறகு அரசன் அருணகிரிநாதரை நோக்கி, "வள் ளலே! நீர் உபாசித்து வரும் முருகப் பெருமானை யாம் காணும் வண்ணம் இந்த சபையில் வந்து தரிசனம் தந்தருளும்படி செய்ய வேண்டும்" என்று பணிந்து கேட்டுக் கொண்டார்.

நல்லது அரசே! உமது விருப்பப்படியே யாம் முருகப் பெருமானை இச்சபையில் வரவழைக்கின்றோம் என்று பதிலளித்து முருகனைப் புகழ்ந்து மனமுருகிப்

பாட ஆரம்பித்தார்—குறிப்பிட்ட காலம் தாண்டியும் முருகப்பெருமான் சபையில் வந்து தரிசனம் தந்தாரில்லை.

எனவே அருணகிரியார் முருகனின் மயில் அவர் திருக்கையில் தாங்கிவரும் வேல், அவருடைய கடைக் கண்ணின் மகிமை—ஆகிய இம்மூன்றையும் அமைத்து கடைக்கணியல் வகுப்பினுல் குமரனை நெஞ்சார நினைந்து புகழ்ந்து பாடினுர். இருந்தும் முருகப்பெருமான் தரிசனம் தந்தாரில்லை.

கூறும் அடியார்கள் வினைதீர்க்கும் ஆறுபடை வீட்டினையுடைய குமரன் ஏன் இன்னும் வரவில்லை. முருகா! உன்னை வரவழைக்கின்றேன் என்று அரசனிடம் உறுதிமொழி கூறிவிட்டேனே. மாருது தோகை மயில்மீதேறி வந்து தரிசனம் தந்தருள்வாய் அப்பனே என்று மனம் வாடினுர் அருணகிரியார்.

உடனே எண்ணலானுர். முருகா! நின்னிலும் சிறந்தது நின்தாள் அன்ருே! இதனை அறியாமல்போய் விட்டேனே.

அவன் அருளாலே
அவன் தாள் வணங்கி

என்று மாணிக்கவாசக சுவாமிகள் சொல்லியதுபோல் உன் திருப்பாதங்களை நினைப்பதற்கும் அப்படியே வணங்குவதற்கும் உனது அருள் வேண்டும். உனது அருளினுல் உன்னுடைய பாத மகிமையை வர்ணிக்கிறேன் என்று முருகனினும் சிறந்த அவருடைய பாத கமலங்களை

உததியிடை கடவுமர
கதவருண குலதுரக

வுபலளித கனகரத
சததகோடி சூரியர்கள்

என்று தொடங்கும் மந்திர மயமான சீர்பாத வகுப்பி ஞல் துதித்து மனமுருகிஞர். அவருடைய தூய்மை யான அன்பு அவருடைய உள்ளத்தில் கரைபுரண்டு ஓடியது. மகிழ்ச்சிப் பெருக்கால் கேட்போர் எலும் பெல்லாம் உருகும் வண்ணம் குமரனின் பாதமகிமையை இசைமாரிப் பொழிந்தார். சபையில் மன்னன் உள்பட யாவரும் மயிர் சிலிர்த்து அருணகிரியாரை நோக்கிய வண்ணமாய் இருந்தார்கள்.

கெட்ட எண்ணங்கொண்ட சம்பந்தாண்டான் மட் டும் அருணகிரியாரின் தோல்வியையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

சீர் பாத வகுப்பினைப் பாடியும் முருகப்பெருமான் தரிசனம் தந்தார் இல்லை.

அன்று கோபுரத்தினின்று விழுந்து உயிர் மாய்த் துக்கொள்ளப்போகும் தருவாயில் தம்திருக்கரத்திஞல் அடியேனைத் தாங்கித் தடுத்தாட்கொண்ட முருகப்பெருமான் வராமலிருக்க ஏதோ காரணம் நிச்ச யம் இருந்தே ஆகவேண்டும் என்று அருணகிரிநாதர் அதனை அறிய சமாதியை அடைந்தார்.

உடனே அவர்கண் முன்ஞல் மகா கைலாசம் தோன்றியது.

சம்பந்தாண்டான் பிரார்த்தனைக்கு இரங்கி அன்னை பராசக்தியானவள் முருகப்பெருமானைக் குழந்தையாக் கித் தன் மடிமீதில் வைத்து விளையாடிக் கொண்டும், குழந்தை முருகனின் கொஞ்சிக்கொஞ்சிப் பேசும் மழலை சொற்களைப் பருகிக் கொண்டும் இருந்தனள்.

இதனைச் சமாதியில் கண்ட அருணகிரியார் சமாதியிலிருந்து கலைந்து, முருகனை வரவழைக்க என்னசெய்வது, அன்னை பராசக்தியானவள் முருகதரிசனத்தை நிறுத்தும் பொருட்டு செல்வக்குமரனை மடியில்வைத்து அணைத்துக் கொண்டிருக்கிருள். தேவி பராசக்தியை திருப்தி செய்யாமல் முருகனை இங்கு வரவழைக்க முடியாது. இதற்கு என்ன செய்யலாம்?' என்று அருணகிரியார் மனம் கலங்கினர்.

இதற்குள் பொருமை கொண்ட சம்பந்தாண்டான் அரசே! இன்னும் காத்திருப்பதினுல் ஒரு புண்ணியமும் இல்லை. இவர் இப்படியே நாட்கள் பலவாகப் பாடிக் கொண்டிருப்பார். இவர் அழைக்க இறைவன் வருவதா என்று இழிவாகப் பேசினுன்.

சம்பந்தாண்டானின் வார்த்தைகளை அரசன் ஏற்றுக் கொள்ளாமல், பெரியவரே! அருணகிரியாரின் முகத்திலிருந்து எழும் தெய்வத்தன்மை பொருந்திய பாடல்களை இதுவரையில் யாம் எல்லோரும் கேட்டு மகிழ்ந்தோம். தவிர நம்மைப் பரவசப்படுத்திய துமல்லாமல் உள்ளத்தில் அன்பின் பெருக்கை வளரச் செய்கிறது. எனவே பொறுமையாகயிருந்து கவனிப்போம்'' என்று கூறினர்.

நிற்க, அருணகிரியாருக்கு முருகப் பெருமானின் மயில் நினைவிற்கு வந்தது. அதனை ஒட்டி மகாகைலாசத்தில் நடந்த ஓர் அற்புதமான சம்பவம் அவர் நினைவிற்கு வந்தது.

ஒரு சமயம் மகா கைலாசத்தில் சிவபெருமான் பார்வதி தேவியாருக்கு விபூதி பஞ்சாட்சரம் ஆகிய இவற்றின் உண்மையான தத்துவங்களை உபதேசம் செய்து கொண்டிருந்தார். அந்த சமயத்தில் பார்வதி

தேவியானவள் மலையில் தன் அழகிய தோகையை விரித்து ஆடிக்கொண்டிருக்கும் தன் செல்வக்குமரனின் மயிலைக்கண்டு அதன் அழகில் தம் மனத்தைப் பறி கொடுத்தாள்.

இதனைக் கண்ட சிவபெருமான் சினம்கொண்டு, "தேவியே! யாம் தத்துவத்தை உபதேசிக்கும்போது அதில் உன்மனத்தைச் செலுத்தாமல் மயிலின் நடனத்தில் ஆசைகொண்டு இருந்தமையால் நீ மயிலுருவம் பெற்று பூமியை அடைந்து எம்மைப் பூஜை செய்து மீண்டும் எம்மை அடையக் கடவாய்" என்று மொழிந்தார்.

எனவே மயில் மூலமாகத் தேவியைத் திருப்திசெய்யலாமென்று எண்ணி மாபெரும் சக்தியுடன் கூடிய மயில் வகுப்பை எடுத்துப் பாடினர்.

அதல சேடனாராட அகிலமேரு மீதாட
அபின காளி தானட—அவளோடன்
றதிர வீசி வாதாடும் விடையி லேறு
வாராட அருகு பூத வேதாளம்—அவையாட
மதுர வாணி தானட மலரில் வேதனாராட
மருவு வானுளோ ராட—மதியாட
வனச மாமியாராட நெடிய மாமனாராட
மயிலுமாடி நீயாடி வரவேணும்

என நெஞ்சம் நெகிழ்ந்து உருகித் துதித்து, குன்று தோறும் ஆடி விளையாடும் குமரா! அடியேன் என்ன பிழை செய்தேனே? அடியார்களின் உள்ளத்தில் குடி கொண்ட அண்ணலே! இப்பொழுது அடியேன் செய்து கொள்ளும் விண்ணப்பம் ஒன்றுள்ளது. கரர்த்திகை பாலனே! மன்ன பெருமானின் உள்ளம் குளிரும்

வண்ணம் நீ மாருது தோகை மயில் மீதேறி இந்த சபை யில் வந்து தரிசனம் தந்தருள வேண்டும். அதுவரை யில் நிம்மதியற்ற மனத்தையுடையவனுகவே இருப் பேன்'' என்றுகூறி வருந்தினுர்.

## முருகன் தரிசனம் தருதல்

அருணகிரியாரின் துயர மொழிகள் குமரனுடைய மயிலின் செவியில் விழுந்தது.

அன்பே உருவான அருணகிரியார் முருகனே அழைக்கின்ருர்.

முருகனேத் தரிசனம் தரவிடாமல் மடியின்மீது வைத்துக் கொண்டு விளேயாடுகிருள் தேவி பராசக்தி. இத்தருணத்தில் நான் உதாஸீனனுகயிருந்தால் முருக னின் பெருமைக்கே இழுக்கு வந்து விடுமன்ருே! என்றெண்ணி, தன்னுடைய மாருத தோகையை விரித்துக் கொண்டு பார்வதிதேவியின் கண்முன்னுல் அற்புதமாக நடனமாடிற்று. அவ் வேளேயில் மனம் நிறைந்த இளந்தென்றல் காற்று வீசியது. அனேத்தும் பார்வதிதேவியை மயிலின் நடன அழகில் இலயிக்க வைத்துமெய்மறக்கச் செய்தது.

மயிலோவெனில் தன்னுடைய நடன மகிமை யினுல், அருணகிரியார் அழைக்கின்ருர் என்பதை முரு கனுக்கு நினேவூட்டிற்று.உடனே தஞ்சத்தருள் முருகப் பெருமான் தேவியின் பிடியிலிருந்து விடுபட்டு ஒரே பாய்ச்சலாக மயில்மீது ஏறி அமர்ந்தார். உடனே மயில் மனோவேகத்தினும் வேகமாய் திருக்கைலே யிலிருந்து மன்னன் பிரபுடதேவராயன் சபையை நோக்கி வந்துகொண்டே இருந்தது.



ஒரு நொடிப் பொழுதில் எல்லாம் வல்ல முருகப் பெருமான்! தமது திருக்கரத்தில் கோடி சூரியனுடைய பிரகாசத்திற்கு ஒப்பான காந்தியையுடைய வெற்றி வேலைத் தாங்கிய வண்ணமாய் மயில்மீது வந்து ஒரு கற்கம்பத்தின் இடையே தோன்றி மின்னல்போல் காட்சி தந்து மறைந்தார்.

முருகனின் தரிசன மகிமையினுல் அரசபெருமான் கண்ணொளியினை இழந்தான்.

கண்பார்வையை இழந்த மன்னன் அருணகிரியாரிடம் வந்து, "வள்ளலே! இதென்ன அதிசயம். தங்களைக்காண பார்வையில்லாதவனுகி விட்டேனே. இழந்த பார்வையைப்பெறமுடியுமா, திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனை மீண்டும் கண்ணுரக் கண்டு களிக்க முடியுமா?" என்று பலவாறு மனம்நொந்து கூறினுன்.

ஞானவுருவாய் நின்ற அருணகிரியார், "அரசே! மனக்கவலையை ஒழியுங்கள். அவன் அருள் இருக்குமாஞல் மீண்டும் நீர் உமது இழந்த பார்வையைப்பெறுவீர்கள். இது சத்தியம்" என்று சொல்லி அரசனை சமாதானப்படுத்தினுர்.

அவ்வேளையில் வானிலிருந்தவாறே தேவர்களும் முனிவர்களும் மற்றும் எண்ணில்லாத பெருந்தவத்தோர்களும் அருணகிரியாரைத் துதித்துப் பூமழை பொழிந்தார்கள்.

சபையில் கூடியிருந்த மக்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து,

வாக்கிற்கு அருணகிரி—கருணைக்கு அருணகிரி
அருளுக்கு அருணகிரி—சொல்லுக்கு அருணகிரி

என்று கைகுவித்துப் போற்றிக் கோஷித்தார்கள்.

## இரண்டாவது சூழ்ச்சி

தன் தோல்வியை நினைத்துப் பொருமை கொண்ட சம்பந்தாண்டான் அரச சபையை விட்டு அகன்ருன். அருணகிரியார் இருக்கும்வரையில் தான் மன்னனின் அன்பைப் பெறமுடியாது என்று எண்ணினுன்.

சூழ்ச்சியின் மூலமாய் அவரை வெல்ல எண்ணி ஞன். உடனே தனிமையில் மன்னனை அடைந்து,

அரசே! மீண்டும் உமது நன்மையை நாடியே யாம் இங்கு வந்தோம். முருகதரிசனத்திஞல் உமது பார்வையை நீர் இழந்தீர் என்று என்ஞல் ஒப்புக் கொள்ள முடியாது.



நன்ருய் சிந்தித்துப்பாருங்கள். கருணைக்கடலான முருகப்பெருமான் மன்னஞகிய உமது பார்வையை மழுங்கச் செய்வாரா? அறநெறி வழுவாமல் அரசு செலுத்தி வருகிற தங்களை இறைவன் இக்கதிக்கு ஆளாக்குவாரா. எனவே இதை இறைவன் செயல் என்று கூறமுடியாது. தேவிதரிசனத்தை எங்கேயா வது நான் தங்களுக்குக் காட்டி அதன் காரணமாகத் தாங்கள் என்மேல் அன்பும் நம்பிக்கையும் கொண்டு நாளடைவில் அவரிடம் நம்பிக்கை கொள்ளாமல்

இருந்து விட்டால், அது அவருடைய பெருமையைக் குறைத்துவிடுமோ என்ற அச்சத்திஞலேயே வேண்டு மென்றே அவர் இவ்விதம் செய்திருக்க வேண்டும். ஏனெனில் அவர் மாந்திரீக வித்தையில் கைதேர்ந் தவர். இது அல்லல்படுத்தும் அற்பதேவதையின் செய்கை என்பதில் சிறிதேனும் ஐயமில்லை. இதையாம் அன்றே சபையில் கூறியிருக்க வேண்டும். இருந்தும் தனிமையில் கூற இச்சைப்பட்டு யாம் இங்கு வந்து கூறினோம். சொல்லவேண்டியது என் கடமை. பிறகு உமதிஷ்டம்போல் செய்ய வேண்டியதைச் செய்யுங் கள்!'' என்று மொழிந்தான்.

'காலத்திற்கு ஏற்ற சொல் எவனுடைய மனத்தை யும் மாற்றி விடும்' என்று சான்றோர் கூறுவர். எனவே சம்பந்தாண்டனின் இனிய பேச்சில் மன்னன் மயங்கி நின்றான்.

அருணகிரிநாதரை ஒழித்து விட வேண்டுமென்ற ஒரே நோக்கத்தினைக் கொண்ட சம்பந்தாண்டான் மீண்டும்,

''அரசே! இழந்த கண்பார்வையை மீண்டும் தாங்கள் பெறலாம். அதற்கு வழி ஒன்று உண்டு. சொல்லுகிறேன் கேளுங்கள். தேவலோகத்திலுள்ள கற்பகமலரினைக் கொணர்ந்து அதனை ஒளி இழந்த நின்கண்களில் ஒத்திக்கொண்டால் உடனே ஒளிஇழந்த நின் கண்கள் மீண்டும் ஒளியினைப் பெறும். ஆனால் ஒன்று! தேவலோகம் சென்று கற்பகமலரினைக் கொணர்வது சாமான்யமான காரியமல்ல. கற்பகமல ரினைக் கொண்டு வரும் சக்தி எனக்குண்டு. அருண கிரிக்கும் உண்டு. இருந்தும் யாம் இப்போது அதனைக் கொண்டுவர இச்சித்தோமில்லை. காரணமோவெனில்

அருணகிரியே கற்பகமலரினைக் கொண்டுவர வேண்டுமென்பதேதானுகும். இதிலிருந்து அவருடைய ஔதாரிய குணமும் பரந்த உள்ளமும் வெளியாகிவிடும். ஒரு வேளை அவர் கற்பகமலரைக் கொண்டுவர மறுத்து விட்டால் மறுவினுடியே மலரை யாம் கொண்டு வருவோம். இது சத்தியம்'' என்று கூறினுன்.

இவ்விதம் கூறின சம்பந்தாண்டானின் உண்மையான எண்ணமோவெனில் அதாவது—கற்பகமலரைக் கொண்டுவர அருணகிரியார் தம் தேகத்தை விட்டுச் செல்ல வேண்டுமென்பதாலும், அந்த வேளையில் அவருடைய பூதஉடலை எரித்து விடலாமென்பதேதானுகும். ஏனெனில் ''கூடுவிட்டுக் கூடுபாயும்'' வித்தை அருணகிரியாருக்குத் தெரியும் என்பதை அவன் நன்கு அறிவான்.

ஆனுல் அருணகிரியார் போற்றி வரும் முருகப் பெருமானின் மந்திரமயமான வேல்.

பொல்லாத வரை
பொடிப் பொடியாக்கும்

என்பதை அவன் அறிந்தான் இல்லை.

## மன்னனின் வேண்டுதல்

நிற்க, மன்னனும் கண்பார்வையை மீண்டும் பெறலாமென்ற ஆர்வத்துடன் வள்ளலாரை வரவழைத்து வருமாறு கட்டளையிட்டான். அவரும் உடனே மன்னனைக் காணவந்தார்.

அருணகிரியாரின் குரலைக் கேட்டதும் மன்னனின் உள்ளத்தில் அன்பானது ஊற்றெடுத்தது. கண்களிலிருந்து நீர் பெருகியது. மனமகிழ்ச்சி கொண்டு

வணங்கி அருணகிரியாரை நோக்கி, ''தபோநிதியே! உமது அருளை நாடியே யாம் உம்மை இங்கு வரவழைத்தோம். கண்ணொளி மழுங்கப்பெற்ற யான் மீண்டும் அதனைப் பெற இச்சிக்கிறேன். கண்பார்வையை இழந்த நான் உயிருடன் இருந்தும் உயிர் அற்றவன் அன்றோ!

ஆதலால் அருந்தவத்தினையுடைய தாங்கள் இம் மண்ணுலகை விட்டுத் தேவலோகம் சென்று ஒருவராலும் அடைய முடியாத ஒப்பற்ற கற்பகமலரைக் கொண்டு வருவீர்களானால் அதன் மகிமையினால் யாம் மீண்டும் கண்ணொளியைப் பெற இயலும். இதுவே எனது ஆசை.

அல்லல்படும் அடியேனைக் காத்தருள வேண்டும்'' என்று அஞ்சலி செய்த வண்ணமாய் இரந்து வேண்டினார்.

உடனே அருணகிரியார், ''அரசே! வருந்தாதீர். உமது விருப்பப்படியே யான் தேவலோகம் சென்று இணையற்ற கற்பகமலரைக் கொண்டு வருகிறேன். அதன் சக்தியினால் நீர் மீண்டும் உமது பார்வையைப் பெறுவீர். இந்த விஷயத்தில் உம்முடைய ஆசையும் யாம் செய்ய வேண்டிய எம்முடைய கடமையும் பிணைந்து இருக்கின்றன.

அரசே! ஆனால் ஒன்று. இந்தப் பூதவுடலை வைத்துக் கொண்டு தேவலோகம் செல்ல முடியாது. எனவே கூடுவிட்டுக் கூடுபாய்ந்துதான் செல்ல வேண்டும். ஆகையினால் யாம் இந்தப் பூதவுடலை அண்ணாமலைக் கோபுரத்தில் வைத்து விட்டுப் போகிறோம். யாம் திரும்பி வரும் வரையில் எமதுவுடல் ராஜபார்வையில் இருக்கவேண்டும்'' என்று கூறினார்.

இதைக் கேட்ட மன்னன், "அண்ணலே! கண் இமைபோல் உமது உடலைக் காப்பாற்றுவேன்" என்று உறுதி கூறினான்.

## தேவலோகம் செல்லல்

அருணகிரியாரும் தாம் கூறியது போல் அண்ணாமலைக்கோயில் கோபுரத்தில் தமது பூதவுடலை விட்டு, அங்கு இறந்து கிடந்த ஒரு கிளியின் உடலில் பிரவேசித்துத் தேவலோகத்திற்குக் கிளி ரூபமாகச் சென்றார்.

அரசகட்டளைப்படி காவலாட்கள் இரவு பகலாக அருணகிரிநாதரின் பூதவுடலைக் காத்திருந்தனர்.

இதனை அறிந்த சம்பந்தாண்டான் பின்வருமாறு எண்ணலானான்:—

அருணகிரியாருடைய பூதவுடலைக் காவலர்கள் காத்து வருகின்றனர். எனவே நாம் நேரடியாகச் சென்று அவருடைய பூதவுடலை எரித்துவிட முடியாது. மன்னன் நம்பும் வண்ணம் ஒரு சம்பவத்தை உண்டு பண்ணி அதையே அஸ்திவாரமாக வைத்துக்கொண்டு அருணகிரியாரின் உடலை எரிக்கவேண்டும். அன்னியில் மன்னன் உள்பட யாவரும் நம்மைச் சந்தேகங் கொள்வார்கள். அதற்கு நாம் இடம் கொடுக்கக்கூடாது. தர்மநெறியில் நிற்பவன் போல் இருந்து நாம் நினைத்ததைச் செய்ய வேண்டுமென மன உறுதி கொண்டான். உடனே இரவோடு இரவாகக் காவலர்கள் அறியாவண்ணம் ஓர் இறந்த கிளியை அண்ணாமலைக் கோபுரவாயிலில் வைத்துவிட்டு வந்தான்.

மறுநாள் காலையில் காவலர்கள் இறந்து கிடந்த கிளியினை நோக்கி, ஒரு வேளை கிளி ரூபத்தில் விண்ணு

லகம் சென்ற அருணகிரியாராகவே இருந்தாலும் இருக்கலாம். எதற்கும் நாம் கிளியை மன்னனிடம் எடுத்துச் செல்வோம் என்று கிளியினை அரண்மனைக்கு எடுத்துச் சென்றார்கள்.

திட்டமிட்டுச் செய்த காரியமாதலினால் முன்னதாகவே சம்பந்தாண்டான் அரண்மனையை அடைந்து மன்னனிடம் பேசிக் கொண்டிருந்தான். அவ்வேளையில் காவலர்கள் இறந்த கிளியுடன் வந்து, "அரசே கோபுரவாயிலில் இவ்விறந்த கிளியைக் கண்டோம்," என்று உரைத்தார்கள்.

இதைக்கேட்ட சம்பந்தாண்டான் ஒன்றும் தெரியாதவன் போல், இறந்த கிளியினை நோக்கி, "அந்தோ கெட்டோம். இது கிளிவுருவத்தில் சென்ற அருணகிரியாராகவேதான் இருக்க வேண்டும் அரசே! இதில் சிறிதேனும் ஐயமில்லை கற்பக மலரைக் கொண்டுவரச் சென்ற அருணகிரியார் அதனை அடைய முடியாமல் மீண்டும் தங்களைக் கண்டுபேச நாணமுற்றவராய் கிளிரூபத்தினின்றே உயிர் துறந்திருக்கலாம். அன்னியில் கோபுரவாயிலில் கிளி இறந்துகிடக்க நியாயமில்லை. தவிர அருணகிரியார் உண்மையான யோகசக்தியை அறிந்தவரும் இல்லை. அடைந்தவரும் இல்லை.

இதனைத் தெரிந்தும் யாம் முன்பு இவருக்கு எல்லா சக்திகளும் உண்டு என்று உம்மிடம் கூறினோம். காரணமோ வெனில் நீர் இவரைக் கற்பக மலர் கொண்டு வரச் செய்யவும் அதன் மூலமாக இவருடைய சக்தியானது எந்த அளவிலிருக்கிறது என்பதை உமக்கு எடுத்துக் காட்டவுமே யாகும்.

அவர் உபாசித்து வரும் அற்பதேவதைகளே அவரைக் கொன்றுஇருக்கவும் கூடும். அல்லது இவ்வ

ளவு நாள் வரையிலும் மன்னனின் ஆதரவையும் அன்பினையும் பெற்ற நாம், மீண்டும் பெறமுடியாமல் போய்விடுமோ என்ற மனோ ஏக்கத்தினாலும் உயிர்துறந்திருக்கலாம். எதற்கும் வழி உண்டு.

ஆனால் நன்றாக ஆலோசித்து பார்க்கும் கால் அருணகிரியார் இறந்ததோ வெனில் முற்றிலும் உண்மை. அவர் வருவார் வருவார் என்று நாம் காத்துக் கொண்டிருந்தால் முடிவில் நமது எண்ணம் கானல் நீர்போல ஆய்விடும்.

மேலும் "பிறப்புண்டேல் இறப்புண்டு" என்று இருப்பதால், இவருடைய முடிவுக் காலம் இப்படியாகி விட்டது. அரசே! வருந்தாதீர், உமது கண்ணொளியை மீண்டும் யான் வரவழைக்கின்றேன். மனக்கவலையை விட்டு விடுங்கள். யாம் உபாசித்துவரும் தேவி, அன்னை பராசக்தியே ஆவாள். அவள் இல்லையேல் இவ்வுலகமேயில்லை—ஏன்! எதுவுமே இல்லை—அன்னையின் திருவருளினால் மீண்டும் நீர் உமது பார்வையைப் பெறுவீர். இதனை ஒட்டி நாளையே யாம் நமது பூஜையைத் தொடங்குவோம்,

இதற்கு முன்பாக அண்ணாமலைக் கோயிலின் கோபுரத்திலிருக்கும் அருணகிரியாரின் சடலத்தை அகற்றி அதனை முறைப்படி அடக்கம் செய்வோம். அதுதான் முறை" என்று மிகவும் நல்லவன் போல் மன்னனிடம் கூறினான்.

அரசனோ வெனில் கண்பார்வையை இழந்தவனாக இருந்தமையால் எதையுமே நன்றாக ஆராய்ந்து உண்மையை அறிந்துகொண்டு, அதற்கு ஏற்றபடி காரியங்கள் செய்வதற்கு சக்தியற்றவனாக ஆகிவிட்டான். ஆதலால் சம்பந்தாண்டானின் வார்த்தைகள் மன்னனின் மனத்தில் முற்றிலும் உண்மை என்றே பட்டது.

உடனே மன்னன் அருணகிரியாரின் சடலத்தைக் கோபுரத்திலிருந்து அகற்றித் தக்க முறையில் தகனம் செய்யக் கட்டளை இட்டான்.

''அருணகிரியார் இன்றுடன் ஒழிந்தார்'' என மன மகிழ்ச்சியடைந்த சம்பந்தாண்டான் அரசனிடம் தாமே அருணகிரியாரின் சடலத்தை அடக்கஞ் செய்வதாகக் கூறினன். மன்னனும் அதற்கு இசைந்தான்.

சம்பந்தாண்டானுக்கு அருணகிரியாரின் மகிமை நன்ருகத் தெரிந்தமையால் காலதாமதம் தன் காரியத்தையே கெடுத்துவிடும் என்று விரைவாகக் கோபுரத்திலிருந்து அருணகிரியாரின் சடலத்தை அகற்றி தகனம் செய்யத் தொடங்கினன்.

## கற்பகமலருடன் திரும்புதல்

இது இப்படியிருக்க கிளி ரூபத்தில் தேவலோகம் சென்ற அருணகிரியார் கற்பக மலருடன் அதிவேகமாய் அண்ணுமலைக் கோயிலினை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

இவர் வருவதற்கு அறிகுறியாக அவ்வேளையில் பெருகிவரும் வெயில்தனிலே பிணைந்து வரும்தென்றல் காற்றினிலே கற்பக மலரின்திவ்யமான வாசனையானது திரு அண்ணுமலை முழுதும் நிலவி நின்றது. எல்லோருடைய உள்ளத்திலும் எல்லையில்லாத புது மகிழ்ச்சியை உண்டாக்கியது.

மெய் நெறியில் நிற்பவர்கள் விரும்பித்தொட்டால் எதனையும் அளிக்க சக்தி வாய்ந்தது அல்லவா கற்பக மலர்—எனவே கற்பக மலரின் சக்தியை என்னவென்று கூறுவது.

சிறிது நேரத்தில் யாவரும் காணும் வண்ணம் அண்ணமலைக்கோபுரத்தில் வந்து இறங்கித் தாம் விட்டுச் சென்ற பூதவுடலைத் தேடினர். ஆனல் தம்முடைய உடலைக் கண்டாரில்லை

உடனே காலதாமதமின்றி அரண்மனையை அடைந்து மன்னனிடம், "அரசே! கவலையை ஒழியுங்கள். அருணகிரியார் கற்பக மலருடன் வந்து இருக்கின்றேன்" என்று சொல்லிக் கற்பகமலரினை மன்னனிடம்கொடுக்க அதனை மன்னன் கண்களில் ஒத்திக் கொண்டான். மறுவினடியே கண்களின் பார்வையை மீண்டும் பெற்று முதன்முதலாகத் தன் முன்பு கிளி ரூபத்தில் அருணகிரி




யாரைக் கண்டான். புத்துயிர் பெற்ற அரசனின் உள்ளம் துடித்தது. மொழி தடுமாறியது. உடல் நடுங்

கியது. மனம் கலங்கி ஒன்றும் அறிந்திலனுகி பூமியில் விழுந்து புரண்டு ஞானமே உருவெடுத்துவந்த அருண கிரியாரைப் பார்த்து,

''அண்ணலே, வையகத்தைக் காக்கவந்த வள்ளலே! ஞானத்தின் திருவுருவே! அடியேன் அறியாமையினு லும் கண்ணிழந்தமையினுலும் தங்களுக்குச் செய்யத் தகாத தீங்கினைச் செய்து விட்டேன். அதைச் சொல்லக் கூட என் நா எழவில்லை. அடியேனை ''மன்னித்தருளு மாறு தங்களை அஞ்சலிசெய்து பிரார்த்திக்கின்றேன்'' என்று சொல்லி இரு கண்களிலிருந்தும் அருவிபோல் நீர் சொரிய இரு கரங்களையும் அஞ்சலி செய்த வண்ண மாய் அண்ணலாரை நோக்கினுன்.

தம்மைக் கண்டு கதறும் மன்னர் பெருமானை அருணகிரியார் எழுந்திருக்கச் செய்து பலவாறுதேற்றி ''அரசே ஆவதும் அழிவதும் ஆகிய எல்லாம் முருகப் பெருமானுடைய செயலே யாகும். இதில் யார் யாரை மன்னிப்பது?'' என்று கூறினுர்.

திருவுடையீர்! கண்ணொளியிழந்து துன்பக்கடலில் அழுந்திய அடியேனை சம்பந்தாண்டான் தன்னுடைய சூழ்ச்சியினுல் தாங்கள் இறந்ததாகக் கூறினுன். மெய் யுணர்வில்லாத நான் அவன் வார்த்தையை நம்பி, தங்க ளுடைய திருமேனியை முறைப்படி தகனம் செய்யக் கட்டளையிட்டேன். இந்நேரம் தங்கள் திருமேனி சாம்ப லோடு சாம்பலாகியிருக்கும். ஐயனே, உமது திரு மேனியை மன்னனுகிய நான் காப்பாற்றுகிறேன், என்று கூறி அதனை மண்ணோடு மண்ணுக்கிவிட்டே னன்றே. தேவரீர் எம் சுகத்தை நாடிச் சென்றீர். யானோவெனில் உமது தீங்கினை நாடிச் செய்தேன். நாயிற்கும் கடையேன் ஆனேன்.

அன்னமிட்டு உயிர் அளித்தவருக்கு நஞ்சு அதனை ஊட்டிக் கொன்ற மகாபாபியன்றோ யான்'' என்று சொல்லிச் சொல்லிக் கதறினான்.

மன்னன் மீண்டும் கண்பார்வையை அடைந்துவிட்டான் என்பதினை அறிந்த சம்பந்தாண்டான், மன்னன் மூலமாகத் தம் உயிருக்கே ஆபத்து வந்துவிடுமோ எனக்கருதி திருவண்ணாமலையை விட்டு வேறு நாட்டிற்கு ஓடிப்போய் ஒளிந்துகொண்டான்.

மீண்டும் மன்னன் அருணகிரியாரிடம் ''அருந்தவத்தினையுடைய அண்ணலே, விலை மதிக்க முடியாத பொக்கிஷமாகிய இருகண்களை எனக்குத் தந்து அருளினீர்கள். அதற்குப்பதிலாக நான் உமக்கு என்ன கைம்மாறு செய்வேன்? என்று மனம் நொந்து துடித்தான்.

அவ்வேளையில் கிளி ரூபத்தில் இருக்கிற அருணகிரியார் மன்னனைப் பலவாறு சமாதானம் செய்தார். ஆனால் மன்னனோவெனில் தாம் ஆலோசியாமல் செய்த காரியத்தை எண்ணி எண்ணி மனம் கலங்கி அருணகிரியாரிடம் ''அன்பின் வடிவமே! என் ஆருயிர் தெய்வமே! தாங்கள் என்ன கூறினாலும் எனக்கு மன நிம்மதி கிடையாது. ஐயனே; கண்களை மீண்டும் பெற்று என்ன பிரயோசனம். தங்களுடைய பழைய திவ்யரூபத்தைக் காணமுடியவில்லையே. இந்நிலையில் எனக்கு எங்கிருந்து மனநிம்மதி உண்டாகும். சொல்லுங்கள் ஐயனே. தங்களுடைய திவ்யஉடலைத் தகனம் செய்யக் கட்டளையிட்ட நாயினுக்கும் கடையேனான அடியேன் உயிருடன் இருந்தும் உயிர் அற்றவனாகவே இருக்கிறேன். ஏன்! தங்களுடைய திவ்ய ரூபத்தைக் காணமுடியவில்லையே இக்கண்களுக்கு?

ஐயனே, மன்னனாகிய நான் தண்டமிட்டுக் கடைசியாகத் தங்களைக் கேட்கிறேன். மகாபாபியாகிய நான் அறுகதை அற்றவனாக இருந்தாலும், கருணையே பொக்கிஷமாகக் கொண்ட தாங்கள், அடியேன் செய்த பாபங்கள் போகும் பொருட்டும், அடியேன் மீண்டும் அடைந்த இருகண்கள், கண்ணுறக்கண்டு களித்து இன்புற்று இருக்கும் பொருட்டும், தங்களுடைய பழைய திருமேனியை ஒரு தரம் மீண்டும்காட்டி அருள் புரியுமாறு மனமார பிரார்த்தித்துக்கொள்கிறேன். இதுவே எனது இறுதியாசை" என்று சொல்லி மனம் வாடினவனாக ஆனான்.

உடனே மன்னனின் கவலைதீர அருணகிரியார் முருகனின் திருவருளினால் தம்முடைய பழைய திவ்ய ரூபத்தைக் காட்டி அருளினார். அதனைக் கண்ட மன்ன பெருமான்பூமியில் விழுந்து வள்ளலாரின் இருதிருவடிகளையும் பற்றிக்கொண்டு ஆனந்த பரவசனாக ஆகி, எழுந்து சிரத்தின்மேல் இருகைகளையும் கூப்பிக் கொண்டு "அண்ணலே, அடியேன் என்ன தவம் செய்தேனோ, நின் திருவுருவத்தை மீண்டும் கண்டுகளிக்க. தங்களுடைய தரிசன மகிமையினால், அடியேன் பிறவிக்கடலிலிருந்து கரையேறி விட்டேன்" என்று சொல்லிக்கொண்டு இருக்கும்போதே அருணகியார் மீண்டும் கிளியாக மாறி "அரசே, இனி மனக்கவலையை விடுங்கள், முருகப்பெருமானை என்றென்றும் வாழ்த்திப்போற்றுங்கள். சாற்றும் ஏழுகோடி மந்திரங்களும் சரவணபவ என்னும் ஷடக்ஷரத்திற்குள் அடங்கி விட்டன. இதுவே யாம் உமக்குக் கடைசியாகக் கூறுகிறேன்" என்று சொல்லித் திருவண்ணாமலையை விட்டுக் கிளிருபத்திலேயே ஸ்கந்தலோகத்திற்குச் செல்ல அருணையைவிட்டு அகன்றார்.

கிளிருபத்தில் அருணகிரியார் மேலேசென்று கொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டிருந்த மன்ன பிரானின் இதயம் துக்கத்தினுல் கொந்தளித்தது. இரு கண்களிலிருந்தும் தாரைதாரையாகக் கண்ணீர் விட்டுக்கொண்டு வானைப் பார்த்தவண்ணமாய் "என் ஆருயிர் அண்ணலே! என் ஆருயிர் செல்வமே! என்னை ஆட்கொள்ள வந்த தெய்வமே! தங்கள் உடலின் நிழல் போன்ற என்னைத் தன்னந்தனிமையில் தவிக்கவிட்டுப் போகத் தங்களுக்கு எப்படி சுவாமி மனம் வந்தது? தஞ்சமடைந்த என்னைத் தாங்கள் நெஞ்சமதனில் உயிருக்குஉயிராய் அணைத்துக்கொண்டு எல்லையில்லா இன்பமதனை என் உள்ளத்தில் ஊட்டி இப்பொழுது மின்னல் போல் மறைந்து விட்டீர்களே பிரபோ.

கையிற்கெட்டினது வாயிற்கெட்டாதது போல், நான் இழந்த எனது இருகண்களையும் மீண்டும் அடைந்தும் தங்கள் திருமேனியின் அழகைப் பார்க்க முடியாத நிலையில் ஆகிவிட்டேன். பிரபோ நான் மீண்டும் தங்களைக் காணமுடியுமா? அண்ணலே! மக்கள் அனைவரும் மனம் கலங்கிக் கதறுவது உங்கள் செவியில் விழவில்லையா?

ஞானமொழி கூறி என் அகக்கண்ணைத் திறந்து மும்மூர்த்திகளும் அறியாவண்ணமுள்ள முருகப்பெருமானின் திருவடியே முத்திநிலையம் என்று போதித்த அந்த மங்காத பொலிவுடன் கூடிய புன்னகைநிறைந்த முகத்தை மீண்டும் எப்பொழுது காண்பேன்?

அருட்கடலும் அன்புக்கடலும் ஒன்று சேர்ந்து இப்புனிதமாகிய தென்னகத்தில் வந்தவதரித்து தஞ்சமடைந்த எங்கள் உள்ளங்களில் இனியதமிழ் மொழிகளினுல் திருப்புகழாகிய அமுதத்தை நிரப்பிக் கை

கொடுத்து தூக்க நான் இருக்கிறேன் என்று சொல்லித் தாயைப்பிரிந்த கன்றுகளைப்போல் நாங்களெல்லோரும் வானளாவ தங்களைப் பார்த்துக் கதறும் வண்ணம் வைத்துவிட்டுப் போய் விட்டீர்களே சுவாமி! போய் விட்டீர்களே. என் உடல், ஆவி, பொருள் அனைத்தும் தங்களுக்கு அர்ப்பணம் செய்த நான் எவ்விதம் தங் களை விட்டுப் பிரிந்திருப்பேன். இந்தப்பிரிவை மன்ன னுகிய என்னுலேயே தாங்கமுடியவில்லையே. அவ்வித மிருக்க இவ்அருணையிலுள்ள மக்கள் எவ்வாறு தாங்கு வார்கள். வெந்து தவித்துக்கொண்டிருக்கும் ரணத்தில் வேல் ஊடுருவிச் செல்வதுபோல் அல்லவா தங்கள் பிரிவு என்னை வாட்டுகிறது என்று பலவாறு மனம் நொந்து கதறினுர்.

## அண்ணலை முருகப்பெருமான் அழைத்தல்

மன்னனின் இதயத்துடிப்பையும் அருணையிலுள்ள மக்களின் துயரத்தையும், வானில் கிளிருபத்தில் பறந்து சென்று கொண்டிருக்கிற அருணகிரிநாதரை யும் கண்டு, திருவண்ணுமலையில் வீற்றிருக்கும் எல் லாம் வல்ல முருகப்பெருமான் திடுக்கிட்டு ஒருவிநுடி மெய்மறந்து நின்ருர்.

உடனே இனிமையான குரலில், அப்பா அருணகிரி எங்கே போகிருய்? எல்லாம்வல்ல சிவபெருமான் இங்கு நெருப்புப் பிம்பமாய் நிற்கிருர். அடிமுடி காணச்சென்ற நாரணனும் நான்முகனும் இங்கு இருக் கின்ருர்கள். அன்னை பராசக்தி உண்ணுமுலை இங்கு இருக்கிருள்.

இதெல்லாம் போதாது என்று எல்லாம்வல்ல கருணைக்கடலான நானும் இங்குதான் இருக்கிறேன்.

எனவே எமது அருள் எல்லாம் எண்ணவொண்ணுத அண்ணுமலையாக இங்கு திகழ்கின்றது. எனவே அனைத்தும் இங்கேயே இருக்கின்றன.

அன்பின் வடிவமே. அடியார்கள் இருக்குமிடமே யாம் இருக்கும் இடம். அடியார்களுக்காகவே யாம் இருக்கிறேம்.

## உலகத்திற்கு அநுபூதியை அருளுதல்

அப்பா அருணகிரி, உனது பெருமை உனக்குத் தெரியாது. நீ பிறந்ததும் அருணையிலே—நீ நம்மால் தடுத்து ஆட்கொள்ளப் பட்டதும் அருணையிலே. எனவே நீ நம்முடன் ஒன்ருய் கலந்து முக்தியை அடைவதும் இந்த அருணையிலேயேதான். அருள் நிறைந்த இடமே அருணையாகும். எனவே நீ இந்த அருணையில் அருள்மலையாகத் திகழ வேண்டுமென்பதே எமது இச்சையுமாகும்.

அப்பா அருணகிரி, இந்தக் கணமே நீ கிளிருபமாகவே நமது வலது தோளில் அமர்ந்துகொண்டு எமது அநுபூதியாகிய கந்தர் அநுபூதியை இனிய தமிழ் மொழியும் வேதமொழியும் கலந்தவண்ணமாய் உயர்ந்த குரலில் வானளாவப் பாடுவாயாக என்று அருளினுர்.

அதுபோலவே முருகப்பெருமானின் ஆணையை சிரமேற்கொண்டு அருணகிரிநாதரும் உயர்ந்தகுரலில் நெஞ்சக்கனகல்லு என்பதினுல் விபூதி தியானம் செய்து,

**ஆடும் பரிவேல்......**

என்று அனுபூதியைத் தொடங்கி,

**குருவாய் வருவாய் அருள்வாய் குகனே**

என்று முடித்தார். அவ்வேளையில் கந்தர் அநுபூதி யானது அண்ணமலை முழுவதும் வானளாவி நிறைந்து நின்றது. ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் பச்சை மரத்தில் ஆணி அடித்ததுபோல் ஊன்றி நின்றது அநுபூதி. அதுமட்டுமல்ல-குமரியிலிருந்து இமயம்வரை யில் பக்தர்கள் கந்தர் அநுபூதியைப் பாடிக்கொண்டே ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் முருகபக்தியைக் குழந்தைகளுக்குத் தாயானவள் பால் ஊட்டுவதுபோல் ஊட்டினர்கள்.

**இவ்விதம் கந்தர் அநுபூதி உலகத்திற்கு அளிக்கப் பட்டு ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் நிலவி நிறைந்து நிற்கின்றது.**

## அன்றும்-இன்றும்-என்றும்

எனவே அருணகிரிநாதர் முருகப்பெருமானின் வலது தோளில் கிளிருபத்தில் அமர்ந்துகொண்டு இன்றும் கந்தர் அநுபூதியைப் பாடிக்கொண்டே இருக் கின்ருர். முருகப்பெருமானும் அளவிலா அன்பினுலும் மகிழ்ச்சியாலும் அநுபூதியைச் செவி கொடுத்துக் கேட்டுக் கொண்டே இருக்கிருர். எனவே அருணகிரி நாதரையும் முருகனையும் பிரிக்கவே முடியாது.



இந்தத் தத்துவத்தை ஒவ்வொருவருக்கும் நினை வூட்டவே திருவிழாக் காலங்களில் முருகப்பெரு

மானை திவ்வியமான புஷ்பங்களைக் கொண்ட மாலையினால் அலங்கரித்து இறைவனுடைய வலது தோளில் ஒரு கிளியை வைத்து அலங்கரிக்கிறார்கள். நாம் இந்த நினைவுடனேயே முருகனை இடைவிடாமல் கண் குளிர தரிசித்து மகிழ்வோமாக.

ஸ்ரீ அருணகிரிநாதரின் பொற்ப்பாதங்களை வாழ்த்தி வணங்குவோமாக.



முக்தியாகிய தேவி தலைவணங்குகிறாள் கந்தர் அநுபூதியில்.

கிளி ரூபத்திலிருந்து கந்தர் அநுபூதியைப் பாடுபவர் அருள் மலையாகிய அருணகிரி-மெழுகினைப் போல் உள்ள மெல்லாமுருகிப் பேரின்பம் பொங்கி எழுமாறு அநுபூதிக்கு இன்னிசை கொடுத்து வீணை மீட்டுகிறாள் எல்லாம் வல்ல பராசக்தியாகிய வள்ளியம்மை.

## கந்தர் அநுபூதியின் பெருமையும் மகிமையும்

இத்தகைய மகிமை வாய்ந்தது அருணகிரிநாத சுவாமிகள் அருளிய கந்தர் அநுபூதி.

கந்தபெருமானை ஆத்மஸ்வருபமாகவே அநுபவிப்பதுதான் கந்தர் அநுபூதியாகும். இது ஒரு மந்திரமயமான நூல். இது ஓர் அரிய பாராயணகிரந்தம். இதனை ப்ரதி தினமும் பாராயணம்செய்து வருபவர்கள் முருகப்பெருமானை ஞானயக்ஞ்யத்தால் திருப்தி செய்தவர்களாக ஆவார்கள்.

இந்த கந்தர் அநுபூதியை இடைவிடாமல் கேட்டுக்கொண்டு ஆனந்தமூர்த்தியாக முருகப்பெருமான் இருந்து வருகிறுர். எனவே இது பாமர ஜனங்களிலிருந்து முருகப்பெருமான் வரையில் ஆனந்திக்க செய்யும் ஒரு அற்புதமான தெய்வீகத் தன்மையைக் கொண்டு அருள் கிரந்தமாக விளங்குகிறது.

மகான்களும், ஞானிகளும், துறவிகளும், யோகிகளும், முக்தர்களும் வேதாந்த வாக்கியங்களிலேயே ரமித்துக்கொண்டு இருப்பார்கள். இத்தகைய மகாவாக்கியங்களின் உயர்ந்த தத்துவங்களையே குறிக்கோளாகக் கொண்டு, அத்தகைய மகாவாக்கியங்களின் தத்துவங்களை பிரகாசப்படுத்துவதிலேயே நோக்கங்கொண்ட அரும்பத இனிய தமிழ்மொழிகளினுல் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது கந்தர் அநுபூதி.

ஆதலால் பகவத்கீதையில் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா கூறியவண்ணம்

யோ யோ யாம் யாம் தனும் பக்த:
ச்ரத்தயா அர்ச்சிதுமிச்சதி
தஸ்ய தச்யா அசலாம் ச்ரத்தாம்
தாமேவ விததாம்யஹம்.

என்று அதாவது எப்படி எப்படி என்னைத் தியானம் செய்கிறார்களோ, அப்படி அப்படியே அவர்களுடைய தியானங்களுக்கு ஏற்றவாறு அவர்களுடைய மனோ பாவத்தை நிலைநாட்டி அதற்குத் தகுந்தவாறு அவர் களுடைய உள்ளத்தில் தோன்றி ஆனந்திக்கச்செய் வேன் என்று கூறியிருப்பதால், பக்தர்களுடைய மனோபாவத்தையே இறைவன் மேலானதாகக் கருது கிறான்.

எனவே இந்தக் கந்தர் அநுபூதியும் அடியார் களுடைய மனோபாவத்திற்குத் தகுந்த வண்ணம் முருகப்பெருமானை அனுபவிக்கச் செய்கிறது. இதை விபூதி தியானத்திலேயே அருணகிரியார் செஞ் சொற்புனை மாலை என்று சொல்லுகிறார்.

இதன் உண்மையான பொருளோ வெனில், பக்தர் களுடைய மனோபாவத்திற்கு ஏற்றவாறு கந்தர் அநு பூதியாகிய மாலை பால முருகனிலிருந்து விஸ்வரூப முருகன் வரையில் பெரியதாகவோ, சிறியதாகவோ ஆகிக்கொண்டே இருக்கிறது. எனவே அநுபூதியாகிய மாலையை எந்தவிதமான அர்த்தத்திலும் இறைவன் அனுபவிக்கின்றார் என்பதே பரமஸித்தாந்தமாக வெளியாகிறது.

பார்ப்பதற்குச் சிறிய நூலாகத் தோன்றினாலும், பொருளைச் சொல்லும்போது நம்எல்லோரையும் முருகா னந்தத்தில் கொண்டுபோய் கலக்கும்படி செய்கிறது. மகான்களுடைய உள்ளத்தைக் கவரும் வண்ணம்

''கந்தர் அநுபூதி'' உலகில் திகழ்கின்றது. பக்தர்களின் உள்ளம் கனியக் கனிய உள்ளத்தில் ஆனந்தமும் பொங்கித் ததும்பிக் கொண்டு மேலான அர்த்தத்தில் தாத்பர்யத்தைக் கொண்டு கந்தர் அனுபூதி விளங்குகிறது. இது ஓர் அற்புதமான சக்தியைக் கொண்ட நூல்.

நிற்க முருகப்பெருமானைப் போற்றி வடமொழியில் துதிப்பாடல்கள் அதிகமாகத் தோன்றவில்லை. தவிர ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாளும் தாம் திக்விஜயம் செய்துவரும் தருணத்தில் எண்ணற்ற முருகப்பெருமானின் ஆலயங்களைத் தரிசித்த போதிலும் கூட திருச்செந்தூர், சுவாமிமலை ஆகிய இரண்டு மூன்று தலங்களில்தான் முருகப்பெருமானைப் புகழ்ந்து தேவ பாஷையில் துதி செய்திருக்கிறார்.

இதற்குக் காரணமோவெனில் முருகப்பெருமானைத் தமிழர்களின் தனித்தெய்வமென்றே ஆருதகாதலுடன் மக்கள் புகழ்ந்து போற்றி வணங்கி வருகிறார்கள் என்பதேயாகும்.

எனவே தமக்குப் பின்பு வருங்காலத்தில் அக்னி க்ஷேத்திரமாகிய திருவண்ணாமலையில் அருணகிரிநாதர் என்ற மகான் அவதரித்து ஆறுபடை வீட்டினையுடைய முருகப்பெருமானின் திருவருளைப் பூர்ணமாகப் பெற்று அருந்தமிழ்ச் சொற்களால் முருகனை இசைமாரிப் பொழியப் போகிறார் என்பதே முக்கியமான மூலகாரணமாகும்.

இதிலிருந்து அருணகிரியார் திருவாய் மலர்ந்தருளிய பாடல்களில்தான் எல்லாம் வல்ல முருகப்பெருமான் லயித்து இருக்கிறார் என்பதை எடுத்துச் சொல்லவும் வேண்டுமோ!

தில்லைக் கூத்தனும் பொன்னம்பலவாணனுமாகிய ஸ்ரீ நடராஜப் பெருமானின் முன்னிலையில் வைத்துப் போற்றப்பட்ட பன்னிரு திருமுறைகளுக்குச் சமமாக நிற்கிறது அருணகிரிநாதருடைய பாடல்கள்.

எனவே தமிழர்களின் தனித்தெய்வமாக இப் புண்ணிய பூமியாகிய தென்னகத்தில் விளங்கும் ஆறுபடை வீட்டினையுடைய முருகப்பெருமானுக்கும் பன்னிரண்டு மறைகள் உள்ளன. அதனைக் கீழ்க்கண்ட வாறு அறியவும்.

## முருகப்பெருமானின் பன்னிரு திருமறைகள்

திருப்பரங்குன்றம் திருப்புகழ்—ஒன்ருவது திருமறை. திருச்செந்தூர் திருப்புகழ்—இரண்டாவது திருமறை. திருவாவினன்குடி திருப்புகழ் (பழனி)—மூன்ருவது திருமறை. திருவேரகம் (சுவாமிமலை) திருப்புகழ்—நான்காவது திருமறை. குன்றுதோருடல் திருப்புகழ் — ஐந்தாவது திருமறை. பழமுதிர்சோலை திருப்புகழ்—ஆருவது திருமறை. ஆறுபடை வீட்டினைச் சேராதபொது திருப்புகழ்—ஏழாம் திருமறை. கந்தர் அலங்காரம் — எட்டாம் திருமறை. கந்தர் அந்தாதி — ஒன்பதாவது திருமறை. திருவகுப்பு ஆக மொத்தம் 25—பத்தாம் திருமறை. மயில் விருத்தம், வேல்விருத்தம் — பதினென்ரும் திருமறை. கந்தர் அநுபூதி — பன்னிரெண்டாம் திருமறை.



இவ்விதம் நாம் மேல் கூறியவண்ணம் ஸ்ரீ அருண கிரிநாதருடைய பாடல்களைத் திருமறைகளாக அநு பவிக்கும்பொழுது கந்தர் அநுபூதி பன்னிரெண்டாம் திருமறையாக மங்காதபொலிவுடன் ஞானச்சுடராய் திகழ்கின்றது.

இத்தகைய மகிமையுள்ள கந்தர் அநுபூதியாகிய செஞ்சொற்புனை மாலையைப் பன்னிருகை பாலகன் தமது பன்னிரு கைகளினாலும் அன்புடன் எடுத்து அணிந்துகொள்கிறார் என்றால், யாமோ கந்தர் அநு பூதியின் பெருமையை எடுத்துச் சொல்லவல்லோம்.

எனவே அடியார்களுடைய மனோபாவத்தையே முருகப்பெருமான் அள்ளிப் பானம் செய்கிறாரே தவிர வஸ்து ஸௌந்தர்யத்தினால் அல்ல.

திருமறைகளாகப் பிரித்துக் காட்டியதினால் திரு மறைகளுக்கு உள்ள வைபவம் அருணகிரிநாதருடைய பாடல்களுக்கும் உண்டு என்பதினையெடுத்துக் காட்டி மேன்மேலும் பக்தர்களுக்கு முருகப்பெருமானிடம் பக்தி ஏற்படுவதற்கேயாகும்.

கந்தர் அநுபூதியோவெனில் ஐம்பத்தொன்று மாத்ருகா மந்திராக்ஷரங்களையே பீஜமாகக் கொண் டுள்ள ஒரு மாபெரும் மந்திர நூல். இதைத் திருப்பித் திருப்பிப் பிரதி தினமும் விபூதிதாரிகளாகயிருந்து கொண்டு பாராயணம் செய்து வரும் மகான்களுக்குத் தான் இதன் பெருமையும் சக்தியும் தெரியும்.

சில பக்தர்கள் ஐம்பத்தொன்று பாடல்களையும் தனித்தனியே மந்திர சக்கரங்களில் ஆரோபணம் செய்து முருகப்பெருமானை அந்த அந்த சக்கரங்களில் பிரதிஷ்டை செய்து உபாஸித்து வருகிறார்கள். இக்

காரியங்களைக் குருமுகமாகத்தான் அறிந்து செய்ய வேண்டும்.

சிலர் கந்தர் அநுபூதியைச் சொல்லிக் கொண்டே காவடியைத் தூக்கிக் கொண்டு குன்று தோறும் ஏறிக் குமரனை வாழ்த்தி வணங்கி வருவார்கள்.

ஆதலால் கந்தர் அநுபூதியைப் பக்தி சிரத்தை யோடு உள்ளமுருகித் தினந்தோறும் பாராயணம் செய்தால் இவ்வுலகிலே சுகமாக வாழலாம். முருகன் திருவடிகளை அடையலாம். பாபம் நீங்கி விடும். பயம் உண்டாகாது. ஒருவிதமான ஆபத்துக்களும் வந்து அணுகாது. இடையூறுகள் வந்த வழி தெரியாமல் போய்விடும். புகழ் உண்டாகும். செல்வமுண்டாகும். எல்லாவிதமான நல்ல குணங்களும் நம்மை வந்து நல்கும். கோபம் தாபம் முதலியன வராது.

பரிபூர்ண ஞானம் உண்டாகும். பேய் பிசாசுகள் ஆகியவைகள் நம்மை வந்து நல்காது. தேள் பாம்பு முதலிய விஷ ஜந்துக்கள் நம்மைக் கண்டால் அகன்று போய்விடும்.

எனவே அருள் மயமாய் அநுபூதியானது பொலிவுடன் அடியார்களின் உள்ளத்தில் திகழ்கின்றது. இதனை நன்ருகப் பொருள் உணர்ந்து பாராயணம் செய்தால் பலன் அமோகம்.

ஒரு பெரிய கல்பக விருக்ஷமாக அநுபூதி விளங்குகிறது. கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் என்ற மூன்று யோகங்களும் இதில் அடங்கி இருந்தாலும் பக்தியுடன் சேர்ந்த ஞானயோகமே தலைதூக்கி நிற்கின்றது. ஆதலால் அநுபூதி முழுவதும் பக்தி ரஸம் ததும்புகின்றது. தேனொழுகும் சொற்களை இன்

னிசையில்அமைத்து உள்ளத்தில் ஆனந்தம்பொங்கிப் பொங்கி வழியும் வண்ணமுள்ள சப்தாலங்காரங் களால் அழகு பெற்றுப் பக்தர்களுடைய உள்ளத்தில் இடைவிடாமல் ஒரு சக்தி வாய்ந்த தெய்வீக உணர்ச் சியை உண்டு பண்ணிக் கொண்டேயிருந்து வருகிறது கந்தர் அநுபூதி.

தீராத பாபங்களையும் தீராநோய்களையும் போக் கடிக்கும் விஷயத்தில் செஞ்சுடர் சூரியனாகவும், உள் ளத்தை மகிழவைக்கும் விஷயத்தில் பரிபூர்ண சந்திர னாகவும் விளங்கி வருகிறது கந்தர் அநுபூதி.

நமக்குத் துணையாகவும், சக்தியாகவும் இருப்பது முருகப் பெருமான் தமது திருக்கரத்தில் தாங்கிவரும் வேற்படை ஒன்றேயாகும் என்ற உண்மையை இடை விடாமல் நினைவூட்டிக் கொண்டேயிருக்கிறது. இம் மாபெரும் அருள்நூல் அருள்நிறைந்த அக்ஷயபாத்தி ரம். வற்ருத பொய்கை. அடியார்கள் குடிகொண்டிருக் கும் நிலையம். வர்ணிக்க இயலாத மந்திர நூல். இவை யனைத்தும் திகழ்கின்றது கந்தர்அநுபூதியில்.

## எனது பாக்கியம்

எனவே அரிதாகிய மானிட ஜன்மாவில் மெய்ப் பொருளாகிய குமரனைப்பற்றிப் புகழ்ந்துபேசுவதையே மாபெரும் செல்வமாகக் கொண்ட அடியேன் அருண கிரிநாதர் அருளிய கந்தர் அநுபூதிக்கு ஒரு வ்யாக்யா னம் எழுதத் துணிவு பெற்றேன். இவ்விதத் துணிவு வருவதற்குக் காரணம் செல்வக்குமரனின் மேல் அடி யேனுக்கு இருக்கும் அளவிலா அன்பே காரணமாகும்.

நெஞ்சிருக்கும் வரையில் செல்வக்குமரனை நான் இமைப்பொழுதும் மறவேன் என்ற ஒரு மேலான எண்

ணத்தை அடியேன் நெஞ்சில் செல்வக்குமரன் எழுப்பி யிருப்பதால் செல்வக் குமரனைப்பற்றி வாயாரப் பேசாதுபோனுல் அடியேன் நெஞ்சு ஆறுமோ?

எனவே அருள்வடிவான ஸ்ரீ அருணகிரிநாதருடைய பாதகமலங்களை அடியேன் நெஞ்சில் சதாதியானம் செய்து கொண்டு, ஸ்ரீ அருணகிரிநாதருடைய ஹ்ருதயத்தை அறியும் பொருட்டு ஒவ்வொரு அநுபூதியையும் நூற்றுஎட்டுத் தடவை பாராயணம் செய்து அதன் பிறகே அநுபூதிக்கு வ்யாக்யானம் எழுதத் துணிவு பெற்று, முருகப்பெருமானின் அருளினுல் வ்யாக்யானம் எழுதத் தொடங்குகிறேன். எனவே அடியேனுடைய வ்யாக்கியானத்திற்கு

## அருணகிரி ஹ்ருதயம்

என்ற திருநாமத்தையும் சூட்டியிருக்கிறேன்.

ஸ்ரீ அருணகிரியார் உள்ளம் குளிரும் வண்ணமும் அதன் மூலமாக செல்வக்குமரனின் உள்ளம் குளிரும் வண்ணமும் இந்த அருணகிரி ஹ்ருதயம் என்ற வியாக்கியானமானது இருக்க வேண்டுமென்றும், அப்படியே பக்தகோடிகளுக்கு குன்றுதோறும் ஆடித் திருவிளையாடல் செய்யும் செல்வக்குமரனிடத்தில் இணையில்லா பக்தியேற்பட்டு இரவும் பகலும் கந்தர் அநுபூதியைப் பொருள் உணர்ந்து பாராயணம் செய்து கொண்டு அதன் பலனுக அவர்கள் சாஸ்வதமான ஐச்வர்யத்தையும், பூர்ண ஆயுளையும் மனைவி மக்களுடன் நோயற்ற வாழ்வையும் குறைவற்ற செல்வத்தையும் அடைந்து அதன் பலனுக அவர்கள் செல்வக்குமரனின் புகழையே பேசிக் கொண்டும் பாடிக்கொண்டுமிருக்க வேண்டுமென்பதே என்னுடைய மேலான ஆசையாகும். இதையே நான்

இம்மானிடப் பிறவியின் அழியாத பாக்கியமாக வும் கருதுகிறேன்.

தாயிற் சிறந்த தொரு கோயிலுமில்லை

என்பதனைத் தலைமேல் வகித்து என்னை ஈன்றெடுத்த வளும் எல்லாம் வல்ல முருகப்பெருமானின் பாதார விந்தங்களில் இரண்டறக் கலந்தவளாயுமுள்ள என் ஒப்பிலா தாயின் அருள் ஒன்றையே பலமா கவும் துணையாகவும் கொண்டு ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிய மந்திர வடிவங் கொண்ட கந்தர் அநுபூதிக்கு 'அருணகிரி ஹ்ருதயம்' என்ற பெயருடன் கூடிய தத்துவார்த்த வ்யாக்கியானம் வேதசாஸ்திரப்ரமாணங் களுடன் எழுத ஆரம்பிக்கப்படுகின்றது.

ஸ்ரீ

முருகப்பெருமான் திருவடிகளே

சரணம்

# வேல் முருகா

வேல் முருகா

# கந்தர் அநுபூதி

## அருணகிரி ஹ்ருதயம்

என்னும்

வேதப்ரமாண தத்துவார்த்த வியாக்யானம்



## விபூதி தியானம்

நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக்கியல் சேர்
செஞ்சொற் புனைமாலை சிறந்திடவே
பஞ்சக்கர ஆனைபதம் பணிவாம்.

பதவுரை

தஞ்சத்து—சரணம் என்று (தன்னை வந்தடைந்தவர்களுக்கு), அருள்—அருள் புரிகின்ற சண்முகனுக்கு—ஆறுமுகக் கடவுளுக்கு, இயல்சேர்—இலக்கணத்தோடு கூடிய, அதாவது

பொருந்திய, செஞ்சொல்—அழகான செம்மை பொருந்திய மொழிகளால், புனேமாலே—தொடுக்கப்பட்ட (கந்தர் அநுபூதி என்னும் கவி மாலேயானது), சிறந்திடவே—சிறந்து விளங்கும் பொருட்டும், நெஞ்சம் கன கல்லும்—மனமான பருத்த கல்லும், நெகிழ்ந்து உருக—இளகி உருகும் பொருட்டும், பஞ்சக்கரவானே—ஐந்து கரங்களேயுடைய விநாயகப் பெருமானின், பதம்—பாதங்களே, பணிவாம்—வணங்குவோமாக.

**தாத்பர்யம்**

தான் ஆரம்பிக்கும் கந்தர் அநுபூதி ஒருவிதமான விக்னமும் இல்லாமல் மங்களகரமாகப் பூர்த்தியாகும் பொருட்டு அருணகிரிநாதர் இந்தப் பாட்டால் மூலக் கடவுளான விநாயக மூர்த்தியைத் தியானம் செய்கிருர். நெஞ்சமுருகாதார் முருகனேயறியாதார். எனவே கல்லாகிய நெஞ்சில் இறைவன் தோன்றுவதில்லே. அதனுலேயே கல்லாகிய நெஞ்சை உடையவர்கள் இறைவனே நினேப்பதும் இல்லே.

சுத்தமான மனத்தில்தான் முருகப்பெருமான் தோன்றுவார். எல்லாவற்றிக்கும் மூலகாரணம் மனத்தத்துவம் அன்ருே? நிர்மலமான மனத்தில்தான் முருகப்பெருமான் நிறைந்திருந்து பக்தர்களே ஆனந்தக் கடலில் மூழ்க வைக்கிருர்.

ஆதலால் அடியார்கள் நெஞ்சமுருகித் துதிக்கும் பாடல்களேயே இறைவன் மாலேயாகத் தரித்துக் கொள்கிருர். அப்பாடல்களேக் கேட்பதிஞல் இறைவன் மெய்மறந்து பரவசமடைகிருர்.

ஆனுல் மனிதர்களுடைய மனமோ வெனில் காம–க்ரோத–லோப–மோக–மத–மாத்ஸர்யம் முதலியவைகளினுல் கட்டப்பட்டு இரக்க மில்லாததாயும்,

அன்பில்லாததாயும், ஈஸ்வர சிந்தனையில்லாததாயும் இருக்கின்றது. அதனால் அந்த மனத்தைப் பெருத்த கல் என்று கூறினார். இருந்தபோதிலும், எறும்பூரக் கல்லும் தேயும்' என்று இருப்பதால், எல்லாம் வல்ல முருகப் பெருமானின் மகிமையைச் சொல்லும்பொழுது அது கல் நெஞ்சமுடையவர்களுடைய நெஞ்சைக் கனி யாக்கி முருகப் பெருமானிடத்தில் கொண்டுபோய் விடும்.

அவ்வித சக்தி வாய்ந்தது கந்தர் அநுபூதி. அநு பூதியின் வைபவத்தை யாரும் இவ்வளவுதானென்று வர்ணிக்க முடியாது. மனிதர்களுடைய கல்லாகிய நெஞ்சமெல்லாம் நெகிழ்ந்து உருகி அவர்களுடைய நெஞ்சில் கருணைக் கடலான முருகப் பெருமான் இமைப்பொழுதும் நீங்கா வண்ணமிருக்கும் பொருட்டு கந்தர் அநுபூதியை உலகிற்குத் தந்தருளியிருக்கிறார் அருள்மலையாகிய அருணகிரிநாதர்.

அருந்தமிழ்ச் செஞ்சொற்களாலும், இலக்கியத் தோடு கூடியதாயும், பக்திரஸம் ததும்பிக்கொண்டும், படிக்கப் படிக்கத் தெவிட்டாததாயும், மந்திரரூபமாயு முள்ள பாமாலையே கந்தர் அநுபூதியாகும்.

முருகக் கடவுளை ஆத்மஸ்வரூபமாக அனுபவிப் பதே கந்தர் அநுபூதியாகும்.

எல்லாவற்றையுங் கடந்த நிலை முருகனுடைய பிரணவநிலை. அதையே பரப்ரும்ம நிலை என்று வேதங்கள் கோஷிக்கின்றன. உருவமற்ற இந்நிலையில் முருகனைத் தியானிப்பதென்பது சாமான்ய காரிய மல்ல. ஞானிகளுக்கும், யோகிகளுக்குங்கூட எண்ண முடியாத தத்துவ மன்றோ முருகன். எனவே

"அவன் அருளாலே அவன்தாள் வணங்கி"

என்று மாணிக்கவாசகர் சொல்லியபடி அவன் அருளால்தான் அவனைத் தெரிந்துகொள்ள முடியும். இல்லாவிடில் முடியவே முடியாது.

இந்த அரிதாகிய மானிட ஜன்மாவில் அடைய வேண்டியது மோட்சமென்பதே தானுகும். கந்தனின் கருணையினுல்தான் அதைப் பக்தர்கள் அடைய முடியும்.

இந்த சம்சாரமாகிய சமுத்திரத்தில் பிறந்து கொண்டும் இறந்துகொண்டும் ஜீவகோடிகளெல்லாம் கஷ்டப்பட்டு வருகிருர்கள். இவ் எண்ணற்ற ஜீவராசிகளையும் விமோசனம் செய்து வைப்பதில் முருகப் பெருமானின் கருணையைத் தவிர வேறென்றுமே சாமர்த்தியமுள்ளதாக ஆகாது. அந்த மாபெரும் கந்தனின் கருணையானது,

அருவமும் உருவு மாகி அநாதியாய்ப்
பலவாய் ஒன்ருய்ப், பிரம்மமாய் நின்ற
சோதிப் பிழம்ப தோர் மேனியாகி
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள்
பன்னிரண்டுங் கொண்டே, ஒருதிரு
முருகன் வந்தாங்கு உதித்தனன் உலகமுய்ய

என்று முருகனின் திருஅவதாரத்தைக் கந்தபுராணம் வர்ணிக்கிறது. அருட் கடலாகிய முருகப்பெருமானை,

எவ்வுயிர்க்கும் தஞ்சமென நிற்கும் ப்தனி
பொருளாய்

என்று கந்தர் கலி வெண்பா அழைக்கிறது.

எனவே முருகனை "தஞ்சத் தருள்' என்று வர்ணித்தார். அதாவது 'சரணுகதவத்சலன் முருகன்' என்று பொருள். அடியார்களின் துயரத்தை அவனுல் தாங்கமுடியாது அன்ருே.

ஆகையினுல் ஹே விநாயகக் கடவுளே! அந்தக் கருணைக்கடலான முருகனை, வாயாரப் பாடி ஆடி மகிழவேண்டும்'' என்று என் உள்ளம் துடிக்கிறது. அதுவும் அருந்தமிழ்ச் சொற்களால் புகழவேண்டுமென்ற அளவிலா ஆசையினுல் கந்தர் அநுபூதி என்ற பாமாலையை எல்லையில்லாத பக்தி என்கிற நூலினுல் தொடுக்க ஆரம்பிக்கின்றேன்.

ஹே மூலக்கடவுளே! நீ முருகனுக்கு மூத்த சகோதரன் அல்லவா! ஆகையினுல் உன்னுடைய அருள் முக்கியமாக எனக்கு வேண்டும். ஐந்தாவது திருக்கரத்தினுல் நீ மகாபாரதத்தை எழுதி உலகிற்கு அளித்தாய் அன்ருே! ஆகையினுல் உன்னுடைய மாபெரும் சக்தி வாய்ந்த தும்பிக்கையைத் தியானம் செய்து உன்னுடைய ஞானசக்தி கிரியாசக்தி என்னும் இரண்டு பாதகமலங்களை வாழ்த்தி வணங்குகிறேன்.

தவிர இக் கந்தர் அநுபூதி உலகில் மந்திர ரூபமாய், எல்லாவித ஐச்வர்யங்களையும் பக்தர்களுக்கு அளித்துக்கொண்டு உத்தமோத்தமான பாராயண நூலாகச் சிறந்து விளங்க வேண்டுமென்ற எண்ணமானது என்னுடைய மனத்தில் இருந்து வருகிறது. அதை அப்படியே பூர்த்திசெய்ய வேண்டும். இதுவே எனது நிரந்தர ஆசை.

மேலும் ''நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்து உருக'' என்று சொன்னதினுல் இந்தப் பாமாலையானது மனிதர்களின் மனத்தை மாற்றும் மந்திரரூபமாக யிருக்கிறது. அதாவது உயிரில்லாத வஸ்துவிற்கு உயிர் அளிக்கும் ஜீவசக்தியாக விளங்குகிறது. கல்லாக இருக்கும் நெஞ்சை ஜடமாகத்தான் கருதவேண்டும். ஜடமான

நெஞ்சையுடையவர்கள் உயிருடன் இருந்தாலும் உயி ரற்றவர்களே ஆவார்கள்.

ஏனெனில் அவர்கள் இறைவனின் பெருமையை நன்கு அறிந்தார்கள் இல்லை. அவர்களுடைய நெஞ் சானது என்று இறைவனிடத்தில் உருகி லயிக்கின் றதோ அன்றுதான் அவர்கள் உண்மையில் உயிர் உள்ளவர்களாக ஆவார்கள்.

இதனால்தான் அருணகிரிநாதர் தன்னுடைய பாமாலையான அநுபூதியானது முதலில் ஜீவகோடி களுடைய கல்லாகிய நெஞ்சை நெருப்பில்பட்ட மெழுகுபோல் இளக்கி இறைவனிடத்தில் உருக வைக்கவேண்டுமென்றும், இரண்டாவதாகத் தன் னுடைய பாமாலையானது முருகப்பெருமானை மகிழ வைக்கவேண்டுமென்றும் விநாயகக் கடவுளைப் பிரார்த்திக்கின்றார்.

இதன் பொருளோவெனில் ஜீவராசிகளுடைய நெஞ்சை நெகிழ்ந்து உருக வைக்க சக்தியில்லாத பாமாலைகளினால் அருணகிரிநாதர் இறைவனைப் பாட இச்சிக்கவேயில்லை என்பதுதானாகும். எனவே ஜீவ கோடிகளுடைய நெஞ்சில் முருகப்பெருமான் என் றென்றும் நிறைந்து மாபெரும் செல்வமாக விளங்க வேண்டுமென்பதற்காகவே அருணகிரிநாதர் கந்தர் அநுபூதியைப் பாடி உலகிற்கு அருளியிருக்கிறார்.

மகான்களுடைய பாடல்கள் தத்துவார்த்தத் தையே குறிக்கோளாகக் கொண்டிருக்கும். ஆகையால் கந்தர் அநுபூதி என்பது ஜீவபிரும்ம ஐக்கியமே யாகும். அதனாலேயே அருணகிரிநாதர் பரம்பொரு ளாகிய முருகப்பெருமானை ஆத்மஸ்ரூபமாகவே பாவித்துப் பாடியிருக்கிறார். இதனால் ஆத்மஸ்வருப

மானது 'நான்' என்கிற சப்தத்தினுல் சொல்லப்படும் வஸ்துவேதானுகும். அந்த ஆத்மாவோ வெனில் முருகனைக் காட்டிலும் வேறல்ல. முருகனை ஆத்மஸ்வ ரூபமாக அனுபவிப்பது என்பதுதான் கந்தர் அநுபூதி. கந்தர் அநுபூதியில் அடங்கியுள்ளது எல்லாவற்றிற் கும் மேலான ராஜயோகமேயாகும்.

அப் பரம்பொருளான முருகப்பெருமானுடன் ஒன்ருகக் கலந்து அனுபவிக்காமல் முருகனை ஆத்மா வைக்காட்டிலும் வேருன வஸ்துவென்று வைத்து, அதாவது முருகப்பெருமானிடத்தில் ஆத்மப் பிரே மையை வைக்காமலிருந்துவரும் ஜீவகோடிகளுடைய மனத்தைத்தான் கல் மனம் என்று அறியவேண்டும்.

இவ்வித பேதமுள்ள மனத்தினுல் முருகனை அனு பவிக்க முடியாது. அதனுலேயே அவர்கள் அல்பமான பலத்தை அடைகிருர்கள். அவர்கள் "அஹம் பிரும் மாஸ்மி" என்னும் மேலான அத்வைத நிலையை அடை கிறதில்லை.

ஏனெனில் அவர்கள் முருகனைப் பேதபுத்தியினுல் தன்னைக்காட்டிலும் வேருன வஸ்து என்று உபாசிக் கிருர்கள். அவ்வித எண்ணங்கொண்ட மனத்தையே "நெஞ்சக் கன கல்லு" என்று சொல்லுகிருர்.

கல்நெஞ்சானது கரைந்து இறைவனிடத்தில் ஒன்ருேடொன்ருகக் கலந்து பேதஞானமில்லாமல் இருக்கும் அத்வைத நிலையே அநுபூதியாகும்.

இவ்வரிய தத்துவத்தையே திருஞானசம்பந்தர் தம்முடைய தேவாரத்தில் பின்வருமாறு சொல்லு கிருர்.

காதலா கிக் கசிந்துகண்ணீர் மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப் பொருளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே.

இவ்விதம் ஆத்ம ஸ்வரூபமே முருகப்பெருமானுக யிருப்பதால் ஆத்மாவை ஜீவன் என்று எண்ணிவரும் மனிதர்கள் கொஞ்சம் கொஞ்சமாகத் தங்கள் மனத்தில் இறைவனைப் பேதபாவமின்றி ஐக்கிய பாவத்தில் நெஞ்சம் நெகிழ்ந்து உபாசிக்கவேண்டும் என்பதிஞல் அதற்குத் தாம் எழுதும் பாமாலையானது ஸ்கந்தானுபூதி ஞானத்தைப் பக்தர்களின் மனத்தில் ஊட்ட வேண்டும் என்பதே இந்தப் பாடலின் மேலான தத்துவமாகும்.

அதனுலேயே "நெஞ்சக் கன கல்லு நெகிழ்ந்துருக" என்ருர். அந்த நெஞ்சமானது நெகிழ்ந்து உருகி,

ஆவதும் பரத்துள்ளே அழிவதும் பரத்துள்ளே
போவதும் பரத்துள்ளே புகுவதும் பரத்துள்ளே
தேவரும் பரத்துள்ளே திசைகளும் பரத்துள்ளே
யாவரும் பரத்துள்ளே யானுமப் பரத்துள்ளே

என்ற சித்தர்களின் மகா வாக்கியங்களில் லயத்தை யடையவேண்டும்.

இத்தகைய மகிமை வாய்ந்தது கந்தர் அநுபூதி. இதைப் போற்ருதார் இவ்வுலகில் யாருமே இல்லை.

மகா யோகியான தாயுமானவர்;

கந்தரநு பூதி பெற்றுக் கந்தரநு பூதி சொன்ன
எந்தையருள் நாடி இருக்கு நாள் எந்நாளோ ?

என்று கந்தர் அநுபூதியைப் புகழ்ந்து அந்த அநுபூதியைத் 'தாம் அனுபவிக்கும் நாள் எந்நாளோ?' என்று கால தாமதத்தைச் சகிக்காமல் ஏங்கி இருக்கிறார் என்றால் என்னே கந்தர் அநுபூதியின் பெருமை! என்னே கந்தர் அநுபூதியை அளித்த அருணகிரி நாதரின் பெருமை !

ஆக, திருவண்ணாமலையில் வீற்றிருக்கும் முருகப் பெருமானின் வலது தோளில் அமர்ந்துகொண்டு வானளாவ உயர்ந்த குரலில் கந்தர் அநுபூதியைப் பாடிக்கொண்டு நம்மையெல்லாம் நாதப்ரும்மத்தில் லயிக்க வைக்கிறார்.

இவ்விதம் மகா கணபதியை விபூதி தியானம் செய்துவிட்டுக் கந்தர் அநுபூதியை ஆரம்பிக்கின்றார் அருணகிரிநாதர்.



# மானிடப்பிறவியின் பயன்

1



ஆடும் பரிவேல் அணிசேவல் எனப்
பாடும் பணியே பணியாய் அருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனி யானை சகோதரனே.

**பதவுரை**

தேடும்—(தன் விரோதிகளை) தேடுகின்ற, கயமா முகனை—பெரிய முகத்தையுடைய கஜமுகாசுரனை, செருவில்—போர்க்களத்தில், சாடும்—கொன்று வீழ்த்திய, தனி யானை சகோதரனே—ஒப்பற்ற விநாயகக் கடவுளின் உடன் பிறந்தவனே! ஆடும் பரி என—ஆடுகின்ற மயில் என்றும், வேல் என—வேல் என்றும், அணி சேவல் என—அழகிய சேவல் என்றும், பாடும் பணியே—துதித்துப் பாடுகின்ற தொழிலையே, பணியாக—தொழிலாக இருக்கும்படி, அருள்வாய்—அருள்புரிவாயாக.

**தாத்பர்யம்:**

"ஆடும் பரி" என்று அநுபூதியைத் தொடங்கி முருகப்பெருமானை அழைக்கிறார் அருணகிரியார்.

தர்மம் அதர்மம் காமம் மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களுக்குள் மோக்ஷம் என்ற நிலைதான் முருகக் கடவுளின் நிஜஸ்வருபமாகும். முருகனுடைய நிஜஸ்வருபத்தை அனுபவிக்க வேண்டுமென்ற எண்ண மானது அநேக ஜன்மாக்களில் செய்யப்பட்ட புண்ணி யங்களினுலேயேதான் வரவேண்டும். இவ்விதஎண்ணம் வந்தால் மட்டும் போதாது. இறைவனுடைய மந்திரவேலாது இறைவனைக் காட்டிலும் வேறல்ல. அப்படியே முருகப்பெருமானின் திவ்ய ஸ்வருபத்தை தாங்கி வரும் மயிலென்ன, முருகனின் வெற்றிக் கொடியிலுள்ள சேவலென்ன, இவைகளுக்குத்தான் முருகனின் தத்துவம் நன்ருகத் தெரியும்.

ஆதலால் ஆடும்பரியையும், ஞானவேலையும், அணிசேவலையும் புகழ்ந்து பாடிக்கொண்டேயிருக்கும் பாக்கியத்தையே இச்சிக்கிருர் அருணகிரிநாதர்.

கந்தர் அநுபூதியை ''ஆடும்'' என்ற பரம மங்கள மான சப்தத்தில் ஆரம்பித்து அப்படியே முடிவிலும் ''குகனே'' என்ற மங்கள சப்தத்தில் முடிக்கிருர். இது ஒரு தெய்வீகமான அமைப்பு. மஹா க்ரந்தங்களில் தான் இவ்வித அமைப்பைக் காணமுடியும்.

இதனுல் ''ஆடும் குகனே'' என்று முருகனைப் புகழ்கிருர்.

தவிர ''ஆடும்,' என்ற பதத்தில் பிரணவமானது குப்தமாக இருக்கிறது. 'ஆ' என்பதில் 'அ' காரமும் 'டு' என்பதில் 'உ' காரமும் 'ம்' என்பதில் மகாரமும் இருப்பதால், 'ஆடும்' என்ற சொல்லால் அகார உகார மகார என்ற மூன்று எழுத்துக்களால் விளங்கும் பிர ணவமான ஓங்காரத்தையே அறிய வேண்டும். அந்த

ஓங்காரமே கருணையினால் குகன் என்ற மூர்த்தி ரூபத்தில் இருக்கிறது.

சிற்றெறும்பிலிருந்து ப்ரும்மா பர்யந்தமுள்ள எல்லா ஜீவராசிகளையும் ஆட்டி வைத்து விளையாடும் தெய்வம் முருகன் அன்றோ! அதனால் 'நான், என்னுடையது' என்ற எண்ணங்கள் தொலைந்து எல்லாம் முருகன், எல்லாம் அவனுடைய செயல், அவன் இல்லையேல் அணுவும்அசையாதுஎன்ற த்ருடமானநம்பிக்கையுடன் பக்தி செய்தால்தான் முருகப்பெருமானின் அருளுக்கு நாம் எல்லோரும் பாத்திரபூதர்களாகஆவோம். அன்னியில் முருகனின் அருளைப் பெறமுடியாது.

நிற்க 'ஓம்' என்ற ப்ரணவத்திற்குள் விளையாடிக் கொண்டிருக்கும் கண்கண்ட தெய்வம் முருகனே. அந்த முருகனே குகமூர்த்தியாகக் காட்சி அளிக்கிறார். இதையே கந்தரலங்காரத்தில்

ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே
முருகன் உருவங்கண்டு
தூங்கார் தொழும்பு செய் யாரென்
செய் வார்யம தூதருக்கே

என்று பாடுகிறார்.

தவிர ஆடும் பரியே ஆடும் மயில். சாஸ்திரங்களில் மயிலையே ஓங்காரமாகச் சொல்லப்படுகிறது. அந்த ஓங்காரமான ஆடும் மயிலில் முருகன் விளையாடுகிறான். உண்மையில் வேதங்கள் ஓங்காரத்தில் அடக்கம். இதனால் முருகப்பெருமான் வேதபுருஷனாக ஆகிறார். அந்த வேதங்களின் உச்சியில் உள்ள மஹாவாக்கியங்களினால் முருகப்பெருமான் துதிக்கப்படுகிறார்.

இதையே அருணகிரிநாதர் திருப்புகழில்,

"ஏறுமயிலேறி விளையாடும் முகம் ஒன்றே"

என்றார். ஓங்காரத்தில் ஸகலமும் அடங்கி விட்டபடியால் அந்த ஓங்காரத்தைப் புகழ்ந்து பாடுவதையே ஆடும் மயிலைக் குறித்துப் பாடுவதாகும்.

மேலும் கஜாசுரனைப் போரில் கொன்று தள்ளிய விநாயகக் கடவுளின் அன்புக்குரிய ஹே தனி யானை சகோதரனே! ஆடும் மயிலையும், அணி சேவலையும், மஹாமஹிமை தாங்கிய உன் கையிலிருக்கும் வேலையும் நினைக்குங்கால் என் உள்ளத்தில் எழும் மகிழ்ச்சிக்கோர் எல்லையே இல்லை. ஏனெனில் வேல் ஸ்மரணமானது உன் கருணையையே நினைவூட்டுகிறது.

நீ சூரபத்மாஸுரனுடன் போர்செய்யும் போது தேவேந்திரன் மரகத மயில் வடிவத்துடன் உனக்கு வாகனமாக இருந்தான். அக்கினி தேவன் உன்னுடைய தேரின் மேல் சேவற்கொடியாக நின்றான்.

முடிவில் நீ சூரபத்மாஸுரனைப் போரில் உன் மஹாசக்தி வாய்ந்த வேலாயுதத்தினால் இரண்டாகப் பிளந்து தள்ளினாய்.

அழிப்பதும் ஆட்கொள்ளுவதும் உன் வேலின் இயல்பாயிற்றே, ஹே முருகா! உன்னுடைய திருக்கரத்தில் கோடிக்கணக்கான சூரியனுக்குச் சமமாக ஜ்வலித்துக் கொண்டிருக்கிற வெற்றிவேலினால் மஹா பராக்கிரமசாலியும், வஜ்ஜ்ராயுதத்திற்கு சமமான சூரபத்மாஸுரனின் தேகத்தை இரு கூறாகப் பிளந்து தள்ளினாயே! என்னே உன் வீர்யம்! என்னே உன் பராக்கிரமம்! என்னே உன் பெருமை!

அப்பொழுது உன் மஹிமையை அறிந்த சூரன் சேவலும் மயிலுமாக உன்னைச் சரணமடைந்தபோது உன் கருணையானது மயிலை வாகனமாகவும், சேவலை உன்னுடைய வெற்றியைக் காட்டும் கொடியாகவும் ஏற்றுக்கொண்ட தன்றோ!

உன் கைவலிமையையும், வேலின் பெருமையையும் உனக்கு மயில் வாகன ரூபத்திலிருக்கும் சூரபத்மாஸுரனுக்குத்தான் நன்கு தெரியும். அன்னியில் என் போன்றவர்களுக்கு அதை அறிய முடியுமா அப்பனே!

மேலும் "தேடும் கயமாமுகனைச் செருவில் சாடும்" என்பதின் தத்வார்த்தமோ வெனில் பின்வருமாறு அறியவும்.

சூரபத்மனுடைய மாயாவித்தைகளின் பெருக்கத்தையும், கொடுமைகளையும் இவ்வளவுதான் என்று சொல்லமுடியாது.

போரில் சூரபத்மனேவெனில் முதல் நான்கு தினம் வரையில் ஊணுறக்கமில்லாமல் இரவு பகலாக அண்ட சராசரங்களையும் நடுங்க வைத்துக் கொண்டு எல்லையற்ற கொடுமைகளைச் செய்து கொண்டு இருந்தான். தன் குலகுருவாகிய சுக்கிராசாரியரினல் உபதேசித் தருளிய சம்மோகன சக்தியென்னும் மஹா மந்திரத்தின் மஹிமையினுல் சிருஷ்டி—ஸ்திதி—ஸம்ஹாரம் என்னும் மூன்று கார்யங்களையும் செய்து கொண்டு உலகைத் தத்தளிக்க வைப்பான்.

அநேக விதமான கோரரூபங்களைக் கொண்டு முருகப்பெருமானிடத்தில் போர் செய்தான். ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு ரூபத்தை எடுப்பான். ஒரு பொழுது அஷ்ட கஜங்களாய் மதஜலத்தைப்பெருக

விட்டுக் கொண்டு, துதிக்கைகளினுல் இரும்புலக்கை களைக் கொண்டு மந்திரங்களைச் சொல்லி நாலா பக்கங்களிலும் சுழற்றிச் சுழற்றிச் சாடுவான். அவ்வேளையில் உண்மையான சூரபத்மன் யாரென்று ஒருவராலும் சொல்ல முடியாது. இவ்விதம் அதிபயங்கரமான சூரபத்மாஸுரன் எங்கும் தானுய்தன் மாயா சக்தியினுல் போர் புரிந்தான். அந்த சமயத்தில் எல்லாம் வல்ல முருகப் பெருமானுக்கே, சூரபத்மனுடைய மாயாஜால யுத்தமானது மிகவும் ஆச்சர்யமாக இருந்தது. உண்மையான சூரபத்மன் எந்த இடத்தில் எந்த ரூபமாக யிருக்கிருனென்று முருகப்பெருமானே சூரபத்மனை தேடி அலைந்தார்.

இதையே பாடலில் 'தேடும்' என்ற பதத்தினுல் குறிப்பிடுகிருர்.

அதாவது ஹே முருகா! அந்த கயமாமுகனை அதாவது பெரிய யானை முகத்தைப்போல் ரூபத்தை மாற்றிக் கொண்டு உன்னிடத்தில் போர் புரிந்த அந்த சூரபத்மாஸுரனை போர்க்களத்தில் தேடிக்கண்டுபிடித்து உன் வேலினுல் மோதி அடித்துக் கொன்று பின்பு கருணையினுல் ஆட்கொண்ட தனி யானை சகோதரனே! உன்னுடைய வேல் என்ன, மயில் என்ன, அணி சேவல் என்ன இவைகளைப் பற்றிப் புகழ்ந்து பாடிக்கொண்டே யிருக்கும் தொழிலையே எனக்குத் தந்தருள்வாய்.

இந்த மானிட ஜன்மமானது உன்னுடைய வைபவத்தைப் பற்றிப் பாடி, பேசி, கேட்டு, மகிழ பயன் படாவிட்டால் இந்த மானிடப் பிறவிதான் எதற்கு? உன்னைப் பற்றிப் பாடாத பாட்டெல்லாம் முக்தியை அளிக்க சாமர்த்திய முள்ளதாக ஆகுமா! ஹே வேலாயுதா! வேலையும் மயிலையும் நினைத்தவர்

துயரங்களைத் துடைப்பவன் நீ அன்றோ! அதனால் நான் என்றென்றும் உன் புகழைப் பாடிக்கொண்டே இருக்க வேண்டும்! உன்னைப் பற்றிப்பாட உன் அருள் வேண்டும். உன் அருள் இல்லையேல் உன்னைப் பற்றிப்பாட இயலுமோ!

ஹே முருகா! இந்த நச்வரமான சரீரத்தில் மூச்சு இருக்கும்வரையில் உன் கருணைக்கிருப்பிடமான ஆடும் மயிலென, அணிசேவலென, அப்படியே உன் ஸ்வரூபமான ஞானவேல் என இவைகளைப் பற்றியே புகழ்ந்து பாடிக்கொண்டேயிருக்கும் தொழிலை எனக்கு நிரந்தரமான தொழிலாகவே தந்தருள்வாய் அப்பனே. அரிதான மானிட ஜன்மாவின் பிரயோஜனத்தை,

ஊனடைந்த உடம்பின் பிறவியே
தானடைந்த உறுதியைச் சாருமால்
தேனடைந்த மலர்ப் பொழில் தில்லையுள்
மாநடஞ்செய் வரதர் பொற்றாள் தொழ

என்று சேக்கிழார் சுவாமிகள் சொல்கிறார்கள். இறைவனை வாழ்த்திப் பாடுவதற்கே மானிடப் பிறவியை அடைந்திருக்கிறோம். ஏனெனில் பாட்டிலே நாம் நாதப் பிரம்மத்தைக் காண்கிறோம். தெய்வீகம் கரைந்திருப்பதை உள்ளத்தில் அனுபவிக்கிறோம்.

மேலும் விநாயகக் கடவுளைத் தனியானை என்று புகழ்கிறார்.

ஒப்பற்றவராயும், அவருக்கு அவரே நிகராயும் தனிமையான மஹிமையையுடையவராயும், மூலக்கடவுளாயும், உலகமெங்கும் அமர்ந்து அகர உகர மகரங்கள் தம்மால் பகருமொரு முதலாகி இருப்பவருமாக

விநாயகர் இருப்பதால் அவரைத் தனியானை என்று சொல்லுகிறார்.

தவிர விநாயகரைச் சேர்த்து முருகனை அழைக்கும் போது, முருகப்பெருமான் சீக்கிரமாக வந்தருளுவார். ஒப்பற்ற மூர்த்தியின் அன்புக்குரிய சகோதரன் ஒப்பில்லாத முருகன் அன்றோ!

ஒப்பில்லாத முருகனைப் புகழும் மந்திரமயமான நூல் கந்தர் அநுபூதி—எனவே,

ஆடும் பரிவேல் அணி சேவல்

என்பதில் வேலும் மயிலும் துணை என்ற மந்திரம் அடங்கியிருக்கிறது.

இதனை ஜபிப்பவர்கள் ஸமஸ்தமான பலன்களையும் முருகப் பெருமானின் திருவருளினால் அடைவார்களென்பதில் ஐயமில்லை.

நிற்க, தேடும் கயமாமுகனைச் செருவில் சாடும் என்ற வர்ணனையை விநாயகருக்கு அந்வயம் செய்வதைக் காட்டிலும் முருகனுக்கு ஒட்டிச் சொல்வதே உன்னதமான பொருளாகும். ஏனெனில் விநாயகரைத் 'தனியானை' என்று தனிப்பட்ட முறையில் புகழ்ந்து கூறியிருக்கிறார். அதனால் வேறு விசேஷணம் வைத்து விநாயகரைக் கூறித்தான் அவர் பெருமை வெளிவர வேண்டுமென்பதில்லை.

நித்யப்ரும்மசாரியாக விநாயகர் இருப்பதாலும் அவரைத் தனியானை என்று அழைக்கலாம்.

யானை முகத்தைப்போல் அவருக்கு முகம் இருந்தாலும் அவரைச் சாமான்ய யானை என்று நினைக்கக் கூடாது—யானைகளில் வைத்து அவர் ஒப்பற்ற யானை

யாக இருக்கிறார் என்பதினாலும் அவர் தனியானையாக ஆகிறார்.

உலகில் எந்தக் காரியத்தை ஆரம்பித்தாலும் தனிப்பட்ட முறையில் முதன்முதலில் பூஜிக்கவேண்டிய கடவுளாக விநாயகர் இருப்பதாலும் அவர் தனியானை ஆகப் போற்றப்படுகிறார்.

தாய் தந்தையர்களான பார்வதி பரமேஸ்வரர்களை ஒரு முறை பிரதக்ஷிணம் வந்தால் உலகைப் பிரதக்ஷிணம் பண்ணி வந்ததற்கு சமமாகும் என்ற உயர்ந்த தத்துவத்தை உலகிற்கு முதன் முதலில் போதித் தருளிய தனிப்பட்ட கடவுளாக விநாயகர் விளங்கி வருவதாலும் அவரைத் தனியானை என்று சொல்லத்தகும்.

ஆகையினால் கயமாமுகனை என்பதற்கு மாபெரும் யானை முகத்தைக் கொண்டு போர் செய்ய வந்த சூரபத்மாஸுரன் என்று பொருள்கொள்ள வேண்டும்.

கந்தரனுபூதி உத்தமமான கிரந்தமாக யிருப்பதாலும், அருளினாலுண்டான அநுபூதியானதினாலும் வெளிப்படையாகத் தோன்றும் அர்த்தத்தை உல்லங்கனம் செய்துபிரகாசிக்கும் தத்வார்த்தத்தையேக்ரஹித்துக் கொள்ள வேண்டும்.

முருகப்பெருமானின் அவதார ரகஸ்யமோ வெனில் மஹா பயங்கரனாயும் மஹா சக்தி வாய்ந்தவனுமான சூரபத்மாஸுரனை ஸம்ஹாரம் செய்வதற்கென்றே ஏற்பட்டது. அதனால் கயமாமுகனை என்பதினால் சூரபத்மாஸுரனை நினைவூட்டி அவனை ஸம்ஹாரம் செய்வதற்கே முருகப்பெருமானின் திருஅவதாரம் உண்டாயிற்றுஎன்றும், அப்படியே 'தனியானை' என்ற விசேஷணத்தினால் விநாயகக்கடவுளின் ஒப்பற்ற சக்தியைப் புகழ்ந்து, அதற்கு நிகரான சக்தியோடு கூடினவன்

சூரபத்மாஸுரன் என்பதை எடுத்துக்காட்டவே வ்யங்ய மரியாதையை அனுஸரித்து சூரபத்மாஸுரன் என்று சொல்லாமல் கயமாமுகனை என்று சொல்லி சூரபத்மாஸுரனின் இணையற்றபராக்கிரமத்தை நினைவூட்டுகிருர் இந்த முதல் பாடலில் அருணகிரிநாதர்.

அதனுல் 'தேடும் கயமாமுகனைச் செருவிற் சாடும்' என்பதில் சூரஸம்ஹார மஹிமையையும் பெருமையையும் அருணகிரிநாதர் குப்தமாக வர்ணிக்கிருர். ஏனெனில் உண்மையில் சூரபத்மாஸுரனை ஸம்ஹாரம் செய்த வைபவத்தை மனத்தினுலும்கூட ஸ்மரணம் செய்யமுடியாது. அவன் அருளினுல்தான் அதை நாம் தெரிந்து கொள்ள முடியும்.

எனவே இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி என்ற மூன்று விதமான சக்திகளும் ஒன்று சேர்ந்து முருகப் பெருமானின் திருக்கரத்தில் மஹா மகிமை தங்கிய சக்திவேல் ருபமாக விளங்கிவருகிறது. அம்மாபெரும் சக்திவேலே—சூரஸம்ஹாரம் அதனைச் செய்தது. அந்த வேலின் உபாஸன மகிமையினுல்தான் நாம் எல்லோரும் சூரஸம்ஹார வைபவத்தை அறிந்து கொள்ளமுடியும்.

'ஆடும் பரி' என்பதினுல் மயிலானது முருகனின் திருக்கரத்திலுள்ள சக்திவேலைப் பார்த்துப் பார்த்து ஆடிக்கொண்டிருக்கிறது. தமது மாருது தோகையிலுள்ள எண்ணற்ற கண்களினுல் முருகனின் அழகினை பானம் செய்துகொண்டு, முருகானந்தத்தில் லயித்து ஆடிக்கொண்டிருக்கிறது. சூரபத்மாஸுரன் முருகனைச் சரணமடைவதற்கு முன்பாகவே முருகப் பெருமானுல் எறியப்பட்ட வேலினைச் சரணமடைந்தான். உடனே வேலானது முதலில் அவனை ஆட்

கொண்டது. பிறகு முருகப்பெருமான் சூரபத்மஸுரனை மயிலாகவும் சேவல் கொடியாகவும் ஆட்கொண்டார்.

முருகனின் கருணையை எண்ணி எண்ணி சூரபத்மன் கொடியில் சேவலாக இருந்து கொண்டு அதிகாலையில் கூவிக்கொண்டிருக்கிறுன் பின்வருமாறு:—

ஹே ஜனங்களே, முருகனைக் காட்டிலும் வேருெரு தெய்வமுண்டோ. கருணைக்கடல்; அடியார்களுக்கு எளியவன், துயரம் துடைக்க வந்த ஒப்பற்ற கடவுள் முருகப்பெருமான். அண்டசராசரங்களையும் என் ஆதீனத்தில் அடக்கி ஆட்சி செலுத்திவந்த சூரபத்மனுகிய நான் சொல்கிறேன். தெய்வம் என்று ஒன்று உண்டேல் அதுஆறுபடை வீட்டினையுடைய முருகப் பெருமானைத் தவிர வேறு தெய்வமே இல்லை. என் வார்த்தையை நம்புங்கள்.

யம பாதையானது நமது அருகே வந்துகொண்டேயிருக்கிறது - ஒரு நாள் போனுல் ஒரு நாள் நம் ஆயுளில் குறைந்துவிடுகிறது.

ஆகையில் இருக்கும் மீதி நாளையாவது வீணுக்காமல்முருகனின் வேலைப்பற்றிப்பாடிக் கொண்டிருங்கள். இதைத்தான் நான் தினமும் அதிகாலையில் உங்களைக் கூவி எழுப்பிச் சொல்கிறேன். ஏதோ வேலையில்லாமல் கூவிக்கொண்டிருக்கிறேன் என்று சொல்லாதீர்கள். தவிர மயிலின் ரூபத்தில் இருந்து கொண்டு கார்த்திகை பாலனுன முருகனின் திவ்ய மங்கள ரூபத்தைத் தாங்கிக்கொண்டு, அதனுல் உண்டாகும் ஆனந்தத்தினுல் நடனமாடி "தஞ்சத்தருள்" முருகப்பெருமான் என்று ப்ரகடனம் செய்துகொண்டேயிருக்கிறேன் என்பதேயாகும்.

இதனுல்தான் அருணகிரிநாதர் முருகப்பெருமானே

"ஆடும் பரிவேல் அணிசே வல்எனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்"

என்று வேண்டிக்கொள்கிருர்.

கந்தரனுபூதியானது "ஆடும்" என்ற பதத்தை ஆரம்பமாகக் கொண்டு "குகனே" என்ற பதத்தினுல் முடிவை அடைகிறது என்று முன்பே கூறப்பட்டது. அது இங்கு விரித்துப் பொருள் கூறப்படுகிறது.

குகன் என்ற பதத்திற்கு குகையில் இருப்பவன் என்று பொருள். அந்தக் குகையோ வெனில் ப்ராணி களுடைய இதயமாகிய குகையே யாகும். அவரவர்களு டைய பக்திக்குத் தகுந்தவாறு முருகன் அவர்களு டைய மனதாகிய குகையில் வசிக்கிருன்.

ஞானிகளுடைய மனதாகிய குகையில் ஓங்காரவடி வில் முருகன் தோன்றி விளையாடுகிருன். பக்தர்களு டைய உள்ளத்தில்குமாரனுக இருந்து ஆடிக்கொண்டி ருக்கிருன். முருகன் ஆடினுல்தான் யாவையும் ஆடும். அவன் ஆடாவிட்டால் அணுவும் அசையாது. அவன் ஆடினுல் அசையாப் பொருள் யாவும் ஆடும்.

மனதாகிய குகையில் முருகப் பெருமான் வசிக் கும் பொழுது, பக்தர்களுக்கு ஒரு குறையும் உண்டா காது. அவர்கள் சொன்னபடி யாவும் ஆடும்.

தவிர ஆடும் என்ற பதத்தை நிச்சிதார்த்தத்தில் அறியவேண்டும்.

இதனுல் இறைவனின் பூர்ணமான திருவருளைப் பெற்று எப்பொழுதும் இறைவன் செவி கொடுத்துக் கேட்டு ஆனந்திக்குமாறு தான் சொன்ன கந்தரநுபூ

தியை எவர்கள் பாராயணம் செய்துவருகிறார்களோ அவர்கள சொன்னபடி யாவும் ஆடும் என்று ஸித்தாந்தமாக அருணகிரிநாதர் சொல்லுகிறார்.

எனவே பேரின்பம் பக்தர்களை அணுகி ஆடும். குகபெருமானின் வைபவங்கள் அடியார்களின் கண் முன்னிலையில் ஆடும். கந்தரநுபூதியைச் சொல்லி அழைத்தால் உயிர் அற்றவைகள் உயிர் பெற்றெழுந்து ஆடும். மாறாது தோகையை விரித்து மயில் நடனமாடும். ஞானவேலை வாழ்த்துங்கள் என்று சேவல் கூவிக் கூவி ஆடும்.

பாராயணம் செய்வோர் வீட்டில் அஷ்டலக்ஷ்மி தாண்டவம் ஆடும். இன்னும் ஆடாத தத்துவங்கள் யாவும் ஆடும். நினைத்ததெல்லாம் ஆடும்.

ஆறுபடை வீட்டினையுடைய முருகப் பெருமான் மனதாகிய குகையில் இருக்க அண்டசராசரங்களே ஆடும்.



# ஞானம் பெற

## 2



உல்லாச நிராகுல யோக விதச்
சல்லாப விநோதனும் நீ அலையோ
எல்லாம்அற என்னை இழந்த நலம்
சொல்லாய் முருகா சுர பூபதியே.

**பதவுரை**

முருகா—முருகக் கடவுளே, சுர பூபதியே—தேவர்களுக்குத் தலைவனே, உல்லாசம்—மனக்களிப்பைத் தருவதும், நிராகுலம்—துன்பத்தை இல்லாமல் செய்வதுமான, யோக விதம்—பலவிதமான யோக மார்க்கங்களைப் பற்றி, சல்லாபம்—(பக்தர்களுடன்) சம்பாஷணை செய்கின்ற, விநோதனும்—லீலையையுடையவனும், நீ அலையோ—நீ அல்லவா?. எல்லாம் அற—(ஆதலால்) எனது ஆசாபாசங்கள் எல்லாம் நீங்கவும், என்னை இழந்த—(நான் என்ற சப்தத்தால் சொல்லப்படும் ஆத்மஸ்வரூபத்தை) இழந்திருக்கும் அடியேனுக்கு, நலம்—ப்ரும்ம ஞானத்தை, சொல்லாய்—உபதேசித்து அருள்வாயாக.

**தாத்பர்யம்:**

முருகனின் குணங்களைப் பற்றிப் பேசுவதால் பாபங்கள் நீங்கி விடுவது மட்டும் அல்ல. அது நம்மை அவனுடைய பாதாரவிந்தங்களுக்கே கொண்டு போய்ச் சேர்த்துவிடும். எனவே, முருகனின் குணாதிசயங்களைப் பற்றி சதாகாலமும் பேசிக்கொண்டே இருங்கள். 'முருகா முருகா'வென்று அவன் நாமங்களை உச்சரியுங்கள். அதுவே போதும்.

இத்தகைய பக்திநிலையே சாதன பக்தியாகும். சாதன பக்தியானது உள்ளத்தில் தெய்வீகத் தன்மையைக் கொண்ட காதலை முருகனிடத்தில் ஏற்படுத்தி ஸ்கந்தானுபவத்தை அடையவேண்டும் என்ற ஆசையையும் உள்ளத்தில் எழும்பும்படி செய்து முடிவில், இந்த நச்வரமான உலகில் இச்சையில்லாமல் செய்துவிடுகிறது. வேதாந்த சிந்தனையில் ப்ராணிகளைக் கொண்டு போய்விடுகிறது.

மனதானது பலவித மகா யோக நிலைகளை அடைந்தாலும் அந்த ஒவ்வொரு நிலையிலும் முருகனின் தெய்வீக சக்தி மேலோங்கி நிற்கிறது. அந்தத் தெய்வீக சக்தியே துணையாகவும் நிற்கிறது. இந்நிலையில் பக்தர்கள் இவ்வுலகத்தைப் புல்லாகக் கருதி உலக வாழ்க்கையை விரும்பவேமாட்டார்கள் அன்றோ?

இறைவனைப் பிரம்மமாகவே காண்பார்கள். இந்த நிலை ஒன்றில்தான் பக்தர்கள் பகவானிடம் ஆத்மிகத் தொடர்பை அடைகிறார்கள்.

ஆதலால் முருகனை ''நீயே நான்'' என்ற நிலையில் அனுபவிக்கவேண்டும் என்ற உயர்ந்த மனோபாவம் உண்டாகிறது. இந்த நிலையை நாம் அடைவதற்கு

முருகனின் அருள் வேண்டும். ஆராத இன்பம் அவன். அருள்மலை அவன். எனவே,

அவன் அருளாலே அவன் தாள் வணங்கி

என்று மாணிக்கவாசகர் இறைவனின் அருள் ஒன்று தான் எல்லாவற்றிற்கும் மூலகாரணம் என்கிருர்.

ஆகையினுல் முருகனின் அருளை நாம் எல்லோரும் அடைவதற்கு அவனுடைய லீலா வைபவங்களைப் பற்றிப் பேசிக் கொண்டும், பாடிக்கொண்டும், கேட்டுக் கொண்டும் இருக்கவேண்டும். அவனுடைய திவ்யமான ரூபத்தை உற்சவ காலங்களில் கண்ணுரக் கண்டு களிக்கவேண்டும்.

முருகன் ஓங்காரமாக நிற்கிருன். வேதங்களும் அவனை இப்படிப்பட்டவன் என்று சொல்லமுடியாமல் "நேதி நேதி" என்ற மஹாவாக்கியத்திஞல் இதுவும் முருகன் அல்ல இதுவும் முருகன் அல்ல என்றுதான் கோஷிக்கிறது.

எனவே அருணகிரிநாதர் லீலா ரூபமான முருகனின் குணதிசயங்களைப் புகழ்ந்து பாடி அனைத்தும் நீ அல்லவா முருகா! என்கிருர்.

ஹே முருகா! என்றும் இளமையோடும் அழகோடும் இருப்பவனே! வேதாந்தத்தின் உட்பொருளாய் நீ இருக்கிருய். உன்னைப்பற்றிப் பாடுவதையே நீ எனக்குப் பணியாக அருளவேண்டும் என்று சொல்லி உபாஸனு மூர்த்தியான முருகனைக் குணங்களோடு வர்ணிக்கிருர். இவ்வாறு விளங்கும் ஸகுணமூர்த்தியான இறைவனை உபாஸிப்பதனுலேதான் ஞானமும் அப்படியே ஞானத்தால் மோக்ஷமும் உண்டாக வேண்டும்.

ஞானத்தைப் போதிக்கும் பாலமுருகனையே இந்தப் பாடலில் பின்வருமாறு துதிக்கிறார் அருணகிரிநாதர்.

உல்லாச நிராகுல யோகவிதச்
சல்லாப விநோதனும்நீ அலையோ!

உல்லாசம் என்றால் மூன்று காலங்களிலும் சஞ்சலமில்லாமல் உள்ள மனக்களிப்பை உடையது. அதாவது குதூகலமான மனதுடன் இருந்து கொண்டு பக்தர்களுடைய மனதில் மேலான குதூகலத்தை உண்டுபண்ணுகிறார். இறைவன் குதூகலத்துடன் இருப்பதால்தான் பக்தர்களும் குதூகலத்துடன் இருக்கிறார்கள். அவர்களுடைய ஒவ்வொரு செயலிலும் ஒளி வீசும் பெருமையும், மஹிமையும் கலந்திருக்கின்றன.

குதூகலமான மனதுடன் முருகனைப் போற்றி வணங்கி வருகிறார்கள். எல்லாம் முருகனாகவே பாவித்து சஞ்சலமற்ற மனதையுடையவர்களாக இருக்கிறார்கள். இதற்கு காரணமோவெனில், மரத்தின் வேருக்கு தண்ணீர் ஊற்றுவதின் மூலமாக எவ்விதம் கிளைகளும் இலைகளும் வளர்ச்சியை அடைகிறதோ அதுபோலவே எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான முருகப் பெருமானிடத்தில் உல்லாசமான மனதுடன் செலுத்தும் அன்பும் ஆராதனையும் மற்றத் தெய்வங்களுக்குச் செய்தது போலவே ஆகின்றது.

இவ்வித மனோபாவத்தைத்தான் உல்லாசம் என்று அறியவேண்டும். இறைவனுக்கு இத்தன்மை இயல்பன்றோ!

ஹே! உல்லாசமான மனக்களிப்பை உடையவனே! பக்தர்களைக் காப்பதையே விரதமாக உடையவனே! நான் உன் பெருமையை நினைக்குங்கால் உல்லாசமான

மனதை அடைகின்றேன். ஆகையினுல் ஹே முருகா! நான் உன்னே அன்புடன் மெய்த்துணேயாக அழைக்கிறேன், ஹே! உல்லாசனே

பாதி மதிநதி போது
மணிசடை நாதன் அருளிய குமரேசா

உன்னுடைய உல்லாசமான ஸ்வருபத்தை வர்ணிக்க என்னுல் இயலுமோ என்கிருர் அருணகிரிநாதர்.

அடுத்தபடியாக நிராகுலன் என்று முருகனேப் புகழ்கிருர்.

நிராகுலன் என்ற சொல்லிற்குத் துன்பமில்லாதவன் என்று பொருள். கர்மாவிற்கு அனுசரித்து ஜீவகோடிகளுக்கு இன்பத்தையோ துன்பத்தையோ கொடுப்பவன் இறைவனுகும். அதனுல்தான் இறைவனே

இன்பமும் துன்பமும் இல்லானே

என்று மாணிக்கவாசகர் சொல்லுகிருர்.

நாம் எல்லோரும் பூர்வஜன்மாவில் செய்த கர்மாவிற்குத் தகுந்தவாறு இன்பத்தையும் துன்பத்தையும் இந்த ஜன்மாவில் அனுபவிக்கிறுேம். துன்பத்தை அனுபவிக்கின்றவர்களான நாம் இன்பத்தை விரும்புகின்ருேம். அதனுல்தான் இன்பத்தைத் தரும் வண்ணம் இறைவனே வேண்டுகிருேம்.

இறைவனுே இன்பமயமானவன். அதாவது ஞானசொருபி. ஞானத்தால்தான் ஆனந்தமுண்டாகும். ஆனந்தத்தில் அந்தரங்கமாகவுள்ளதுதான் சத்தும்—சித்தும். எனவே சச்சிதானந்தம் அவனுடைய உண்மையான ஸ்வருபம் என்று அறியவேண்டும்.

ஆகவே முருகப்பெருமான் நிராகுலனுக இருந்து வருகிருர். இத்தகைய மஹிமையுள்ள ஈஸ்வரனே,

மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே என்று உள்ளுருகி அழைக்கின்றது திருவாசகம்.

ஆகையினுல் ஹே நிராகுலனே! உன்னுடைய கருணையை என்னிடத்தில் விழும்படி செய்தருள்வாய்.

மூன்ருவதாக முருகனை யோகவிதன் என்று வர்ணிக்கின்ருர் அருணகிரிநாத சுவாமிகள்:—

இது ஓர் அபூர்வமான விசேஷணம் இறைவனுக்கு. ஆழமான கருத்தை உடைய வர்ணனை.

இதற்குச் சாதாரண பொருள் பலவிதமான யோக மார்க்கங்களை அறிந்தவன் என்பதேயாகும்.

முக்கியமான யோகங்களோவெனில்—கர்மயோகம் — ஞானயோகம் — ஹடயோகம்—ராஜயோகம் — பக்தி யோகம் இவைகளே ஆகும். எல்லாவற்றிலும் உயர்ந்தது ராஜயோகமும் ஞானயோகமுமேயாகும். இவைகளை நன்கு அறிந்தவன் முருகப்பெருமான்.

எனவே சிற்றெறும்பிலிருந்து ஈசஞன சிவபெருமான் வரையிலுள்ள எல்லா ப்ராணிகளுக்கும் அவரவர்களுடைய கர்மாவிற்கும் ஞானத்திற்கும் தகுந்தவாறு யோகமார்க்கங்களை ஆறுபடை வீட்டினையுடையவனுன முருகப்பெருமான் உபதேசித்து வருகிருர். ஈசருடன் ஞானமொழி பேசுகிருர்.

இதனுல் முருகப்பெருமான் யோகமாகவும்—யோக விநோதனுகவும்–யோகவித சல்லாபனுகவும்–யோகவித சல்லாப விநோதனுகவும் — விநோதனுகவும் — யோக விநோதனுகவும் — விதவிநோதனுகவும் — இதசல்லாபனுகவும் இருக்கின்ருன்.

இத்தகைய பெருமையுடன் தனிப் பரம்பொருளாய் பெருங்கருணையைத் தந்து அருள்கின்ற ஆராத

அமுதே! அளவிலா அருள்மலையே! உன்னை எவ்விதம் நான் போற்றிப் புகழ்வேன்!

ஹே முருகா, உன்னுடைய ஸ்வருபத்தை ப்ரும்மாதி தேவர்களும்கூட நன்கு அறிந்தார் இல்லை. வேதங்களுக்கே நீ புலப்படாமலிருக்கும்பொழுது யாரால் உன்னை அறியமுடியும்?

நீயே அல்லல்படும் ஜீவகோடிகளை உத்தாரணம் செய்யும்பொருட்டு, கருணையினுல் ஆங்காங்கு இந்தப் புண்ணியபூமியில் திவ்ய மங்கள சொருபத்தில் திரு அவதாரங்கள் செய்து உனது பொற்பாத கமலங்களினுல் பூமியை அலங்கரித்தும், மேலான சீவப்ரும்ம ஐக்யத்தைப் போதிக்கின்ற தத்துவங்களைப் புண்ணியவான்களுக்கு உபதேசித்துக்கொண்டும், உனது மங்கள சொருபத்தை அடியார்களுக்கு பிரத்யக்ஷமாகக் காட்டி அருளிக்கொண்டும் பலவிதமான லீலா வைபவங்களைச் செய்கிருய்.

இந்த ரகஸ்யத்தை அறிந்த பரம ஞானிகளோவெனில் உன்னுடைய அவதார கதாம்ருதக் கடலில் மூழ்கிக் கொண்டே "எல்லாம் உன் செயல்" என்று துக்கத்தையும் சுகத்தையும் சமமாகக் கருதிப் பொருட்படுத்தாமல் இருக்கிருர்கள்.

ஹே முருகா, பக்தியையே வேதங்கள் ஐந்தாவது புருஷார்த்தமாகக் கோஷிக்கின்றன. எனவே உன்னுடைய சல்லாப விநோதங்களில் எப்பொழுதும் ரமித்துக் கொண்டிருக்கிற பக்தகோடிகள் வீடு, பிள்ளை, பெண், மனைவி என்ற எல்லாவற்றையும் புல்லுக்குச் சமமாகக் கருதித் தள்ளிவிடுகிருர்கள். இதனுல் உன்னை அடைய பக்தியோகம் ஒன்றே எல்லாவற்றை

யும்விட மேலானதாகவும் போற்றத்தக்கதாகவுமிருக்கிறது என்பதற்குச் ஸாக்ஷியும் வேண்டுமா?

ஹே முருகா, நீ பேசுவதெல்லாம் இதமேயாகும். நீ சல்லாபம் செய்யும்பொழுது விநோதனுகவும் இருக்கின்ருய். வேடிக்கையாகப் பேசுகின்ருய். அப்படிப் பேசுகையில் ஞானத்தை ஊட்டுகின்ருய். ஞானத்தை ஊட்டி அகங்காரத்தை அழிக்கின்ருய். அதன் விளைவாக உள்ளத்தில் உன் நினைவையே எப்பொழுதும் இருக்கச் செய்கிருய்.

இதன் மஹிமையினுல் மஹான்களும், பக்தர்களும் உன்னிடமிருந்து சகலவிதமான யோக தத்வங்களையும் தெரிந்துகொண்டு பக்தியோகத்தோடு கூடின ராஜயோகமே முக்தியை அளிக்கச் சாமார்த்தியமுள்ளது என்ற ஒரு த்ருடமான நம்பிக்கையை யடைந்து உன்னுடைய திவ்ய சரணுரவிந்தத்தை ஒன்பது விதமான பக்திமார்க்கங்களைக் கொண்டு பஜனம் செய்கிருர்கள். இதற்கெல்லாம் காரணம் உன்னுடைய சல்லாபத்தோடு கூடிய திருவிளையாடல் அல்லவா!

ஹ லீலாசொருபனே! இடையன்போல் திருவுருவத்தில் நாகமரத்தில் இருந்தவண்ணமாய் தமிழகத்தாயாகிய ஔவையாரிடம் வேடிக்கையாகச் சல்லாபம் செய்து முடிவில்,

சுட்ட பழம் வேணடுமா ?
சுடாத பழம் வேண்டுமா?

என்று தேன் சொட்டச் சொட்ட இனிய கனிந்த ரஸத்துடன் திருவாய் மலர்ந்து அருளினுயே? இந்த லீலை ஒன்று போதாதா நீ சல்லாப விநோதன் என்பதை எடுத்துக்காட்ட அப்பனே.

செல்வக்குமரா, உன்னுடைய சல்லாப விநோதத்திலும் நீ உன்னுடைய மாறிலாத பரந்த உள்ளத்தைக் காட்டிக்கொண்டே எது வேண்டும் என்று கேட்கிறாய். பக்தர்கள் வேண்டுவதையே நீ அளிக்கக் காத்துக்கொண்டிருக்கிறாய். இதனை நான் மட்டும் சொல்லவில்லை.

வேண்டுவோர் வேண்டுவதே ஈவான்

என்று திருநாவுக்கரசு சுவாமிகளே புகழ்கிறார்.



குமரா! பழங்களில் சுட்ட பழம் என்றும் சுடாத பழம் என்றும் உண்டா? இதுகூட தெரியாத இடையனே, மரத்தைக் குலுக்கு என்ற ஔவைத் தாயிடம் நீ புன்னகை செய்து சல்லாபம் செய்து, 'தமிழ் நாட்டுத் தெய்வமாகிய ஔவைத் தாயே! பழங்களில் சுட்டபழம் உண்டு-இது உனக்குத் தெரியாது-இடையனான என் ஒருவனுக்கே தெரியும்' என்று கூறி மரத்தைக் குலுக்கினாயே.

அப்போது பூமியில் உதிர்ந்து விழுந்த பழத்தில் ஒட்டிக்

கொண்டிருந்த மண்ணைப் போக்க ஔவையார் பழத்தினைக் கையிலெடுத்து ஊத, மரத்தின் மேலி ருந்தவண்ணமாகவே நீ, பாட்டி, சுட்ட பழம் உண்டா என்று என்னைக் கேட்டாயே, நீ ஏன் இப்போது ஊது கிறாய்? பழம் சுடுகிறதா என்று பொன்மொழிகளினால் சல்லாபம் செய்தாயே அப்பனே. அதுமட்டுமா. பிறகு ஔவைத் தாய்க்கு உன் திவ்ய ரூபத்தையும் காட்டி அருளினாயே, என்னே உன் சல்லாபத்தின் கருணை.

அப்படியே உன்னுடைய அநேக திரு அவதாரங் களில் நீ குகனாக அவதாரம் செய்து ஸ்ரீ ராமபிரா னிடம் சல்லாபம் செய்து காட்சி தந்து அருளினாயே குமரா. அதை எவ்விதம் நான் மறப்பேன்.

தோழமை என்றவர் சொல்லிய
சொல் ஒரு சொல் அன்றோ

என்று ஸ்ரீராமபிரானுடைய சொல்லைப் புகழ்ந்து

மன்னவர் நெஞ்சினில் வேடர்
விடும் சரம் வாயா வோ

என்று கோபத்துடன் உன்னுடைய வீர ரசத்தைப் பரதனிடத்தில் காட்டிப் பின்பு உண்மை தெரியவர, அம்மாசற்ற பரதனை நோக்கி

மன்புகழ் பெருமை நுங்கள்
மரபினோர் புகழ்கள் எல்லாம்
உன்புகழ் ஆக்கிக் கொண்டாய்
உயர் குணத்து உறவுத் தோளாய்

என்று போற்றினாயே. என்னே உன் சல்லாப வினோதத் தின் பெருமை. அன்பும் அருளும் பெருகிவரும் வண் ணம் நீ வினோதமாகச் சல்லாபம் செய்கிறாய்.

உன் சல்லாபத்தைக் கேட்டுக்கொண்டிருப்பதே ஓர் ஆனந்தம். நீ சல்லாபம் செய்யும்பொழுது உன்னுடைய திவ்ய மங்களரூபத்தைக் கண்ணாரக் கண்டு மகிழ்வது எல்லையற்ற பேரின்பத்தை அளிக்கிறது. உள்ளத்தையும் உயிரையும் ஒருங்கே கவரும் உன் லீலாவிநோதமான ரூபத்தை நினைக்குங்கால் உள்ளத்தில் 'அன்பு' என்னும் காதல் ஊற்றெடுக்க ஆரம்பிக்கிறது. முருகா, என்னுடைய எண்ணமெல்லாம் உன் சல்லாபத்திலேயே இருக்கிறது.

இதுபோலவே பிரும்மாவிடம் சல்லாப விநோதம் செய்து 'ஓம்' என்ற ப்ரணவத்திற்குப் பொருள் கேட்டு அவர் சொல்லமுடியாதவராகி பிரும்மாவைச் சிறையில் அடைத்து வேடிக்கை பார்த்தாயே. என்னே உன் சல்லாப விநோதம்.

ஹே முருகா, இவ்விதம் உன்னுடைய சல்லாப விநோதம் கணக்கற்றதாக இருந்து வருகிறது. இதனை ஒன்றையும் மனத்தினாலும்கூட நினையாமல் நான் அல்லல் பட்டுக்கொண்டிருக்கிறேன். மாறாத இளமையை உடையவனே, ஸம்ஸாரஸாகரத்தில் நான் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை இவைகளினால் கட்டுப்பட்டு இந்த நச்வரமான உலகில் பற்றுதல் கொண்டு நாயினும் கடையேனாக யிருக்கிறேன். இனியயாவது இந்த உலகில் எனக்கு வைராக்கியம் வரும்வண்ணம் என்னுடைய பற்றுதலையெல்லாம் அறுத்துத் தள்ளுவாய். அவ்விதமே துன்பத்தை நீக்கி இன்பத்தையளிக்கும் ஞானக்கடவுள் நீயன்றோ. மேலும் "நான்" என்ற அகங்காரமும், "எனது" என்ற மமகாரமும் என்னை ஆட்டிவைக்கிறது. இதனால் உன்னுடைய கதாச்ரவணம் கேட்கவோ, உன் திருநாமங்களை உச்சரிக்கவோ, உன் திவ்ய சொருபத்தை ஆலயங்களில் கண்டு

மகிழவோ நான் இதுவரையில் செய்ததில்லே. காரண மோவெனில் ''நானெனவும்–எனதெனவும்'' என்ற பொய்யான கருத்தில் உழன்று கொண்டிருக்கிறேன்.

உலகப் பற்றை ஒட்டிய இன்பங்களெல்லாம் முடிவில் துயரங்களாகவே மாறுகின்றன. இருந்தும் உலகப் பற்ருனது என்னே விடுவதில்லே. இந்த அழியும் உடலில் நான் என்ற கர்வமானது இடைவிடாமல் இருக்கிறது. இதனுல் என்னே இழந்தவனுக இருக்கிறேன்.

இத்தகைய நிலேயிலிருக்கும் எனக்கு நீ நலம் சொல்லாய். அதாவது அந்த நலமோவெனில்

பார்ப்பதெல்லாம் பரம்பொருளின் லீலேயடா
கேட்பதெல்லாம் பரம்பொருளின்
கதாம்ருதமடா.

என்று சான்ருேர் அருளிய வண்ணம், மஹான்கள் அனேத்தும் உன்னுடைய லீலாவைபவம் என்றே அனுபவித்து வருகிருர்கள். இத்தகைய பேரின்ப நிலேயை எனக்கு உபதேசித்தருள்வாயாக என்று அருணகிரியார் முருகனேக் கேட்கிருர்.

இத்தகைய பேரின்ப நிலேயை அடைவதற்கு ப்ரதிபந்தகமாகவுள்ள பாபங்களே எல்லாம் போக்கடித்து மேலான ஞானத்தைத் தந்தருள முருகப்பெருமானுக்கு சக்தியுண்டு என்பதினுல் 'முருகா' என்று இறைவனே அன்புடன் அழைக்கின்ருர் அருணகிரியார். முருகா என்னும் திருநாமத்தின் மஹிமையை

முருகா எனவோர் தரமோ தடியார்
முடிமேல் இணேதாள் அருள்வோனே

என்று புகழ்கிருர் திருவீழிமிழலேத் திருப்புகழில்.

எனவே முருகா முருகா என்று உள்ளம் உருகி நாம் செல்வக் குமரனை அழைப்போமேயாகில் அக்கணமே தெய்வீகத் தன்மையுடன் கூடிய அழகு இளமை மணம் ஆகியவைகள் புத்துயிர் பெற்று நமது உள்ளத்தில் எழுகின்றன.

தவிர முருகப்பெருமானுடைய சல்லாப லீலை யானது வரம்பில் அடங்காததாக இருக்கிறது. எங்கும் நிறைந்து நிலவி நிற்கிறது. ஆதலால் பாட்டில் 'அலையோ' என்ற பதமானது 'நீ அல்லவா' என்ற பொருளை வெளிப்படையாகத் தந்தாலும் கூட அந்த 'அலையோ' என்ற பதமானது ஒரு மாபெரும் த்வனி யார்த்தத்தில் அலங்கரிக்கப்பட்டதாகவே இருக்கிற தென்பதைக் காணலாம்.

ஹே முருகா! ஸமுத்திரத்தின் கரையில் அலைகள் எவ்விதம் ஓயாமல் அடித்துக்கொண்டே இருக்கின் றதோ அதுபோலவே உன்னுடைய சல்லாபமாகிய இன்ப ரஸத்தில் ஓயாமல் ஒன்றின் பின்னொன்றாக மெய்ப்பொருளைக் காணும் தன்மையைக் கொண்ட உயர்ந்த மெய்ஞான எண்ணங்களும் என்னுடைய மனத்தில்ஓயாமல் ஒன்றின் பின்னொன்றாக மாறிமாறித் தோன்றிக்கொண்டே யிருக்கிறது. இதனால் உலகம் முழுவதும் ஓடி ஆடி அலையும், எண்ணில் அடங்காத என்னுடைய எண்ணங்கள் யாவும் ஒன்று திரண்டு உன்னுடைய சல்லாபமாகிய இன்பக் கடலில் கலந்து அக்கடலின் கரையில் நிலைபெற்று அலைகள்போல் ஓயாமல் உனனுடைய சல்லாப மஹிமையையும் திரு விளையாடல்களின் வைபவத்தையும் ஒன்றின்பின் ஒன்றாக உருவாக்கிக்கொண்டே இருக்கிறது.

ஹே முருகா! ஒவ்வொரு எண்ணங்களிலும் உன் னுடைய திவ்ய ரூபத்தையே நான் காண்கிறேன். இதை

எண்ணிப் பார்க்குங்கால், கடலில் அலைகளின் தோற்றத்தை ஒன்றின் பின்னொன்றாக கணக்கிட்டு எண்ணினாலும் எண்ணி விடலாம். அதுபோலவே கடலில் அலைகளே இல்லாமல் ஆகிவிட்டாலும் ஆகிவிடலாம். ஆனால் குமரா! நீ பக்தர்களிடத்தில் செய்யும் சல்லாபமாகிய பெருங்கடலின் கரையில் உருவாகி வருகின்ற எண்ணங்களாகிய இன்ப அலைகளின் வரம்பினை யாரால் கணக்கிட்டுச் சொல்லமுடியும் அப்பனே!!!

இத்தகைய மாபெரும் சிந்தனையில் நம்மைக் கொண்டுபோய்விடுகிறார் அருணகிரியார். என்னே அவர் வாக்கின் பெருமை. இதனால்தான் தாயுமானவர்,

ஐயா அருணகிரி அப்பா வுனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர் யார்?

என்று சொல்லி வியப்பினையடைகிறார் அன்றோ!!



# மெய்ப் பொருள் எது?

3



வானோ புனல்பார் கனல்மாருதமோ
ஞானோதயமோ நவில்நான்மறையோ
யானோ மனமோ எனையாண்ட விடம்
தானோ பொருளாவது சண்முகனே.

**பதவுரை**

*சண்முகனே—ஆறுமுகக் கடவுளே!, பொருள் ஆவது—உண்மையான பொருளாவது, வானோ — ஆகாயமோ, புனல்—நீரோ, பார்—பூமியோ, கனல்—நெருப்போ, மாருதமோ—காற்றோ, ஞானோதயமோ—ஞானத்தினுல் அறியக் கூடிய வஸ்துவா, நவில்—ஓதப்படுகின்ற, நான்மறையோ—நான்கு வேதங்களோ, யானோ—"நான்" என்று கூறப்படுகின்ற அவித்யா சம்பந்தனுன ஜீவனு, மனமோ—அந்தக் கரணங்களில் ஒன்றுன மனமோ, எனை ஆண்ட இடம் தானோ — என்னை "நீயே நான்-நானே நீ" என்று ஆட்கொண்ட இடமேதானோ. [அடியேனுக்கு உபதேசித்து அருள்வாயாக]*

**தாத்பர்யம் :**

ஹே முருகா! உன்னுடைய நிலேயின் ஸ்வருபத்தை ஸித்தாந்தமாக இப்படித்தான் என்று சொல்ல முடியாது. ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு மாதிரி யாகத் தோன்றுகிருய். ஒருசமயம் எல்லாத் தத்து வங்களேயும் கடந்து நிற்கின்ருய். ஒருசமயம் எல்லா வற்றிலும் கலந்து இருக்கின்ருய்.

வேதங்களோ எனில் உன்னேப் பரம்பொருள் என்று போதிக்கின்றது. ஆகையினுல் நீ விகாரமற்ற வனுயும், அழிவில்லாதவனுயும், அப்படியே பலபல ரூபங்களில் தோன்றிக்கொண்டு முடிவில் அழியக் கூடிய இந்த ப்ரபஞ்சத்தில் ஒன்றுடொன்ருய் கலந்து இந்த ப்ரபஞ்சமாகத் தோன்றுகிருய். இதற்கெல்லாம் காரணம் அவித்யா தத்துவம் அன்ருே!

எனவே உண்மையில் இருப்பது ஸத்—சித்—ஆனந்தம் ஆகிய பரம்பொருள் ஒன்றேதாஞகும். அப்பரம்பொருளே முருகப் பெருமாஞகும். உயிர்கள் அனேத்தும் அவனே. ஜடப்பொருள்களும் அவனே தாஞகும்.

'நான்' என்ற சப்தத்தால் சொல்லப்பட்ட ஜீவாத் மாவே பரமாத்மாவாக ஆவான். காரணம், அவனே யின்றி வேறுபட்ட பொருள் ஒன்றுமே இல்லே.

அகங்கார மமகாரங்களினுல் மனதில் தோன்று வதே ப்ரமையாகும். ப்ரமையினுல் பேதஞானம் உண் டாகிறது. எனவே எல்லாவற்றையும் பேதஞான மின்றி முருகனுகவே தியானிப்பது என்பதுதான் உயர்ந்த ஞானமாகும். இந்த அத்வைத ஞானத்தையே நாம் எல்லோரும் பெற யத்தனம் செய்யவேண்டும்.

மேலும் ப்ரும்மத்தை ஆத்மாவாக எண்ணுகின்றவனே ப்ரும்ம நிலையை அடைந்து ப்ரும்மமாக ஆகிருன். ஆதலால் முருகனைத் தியானிக்கும் பொழுது இந்த அண்டசராசரங்களும் முருகப் பெருமானின் ஸ்வருபம் என்றும், அந்த முருகப் பெருமானே ஆத்மவஸ்து என்றும், அனுபவிக்க வேண்டும். அன்னியில் இறைவனை வேறு வஸ்துவாக எண்ணி அநுஸந்தானம் செய்யக்கூடாது.

ஆகையினுல் ஹே முருகா நீ எல்லாவற்றிலும் கலந்து எல்லாமாகத் தோன்றுகிருய்.

நீயே வானுகவும், புனல் அதாவது நீராகவும், பார் அதாவது மண்ணுகவும், கனல் அதாவது நெருப்பாகவும்,மாருதம் அதாவது காற்ருகவும் தோன்றுகின்ருய். ஒவ்வொரு பூதங்களாகத் தோன்றும்பொழுதும், அந்த அந்தப் பூதங்களையே உன்னுடைய நிஜஸ்வருபமாக நினைக்க வேண்டி இருக்கிறது. ஏனெனில் பஞ்ச பூதங்களின் பராக்கிரமம் அளவுக்கடங்காததாக இருக்கிறது. ஆனுல் பரம்பொருளாகிய உன்னைக் கண்டு பயந்து அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம், ப்ருத்வீ என்று சொல்லப்படும் பஞ்சபூதங்கள் தம்தம் காரியங்களைச் செய்து வருகின்றன என்று வேதங்கள் கோஷிக்கின்றன.

இதிலிருந்து முருகப்பெருமானே பஞ்சபூதங்களையும் அடக்கியாளும் சக்திவாய்ந்தவனென்றும், அதற்கு மேலான தத்துவம் என்றும் விளங்குகிறது.

எனவே உன் அருளைப் பானம் செய்து வருகின்ற அப்பர் சுவாமிகள்,

இருநிலனுய்த் தீயாகி நீருமாகி
யியமான ஞயெறியுங் காற்றுமாகி

அருநிலைய திங்களாய் ஞாயிருகி
ஆகாசமாயி அட்டமூர்த்தியாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணுமாணும்
பிறருருவுந் தம்முருவுந் தாமேயாகி
நெருநலையா யின்ருகி நாளையாகி
நிமிர்புன் சடையடிகணின்ற வாறே

என்று புகழ்ந்து துதிக்கின்ருர்.

பஞ்சபூதங்கள் முருகப்பெருமானுடைய உண்மையான ஸ்வருபமில்லை என்று அருணகிரிநாதரும் கந்தலங்காரத்தில்

''வானன்று காலன்று தீயன்று
நீரன்று மண்ணும் அன்று
தானன்று நானன்று அசரீயன்று
சரீரியன்ருே

என்று பாடுகிருர். ஆதலால் உண்மையான பரம்பொருளைச் சுட்டிக்காட்டிக் கூறமுடியாதென்பதே வேதாந்தத்தின் முடிவு ஆகும்.

கந்தர் அநுபூதியில் 'வாஞே' என்று தொடங்கி அது நீயா இது நீயா என்று கேட்கின்ருர். கந்தரலங்காரத்தில் வான் அன்று என்று தொடங்கி கூறப்படும் பொருள் அனைத்தும் முருகப்பெருமான் அல்ல என்று சொல்லுகின்ருர். இவ்விதம் அருணகிரியார் சொல்லுவது உபநிஷத் முறையாகும்.

வேதத்திலும் ''இது பரம்பொருளா? அது பரம்பொருளா?'' என்று கேட்கப்பட்டு ''நேதி நேதி'' என்ற மஹாவாக்யத்திஞல் இது பரம்பொருள் அல்ல, இது பரம்பொருள் அல்ல என்று சொல்லித்தான் இறைவனை

காட்டவேண்டி இருக்கிறதே தவிர, இது இறைவன் என்று சுட்டிக்காட்ட முடிகிறதில்லை.

காரணமோவெனில் இப்பிரபஞ்சம் அனைத்தும் பஞ்சபூதங்களின் ஒன்றுடன் ஒன்று இணைக்கப்பெற்ற சேர்க்கை அன்றோ. இந்த சரீரமோவெனில் பஞ்சபூதங்களின் சேர்க்கையினால் உண்டானதாகவே ஆகும். ஆதலால் "நான்" என்று சொல்லப்படும் "ஆத்மா" சரீரமாக ஆகாது. எனவே சரீரமும் ஜடப்பொருளாகவே ஆகிறது. இவையெல்லாம் எவ்விதம் ஆத்மாவாக ஆகமுடியும்.

எனவே முருகப்பெருமான் பஞ்சபூதங்களின் ஸ்வரூபம்போல் தோன்றினாலும் உண்மையில் பரம் பொருளே ஆவான்.

மேலும் "ஞானோ தயமோ" என்று முருகனைக் கேட்கின்றார் அருணகிரியார்.

அஹம் ப்ரம்மாஸ்மி என்று அதாவது நான் ப்ரும்மமாய் இருக்கிறேன் என்று உண்டாகும் சாஸ்திர ஞானத்தின் நிலை உன் ஸ்வருபமா அல்லது உன் ஸ்வருபத்தை விளக்கும் சாஸ்திரஞானம் உன் ஸ்வருபமா? அல்லது சாஸ்திரத்தினால் ப்ரதிபாத்யமாக இருக்கும் வஸ்து "நீ" என்று உண்டாகும் அறிவுதான் உன் ஸ்வருபமா?

அனைத்தும் உன் ஸ்வருபமாக ஆகமுடியாது ஏனெனில் வேதங்களுக்கு நீ விஷயமாகாதவனாக இருக்கின்றாய். உண்மையில் உயர்ந்த தத்துவம் வேதமாக இருப்பதால் ப்ரம்மாவான நான்முகன் உன்னை ஒரே சமயத்தில் நாலு வேதங்களினால் அழைத்தபோதிலும் கூட அந்த வேதங்கள் உன்னை அறியமுடியாமல்

ஐயா! என ஓங்கி

கதறும் வண்ணம் ஆழ்ந்து அகன்று நின்ற நுண்ணி யனுன பரம்பொருள் அல்லவா நீ—அதனுல் நவில் நான் மறையாக நீ ஒரு காலத்திலும் ஆகமாட்டாய். ஏனெனில்,

**யஸ்ய: நிச்ஸ்வஸிதம் வேதா:**

என்ற சாஸ்திரமானது உன்னுடைய மூச்சே வேதங் கள் என்று போதிக்கின்றது. எனவே உனது மூச் சாகிய வேதங்களை ரக்ஷிப்பதையே ஒவ்வொருவரும் பணியாகக்கொள்ள வேண்டும்.

இதன் கருத்தோவெனில் வேதசிகரமாகிய உப நிஷத்துகளின் வழியைப் பின்பற்றியே உன்னை சகுண மாகவோ, நிர்குணமாகவோ அநுபவிக்க முயல வேண்டும்.

இந்தத் தத்துவத்தையே இறைவனின் பூர்ண அருளைப்பெற்ற நக்கீரர் தாம் இயற்றிய திருமுரு காற்றுப் படையில்

அந்தணர் வெறுக்கை
அறிந்தோர் சொன்மலை

என்று கூறியிருக்கிறுர். பொருளோவெனில் அந் தணர் பெருஞ்செல்வமே! அறிவுடையோரின் புகழ் மலையே! என்று அறியவேண்டும்.

மேலும் அந்தணர்கள் உன்னுடைய மூச்சாகிய நான்கு வேதங்களுடைய சிகரமாகிய உபநிஷத்துக் களின் வழியாக உன்னைத் துதித்து செல்வமாக அநுப வித்து வருகிறுர்கள்.

அப்பேர்ப்பட்டவர்களுக்கே குமரன் செல்வக் குமரனுக இருந்து வருகிறுன். இதனுலேயே "அந்த ணர் வெறுக்கை" என்று சொல்லி, அதாவது அந்தணர்

கள் ஓதிவரும் நான்கு வேதங்களுடைய சிகரமாகிய உபநிஷத்தின் வழியாக முருகனை ஸ்துதித்து அறிந்து செல்வக்குமரனை அடைந்து அநுபவிப்பதே உத்த மோத்தமமான சிறந்தமுறை என்பதை அஞ்ஞானி களான நமக்கெல்லாம் எடுத்துச் சொல்லி உபதேசித்து அருள்கிறார்.

எனவே ஹே முருகா, நவில் நான்மறையாக நீ ஆகமுடியாது. வேதங்களுக்கு அப்பால் நீ இருந்து வருகிறாய். வேதங்கள் உன் ஸ்வருபத்தைப் போதிக் கின்றதே தவிர வேதங்களாகவே நீ ஆகமாட்டாய்.

அப்பயே யானோ—அதாவது நான் என்ற சப்தத் தால் சொல்லப்பட்ட அசுத்த ஜீவனா? அல்லது சுத்த ஜீவனா? அல்லது பலவிதமான சிந்தாந்தங்களை வைத் துக்கொண்டு இறைவனை அறிய முயலுகின்ற ஜீவாத் மாக்களா? அல்லது பல்வேறு அவஸ்தைகளில் மாறி மாறி சுகதுக்கங்களை அநுபவித்துவரும் ஜீவனா? அல்லது மனோதத்வமே ஜீவதத்வமென்று அநுபவித்து வரும் ஜீவனா? அல்லது ஜீவாத்மா வேறு பரமாத்மா வேறு என்று உபாஸித்து வருகின்ற ஜீவனா? அல்லது பரமாத்மாவில் ஜீவாத்மா அடக்கம் என்று தத்வத்தை தழுவிவரும் ஜீவனா? அல்லது பரமாத்மாவினுடைய அம்சமே ஜீவாத்மா என்று ஸாதிக்கின்ற ஜீவனா? உறையற்ற இறைவனை உறை செய்கின்ற ஜீவனா? இன்னும் பல்வேறு மதங்களை ஸ்தாபித்துக்கொண் டிருக்கிற ஜீவனா?

அல்லது மனோதத்வம் நீயா? புத்திதத்வம் நீயா? மனதானது எல்லாவற்றிற்கும் மூலகாரணமாக இருப்ப தால் பிராணிகள் இறந்து கொண்டும் பிறந்துகொண் டும் இருக்கின்றன. இதற்கெல்லாம் மூலகாரணமாக

இருக்கிற மனோதத்துவம் நீயா? என்று சொல்லி அனைத்தும் முருகப்பெருமானுடைய ஸ்வருபமாக ஆக முடியாதென்ற உன்னதமான சிறந்த தத்துவத்தை, "நீயே நான்–நானே நீ" என்று ஜீவப்ரும்ம ஐக்ய ஸாக்ஷாத்காரத்தை போதிக்கின்ற பரம தாத்பர்யமாகக் கொண்ட தத்வமஸி என்ற மஹாவாக்கியத்தின் பொருளேதானாகும் முருகப்பெருமான் என்பதனை,

என்னை ஆண்ட இடம்
தான்—ஓ!!!

என்பதினால் ஸித்தாந்தம் செய்கிறார்.

மேலும், சிற்றின்பத்தினையே பேரின்பமெனக் கருதி பொய்யெல்லாம் மெய்யென்று புணர் முலையார் போகத்திலேயே தமது வாழ்நாளைக் கழித்து வந்துகொண்டிருந்த அருணகிரிநாதரை முருகப்பெருமான் கை கொடுத்து தூக்கிஆட்கொண்டு "சும்மா இரு சொல் அற" என்ற மந்திரத்தை அருளி ஆட்கொண்ட இடமே திருவண்ணாமலை என்பதையும் நினைவூட்டுகிறார்.

இங்கே சிவபெருமான் ஒரே அக்கினிக் குழம்பாய் விளங்கி வருகிறார், இத்தகைய சிவபெருமானைத் திருமாலும் நான்முகனும் "காணஒண்ணாத பொருள்" என்று போற்றி ஆணவமற்றவர்களாக ஆனார்கள்.

அகங்காரமும் மமகாரமும் இருக்கும் வரையில் இந்த நச்வரமான ஜகத்தானது தோன்றிக் கொண்டேயிருக்கும். இதனால் பிராணிகள் ஈச்வரன் வேறு–ஜீவன் வேறு என்றுதான் உபாஸித்து வருவார்கள். ஈச்வரனைக்காட்டிலும் ஜீவன் வேறல்ல என்ற அத்வைத ஞானத்தினால் இறைவனை ஆத்மஸ்வருபமாக உபாஸிப்பவர்களுக்கும் ஜகத்தானது பாஸிக்கிறதில்லை. எல் பரம்பொருள் என்ற ப்ரும்மநிலையை அடைவார்கள்.

இந்த அத்வைத ஞானத்தைப் போதிக்கும் 'தத்வமஸி' என்ற மஹாவாக்கியத்தின் பொருளேப் போதிக்கின்ற "சும்மா இரு சொல்அற" என்ற மந்திரத்தை அருந்தமிழ் மொழியில் முருகப்பெருமான் அருணகிரிநாதருக்கு உபதேசித்தருளிய நிலையைத்தான்–பாட்டில்,

என்னே ஆண்டஇடம்தான்

என்று சொல்லி, 'ஓ' காரத்தினுல் ஆச்சர்யத்தையும், ஆனந்த அநுபூதியையும், முருகனுடைய அருள் வைபவத்தையும் புகழ்கிருர்.

எனவே இப்பாட்டின் பொருளே நண்குணர்ந்து அதை விடாமல் அனுஸந்தானம் செய்வதே ஆத்ம ஞானத்தைப் பெறுவதற்கு அந்தரங்க ஸாதனமாக இருந்து வருந்துவருகிறதென்பதில் ஐயமில்லே.



# ஸம்ஸாரபாசம் ஒழிய

4



வளைபட்ட கைமாதொடு மக்கள் எனும்
தளைபட்டு அழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூர் உரமுங் கிரியும்
தொளைபட் டுருவத் தொடு வேலவனே.

**பதவுரை**

கிளைபட்டு—(தன்) சுற்றத்தினர் சூழ, எழு—போருக்கு எழுகின்ற, சூர் உரமும்—சூரபத்மாஸுரனுடைய மார்பும், கிரியும்—கிரவுஞ்ச மலையும், தொளைபட்டு உருவ—தொளைத்துக் கொண்டு ஊடுருவிச் செல்லும்படியாக, தொடு—விடுவித்த அதாவது தொடுத்த, வேலவனே—வேல் ஆகிய ஆயுதத்தை உடையவனே, வளைபட்ட—வளையல்களை அணிந்த, கை—கைகளையுடைய, மாதொடு—மனைவியொடு, மக்கள் எனும்—புத்திரர்கள் என்று சொல்லப்படும், தளைபட்டு—பந்தத்தில் அகப்பட்டு, அழிய—(நான்) அழிந்துபோவது, தகுமோ—(உனக்கு) ஞாயமாகுமா, தகுமோ—ஞாயமாகுமா? (இவ்விதம் நான் அழிந்து போவது ஒருபொழுதும் ஞாயமே ஆகாது என்பது பொருள்.)

**தாத்பர்யம்:**

ஹேமுருகா, நானேவெனில் ஆத்ம அனாத்ம விவேகமில்லாமல், குருடன் பள்ளத்தில் விழுவதுபோல், உண்மையான உன் ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ள எண்ணமில்லாமல் அங்குமிங்கும் அலைந்து கொண்டு இருக்கிறேன். என்னுடைய மனைவி, மக்கள், உறவினர்கள் இவர்களிடத்தில் எனக்கு உண்டாகும் ஆசா பாசங்களால் கட்டப்பட்டு காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் முதலிய சத்துருக்களுடைய வசத்தில் அகப்பட்டு, விவேகத்தை இழந்தவனாய் கேவலம் இல்லற வாழ்க்கையில் சுழன்று வருகிறேன்.

தவிர ஞானமற்றவனாய் இருந்து கொண்டு காம பாசத்தாலும், கர்மபாசத்தாலும் கட்டுப்பட்டு மனைவி மக்கள் இவர்களிடமிருந்து உண்டாகும் சுகத்தையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு ஜன்மாவை வீணாக்கி வருகிறேன்.

மாயையானவள் என்னை இந்த ஜகத்தில் நித்யமான வஸ்து எது, அப்படியே அநித்யமான வஸ்து எது? என்று வேதாந்த விசாரணை செய்ய விடுவதில்லை.

இவ்விதம் நான் இருக்க, ஹே முருகா உன் சரணங்களை எப்பொழுதுதான் நான் காண்பேன்? உன் பெருமைகளை எப்பொழுது புகழ்ந்து பாடப் போகிறேன். என் மனதை நிர்மலமாகச் செய்து எப்பொழுது நீ என்னை ஆட்கொள்ளப் போகிறாய்?

என் வாழ்நாள் முழுவதும் நான் "என்னுடைய மனைவி—என்னுடைய பிள்ளைகள்" என்று சொல்லிக்

கொண்டே இந்த ஸம்ஸார ஸாகரத்தில் கஷ்டப்பட வேண்டுமா ஐயனே.

ஹே முருகா, பெண்களுடைய கைகளில் அணிந்து இருக்கும் வளையல்களுடைய சப்தங்களைக் கேட்கும் பொழுது நான் என்னுடைய புத்தியை இழந்தவனாய் காமப்பரவசனாகி சிற்றின்பத்தையே மேலானதாகக் கொண்டு பெண்களுக்கு அடிமையாக இருந்து விடுகிறேனே தவிர, உன் ஸ்வரூபத்தைத் தியானிப்பதற்கு இவைகள் எல்லாம் விக்கினமாக இருக்கின்றன என்று எண்ணுகிறதில்லை. இதற்குக் காரணம் ஸ்திரி சாபல்யத்தைத் தவிர வேறொன்றுமே இல்லை. நான் அனுபவித்து வரும் கஷ்டத்திற்கு எல்லையே இல்லை. நீ தான் எனது துக்கத்தைப் போக்கடித்தருள வேண்டும்.

மேலும் வளைபட்ட கைமாதொடு என்று சொல்லுகிறார்.

பெண்கள் அணிந்து கொள்ளும் ஆபரணங்களில் வளையல்களாகிய ஆபரணமே உயர்ந்த மங்களகரமான ஆபரணமாகும். வளையல்கள் அற்ற கைகளைத் தாலியற்ற கழுத்துகளுக்குத்தான் ஒப்பிடவேண்டும். எனவே எந்த ஆபரணம் இருந்தாலும் வளையல்களாகிய ஆபரணம் இல்லாதுபோனால், மற்ற ஆபரணங்கள் சோபிக்கவே சோபிக்காது. எனவே வளையல்களை இங்கு உபலக்ஷணமாகக் கூறப்பட்டது. ஆதலால் ஒருத்தி வளையல்களை அணிந்திருந்தால், அவளைப் பார்த்து பெரியோர்கள் எல்லாம் நிறைந்தவள் என்று சொல்லுகிறார்கள். இதனாலேயே உலகில் வளைகாப்பு பண்டிகை என்று கொண்டாடுகிறோம். இவ்வித மனோ நிலையில் இல்லற வாழ்கையில் இருப்பவர்கள் தலைபட்டு அழியமாட்டார்கள். ஆனால் காமப் பரவ

சஞுகி உழலுபவனே மனைவி மக்கள் என்னும் பாசத்திஞல் சூழ்ந்து துன்பத்தினை அனுபவிக்கிருன்.

மேலும் வளையல்கள் என்பது வ்யாமோக சக்தியினைக் கொண்டதாக இருக்கிறது. வளையல்கள் பெண்களுக்கு அலங்காரமாய் இருப்பதுமல்லாமல் வசீகர சக்தியினையும் கொண்டதாக இருக்கிறது.

வளையல்களை அணிந்து கொண்டிருக்கும் பெண்கள், அவர்கள் அணிந்து கொண்டிருக்கும் வளையல்களுக்குக் கட்டுப்படுவதில்லை. ஆஞல் அவ்வளையல்களை அணிந்து கொண்டிருக்கும் கைகளினைக்கண்டு புருஷர்கள் காமவசத்திஞல் கட்டுப்பட்டு விடுகிருர்கள். அதஞல் அவர்கள் புத்தியை இழக்கிருர்கள். சிற்றின் பத்தில் மூழ்கி விடுகிருர்கள்.

தவிர ப்ரயத்னத்திஞல் வளையல்கள் அணிந்து கொள்ளப்படுகிறது. ப்ரயத்னத்திஞல் அவிழ்க்கப்படுகிறது. அதுபோலவே ப்ராணிகள் கர்மவினையாகிய மனைவி மக்கள் என்று சொல்லப்படும் வளையல்களை அணிந்து கொள்கிருர்கள். கர்மவினைகளைப் போக்கடிக்க முருகப்பெருமாஞுக்கே சக்தியுள்ளது.

பாசமாம் பற்று அறுத்துப்
பாரிக்கும் ஆரியனே

என்று திருவாசகம் புகழ்கிறது. ப்ராரப்த கர்மாவையும் போக்கடிக்கும் சக்தி வாய்த தெய்வமல்லவா முருகப்பெருமான்.

எனவே ஹே முருகா, நீ கருணை வைத்தால்தான் நான் பெண்ணுசை, மண்ணுசை, பொன்னுசை, மக்கள் ஆசை இவைகளை விட்டவஞக ஆவேன். இல்லையேல் இந்த இல்லற வாழ்க்கையில் பிறந்து கொண்டும்

இறந்து கொண்டும்தான் இருப்பேன். இது உனக்கு நியாயமாகுமா! சூரபத்மனின் மேல் வேல் வீசி எறியும் ஹே முருகா, நான் ஸம்ஸாரஸாகரமாகிய இந்த பிறவிக் கடலில் உழன்று கொண்டு இருப்பது நியாயமாகாது ஐயனே. உன்னுடைய பராக்கிரமமோ அதி ஆச்சர்யக ரமானது. மிகவும் பயத்தைக் கொடுக்கக்கூடியது.

அதிபராக்கிரமசாலியான சூரபத்மன் தன்னுடைய இருசகோதரர்களான தாரகாஸுரன் சிங்கமுகன் இருவர்களுடன் தன்னுடைய மாயாசக்தியைக் கொண்டு உன்னுடன் போர்செய்ய எழும்போது மஹாமந்திரமய மான வடிவேலை எடுத்து அவர்களின் உடம்பில் ஊடுருவிச் செல்லும் வண்ணம் விட்டு எறிந்தாயே, என்னே அதன் வியப்பு.

அவ்விதமே மலைஉருவாய் வந்த கிரௌஞ்சாசுரனையும் தூள் தூளாக உன் வடிவேலினுல் உடைத்து எறிந்தாய்.

இதையெல்லாம் பார்க்கும்போது உன்னுடைய கடாக்ஷவீக்ஷணம் ஒன்றே என்னுடைய மூவினைகளையும் அறுத்துத் தள்ளி உன்னுடைய பொன்னடிகளில் என் மனதை வைத்து நிரந்தரமாய் உன்னை அனுபவிக்கச் செய்வதற்குப் போதாதா.

சூரபத்மாஸுரனே வெனில் பரமேஸ்வரனைக் குறித்து அத்யுக்கிரமான தபஸ்ஸை வெகுகாலம் செய்து சிவபெருமானுடைய அநுக்கிரகத்தால் எண்ணற்ற வரங்களைப் பெற்றுன். ஈரேழு பதிநான்கு லோகங்களையும் தன் அதினத்தில் வைத்துக்கொண்டு மஹாமாயாவியாகவும் காமரூபியாகவும் விளங்கிக் கொண்டு உலகமனைத்தையும் துன்புறுத்திக் கொண்டே இருந்தான்.

இத்தகைய சக்தியும் மஹாமகிமையும் தாங்கிய சூரபத்மாஸுரன் முருகப்பெருமானுடன் போர்செய்யும் பொழுது சலித்தான் இல்லை. அவனுடைய சைனியங் களானது அழிய அழிய கிளைபட்டு எழுந்துகொண்டே இருந்தன பலரூபங்களில். அவனும் பலரூபங்களை எடுத்துக் கொண்டே இருந்தான். கணக்கற்ற கிளைகளை யுடைய ஒரு பெரிய மாமரம் போல் தோன்றினுன். மாயா சக்தியினையுடைய ஒவ்வொரு கிளைகளும் ஒவ்வொரு சூரபத்மாசுரன் போல் தோன்றி முருகப் பெருமானின் வேலினுல் வெட்டப்பட்டு அழிந்தது. எனினும் தன்னுடைய குலகுருவான சுக்கிராசார்யாரி டமிருந்து எண்ணற்ற யுத்த தந்திரங்களையும், போர் சூழ்ச்சிகளையும் முறைப்படி கற்றுணர்ந்த அம் மாபெரும் சக்தி வாய்ந்த சூரபத்மாஸுரனே வெனில் கிளைபட்டு ஒன்றின் பின் ஒன்ருகத் தோன்றிக் கொண்டே இருந்தான்.

உண்மையில் சூரபத்மாஸுரனுடைய பராக்கிர மத்தை நினைக்கும்கால், கோடிக்கணக்கான ராவண னுடைய பராக்கிரமும், மஹிஷாஸுரனுடைய பராக்கிர மும், அப்படியே ஹிரண்யகசிபுவினுடைய் பராக்கிர மும், திரிபுராசுரர்களுடைய பராக்கிரமும், அவனுடைய முன்னிலையில் தலைவணங்கி நிற்கின்றது என்ருல், அந்த சூரபத்மாஸுரனுடைய மகிமையை எடுத்துக் கூற ஆயிரம் நாவுபடைத்த ஆதிசேஷனும் சக்தியற்ற வராகவே ஆகும்போது நம்மால் எவ்விதம் வர்ணிக்க முடியும் என்று பாட்டில் அருணகிரியார் நாவெழாமல்

கிளைபட்டு எழுசூர்

என்று சொல்லி நமக்கு எல்லாம் சூரபத்மாஸுரனுடைய பராக்கிரமத்தைநினைவூட்டி அதன்மூலமாக இந்தசூரனை

ஸம்ஹாரம் செய்யமுடியாமல் தத்தளித்துக்கொண் டிருந்த சிவன், விஷ்ணு, பிரும்மா என்ற மும்மூர்த்தி களின் பராக்கிரமத்தை நினைவூட்டி, அதாவது இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி—அப்படியே ச்ருஷ்டி–ஸ்திதி–ஸம்ஹாரம் என்பதினை நினைவூட்டி, அப்படியே மும்மூர்த்திகளும் ஒன்றுசேர்ந்து ஒரே மூர்த்தியாய் விளங்கினுலும்கூட அந்த சூரனை ஸம்ஹாரம் செய்ய முடியாது என்பதினையும் நினைவூட்டி, மும்மூர்த்திகளை யும் ஆட்டிவைக்கும் சக்திவாய்ந்த சக்திவேல் ஆகிய வெற்றிவேல் என்பதினையும் நினைவூட்டி, அப்படியே அம்மாபெரும் வடிவேலைத் தமது திருக்கரத்தில் தாங்கி வருகிருர் முருகப்பெருமான் என்பதினை நினை வூட்டி, மானிடராகப் பிறந்த ஒவ்வொருவரும் ஸம் ஸாரக் கடலிலிருந்து கரையேறுவதற்கு முருகப்பெரு மானின் புகழையே வாழ்நாள் முழுவதும் பாடும் பணி யாகக் கொள்ளவேண்டும் என்பதினை ஸித்தாந்தம் செய்கிருர் அருணகிரிநாதர்.

மேலும் கந்தர் அநுபூதியில் சொல்லப்பட்ட ஒவ் வொரு பதங்களும் முருகப்பெருமானுடைய பெருமை யையே எடுத்துக் கோஷிக்கின்றதாகவுள்ளது. எனவே பாட்டில் "தொடு" என்று சொல்லப்பட்டிருக்கும் விசேஷணமானது முருகப்பெருமானின் வேலின் அபூர் வமான சக்தி விசேஷத்தைப் போதிக்கின்றது. இதனுல் தான் முதல் பாட்டிலேயே வேலைப்பற்றிப் பாடும் பணியே பணியாக அருளவேண்டும் என்று பிரார்த்திக் கிருர்.

கிளைபட்டு எழும் சூரபத்மாஸுரனுடன் முருகப் பெருமான் தன்னந்தனியாக நின்று போர் செய்யும் வைபவத்தையே "தொடு" என்ற சொல்லால் அருண கிரியார் சொல்லித் தம்முடைய ஞானக்கண்ணினுல்

கிளி ரூபத்தில் செல்வக்குமரனுடைய வலதுதோளில் அமர்ந்து இருக்கும் நிலையை அடைந்து பார்த்து அனுபவிக்கிறார்.

போர்க்களத்தில் முருகப்பெருமான் தமது கையிலிருக்கும் சக்திவேலை சூரன்மேல் எறிவதையும், அப்படியே அந்த வேல் சூரனின் மார்பில் ஊடுருவிச் சென்று திரும்பி முருகனின் கையில் வருவதையும், மறுபடியும் வேறு ஸ்வருபத்தில் சூரனானவன் கிளைபட்டு எழுவதையும், அதற்குள் செல்வக்குமரனுடைய கையிலிருந்து வேலானது சூரனைக்குறித்துப் பாய்வதையும் பார்த்தால் சூரபத்மாஸுரனுடைய அதிபயங்கரமான மலைபோன்ற பலபல ரூபங்களைக்கொண்ட தலைகள் ஒன்றின்பின் ஒன்ருக உருண்டு உருண்டு ஓடுகின்ற ஒரு வைபவம்தான் தெரிகின்றதே தவிர, உண்மையில் எவ்விதம் பயங்கரமான சூரனுடைய தலைகள் உருளப்படுகின்றன, வெட்டப்படுகின்றன என்பது ப்ரும்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகளுக்கும், அப்படியே முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும், அசுரர்களுக்கும், இதையெல்லாம்விட முருகனின் முன்னிலையில் நின்று தன்னந்தனியாகப் போர் செய்யும் சூரபத்மாஸுரனுக்கும் வியப்பை அளிக்கும் வண்ணம் வேலைசெய்துவரும் மஹா மகிமைதங்கிய வடிவேலானது ஒருவருடைய கண்களுக்கும் புலப்படாமல் சூரன்மேல் ஒன்றின்பின் ஒன்ருகப் பாய்ந்துகொண்டே இருந்தது. ஆனல்

சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்

என்று இறைவனைத் திருவாசகம் அழைக்க, தஞ்சத்தருள் சண்முகனுன செல்வக்குமரன் தன்னுடைய

புன்னகை பொருந்திய இளம் பால ரூபத்தை மறைக் காமல் சூரஸம்ஹாரத்தைத் தம்முடைய திருவிளை யாடலாகவே மும்மூர்த்திகள் உள்பட முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் காட்டி அருளினர்.

ஆனல் போர்க்களத்தில் வேலின் வேலையானது பரம ரகஸ்யமாகவே இருந்தது. கிளைபட்டு எழுகின்ற அதிபயங்கரனுன சூரனுடைய நிலையைப் பார்த்த தேவர்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து ஒரே மனதையுடை யவர்களாகி எண்ணலானுர்கள்.

ஒன்றின்பின் ஒன்ருகவும், ஒரே சமயத்தில் ஆயி ரக்கணக்காகவும் பயங்கர ரூபங்களைக் கொண்டு போர் செய்யும் சூரபத்மனையும், அப்படியே அவனுடைய பயங்கர ரூபங்களை இமைப்பொழுதில் மின்னல்போல் அழித்துத் தள்ளும் வெற்றிவேல் கண்களுக்குப் புலப் படாமலிருப்பதையும் பார்த்தால், நிச்சயமாக முருகப் பெருமான் விஸ்வ ரூபத்திலிருந்துகொண்டுதான் போர் செய்கின்ருர், இருந்தும் நம் கண்களுக்குப் பாலமுருக ஞகவே தோன்றுகிருர். இது செல்வக்குமரனின் என் றென்றும் உடன்இருந்துவரும் வற்ருத மாறிலா கருணையே ஆகும். அம்மாபெரும் கருணையே தேவ ஸேனுதிபதியாக நம் கண்முன் பாலகுமரனுக இருந்து வருகிறது.

இம்மாபெரும் கருணையை
தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி

என்று சொல்லிச் சொல்லி உள்ளம் உருகுகிருர் மாணிக்கவாசக சுவாமிகள்.

மேலும் "கிளைபட்டு எழுசூர்" என்பதினுல் பிறப்பு இறப்பு என்பதற்கு மூலகாரணமான மூலாக்ஞானம்

என்று பொருள் கொண்டு, அந்த மூலாக் ஞானத்தை நாசம் செய்யத் திருப்பித் திருப்பி வேதாந்த விசாரம் செய்யவேண்டும் என்பதினை எடுத்துக்காட்ட பாட்டில் ''தொடு'' என்ற பதத்தைப் பிரயோகம் செய்திருக்கிறார் அருணகிரியார். எனவே சூரனை மூலாக் ஞானம் என்றும், அந்த மூலாக் ஞானமான சூரனை அழிக்க வந்த ப்ரம்மக் ஞானமே முருகனுடைய வேல் என்றும், அந்த ப்ரும்ம ஞானத்தை உபதேசித்து அருள வந்தவனே ஞான பண்டிதனாகிய முருகப்பெருமான் என்றும் வேதங்கள் கோஷிக்கின்றன. இதனால் ஜனன மரணத்திற்கு வேராக இருக்கின்ற மூலாக் ஞானத்தை அழிக்க ப்ரும்ம ஞானம் ஒன்றினால்தான் முடியுமே தவிர அன்னியில் வேறொன்றினாலும் முடியாது.

கேவலாத் ஞானாதேவ மோக்ஷ:

என்று, அதாவது கேவலம் ஞானம் ஒன்றினால்தான் மோக்ஷம் என்று உபநிஷத் கருணையுடன் நமக்கெல்லாம் வழி காட்டுகிறது.

ஆகையினால் வேலவனே, நானோவெனில் மனைவி மக்கள் சுற்றத்தினர், அப்படியே பொருள் ஆசை, மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை இவைகளினால் கட்டப்பட்டு கேவலம் சிற்றின்ப வாழ்க்கையையே மெய்யென்று நம்பி, என்னுடையது, என் மனைவியுடையது, என் மக்களுடையது என்று சொல்லிக்கொண்டே இருந்து வருகிறேன். இதனால் கர்ம பந்தமானது என்னை மேன்மேலும் அடைகிறதே தவிர, நான் கர்ம பந்தமற்றவனாக ஆகிறதில்லை. மேன்மேலும் பந்தத்தைத் தரும் கர்மாவையே செய்து கொண்டு இந்த இல்லற வாழ்க்கையில் உழன்றுகொண்டு நாளுக்கு

நாள் உன் சிந்தனையற்றவனாக ஆகி உன்னை ஒரு தரம் கூட ஒரு நாளைக்கு நினைப்பதில்லை.

முடிவில் பிறந்து கொண்டும் இறந்து கொண்டும் சக்கரம் சுழல்வதைப்போல் அல்லல்பட்டுக் கொண்டிருக்கிறேன். இவ்விதம் நான் இருக்க நீ என்னிடம் உன் கருணையைக் காட்டமாட்டாயா. நீ உன் கருணையை என்னிடத்தில் காட்டாமல் இருப்பது உனக்கு அழகு ஆகுமா? முருகா நீயே சொல்.

இதனால் துர்லபமான மானிட ஜன்மாவை அடைந்த ஒவ்வொருவரும் முருகப்பெருமானுடைய பஜனத்தி லீடுபட்டு முருகப்பெருமானுடன் கலந்து ஜன்மாவை ஸபலம் செய்து கொள்ள வேண்டும். இதையே ஈசா வாஸ்யோ உபநிஷத்தும், கேனோபநிஷத்தும் ஒன்று சேர்ந்துகொண்டு முருகப்பெருமானைப் போற்றுகின்றன. எனவே முருகனுடைய அனுக்கிரஹமில்லாமல் போனால் யார்தான் என்ன காரியம் செய்ய முடியும்? எண்ணிலாத காலமாய் எண்ணிலாத பிறவிகளைப் ப்ராணிகள் எடுத்துக்கொண்டே இருக்கின்றன. இறைவனின் திருவடியை ஏதோ சிலர்தான் அடைகிறார்கள்.

ஆகையினால் கர்மபந்தமான விலங்குகளினால் பூட்டப்பட்டு புனரபி ஜனனம் புனரபி மரணம் என்று உழன்றுகொண்டு கதியற்றவனாக இருக்கிறேன். நீயோ எல்லா உயிர்களையும் அடக்கி ஆள்பவன். என்னுடைய அரிதான மானிடப் பிறவி உன்னுடைய மகிமையைப் பற்றிப் பேசாமல் வீணாய் போய்விடக்கூடாது. ஐயனே! கருணைக் கடலான நீ இருக்க நான் அழிந்து போகவா? இது நியாயமாகாது.

எனவே என் உயிருக்கு உயிராய் நான் போற்றி வரும் செல்வக்குமரனே, உன்னை அல்லும் பகலும்

நினைந்து நினைந்து உள்ளுருகும் அடியார்களின் துன் பங்களை வேருடன் அறுத்துத் தள்ளும்போது, நான் மட்டும் ஏன் இந்த ஸம்ஸாரமாகிய பெருங்கடலிலே மூழ்கிக் கரை காணுமல் தவித்துக்கொண்டு இருக்கி றேன். மூலாக்ஞானமாகிய விலங்குகளினுல் பூட்டப் பட்டு, அதனிலிருந்து விடுபட்டு வெளிவரமுடியாமல் தவித்துக்கொண்டு இருக்கிறேன். கர்ம வினையானது உன்னை அறியமுடியாமல் மறைத்துவைக்கிறது. உன்னை ஆத்மாவாக வைத்து அத்வைத பாவத்தில் தியானம் செய்ய விடுகிறது இல்லை. நீ குகையென்று சொல்லப்படும் மனதாகிய குகையில்தான் புலப்படு வாய் என்பதினை நினைவூட்டுகிறதில்லை. ஸகல கர்ம வினைகளும் முடிவில் ஆத்ம ஸ்வருபத்தில் லயத்தை அடைகின்றது. எனவே ஆத்ம ஸ்வருபமாக நீ இருக் கிருய். ஆதலால் உன்னை உபாஸிப்பதே மேலான தத் துவமாகும் என்ற உத்தமோத்தமமான எண்ணங்கள் என் மனத்தில் தோன்றுகிறதில்லையென்று புலம்பிப் புலம்பி அழுகிருர் அருணகிரிநாதர்.

இத்தகைய கர்மவினையினுல் கட்டப்பட்டு அல்லல் படும் நிலையைத்தான் பாட்டில் அழகாக "தளைபட்டு அழியத் தகுமோ? தகுமோ?" என்று கூறியிருக்கிருர்.

அதனுல், ஹே ஞானபண்டிதனே, அறிவுக் கடலே, அன்புக்கடலே நான் இப்போது உன்னிடம்வேண்டுவது அஹம்ப்ரம்மாஸ்மி என்ற நிலையை அடைய ப்ரதிபந்தக மான விலங்குகளான மூன்று வினைகளையும் ஒன்றின் பின் ஒன்ருக உன் வடிவேலினுல் அறுத்துத் தள்ளி என்னைத் தடுத்து ஆட்கொள்ளவேணும் என்பதே தானுகும்.

மேலும் ஆணவத்தின் ஸ்வருபமே சூரபத்மா ஸுரன். அந்த ஆணவமாகிய சூரபத்மாஸுரனை

அழிக்க வந்த மாபெரும் சக்தியே வேற்படையாகும். வேல் ஸ்மரணத்தினுல் அடைய முடியாததோ ஆகா ததோ ஒன்றுமே இல்லை.

ஆதலால் வேற்படையைத் தாங்கிவரும் முருகப் பெருமானிடம் நமக்குப் பாசம் வருமேயாகில் அக் கணமே ஸம்ஸாரபாசம் அறுபட்டுவிடும்.

எனவே 'நான்—என்னுடையது' என்ற எண்ண மானது நம்மை மனைவி மக்கள் இன்னும் உலக இச்சைகள் ஆகிய பாசத்தளையில் அகப்படச் செய்து அல்லல்படுத்திவருகிறது. இதனுல் நாம் எல்லையில் லாத மனோவேதனையுடன் ஆயுள்நாள் முழுவதும் துன் பத்தினை அனுபவித்துக்கொண்டேயிருக்கிறோம். இதன் விளைவாக செல்வக்குமரனை நினைப்பதில்லை.

எனவே ஸம்ஸாரபாசத்திலிருந்து நம்மை விமுக்தர் களாகச் செய்வதற்கு இந்தப்பாடலே மஹாமந்திரமாக விளங்குகிறது என்பதினை உள்ளங்கை நெல்லிக்கனி போல் எடுத்துக்காட்டுகிருர் நம்மைக் கைகொடுத்துத் தூக்க வந்த அருணகிரிநாதர்.



# உலக மாயையை ஒழிக்க

# 5



மகமாயை களைந்திட வல்லபிரான்
முகமாறு மொழிந்து மொழிந்திலனே
அகமாடை மடந்தைய ரென்றயரும்
சகமாயையுள் நின்று தயங்குவதே.

**பதவுரை**

வல்லபிரான் — எல்லாம்வல்ல முருகப்பெருமானுடைய, முகம் ஆறும்—திருமுகங்கள் ஆறும், மகமாயை—மஹா மாயைகளை, களைந்திட — போக்கடிப்பதற்காகவே இருந்து வருகிறது (என்ற உண்மையான தத்துவத்தை எல்லோரிடமும்), மொழிந்து — சொல்லி, ஒழிந்திலன்—(அந்த ஆறு முகங்களும் ஆறு மஹா வாக்கியங்களையே போதிக்கின்றன என்ற ஒரு த்ருடமான எண்ணத்துடன் அந்த மஹா வாக்கியங்களைத் திருப்பித் திருப்பி அனுஸந்தானம் செய்து உலக மாயையிலிருந்து) விடுபட்டவனாக ஆகவில்லையே, ஏ— அந்தோ கஷ்டம்:

அப்படியே

மக மாயை — மஹா மாயைகளை, களைந்திட—போக்கடிக்க, வல்ல—சாமர்த்தியமுள்ள, பிரான்—கடவுளான

(முருகப் பெருமான்) முகம் ஆறும்—(தன்னுடைய) ஆறு முகங்களினாலும், மொழிந்தும்—(பலவழிகளில்) உபதேசித்து அருளியும், மொழிந்து இலன்— (அந்தத் தத்துவங்களைத் திருப்பித் திருப்பி சொல்லிச் சொல்லி நினைத்து நினைத்து என்றவாறு) சொல்லாமல் போய்விட்டேனே, ஏ—அந்தோ கஷ்டம், அகம்—வீடு, ஆடை—துணி (பலவிதமான ஆபரணப் பொருள்கள்), மடந்தையர்—மாதர்கள், என்று—என்றவாறு கூறி, அயரும்—முடிவில் வருந்தச் செய்கின்ற, சகமாயையுள்—இந்த ஜகத் ஆகிய மாயையில், நின்று—அகப்பட்டுக்கொண்டு அதாவது உண்மை என்று நம்பி, தயங்குவது—தயங்கிக் கொண்டு இருப்பது, ஏ—ஏனோ! தெரியவில்லை.

**தாத்பர்யம்:**

முன் பாடலினால் 'நான் - என்னுடையது' என்ற எண்ணமே ஸம்ஸாரபந்தத்திற்கு மூலகாரணமென்று உபதேசிக்கப்பட்டது.

எனவே முருகப்பெருமானுடைய பேரின்ப ஸ்வரூபத்தை எல்லா ஜீவகோடிகளும் ஆத்மஸ்வரூபமாக அனுபவிக்க முடியாமலிருப்பதற்கு மூலகாரணம் இறைவனை நமக்குக் காட்டாமல் மறைத்து வரும் சக மாயையின் ஸ்வரூபமானது இந்தப் பாடலினால் சொல்லப்படுகிறது.

எனவே மாயையானது ப்ராணிகளை வ்யாமோகப் படுத்துகின்றது என்பதினால், நாம் அம்மாயையின் வசமாகாமலிருப்பதற்கு முருகப்பெருமானின் ஆறு முகங்களையும் ஆறு மஹாவாக்கியங்களின் ஸ்வரூப மாகவே கருதி பக்திசெய்ய வேண்டும்.

எனவே ஸகல ஜீவகோடிகளையும் ஜயித்து தன் வசமாக்கிக் கொண்ட மஹாமாயையினால் கூட ஜயிக்க முடியாததான அளவற்ற சக்தியோடு கூடின பரம்பொருளே முருகப்பெருமானவர் அன்றோ!

ஹே முருகா, நீயோ வெனில் மாயா அதீதன். மாயையானது உன்னைக் கட்டுப்படுத்துகிறது இல்லை. நீ மாயையை உன் ஆதீனத்தில் வைத்துக் கொண்டு எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளாய் நிற்கின்ருய்.

எனவே ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்று காரியங்களையும் செய்து வருகிற மஹா மாயையைப்போக்கடிக்க நீ ஒருவனே வல்லவனுக இருக்கின்ருய். ஆதலால் 'மாயா' என்ற பதத்திற்கு 'யா' எவள் 'மா' இல்லையோ என்று பொருள் விளங்குகிறபடியால் உண்மையில் ஒரு காலத்திலும் இல்லாமல் இருக்கப்பட்டதை, இருப்பதுபோல் தோன்றச் செய்கின்ற ஓர் அபரிமிதமான சக்தி விசேஷத்திற்கே மாயா தத்துவம் என்று பெயர்.

மேலும், மாயையின் சக்தியைக் கொண்டே ப்ரும்மாவானவர் ஜகத்தை சிருஷ்டி செய்கிருர். மாயையின் சக்தியைக் கொண்டே விஷ்ணுவும் ஜகத்தைப் பரிபாலனம் செய்கிருர். அப்படியே மாயையின் சக்தியைக் கொண்டே ருத்திரனும் ஜகத்தை ஸம்ஹாரம் செய்கிருர். ஆகையினுல் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் அதாவது, படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று காலங்களிலும் மாயையானவள் பாஸிக்கின்ருள்—உண்மையில் இல்லாமல் இருக்கப்பட்டதை இருப்பதாக நினைப்பதே மாயை ஆகும்.

இதனுல் மாயையின் காரியமான இந்த ஜகத்தை ஒட்டி ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் செய்துவருகின்ற ப்ரும்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளையும் அடக்கி ஆளும் சக்தி வாய்ந்த தெய்வமே முருகப் பெருமான். எனவே,

மகமாயை களைந்திட வல்லபிரான்

என்று புகழ்கின்றார்.

அத்தகைய வல்லபிரானாகிய முருகப்பெருமானுடைய ஆறுமுகங்களும், மாயா பந்தத்திலிருந்து நம்மை விடுவிக்க அந்தரங்க ஸாதனமான மஹாவாக்கியங்களையே போதிக்கின்றன.

கர்மாவை அநுஸரித்தே நாம் அதற்கு ஏற்றவாறு ஜன்மாவை எடுக்கிறோம்—கர்மபந்தத்தை இல்லாமல் செய்வதற்கு ஞானமே பரம ஔஷதமாக இருக்கிறது. ஞானம் ஒன்றினால்தான் மோக்ஷம் என்று வேதங்கள் கோஷிக்கின்றன.

இதனால் இந்த ஜகத்தாகிய மாயையிலிருந்து நாம் எல்லோரும் கடைத்தேறவேண்டுமென்று கருணைக்கடலான முருகப்பெருமான் தமது திவ்ய ஆறுமுகங்களினால் அபௌருஷமான நான்கு வேதங்களினாலும், அதன் சிகரமாகிய உபநிஷத்துகளினாலும், அப்படியே இந்தப்புண்ய பூமியில் ஆங்காங்கு அப்ராக்ருதமான மங்கள விக்ரகத்தோடு கூடிய ஸ்வரூபத்தில் அவதரித்து தேவாரம் திருப்புகழ், மற்றும் அனேக ஞான தத்துவங்களை போதிக்கின்ற பாடல்கள் மூலமாகவும், சாஸ்திர நூல்களினாலும் மனச்சாந்தியை அல்லல்படும் ஜீவகோடிகளுக்குத் தந்தருளி இருக்கிறார்.

திருஞானசம்பந்த மூர்த்தியாகத் தோன்றி பாலரூபத்திலிருந்துகொண்டு இன்னிசைத்தேவாரங்களினால் உபநிஷத் அர்த்தங்களை உபதேசித்து தந்தருளிய ஞானமலையன்றோ முருகப்பெருமான்.

இத்தகைய மஹிமையினைக் கொண்டே முருகப்பெருமான் ஞானபண்டிதனாகவும், ஆனஅமுதமாகவும் ஆறுத அன்புமலையாகவும் இருந்துகொண்டு தம்மு

டைய ஆறுமுகங்களினுல், கருணை சொட்டச் சொட்ட உபநிஷத் தத்துவங்களைப் போதித்து மகமாயையி லிருந்து நம்மை விடுபட்டவர்களாகச் செய்கிருர். இம் மாபெரும் கருணையை என்ன வென்று சொல்லுவது?

ஆறுமுகக் கடவுள் தமது ஆறுமுகங்களினுல் உப தேசித்தருளும் தத்துவமோ வெனில்:—

அண்டசராசரங்களையும் ஆட்டிவைக்கும் சேதன மான வஸ்துவே பரம்பொருள் ஆகுமென்றும், அந்தப் பரம்பொருள் இல்லையேல் அணுவும் அசையாது என் றும் போதிக்கின்ற,

ப்ரக்ஞானம் ப்ரஹ்மா

என்று அதாவது பரம்பொருளின் ஸ்வரூப லக்ஷணத் தைப்போதிக்கும் தத்துவமே முதலாவதான மஹா வாக்கியமாகும்.

நான் என்ற சப்தத்தால் போதிக்கப்படும் ப்ரத் யக்ஷ ஆத்மஸ்வருபத்தில் ப்ரத்யக்ஷ ஆத்மானுபவமே ப்ரமாணமானதினுலும், அந்த ப்ரத்யகானுபவ ஆத் மாவே பரம்பொருள் ஆனதினுலும், அந்தப் பரம் பொருள் இடத்தில் ஏற்படும் நிரதிசய ஆனந்தானுப வமே "நான்" என்ற சப்தத்தால் அழைக்கப்படும்பரம் பொருள் என்பதற்கு,

அயமாத்மா ப்ரஹ்மா

என்று போதிக்கும் தத்துவமே இரண்டாவதான மஹா வாக்கியமாகும்.

துக்கஸ்வருபி என்று அனுபவித்துவரும் ஜீவ னுக்கு, ஜீவானுபவத்தைப் போக்கிப் ப்ரம்மானுப வத்தைப் போதிக்கின்ற,

தத்வமஸி

என்ற உபதேசத்தையே மூன்ருவதான மஹாவாக்கிய மாக அறிய வேண்டும்.

முன்காலத்திலும் ஜீவன் ப்ரம்மம்தான், வர்த்த மான காலத்திலும் ஜீவன் ப்ரம்மம்தான், வருங் காலத்திலும் ஜீவன் ப்ரம்மம்தான், என்று மூன்று காலங்களிலும் ஜீவன் ப்ரம்மமாகவேதான் இருக்கிருன் என்ற ஸ்வானுபூதியை எடுத்துக் காட்டும் நிர்த்தாரண வாக்யமே

அஹம் ப்ரஹ்மாஸ்மி

என்று போதிக்கப்படும் நான்காவதான மஹா வாக்கி யமாகும்.

ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் உள்ள பேதத்தை மஹாவாக்கியங்களினுல் போதித்து பேதஞானமானது அவித்யையினுல் உண்டானதே தவிர உண்மையில் ஜீவனும் ஈச்வரனும் ஒரே தத்துவம்தான் என்ற ஜீவ ப்ரம்ம ஐக்ய ஸாக்ஷாத்காரத்தைப் போதிக்கின்ற

ஷேத்ரக்ஞயம் சாபி மாம் வித்தி

என்ற கீதாவாக்கியமே ஐந்தாவதான மஹா வாக்கிய மாகும்.

ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் கேவலம் ஐக்கியத் தைப்போதிக்கின்ற

ஸர்வதர்மான் பரித்தெஜ்ய
மாம் ஏகம் சரணம் வ்ரஜ

என்ற கீதாவாக்கியமே ஆருவதான மஹா வாக்கிய மாகும்.

இவ்விதம் "வல்லபிரான் முகம் ஆறும் மகமாயை களைந்திட" அதாவது மேற்கூறியவண்ணம் ப்ரம்ம

தத்துவங்களை, ப்ராணிகளாகிய நாம் எல்லோரும் கர்ம பாசங்களிலிருந்து விடுபட்டு ப்ரம்மானந்தத்தை அனுபவிக்கும் பொருட்டு உபதேசித்து அருளியும், அதன் பெருமையும் மகிமையும் தெரியாதவனாகவே இருக்கிறேன். அப்படியே உன் மஹாவாக்கியங்களின் பரம தாத்பர்யமே நம்மை ஸம்ஸார பந்தத்திலிருந்து விமுக்தர்களாக செய்வதற்கே ஏற்பட்டது என்று ஒரு தரமாவது என் வாழ்நாளில் சொல்லவில்லை. நீ உபதேசித்து அருளிய தத்துவங்களைத் திருப்பித் திருப்பிச் சொல்லி, இந்தப் பிறவிக் கடலிலிருந்து ஒழிந்திலனே. அந்தோ கஷ்டம்!

வ்ருதா காலக்ஷேபத்தைச் செய்துகொண்டு காலத்தைக் கழித்து வந்தேனே தவிர, உன்னை உள்ளுருகிப் பஜித்தேன் இல்லை, தியானித்தேன் இல்லை, என் நாவினால் உன் பொன்னடிகளைப் போற்றி, பெருங் கருணைப்பேராறே, ஆரா அமுதே, ஆறுபடை வீடுடையோனே, செல்வக்குமரனே, பேராயிரம் படைத்த அருள்மலையே, கலியுகவரதனே, கண்கண்ட கருணைக் கடலே, சிந்தனைக்கரிய சிறந்த தெய்வமே என்று வாயார மொழிந்து மொழிந்து இந்த உலகப்பற்றிலிருந்து ஒழிந்திலன் இல்லை. இதைவிட என்ன துர்ப்பாக்கியம் எனக்கு வேண்டும். நாயினிற்கும் கடையேனாக ஆகிவிட்டேனே.

என் அப்பனே, நின் கருணை பெருக்கெடுத்து ஓடிவர அதனைப் பானம் செய்ய என் புத்திக்குத் தோன்றவில்லையே.

உன்னுடைய அருள் எனக்கு எப்போதும் இருக்க வேண்டுமென்று நான் மொழியவில்லையே. நின் கருணை எனக்கு இந்த அரிதான மானிட ஜன்மாவைத் தந்தும் நான் அதனை உன் பெருமை தெரியாமல் வீணாக்கிவிட்

டேன். ஞானபண்டிதனே, உலகம் முழுவதும் புகழ்கின்ற நல்ல மொழியினைக் கொண்டு அகத்திய முனிவரால் போற்றப்பட்டு அருந்தமிழ் மொழிகளினில் நின்று விளையாடும் தனித்தெய்வமே, உன் புகழை வாயாரப் பாடிப்பாடி, அப்படியே பாடும்பொழுது உண்டாகும் ஆத்மானுபூதியை மொழிந்து மொழிந்து இந்தப் பொய்யான ஜகத்திலிருந்து பாசமற்றவனாகி ஒழிந்திலன் இல்லை.

இரு கண்களை எனக்கு நீ தந்தும் நான் கண்ணற்றவனாகவே ஆனேன். நான் என்ன செய்வேன்—நான் என்ன செய்வேன் என்று கண்ணீர் விட்டுக்கொண்டு அருணகிரிநாதர் கதறுகிறார் என்பதனையே பாட்டில்,

மொழிந்து ஒழிந்திலனே

என்பதினால் அறியவேண்டும். அப்படியே மொழிந்தும் மொழிந்திலனே என்ற அர்த்தத்தில் அநுபூதியை அனுபவிப்போம்.

குன்றாதசெல்வமாகிய குமரா, நீ உன்னுடைய ஆறு திருமுகங்களினாலும் தெவிட்டாத இன்பமாகிய வேத தத்துவங்களை உபதேசித்து அருளியும் அத்தத்துவங்கள் உலகத்தார் சிந்தனைக்கு எட்டாததாகவே இருக்கக் கண்டு, பிறவிக் கடலில் மூழ்கிக் கரை தெரியாமல் தத்தளித்துக் கொண்டு இருக்கிற ஜீவராசிகளை உத்தாரணம் செய்யும் பொருட்டு உள்ளத்தை அள்ளும் வண்ணமுள்ள ஸௌந்தர்யாதிசயங்களுடன் திருஞான சம்பந்தமூர்த்தியாக இந்தப் புண்ணிய பூமியாகிய தென்னகத்தில் அவதரித்து இனிய அருந்தமிழினால் தேவாரத்தை மொழிந்து அருளினாயே. இதற்கெல்லாம் காரணம் என்ன? உன்னுடைய நிர்க்குணஸ்வருபத்தை அறிவது மிகவும் கஷ்டம் என்றும் ஜன்மாந்திரத்தில்

மலேபோன்ற புண்ணியத்தைச் செய்திருக்கவேண்டும் என்பதினுல் அல்லவா?

மேலும் உன் எளிய தன்மையை என்னவென்று எண்ணி எண்ணி மகிழ்வேன் அப்பனே.

அடியார் நினைத்தபடி ஆடும்
பெருமான் எங்கள் பெருமான்

என்று மஹான்கள் உன்னே இடைவிடாமல் நெஞ்சில் வைத்துத் தியானிக்கிருர்கள் அன்ருே.

இவ்வாறு ஞானபண்டிதனுகிய நீ ஞானசம்பந்தராய்த் தோன்றி சிறப்பில் எண்ணவொண்ணுத தேவாரங்களே "தோடுடைய செவியன்" என்று தொடங்கி இறைவனின் இரு செவிகளேயும் புகழ்ந்துபாடி ஸாமகான ப்ரியனுன சிவபெருமான் எப்பொழுதும் தேவாரங்களேச் செவிகொடுத்துக் கேட்டுக்கொண்டே இருப்பார் என்பதினே நினைவூட்ட அல்லவா?

இதனுல் அல்லவா நின் கருணே எனக்கு உன் திருத்தோளில் இருக்கும் பாக்கியத்தைத் தந்து, என்னே அநுபூதி பாடவைத்து, "அப்பனே! அருணகிரி, என்றென்றும் அநுபூதியைப் பாடிக்கொண்டே இரு. யாம் அதனேச் செவிகொடுத்துக் கேட்டுக்கொண்டே இருப்போம்" என்று கூறியது.

எனவே நீ ஞானசம்பந்த மூர்த்தியாக அவதரித்து பிறவிப் பிணியை நீக்குதற்கென்றே பேரின்பவெள்ளமாகத் தேவாரங்களே இசைமாரிப் பொழிந்து அதன் மூலமாக மகமாயை என்ருல் என்ன? சகமாயை என்ருல் என்ன? என்பதினே உலகத்திற்கு உபதேசித்து அருளியும், சிற்றின்பத்தினேயே இன்பமாக எண்ணிக் கொண்டிருந்த நான் நினது அருள்மொழியாகிய தேவா

ரத்திலிருந்து ஒரு பாடலைக்கூட மொழிந்திலன் இல்லை. அப்படியே செவி கொடுத்துக் கேட்கவும் இல்லை.

இதனையே பாடலில் அருணகிரியார் **மொழிந்தும் மொழிந்திலனே** என்று சொல்லுகிறார்.

தவிர மயிலேறும் வெற்றிவேலா! உன் பொன் மொழிகளை நான் போற்றிப் புகழாததினால் உண்டாகும் விளைவுகளைச் சொல்லுகிறேன். என் குறைகளைச் செவி கொடுத்துக் கேட்டு அருள்வாய் அப்பனே.

மகமாயையின் லீலைகளாகிய இந்த சகமாயையுள் நான், எனது என்னும் அகங்காரத்துடன் இந்த மாயா உலகை மெய்யென்று நம்பி, என்னுடைய வீடு, என்னுடைய துணிகள், என் மனைவியை அலங்கரிக்கும் பல பலவிதமான துணி வகைகள், ஆபரண வகைகள், என்னுடைய பெண்களென்றும் மயங்கி சுகதுக்கங்களுக்கு ஆளாகி எல்லையற்ற துன்பத்தினை அனுபவித்துக்கொண்டு, எடுத்த மானிட ஜன்மாவை வீணாக்கி விட்டேனே, உன்னை அடைவதற்கு என்ன செய்வது? என்ன செய்யக்கூடாது? என்று தெரியாமலும், அப்படியே சிலசமயங்களில் மனைவிமக்களைத்துறந்து துறவியாகப் போய்விடலாமென்று தோன்றி வீட்டைவிட்டு வெளியே கிளம்புகிறேன். மறுக்ஷணமே மனைவி மக்களுடைய தீனக் குரலைக் கேட்டு, அவர்களைத் தவிக்க விட்டுச்செல்ல மனமில்லாதவனாய் மீண்டும் வீட்டிற்குள்ளே நுழைந்துவிடுகிறேன். இவ்வாறு என் உள்ளத்தில் வைராக்கியம் என்னைத் துறவியாகப் போ என்று ஒருபக்கம் உந்த, மற்றொரு பக்கம் பாசமானது இவர்களை அனாதைகளாக விட்டுச் செல்கிறாயே என்று உள்ளே இழுக்க, என் புத்தியானது விவேகத்தை இழந்து, என் உள்ளத்தில் நின்று ஊசல் ஆட நான்

எவ்விதம் உன்னை ஸ்மரணம் செய்யமுடியும்? முருகா என் ஐயனே, நின் திரு சரணாரவிந்த மலர்களை எனது உள்ளமானது மறந்து; ஞானேந்திரிய பஞ்சகம், கர்மேந்திரிய பஞ்சகம் இவைகளை வாயிலாகக்கொண்டு வளர்கின்ற சகமாயையில் கிடந்து உழலுகின்றேனே. இது ஞாயமாகாது முருகா. உன் கருணை வலியவந்து என்னைத் தடுத்து ஆட்கொள்ள வேணுமே தவிர, உன் கருணைக்குப் பாத்திரமாக நான் எந்தவிதத்திலும் ஒரு விதமான புண்ணியமும் செய்யவில்லை. இந்த மனோ நிலையையே பாட்டில் "நின்று தயங்குவதே" என்று கூறப்பட்டிருக்கிறது.

தயங்குவதே என்ற பதத்தில் உள்ள 'ஏ' காரம் முருகப் பெருமானை அடையவே மானிட ஜன்மாவை அடைந்திருக்கிறோம் என்பதனைச் சுட்டிக் காட்டுகிறது.

இதிலிருந்து ஒவ்வொரு ப்ராணிகளுடைய உள்ளமும் வேண்ட வேண்டியது ஆறுபடைவீடு உடையோனாகிய முருகப் பெருமானே ஆகும். எனவே துறவிகள் எதனையும் வேண்டுவதில்லை-இறைவனை அவர்கள் வேண்டாமல் வேண்டுகிறார். எதனை வேண்டுகிறார். கந்தர் அநுபூதியை வேண்டுகிறார். அன்னியில் வேறு எவ்வரங்களையும் வேண்டார். அவர்களே மேலோர் ஆவார்கள். அவர்களே மனத்தூய்மை உடையவர்கள். இவர்களது பெருமையினை ஞான ரகசியம்,

உம்பர் வாழுலகம் வேண்டார்
உலகர சாட்சி வேண்டார்
பொன்புனை மகளிர் வேண்டார்
புண்ணிய பாவம் வேண்டார்

இன்பொடு துன்பம் வேண்டார்
இறப்பொடு பிறப்பும் வேண்டார்
ஐம்புலப் பகையை வேண்டார்
அறிவினை அறிந்த மேலோர்.

என்று சொல்லி நமக்கெல்லாம் நினைவூட்டுகிறது. ஆகவே அறிவு நிறைந்த ஞானிகள் இன்பமயமாகத் திகழ்வார்கள். ஏன் அறிவின் உறைவிடம் முருகப் பெருமான் அன்றோ. எந்நாளும் முருகனை இனிய மொழிகளால் உள்ளங் கசிந்து கண்ணீர் பெருகிப் பாடவேண்டும். அது மகமாயை–சகமாயை இவ்விரண் டிலிருந்தும் நம்மை விடுவிக்கச் செய்யும். பாட்டில் மகிழ்பவன் செல்வக் குமரன்.

ஆகையினால் ஹே செந்தூர் வேலா, உன் ஆறு முகத்தினும் வேறுமுகம் உண்டோ. மகமாயையைக் களைந்திட வல்லபிரான் நீ ஒருவன்தான் என்பதினை நான் நன்கு அறிவேன். எனவே நீ என்னிடம், வேறு தேவதைகளைச் சரணமடைந்து ஜன்மாவை சபலம் செய்துகொள் என்று சொல்லமுடியாது. வேதங்கள் எல்லாம் ஒன்றாய்த் திரண்டு உன்னையே ஞான பண் டிதன் என்று கோஷிக்கிறது. எனவே நீ என்னைக் கைவிட்டாலும் நான் உன்னைக் கைவிடமாட்டேன். வாராத செல்வம் அதனை வருவிப்பவனாகிய நீ என்னை உல்லங்கனம் செய்தாலும் **துடைக்கினும் போகேன்** என்ற ஒரு த்ருடமான எண்ணத்துடனும், நம்பிக்கை யுடனும் நான் இருந்து வருகிறேன். அருள் தெய்வ மாகிய நீ உன்னுடைய மலர்ந்த இதழையுடைய மலரை யொத்த திருமுகத்தினால் ப்ரம்மதத்துவத்தை உபதே சித்தருளி சகமாயை ஆகிய பலவித மோக மயக்கங் களில் முழுகிக்கொண்டு இருக்கும் அடியேனைக்

கைகொடுத்துத் தூக்கிவிடுவாய். எடுத்த பிறவியாகிய நோயின் வேரை அறுத்து எனக்கு ஞானத்தை உபதேசித்து திரு அருள்புரியும் நாள் ஒன்று எனக்குக் கிடைக்குமா? என்று ஏங்கி ஏங்கி

சகமாயையுள் நின்று தயங்குவதே

என்று செல்வக்குமரனிடம் இடைவிடாமல் முறையிட்டுக்கொண்டே இருக்கிறார்.

ஆகையால் ஜகமாயையிலிருந்து விடுபட்டு ஆறுமுகக் கடவுளையடைவதற்கு இந்தப் பாடலே ஒரு மாபெரும் வழிகாட்டியாக இருந்து வருகிறதென்பதை எடுத்துச் சொல்லவும் வேண்டுமா?



# மனதாகிய சிலையில் திருவடித் தாமரைகள் மலர

# 6



திணியான மனோசிலைமீ துனதாள்
அணியார் அரவிந்தம் அரும்புமதோ
பணியா எனவள்ளி பதம் பணியும்
தணியா அதி மோக தயாபரனே.

**பதவுரை**

*பணி யா என—(நான் செய்யவேண்டிய) தொழில்கள் எவைகள் என்று, வள்ளி—வள்ளிதேவியின், பதம்—திருவடிகளை, பணியும்—வணங்குகின்ற, தணியா—குறையாத, அதிமோக—அதிக காதல் கொண்ட, தயாபரனே—மேலான கருணையையுடையவனே, திணி ஆன—கடினம் பொருந்திய, மனோ சிலைமீது—(எனது) மனமாகிய கல்லின் மீது, உனதாள்—உனது திருவடிகளாகிய, அணி ஆர்—அழகு நிறைந்த, அரவிந்தம்—தாமரை மலர், அரும்புமதோ—தோன்றப் பெறுமோ?*

**தாத்பர்யம்**

முருகா, நீ வள்ளிதேவியின் திருவடிகளில் வணங்கி, அவ்வள்ளிதேவியிடம் 'எனக்கு இட்ட பணிகள் யாவை, எனக்கு இட்ட பணிகள் யாவை' என்று கேட்கின்ருயே! உன் திருவிளையாடல்களில் இதுவும் ஒன்ரு? இவ்விதம் நீ செய்வதின் கருத்து தான் என்ன?

அகரமுதலென உரைசெய் ஐம்பத்தொரக்ஷரமும்
அகிலகலைகளும் வெகுவி தங்கொண்ட
தத்துவமும்
அபரிமித சுருதியும டங்குத் தனிப்பொருளை
நீ என்று ஞானிகள் அறிந்து அப்படியே உன்னை,

அகரமுமாகி அதிபனுமாகி
அதிகமுமாகி அகமாகி
அயனெனவாகி அரியெனவாகி
அரனெனவாகி அவர்மேலாய்
இகரமுமாகி எவைகளுமாகி
இனிமையுமாகி வருவோனே
இருநிலமீதில் எளியனும்வாழ
எனதுமுன் ஓடிவரவேணும்

(திருப்புகழ்)

என்று அறிந்து அனுபவிக்கின்ருர்கள். இத்தகைய வைபவத்தோடு கூடிய நீ ஸௌலப்ய, ஸௌகுமார்ய, லாவண்ய, ஸெந்தர்யாதிசயங்களுடன் விளங்கிக் கொண்டு ஞானிகளுடைய உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்ருய். நீ முருகன் அல்லவா. என்றும் குன்ருத இளமையுடன் இருப்பவனே. உன்னுடைய

ஸௌந்தர்பம் அளவுக்கு அடங்காததாக இருக்கும் பொழுது, நீ எவ்விதம் வள்ளிதேவியினுடைய அழகில் லயித்து, அவ்வள்ளிதேவியினுடைய அழகில் ஈடுபட்டு அவள் திருவடிகளை வணங்கி "பணியாவென" என்று கேட்டுக் கொண்டிருக்கிறாய்.

நீ ஒருவிதத்திலும் தணியாத அதாவது குறையாத வைபவத்தைப் பெற்றவனல்லவா.

மேலும் அதிகமான காதலை வள்ளிதேவியிடம் கொண்டுள்ளாய்.

இதை யான் பார்க்கும்பொழுது இத்தகைய திருவிளையாடல் உனது கருணையையே எடுத்துக்காட்டுகின்றது என்று நினைக்கிறேன். நீயோவெனில் அடியார்களுக்கு எளியவன். தயாபரன் அல்லவா?

மேலும் ஸாக்ஷாத் மஹாவிஷ்ணுவினுடைய இரு கண்களிலிருந்து அத்யற்புதமான லக்ஷணங்களுடன் இரு மங்கையர் தோன்றினார்கள். அதில் ஒருவள் அமுதவல்லி, மற்றொருவள் ஸுந்தரவல்லி. இவர்கள் இருவரையும் தேவேந்திரன் தபோமஹிமையினால் மானஸீக புத்திரிகளாக ஸ்வீகரித்துக்கொண்டான்.

ஆனால் அந்த இரு கன்னிகைகளும் ப்ரம்மசர்யத்துடன் என்றென்றும் கன்னிகைகளாகவே இருக்க வேண்டும் என்ற எண்ணங்கொண்டு ஞானநிஷ்டையினால் உண்டாகும் ஆத்மானந்தத்தையே மேலானதாகக் கருதினார்கள். உடனே அவர்கள் மஹா கைலாஸத்தில் சிவதீர்த்தம் என சொல்லப்படும் அதி புண்ணியமான சரவணப் பொய்கையில் வெகுகாலம் தவம் புரிந்தனர். இவர்களுடைய தவத்தினைக்கண்டு மகிழ்ந்து முருகப்பெருமான் இவர்கள் முன் தோன்றி "ஷடக்ஷரீ" என்ற மஹாமந்திரத்தை உபதேசம்

செய்து மறைந்தருளினுர். இவர்களும் அந்த மந்தி ரத்தை உபதேசித்தவண்ணம், அதனையே அநுசந் தானம் செய்துகொண்டு ஞானநிஷ்டையிலேயே திருப்தி அடைந்தவர்களாக இருந்துவந்தனர். இப்படி இருக்கையில் ஒருநாள் முருகப்பெருமான் மீண்டும் தோன்றி அமுதவல்லி—சுந்தரவல்லி ஆகிய இரு கன்னிகைகளேயும் நோக்கி ''ஷட்க்ஷரீ'' மஹாமந்தி ரத்தினை உபதேசித்தருளியதற்குத் தாமே குருவாக இருப்பதினுல் குருதக்ஷிணையாக என்ன தரப்போகிறீர் கள் என்று கேட்க, அவர்களும் எது ப்ரியமான வஸ்து வாக குருவிற்குத் தோன்றுகிறதோ அதனையே தருவ தாகக் கூறினுர்கள்.

உடனே முருகப்பெருமான் ''நீங்கள் இருவர்களும் எனக்குப் பார்யையாக ஆகவேண்டும். அதுவே நீங்கள் எனக்குத் தரும் குருதக்ஷிணை ஆகும்'' என்று சொன்னுர்.

உடனே அமுதவல்லியானவள், தன்னுடைய நிஷ்டைக்குப் பங்கம் வந்தபோதிலும், குருவினுடைய வாக்யம் ஔஷதம் என்ற மேலான சாஸ்திரத்தைக் கடைப்பிடித்து, முருகப்பெருமானைத் திருமணம் செய்து கொள்ளச் சம்மதித்தாள். அந்த அமுதவல் லியே தேவஸேனை ஆவாள். அந்த தேவஸேனையையே தேவேந்திரன் முருகப்பெருமானுக்கு சூரஸம்ஹாரம் ஆனபின்பு திருமணம் செய்து வைத்தான்.

ஆனுல் சுந்தரவல்லியோ வெனில் தமது நிஷ்டைக் குப் பங்கம் வந்துவிடும் என்று எண்ணிக் குருவாய் வந்து உபதேசித்த முருகப்பெருமானின் வாக்கியத்தை நிறைவேற்ற மறுத்துவிட்டாள். அதன் விளைவாக சுந்தரவல்லி மண்ணுலகில் தவத்துக்கு உரிய வள்ளி

மலையை அடைந்து, தான் குருவாக்கியத்தை உல்லங் கனம் செய்த அபசாரத்தினுல், தான் அடைந்த கதியை நினைந்து நினைந்து மனம் நொந்து, மீண்டும் அந்த முருகப்பெருமானை பர்த்தாவாக அடையும் பொருட்டு அந்த வள்ளிமலையிலேயே ஷடக்ஷரீ மந்திரத்தினை ஜபம்செய்துகொண்டு தவம் புரிந்து வந்தாள்.

சுந்தரவல்லியின் துயரம் தீரும் பொருட்டு மஹா விஷ்ணுவானவர் சிவமுனிவர் ரூபத்தில் வள்ளிமலையில் தவம்செய்து கொண்டு இருக்க மஹாலக்ஷ்மியானவள் ஒரு பெண் மானுருவம் கொண்டு வந்தாள். அந்த மானை சிவமுனிவர் அன்பினுல் பார்க்க, அந்தப் பார்வை யின் மகிமையினுல் தவம்புரிந்து கொண்டிருந்த சுந்தர வல்லி ஒரு ஜ்யோதி ரூபமாய் மானுருவத்தில் வந்து இலக்குமிதேவியின் கர்ப்பத்தில் கலந்தாள்.

இவ்விதம் மானுருவத்தில் வந்த மஹாலக்ஷ்மி ஓர் அரும் பெண் குழந்தையை ஈன்றெடுத்தாள்.

அவ்வேளையில் வேடர் குலத்தரசனுகிய நம்பி ராஜன் தெய்வீகத்தன்மையைஉடைய அக்குழந்தையை எடுத்து, முத்தமிட்டு "இறைவன் அருளித்தந்த செல்வமன்றோ இக்குழந்தை" என்று பலவாறு சொல்லி மனம் களித்து, அக்குழந்தைக்கு வள்ளி என்று திருநாமம் சூட்டி உயிரினும் மேலாய் வளர்த்து வந்தான்.

வள்ளியானவள் "ஷடக்ஷரீ" மந்திர மஹிமை யினுல் இரவும் பகலும் முருகனையே தியானித்த வண்ணமாய் இருந்துவந்தாள். உள்ளங் கசிந்து கண்ணீர் மல்கி இடைவிடாமல் "சரவணபவ" என்ற ஷடக்ஷரீ மந்திரத்தையே ஜபித்துவந்தாள். மந்திர ஜப மகிமையானது இணையிலா அழகு பொருந்திய

முருகனை வள்ளிதேவியின் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தியது. காரணமோவெனில் மந்திரங் களுக்குக் கட்டுப்பட்டது தெய்வமன்றோ!

இவ்விதம் இறைவன் மந்திரத்திற்குக் கட்டுப்பட்டு வள்ளிதேவியின் திருவடிகளை வணங்கி பணியா என என்று கேட்கிறார்.

இதற்கெல்லாம் காரணம் முருகப்பெருமான் கருணைகொண்டவனாக இருப்பதினால் மட்டுமல்ல; தயாபரனாக இருப்பதால். இதனாலேயே பாட்டில் தயாபரனே! என்று அழைக்கிறார். அதாவது தயா-கருணைக்கு, பரனே-மேலானவனே என்று அர்த்தம் கொண்டு தயைக்கு மேலானவனே முருகப்பெருமான் ஆகிறான்.

இதன் தத்துவமோவெனில் முருகப்பெருமானின் கருணை வள்ளிதேவிக்கு முருகனை அடைய வழிகாட்டியது. அக்கருணையைத் துணையாகக்கொண்டு முருகனை வள்ளிதேவியானவள் அழைத்தாள். வள்ளிதேவியைத் தடுத்து ஆட்கொள் என்று சொல்லிக்கொண்டு வந்த கருணைக்குக் கருணைகாட்டின கருணாஸமுத்திரம், முருகப்பெருமான் என்பதினை எடுத்துக்காட்டவே அருணகிரிநாதர் பாட்டில் தயாபரனே என்று அழைக்கிறார்.

எனவே ஹே செல்வக்குமரா, நீ பணியா என வள்ளிபதம் பணிந்தாயே, எதற்காக?

"அடியார்களுக்கு முருகப்பெருமான் எளியவன்" என்பதினை ஈரேழ பதினான்கு லோகங்களுக்கும் எடுத்துக் காட்டவல்லவா?

ஆதலால் ஹே அதிமோக பக்தர்களிடத்தில் அதிக மான அன்பினைக் கொண்டவனே, நானும் உன் பக்தர்களில் ஒருவன் அல்லவா.

எனவே நீ என்னிடத்தில் கருணைகாட்ட வேண்டாமா. நீயே என்னிடத்தில் கருணை காட்டவில்லையென்ருல் யார்தான் என்னிடத்தில் கருணையைக் காட்டப் போகிருர்கள். நீயே சொல் அப்பனே.

உண்மையில் என்னுடைய திணியான மனேசிலை மீது உனது திருவடியாகிய அழகு நிறைந்த தாமரை ஒரு போதும் மலராது ஐயனே. இதை நான் நன்ருக அறிவேன். இருந்தும் நீ மனது வைத்தால் முடியாத காரியம் உண்டோ?

மேலும் "திணியான மனேசிலை" என்பதற்கு, திணியான–கடினம் பொருந்திய, மனேசிலை – மனம் ஆகிய கல் என்று பொருள் கொள்ளக்கூடாது.

இந்தப் பாட்டில் மனதை "கடினமான கல்" என்று வர்ணிப்பதில் அருணகிரிநாதருக்குத் தாத்பர்யமில்லை. எனவே இதன் பொருளோவெனில்,

திணி-திணிப்பதினுல். ஆன–ஆகிய, சிலை–சிலையோவெனில், மனம்–என்னுடைய மனமேயாகும்.

ஆகையினுல் ஹே முருகா என்னுடைய மனதானது ஒரு சிலையாக மாறிவிட்டது. இதற்குக் காரணம் நான் இந்த சகமாயையுள் நினறு உழன்றுகொண்டு உண்மை தெரியாமல் ஸம்ஸாரபந்தத்தை உண்டு பண்ணும் விஷயங்களை ஒன்றின் பின் ஒன்ருக என் மனதில் திணித்துக்கொண்டதேதாஞகும். என மனதில் திணிக்கப்பட்ட பொருளோ வெனில் அழியக்கூடிய இந்த உலக ஞானமேயாகும். உலக ஞானத்தினுல்

நிறைந்த என்னுடைய மனமோவெனில் ஒரு சிலையாக மாறிவிட்டது. அதாவது உயிருள்ள வஸ்து உயிர் அற்றதாக மாறினால் அந்த மாறின நிலையை சிலை என்று சொல்வார்கள்.

ஒரு வடிவுடன் உயிர் அற்று இருக்கும் வஸ்து விற்கு சிலை என்று பெயர். எனவே எனது மனது உயிர் அற்று இருக்கிறது. இந்த உலக ஞானத்தைக்கொண்டு உயிர் அற்று சிலை ரூபத்திலிருக்கிற எனது மனதின் மேல் உனது திருவடியான அழகு நிறைந்த தாமரை தோன்றுவதுடன் மலரவும் மலரும்.

மேலும் உனது அழகு நிறை திருவடியான தாமரை யானது அஸாதாரணமான பெருமையைக் கொண்ட தன்றோ!

ஹே முருகா! வள்ளி-வள்ளிதேவியானவள், பணி-நான் செய்யவேண்டிய காரியம், யா-எவைகள், என-என்று, பணியும்-வணங்குகின்ற, பதம்-இட மானது, உன தாள்-உன்னுடைய திருவடிகள் ஆகிய, அணி ஆர் - அழகு நிறைந்த, அரவிந்தம் - தாமரை, திணியான மனோசிலை மீது அரும்பும் அது-ஓ என்னே அதன்சக்தி, யார் - எவர்கள், பணி - செய்யவேண்டிய காரியங்கள், யா-எவைகள், என-என்று, உன தாள்-உன்னுடைய திருவடியையும், வள்ளி-வள்ளி தேவியி னுடைய, பதம்-திருவடியையும், திணியான மனோசிலை மீது, அணி-அணிந்து கொண்டு அதாவது வைத்துக் கொண்டு இடைவிடாமல் தியானிக்கின்றார்களோ, அவர்களுடைய அரவிந்தம்-ஸகஸ்ரகமலமானது அதா வது ஆயிரம் தளங்களுடைய தாமரையானது, அரும் பும்-மலரும், அது உன் திருவடிகளுடைய அஸா தாரண சக்தி விசேஷத்தையே எடுத்துக் காட்டுகிறது.

அதாவது ஆத்ம தத்துவத்தை ஸ்வயம் ஜோதிஸ் ஆன தத்துவமென்றும், அந்த ஆத்ம ஜ்யோதிஸ்ஸே இந்த ஜடமானதும் பொய்யானதுமான ஜகத்தைத் தோன்றவைப்பதில் சாமர்த்தியமுள்ளதாக இருக்கின்றதே தவிர உண்மையில் இந்த ஜகத்தை பொய்யான வஸ்து வென்றேதான் சொல்லவேண்டும். ஞானிகளோ வெனில் ப்ராண நிக்கிரஹம் செய்து, ஞானநிஷ்டையில் நின்று ப்ரம்மரந்திரம் என்று சொல்லப்படும் ஸகஸ்ர கமலத்தில் முருகப்பெருமானைத் தியானிக்கின்றார்கள். உடனே அந்த ஸகஸ்ரகமலமானது முருகப்பெருமானின் தியான மஹிமையினால் நன்றாக மலருகிறது. இந்நிலையில் ப்ராணிகள் முருகனை நிர்குண ப்ரும்மமாக அனுபவித்து ப்ரும்மபாவத்தை அடைகிறார்கள்.

எனவே எவனொருவன் ஸதாகாலமும் சிவதத்துவமான முருகனுடைய பாதகமலத்தையும், சக்திதத்துவமாகிய வள்ளிதேவினுடைய பாத கமலத்தையும் ஜீவ ப்ரம்ம ஐக்கிய ஸாக்ஷாத்காரத்திற்கு அந்தரங்க ஸாதனம் எனக்கொண்டு இரு திருவடிகளையும் ஒரே தத்துவமெனக் கருதி அதாவது வள்ளி தேவியாகிய சக்தி தத்துவம் என்ன—முருகன் ஆகிய சிவ தத்துவம் என்ன அப்படியே முருகன் இல்லையேல் வள்ளி இல்லை, வள்ளி இல்லையேல் முருகன் இல்லை என்ற உயர்ந்த ஞான நிஷ்டையில் இருப்பானே ஆகில் அவனுடைய ப்ரம்மரந்திரம் என்று சொல்லப்படும் ஸஹஸ்ர கமலம் அவனுடைய த்யானத்தையே ஸூர்யனாகக்கொண்டு தனது ஆயிரம் தளங்களை நன்றாக மலரச்செய்து கொண்டு அதன் மத்தியில் முருகப்பெருமானுடைய திருவடியாகிய தாமரையை மலரச் செய்ய வைக்குமானால் அந்த முருகப் பெருமானுடைய பாத மகிமை தான் என்ன, அப்படியே அந்தப் பாதத்தை வணங்கு

கின்ற வள்ளி தேவியினுடைய பாத மகிமைதான் என்ன என்பதினை எடுத்துக் காட்டவே,

அரவிந்தம் அரும்புமதோ

என்று பாட்டில் சொல்லப்படுகிறது.

எனவே ஹே முருகா, உன்னுடைய திருவடியை ஸ்மரணம் செய்யாதவர்களுடைய மனதில்தான் நீ தோன்றமாட்டாயே தவிர 'தஞ்சத்து அருள்' என்று சொல்லிக்கொண்டு உன்னை நினைப்பவர்களுடைய மன தானது எப்படியிருந்தால் என்ன, கல்லாகத்தான் இருக்கட்டுமே, அதனுல் உன்னுடைய பாதத்தின் மகிமை குறைந்துவிடப்போகிறதாஎன்ன.உன்னுடைய பாத தூளியானது உயிர் அற்றவைகளுக்கு உயிரைக் கொடுத்துக்கொண்டு இருக்கின்ற ஒரு சஞ்சீவி அன்றே. எனவே நான் உன்னை நெஞ்சுருகி முருகா என்று ஒருதரம் அழைத்தால் நின் கருணையானது உன்னுடைய இரு திருவடிகளையும் என்னுடைய திணி யான மனோசிலை மீது வைத்து அந்த மனமாகிய சிலைக்கு உயிரைக் கொடுத்து அதன் மகிமையினுல் அந்த மனதை இரவும் பகலும் உனது திருவடிகளையே எல்லாம் தர வல்லமை உள்ள இணையற்ற அருள் பாத மாக எண்ணி ஒன்பது விதமான பக்தி மார்க்கத்தில் உன்னை உபாஸிக்கவேண்டும் என்று எண்ணச் செய்து 'முருகாராதனை'யிலேயே என்னுளும் இருக்கும்படி செய் கிறது. இதனுல் உனது பாதஸ்பர்சமானது இன்னது தான் செய்யும் என்று ஒருவராலும் நினைக்கமுடியாத நிலையில் இருந்துவருகிறது.

ஆகையினுல் செல்வக்குமரா, குன்றுதோர் ஆட லையே தொழிலாகக் கொண்டுள்ள நீ அடியார்களுக் கெல்லாம் எளியவனுக இருந்துகொண்டு, அயன் அரி

அரனுக்கு அரியவனாக இருந்துகொண்டு, இருக்கின்றாயே. இது ஒன்று போதாதா உன்னுடைய அபரிமிதமான சக்தியை எடுத்துகாட்ட. எனவே உனது திருவடிகளை "திணியான மனோசிலை மீது" அணியாதவர்களுக்கு நீ என்றென்றும் அருள் புரிய மாட்டாய். அவர்கள் உன்னுடைய கருணைக்கு ஒரு பொழுதும் பாத்திரமும் ஆகமாட்டார்கள். மனது கல்லாக இருந்தாலும் பரவாயில்லை. ஆனால் முருகா என்று உன்னை அழைத்து உள்ளுருகி உன் திருவடியை ஒரு க்ஷணம் நினைத்தால் மறு க்ஷணமே நீ உனது திருவடியாகிய தாமரையை அவர்களது மனதில் மலர வைத்து அப்படியே அவர்களுடைய ப்ரம்மரந்திரமாகிய ஆயிரம் தளங்களையுடைய தாமரையையும் மலரச் செய்கிறாய். என்னே உன் அருள்! என்னே உன் பெருமை! என்னே உன் கருணை! என்னே உன் பரந்த உள்ளம்! இதற்கெல்லாம் மேலாக என்னே உன் எளிமை!

அருள் – ரூபனே அன்பினில் அடங்கும் அளவிலாத அருள் மலையே. உனையன்றி என்னை யார் கை கொடுத்து தூக்கப் போகிறார்கள் அப்பனே.



# திருவடி தியான மஹிமை

## 7



கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவேல் இறை தாள் நினைவாய்
சுடுவாய் நெடுவே தனை தூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே.

**பதவுரை**

கெடுவாய்—அழிந்து போகின்ற, மனனே—ஏ மனமே! கதி கேள்— கடைத்தேறும் வழியைச் சொல்லுகிறேன் கேட்பாயாக, கரவாது — உன்னிடம் உள்ளதை மறைக்காமல், இடுவாய்—கொடுப்பாயாக, வடிவேல்—கூர் மையான வேலினை (தாங்கிய), இறை — இறைவனுகிய முருகப்பெருமானின், தாள்—திருவடிகளை, நினைவாய்—தியானம் செய்வாய் ஆக, நெடு—வெகு காலமாகத் தொடர்ந்து வருகின்ற, வேதனை—பிறவித் துன்பமாகிய வேதனையை, தூள்படவே—தூள்தூள் ஆகபோகும் பொருட்டு, சுடுவாய்—சுட்டெரிப்பாய், வினை—வினைகள், யாவையுமே—எல்லாவற்றிலிருந்தும், விடுவாய் — விடுபட்டவனுய் இருப்பாய், விடுவாய்—விடுபட்டவனுக இருப்பாய்;

**தாத்பர்யம்**

ஏ மனமே, நீயோவெனில் உயிர் அற்ற சிலைபோல் இருந்து வருகின்றாய். இவ்விதம் நீ இருப்பது முற்றிலும் தவறு.

இதனால் நீ அழிவதுமல்லாமல் என்னையும் அழிக்கின்றாய். இதனால் நீ அடையப் போவது என்ன? ஒன்றுமே இல்லை.

எனவே நீ கடைத்தேறும் பொருட்டு உனக்கு நல்ல வழிகளைச் சொல்கிறேன். கேட்பாயாக. இதன் மூலமாக நீ நல்ல கதியினை அடைந்து என்றும் முருகானந்தத்தையே அனுபவித்துக் கொண்டிருப்பாய்.

ஏ மனமே, முதன் முதலாக உனக்குத் தியாகபுத்தி வேண்டும். அத்தியாக நிலையை அடைய உனக்கு இறைவன் அருள் தேவை, அவ்வருளினால் நீ எல்லாவற்றையும் ஒன்றாகவே பார்ப்பாய். எனவே உனக்கு 'நான்' என்றும், 'என்னுடையது-அவனுடையது' என்றும் தோன்றாது. எல்லாவற்றையும் முருகனாகவே பார்ப்பாய். இவ்வித ஞானமும் நிலையும் அடைந்தால் தான், நீ உன்னுடைய ஜன்மாவை ஸபலம் செய்து கொள்ளமுடியும். அன்னியில் முடியாது.

ஆகையினால் மஹான்கள் ''அருளினைக் கொண்டே எதையும் பார்'' என்று சொல்லுகிறார்கள்.

அவ்வருளோ வெனில் கூர்மையான வேலைத் தமது திருக்கரத்தில் தாங்கிவரும் முருகப் பெருமானுடைய திருவடிகளிலேயே கடல்போல் அலைமோதிக் கொண்டிருக்கிறது. அதை நீ நினைக்க வேண்டாமா? நினைத்து உய்யவேண்டாமா!

அணுவுக்கு அணுவாயும்—மலைக்கு மலையாயும், பெரிதுக்குப் பெரிதாயும் விளங்கிக்கொண்டு முடிவு என்பதே இல்லாமல் கருணைக் கடலாய் திகழ்ந்து நிற்கும் பரம்பொருள் அன்றோ செல்வக்குமரன்.

ஏ மனமே, நீ அடையும் பிறவித் துன்பங்கள் முன் ஜன்மாவில் செய்த கர்ம வினைகளை அல்லவா ஒட்டியிருக்கின்றன. அத்துன்பங்களை முருக பஜனை ஒன்றினால்தான் போக்கடிக்க முடியுமே தவிர, அன்னியில் வேறுவழியினால் முடியுமா? எனவே நீ என் நிலையை அடைந்தபோதிலும் செல்வக்குமரனைத் தவிர வேறு யாரையும் நினைக்கவே கூடாது.

ஏ மனமே! இந்த ரகஸ்யத்தை நான் உனக்குப் புதிதாகச் சொல்லவில்லை. ஞானப் பாலினை உண்ட ஞான சம்பந்தர் சொல்லியிருக்கிறார்.

இடரினுந் தளரினு மெனதுறு நோய்
தொடரினும் உன் கழல் தொழு தெழுவேன்.

மேல் கூறிய அருள் தேவாரத்தை விட உனக்கு மேலான ப்ரமாணம் என்ன இருக்கிறது, இதனால் நீ செல்வக் குமரனை ஆராத காதலுடன் போற்றிப் புகழ்ந்து துதிக்கவேண்டும். முருகனுடைய திருவிளையாடல்களைக் கேட்டு மகிழவேண்டும். முருகனை மனதில் ஸதா தியானம் செய்து அவ் ஆறுபடை வீடுடையோனுடைய திருவடித் தாமரைகளை என்று அடையப் போகிறோம்; என்று அடையப் போகிறோம்; என்று இமயத்தில் பனி உருகி வருவதுபோல் உள்ளமுருகிப் பாடவேண்டும். அப்பாடலின் சக்தியினால் அன்புக் கடலானது இன்பக் கடலாக மாறி உள்ளத்தில் பொங்கி எழவேண்டும்.

ஏ மனமே! நீ இவ்விதம் இறைவனைப் போற்றி வந்தால் கண்களானது முருகனைத்தேடும், வாயானது தானாகவே செல்வக்குமரனைப் பாடும். கையானது எண்ணற்ற நாமங்களினால் முருகனை அர்ச்சனை செய்து குவிந்து நிற்கும். கால்கள் திருக்கோயில்களில் குடி கொண்டுள்ள ஆறுபடை வீடுடையோனை நாடிச் செல்லும். எல்லாவற்றிற்கும் மேலான மனத்தத்துவம் அன்றோ நீ.

உன்னுடைய ஆதீனத்தில் அன்றோ, இந்திரியங்கள் இருக்கின்றன. எனவே நீ முருகப் பெருமானை நினைத்தால் தானாகவே இந்திரியங்களும் முருகனின் திருவடிகளைப் போற்றி வணங்கி வரும்.

ஆனால் ஹே மனமே! நீயோ வெனில் விஷயாதி களில் சஞ்சரித்துக்கொண்டு நாளுக்கு நாள் அழிந்து கொண்டே இருக்கிறாய், நேர்மையில்லாத வழியில் காரியங்களைச் செய்கிறாய். மானிடப் பிறவியின் பயனை நினைத்துப் பார்ப்பதில்லை. பொய்யான இந்த உலகை மெய்யென்று நம்பி ஸதாகாலமும் உன் விவேகத்தை இழந்து தையலார் மையலிலே மயங்கி அவர்களுடைய குவிந்த முலைமேல் வீழ்ந்து அதனால் உண்டாகும் சுகத்தையே பேரின்பம் என்று எண்ணி வருகிறாய். இதனால் நீ நரகத்தையே நாடிச் செல்லுகிறாய்.

தவிர இந்த நிலையற்ற மனித ஜன்மாவை ஸத்தியம் என்று நினைக்காதே. ஒவ்வொரு வினாடியும் உனது ஆயுள் குறைந்து கொண்டே வருகிறது. நீ இதை அறிகின்றாய் இல்லை. நினைத்துப் பார், உண்மை தானாகவே தெரியவரும் உனக்கு.

மனிதப் பிறவியில்தான் நாம் இறைவனைக் கண்ணாரக் கண்டு களித்து வாயாரப் பாடமுடியும். பாடி முருகன் திருவருளைப் பெறமுடியும்.

ஆதலால், ஏ மனனே, நான் திருப்பித் திருப்பிச் சொல்லுவதோவெனில், ஒன்றே ஒன்றுதான். வாழ்க்கையை நிலையற்றதென்றே அறி—இன்று இருப்போர் நாளை இருப்பதில்லை.

ஆகவே மனிதவாழ்வானது நிலையற்றதென்பதினை தாயுமான சுவாமிகள்

நேற்றுளார் இன்று மாளா நின்றனர்
அதனைக் கண்டும்
போற்றிலேன் நின்னை அந்தோ
போக்கினேன் வீணே காலம்
ஆற்றினேன் அகண்டானந்த அண்ணலே
அளவில் மாயைச்
சேற்றிலே இன்னம் வீழ்ந்து
திளைக்கவோ சிறியனேனே.

என்று சொல்லுகிறார். துறவிகளும் ஞானிகளும் போற்றிப் போற்றித் திகழும் அருள்மலையன்றோ முருகப் பெருமான்.

ஆதலால் ஏ மனமே, நீ இல்லையென்று சொல்லாமல் கொடுத்துக் கொண்டே இரு — கொடுப்பவனாகவே இரு. தானம் தர்மம் செய்பவர்களைத் தடுக்காதே. அதுவே தானத்தில் பெரிய தானமாகக் கருதப்படுகிறது.

ஈவது விலக்கேல்

என்று ஔவைத்தாய் சொல்லியிருக்கிறார்.

தவிர நீ உன்னிடத்தில் உள்ள பொருளை மற்றவர் யாசித்துக் கேட்கும் பொழுது ஒரு காலத்திலும் மறைத்து இல்லை என்று சொல்லாதே. கொடுக்கக்

கொடுக்கத்தான் உனது பொருள் அதிகரித்துக் கொண்டு இருக்கும்.

எப்படி ஜலத்தை எடுக்க எடுக்க கிணற்றில் ஊற்ருனது குறையாமல் எடுத்துக்கொண்டே இருக்குமோ, அதுபோலவே கொடுப்பவர்களுக்குத்தான் இறைவன் செல்வத்தைக் கொடுத்துக்கொண்டே இருப்பான். அதனுல் கொடுத்துக் கொண்டிருந்தால் செல்வம் குறைந்து விடுமோவென்று நீ நினைக்காதே.

செல்வத்திற்கு மூன்று கதிகள் உண்டு. ஒன்று அனுபவித்தல், இரண்டாவது ஈதல், மூன்ருவது அழிதல்.

இம்மூன்று கதிகளில் அனுபவித்தலை மத்யமம் என்றும், ஈதலை உத்தமமென்றும், அழிதலை அதமம் என்றம் சாஸ்திரங்கள் சொல்லுகின்றன.

ஆகையினுல் ஏ மனமே, நீ உத்தமோத்தமகதியான ஈதலையே செய்து வருவாய். அதாவது "கரவாது இடுவாய்" உன்னிடம் உள்ள செல்வத்தை. நீ இவ் விதம்

என் கடன் பணிசெய்து கிடப்பதே

என்று திருநாவுக்கரசு சுவாமிகள் சொல்லியதுபோல் நீ உன்னுடைய செல்வத்தை மறைக்காமல் கொடுத்துக் கொண்டேயிரு.

இவர்களுக்குக் கொடுக்கலாம், இவர்களுக்குக் கொடுக்கக்கூடாது, இவன் பக்தன், இவன் பக்தன் அல்லன், இவன் விரோதி, இவன் சிநேகிதன், இவன் வேண்டியவன், இவன் வேண்டாதவன், இவன் அருகதை உள்ளவன், இவன் அருகதை அற்றவன் என்ற வேற்றுமை கொஞ்சம்கூட இல்லாமல் யாவருக்கும் கொடுத்துக்கொண்டே இரு.

ஒருவன் மெய்யெல்லாம் நீறு அணிந்து 'முருகா, முருகா, முருகா' என்று வாயினுல் உச்சரித்துக் கொண்டு, மனதில் தீய எண்ணங்களைக் கொண்டு வந்தானுகில், நீ உன்னுடைய பொருளை மறைத்து அவனுக்கு ஈயாமல் இருக்கக்கூடாது. முருகனுடைய

மெய்த் தவ வேடமே மெய்ப்பொருளாகும்

அம்மெய்த் தவ வேடத்திலேயே நாம் மெய் மறந்து, அவன் மறைத்து மனத்தில் வைத்துக் கொண்டிருக்கிற தீய எண்ணங்களில் மறைந்தவர்களாகவே இருந்து அவன் வந்த மெய்த் தவ வேடத்தில் நாம் மறையாதவர்களாக இருந்து, அம்மெய்த் தவ வேடத்தில் லயித்து நமது பொருள்களை மறைக்காமலும், நமது எண்ணங்களை மறைக்காமலும் பொருள்களைக் கொடுத்துக்கொண்டே இருக்கவேண்டும்.

கொடுப்பது என்பது இறைவனுடைய இயல்பான ஸ்வரூபம். இதனுல்தான் "ஈவது விலக்கேல்" என்று ஔவைத்தாய் சொல்லுகிருள். இதன் உட்கருத்து கொடுப்பதைத் தடுக்காதே என்பதாகும்.

எனவே கொடுப்பது குற்றமாக இருக்குமானுல் அதனைத் தடுக்காதே என்று சொல்வாரா? இதனுல் ஈவது என்பது இறைவனது இயல்பான குணம். இறைவனது இயல்பான குணத்தைப் பெற்றவனே கொடுக்க முன்வருவான். கொடுக்கின்றவன் இறைவனின் அருளைப்பெற்றவன். எனவே அருளைப்பெற்றவனின் செயலைத் தடுக்காதே. கொடுக்கிறவன் "தான் கொடுப்பதை வாங்கிக்கொள்ள வந்தவன் அருகதையுள்ளவனு—அருகதை அற்றவனு" என்று பார்க்கமாட்டான். பெற்றுக்கொள்ள ஒருவன் வந்திருக்கிருனே என்று

மகிழ்வான். ஈதலையே குறிக்கோளாகக் கொண் டுள்ளவன்,

நீட்டும் கை எல்லாம் இறைவனுடைய கை என்று நினைப்பவன். என்னே எண்ணத்தின் உயர்வு!

ஆதலால் ஏ மனமே! பிறக்கும்போது கொண்டு வருவது ஒன்றுமில்லை. இறக்கும்போது கொண்டு போவது ஒன்றுமில்லை. செல்வமனைத்தும் நடுவில் வந்தவைகளே. அதனுலேயே அவைகள் கொடுக்க வேண்டியவைகள். அதில் நீ பற்றுதலை வைக்காதே. உனக்கு என்றும் அழியாத செல்வம் ஒன்று இருக் கிறது. அச்செல்வத்தை நீ விட்டுவிடாதே. விட்டுவிட் டால் நீ கெடுவாய். அது தான் செல்வக்குமரன்.

அச்செல்வக்குமரனுடைய இரு திருவடிகளையும் உன் நெஞ்சில் நினைத்துக் கொண்டே இரு. இதனுல் நீ மேலான ஞானத்தை அடைந்து செல்வமனைத்தையும் கரவாது இடுவாய். மறைக்காமல் கொடுத்துக் கொண்டே இருப்பாய்.

வேதங்களின்சிகரமான உபநிஷத்தானது தியாகம் ஒன்றினுல்தான் மனிதன் ஞான அமுதத்தை அடை கிருன் என்று கோஷிக்கிறது. இக்கருத்தினையே அருண கிரிநாதர் இனிமையான தமிழில் ''கரவாது இடுவாய்'' என்று சொல்லுகிருர்.

தியாக புத்தி தேவை. நீ பரந்த எண்ணத்துடன் தியாகம் செய்து கொண்டு, அப்படியே செய்யும் தியா கத்தை ஈச்வர ஆராதனு ரூபத்தில் செய்து வந்தால், அதாவது “நான் செய்கிறேன்'' என்ற அஹங்காரத் தையும், “எனக்கு இதன் மூலம் பலன் ஏற்படப்போகி றது'' என்ற அபிமானத்தையும் விட்டுவிட்டுத் தான தர்மங்கள் செய்து வரவேண்டும்.

இதன் மகிமையினுல் நீண்டகாலமாகத்தொடர்ந்து வந்து கொண்டிருக்கிற ஜனன மரண ரூபமாகிய பிறவித் துன்பங்களே, நீ உபாஸித்துவரும் ஞான மயமான வடிவேலினுல் தூள்தூளாகச் செய்து சுட்டு எரித்துச் சாம்பலோடு சாம்பலாக்கி விடலாம்.

ஒருவிதமான வினைகளும் உன்னை அணுகாது. அதாவது புண்ணியத்தை அளிக்கும் நல்வினை என்ன, பாபத்தை அளிக்கும் தீவினைகள் என்ன, இவ்விரண்டு வினைகளும் விடத்தக்கதே. ஏனெனில் புண்ணியத்தினுல் சுகத்தை அனுபவிக்க ஜன்மாவும், பாபத்தினுல் துக்கத்தை அனுபவிக்க ஜன்மாவும் எடுக்கவேண்டும். எனவே கர்ம வினைக்கு நாம் கட்டுப்பட்டு சுகமோ—துக்கமோ இவைகளை அனுபவிக்கப் பிறவி எடுக்க வேண்டியிருக்கிறது.

ஆகையினுல் செய்யும் கர்மாவை இறைவனுக்கு அர்ப்பணம்செய்து நிஷ்காம்யனுகவே இருந்துவந்தால் கர்ம வினைகள் நம்மை அணுகாது. நாம் பந்தமற்றவர்களாக ஆகிறேம். வினைகள் நம்மை விட்டு அகலுகின்றன.

ஏ மனமே! இந்நிலைக்கு நம்மைக் கொண்டுவந்து நிறுத்துகிறது இறைவனுடைய திருவடித் தியானம்.

முருகப்பெருமானுடைய திருவடியை ஸதா நினைத்துக்கொண்டே இருப்பாய். அத்தகைய தியானமானது ஸம்ஸாரமாகிய பிறவித் துன்பங்களை உண்டுபண்ணுவதற்கு மூலகாரணமான புண்ணிய பாபங்கள்என்னும் கர்மங்கள், அவற்றிற்குக் காரணபூதமான மூலாக்ஞானம் ஆகிய எல்லா வினைகளையும் வேரோடு நாசம் செய்து ப்ராணிகளை சச்சிதானந்தமாகிய பரம்பொருளினிடத்தில் லயிக்கவைக்கிறது.

ஆதலால் முருகப்பெருமானை அடைவதற்கு அந்தரங்க ஸாதனம் செல்வக்குமரனுடைய திருவடியை நினைவாய். அதன் மகிமையினால் நீ உன்னிடம் உள்ளதை மறைக்காமல் இடுவாய். நாளடைவில் நீ இந்த நச்வரமான உலகில் பற்றுதலை அற்றுத் துறவிபோல் இருப்பாய். இந்நிலையில் உன்னைக் கர்மவினைகள் வந்து அணுகாது. அவைகள் தானாகவே அழிந்து விடும்.

இந்நிலையில் ஜீவனானவன் ஜீவபாவத்தைவிட்டுப் ப்ரும்ம பாவத்தை அடைகிறான். எல்லாவித ஸித்திகளும் அவனை வந்து அடைகின்றன. காரணமோவெனில் அவனை ஒருவிதமான வினைகளும் கட்டுப்படுத்துவதில்லை. ஈச்வரனாக ஜீவன் ஆகிறான்– அதாவது ஜீவன் தன்னுடைய நிஜ ஸ்வரூபத்தை அடைகிறான்.

இதனால் ஒவ்வொரு ப்ராணியும் அறியவேண்டிய அதிஸூக்ஷ்மமான தத்துவமோவெனில் "கரவாது இடுவாய்" என்பதேதானாகும்.

எதை நாம் பிறருக்குக்கொடுத்தாலும் ஒளிக்காமல் கொடுக்கவேண்டும். அதாவது பெற்றுக்கொள்பவன் உலக ரீதியாகப் பொருளைப் பெற்றுக்கொண்டாலும் உண்மையில் கொடுப்பவனுடைய மனோபாவத்தை அல்லவா பெற்றுக்கொள்கிறான். எனவே கொடுப்பவனுடைய மனோபாவம் எப்பேர்ப்பட்டது என்று பெற்றுக்கொள்பவனுக்குத் தெரியும்வண்ணம் கொடுப்பவன் தன் மனோபாவத்தை வெளிப்படுத்திக் கொடுக்க வேண்டும்.

இல்லையேல் கொடுப்பவனுடைய மனோபாவத்தை, பெற்றுக்கொள்பவன் அறியமாட்டான்.

"கரவாது இடுவாய்" என்ற பதங்களில் இடுவாய் என்ற பதம் ஸாமான்ய அர்த்தத்திலும், "கரவாது" என்ற பதம் முக்கியார்த்தத்திலும், நிர்த்தாரண அர்த்தத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஒருவன் தானம் செய்யும்பொழுது, நாம் பெரும் செல்வத்தைத் தானமாகக் கொடுக்கிறேமே. இவன் நமக்கு என்ன திருப்பித் தரப்போகிறுன். இவனிடமிருந்து ப்ரத்யுபகாரத்தை எந்த அளவில் எதிர்பார்க்கலாம் என்ற எண்ணங்களை மனத்தில்கொண்டு ஒருவன் ஒரு பொருளை மற்றவனுக்குக் கொடுப்பானேயானுல், எத்தகைய மனேபாவத்தில் அவன் நமக்குத் தருகிறுன் என்பதினைப் பெற்றுக்கொள்கிறவன் எவ்வாறு அறிவான். எனவே பொருளின் வைபவத்தைக்கொண்டுதான் பெற்றுக்கொள்கிறவன் மகிழ்ச்சியடைகிறுன். அப்படியே மகிழ்ச்சியைத் தரும் பொருளினை அவன் தந்தமையால் அவனிடம் அன்பினைக் கொள்கிறுன்.

உண்மையில் கொடுத்தவனுடைய மனேபாவத்தைப் பெற்றுக்கொள்ளுபவன் அறிந்தால், அவன் பெற்றுக்கொள்ளும் பொருள் எவ்வளவு விலைமதிக்க முடியாததாக இருந்தாலும் அதனைப் புல்லுக்குச் சமமானதாகவே கருதித் தள்ளிவிடுவான். காரணமோவெனில் கொடுப்பவனின் மனேபாவம் மிகவும் தாழ்ந்ததாகவுள்ளது என்பதினுல் அன்றே!

இதற்கு எதிராகக் கொடுக்கும் பொருள் அல்பமாக இருந்தாலும், மேலான அன்பினுல், பொங்கி எழும் மனேபாவத்தினுல் கொடுக்கப்பட்டது என்று பெற்றுக்கொள்பவன் அறிந்தானேயாகில் அதனையே அவன் மேல்விழுந்து பெற்றுக்கொள்வான்.

ஆதலால் ஏ மனமே! நீ இறைவனுக்கு நிவேதனம் செய்யும்பொழுது, நீ ப்ரதி தினமும் எதனைச் சாப்பிட்டு வருகிறுயோ அதனையே நிவேதனம் செய்தால்போதும். இறைவனுக்கு என்று புதிதாக ஒன்று செய்து நிவேதனம் செய்யவேண்டாம். நீ இவ்விதம் செய்வதுதான் "கரவாது இடுவது" ஆகும்.

தவிர எல்லாம் தந்து வாங்க வல்லானுயும், அகில மங்களங்களுக்கும் இருப்பிடமாயும், படைத்தல் காத்தல் அழித்தல் என்ற மூன்று கார்யங்களைத் தன்னுடைய ஆதீனத்தில் வைத்துக்கொண்டு இருப்பவனுமான ஆறுபடை வீட்டினையுடையவனுன முருகப்பெருமானுக்கு அல்ப ஆயுளைக்கொண்ட மனிதர்களினுல் ஆகவேண்டியது என்ன இருக்கிறது? ஒன்றுமே இல்லை.

ஆதலால் இறைவன் பக்தர்களுடைய மனேபாவம் ஒன்றைத்தான் ஏற்றுக்கொள்கிறுனே தவிர, அவர்களினுல் அளிக்கப்பட்ட வஸ்துவின் மதிப்பையோ, ஸௌந்தர்யத்தையோ கொஞ்சம்கூடப் பொருட்படுத்துகிறதில்லை.

ஆதலால் ப்ராணிகளுக்குப் "பலனை அளிக்கும்" விஷயத்தில் இறைவன் மனேபாவத்தை மூலகாரணமாகக்கொள்கிறுனே தவிர, அன்னியில் வஸ்து ஸௌந்தர்யத்தினுல் அல்ல.

இதனுல் ஏ மனமே, இறைவனுக்குக் கொடுக்கும்பொழுதோ, அடியார்களுக்குக் கொடுக்கும்பொழுதோ, நீ கரவாது இடவேண்டும். ஏனெனில் அடியார்களும் இறைவனும் ஒரே தத்துவமாக விளங்குகின்றபடியால் அடியார் இல்லையேல் இறைவன் இல்லை; இறைவன் இல்லையேல் அடியார்கள் இல்லை. எனவே நீ செய்யும்

ஒவ்வொரு காரியமும் கள்ளம் கபடமற்று இருக்க வேண்டும்.

அதாவது மறைக்காமல் நீ எந்தக் கார்யத்தையும் செய்யவேண்டும். ஏனெனில் நீ எல்லாவற்றிலும் கலந்து மறைந்துயிருக்கின்ற இறைவனை அடைய நினைக்கிருய்.

முடிவில் ஏ மனமே, சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள். உண்மையை மறைக்காமல், மறைந்திருக்கிற உண்மைப் பொருளாகிய வடிவேலனின் திருவடிகளை உறுதி என்று நினைந்து நினைந்து உள்ளுருகி, பிறவிக் கடலைத் தாண்டிப் பேரின்பதினை அடைவாய்.

ஆதலால், செய்யும் மாபெரும் த்யாகமே த்யான யோகத்திற்கு அந்தரங்க ஸாதனமாக விளங்கி வருகிறதென்பதே இப்பாடலின் கருத்தாகும்.



# உலக மயக்கம் தெளிய

# 8



அமரும் பதிகேள் அகமாம் எனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள் பேசியவா
குமரன் கிரிராச குமாரி மகன்
சமரம் பொரு தானவ நாசகனே.

## பதவுரை

குமரன்—என்றென்றும் பதினறு வயது திருமேனியை உடையவனுயும், கிரிராச குமாரி மகன்—பர்வதராஜ குமாரி யான பார்வதி தேவியின் மகனுயும் (இருந்துகொண்டு), சமரம் பொரு—போர்க்களத்தில் போர் செய்கின்ற, தானவ—(சூரபத்மன் முதலிய) அசுரர்களே, நாசகனே—அழித்தவனே, அமரும்பதி—(விரும்பி நான்) தங்கியிருக்கும் ஊர், கேள்—(எனது) மனைவி (மக்கள் முதலிய உறவினர்கள்.)

அப்படியே இதையெல்லாம் விட
பெரிதாகவுள்ள தத்வார்த்தத்தில்.

அகம்—நான் என்ற சப்தத்தினுல் சொல்லப்படுகின்ற ஆத்ம ஸ்வரூபம், ஜீவாத்மாவைக்காட்டிலும் வேறுபட்டதே, ஆம்—ஆகும் (என்று வேதங்களில் சொல்லப்பட்டிருப்ப

துடன், அனுபவித்தும் வருகிறேன்), எனும்—என்ற, இ-இந்த (அவித்தையினுல் ஏற்பட்டு ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கிருேம் என்ற ஞானம் இல்லாமல்), பிமரம்—ப்ரமை அதாவது அக் ஞானம், கெட—அழியும்வண்ணம், மெய்ப்பொருள்—''தத்வ மஸி'' என்று வேதங்களின் சிகரமாகிய உபநிஷத்துக்களினுல் போதிக்கப் படுகின்ற உண்மையான பொருளாகிய தத்து வத்தை, பேசியவா—(ஞான பண்டிதனுக இருந்துகொண்டு) பேசியவனே, இஃது என்ன வியப்பு!!

**தாத்பர்யம்**

ஏ குமரா நான் வாழும் ஊர், என்முன்னேர்கள் வாழ்ந்துகொண்டிருந்த ஊர், அப்படியே என் உற வினர்கள், என் மனேவி மக்கள் எல்லோரும் விரும்பி வாழும் ஊர். இவர்கள் என்னுடைய மனேவி, இவர்கள் என்னுடைய குழந்தைகள் என்ற பாசத்தினுல் நான் என்னுடைய அன்பினே யெல்லாம் மனேவி மக்கள் உறவினர்கள் இவர்களிடம் வைத்து ''என்னுடையது, என்னுடையது' என்ற 'மம'காரத்துடன் இருந்து வரு கிறேன். மனேவி மக்களே விட்டுப் பிரிய மனம் இல்லாத வனுய் அவர்களிடமே என்னுடைய ஆத்மப்ரீதியை வைக்கிறேன்.

மனேவி மக்கள் யார்? வீடுவாசல் என்பவை என்ன? உறவினர்கள் என்பவர் யாவர்? இவைகளேப்பற்றி நாம் ஏன் கவலேப்படவேண்டும்? நான் பிறக்கும் பொழுது இவர்கள் என்னுடன் வரவும் இல்லே. இறக்கும் பொழுதுகூட வரப்போகிறதும் இல்லே. இவர்களேத் திருப்திசெய்யும் பொருள்களிடத்தில் நமக்கு ஏன் ஆசை வரவேண்டும்? நாம் வாழும் ஊர் என்பதினுல் ஏன் நமக்கு விசேஷ அன்புவரவேண்டும்? இதனே யெல்லாம் பற்றி நாம் ஏன் சிந்திப்பதில்லே?

மனிதர்கள் இறந்துபோய் விடுகிறார்கள். அவர்கள் திரும்பிவருவதில்லை. அவர்களிடத்தில் நமக்கு ஏன் அன்பு ஏற்படவேண்டும்?

மேலும் மனைவி மக்களுக்கு ஏதாவது துன்பம் வந்தால் அத்துன்பத்தினை எனக்கு வந்ததாகவே அனுபவிக்கிறேனே. இதன் தத்துவம்தான் என்ன?

வாழ்நாள் முழுவதும் ஆசாபாசங்களினால் கட்டுப் பட்டுத்தான் இருக்கவேண்டுமா? ஒரு சமயம் மனைவி மக்களிடத்தில் அன்பும் மற்றொரு சமயம் வெறுப்பும் ஏன் உண்டாகவேண்டும்? இந்த உடலுக்கு மனைவி இன்பம் தரும்போது அவளிடத்தில் ப்ரேமையும், தராதபோது கோபமும் உண்டாகிறது. ஏன் இவ்விதம் இருக்கவேண்டும்?

இவர்களுடைய சுகத்திற்காக நான் செய்யும் உலக காரியங்களில் பற்றுதலும் வெறுப்பும் ஏன் ஏற்படு கிறது. வீடு, வாசல், மனைவி மக்கள் இவர்களை பிரிந் தால் பைத்தியம் பிடித்தவன் போல் மனதில் ஏன் வேதனையை அடைகிறேன்? ஏன் மனத் தளர்ச்சியை அடைகிறேன்?

உயிர்போனதும் மனைவியோ, மக்களோ, அப் படியே உறவினர்களோ யாரும் கூட வரப் போகிற தில்லை, இருந்தும் இவர்களை விட்டுவிட மனம் வராமல் இவர்களை என் செல்வமாகக் கருதி, செல்வக்குமரனை நினைக்காமல் இருக்கிறேனே. என்னே என் ப்ரமை!!!

எல்லாம் கானல் நீர் போல இருக்கிறது. நான் என்று சொல்லப்படும் ஆத்மாவை ஜீவன் என்றும், ஸம்ஸாரி என்றும் நினைத்து இந்தப் பிறவிக் கடலில் மூழ்கிக் கொண்டிருக்கிறேனே. இத்தகைய பிரமை ஏன் உண்டாகவேண்டும்? இஃது எனக்கு எல்லையற்ற

வியப்பையே அளிக்கிறது. இத்தகைய ப்ரமை என்னை விட்டு எப்பொழுது போகப்போகிறதோ! தெரியவில்லை?

இப் ப்ரமையைத்தான் அனாதிகாலமாக, வந்து கொண்டிருக்கிற அவித்யை என்று வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அவித்தை அழிய ப்ரும்ம வித்தை தேவை. ப்ரும்ம விதததையை உபதேசித்து அருளுபவன் குமரன் அல்லவா;

ஆக, குமரனே ஞானபண்டிதனாக விளங்குகிறான். குமரன் நமக்கெல்லாம் அவித்தையினால் உண்டாகப்பட்ட ப்ரமையைப் போக்கடிக்க உபதேசிக்கிற மெய்ப்பொருளோவெனில்;—

ஆத்ம ஸ்வருபம்தான் மேலான ப்ரீதிக்குப் பாத்திரமாகும். வீடு, வாசல், சரீரம், மனைவி மக்கள் இவைகளிடத்தில் நாம் வைக்கும் அன்பானது ஆத்ம சுகத்தை ஒட்டியே ஏற்படுகிறது. ஆகவே மனிதர்கள் மனவி மக்கள் செல்வம் இவைகளிடத்தில் ப்ரீதியை வைத்து அனுபவிக்கிறார்கள்.

மேலும் ஒரு வஸ்துவை அனுபவிக்க முன் வரும் ஒருவன் தனது ப்ரீதியைத்தான் முதலில் எண்ணுகிறான். மற்ற வஸ்துக்களில் மூலகாரணமான ஆத்மா கலந்திருப்பதினால்தான் மற்ற வஸ்துக்கள் அன்பினிற்குப் பாத்திரமாக ஆகின்றன.

சரீரத்திலும் ஆத்மா கலந்திருப்பதினால்தான் சரீரமானது அன்பிற்குப் பாத்திரமாகிறது, காரணமோவெனில் முன் ஜன்மாவில் செய்த புண்ணிய பாபகர்மாவின் பலனாகிய ஸுகதுக்கங்களை அனுபவிக்கும் விஷயத்தில் இந்த நச்வரமான சரீரமானது ஸ்தானமாக இருக்கின்றபடியால், சரீரமானது ப்ரீதிக்கு ஏற்றதாக இருக்கிறது.

ப்ராரப்தத்தினுல் உண்டாகும் ஸுக துக்கங்களை ப்ராணிகள் மனைவி மக்கள் பொருள் இவைகளின் மூல மாக அனுபவிக்கின்ற படியால், முதன்முதலாக மனைவியானவள் ப்ரீதிக்குப் பாத்திரமாகிருள்.

ப்ரீதிக்குப் பாத்திரமான தன்னுடைய சரீரம், அந்த சரீரத்திற்கு சுகத்தைக் கொடுக்கின்ற மனைவி யினுடைய சரீரம், அப்படியே இவர்களுடைய மனோ நிலையினுடைய தன்மயபாவத்தினுல் ஸ்திரீ புருஷன் ஆகிய இருவர்களுக்கும் உண்டாகும் ஸம்பந்தத்தினுல் புத்திரனும் ப்ரீதிக்குப் பாத்திரமாகின்ருன்.

அப்படியே மனைவி மக்கள் உறவினர்கள், இவர் களிடத்தில் அளவிலாத அன்பானது ஏற்பட்டு, அதன் காரணமாக அவர்களுக்கு ஸுகத்தைக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணமானது மனத்தில் தோன்று கிறது. ஆதலால் வீடு வாசல் பொருள் இவைகளிடத் தில் ப்ரீதி உண்டாகிறது. அப்படியே பொருளினுல் அடையக்கூடிய ஆகார வகைகள், பானவகைகள் முத லியன ப்ரீதிக்குப் பாத்திரமாகிறது.

ஆனுல் ஒருவனுக்கு உண்டாகும் உண்மையான ப்ரீதியோ ஆத்மாவினிடத்தில்தான். ஆத்மாவினுடைய அதீனத்தில் மற்றவைகள் இருக்கின்றபடியால், அதா வது ஆத்மப்ரீதிக்கு மற்றவைகள் மூலகாரணமாக இருக்கின்றபடியால், ஒருவனுக்குத் தன்னுடைய சரீரம், மனைவி, மக்கள், உறவினர்கள், வீடு, வாசல், செல்வம் முதலியவைகளில் ப்ரீதியானது உண்டா கிறதே தவிர அன்னியில் மற்ற வஸ்துக்கள் ஆத்ம ப்ரீதிக்குக் காரணமாகாத போனுல், ஒரு காலத்திலும் ஒரு காரணத்தைக் கொண்டும் மற்ற வஸ்துக்கள் ஆத்ம ப்ரீதிக்குப் பாத்திரம் ஆகவே ஆகாது.

இதனுல் மனைவி மக்கள் செல்வம் இவைகளிடத்தில் உண்டாகும் ப்ரீதி ஆத்மாவை ஒட்டி ஏற்படும் ப்ரீதியே ஆகும் என்பது ஸித்தாந்தமாக வெளியாகிறதென்பதும் அல்லாமல் ப்ரத்யக்ஷானுபவமுமாக இருக்கின்றது அன்றே!

எனவே விஷயாதிகளில் உண்டாகும் ப்ரீதி கானல் நீர்போன்றது, துக்கத்திற்குக் காரணமானது.

ஒரு வஸ்துவை அடையும்போதும் ஆரம்பத்தில் துக்கம்தான். அடைந்ததை ரக்ஷிக்கும் விஷயத்திலும் துக்கம்தான். அது அழிந்துவிட்டால் அப்போதும் துக்கம்தான். இவ்விதம் ஆரம்பம் நடுவு முடிவு என்ற மூன்று காலங்களிலும் துக்கத்தையே கொண்டது விஷயஸுகம்.

இதிலிருந்து விஷயாதிகள் ஸ்வயமாகப் ப்ரீதிக்கு இருப்பிடமாவதில்லை. எனவே ஞானிகள் ஆத்மாவையே உபாஸிக்கிருர்கள். காரணம்? ஆத்மா ஒன்றுதான் ப்ரீதிக்கு இருப்பிடம்.

மனைவி, மக்கள், சரீரம், விடு, செல்வம் என்னும் விஷயாதிகளில் ஒருவனுக்கு உண்டாகும் அன்பானது, ப்ரீதிக்கு இருப்பிடமாயுள்ள ஆத்மாவை அவ்வஸ்துக்கள் சேர்ந்ததால் அல்லவா.

ஆனுல் ஆத்மாவிடத்தில் ஒருவனுக்கு உண்டாகும் ப்ரீதியானது, மனைவி மக்கள் செல்வம் முதலியவைகளை ஒட்டி ஏற்பட்டதல்ல. ஆத்மாவை ஒட்டி ஏற்பட்டதேதானும்.

இதிலிருந்து ஆத்மாவை விட ப்ரியமான வஸ்து வேருென்றுமே இல்லை என்பது ப்ரத்யக்ஷானுபவத்திலுலேயே வெளியாகவில்லையா?

மேலும் உலகில் ஆத்மாவை ரக்ஷித்துக் கொள்ளும் பொருட்டு மனைவி மக்கள் செல்வம் வீடு முதலியவை களைத் தியாகம் செய்கிறான். மற்றவனுக்கு அடிமை யாக வேலை செய்து ஆத்மாவை ரக்ஷிக்கவில்லையா?

நல்ல நடத்தை உள்ள ஒருவனுக்குப் பெரிய அப வாதம் ஒன்று ஏற்பட்டு விட்டால், அந்த லோகாபவா தத்திலிருந்து ஆத்மாவை ரக்ஷித்துக்கொள்ளத் தன்னு டைய சரீரத்தையே மாய்த்துக் கொள்கிறான். இதைவிட் மேலான உதாஹரணம் என்ன வேண்டும் ஆத்மா தான் மேலான ப்ரீதிக்கு இருப்பிடமான இடம் என்ப தற்கு?

ஆத்மாவை ரக்ஷித்துக்கொள்ளத் தன்னுடைய சரீ ரத்தையே தியாகம் செய்ய ப்ராணிகள் தயாராக இருக்கும்பொழுது, மனைவி மக்கள் முதலியவைகளை ஒருவன் தியாகம் செய்வதில் என்ன அதிசயம் இருக் கிறது? ஆச்சரியப்படுவதற்கே ஒன்றுமில்லை.

ஒருவனுக்கு சரீரம் மனைவி மக்கள் இவைகளில் உண்டாகும் ப்ரீதியானது தன்னுடைய ஆத்மாவை ஒட்டியே ஏற்படுகிறது. மனைவி மக்களை ஒட்டியல்ல.

ஆனால் இதற்கு மாறாக, ப்ராணிகளோ வெனில், உண்மையான தத்துவ ஞானம் இல்லாமல் என்னு டைய வீடு, என்னுடைய மனைவி, என்னுடைய மக்கள், என்னுடைய உறவினர்கள், என்னுடைய செல்வம். இவர்களை விட்டு நான் எவ்விதம் பிரிவேன்? நான் இல்லையென்றால் அவர்கள் கஷ்டப்படுவார்களே. என் குழந்தைகள் அல்லவா—அவர்களுக்கு வருங்காலத் திற்கு நான் சேர்த்துவைக்க வேண்டாமா? அன்னியில் என் மனைவி மக்கள் கஷ்டப்படுவார்களே என்று ப்ரமித்து வருகிறார்கள்.

இந்நிலையையே ''பிமரம்'' என்று பாட்டில் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது ப்ரமம் என்பது பிமரம் ஆக மாறினது.

பிமரம் என்றால் ஒரு நிலையைக் குறிக்கிறது. இல்லாமல் இருப்பதை இருப்பதுபோல் நாம் அனுபவிப்பதே ப்ரமம் ஆகும். ப்ரமம் ஆனது அக்ஞானத்தின் காரியம். கானல் நீர் எவ்விதம் தாகத்தைத் தணிக்க ஸாமர்த்தியமுள்ளதாக ஆகாதோ, அதுபோலவே அக்ஞானமானது முக்தியை அளிக்க ஸாமர்த்தியமுள்ளதாக ஆகாது.

அக்ஞானத்தின் கார்யம் இந்த உலகம். இதை நாம் அறியாமல் இந்த உலகம் மெய்யானது என்று மயங்கி நிற்பதே ப்ரமம் ஆகும். ப்ரமத்தினால் கட்டப்பட்டு மனைவி மக்கள் எனும் ஆசாபாசங்களினால் கட்டப்படுகிறான்.

ஆனால் உலக மயக்கம் ஆகிய ப்ரமம் வேரோடு அழிந்து போகும் வண்ணமுள்ள ஞானமாகிய மெய்ப்பொருளைப் பேசியவன் குமரனன்றோ! ஆதலால் ஒவ்வொருவனுடைய உள்ளத்திலும் அமரும்பதி செல்வக் குமரனே ஆவான்.

ஆதலால், ஏ மனமே, குமரன் பேசிய மெய்ப்பொருளினை சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள்.

எவ்விதம் ஸமுத்திரத்தில் ஓயாமல் அலையானது அடித்துக்கொண்டிருந்தாலும், அந்த அலையானது உண்மையில் ஜலம்தானே. ஆனால் சொல்லும்பொழுது அலை அடிக்கிறது என்று பிரித்துக் கூறுகிறோம் இதனால் அலை வேறு ஜலம் வேறு என்று ஆகிவிடுமா? ஒருபொழுதும் ஆகாது. ஸமுத்திரத்தினுடைய கார்யமன்றோ அலை.

அதுபோலவே அவித்தையினுல் ப்ராணிகள் ஜீவனைப்போல் தோன்றினுலும் உண்மையில் ஆத்மானந்த ஸாகரத்தின் காரியமான அலையாகவே ஆகிருர்கள் அன்ருே!

ப்ராணிகள் தங்களுடைய நிஜஸ்வருபமாகிய ப்ரம்மபாவத்தைவிட்டு ஜீவபாவத்தை அநுபவித்துக் கொண்டு துன்பங்களை அனுபவித்து வரும் நிலைக்குத் தான் ப்ரமம் என்று பெயர்.

ஹே தானவ நாசகனே! மூலாக்ஞான ஸ்வருபியாக சூரபத்மாஸுரன் முதலிய அசுரர்களைப் போரில் அழித்தவனே! நீ பேசிய மெய்ப்பொருளினை நான் என்னவென்று போற்றிப் புகழ்வேன், இவ்வாறு யார் எனக்கு மெய்ப்பொருளை உபதேசித்து அருளப் போகிருர்.

நீ ஸதா காலமும் ‘அமரும் பதி’ எனது மனதே ஆகும். நீயோ கிரிராஜகுமாரி மகன் அல்லவா?

ஏ குமரா! நீயோ ஞானபண்டிதன். உனது தாயாகிய பார்வதியோ தவத்தின் இருப்பிடமானவள். தவத்தினுலேயே தபோமூர்த்தியாகிய சிவபெருமானை அடைந்தவள். உன் தாயின் தந்தையாகிய கிரிராஜன் புண்ணியத்தின் இருப்பிடமாவார். எண்ணிலா கோடி முனிவர்கள் இமயமலையில் தவம் செய்து வருகிருர்கள். இதற்கெல்லாம் மேலாக எல்லாம் வல்ல சிவபெருமான் தவம் செய்துகொண்டிருக்கிருர்.

உன் தந்தையாகிய ஈசனுக்கு ஞானமொழி பேசியருளிய செல்வக்குமரன் என்று போற்றப்படும் ஹே ஞானபண்டிதனே! நீ என்னிடமுள்ள ப்ரமம் வேரோடு அழியும் வண்ணம் மெய்ப்பொருள் பேசியவன் அன்ருே. இஃது எனக்கு ஒரு பெரும் வியப்பையே அளிக்கிறது.

உன்னுடைய தாய் பார்வதிதேவி இமயமலையையே இருப்பிடமாகக்கொண்டிருக்கிருள். உனது பிதாவாகிய சிவபெருமான் இமயமலையையே இருப்பிடமாகக் கொண்டிருக்கிருர். ஏன்! ஞான மலையன்ரே இமயமலை.

உன் தாய் தந்தையர்களான பார்வதி பரமேச்வரன் இமயமலையிலுள்ள மஹாகைலாஸத்தையே இருப்பிடமாகக் கொண்டும், நீ அம் மாபெரும் ஞான மலையாகிய இமயத்தை விட்டு இறங்கி மண்ணுலகில் உள்ள ஒவ்வொரு குன்றிலும் தோன்றி, குன்றெல்லாம் குமரன் என்று யாவராலும் போற்றப்பட்டு, முக்கியமாகத் தென்னகத்திலுள்ள ஒவ்வொரு குன்றிலும் தோன்றி ப்ராணிகள் உய்யும் வண்ணம் மெய்ப்பொருள் பேசி வருகிருயே? இத்தகைய நின் கருணையை யான் என்னவென்று சொல்வேன்?

ஏ செல்வக் குமரா! நீ அமரும் புண்ணியத்தலம் எனது மனதே ஆகும். நீ என் மனதிலிருந்துகொண்டு மெய்ப்பொருள் பேசி எனக்கு உண்டான ப்ரமத்தை என்னுடன் அணுகா வண்ணம் வேரோடு அழித்துத் தள்ளி அருள்வாய் அப்பனே!

ஆதலால் ஒவ்வொருவனும் மனதில் உலக ஞானத்தை வைத்துக்கொள்ளாமல், அதாவது அந்தப் பொய்யான உலகத்தில் பற்றுதலைக் கொஞ்சம், கொஞ்சமாக விட்டுக்கொண்டே அதன் மூலமாக மனைவி மக்கள் முதலியவைகளில் உள்ள அபிமானத்தை விட்டு, அப்படியே நாளடைவில் இது என்னுடைய சரீரம், என்னும் தேகாபிமானத்தை விட்டு அதன் மகிமையினுல் துறவி நிலையை அடைந்து, ஞான நிஷ்டையில் நின்று செல்வக் குமரனுன ஞான பண்டிதன் இமைப்பொழுதும் நீங்காவண்ணம் இருப்

பதற்கே நமது மனதானது இருந்துவருகிறது என்ற நிலையில் இருக்கவேண்டும். இத்தகைய மனதுதான் குமரன் அமரும்பதி, குமரன் குடியிருக்கும் இடம். இம்மனதாகிய புண்ணியத்தலத்தில் ஞானவேலினைக் கையில் தாங்கி குமரன் பேசும் பேச்சே மெய்ப்பொருளாகும்!

அம்மெய்ப்பொருளினைக் கேட்டுக்கொண்டு இருக்கும் பொழுதே ப்ரமம் என்று சொல்லப்படும் உலக வாழ்க்கையிலிருந்து விடுபட்டு, அதாவது உலக வாழ்க்கை முற்றிலும் பொய், ப்ரமையேதானுகும் என்றதொரு தெளிந்த ஞானத்தை மனிதன் அடைகிருன்.

ஞானத்தை அடைந்த அத்தகைய மஹான்கள் சொல்லும் அனுபவ மெய்ப் பொருள் வாக்யமோ வெனில் திருமந்திரத்தில் கூறியுள்ள

கடவுளும் நானும் ஒன்று.

என்ற வாக்கியமேதானுகும். இதுவே மெய்ப்பொருள் வாக்கியமாகும். குமரனுடைய அருள் ஒன்றினுல்தான் அத்வைதானுபவம் உண்டாகும்.

எனவே குமரனின் அருளில்லையேல் அத்வைதானுபவத்தை நாம் ஒருக்காலும் அடையவே முடியாது. அருளைப் பெருவதற்கு அநுபூதியை இடைவிடாமல் பாடிக்கொண்டேயிருக்க வேண்டும். அப்பொழுதுதான் அநுபூதியை நாம் பெறலாம்.

நினைத்தாற் சித்தத் துறைவோனேன்

என்று குமரனைப் புகழ்கிருர்கள் மஹான்கள். ஏன் தெரியுமா? தன்னை அன்புடனே அன்பில்லாமலோ நினைப்பவர்களுடைய உள்ளத்தில் குமரன் ஓடிவந்து

குடிகொள்கிறான். குமரன் உள்ளத்தில் அமர்ந்தவுடன் அடியார்கள் அமரர்களாகி விடுகிறார்கள்.

ஆகையினால் ப்ராணிகள் மங்கள ரூபத்தோடுள்ள செல்வக் குமரனையே அமரும் பதியாக அவர் அவர்களுடைய மனதில் வைத்து தியானம் செய்யவேண்டும் என்பது ஸித்தாந்தமாக வெளியாகிறது.

இந்த பாவத்திலேயே அநுபூதியைப் பாராயணம் செய்யவேண்டும். அப்பொழுது தெரியும் அநுபூதியின் பெருமை. அநுபவத்தில் அனுபவிக்க வேண்டியதே அநுபூதியாகும்.



# பெண்ணாசை ஒழிக்க

9



மட்டூர்குழல் மங்கையர் மையல்வலைப்
பட்டுசல் படும் படரென்றொழிவேன்
தட்டுடற வேல் சைலத் தெறியும்
நிட்டூர நிராகுல நிர்ப்பயனே.

பதவுரை

சைலத்து—கிரவுஞ்ச மலையின் மீது, தட்டுஅற—தடைகள் ஒன்றும் இல்லாமல், ஊடு—ஊடுருவிச்செல்லும்படி, வேல்—வேற்படையை, எறியும்—எறிந்த, நிட்டூர—கொடுமை வாய்ந்தவனே, நிராகுல—துன்பம் இல்லாதவனே, நிர்ப் பயனே—பயமில்லாதவனே, மட்டு ஊர்—வாஸனைகொண்ட, குழல்—கூந்தலையுடைய, மங்கையர்—பெண்களது, மையல்—கண்வீச்சாகிய, வலை—வலையிலே, பட்டு—சிக்கிக்கொண்டு, ஊசல்படும்—ஊஞ்சல் ஆடுவதுபோல் அல்லாடிக்கொண்டு இருக்கிற, படர்—துன்பங்களிலிருந்து, என்று—எப்பொழுது, ஒழிவேன்—ஒழிவேனோ அதாவது நீங்கி இருப்பேனோ? தெரியவில்லையே.

**தாத்பர்யம்:**

ஹே முருகா! மோகமாகிய வலேயில் அகப்பட்டுக் கொண்டு ஊசல் ஆடிக் கொண்டு இருக்கிற என்னைக் காப்பாற்றி என்றுதான் அருளப் போகிறுயோ.

ஏனெனில் 'மங்கையர் மையல் வலே' என்பது துறவிகளுடைய உள்ளங்களேயும் இழுத்துவரும் சக்தியினைக் கொண்டது. இப்படியிருக்க ஸாமான்யப் பட்டவர்களேப்பற்றிக் கேட்கவேண்டுமா?

எனவே ப்ராணிகள் மங்கையர்களின் கண் வீச்சில் சிக்கிக் கொண்டு தன் விவேகத்தை இழந்து வாஸனை நிறைந்த புஷ்பங்களே அணிந்து கொண்டிருக்கிற அவர்களுடைய கூந்தலின் அழகினைக் கண்டு மயங்கி விடுகிறுர்கள். இதற்குக் காரணம், அவர்கள் தங்களுடைய கண் வீச்சிலே வசீகரண சக்தியையும், கூந்தலிலே ப்ராணிகளுடைய மனதினை கொள்ளே கொண்டு அவைகளே லயிக்க வைக்கும் சக்தியினையும் கொண்டுள்ளார்கள்.

ஆதலால் மட்டூர் குழல் மங்கையர் என்பதினை அம்மங்கையர்களுடைய பின் அலங்காரம் என்றும், மங்கையர் மையல்வலே என்பதை அவர்களுடைய முன் அலங்காரம் என்றும் பாடலில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

ஆனல் இம் மங்கையர்களேத் திருவள்ளுவர்,

இருமனப் பெண்டிர்

என்று, அதாவது இரண்டு விதமான எண்ணங்களே யுடைய விலேமாதர்கள் என்கிறுர்.

எனவே அவர்கள் தங்களுடைய வசீகர பார்வையினல் ப்ராணிகளே மயக்கி மோகமாகிய வலேயில்

சிக்கும் வண்ணம் செய்கிறார்கள். அப்படி சிக்கினவர்களுடைய உடல் உயிர் பொருள் அனைத்தையும் தங்களிடம் வரச் செய்கிறார்கள்.

இதன் விளைவாகப் ப்ராணிகள் தங்களுடைய வீடு வாசல் பொருள் ஆகியவைகளை விலைமாதர்களுக்கு அர்ப்பணம் செய்து, தங்களுடைய சொந்த மனைவி மக்களிடம் உயிருக்கு உயிராய் வைத்திருந்த அன்பினை விலைமாதர்களிடம் வைக்கிறார்கள். அவர்களுடைய சொல்லைக் கரும்புபோல் தித்திக்கின்றது என்றும், வாயைப் பவளம் என்றும், பலவிதமாகப் புகழ்ந்து போற்றுவார்கள்.

இவ்விதம் மோகவலையில் சிக்கித் தங்களுடைய சொல்லை அமிர்தம்போல் பானம் செய்துவரும் ப்ராணிகளுடைய அன்பு தங்களிடத்தில் நிலைத்து இருந்தால் தான் அவர்களுடைய எல்லாப் பொருள்களையும் தம் வசம் ஆக்கிக்கொள்ள முடியும் என்ற எண்ணத்தினை உடைய விலைமாதர்கள், தங்களுடைய வாஸனை நிறைந்த கூந்தலினை மோந்து மோந்து அநுபவிப்பதற்கு ஏற்றவாறு தங்களுடைய பின் அலங்காரத்தினை அவர்களுக்குக்காட்டி, தங்களைப் பின்புறத்திலிருந்து ஆலிங்கனம் செய்து கொள்ள வைத்து அப்படியே அவர்களைப் புகழ்ந்து, அவர்களை மதன லீலை செய்து கொள்ளுமாறு செய்கிறார்கள். இதன் காரணமாகப் ப்ராணிகள் விலைமாதர்கள் வீட்டிலேயே கிடந்து உழலுகிறார்கள். மனைவி மக்கள்களை விட்டு விடுகிறார்கள்.

உண்மையில் பார்க்கப் போவோமானால் விலைமாதர்களின் கண்வீச்சினால் அடையப்போகும் சுகம் இமையளவு காலமேயாகும். இருந்தும் அவர்கள் இவ் இமையளவு போக சுகத்தை, தங்களுடைய இனிய

மொழிகளினுல் ஒரு கல்பகால சுகமாக எண்ணும்படி செய்து, சிற்றின்பத்தினைப் பேரின்பமாக எண்ணும்படி செய்து ப்ராணிகளை ஆட்டி வைக்கிருர்கள். எது வரைக்கும்? ஒருவனிடம் செல்வம் இருக்கும் வரையில்.

செல்வம் குறைந்தால் விலை மாதர்களின் அன்பும் குறைந்துகொண்டே வரும்.

எனவே இருமனப் பெண்டிர்களான விலைமாதர் களின் அன்பானது ஒருவனிடத்திலுள்ள செல்வத் தினையே ஒட்டியிருக்கிறது. அன்பினை மேலும் மேலும் ஒருவனிடம் ஒரு விலைமாது காட்டினுல், அவள் அவனிடமிருந்து மேலும் மேலும் செல்வத்தையே எதிர்பார்க்கிருள் என்பது ஸித்தமாகிறது அல்லவா! ஆனுல் இதை மோக வலையில் சிக்கியவன் அறிகிருன் இல்லை, ஏன்? அவன் விவேகமுள்ள தன்னுடைய புத்தியை இழக்கிருன். அவளையே உயிருக்கு உயிராய் எண்ணுகிருன்.

தவிர கடலில் மேலும் மேலும் ஓயாது வளர்கின்ற அலைபோல் விலைமாதின் மேல் குன்ருத அழகினை மேன் மேலும் கண்டு கொண்டு, எண்ணற்ற அளவில் பலபல விதமாக அவளை அனுபவிக்கலாம் என்ற எண்ணங் களை மனதில் கற்பனை செய்து கொண்டு இருக்கின் ருனே தவிர, தன்னுடைய செல்வம் குறைந்து விட் டால் கரையிலிட்ட மீன் போல் தன்கதி ஆகிவிடுமே என்று நினைக்கிருன் இல்லை. இ∴து என்ன கஷ்டம்!

உண்மை இவ்விதமிருக்க முருகா! நான் ஏன் விலை மாதர்களை நாடியே செல்லுகிறேன். இது அவர்களு டைய கண்பார்வையின் சக்தியைக் காட்டுகிறதா? அல்லது என் அறிவீனத்தைக் காட்டுகிறதா? ஒன்றும் தெரியவில்லையே அப்பனே.

ஹே செல்வக்குமரா, ப்ரும்மச்சாரி, க்ருஹஸ்தன், வானப்ரஸ்தன், ஸன்யாஸம் என்று சொல்லப்படும் நான்கு ஆசிரமங்களில் வைத்து க்ருஹஸ்தாச்ரமமே முக்தியை அடைய சுலபமான வழியென்றும், உத்த மோத்தமான வழியென்றும் சாஸ்திரங்களில் சொல்லப் பட்டு இருக்கிறது. தவிர மஹான்களும் வாழ்க்கை யில் தர்ம பத்தினிகளோடு இருந்த வண்ணமாகவே முக்தியை அடைந்திருக்கிருர்கள்.

நாஞே வெனில் வாழ்க்கையின் லக்ஷியத்தை இழந்து தாஸிகளிடத்திலேயே என் வாழ்நாளைக் கழிக் கிறேனே தவிர, தர்மவழியில் இல்லற வாழ்க்கை நடத் தினவஞக இல்லை. தர்மபத்தினியுடன் இல்வாழ்க்கை நடத்தி இருந்தால் எனக்கு இந்த மாதிரி கதி ஏற்படுமா?

நாஞே வெனில் மட்டூர் குழல் மையல் வலையில் பட்டு ஊசலாடிக் கொண்டிருக்கிறேன். அதாவது என் வீட்டிற்கும், விலைமாதர்களின் வீட்டிற்குமாக.

மேற்கூறிய ஸாமான்ய அர்த்தத்தில் பாட்டிற்குத் தாத்பர்யமில்லை. மங்கையர்களின் மையல் வலையில் சிக்கியவன் இறைவனையடைவதற்காக அளிக்கப்பட்டி ருக்கிற புத்தியையே இழந்துவிடுகிருன் என்பதை யெடுத்துக் காட்டவே பாட்டில் அருணகிரிநாதர்,

மட்டூர் குழல் மங்கையர் மையல் வலைப்
பட்டுசல்படும் படரென் ருெழிவேன்

என்று சொல்கின்ருர். காரணம் இன்று இன்பமாகத் தோன்றுகிற ஸ்திரீ சாபல்யமே பின்பு துன்பமாக முடி வடைகிறது என்பதையுணர்த்துவதையே இப்பாடல் குறிக்கோளாகக் கொண்டுள்ளது.

எனவே இந்தப் பாட்டில் மங்கையர்களின் கண் வீச்சை வலேயாகவும், அந்தக் கண் வீச்சாகிய வலே யில் அகப்பட்டுக்கொண்டு அதனுல் உண்டாகும் துன்பத்தினை "ஊசல்படும்" ஊஞ்சலேப் போலுள்ளது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன் உள்கருத்தோ வெனில்:—

ஒரு செம்படவன் ஒருதரம் தன்னுடைய வலேயை கடலில் வீசுவானேயாகில் அவ்வலேயில் எண்ணற்ற மீன்கள் சிக்கிக் கொள்கின்றன. சிக்கிக் கொண்ட மீன் கள் அவைகளுடைய ஸ்வாதந்திரியத்தை இழந்து வெளிவரமுடியாமல் அவ்வலேக்குள்ளே அங்குமிங்கும் அல்லாடுகின்றன.

அதுபோலவே ஒரு விலேமாதானவள் தன்னுடைய கண்வீச்சு என்கிற வலேயில் அனேக மனிதர்களே சிக்கச் செய்து, அக் கண் வீச்சாகிய வலேயிலிருந்து அவர்களே வெளிவர முடியாமலும் செய்து, அப்படியே அவர்களுக்குத் தன்னே அனுபவிக்க வேண்டுமென்ற உணர்ச்சியைக் கிளப்பி, அப்படியே அவ்வுணர்ச்சியின் காரணமாக அவர்களுடைய விவேகத்தை இழக்கும் வண்ணம் செய்கிருள்.

விவேகத்தை இழந்த புருஷர்களோ வெனில் கண் வீச்சாகிய வலேயில் சிக்கிவிடுகின்றபடியால், விலே மாதர்களின் அழகில் மயங்கி அவளிடம் சம்போக சுகத்தை அடைய முன்வரும்பொழுது, அவ்விலேமாதா னவள் தன்னிடமிருந்து உண்டாகும் சுகத்தை அவர் களுக்குக் கொடுக்காமல், தன்னுடைய மைதீட்டிய கண் களினுலும், அலங்காரத்தினுலும் அவர்களுடைய மயக் கத்தை அதிகமாகவே செய்து ஏமாற்றிவிடுகிருள்.

ஆனுல் காமசுகத்தை அவ்விலேமாதிடமிருந்து எப் பொழுது அனுபவிப்போம், அக்காமசுகத்தை அவள்

எப்போது நமக்குத் தரப்போகிருள் என்று ஏங்கிக் கிடக்கும் புருஷர்கள் தங்கள் செல்வத்தை அவ்விலை மாதிடம் வாரி வாரி இறைக்கிருர்கள்.

சிலரிடம் அன்பினைக் காட்டி, மறுவினுடியே அவர்களிடம் வெறுப்பையும் காட்டுகிருர்கள். அவர்களுடைய அழகில் மயங்கிக்கிடக்கும் புருஷர்கள் தாஸியே கதி என்று இருந்து மேலும் மேலும் செல்வத்தை விலைமாதிடம் கொடுக்கிருர்கள். இருந்தும் அவ்விலைமாதானவள் சம்போக சுகத்தினை, தான் பெறும் செல்வத்தின் மதிப்பினைக்கொண்டு சிலருக்குக் கொடுத்துக் கொண்டும், சிலருக்கு சம்போக சுகத்தைக் கொடுக்காமல் ஆலிங்கனுதி சுகங்களை மட்டும் கொடுத்துக் கொண்டும், சிலருக்கு நாளை நாளை என்று காலத்தினைக் காட்டிக்கொண்டும் இருந்து வருகிருள்.

இவ்விதமிருந்தும் மனிதர்கள் அவ்விலைமாதிடம் வைராக்கியத்தை அடைவதில்லை. காரணமோவெனில் அவர்கள் ஊஞ்சலைப்போல் அங்குமிங்கும் அலைந்து கொண்டு அல்லல்படுவதேதாஞகும்.

ஊஞ்சலோவெனில் நாலுமுக்கிலும் சங்கிலியினுல் கட்டப்பட்டு ஒரு குறிப்பிட்ட அளவில் அங்குமிங்குமாக ஊசல் ஆடிக்கொண்டிருக்கிறது. ஊஞ்சலில் இருப்பவனும் ஸ்வாதந்திரியமற்று ஊஞ்சலினுடைய ஆட்டத்திற்குக் கட்டுப்பட்டதாய் ஆகிவிடுகிருன்.

அதுபோலவே ஒருவனுடைய மனதாகிய ஊஞ்சலை விலைமாது ஆனவள் தன்னுடைய வசத்தில் வைத்துக் கொண்டு, அதில் அவனை அமரவைத்து, தன்னுடைய கண்பார்வையை அங்குமிங்கும் ஒட்டிக்கொண்டு, அதன்முலமாக அவனிடம் தன்னுடைய கண்களின்

மூலமாக "என் கூந்தல் அழகினைப் பார்" என்று சொல்வதுபோல் கண்ணினை அசைக்க, உடனே அவன் அவ்விலைமாதின் கூந்தலைப் பார்த்து அக்கூந்தலின் அழகினை முழுதும் அனுபவிப்பதற்கு முன்பாகவே, மீண்டும் அவ்விலைமாதானவள் தன்னுடைய முகத்தைப் புன்னகை செய்துகொண்டு அவனிடம் "கூந்தலின் அழகை மட்டும் அநுபவித்தால் போதுமா, அதனைவிட இன்ப சுகத்தினைத் தரக்கூடிய என்னுடைய இரு குடங்கள் போன்ற ஸ்தனங்களை நீ அநுபவித்து இன் புற வேண்டாமா. எனவே நீ என்னுடைய ஸ்தனத் தின் ஸ்பர்சத்தினுல் உண்டாகும் இன்பத்தினை அனு பவிப்பாய்" என்று சொல்லும் வண்ணமுள்ள கண் ஒட்டத்தினுல் அவனைப்பார்த்து அவ்விலைமாது செய்ய, அவன் அதனை அநுபவிக்க முயலும்போது, அவ்விலை மாது தன் கண் ஒட்டத்தை வேறு இடத்தில் செலுத்தி அவனை ஒரு சுகத்தையும் அனுபவிக்காதபடி செய்து மயங்க வைத்து, அப்படியே அம்மயக்கத்தை அவ னுக்கு மேன்மேலும் அதிகமாக்கிக் கொண்டே நாள டைவில் அவனிடமுள்ள செல்வமனைத்தையும் உறிஞ்சி விடுகிருள். முடிவில் செல்வமற்றவனுக ஆகிருன். விலைமாதர்களும் செல்வமற்றவனை வேண்டாமென்று சொல்லிவிடுகிருர்கள்.

ஆனுல் விலைமாதர்களின் கண்வீச்சில் சிக்கியவன், "தன்னுடைய செல்வமனைத்தும் அழிந்துபோய் தன்னை விலைமாது வேண்டாமென்று சொல்லிவிட்டாள் என் பதினையும் நன்கு அறிந்தும்கூட" வைராக்யத்தை அடைகிருன் இல்லை. மீண்டும் அவளை எப்பொழுது அனுபவிப்பேன், என்று எண்ணி எண்ணி மனக்கிலே சத்தை அடைந்து, அவ்விலைமாதர்களை மீண்டும் அடைய அநேக துக்கங்களை அனுபவிக்கிருன்.

எனவே ஹே முருகா! இதுவரையில் நான் அனுப வித்தகஷ்டம் போதும். இனியும் என்னால் இவ்விதமனே கஷ்டத்தை அனுபவிக்க முடியாது. அமைதியற்ற மன தினையுடையவனாக இருக்கிறேன். ஐயனே! என்னைக் கைவிட்டு விடாதே. என்னை ஸ்திரீ மயக்கத்திலிருந்து நீங்கும்வண்ணம் செய்து அருள்வாய் முருகா.

நீயோவெனில், உன்னை வணங்கும் அடியார்களுக்கு உலக வாழ்விலே உண்டாகும் மயக்கத்தினைப் போக் கடிக்கிறேன் என்று சொல்லி இருக்கிறாயே. கூறுமடி யார்கள் வினைதீர்க்கவே நீ நின் திருக்கரத்தில் வேலி னைத் தாங்கி வருகிறாய். நானும் உன் அடியார்களில் ஒருவன் அன்றோ! நீ என்னிடத்தில் பாராமுகனாக இருக்கலாமா? இது உனக்கு நியாயமாகுமா?

மேலும் உன்னை மஹான்களோவெனில்

நலமிலன் நண்ணார்க்கு
நண்ணினர்க்கு நல்லன்

(உமாபதி சிவாச்சாரியார்)

என்று போற்றுகிறார்களே. ஆதலால் நான் உன்னை என் நெஞ்சாரப் போற்றுகிறேன்.

ஏ குமரா! மட்டூர் குழல் மங்கையர்களின் மையல் வலையில்பட்டு ஊசல்படும் அடியேனை எப்படி கை கொடுத்துத் தூக்குவது என்று என்னிடம் கேட்காதே அப்பனே.

நீ வேலை எடுத்துக் கிரவுஞ்சமலையின்மீது எறிய, அம்மாமகிமை தங்கிய வேலானது ஒருவிதமான தடை யுமின்றி அம்மலையைத் துளைத்துக்கொண்டு சென்ற வைபவத்தினை நான் என்னவென்று சொல்லிப்புகழு வேன் என்று சொல்லி அருணகிரியார் அக்கிரவுஞ்ச

மலையின் வைபவத்தை நமக்கெல்லாம் நினைவூட்டு கிறார்.

சூரபத்மாஸுரன் தம்பியாகிய தாரகாஸுரனுடைய மாயாபுரியில் கிரௌஞ்சாஸுரன் இருந்துகொண்டு தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வெகுகாலமாகத் துன்பங்களையே விளைவித்துக் கொண்டிருந்தான்.

இப்படியிருக்கையில் ஒரு சமயம் அகத்திய மாமுனிவர் மஹாகைலாஸத்தில் சிவபெருமானைத் தரி சித்து விட்டுத் தென்னகத்தை நோக்கி வந்து கொண் டிருந்தார்.

அவ்வேளையில் அக்கிரவுஞ்சாஸுரன் தன்னுடைய மாயாசக்திகளால் பல சிகரங்களையுடைய ஒரு பெரிய மலை வடிவாகத் தோன்றி அகத்திய மாமுனிவருக்கு இடையூறாக வழி மறைத்து நின்றான். முனிவரும் வழி யில் மலையிருக்கக் கண்டு, வேறு வழியாக வெகுதூரம் செல்ல, அதனைக் கண்ட அவ்அசுரன் மாயா சக்தி யினாலே கண்களுக்குப் புலப்படாமல் அவ்வழியினையும் மறைத்து நின்றான்.

இதனை அகத்திய மாமுனிவர் தியானத்தினால் அறிந்து மிகவும் சினங்கொண்டு மலைவடிவாகத் தோன்றின அவ்வசுரனை நோக்கி "அற்பனே, உன் நிஜ ஸ்வரூபத்தை மறைத்து மலைவடிவிலிருந்து எமக்கு வழிமறைத்து இடையூறு செய்தமையால், நீ என்றென் றும் இம்மலை ரூபத்திலேயே இருக்கக் கடவாய்!" என்று சபித்தார்.

உடனே அவ்வசுரன் "மாமுனிவரே, அடியேன் அறியாமையினால் செய்த பிழையைப் பொறுத்து மீண் டும் நிஜ ஸ்வரூபத்தினை அடையும் வண்ணம் அருள்

செய்யவேண்டும்'' என்று மனம் நொந்து வேண்டிக் கொண்டான்.

உடனே கருணைகொண்ட அம்மாபெரும் அகத்திய முனிவர் அவ்வசுரனிடம், "அற்பனே, உன் கர்வம் அடங்கும் பொருட்டே யாம் உம்மைச் சபித்தோம். இட்ட சாபம் இட்டதேதாகும். அதனை யாம் மாற்ற முடியாது. எனினும் நீ செய்த குற்றத்தை நினைந்து வருந்துவதினால் இச்சாபத்தின் முடிவினை உனக்குக் கூறுகிறேன் கேட்பாயாக.

நீ என்னுடைய சாபத்தினால் இம்மலைவடிவினையே உன்னுடைய ஸ்வருபமாக அடைந்தும், நல்வழியினை நாடமாட்டாய். முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் கொடுமையினையே செய்துகொண்டு இருப்பாய். முடிவில் தாரகாசுரன் முருகப்பெருமானுடன் யுத்தம் செய்யும்பொழுது நீ மலை வடிவான ரூபத்துடன் தாரகாசுரன் முன்பு தோன்றி, அவனைக் காப்பாற்றும் பொருட்டு அனேக மாயா சக்திகளைக்கொண்டு முருகப் பெருமானுடன் எதிர்த்துப் போர் செய்வாய்.

அவ்வேளையில் எல்லாம் வல்ல கார்த்திகை பாலனை முருகப்பெருமான் தமது சக்திவேலினால் உன்னையும் தாரகாசுரனையும் கொன்றுவீழ்த்துவார். அப்போது நீ சாப விமோசனமடைவாய் என்று சொல்லிச் சென்றார்.

ஹே முருகா! முனிவர் கூறியவண்ணமே அப்பெரும் மாயாவியான கிரௌஞ்சாஸுரன் உன்னிடம் போர் செய்ய நீ அவனை நோக்கி நீ உன் வேலை எறிய, அவ்வேலானது ஒருவிதமான தடையுமின்றி அவ்வசுரனுடைய மார்பில் ஊடுருவிச் சென்று அவனைக் கொன்று வீழ்த்தியதே இவ்விதம் நீ யுத்தம்

செய்யும்பொழுது போரினுல் அடையக்கூடிய துன்பம் எதையும் அடைந்தாய் இல்லை.

தவிர உலகமனைத்தும் அம்மாபெரும் கிரவுஞ்சாஸுரன் செய்யும் மாயப்போரினைக் கண்டு நடுங்க நீ ஒருவன் மட்டும் கடுகளவும் நடுங்காமல் சக்திவேலை உன் திருக்கரத்தில் தாங்கி விளையாட்டாக அவன்மேல் எறிந்து அவனைக் கொன்று வீழ்த்தினுயே.

இதனுல் நீ அடியார்களுக்குத் தீங்கு செய்துவரும் துஷ்டர்களின் விஷயத்தில் நிட்டூரனுக இருக்கிருய். அதாவது கொடுமை செய்பவனுக இருக்கிருய். இதனுலேயே நீ நிராகுலனுக ஆகிருய். அதாவது நீ அடியார்களுக்குத் துஷ்டர்களினுல் துன்பம் ஏற்பட்டால் அதனை நீ உனக்கு வந்ததாகக் கருதித் துக்கப்படுகிருய். அப்படியே அடியார்களுடைய துன்பத்தினை உனது வேலினுல் போக்கி துன்பமில்லாதவனுக ஆகிருய். அப்படியே அடியார்களுக்கு உண்டாகும் துன்பங்களைப் போக்கும் விஷயத்தில், நீ அச்சமற்றவனுய் எதனையும் எதிர்க்கும் வண்ணம் முன் வருகிருய்.

ஆதலால் ஹே முருகா, நீ நிட்டூர நிராகுல நிர்ப்பயனுக இருக்கிருய்.

நீ இவ்விதம் இருக்க நான் மட்டும் ஏன் மட்டூர் குழல் மங்கையர் மையல் வலையில்பட்டு ஊசலாடிக் கொண்டு துன்பத்தினை அடைந்து அல்லல்படுகிறேன். மாயவலையிலிருந்து என்னையும் விடுவிக்கக்கூடாதா? இதனுல் உனக்கு என்ன குறைந்துவிடப் போகிறது?

அளவுக்கடங்காத சக்தியினையும், புகழினையும் உடைய முருகா, விலைமாதர்களுடைய கண் வீச்சிலிருந்து என்றுதான்நான் விடுபட்டு, உன் திருவடியை

அடையப்போகிறேனே, அந்த நாள் எந்த நாளோ தெரியவில்லையே என்று ஏங்கிக்கொண்டிருக்கிற என்னிடம் உன் கடைக்கண் பார்வையைச் செலுத்தக்கூடாதா?

ஆகையால் ஒவ்வொருவரும் முருகப்பெருமானின் வேற்படையின் சக்தியின் பெருமையை நன்குணர்ந்து, 'வேல்முருகா வேல்முருகா' என்ற நினைவாகவேயிருந்து கொண்டு, அதன் மஹிமையினால் உள்ளத்தில் எழுகின்ற காம உணர்ச்சியை வேரோடு சுட்டெரித்துக் கொண்டு, உலகிலுள்ள ஸகல ஸ்திரீகளையும் ஸாக்ஷாத் பரதேவதையின் ஸ்வரூபமேயாகும் என்ற ஒரு புனிதமான எண்ணத்துடன் இருந்து வரவேண்டுமென்பதே இப்பாடலின் பரமஸித்தாந்தமாகும்.

எனவே ஸ்திரீகளைத் தெய்வமாக எண்ணுவதற்கு இந்தப் பாடலே மந்திர மயமாக விளங்குகிறது என்பதில் சிறிதும் ஐயமில்லை.



# எமனை வெல்ல

# 10



கார்மா மிசைகா லன்வரிற் கலபத்
தேர்மாமிசைவந் தெதிரப் படுவாய்
தார்மார்ப வலாரி தலாரி யெனும்
சூர்மா மடியத் தொடு வேலவனே.

**பதவுரை :**

தார் மார்ப — பாமாலை வெற்றிமாலை இவைகளை அணிந்த மார்பையுடையவனே, வலாரி—வலன் என்ற அசுர னுக்கு விரோதியாகிய தேவேந்திரனுடைய, தலம்—இருப்பி டமாகிய விண்ணுலகத்திற்கு. அரி—விரோதி, எனும்—என்று சொல்லப்படுகின்ற சூர்—சூரபத்மாஸுரனாகிய, மா—மாம ரம், மடிய—அழிந்து போகும் வண்ணம், தொடு—விட்டு எறிந்த, வேலவனே—வேலாயுதத்தை உடையவனே, கார் மா மிசை—கருத்த எருமைக்கடாவின் மீது, காலன்—ஸகல விதமான உயிர்களுடைய ஆயுள் காலத்தைக் கணக்கிடுபவ னாகிய இயமன், வரின்—எனது உயிரை எடுத்துச்செல்ல வரு வானேயாகில் அதாவது வரும்பொழுது, ஏர்—அழகிய, கல பத்து—தோகைகளையுடைய, மா மிசை — மயிலின் மீது,

வந்து—(திவ்ய மங்கள ரூபத்தில்) நீ வந்து, எதிரப்படுவாய்—(என்) முன்னிலேயில் தோன்றிக் காப்பாற்றி அருள்வாயாக.

**தாத்பர்யம்**

ஹே வேலவனே! கறுத்த எருமைக்கடாவின்மீது இயமன் என்னுடைய உயிரிஃன எடுத்துச்செல்ல வரும் பொழுது, நீ அழகிய தோகையிஃன உடைய மயில்மீது வந்து என்ஃனக் காப்பாற்றுவாயாக. அன்னியில் என்னுடைய வாழ்நாளே வீணுகிவிடும்.

ஒவ்வொரு ப்ராணிகளுடைய ஆயுளேயும் காலத்தையும் கணக்கிட்டு அந்தக் குறிப்பிட்ட காலம் வந்தவுடன் அவரவர்களுடைய உயிரை எமதர்மராஜாவானவர் எடுத்துவிடுவதால் அவர் காலன் எனச் சொல்லப்படுகிறுர்.

ப்ராணிகளுடைய உயிரிஃன இயமன் தன்னுடைய தூதர்களின் மூலமாகவே எடுக்கிறுன். உயிருடன் இருப்பவர்கள் தங்களுடைய உயிர் போய்விடுமோ என்று எண்ணி எண்ணி யமபாதையை நிஃனத்து அஞ்சுகிறுர்கள். ப்ராணன் போகும்போது என்ன உண்டாகுமோ என்று நடுங்குகிறுர்களே தவிர, உயிருக்கு உயிராய் இருக்கும் இறைவஃன நிஃனக்கிறுர்கள் இல்லே.

உயிரிஃன எடுத்துச் செல்ல வரும் யமதூதர்களோவெனில் அதிபயங்கரமான முகத்திஃனயும், மிக்க கொடூரமான வார்த்தைகளேயும் சொல்லிக்கொண்டே தங்களுடைய பாசங்களே வீசி ப்ராணிகளினுடைய உயிரிஃன எடுத்துச் செல்கிறுர்கள்.

அவ்வேளேயில் அவ் யமதூதர் மரணத்தை அடையப்போகும், ப்ராணிகளே நோக்கி "கொல்லுங்கள்

இவனை—வெட்டுங்கள் இவனை—இவன் மஹாபாபி, இவன் ஸாதுக்களைத் துன்புறுத்தியவன். இவனை உயிர் போகாவண்ணம் வைத்து சித்திரவதை செய்யுங்கள். இவன் வஞ்சகன்—பெண்களின் கற்பினை அழித்தவன். இவனைப் பழுக்கப் பழுக்கக் காய்ச்சின ஊசியினுல்குத்திக் குத்தி ஹிம்ஸித்துக் கொதிக்கும் மணல் நிறைந்த பாலைவனத்தில் இழுத்துச் செல்லவேண்டும் என்ற அதிக்ரூரமான சொற்களைச் சொல்லிக்கொண்டு வருவார்கள்.

மேலும் யமதூதர்களோவெனில் பயங்கரமான கத்திவகைகள், கதை, நெருப்பினைக் கக்கும் கதை இவைகளுடன் பயமுறுத்துவார்கள்.

கோரமான பற்களும், செம்மட்டை மயிரும், கறுத்த மேனியும், பெருத்த தேகமும், விஷத்தினைக் கக்கிக் கொண்டிருக்கும் பயங்கரமான ஸர்ப்பங்களுடனும், அனல் போன்ற மூச்சுடனும் இருந்துகொண்டு ப்ராணிகளுக்கு மரண பயத்தை உண்டுசெய்வார்கள்.

இவ்வேளையில் என்ன செய்யவேண்டும், எதை நினைக்கவேண்டும் என்று தோன்ருது. யமதூதர்களே இவ்விதம் நம்மை நடுங்கச் செய்யும்பொழுது உண்மையில் இயமனே வந்தானுகில் எப்படி இருக்கும்?

பாட்டில் ''காலன் வரின்'' என்றும் அதாவது எமன் வருவானேயாகில் என்று சொல்லி, அப்படியே ''வந்து எதிரப்படுவாய்'' என்றும் அதாவது நீ அவ்வேளையில் வந்து என் முன்னிலையில் தோன்றப்படுவாய் என்றும் சொல்லியிருப்பதால், இதன் உட்கருத்தானது தத்துவத்தையே நாடி நிற்கிறது.

காரணமோவெனில், சஞ்சலம் அற்ற மனதோடும், அளவிலாஅன்பினைக்கொண்ட பக்தியோடும், எல்லாம்

குமரனுடைய திருவிளையாடலேயாகும் என்ற உறுதியான எண்ணத்துடனும் இருந்து முருகப்பெருமானைப் போற்றிவரும் அடியார்களைக் கண்டால் எமதூதர்கள் நடுநடுங்கி ஓடிவிடுவார்கள். அடியார்கள் பாடிவரும் பாட்டே மந்திர ரூபமாயிருந்து யமதூதர்களைக்கிட்டே வரவொட்டாமல் விரட்டி விடுகிறது. எனவே அடியார்கள் மரண பயத்தை யமதூதர்களிடம் இருந்து ஒரு பொழுதும் எதிர்பார்ப்பதில்லை. குறிப்பிட்ட காலம் வரும்பொழுது அடியார்களை செல்வக்குமரன் தடுத்து ஆட்கொண்டு விடுவான். ஆக இறைவனே ஆட்கொண்டபிறகு இந்தவிஷயத்தில் நமக்கு வேலையில்லை என்று யமன் இருந்துவிடுகிறன்.

அப்படி ஒருவேளை காலன் பக்தர்களுடைய உயிரினை எடுத்துச்செல்ல வந்தால், அவ்வேளையிலும் பக்தர்கள் காலனுக்குப் பயப்படமாட்டார்கள். அவர்கள் சொல்லும் மந்திரமோவெனில்

சூலம் பிடித்தெம பாசம்
சுழற்றித் தொடர்ந்து வரும்
காலன் தனக்கொரு காலும்
அஞ்சேன் கடல்மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான்
குமாரன் அறுமுகவன்
வேலுந் திருக்கையும் உண்டே
நமக்கொரு மெய்த்துணையே

என்னும் அருணகிரிநாதருடைய பொன்வாக்யமேயாகும். ஆதலால் அடியார்களிடத்தில் ஒருகாலத்திலும் ஒரு காரணத்தைக் கொண்டும் இயமன் வரமாட்டான் என்பதில் ஐயமில்லை.

சிவபெருமானுடைய ம்ருத்யுஞ்சலீலையை இயமன் நன்கு அறிந்தவன் அன்றோ! எனவே,

நாமார்க்குங் குடியல்லோம் நமனை அஞ்
சோம் நரகத்திலிடர்ப்படோம், நடலை
யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம்
பணிவோமல்லோம் இன்பமே எந்நாளுந்
துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத்
தன்மையான சங்கரன்நற் சங்க வெண்
குழையோர் காதிற், கோமாற்கோமென்
றும் மீளா ஆளாய்க் கொய்ம் மலர்ச்
சேவடியிணையே குறுகினோமே

என்று திருநாவுக்கரசருடைய கர்ஜனையையே பலமாக வைத்துக்கொண்டு உள்ளுருகிப் பக்தி செய்யும் பக்தர்களிடத்தில் இயமன் எப்படி வருவான்? ஏன் வரப் போகிறான்? அவனால் வரத்தான் முடியுமா? அப்படி இயமன் வந்தாலும் அடியார்களின் உயிரினைத்தான் அவனால் எடுத்துச் செல்லமுடியுமா? இதனைக்கண்டு ஆறுபடை வீட்டினையுடைய செல்வக்குமரனின் திருக்கரத்திலுள்ள வடிவேல், அடியார்களின் உயிரினை எடுத்துச் செல்லுகின்ற எமனைத்தான் விட்டுவிடுமா?

அடியார்களுடைய இன்னல்களைத் துடைக்கவே வந்துள்ள தனித்தெய்வமல்லவா முருகப்பெருமான். இதனை நன்கு அறிந்தவன் இயமன். அடியார்களுடைய பெருமையின் சக்தியை அறிந்தவனும் ஆவான்.

எனினும் காலனானவன் ஒரு விநாடிகூட சும்மா யிருப்பதில்லை. வந்துகொண்டேதான் இருக்கிறான். ஒவ்வொரு நாள் ஆக ஆக நமது ஆயுள் குறைந்து கொண்டே இருக்கிறது. அவன் எப்பொழுது வருவான் என்பது தெரியாது.

ஏ வேலவனே! மரணத்தை நினைக்குங்கால், என்னுடம்பெல்லாம் நடுங்குகின்றது. நாஞேவெனில் இவ்வுலகை மெய்யென்று நம்பி மயங்கி உன் பெருமை தெரியாமல் துன்மார்க்கமெய்தி தாஸிகள் வீட்டிலேயே கிடந்து உழன்று என் ஜன்மாவை வீணுக்கிவிட்டேன் அப்பனே.

விட்டுவிடப் போகுதுயிர்
விட்டவுடனே உடலேச்சுட்டு
விடப்போகின்ருர் சுற்றத்தார்

என்பதினை நான் தெரிந்தும் உன்னுடைய பொற் திருவடியைப் போற்ருமல் போய்விட்டேனே. ஆதலால் காலன் வரும்பொழுது வந்து எதிரப்படுவாய்.

மேலும் ''காலன் வரின்'' என்பதில் உள்ள 'வரின்' என்ற பதத்திற்கு வருவானேயாகில் என்னும் சந்தேகார்த்தம் அடியார்களிடம்தான் அன்வயம் செய்ய வேண்டும்.

ஆனல் ''காலன் வரின்'' என்பதில் உள்ள 'வரின்' என்ற பதத்திற்கு அக்ஞானிகளாகிய ப்ராணிகளிடத்தில் பொருள்கூறினுல் வரின் என்ற பதத்திற்கு ''வந்தால்'' என்ற நிர்தாரணுர்த்தத்தையே கொள்ளவேண்டும். அதாவது காலன் வருவது என்பது நிச்சயம். ஆனுல் எப்பொழுது எந்த ரூபமாக வருவான் என்பது தான் தெரியாது. எனவே வரின் என்ற பதமானது காலன் வரும் வேளேயைப் ப்ராணிகளுக்கு 'இப்பவா—அப்பவா' என்று நிச்சயமாகக் கூறமுடியாமல் செய்கிறதே தவிர, நிச்சயமாகக் காலன் வருவான் என்பதில் சந்தேகத்தை உண்டுபண்ணவில்லே. எனவே யமனின் வருகையினேக் கண்டு, வந்து எதிரப்படுவாய் என்று கூறப்பட்டிருக்கிறது.

துஷ்டர்களினுடைய உயிரை எடுக்கவரும் காலனே வெனில் கொந்தளிக்கும் கடல்போல் கோபங்கொண்டு இரண்டு கண்களிலிருந்தும் நெருப்புப்பொறி பறக்க அக்னி ஜ்வாலை வீச அண்டங்கள் எல்லாம் கண்டு நடு நடுங்க தேவர்களெல்லாம் மருண்டு ஓட மாணிக்கக் கரைகட்டின வைரக்கிரீடம் அணிந்து புஜங்களிரண்டி லும் முறையே ஜாஜ்வல்யமாக ஜ்வலித்துக்கொண்டிருக் கும் மாபெரும் வாளும், சூலாயுதமும், அப்படியே மற்ற புஜங்கள் இரண்டிலும் முறையே பாசக்கயிறும், தண் டாயுதமும் வைத்துக்கொண்டு கரிய ஒரு மாபெரும் எருமைக் கடாவின் மீது ஏறிக்கொண்டுவர வெற்றி முரசு அடிக்க இருபுறமும் சேனைகள் பயங்கரமாயும் கொடுமையாயுமுள்ள ரூபத்தில் சூழ்ந்துவர, அவ்வரு கையினைக்கண்டே ப்ராணிகள் உயிரினை விட்டுவிடு வார்கள்.

ஆகையால் இவ்வுலகில் யாருக்கு யார் பந்து? மரணகாலத்தில் யார் துணை? இயமனை யாரால் தடுக்க முடியும்? மனைவி மக்கள் வீடு செல்வம் இவைகள் யம பாதையைத் தடுத்து நிறுத்துமோ? பயங்கரமான ஸர்ப்பத்தினைப்போல் உள்ள இயமனின் பாசக்கயிறு மேல் விழும்போது நம்மை எது காப்பாற்றும்?

இந்நிலையில் எந்தப் புண்ணியத்தினைக் கொண்டு நீண்ட ஆயுளை அடையமுடியும்.

ஒருவன் செய்யும் தர்மமே அவனுக்கு என்றென் றும் துணையாக இருக்கும். அத்தர்மமே யமபாதையைத் தடுக்கும் சக்தியினைக் கொண்டது. இப்பெருமையினை சிவவாக்கியர்

ஆடு நாடு தேடினுமானை சேனை தேடினும்
கோடி வாசி தேடினுங்குறுக்கே வந்து
நிற்குமோ?

ஓடியிட்ட பிச்சையும் உகந்து செய்த தர்மமும்
சாடிவிட்ட குதிரைபோல காலன் முன் வந்து
நிற்குமே.

என்று சொல்லுகிருர். செய்கின்ற தர்மம் ஒன்றுதான் மரணபாதையைத் தடுக்க ஸாமர்த்தியமுள்ளது.

அதிகம் சொல்வானேன். கரவாது தர்மம் செய்து வந்த அம்மாபெரும் வீரனை கொடை வள்ளல் கர்ணனை இறைவனுலேயே கொல்ல முடியாமல் ஓர் அந்தணர் வடிவந்தாங்கி அவன்முன் தோன்றி அவன் செய்த தர்மங்களையெல்லாம் தானமாகப் பெற்றுக் கொண்ட பிறகுதான் கொல்ல முடிந்தது என்ருல், அத்தர்மத்தின் பெருமைதான் என்னே?

ஆகையினுல் வேலவனே! நான் தர்மம் செய்தவனுகவோ, பக்தி செய்தவனுகவோ, உன் அடியார்களுக்குத் தொண்டு செய்தவனுகவோ இல்லை. யமபாதையைத் தடுக்க வல்லமையுள்ள தர்மம் என்னிடமில்லையே.

நீ ஒருவன்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். மாருது தோகை மயில் மீது ஏறி நீ என்முன்வந்து என் மரண பயத்தைப் போக்கடிக்க மாட்டாயா?

குமரா! பலவிதமான மாயாசக்திக்கு இருப்பிடமாகிய மாமர உருவங் கொண்ட சூரனைக் கொன்று வீழ்த்தி விண்ணுலகத்தை உனது சக்தி வேலாயுதத்தினுல் காத்தருளிய வெற்றி வேலாயுதா, என்னையும் உன் அடியார்களில் ஒருவனுகக் கொண்டு அருள்புரிவாய் அப்பனே.

வேலவனே! உனது திருக்கரத்திலுள்ள வேலினை நம்பியன்ரே, வானவர்கள் விண்ணுலகத்தில் நிலை

யுடன் இருந்து வருகிருர்கள். முருகா, அரிதாகிய இந்த மானிடப் பிறவியில் உன்னைப் புகழ்ந்து போற்றிக் களிக்கவில்லையே. எங்கும் பரந்துள்ள அருட் பெருங்கடலாகிய உன்னை என் நெஞ்சினிலிருத்திப் போற்றிக் கண்போல் காத்து அனுபவிக்கவில்லையே.

செல்வக் குமரா, அசுரேசர்போல எமதூதர் என்னைத் தொட்டுக் கட்ட வருமுன் நீ அழகிய மாருது தோகை மயிலின் மீது ஏறி என் முன் தோன்றி என்னைக் காப்பாற்றுவாய். காலனுக்குக் காலனுன உன் காலை உறுதி என்று எண்ணியிருக்கிறேன் ஐயனே.

கர்மாவை எரித்த பிறகு மிஞ்சுவது சுத்த ஸத்வ ஞானமாகும்! எல்லா வஸ்துக்களையும் எரித்தால் முடிவில் மிஞ்சுவது வெளுப்பான பஸ்பமேதாகுகும். உலக ரீதியில் நாம் பலபல ரூபங்களைப் பார்த்தாலும் முடிவில் மிஞ்சுவது பஸ்மம்.

கற்பனைக்கு அடங்காத உலகம் ஒரு பிடி சாம்பலில் அடங்கி ஒடுங்கிவிடுகிறது.

ஞானமயமான செஞ்சுடர்ப் பழமே! ஞான வாள் ஏந்தி என் கண் முன்னே தோன்றுவாய். நீ தோன்றினுலே போதும். அதுவே மரணபயத்தை அகற்றும்.

நின் கருணை நின் பெருமையை நினைவூட்டியது. எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்பது நினது அருள் அன்ரே! முருகா, முருகா, என்று உன்னை உள்ளுருகி அழைக்கிறேன். நினது திருவருளினுல்,

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்
ளோரும் முடிவிலொரு பிடி சாம்பராய்
வெந்துமண்ணுவ தும்கண்டு — மேலு
மிந்தப் படி சார்ந்த வாழ்வை நினைப்பதல்

லால் பொன்னினம் பலவன் அடி சார்ந்து
நாமுய்ய வேண்டு மென்றே யறி
வாரிலேயே.

என்று பட்டினத்தடிகளின் பொன்மொழிகளில் புதைந்து கிடக்கும் உண்மையான தத்துவத்தினை நான் அறியும் பாக்கியம் கிட்டியது. எத்தனேயோ பற்பல பிறவிகளில் செய்த புண்ணியத்தின் பயனே, நான் இவ் வரிய மானிடப் பிறவியைப் பெற்று இருக்கிறேன். அடுத்த பிறவி என்ன பிறவியோ தெரியவில்லை. இவ் வரிய மானிடப் பிறவியில் நான் உய்ய வேண்டாமா? நீயே சொல் அப்பனே.

'நானே நீ—நீயே நான்' என்ற அபேத ஞானத்துடன் என்றுதான் நான் உன்னைக் காணப்போகிறேனே, தெரியவில்லையே அப்பனே.

செல்வக்குமரா! உன் திருக்கரத்திலே தாங்கியுள்ள சக்தி வேலினைக் கண்டு பயந்து காற்று வீசுகிறது. பயத்தின் காரணமாகவே சூரிய பகவான் உதித்து அஸ்தமிக்கிறான். பயத்தின் காரணமாகவே இந்திரன் யமன் முதலியவர்கள் நடுநடுங்கி ஒடுகின்றனர் என்று வேதங்கள் கோஷிக்கின்றன.

எனவே எமனென காலன் உன் ஆதீனத்தில் இருக்கின்றான். நீயோ அண்ட சராசரங்களையும் ஆட்டி வைக்கிறாய்.

செல்வக்குமரனே, இன்று முதல் என்னையும் நீ உன் அடியார்களில் ஒருவனாகக் கொண்டு அருளவேண்டும். காலன் வரும்பொழுது உன்னைத் தவிர நான் ஒரு தெய்வத்தையும் நினைக்கவோ புகழவோ மாட்டேன். தஞ்சத்தருள் சண்முகன் அல்லவா நீ.

செல்வக் குமரா! நீ மாருத் தோகை மயில் மீது என் கண்முன்னே நிற்கும்போது, கண்ணுர உன்னை யன்றி யாரை நான் காண்பேன். என் எண்ணமெல்லாம் உன்னிடத்தில்தானே இருக்கும்.

செல்வக்குமரா, ஐயனே, நான் கடைசியாக உன்னை வேண்டுவது என்னவென்ருல் ஒன்றே ஒன்றுதான்.

கந்தா என்று உன்னை மனமுருகி நான் அழைத்தால், நீ என் நெஞ்சிலுள்ள கவலைகளைப் போக்கி, புத்துயிர் அளித்து, அஞ்சேல் அஞ்சேல் என்று கூறி என் மனக்கண்முன்னே வடிவேலுடன் தோன்றிக் கண்ணுர என்னைப் பார்க்க வேண்டும்.

இவ்விதம் உனதருள் எனக்கு இருக்குமாளுல் நான் காலன் வருவதைப் பற்றி நினைக்கவோ, கவலைப் படவோ வேண்டியதில்லை. காலன் வந்தால் வரட்டும். வந்த காலன் உன்னுடைய வடிவேலுடன் பேசித்திரும்புவான்.

மேலும் பரம்பொருளாகிய முருகப் பெருமானின் கட்டளையை மீறி நடக்கச் சக்தியற்றவர்களே ப்ரும்மாதி தேவர்களாகும்.

ம்ருத்யுர்தாவதி பஞ்சம:

என்று அதாவது ம்ருத்யு என்று சொல்லப்படும் யமனவன் உன்னுடைய அதிப்பயங்கரமான கட்டளையைத் தலையினுல் வகித்து, அதை அப்படியே குற்றம் குறையில்லாமல் செய்வதற்கும், அப்படி உன் கட்டளையை மீறினுல் உன் தண்டனைக்குள்ளாக வேண்டுமேயென்று பயந்து கொண்டு உன் கட்டளையை நிறைவேற்ற ஒடுகிருன் என்றும் வேதம்கோஷிக்கிறது.

எனவே உனது கட்டளையின்படி ஆயுளை எடுப்ப தற்குக் காலன் வருவான் என்பது திண்ணம். அப்படி காலனானவன் வரவில்லை என்றால் உனது கட் டளையை மீறினவன் ஆகவே ஆகிறான் அன்றோ!

ஆதலால் ஒவ்வொரு ப்ராணிகளுக்கும் குறிப் பிட்ட காலம் வந்தவுடன், அந்தந்த ப்ராணிகளிடம் கருணை, தாட்சண்யம், அன்பு,வேண்டும், வேண்டாமை முதலியவைகளைக் காட்டாமல் அவ்வப்போது அப் பிராணிகளின் உயிரினை எடுக்க வேண்டும் என்று நீ அல்லவா யமனுக்குக்கட்டளையிட்டு இருக்கிறாய். ஆத லால் உயிரினை எடுக்கவரும் காலனை யாராலும் தடுக்க முடியாது. கட்டளையிட்ட உன்னால்தான் காலனின் வருகையைத் தடுக்கமுடியும்.

எனவே ஹே செல்வக் குமரா! காலன்வரும்போது நீ மயில் மீது வந்து எனக்குத் தரிசனம் தருவாய். நீ என்முன் தோன்றி அருள் புரிந்து கொண்டிருப்பதைக் காலன் பார்த்த மாத்திரத்தில் வந்த வழி தெரியாமல் போய் விடுவான் அன்றோ! ஆகையால் நீ என் கண் முன் வந்து எதிரப்படுவாய். காலனுக்குக் காலன் அல் லவா நீ.

என்னுடைய நெஞ்சில் நிறைந்து நிற்கும் செல்வக் குமரா! அருளும் நீ. அருளுபவனும் நீ. மொழியும் நீ. மொழிகின்றவனும் நீ. ஓதும் நான்மறையும் நீ. நான் மறையில் மறைந்துள்ள தெய்வமனைத்தும் நீ.

உள்ளம் கொள்ளை கொள்ளும் வண்ண முள்ள பாமாலையை அணிந்த மார்பனே, என் உயிரினை எடுத் துச் செல்ல எமன் வரும்பொழுது ஒப்பற்ற தோகை யினை விரித்து ஆடும் மயிலின் மீது ஏறிக்கொண்டு, ப்ரும்மாதி தேவர்கள் யாவரும் வியப்பினை அடையும்

வண்ணமுள்ள உனது லாவண்ய ரூபத்துடன் வந்து காட்சி அளித்தே தீரவேண்டும். எக்காரணத்தினைக் கொண்டும் என்னைக்கைவிட்டுவிடாதே அப்பனே. உன் பெருமையினைத் தெரிந்துகொண்டேன் முருகா. இனி என் வாழ்நாளை வீணாக்காமல் இணையில்லா நின் பெருமையினைப் பாடுவேன். பாடிக்கொண்டே இருப்பேன். எல்லோரையும் பாடும்படியும் செய்வேன்.

வேலவா! என்றும் வற்றாத கருணையினைப்பொழிந்து வரும் உன் மாறிலா வடிவேலுடன் என் முன் வந்து எதிரப்படுவாய். என் பயத்தைப் போக்கடிப்பாய்.

எனவே மஹாசக்திவாய்ந்த வேலினைத்தம்முடைய திவ்வியமான திருக்கரத்தில் தாங்கிவரும் முருகப்பெருமானின் திருவிளையாடல்களில் நாம் மெய்ப்பொருளையுணர்ந்து பக்தி செய்வதே யமனுடைய வருகையைத் தடுக்க மிகவும் சுலபமான வழியாக விளங்குகிறதென்பதே இப்பாடலின் பரம தாத்பர்யமாகும். ஆக இப்பாடலை திருப்பித் திருப்பிப் பாராயணம் செய்வோமேயாகில் அதுவே யமபயத்தை இல்லாமல் செய்துவிடுமென்பதில் ஐயமில்லை.



# ஏழுமலையில் முருகனின் பெருமை

# 11



கூகா வெனவென் கிளைகூடி அழப்
போகா வகைமெய்ப் பொருள் பேசியவா
நாகாசல வேலவ நாலு கவித்
தியாகா சுரலோக சிகா மணியே.

**பதவுரை**

நாகாசல வேலவ—நாகாசல மென்னும் திருப்பதி மலையில் குடிகொண்டு வேற்படையைத் தாங்கிவருகிற வேலாயுதக் கடவுளே, நாலுகவிதியாகா—ஸனகர்-ஸனந் தனர்-ஸனுதனர்-ஸனத்குமாரர் என்றுசொல்லப்படும் நான்கு ப்ரம்ம நிஷ்டர்களாகிய முனிவர்களை மஹாகைலாஸத்தில் விட்டுவிட்டு வந்தவனே, சுரலோக — தேவலோகத்திற்கு, சிகாமணியே—முடிமணிபோல் விளங்குபவனே, என்கிளை— என்னுடைய கிளைகளாகிய மனைவி, மக்கள், சுற்றத்தார் முதலியவர்கள் எல்லாம், கூடி—ஒன்று சேர்ந்து, கூகா என—

ஹ-ஹா என ஓலமிட்டு, அழ—அழும் வண்ணம், போகா வகை—(நான் இவ்வுடலை) விட்டுப்போகாதபடி.

அப்படியே

என் கிளை கூடி—என்னுடைய இனமாகிய எல்லா ஜீவாத்மாக்களும் ஒன்று: சேர்ந்து, கூகா என—(மற்றொரு ஜீவாத்மா உடலினை விட்டு வெளியே போகும்போது அவ்விடம் சென்று)ஹ-ஹா என்று ஓலமிட்டு, அழப்போகா வகை—அழுவதற்கு என்று போகாதவகையில், மெய்ப் பொருள்—(பிறப்பும் இறப்பும் அற்ற வஸ்துவினைப்பற்றிக் கவலைப்படுவதற்கு ஒன்றுமேயில்லை) என்ற உண்மைப் பொருளினை, பேசியவா—பேசியவனே!

இஃது என்னே வியப்பு!

**தாத்பர்யம்:**

அடியார்களுக்கு எளியவன் முருகப்பெருமான். ஆனல் அரிஅயனுக்கு அரியவன். எனவே அடியார் களின் ''அபயக்குரல்'' கேட்கும்போது எமன்வருகிறனு என்பதினை விரைவில் காணும் பொருட்டே முருகப் பெருமான் தமது திருக்கரத்தில் வடிவேலினைத் தாங்கி ஒவ்வொரு குன்றினுடைய சிகரத்திலும் நின்று விளையாடுகிறர்.

அடியார்களுடைய துயரங்களை வேருடன் அறுத் துத்தள்ளவே வேலுடன் குமரன் ஒவ்வொரு குன்றிலும் நின்று வருகிறன்.

வேலெடுத்து வீசி எறிந்து கோரமான எமனை விரட்டி ஓடவைக்கும், பன்னிருகை பாலகனின் அருளே நமக்கெல்லாம் என்றென்றும் துணையாகும்.

ஹே முருகா! நான் மரணப்படுக்கையில் படுத்து இருக்க என் மனைவி மக்கள், உறவினர் மற்றுமுள்ள சுற்றத்தினர் ஆகியோர் யாவரும் ஒன்றுகூடி என்னைச்

சூழ்ந்துகொண்டு — இருக்காவண்ணம் உயர்வான மெய்ப்பொருள் பேசியவனே, நின் பெருமையினை என்னவென்று சொல்லுவது.

உலகில் ஒருவனுக்கு அகால மரணமோ, விபத்துக் களில் மரணமோ, அல்பாயுளினுல் மரணமோ, வியாதி யினுல் கஷ்டப்பட்டுக்கொண்டு மரணமோ உண்டாகு மேயானுல், அவனுடைய சுற்றத்தினர்கள் அவனைக் குறித்து ஒன்றுகூடி அழுவார்கள்.

மேலும் பிறப்பு உண்டேல் உடன் இறப்பும் உண்டு அன்றோ? எனவே மரணத்தைத் தடுக்க முடியாது. ப்ராணிகள் ஆசாபாசங்களினுல் கட்டப் பட்டிருப்பதால், பிரிவினையைக் குறித்து அழத்தான் அழுவார்கள்.

உதாரணமாக ஒரு குடும்பத்தில் ஒருவர் எல்லா வற்றையும் துறந்து சன்னியாஸியாகிவிட்டால், அவ ரைக்குறித்து அந்தக் குடும்பத்தில் உள்ளவர்கள் அழா விட்டாலும், பிரிவினையினுல் மனத்தில் ஏற்படும் துக் கத்தை சகிக்கமாட்டார்கள். இப்படியிருக்க மர ணத்தை எவ்வாறு சகிப்பார்கள்?

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்

என்று ஔவைத்தாய் சொல்லியதுபோல, இறந்தவர் மறுபடியும் உயிர்பெற்று வரப்போகிறதில்லை. அப்படி யிருக்க ஒருவனின் மரணத்தைக் குறித்து அவனுடைய சுற்றத்தினர்கள் கூடி அழுவதுதான் மிச்சம்.

இறந்துபோனவர்களைக் குறித்துக் கூடி அழும் ப்ராணிகளுக்கும், இறந்து போய்க்கொண்டிருக்கும்

ப்ராணிகளுக்கும் மெய்ப்பொருளை உபதேசிப்பவன் முருகப்பெருமான் அன்றோ.

எனவே பாட்டில் 'என் கிளை' என்ற பதத்திற்கு என் இனத்தைச் சேர்ந்த ஜீவாத்மாக்கள் என்றும் பொருள் கொள்ளவேண்டும். அப்படியே உலகில் ஒருவன் மரணம் அடைந்தால் மற்றொருவன் அதனைக் குறித்து வருந்துவதற்கு ஒன்றுமே இல்லை என்ற உயர்ந்த தத்துவத்தையே "மெய்ப்பொருள்" என்ற பதத்தாலும், அப்படியே அந்த மெய்ப்பொருள், ப்ராணிகளை மற்றொருவனுடைய பிரிவினையின் தத்துவத்தை அறியும்படி செய்து அவர்களை கூடி அழப் போகாவகையில் பிடித்து நிறுத்துகிறது.

இத்தகைய மெய்ப்பொருளினை முருகப்பெருமானே பேச வல்லவன்.

மேலும் இப்பாட்டில் "மெய்ப்பொருள் பேசியவா" என்று சொல்லியது தனிப்பட்டமுறையில் சொல்லப் பட்டது அன்று. உலகத்திற்கே மெய்ப்பொருள் பேசியவன் என்று பொருள்.

உண்மையில் ஞானிகள் மரணம் அடைந்
களைப்பற்றியோ, அல்லது கொஞ்ச நேரத்தி ன்று
ப்ராணன் போகப்போகிறவர்களைப் பற்றியோ ாகளே!
தர்மத்தோடு கூடின சரீரத்தையுடையவர்க டி கிரியா
றியோ வருந்தமாட்டார்கள். ல் எப்படி

ஆகவே ஆத்மாவிற்கு ஜனன
தாலும், தேகம் அழிந்து போகக்கூடிய வங்கட் மலை
தப்படுவதற்கு அவகாசமே இல்லை. ணக் கடலாய்
வான ஆத்மாவைப்பற்றி துக்கத்திற் ிருக்கும் இறை
அப்படியே அழியக்கூடிய தேகம், ய்யானை முருகப்

அழிந்துபோக வேண்டியதே. அதனுல் தேகத்தைப் பற்றியும் வருந்துவதற்கு இடமில்லை.

இதனுல் உயிருடன் இருப்பவர்களைக் குறித்து நாம் எப்படி வருத்தப்படுகிறதில்லையோ, அது போலவே இறந்தவர்களைக் குறித்தும் ஞானிகள் கவலைப்படவோ, அழவோ மாட்டார்கள்.

உதாரணமாகக் குடத்திற்குள் இருக்கும் ஆகாசம் குடம் உடைந்துபோனுல் எப்படி அழிந்துபோகாதோ அதுபோலவே ஒருவனுடைய தேகம் அழிந்துபோனுலும் அந்தத் தேகத்திற்குள் இருக்கிற ஆத்மா அழியாது. ஆனுல் தேகத்தின் ஸ்வபாவம் அழியும் தன்மையினைக்கொண்டது. அது அழிந்தேதாஞகும்.

எனவே ஒரு விதைக்குள் எப்படி ஒரு விருக்ஷம் அடங்கியிருக்கிறதோ, அதுபோலவே 'மெய்ப்பொருள்' என்ற பதத்திற்குள் ஞானசாஸ்திரமே அடங்கி இருக்கிறதென்பதை சொல்லவேண்டுமா!

இவ்விதம் ஆத்மஸ்வரூபம் நித்தியமானவஸ்துவாகயிருப்பதால், மரண தர்மத்தோடுகூடிய தேகம் ...ந்துபோனதைக் குறித்து வருத்தப்படுவதற்கு ...ம் இல்லை. இந்தத் தத்துவத்தை அறிந்த ஞானிகள் ம...றித்தும் வருந்தி அழமாட்டார்கள். ஏன்?

... மெய்ப்பொருளை அறிந்தவர்கள்.

என்று ஒ... ...ல் நாம் இந்தப் பாட்டைத் தத்துவமாகப் மறுபடியும் ...வோமேயாஞல் ஆத்மாவினுடைய நிஜ யிருக்க ஒரு... அறிந்தவர்கள், இறந்துபோனவனைப் சுற்றத்தினர்க... ...ந்துபோகப் போகிறவனைப் பற்றியோ,

இறந்துபோ...ப்பற்றியோ வருத்தப்பட மாட்டார் ப்ராணிகளுக்கும், ...ந்து எல்லாமாய் நின்ற ஒரே பரம்

பொருளான முருகப்பெருமானையே பரிபூர்ண மூர்த்தி யாய் அனுபவிப்பார்கள். ''நான் யார்'' என்று வேதாந்த விசாரம் செய்வார்கள்.

இத்தகைய ''மெய்ப்பொருள்'' பேசியவனே முருகப்பெருமான். அவனே அந்த அந்தக் காலங் களுக்கு ஏற்றவாறு திவ்யமான மங்கள ரூபத்தில் தோன்றி துஷ்ட நிக்ரஹமும் சிஷ்ட பரிபாலனமும் செய்துவருகிருர். ஆகையால் இந்தப் பாட்டில் ஞான பண்டிதனுன முருகனே அருணகிரிநாதர் கீதாசார்யனுக அனுபவிக்கின்ருர்.

அதாவது பார்த்தசாரதி ரூபத்திலிருந்த ஹே செல்வக் குமரா! பீஷ்மர், துரோணர் முதலிய உறவி னர்களே எவ்விதம் கொல்வேன் என்று துக்கத்திஞல் மூழ்கப்பட்டு போர் செய்ய மறுத்த அர்ஜுனன் நிமித்தமாக வைத்துக்கொண்டு உலகிற்கெல்லாம் மெய்ப்பொருள் பேசிய பரம்பொருள் நீ அல்லவா? உன்னே நான் எவ்விதம் மறக்க முடியும்.

நீ நாகாசல வேலவன் அன்ருே! இதை யாரால் மறுக்க முடியும்.

குன்றெல்லாம் குமரன் என்கிருர்களே! குன்று தோருடல் என்று உன்னேப் போற்றி மகிழ்கிருர்களே! அப்படியிருக்க நீ நாகாசலம் அதாவது சேஷகிரியா கிய திருவேங்கடமலேயில் மட்டும் இல்லாமல் எப்படி இருக்க முடியும். நீயே சொல் அப்பனே!

எனவே இந்தப் பாட்டில் திருவேங்கட் மலே யாகிய திருப்பதி மலேயில் கருணேக் கடலாய் ஏழுமலேயான் என எழுந்தருளியிருக்கும் இறை வன் ஆறுபடை வீட்டினேயுடையோனுன முருகப்

பெருமானே ஆவான் என்பதினை அருணகிரி நாதர் நிர்த்தாரணம் செய்கிறுர்கள்.

அதாவது திருப்பதி மலையில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தி முருகப்பெருமானே என்பது பொருள்.

திருப்பதி மலையில் முற்காலத்தில் முருகப்பெருமானே எழுந்தருளி இருந்தார். காலக்கிரமத்தில் பக்தர்கள் அத்வைத ஞானத்திஞல் 'முருகன் வேறு, விஷ்ணு வேறு' என்ற பேதஞானமில்லாமல் திருப்பதி மலையில் வீற்றிருக்கும் முருகனை விஷ்ணுவாக ஆராதிக்கலாஞர்கள். அப்படியே ஆனந்தக் கடலில் மூழ்கினுர்கள்.

பக்தர்களுடைய மனோபாவத்திற்கு விரோதமாக இருந்தால் பக்தர்கள் மனோவருத்தம் அடைவார்களே என்று கருணைக் கடலான முருகப்பெருமான், தன்னுடைய மூர்த்தியின்வைபவத்தைக் குறைத்துக்கொண்டு, விஷ்ணு மூர்த்தியின் கலையில் தன்னை விளங்கும்படி செய்து வந்தார். ஆதலால் காலக்கிரமத்தில் திருப்பதியை விஷ்ணுத் தலமாகப் பாவித்து பக்தர்கள் போற்றி வருகிறுர்கள். இதனுல்தான்,

அடியார் நினைத்தபடி ஆடும் பெருமான்

என்றெல்லாம் மகான்கள் முருகப்பெருமானைப் போற்றிப் போற்றி புகழ்ந்து மகிழ்கிறுர்கள்.

தரிசிப்பவர்கள், தொழுபவர்கள், தியானிப்பவர்கள் ஆகிய யாவரும் திருப்பதியில் வீற்றிருக்கும் முருகனை விஷ்ணு தத்துவமாகப் பார்க்கும்போது, முருகப்பெருமான் அடியார்கள் எண்ணுவதுபோல் விஷ்ணு தத்துவமாகவே தோன்றிவருகிறுர்.

ஆனல் இமைப்பொழுதும் நெஞ்சில் நீங்காவண்ணம் முருகனைப் போற்றிவரும் அருணகிரிநாதருக்கு

திருவேங்கடமலையில் வீற்றிருக்கும் முருகப்பெருமான் முருகப்பெருமானுகவே காட்சி அளிக்கிருர்.

இந்த உண்மையை அருணகிரிநாதர் திருப்புகழில்,

தசமாஞ்சிர ராவணனுர் முடிபொடியாகச்
சிலே வாங்கிய நாரணனுர் மருமகனுங்
குகனே பொழில் சூழ்தரு திருவேங்கட
மாமலே மேவிய பெருமாளே.

என்றும், அப்படியே

வேங்கையும் வாரணமும் வேங்கை
யும் மானும்வளர் வேங்கட மாமலேயில்
உறைவோனே வேண்டிய போதடியர்
வேண்டிய போகமது வேண்டிய வாறுத
வும் பெருமாளே.

என்றும் உள்ளமுருகப் பாடிப் போற்றி திருவேங்கட மாமலேயில் இருக்கும் இறைவன் குன்றுதோறும் ஆடி விளேயாடும் முருகப்பெருமானே ஆவான் என்று நிர்த்தாரணம் செய்கிருர் அன்ருே!!!

தான் நிர்த்தாரணம் செய்த தத்துவத்தையே தாம் இறைவனின் வலது தோளில் கிளி ருபத்திலிருந்து கொண்டு கந்தர் அநுபூதியைப் பாடிவரும்போது: முருகப்பெருமான் செவி குளிரும்வண்ணம்

நாகாசல வேலவ!

என்று முருகனே அழைக்கின்ருர் அருணகிரியார்.

இதன் பொருளோவெனில்:—

ஹே வேலவ! உன்னேவிடத் தியாகமூர்த்தி இவ்வுலகில் எவரேனும் உண்டோ! மெய்ப்பொருள் பேசிய

வனே. நீ அடியார்களுக்கும், பக்தர்களுக்கும் நாகாசல மாகிய திருப்பதி மலையில் விஷ்ணுமூர்த்தியாகத் தரி சனம் தந்து அருளினுலும்கூட, நான் உன்னை "நாகா சல வேலவ" என்றுதான் அழைப்பேன். இதற்குக் காரணம் என்ன தெரியுமா? நீ நான்கு மஹாவாக்யங் களாய் திகழும் ஸனக - ஸனந்த – ஸனுதன – ஸநத் குமாரர்களாகிய நான்கு ப்ரம்ம நிஷ்டர்களையும் தியாகம் செய்து மஹா கைலாஸத்திருந்து, தமிழர் களின் தனித் தெய்வமாகத் தென்னகத்திலுள்ள திரு வேங்கடமலையாகிய திருப்பதி மலையில் வந்து எழுந் தருளினுய். ஏழுமலையான் என்று புகழப்பட்டாய். ஏழுகோடி மந்திரங்களுக்கும் மேலானவன் என்று காட்சி அளித்தாய். அதுமட்டு மல்ல,

ஏழுமலையானுக்கு ஒரு அரோ அரா!

என்று அடியார்கள் உன்னை அழைத்து வானளாவ உன்நாமமே நிலவி நிற்கும் வண்ணம் கோஷித்து வந்தார்கள்.

ஆனுல் நாளடைவில் அபேதஞானத்தினுல் உன்னை விஷ்ணுமூர்த்தியாகப் பக்தர்கள் தியானிக்க, நீ உன் சைவ ரூபத்தைத் தியாகம் செய்து விஷ்ணுமூர்த்தி யாய் விளங்கி வருகிருயே, அன்றிலிருந்து இன்று வரையிலும் முருகா! இந்த ஒரு ஆச்சரியமான திரு விளையாடல் போதாதா, உன் தியாக மஹிமையை எடுத் துக்காட்ட.

மேலும் ஆசுகவி–மதுரகவி–சித்ரகவி–விஸ்தாரகவி என்ற நாலுவிதமான கவிதைகளைத் தருபவன் முருகப் பெருமாளுகவே யிருந்தாலும்கூட, இந்தப் பாட்டில் மேல்கூறிய கவிதைகளை அருணகிரியார் சொல்ல வில்லை. ஏனெனில் தியாகா என்ற பதமானது தியாகத்

தின் பெருமை, வரம்பினைக் கடந்தது என்று எடுத்துக் காட்டவே பாட்டில் சொல்லப்பட்டிருக்கிறது. 'தருப வனே, என்ற அர்த்தத்தில் அல்ல. மேலும் நாலு கவி என்பது நான்குவிதமான கவிதைகளேயோ அல்லது ஸாமான்யமான கவிகளேயோ பற்றி குறிக்கவில்லை. காரணம்? 'தியாகா' என்ற பதம் மேலான மெய்ப் பொருளை எடுத்துக்காட்டவே நாடி நிற்கிறது.

எனவே முருகப்பெருமான் ஸதாகாலமும் ப்ரம்ம நிஷ்டர்களுடைய ஹ்ருதயபுண்டரீகத்தில் ரமித்துக் கொண்டிருந்தாலும்கூட, அநாதரக்ஷகனுக இருப்ப தால் முருகப்பெருமான் ஒவ்வொரு நிலையிலும் தியா கத்தினைச் செய்துகொண்டே திருவிளையாடல் செய் கிருர். எதற்காக? தியாகம் ஒன்றினுல்தான் முக்தியை அடையலாம் என்னும் வேதங்களின் உட்பொருளை எடுத்துக்காட்ட அல்லவா.

எனவே முருகப்பெருமான் பேசும் மெய்ப்பொரு ளோவெனில்

தியாகம் ஒன்றினுல்த்தான் அம்ருத
நிலையை அடையமுடியும்

என்பதேயாகும். தியாகத்தின் பெருமையை ஒவ்வொரு வருடைய உள்ளத்திலும் புகட்டவே பாட்டில்,

நாகாசல வேலவ! நாலு கவித்தியாகா!!

என்று முருகனை அழைக்கின்ருர் அருணகிரிநாதர். ஆகையால் இந்த அரிதாகிய மானிடப் பிறவியில் நாம் காணவேண்டியது பேரின்பமேயாகும். அதை நாம் தியாகத்திலே காணலாம். அத்தியாகத்தினு லேயே அடையவும் அடையலாம்.

எனவே, தியாகத்திலே இன்பம் – தியாகத்திலே அருள் – தியாகத்திலே அன்பு – தியாகத்திலே கருணை– தியாகத்திலே கலை - தியாகத்திலே கவிதை – தியாகத் திலே தெய்வீகம் – தியாகத்திலே காதல் – தியாகத் திலே அணைத்தல் – தியாகத்திலே ஒற்றுமை – தியாகத் திலே சுகம் என்று ஸர்வமும் தியாகமயமாகவே திகழ் கின்றது. தியாகத்திலே உயர்ந்தது ஆத்ம நிவேதனம். அந்த ஆத்மநிவேதனம் என்ற உயர்ந்த தியாக மூர்த்தி யாகத் திருப்பதி மலையில் விளங்கிவருகிறதே ஒரு மாபெரும் தெய்வம், அது எது தெரியுமா? அதுதான் ஞானக்கடலாய் திகழும் முருகப்பெருமான். அதுவே தியாகத்தின் சின்னம். அதுவே வேதத்திற்குள் புதைந்து கிடக்கும் புதையல். அதுவே குன்றெல்லாம் விளையாடும் குமரன். தியாகத்திற்கு நிகர் எதுவுமே யில்லை யென்பதை உலகிற்கு எடுத்துக்காட்டவே திருப்பதி மலையில் வெங்கடாஜலபதியாக விளங்கு கிறார் ஆறுபடை வீட்டினையுடைய முருகப்பெருமான்.

தன்னைக்காட்டிலும் வேறான ஜடப்பொருள்களையே ஒருவன் தியாகம் செய்ய மனம்வராமல் இருப்பானே யாகில், அவன் எவ்விதம் தன்னுடைய ஆத்ம ப்ரே மையை ஈச்வரனிடத்தில் வைப்பான். எனவே இறைவ னிடத்தில் அபேத ஞானத்தினால் ஆத்ம ப்ரேமையை வைத்து பக்தி செய்வதற்கு நமக்கு நிறைய தியாக புத்தி வேண்டும் என்பதினால் அல்லவா செல்வக் குமரன் தியாக மூர்த்தியாக ஏழுமலையில் விளங்கி வருகிறார்.

எனவே அண்ட சராசரங்களும் தியாகத்தில் அடங்கிவிட்டன. அனைத்தையும் துறந்து துறவியாக ஆகிவிடுகிறார்களே மகான்கள் — எதற்காக? தியாக மூர்த்தியான முருகனைக் காண்பதற்காக அல்லவா!

ஆதலால் நாகாசல வேலவனைத் தியாக ஸமுத்திரம் என்று அறியவேண்டும்.

முருகப்பெருமான் திருப்பதியில் தியாக மூர்த்தி யாக விளங்குகிறார். அதாவது தன்னுடைய ரூபத்தை மறைத்துக்கொண்டு விளங்குகிறார். அடியார்களுக் காக முருகன் எதையும் செய்யத் தயாராக இருக் கிறார் என்பதைச் சொல்லவும் வேண்டுமா!

இதனாலேயே "சுரலோக சிகாமணியாக" விளங்கு கிறார்.

அதாவது சுரலோக சிகாமணியே என்ற பதத்திற்கு தேவலோகத்திலுள்ள முப்பத்து முக்கோடி தேவர் களுக்கும், முடிமணியாக விளங்குபவனே என்று பொருள்.

ஹே தியாகமூர்த்தியாகிய நாகாசல வேலவ! நீ சுரலோக சிகாமணியாக இருக்கும்போது, இந்த மண்ணுலகத்தில் உள்ளவர்கள் உன் ஸன்னதிக்கு வந்து, செல்வத்தை வாரி வாரி இறைப்பதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது.

ஒருவன் திருப்பதியில் சென்று இறைவனைக் கண்டு தன் செல்வத்தை வாரி வாரி இறைவனிடம் கொடுக்கிறான். இதன் கருத்து என்ன? ஒருவனோ ஒருவளோ தன்னுடைய தலை முடியை இறைவனுக்குக் கொடுத்து மொட்டையாக நிற்பதின் கருத்துதான் என்ன? இரு செய்கைகளும் தியாகத்தைக் காட்டவில் லையா? பழநி ஆண்டியை நினைவூட்டவில்லையா?

வெளிப்படையாக விஷ்ணுமூர்த்தியாகத் தோன்றி னாலும், மறைந்து ஒளிந்து நிற்கும் மூர்த்தி தியாக ஸ்வ ரூபியான செல்வக் குமரன் அன்றோ!

உள்ளிருந்து, பக்தர்கள் தன்னைக் காணவரும் போது, முருகன் மெய்ப்பொருளினைப் பேசி ஆசையை உண்டுபண்ணுகிறான். அந்த மெய்ப்பொருள்தான் என்னவென்று சிந்தித்துப் பார்த்தீர்களா?

தியாகம் ஒன்றினால்தான் என்னை அடையமுடியும் என்ற மெய்ப்பொருளை, விஷ்ணுமூர்த்திக்குள் ஒளிந்து இருக்கும் முருகப்பெருமான் தன்னை வந்து சரண மடையும் பக்தர்களுக்கு, தியாகத்தின் பெருமையை அவர்களுக்குத் தெரியாமலேயே உபதேசித்து வரு வதால்தான், பக்தர்கள் திருப்பதியில் கொண்டுபோய் செல்வத்தைக் கொட்டுகிறார்கள். எதற்குத் தெரியுமா? செல்வக்குமரனை அடைவதற்காக அல்லவா!

மேலும் ஒருவன் மாடிமேல் நிற்கிறேன் என்று சொன்னாலும், உண்மையில் அவன் நிற்கிறது பூமி மேல் அல்லவா? அதுபோலவே திருவேங்கடமலையா கிய திருப்பதியில் வீற்றிருக்கும் இறைவனை விஷ்ணு தத்துவம் என்று ஒருவன் பூஜித்தாலும், உண்மை யில் அவன் செய்யும் பூஜையானது செல்வக் குமர னையே அடைகிறது.

கலியுக வரதனாக முருகன் இவ்வாறு திருவிளை யாடல் செய்து வருகிறான். ஏழுமலையான் என்று போற்றப்படுகிறார்—ஏன் தெரியுமா?

சாற்றும் ஏழுகோடி மந்திரங்களும் சரவணபவ என்ற ஷடக்ஷரங்களுக்குள் அடங்கிவிட்டன என்ப தினை எடுத்துக்காட்டவல்லவா! பரிசுத்தமான மனதினை உடையவர்கள்தான் இதை நன்கு அறிவார் கள். நன்கு அனுபவித்து மகிழ்வார்கள்.

மேலும் 'மெய்ப்பொருள் பேசியவா' என்று சொல்லியிருப்பதின் கருத்தோவெனில், மகிழத்தக்கது; எண்ணத்தக்கது; பேசத்தக்கது. ஏனெனில்,

பேசி+அவா=பேசியவா என்ற அர்த்தத்தில் இன்பம் ததும்புகின்றது.

முருகப்பெருமான் அடியார்களிடம் மெய்ப்பொருள் பேசி, அவ்வடியார்களுடைய உள்ளத்தில் அம்மெய்ப் பொருளின் உண்மையான தத்துவம் என்னது, என்னது என்று தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசையை உண்டுபண்ணிவிடுகிருர். அதன் மஹிமையினுல் ப்ராணிகள் உலகப் பற்றை ஒட்டிய இன்பங்களெல்லாம் துயரங்களுக்கு மூலகாரணம் என்று கருதி உலக வாழ்க்கையை வெறுத்து ஆத்ம விசாரணையில் ஈடுபடுகிருர்கள். பரந்த உள்ளத்தையுடையவர்களாக இருக்கிருர்கள். வேதாந்த விசாரம் செய்து சித்த சுத்தியை அடைகிருர்கள். வேதங்களின் சிகரமாகிய உபநிஷத்து வாக்கியங்களில் ஸதா ரமித்துக்கொண்டு ஆத்மானந்தத்தை அனுபவிப்பார்கள்.

இறைவனை எப்பொழுதும் நெஞ்சில் வைத்து, அவ்இறைவனுல் பேசி உண்டுபண்ணப்பட்ட அவா பூர்த்தியாகும் பொருட்டு, அவ் இறைவனுடைய திருவருளைக்கொண்டே அவ் இறைவனுல் உபதேசிக்கப் பட்ட மெய்ப்பொருளை நோக்குவார்கள். ஆசையை உண்டுபண்ணுபவனும் முருகனே. உண்டுபண்ணின ஆசையைப் பூர்த்தி செய்பவனும் முருகனே.

எனவே, எல்லாமாயும் எப்பொருளுமாயும் முருகப் பெருமான் ஏழுமலையில் மாறிலாக்கருணையைப் பொழிந்துகொண்டு தியாகமூர்த்தியாய் விளங்குகிருர். செல்வக்குமரனை நினைக்கும்பொழுதே பரவச நிலையில் ஆனந்தாநுபவம் அடைகிறோம்.

அடியார்களின் குறைகளைத் தீர்த்து அவ்வடியார்களுக்கு ஸர்வாபீஷ்டங்களை அளிப்பதற்காகவே ஏழு

மலையில் விஷ்ணுருபத்தில் முருகப்பெருமான் விளங்கி வருகிருர்.

எனவே கந்தர் அநுபூதியை வானளாவ பாடிக் கொண்டே ஏழுமலையில் ஏறிப்பாருங்கள். காவடியைக் கழுத்தில் வைத்துக்கொண்டே அநுபூதியைப் பாடிக் கொண்டு ஏழுமலையில் ஏறுங்கள்! குன்றெல்லாம் குமரன் என்று கோஷியுங்கள். அப்போது காண்பீர் கள் செல்வக்குமரனை ஏழுமலையில்.

ஏழுமலையானுக்கு ஒரு அரோ அரா
ஏழுமலையானுக்கு ஒரு அரோ அரா

என்று சொல்லிக்கொண்டே ஏழுமலையானை உள்ளம் உருகி அழையுங்கள். அப்போது மலையிலிருந்து ஏழுமலையானுய்த் திகழும் செல்வக்குமரன் ஞானபண்டி தனுய் இறங்கி வருவதைக் காண்பீர்கள். இந்தப் பாடலைப் பாடிக்கொண்டே ஏழுமலையில் ஏறுங்கள். அப்போது காண்பீர்கள் செல்வக்குமரனை ஏழுமலையில். மலையேறி இறைவனின் முன்னிலையில் விபூதிதாரியாய் இருந்துகொண்டு,

வேல்முருகா வேல்முருகா வேல்முருகா
வேல்முருகா வேல்முருகா வேல்முருகா

என்று குமரனை அழையுங்கள். அப்போது குமரன் உங்கள் உள்ளத்தில் தோன்றுவான். உங்கள் முன் ஞல் தோன்றுவான். உங்கள் நாவில் தோன்றுவான். ஸர்வமும் குமரனுகவே காண்பீர்கள். ஞானபண்டி தனின் மெய்ப்பொருளில் ஏழுகோடிமந்திரங்களும் தலை வணங்கி நிற்பதைக் காண்பீர்கள்.

எனவே ஏழுமலையில் முருகனின் பெருமை வரம் பினிற்கு அடங்காததாக நிலவி நிற்கின்றது. இதனுல் தான் அருள் தெய்வமாகிய அருணகிரிநாதர்,

உலகெங்கு மேவிய தேவாலயந்
தொறு பெருமாளே

என்று பொதுவாகச் சொல்லுகிறார். ஏன் தெரியுமா? சிந்தித்துப்பாருங்கள். சிந்தனைக்கு எட்டாத தத்வம் அது, பேதஞானத்தை அறுத்துத்தள்ளும் ஞானவாள் ஆகிய அருள்வாக்கு அது.

உலகில் காணப்படும் ஸகல தேவாலயங்களிலும் கடவுள்யென ப்ரதிஷ்டை செய்து ஆராதனை செய்து வரப்படுகின்ற ஸகல மூர்த்திகளும் யான் போற்றிவரும் ஆறுபடை வீடுடையோனான முருகப்பெருமானே யாகும்—என்னும் பரமார்த்த ப்ரம்மதத்வத்தை உலகிற்கு விளங்கும்படி உபதேசித்தருளிய அந்த ஞானப் பெருங்கடலாய் திகழும் அருணகிரிநாதரின் பொற் பாதங்களை நம்முடைய சிரஸில் ஸதா தாங்கிவருவதே நாம் செய்துவரும் முருகபக்தியில் மேலான முருக பக்தியாகும் அன்றோ!

அதுமட்டுமல்ல, அருணகிரிநாதருடைய ஒவ்வொரு அருள் வாக்கிலும் தியாக மூர்த்தியான முருகப் பெருமானின் அத்யற்புதமான திருவிளையாடல்களின் மஹிமையையே நாம் காண்கிறோம். 'தியாகத்திற்கு நிகர் எதுவுமே இல்லை' என்ற உயர்ந்த உண்மையே மெய்ப்பொருளாகும். அம் மாபெரும் மெய்ப்பொருளைப் பேசி அருளுபவன் ஏழுமலையில், நமது ஞானக் கண்களுக்கு மறையாமலும் ஊனக் கண்களுக்கு மறைந்தும் இருந்து வருகிற செல்வக்குமரனே ஆவான்.

மெய்ப்பொருளைப் பேசும் குமரனின் திருவிளையாடலைப் பார்த்து எங்கும் எல்லாமாய் எப்பொருளாயும் இருப்பவனே, என உள்ளம் மகிழ்ந்து

மெய்ப் பொருள் பேசியவா

என்று அழைத்து ஆனந்திக்கிறார் அருணகிரியார்.

ஆகையினால் உலகில் அடியார்களுக்கு அரியது ஒன்றும் இல்லை. அடியார்கள் எந்த எந்தக் கோலத்தில் முருகனை அழைக்கின்றார்களோ அந்த அந்தக் கோலத்தில் முருகப்பெருமான் தோன்றி அடியார்களை ஆனந்தக்கடலில் முழுக வைக்கிறார்.

இதற்குப் பிரமாணம் திருப்பதியில் வெங்கடாஜலபதியாக மாபெரும் கருணையைப் பொழிந்துகொண்டு இருப்பது ஒன்றே போதும். அந்த மாபெருமையினைக் கொண்ட தியாக மூர்த்திதான் நாகாசல வேலவன்.



# மஹாவாக்ய உபதேசம்

## 12



செம்மான மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இரு சொல்அற என்றலுமே
அம்மா பொருளொன்று மறிந் திலனே

**பதவுரை**

செம்மான் மகளை—சிவந்த நிறமுள்ள ஒரு பெண் மானினுடைய மகளாகிய வள்ளிதேவியை, திருடும்—திருடின, திருடன்—திருடனும், பெம்மான்—எல்லா உயிர்களுக்கும் ஈசனும் அதாவது தலைவனுமாயுள்ள, முருகன்—என்றும் இளமையோடு கூடின அழகுடனிருப்பவனுமாகிய முருகப்பெருமான், பிறவான்—பிறப்பதுமில்லை, இறவான்—இறப்பதுமில்லை. (அதாவது பிறக்காமலும் இறக்காமலும் யிருந்து கொண்டு, பிறந்தவன் போலவும், இறந்தவன் போலவும் லீலைகளைச் செய்கிறார்.)

**இத்தகைய பெருமை வாய்ந்த முருகப்பெருமான்**
**என் முன் ஸத்குருவாக வந்து**

சொல் அற—பேசுதல் இல்லாமல், சும்மா இரு—மௌன நிலையில் இருப்பாய், என்றலுமே — என்று உபதேசிக்கும் பொழுதே, பொருள் ஒன்றும்—அறிவு, அறிகின்றவன், அறியப்படும் பொருள் என்ற வேற்றுமையோடு கூடிய இந்த மாயா உலகம் ஒன்றையும், அறிந்திலன்—அறியாதவனாயினேன். அதாவது உபதேசமகிமையினால் காணப்படும் இந்த ஜகத்தானது மறைந்து விட்டது, ஏ—இஃது என்ன ஆச்சரியம்! அம்மா—கவலையற்று நிம்மதியுடைய மனதுடன் இருக்கிறேன்.

**தாத்பர்யம் :**

ஸாக்ஷாத் லக்ஷ்மி தேவியானவள் வள்ளிமலையில் ஒரு பெண்மான் ரூபத்தில் அவதரித்து ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள் என்ற வரலாறு ஆறுவது பாட்டில் சொல்லப்பட்டது.

சிவந்த நிறத்தினையுடைய இலக்குமியாகிய மான், வள்ளியம்மையை ஈன்றெடுத்தபடியால் பாட்டில் செம்மான் மகளை என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வள்ளிதேவியை நம்பிராஜன் என்னும் வேட அரசன் எடுத்துச்சென்று தன் குழந்தையெனக் கண் இமைபோல் வளர்த்துவந்தான். பருவமெய்திய வள்ளி தேவியார் வர்ணிக்க இயலாத அழகுடன் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் வண்ணம் வளர்ந்து வந்தாள்.

திருவிளையாடல்களின் மூலமாக உலகை மகிழ வைக்கும் முருகப்பெருமான் வள்ளிதேவியை மணம் செய்து கொள்ளப் பலபல அற்புதமான திருவிளையாடல்களைச் செய்து நடுநிசியில் ஒருவரும் அறியா வண்ணம், வள்ளிதேவிக்கு வேடஅரசனால் வைக்கப்பட்ட எல்லா காவல்களையும் கடந்து வள்ளிதேவியை அபகரித்துச் சென்றார்.

மறுநாள் காலையில் வேடராஜனின் மனைவி எழுந்து திடுக்கிட்டு, பக்கத்தில் படுத்திருந்த தன்னுடைய புத்திரியாகிய வள்ளிதேவியைக் காணுமல் பதைபதைத்து, தன் கணவரிடம், இரவில் தன் பக்கத்தில் படுத்திருந்த பெண்ணரசியாகிய வள்ளிதேவியைக் காணேம் என்று சொல்லிச் சொல்லிப் புலம்பினுள்.

இதனைக் கேட்டு வேடஅரசன் அனலில்பட்ட மெழுகுபோல் மனம் கலங்கினவனுய், அப்படியே காள கூட ஸர்ப்பம்போல் சீறி, வேடர்களே! இந்தச்சேரியில் நான் வைத்திருந்த எல்லா காவலையும் கடந்து அர்த்த ராத்திரியில் வந்து எனது குலச்செல்வமாயும், நான் உயிருக்கு உயிராய் வளர்த்துவரும் என் அருமைப் புதல்வி வள்ளிதேவியைக் கொள்ளைகொண்டுமாயமாய் எடுத்துச்சென்ற அம்மாபெரும் திருடனை நாம் சும்மா விடலாகாது. அத்திருடனைப் பிடித்துவந்து தக்க தண்டனை கொடுக்கும்வரையில் என் வீர்யம் வீர்யமாக ஆகாது. எனவே புறப்படுங்கள் அக்கள்வனைக் கண்டு பிடிக்க என்று கட்டளையிட, அவ்வேட வீரர்களும் காற்றினும் வேகமாய் வில்லும் அம்புமாய் வள்ளி தேவியைத் தேடக் கிளம்பினுர்கள்.

முடிவில் கள்வனுக வந்து வள்ளிதேவியைக் கள வாடிச் சென்றவன் முருகப்பெருமான் என்பதினை அறிந்த வேடராஜன், இருகைகளையும் சிரமேல் கூப்பிய வண்ணமாய், எனது குலதெய்வமே! என் அறியாமை யினுல் உன் திருவிளையாடலின் ரகஸ்யத்தை அறியா மல் போய்விட்டேன். உனது திருவிளையாடலின் வைப வத்தை யாரால் அறியமுடியும்.

ஹே செல்வக்குமரா! அடியேனுடைய மனதிலுள்ள கவலை ஒன்றே ஒன்றுதான். உனது திருவிளையாடலை

அறியாத இவ்வுலகம் உன்னைக் கள்வன் என்று சொல்வார்கள். எனவே நீ உனது பொற்பாதங்களினால் எமது சேரியை அலங்கரித்து அக்னிஸாக்ஷியாக, எமது செல்வப் புத்திரியாயும், பெண்ணரசியாயும், தெய்வப் பெண்ணாய் நவரத்தினமயமாகிய சர்வாபரணபூஷிணியாய் விளங்கிவரும் வள்ளிதேவியைத் திருமணம் செய்து கொள்ளவேண்டும். இதுவே எனது இறுதி ஆசை அப்பனே! என்று வேண்டிக்கொள்ள, முருகப் பெருமானும் அவ்வாறே மும்மூர்த்திகள் உள்பட முப்பத்து முக்கோடி தேவர்கள் முன்னிலையில் அக்னி ஸாக்ஷியாக வள்ளிதேவியைத் திருக்கலியாணம் செய்துகொண்டார்.

இந்தப் புனிதமான திருவிளையாடலையே

"செம்மான் மகளைத் திருடும் திருடன்"

என்று சொல்லி நினைவூட்டுகிறார் அருணகிரிநாதர்.

மேலும் இறைவனைப் பக்தர்கள் கள்வன் என்று அழைப்பதில் இன்பத்தைக் காண்கிறார்கள். பக்தர்கள் மட்டும் என்ன! வேதமே இறைவனை

தஸ்கராணும் பதையே!

என்று அதாவது திருடர்களுக்கு எல்லாம் தலைவனே என்று அழைக்கிறது!

"என் உள்ளம் கவர் கள்வன்"

என்று ஞானசம்பந்தர் அழைக்கின்றார்.

கிருஷ்ணபகவானை வெண்ணெயைத் திருடும் திருடன் என்கிறார்கள். கண்ணன் என்றால் கள்வன் என்று நினைக்கிறார்கள். ஆனால் உண்மையில் இறைவன் எதைத் திருடுகிறான். பக்தர்களுடைய உள்ளத்தையே

திருடுகிறுன். திருடின பொருளை ஒருவன் எவ்விதம் பத்திரமாக வைத்துக் கொள்வானே அதேபோல் இறைவன் பக்தர்களுடைய உள்ளங்களைத் திருடி, யாரும் அதனைத் திருடாவண்ணம் வைத்துக்கொள்கிருர்.

இதனுலேயே முருகனை 'பெம்மான்' என்ருர். பெருமையுடையவன் என்று பொருள். பரிசுத்தமான மனதுடன் பக்தி செய்துவரும் அடியார்களுடைய உள்ளத்தில் முருகன் பெருமையுடனும் அன்புடனும் குடிகொண்டு இருக்கிருர். தூய்மையான உள்ளத்தில் இறைவன் ஈடுபடுகிருர். தூய்மையான உள்ளங்களுக்கு முருகன் பெருமை தருகிருர்.

பெருமையே முருகனுடைய ஸ்வரூபம். எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டவன் முருகன். அவனுடைய பெருமை எல்லையில்லாமல் வளர்ந்துகொண்டே செல்கிறது. ஆக முடிவை யாரால் அறியமுடியும்.

தவிர, உலகத்தில் தோன்றும் ப்ராணிகள்தான் பிறந்துகொண்டும் இறந்துகொண்டும் இருக்கிருர்கள். ஆனுல் முருகனேவெனில் பிறப்பதுமில்லை; இறப்பதுமில்லை. பிறவான் இறவான் ஆவான் அன்ருே!

உலகில் தர்மம் தாழ்ந்து அதர்மம் ஓங்கும்போது துஷ்டநிக்கிரஹசிஷ்ட பரிபாலனம் செய்யும்பொருட்டு முருகப்பெருமான் பிறப்பதாகவும், இறப்பதாகவும் தோன்றுகிருரே தவிர, உண்மையில் அவருக்குப் பிறப்பு ஏது? இறப்பு ஏது?

முருகப்பெருமான் சென்ற காலத்தில் இல்லாமலிருந்து நிகழ்காலத்தில் வந்தால் முருகனுக்குப் பிறப்பு உண்டு என்று சொல்லலாம். முருகனே சென்ற காலத்தில் இல்லாமலிருந்து புதிதாகப் பிறந்தவனல்ல,

அதுபோலவே முருகன் நிகழ்காலத்தில் இருந்து வருங்காலத்தில் இல்லாமல் போனுல், முருகனுக்கு இறப்பு உண்டு என்று சொல்லலாம். முருகனே வருங் காலத்தில் இல்லாமல் இருக்கப்போகிறதில்லை.

இதனுல் முருகன் சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்ற மூன்று காலங்களிலும் இருந்து வருகிறுன். எனவே முருகன் பிறப்பதுமில்லை; இறப் பதுமில்லை. அதாவது பிறக்காமல் பிறந்துகொண்டும், இறக்காமல் இறந்துகொண்டும் திருவிளையாடல் செய் கிறுர். இதனுல் முருகனைப் பாட்டில் பெம்மான் முருகன் என்ருர். அவன் மெய்ஞான பண்டிதன். மெய்ப் பொருளே அவனுடைய நிலை. முருகனுடைய பெருமை கள் வரம்பில் அடங்காதது. இணையிலா அழகு உடை யவன் - இணையிலா நறுமண முடையவன்,

எனவே முருகன் தனக்குமேல் குருவின்றி, தாமே மும்மூர்த்திகளுக்கும் குருவாய் நின்று குருபரனுக விளங்குகிறுன்.

இவ்விதம் குமர குருபரனுக முருகப்பெருமான் தோன்றி அருணகிரிநாதருக்கு உபதேசித்து அருளின ஞான மந்திரமோவெனில்

சும்மா இரு சொல் அற

என்பதே தானுகும். வேதங்களுடைய சிகரமாகிய உப நிஷத்துகளின் ஸாரத்தையே இனிமையான தமிழினுல் உபதேசம் செய்கிறுர். அதாவது சும்மா இரு சொல் அற என்றது ப்ரம்ம தத்துவ உபதேசமேயாகும்.

ஆதலால் காணப்படும் ஜகத்து முழுவதிற்கும் இறைவனே காரணமாகின்றபடியால், இறைவன் எல்லாவற்றையும் அறிந்தவனுக இருக்கிறுன்.



அப்பா அருணகிரி !

அன்பின் ஸ்வரூபமே!!

நீயே நான் - நானே நீ

# சும்மா இரு

# சொல் அற

அப்படியே ச்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்று கார்யங்களைச் செய்துவருவதால் ஸர்வ சக்தி யுள்ளவனுயும், அப்படியே ஸகலத்திற்கும் காரண பூதனுயும் விளங்குகிருன். எனவே இறைவன் தேசத் தாலோ, காலத்தாலோ, வஸ்துவினுலோ, பரிச்சேத மற்றவனுக இருந்துகொண்டு வருகிருன். ஒரு தேசத் தில் இருந்து மற்ருெரு தேசத்தில் இல்லாமல் இருந் தால் இறைவனைத் தேசப்பரிச்சேதம் என்று சொல்ல லாம். இறைவனுனவன் எல்லா தேசத்திலும் இருப்ப திஞல் தேசப்பரிச்சேதம் என்ற தோஷம் இறைவ னுக்குக் கிடையாது.

தவிர, இறைவனுனவன் ஒரு காலத்திலிருந்து மற்ருெரு காலத்தில் இல்லாமல் இருந்தால், இறை வனைக் கால பரிச்சேதம் என்று சொல்லலாம். ஆனுல் சென்ற காலம், நிகழ்காலம், வருங்காலம் என்ற மூன்று காலங்களிலும் இறைவன் அழியாமல் இருந்து வருவதால் இறைவனிடம் கால பரிச்சேதம் என்ற தோஷமானது கிடையாது.

மேலும் வஸ்துக்களில் ஒன்று மற்ருென்ருக ஆகாமல், ஒரு வஸ்துவானது மற்ருெரு வஸ்துவி னுடைய பேதத்தையே நாடி நிற்கிறது. இதையே வஸ்து பரிச்சேதம் என்று அறியவேண்டும்.

ஆனுல் இறைவனே ஸர்வ ஜகத்திற்கும் மூல காரணமாக இருப்பதிஞலும், காணப்படும் இந்த ஜகத் தானது இறைவனுடைய கார்யமாக இருப்பதாலும், கார்யத்திற்குக் காரணத்தைக் காட்டிலும் வேறு ஸ்வ ருபம் இல்லாத காரணத்திஞலும், இறைவனே எல்லா மாய் ஒரே வஸ்துவாய் விளங்குகிருன். இதஞல் வஸ்து பரிச்சேதம் என்ற தோஷமானது கடுகளவுகூட இறை

வனிடம் இல்லாமலிருக்கும் காரணத்தினுல், இறைவன் ஒருவனே ஸத்யமானவன் என்றும், மற்றும் காணப் படும் இந்த ப்ரபஞ்சமனைத்தும் தேச கால வஸ்து பரிச்சேதம் என்ற மூன்று விதமான தோஷத்தோடு கூடியிருப்பதால், இந்த திருச்ய ப்ரபஞ்சமானது பொய் என்றே ஸித்தாந்தமாக வெளியாகிறது. அக் ஞானமானது காணப்படும் ஜகத்தை ஸத்யம்போல் தோன்றவைக்கிறது. ஞானம் வந்தால் அக்ஞானமான ஜகத்து மறைகிறது. அப்போது மிஞ்சி நிற்பது இறைவன் ஒருவனே அன்றோ!

அந்த ஒருவனுகிய இறைவனே ஆத்மாவென்று வேதமானது

அயமாத்மா ப்ரஹ்மா, தத்வமஸி

என்ற மஹாவாக்கியத்தினுல் உபதேசிக்கிறது; இந்த மஹாவாக்யங்களின் தத்துவமே 'சும்மா இருசொல் அற' என்பதினுல் போதிக்கப்படுகிறது.

எல்லாம் ஈச்வரனுக யிருக்கும்பொழுது ஈச்வரனைக் காட்டிலும் ஆத்மாவேருன தத்துவமாக ஆகமுடியாது. ஆத்மாவேதான் ஈச்வரன். ஈச்வரனேதான் ஆத்மா.

இந்த ரகஸ்யத்தைத் திருமுலர் தமது திருமந்தி ரத்தில்

கடவுளும் நானும் ஒன்று

என்று அத்வைத ஞானத்தைப் போதிக்கின்ருர். வேதங் களும் சாஸ்திரங்களும் அத்வைத ஞானத்தில்தான் லயத்தை அடைகிறது. அந்த உயர்ந்த நிலையை அடைந்தவன்தான் ப்ரம்மானந்தம் என்று சொல்லப் படும் ஸ்கந்தானுபூதியை அனுபவிக்கிருன்.

எனவே முருகப்பெருமான் உபதேசித்த மந்தி ரமோவெனில்

சும்மா இரு சொல் அற

என்பதேயாகும். இந்த மந்திரத்தை உபதேசிக்கும் பொழுதே சிஷ்யன் ஆத்ம ஞானத்தை அடைகிருன். அவ்விதம் ஆத்மஞானத்தை அடைந்தவன் சொல்லும் வாக்கியமோ

பொருள் ஒன்றும் அறிந்திலனே

என்பதேயாகும்.

ஆதலால் ஒரு காலத்திலும் இல்லாமல் இருக்கப் பட்ட ஜகத்தைப் ப்ராணிகள் ஸத்யம்போல் அனுபவித்துக்கொண்டிருக்கும்போதே, வேதமானது அப் ப்ராணிகளைப் பார்த்து "ஸத்யம்போல் அனுபவித்துக் கொண்டிருக்கும் ஜகத்தானது ஒருகாலத்திலும் இல்லவேயில்லை என்றும், கானல்நீர்போல் பொய் யென்றும்" போதிக்கின்றது.

ஜகத்தைப் பொய் என்று போதிக்கும் வேதமானது அந்தப் பொய்யான ஜகத்திற்கு இருப்பிடத்தை ஸத்ய மான இறைவனிடம் காட்டுகிறது.

இதனுல் அபௌர்ஷமாயும் அனுதியாயும் உள்ள ஸகலவேதங்களும், காணப்படும் ஜகத்தை வெறும் ப்ரமை என்று போதித்து, அந்தப் பொய்யான ஜகத் திற்கு ஆதார பூதமான பரப்ரும்மமாகிய முருகப் பெருமானைக் கண்டுபிடிக்க எவ்வளவோ யத்னம் செய்தபோதிலும், முருகப்பெருமானுடைய தத்து வத்தை சுட்டிக்காட்டி வாக்கினுல் எடுத்துச்சொல்ல முடியாமல் திரும்பி வந்துவிட்டன.

இதனுல் ஸத்யம்போல் அனுபவித்துக்கொண்டி ருக்கிற இந்தப் பொய்யான ஜகத்தைப்பற்றி பேசும் வாக்கினுல் இறைவனின் நிஜ ஸ்வருபத்தைக் கண்டு

பிடிக்க முடியாது. அதாவது இறைவன் சப்தத்திற்கு மேல்ப்பட்டவன். சப்தத்திஞல் இறைவனை அறிய முடியாதென்று சப்தம் திரும்பி வந்துவிடுகின்றபடியால், இறைவன் ஒருவன்தான் குருவாக இருப்பதற்கு தகுதியுள்ளவன்.

எனவே ஒருவன் கயிறைப் பார்த்து ஸர்ப்பம் என்று ப்ரமித்தால், அவனுடைய விஷயத்தில் கயிருனது புலப்படுவது இல்லை. அதுபோலவே பரம்பொருளில் ஜகத்தைப் பார்த்துப் பிரமிக்கிருன். இது கயிறு என்ற ஞானம் வந்தவுடன் ஸர்ப்ப ஞானம் போய்விடுகிறது. அதுபோலவே எல்லாம் பரம்பொருள் என்ற ஞானம் உண்டாஞல் ஜகத்தானது மறைந்துவிடும். ஒருகாலத்திலிருந்து மற்ருெரு காலத்தில் இல்லாமல் போஞல், அதையே பொய் என்று வேதாந்திகள் சொல்லுகிருர்கள். ப்ரம்ம ஞானம் வருவது என்பது தான், பொய்யாகிய ஜகத் மறைகிறது என்பது. இந்நிலையில்

ப்ரம்மை வாஹம். ஸர்வமும் நானே

என்று ப்ரத்யக்ஷமாய் உணர்கையில், பேதஞானமோ, இந்தப் பொய்யான ஜகத்தோ எங்கிருந்து தோன்றும். அகண்ட ஆநந்த ஏகாத்ம நிலையில் என்றென்றும் இருந்துகொண்டே இரு என்பதே சும்மா இரு சொல் அற என்பது.

தவிர எல்லாவற்றிற்கும் ஒரே ப்ரம்மம்தான் மூல காரணமாகயிருப்பதால், அந்தப் ப்ரம்மத்தை சப்தப் ப்ரபஞ்சத்திஞல் அறிய முடியாது என்பதிஞலும், சொல்லுக்கு அப்பாற்பட்டது ப்ரம்மம் என்பதிஞலும், ப்ரம்மத்தைப்பற்றிப் பேச முடியாது என்பதிஞலும், ப்ரம்மமே நான் என்ற சப்தத்திஞல் அழைக்கப்படும்

ஆத்ம சைதன்யம் என்பதினுலும், ஜகத்தானது சப்தத்திற்கு விஷயமாகும் என்பதினுலும், சப்தத்திற்கு விஷயமாகிறது என்பதினுலேயே ஜகத்தானது பொய் எனபதினுலும், பொய்யைப்பற்றிப் பேசுதல் மோக்ஷத்தைத் தராது என்பதினுலும் மந்திரத்தில்

சொல் அற

என்று சொல்லியிருக்கிறது.

அப்படியே இந்த, காணப்படும் ஜகத்தானது அவித்யா கல்பிதமென்றும், அதனுலேயே பொய் யென்றும், அதாவது ஸத்யம்போல் அனுபவித்துக் கொண்டிருக்கும் ஸமயத்திலேயே, அனுபவித்துக் கொண்டிருக்கிற ஜகத்தானது இல்லை என்றும் ஸித்தாந்தமாக யிருந்து வருவதால் மந்திரத்தில்

சும்மா இரு

என்று உபதேசிக்கப்பட்டிருக்கிறது.

ஆகவே 'சும்மா இரு சொல்அற' என்ற மந்திரத்தை உபதேசிக்கும் ஸமயத்திலேயே மனிதன் ''ஸர்வம் ப்ரம்ம மயம்'' என்ற நிலையை அடைகிருன் என்பதினைப் பாட்டில் 'பொருள் ஒன்றும் அறிந்திலனே' என்பதினுல் எடுத்துக்காட்டப்படுகிறது.

அதாவது ப்ரம்மம் ஒன்றுதான் ஸத்யம் – ஜகத் பொய் என்று இரு. காணப்படும் ஜகத்தானது பொய் யென்று, சொல்அற இரு. ஸத்யமான இறைவனுடைய ஸம்பந்தத்தினுல் பொய்யான ஜகத்தானது உண்மை யைப்போல் கற்பிக்கப்படுகிறது என்று சும்மா இரு. அப்படியே இறைவனுல் ச்ருஷ்டிக்கப்பட்ட இந்தப் பொய்யான ஜகத்திற்குள், இறைவனைத் தவிர வேறு ஒரு வஸ்துவும் தோன்றுவதற்கு நியாயமில்லை.

இறைவனே ஆத்மாவாக இருப்பதால் இந்த மானிடப் பிறவியில் அடைய வேண்டியது ஆத்ம லாபமேயாகும் என்று சொல் அற சும்மா இரு. ஆத்ம லாபத்திற்கு மேலான லாபமே கிடையாது என்று சொல் அற சும்மா இரு.

மேலும் எங்கும் நிறைந்து எல்லாமாய் நின்ற ஒரே பரம்பொருளான ஆத்மாவையே பரிபூர்ணமான வஸ்து என்று அநுபவி. உண்மையில் ஆத்மா ஒன்றே எல்லாமாய் இருப்பதால், இந்தப் பிரபஞ்சம் என்று சொல்லப்படும் எல்லாப் பொருள்களும் வெறும் தோற்றமே என்னும் தெளிவான ஞானத்துடன் இருப்பாய். இதையே

சும்மா இரு சொல் அற

என்ற மந்திரத்திஞல் முருகப்பெருமான் உபதேசிக்கிருர்.

சும்மா இரு சொல்அற என்று உபதேசித்தவுடனே மனிதனுனவன் காணப்படும் இந்தப் பிரபஞ்சத்தைப் பொய்யென்றும் வெறும் தோற்றம் என்றும் அனுபவிக்கிருன். இந்த அனுபவத்தையே பாட்டில் அருணகிரியார்

பொருள் ஒன்றும் அறிந்திலனே

என்கிருர்.

எனவே சுத்தமான கண்ணுடியில் பச்சை, சிவப்பு நீலம் என்ற பல வர்ணங்கள் தோன்றுவதுபோல், நிர்மலமான பரமாத்மாவினிடத்தில் விசித்திரமான பிரபஞ்சங்கள் தோன்றுகின்றன. அப்பிரபஞ்சங்களுக்குக் காரணம் பரமாத்மாவேதான். ஸமஸ்த பொருள்களைக்

கொண்ட இந்தப் பிரபஞ்சக் ஞானம் பரமாத்மாவி னிடத்தில் கற்பிக்கப்பட்டது.

உதாரணமாக ஒரு மாடு ஆனது தன் உருவத்தைக் கண்ணுடியில் பார்த்தால், அதை நிஜமான வேருெரு மாடு என்று நினைத்துக் கண்ணுடியை முட்டி உடைத்து விடுகிறது. ஏன்? ஞானம் இல்லாததிஞல் அல்லவா?

ஆனுல் ஒரு மனிதன் கண்ணுடியைப் பார்த்தால், கண்ணுடியில் தோன்றும் உலகத்தைப் பொய்யென்று நினைக்கிருன். ஏன்? ஞானம் இருப்பதால் அல்லவா?

இதைப்போலவே அஞ்ஞானியானவன் உலகத்தை ஸத்யம் என்று நினைத்துப் பலவிதமான துன்பங் களுக்கு உள்ளாகி முடிவில் அழிகிருன். இதற்குமாருக ஞானியானவன் உலகத்தையும் அவ்வுலகத்தில் தோன் றும் பொருள்களையும் பரமாத்மாவிடத்தில் வெறும் கல்பிதத்திஞல் உண்டான தோற்றம் என்றே இருந்து விடுகிருன்.

ஸர்வமும் நானே; பரமாத்மாவே நான்

என்ற அனுபவத்தை அடைகிருன், ஸமஸ்தமும் பர மாத்ம ஸ்வரூபம் என்று ஆகிவிடுகின்றபடியால் தன்னையே தெளிவான ஞானத்திஞல் பரமாத்மா என்று அனுபவிக்கிருன்.

ஆதலால் "நான்" என்ற சப்தத்திஞல் சொல்லப் படும் பரமாத்மாவானவர் ஒரு காலத்திலும் வாக்கிற் கும் மனதிற்கும் கட்டுப்படாமல் அப்படியே அவ்வாக் கிற்கும் மனதிற்கும் அப்பாற்பட்டவராக விளங்கிவரு வதால், அதைப் பாட்டில் 'சொல் அற' என்று அதாவது இறைவனை சப்தப் ப்ரபஞ்சத்திஞல் அறிவதற்கு வாழ் நாளை வீணுக்காமல், இறைவன் வாக்கிற்கும் மனதிற்

கும் அப்பாற்பட்டவன் என்று பேசாமல் இருந்து கொண்டும், அப்படியே இந்தஅழியும் ப்ரபஞ்சமானது சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்ற மூன்று காலங்களிலும் இருப்பதுபோல் அனுபவித்துக்கொண் டிருக்கும் ஸமயத்திலேயே, கானல் நீர்போல் இல்லாமல் இருக்கிறது என்ற தெளிவான ஞானத்துடன், தோன் றப்படும் உலகத்தை அஞ்ஞானத்தால் ப்ரமித்து ஸத்ய மாகப் பார்க்கிறோம் என்ற விவேக ஞானத்துடன், பொய்யான ஜகத்திற்கு மூலாதாரமான பரமாத்ம தத்து வத்தை அநுஸந்தானம் செய்துகொண்டு கேவலம் மௌனநிலையில் நான் - நீ என்ற பேதமில்லாமல் காணப்படும் அனைத்தும் ஆத்மாவில் அடங்கியதே யாகும் என்றவாறு இரு என்னும் உயர்ந்த உபநிஷத் தத்துவத்தையே

சும்மா இரு

என்று பாட்டில் சொல்லி, முடிவாக ஞானபண்டிதனை முருகப்பெருமான் லோகத்திற்குப் ப்ரம்ம வித்யா தத்துவத்தையே

சும்மா இரு சொல் அற

என்ற மந்திரத்தினால் உபதேசித்து அருளுகிறாரென் றால் அம்முருகப்பெருமானின் கருணைதான் என்னே!

இவ்வரிய உபதேச மகிமையினால் ப்ராணிகள் எல்லாவற்றையும் பரமாத்மாவாகவே பார்த்து நித்யா னந்தத்தை அனுபவிக்கிறார்கள் என்றால், என்னே முருகப்பெருமானின் உபதேசம்!!!

இவ்வனுபவ நிலையைத் தாயுமான சுவாமிகள்

பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற
நிறைகின்ற பரிபூரணானந்தமே

என்றும்; அப்படியே அருணகிரிநாதரும் கந்தரலங் காரத்தில்

> சொல்லுகைக் கில்லை என்றெல்லாம்
> இழந்து சும்மா இருக்கும் எல்லையுட்
> செல்ல எனைவிட்ட வா

என்றும் முருகனின் உபதேச மஹிமையைப் போற்றிப் புகழ்ந்து மகிழ்கின்றார்கள்.

இத்தகைய அத்வைத ஞானம் வரும்வரையில் ப்ராணிகள் இறந்துகொண்டும் பிறந்துகொண்டும் எல்லையில்லா துக்கங்களை அனுபவித்துத்தான் ஆக வேண்டும். ஆத்மஞானம் ஒன்றினால்தான் கந்தர் அநுபூதியை அடையமுடியும். அதுவே ஆத்ம லாபமும் ஆத்ம ஸாக்ஷாத்காரமும் ஆகும்.

உலகத்தில் ஒருவன் வெகுகாலமாக கஷ்டத்தை அனுபவித்து முடிவில் அக்கஷ்டத்திலிருந்து விடுபடுவானாகில், அப்போது அவன் சொல்லும் ஆச்வாத வாக்கோவெனில் "அம்மாடி" என்பதே ஆகும். இது அனுபவ ஸித்தம்.

எனவே கணக்கற்ற ஜன்மங்களில் ஸம்ஸார துக்கத்தை அனுபவித்துக்கொண்டு அப்பிறவிக் கடலிலிருந்து கரையேற முடியாமல் தவித்துக்கொண்டிருக்கும் எனக்குப் ப்ரம்ம தத்துவமாகிய சும்மா இரு சொல் அற என்ற மந்திரத்தை உபதேசித்தருளி கந்தரனுபூதியைத் தந்து என்னை ஆட்கொண்டாயே, இஃது ஒன்றே போதும் உன் கருணையை எடுத்துக் காட்ட! இன்றுதான் நான் ஸகலவிதமான துக்கத்திலிருந்தும் விடுபட்டவனாக ஆனேன் என்பதை எடுத்துக்காட்டவே "அம்மா" என்ற பதத்தை

பாட்டில் அருணகிரியார் ப்ரயோகம் செய்திருக்கிருர் என்பதை மஹான்கள் நன்கறிந்து அனுபவிப்பார்கள் அன்றே! தவிர முருகக் கடவுள் தாயும் தந்தையுமாக விளங்கி வருகிறபடியால் அவரே குழந்தைகளாகிய ப்ராணிகளுடைய துக்கத்தைப் போக்கடிக்க முன்வருகிருர் என்பதையும் அம்மா என்ற பதம் எடுத்துக் காட்டுகிறது. இதை அருணகிரிநாதரே பின்வரும் நாற்பத்து ஆருவது அநுபூதியில்

எந்தாயும் எனக்கருள் தந்தையும் நீ

என்று பாடுகிருர்.

எனவே தாயும் தந்தையுமாக விளங்கிவரும் முருகப்பெருமானின் பன்னிரண்டு அருள்நிறைந்த கனிந்த நயனங்களும் உபநிஷத்துகளில் உலாவிக் கொண்டிருக்கிற மஹாவாக்யங்களிலேயே பூர்ணமான இன்பத்தைக் காண்கின்றது என்பதையெடுத்துக் காட்டவே கந்தர் அநுபூதியில் இந்தப் பன்னிரண்டாவது பாட்டில் ‘தத்வமஸி’ என்ற மேலான மஹாவாக்யத்தின் பொருளாய் திகழ்கின்ற.


சும்மா இரு சொல் அற

என்ற மந்திரத்தை ஜீவப்ரம்ம ஐக்யஸாக்ஷாத்காரத்தை அடைவதற்கு அந்தரங்க ஸாதனமாகவும் ஜீவநாடியாகவும் வைத்து அருணகிரிநாதர் மஹாவாக்கியத்தின் உபதேசமஹிமையைப் புகழ்ந்து பாடுகின்ருர் என்ருல் யாமோ கந்தர் அநுபூதியின் பெருமையையெடுத்துப் பேசவல்லோம்.

திருப்பரங்குன்றத்திலும்- திருச்செந்தூரிலும்-திரு ஆவினன்குடியிலும் - திரு ஏரகத்திலும் - திருத்தணியிலும்-பழமுதிர் சோலையிலும் ஆனந்தமாய் திரு

விளையாடல் செய்து வருகின்ற செல்வக்குமரனுகிய முருகப்பெருமானின் உபதேசமஹிமையின் வைபவத்தையே இப்பாடலில் நாம் காண்கிருேம். கந்தர் அநுபூதிக்கே இப்பாடல் ஜீவநாடியாக இருக்கின்றது. அதுமட்டுமல்ல இப்பாடல் ஒவ்வொருவருக்கும் ஜீவநாடியாகவும் இருந்துவருகின்றது.

வேதங்களாகிய பெருங்கடலின் அலைகளாகிய உபநிஷத்துக்களின் பேரிரைச்சலெல்லாம் ஒன்று கூடி திரண்டு இப்பாடலில்

சும்மா இரு சொல் அற

என்று இரைச்சல் செய்துகொண்டு, இவ் அரிதான மானிடப்பிறவியில் நாம் அடையவேண்டியது முருகப்பெருமானேயாகும் என்பதினை சுட்டிக்காட்டும்பொழுது நம்மையும் அறியாமல் நம்மை மெய்சிலிர்க்கச் செய்கிறது. இந்நிலையில் நாம் உலகனைத்தையும் முருகனின் ஸ்வரூமாகவே காண்கிருேம். அதுமட்டுமல்ல,

பெருமறை தேடிய அரும்பொருள்

என்று ஸ்ரீ மாணிக்கவாசகர் சொல்லி சுட்டிக் காட்டுகிருரே அந்த அரும் பொருள் புதைந்து [illegible]கிறது 'சும்மா இரு சொல் அற' என்ற மந்திரத்தில். அந்த அரும்பொருளில் எங்குமிலாத பேரின்பம் நிலவி நிற்கிறது. இறுதி இல்லாத இன்பம் திகழ்கின்றது.

இத்தகைய இன்பத்தின் அளவு நாம் இறைவனிடத்தில் வைக்கும் அன்பினையே நாடி நிற்கிறது என்பதை ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

காயத்துள் அமுது ஊறஊற
நீ கண்டுகொள்

என்று வரம்பினிற்கு எட்டாத தத்துவத்தை சுட்டிக் காட்டி அருளுகிருர் அன்ருே. அத்தகைய மாபெரும் மஹிமை தாங்கிய மஹாமந்திரமே 'சும்மா இரு சொல் அற' என்ற மந்திரமாகும்.

இவ்விதம் இப்பன்னிரண்டாவது பாடல் மூலமாக முருகப்பெருமானின் பன்னிரண்டு கனிந்த நயனங்களுடைய கடாக்ஷம் நம்மேல் ஓயாமல் விழுந்து கொண்டேயிருக்கும்படி செய்து நம்மையெல்லாம் அருள் வெள்ளத்தில் மூழ்கவைக்கிருர் அருணகிரி நாதர். இதனுல் "சும்மா இரு சொல் அற" என்ற மந்திரத்தை அனுஸந்தானம் செய்கிற பக்தர்களுக்கு முருகப்பெருமான அஷ்டைச்வர்யங்களுடன் பரம மங்களமான மோக்ஷமென்ற கந்தரனுபூதியை அளிப்பார் என்பதில் சிறிதும் ஐயமில்லே. இது ஸத்யம்.



# அருளிஞல் அவனேப்பார்

## 13



முருகன் தனிவேல் முனிநங் குருவென்
றருள் கொண் டறியார் அறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றெளியன் றெனநின் றதுவே.

### பதவுரை

உரு அன்று—உருவத்துடன் காணப்படும் உலகமும் அல்ல, அரு அன்று—ரூபமில்லாத மாயையும் அல்ல, உளது அன்று—உள்ள பொருளும் அல்ல, இலது அன்று—இல்லாத பொருளும் அல்ல, இருள் அன்று—மறைக்கும் இருட்டும் அல்ல, ஒளி அன்று—பிரகாசமும் அல்ல, என—என்றவாறு, நின்ற—நின்றதான, அதுவே—அம்மெய்ப்பொருளே, தனி வேல்—ஒப்பற்ற வேற்படையையுடைய, முருகன்—முருகப் பெருமான் என்றும், முனி—முனிவர் என்றும், நம்—நம் முடைய, குரு—குருநாதஸ்வாமி, என்று—என்றும், அருள் கொண்டு—அம் முருகப்பெருமானின் திரு அருளினைப் பெற்ற அவ்வருளினைக் கொண்டே, அறியார்—தமது ஆத்மஸ்வரூ பமே முருகனின் நிஜஸ்வரூபம் என்று அறிய யத்னம் செய்யா

தவர்கள், அறியும் — அறிவினைக்கொண்டு, முருகப்பெருமானின் நிஜஸ்வரூபத்தை அறியும் விஷயத்தில், தரமோ— ஸாமர்த்யமுள்ளவர்களாக ஆவார்களா? ஒரு காலத்திலும் அவன் அருள் இல்லையேல் அவனை அறியமுடியாது என்பதே பரமஸித்தாந்தம்.

**தாத்பர்யம்**

எல்லாம் வல்ல முருகப்பெருமானை உருவன்று, அருவன்று, உளதன்று, இலதன்று, இருளன்று, ஒளியன்று என்று சொல்லி, இவ்வாறு உயர்ந்த தத்வங்களுக்கும் அப்பாற்பட்டவன் முருகப்பெருமான் என்று வர்ணிக்கிறார் அருணகிரியார்.

முதலாவதாக உருவன் என்றார். அதாவது உருவமாகத் தோன்றும் பொருள்களெல்லாம் முருகன் அல்ல என்று அர்த்தம்.

கர்மவினைகளினால் கட்டுப்பட்டு அவ்வினைகளிலிருந்து விடுபட்டு வெளிவர முடியாமல் எண்ணற்ற கோடிக்கணக்கான ஜீவராசிகள் பிறந்துகொண்டும் இறந்துகொண்டும் பற்பல விசித்திரமான ஜன்மங்களை எடுத்துக்கொண்டும் ஸம்ஸாரமாகிய பிறவிக் கடலில் மூழ்கிக் கரை தெரியாமல் தத்தளித்துக் கொண்டிருப்பதினைக் கண்டு மனம் தாளாமல், கருணைக்கடலான முருகப்பெருமான் தமது நிர்குண ஸ்வரூபத்திலிருந்து கலந்து சகுணஸ்வரூபத்தை அடைந்து, அப்ராக்ருதமான திவ்யமங்கள விக்ரத்துடன் இம்மண்ணுலகில் வந்து அவதரித்து எல்லா ஜீவராசிகளுடைய உள்ளங்களையும் கொள்ளை கொள்ளும் வண்ண முள்ள இளமைத் தன்மையில் நின்று எண்ணிறந்த திருவிளையாடல்களைச் செய்து, தமது பொற்பாதங்களினால் இப்புண்ணிய பூமியை

அலங்கரித்து ஒவ்வொரு தலத்திலும் அப்படியே ஒவ்வொரு குன்றிலும் அருளினைப் பொழிந்து பூர்ணசானித்யத்துடன் விளங்கி வருகிறார்.

இவ்விதம் ஏன் முருகப்பெருமான் செய்கிறார். கருணையே அவனுடைய ஸ்வரூபம் ஆக இருப்பதால் அன்றோ!

ரூபத்துடன் தோன்றும் பொருள்களெல்லாம் மனதிற்கும் வாக்கிற்கும் கட்டுப்பட்டவைகளே. மனதினால் அறியப்பட்ட பொருள்கள் ஜடமான பொருள்களே யாகும்.

அடியார்களுடைய உள்ளங்களை மகிழவைக்க வேண்டும் என்ற ஒரே காரணத்தினால் ஸுப்ரமணிய ஸ்வாமியானவர் ஒரு ரூபத்தை எடுத்துக்கொண்டு தோன்றுகிறாரே தவிர உண்மையில் அந்த ரூபம் அவருடைய ஸ்வரூபம் ஆகாது. இறைவனுடைய பற்பல ரூபங்கள் பக்தர்களுடைய மனதை தீய வழிகளில் செல்லாமல் ஈஸ்வர சிந்தனையிலேயே இருப்பதற்காக ஏற்பட்டவைகளே.

நிர்க்குணமான பரம்பொருளை உபாஸிப்பது சுலபமான கார்யமல்ல. எத்தனையோ எண்ணிறந்த ஜன்மங்களில் வேதாந்த விசாரம் செய்தவர்களுக்கே நிர்குண உபாஸனை மிகவும் கடினமாக இருக்குமானால், பாமர ஜனங்களைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமா?

ரூபமற்றவனை ரூபத்தில் கல்பிக்கலாமே தவிர, உண்மையில் கல்பனையினால் இறைவன் ரூபமுள்ளவனாக ஆவானா! நாம் எதுவரையில் இறைவனை ஒரு ரூபத்தில் பார்த்து ஆனந்திக்கிறோமோ அதுவரையில் இறைவன் நம்முடைய சிந்தனைக்கு ஏற்றவாறு ஸத்யம் போல் தோன்றிக்கொண்டே இருப்பார். எனவே

தத்வமாகப் பார்க்கும்கால் இறைவன் தோன்றப்படும் பொருள்களாக ஒரு காலத்திலும் ஆகவே முடியாது. தோற்றமுண்டேல் உடன் மறைவும் உண்டு அல்லவா. ஒருகாலத்தில் தோன்றி மற்றொரு காலத்தில் மறைகின்ற பொருளைத்தானே பொய்யென்று வேதங்கள் போதிக்கின்றன.

உருவம் என்று நாம் சொல்லும்பொழுதே, அவ்வுருவம் அறிவிற்கு விஷயமாய்விட்டதென்பது ஸித்தித்து விடுகிறது அல்லவா. அறிவிற்கு விஷயமாகும் பொருள் இறைவனாக ஆகமுடியுமா?

எனவே முருகப்பெருமான் இச்சாமாத்திரம் பலபல ரூபத்துடன் தோன்றி அதன் மூலமாகப் பக்தர்களை மகிழவைக்கிறார். உண்மையில் இறைவன் ரூபம் இல்லாதவன் என்பதினையே வேதங்கள் கோஷிக்கின்றன. ஏனென்றால் ரூபத்திற்கு இறைவன் விஷயமாகாதவன் அன்றோ! ரூபம் மனிதனுடைய அறிவிற்கு விஷயமாகும் அன்றோ! எனவே அறிவிற்கு விஷயமாகும் ரூபத்திற்கு விஷயமாகாத பொருளாகிய இறைவன் எவ்விதம் எக்காரணத்தைக் கொண்டு விஷயமாக முடியும்? ஒரு காலத்திலும் இறைவன் ஒரு காரணத்தைக்கொண்டும் அறிவிற்கு விஷயமாகமாட்டான் என்பதே வேதங்களினுடைய பரம ஸித்தாந்தமான உண்மையாக இருப்பதால் இறைவனாகிய முருகப்பெருமான் அறிவில் உருவத்தோடு தோன்றப்படும் பொருள் அல்ல என்பதே உண்மையான உயர்ந்த ஞானமாகும்.

இரண்டாவதாக அருவன் என்றார். அதாவது ரூபமில்லாத பொருளும் முருகன் அல்ல என்பது பொருள். ரூபமில்லாதது என்பது மாயா தத்வம்.

யா எவள், மா இல்லையோ, அவளுக்குத்தான் மாயா என்று பெயர்.

உலகத்தில் த்ருச்யமாய் நாம ரூபத்துடன் தோன்றுகின்ற வஸ்துக்களெல்லாம் வெறும் தோற்றங் களேயாகும். அவைகள் உண்மையில் இல்லவே இல்லை. அக்ஞானிகளுக்கு இருப்பதுபோல் தோன்று கிறது. இதற்குக் காரணம் அக்ஞானமாகிய மாயையே ஆகும். மாயையானவள் இல்லாமலிருக்கிற பொய் உலகத்தை இருப்பதுபோல் தோன்ற வைக்கிறாள். உண்மையில் பிரபஞ்சமானது காணப்படுவதுபோல் மெய்யல்ல. கானல்நீர் போன்றது.

ப்ரம்மம் ஒன்றுதான் ஸத்யம். ஏனெனில் அது எங்கும் எல்லாமாய் இருக்கிறது. எனவே ரூபம் இல்லாதவன் அன்று. ரூபமில்லாமலிருப்பது என் பது இறைவனுடைய ஸ்வரூபம் என்று சொல்லக் கூடாது. இறைவன் ரூபமற்றவன் என்றால், ஒரு ரூபத்திற்கு அவன் விஷயமாக மாட்டான் என்பதே பொருள்.

உருவன்று என்று முதலில் சொன்னதினால், அரு வனாக இருப்பனோ என்ற சந்தேகம் வேண்டாம் என் பதற்காகவே அருவன் என்றார். அருவனும் அவன் அல்ல

மண்ணினால் செய்யப்பட்ட குடம் ஆனது குடமா வதிற்கு முன்பு மண்ணாகத்தான் இருந்தது. குடம் உடைந்துபோன பின்பும் மண்ணாகத்தான் இருக்கின் றது. குடம் என்ற சப்தத்தை தவிர அந்த மண்ணிற்கு வேறு உருவம் கிடையாது.

அதுபோலவே ப்ரபஞ்சம் என்ற சப்தத்தைத்தவிர பரம்பொருளுக்கு வேறு உருவம் கிடையாது. காணப்

படும் பிரபஞ்சத்திலுள்ள உருவங்களெல்லாம் வாக்கிலிருந்து வெளிவந்த சப்தத்துடன் முடிவை அடையுமே தவிர, அந்த உருவங்களுக்கும் பரம்பொருளை விட்டு விட்டு வேருன இருப்புத் தலத்தை சொல்லவும் முடியாது. அப்படியே நிரூபிக்கவும் முடியாது. ஏனெனில் வேதாந்த சாஸ்திரமானது,

அதிஷ்டான அவசேஷோஹி நிஷேத;

என்பதினுல் அதாவது அழியும் தன்மையுடன் கூடிய எந்த வஸ்துவும், தான் அழிந்துபோன பிறகு, அதாவது பொய்யாகத் தோன்றிக் கொண்டிருந்த பல உருவங்களாகிய நிலையிலிருந்து நசித்து ரூபமில்லாததாக ஆனபிறகு, தனக்குக் காரணபூதமான ப்ரம்மமாகவே மிஞ்சி விடுகிறது. ரூபமில்லாத நிலையை அடைகிறது.

ஆதாலால் சென்றகாலம் நிகழ்காலம் வருங்காலம் என்ற மூன்று காலங்களிலும் ஒருவிதமான குணங்களுக்கும் விஷயமாகாமல் ஒருவிதமான குறையுமின்றி விளங்கிவருகின்ற பரம்பொருள் ஒன்றுதான் முக்காலத்திலும் அழிவற்ற அகண்டவஸ்துவாக இருக்கின்றபடியால் ஸச்சிதானந்த ரூபமான பரம்பொருளுக்கு வேருகத் தோன்றும் வஸ்துக்களை பொய் என்றே வேதங்கள் போதிக்கின்றன. இதனுல் ரூபத்துடன் விளங்கிவரும் வஸ்து முருகன் அல்ல என்று முதலில் சொல்லி, அப்படியே அந்த ரூபம் அழிந்த பிற்பாடுள்ள ரூபமில்லாமையாய் விளங்கிவரும் வஸ்துவும் முருகன் அல்ல என்று சொல்லுகிருர் அருணகிரிநாதர். மூன்ருவதாக உளதன் என்கிருர். அதாவது உண்மையாகத் தோன்றும் வஸ்துக்களும் முருகன் அல்ல என்று அர்த்தம்.

இருக்கிறது இருக்கிறது என்று சொல்லப்படும் பொருளும் இறைவன் அல்ல. ஒரு வஸ்துவை இருக்கிறது. இது ஸத்யம் என்று ஒருவன் சொன்னால், எந்த நிலையில் அவன் அதை ஸத்யம் என்று சொன்னான் என்பதைப் பார்க்கவேண்டும். பொய்யை ஸத்யமாக எண்ணி, ஸத்யம் என்று சொன்னால் அப்பொய்யானது ஸத்யம் ஆகிவிடுமா?

ஜீவனானவன் ஜாக்கிர அவஸ்தையில் உலகத்தை ஸத்யமாக எண்ணி சுகதுக்கங்களை அனுபவிக்கிறான். அந்த ஜீவனே ஸ்வப்ன அவஸ்தையில் மனத்தில் ஸூக்ஷ்மசரீரத்தின் மூலமாக உலகத்தை ஸத்யம்போல் அனுபவிக்கிறான். பரம்பொருளைப் பார்க்காமல் பரம்பொருளில் தோன்றும் உலகத்தைப் பார்த்து அந்த அழியப்போகும் உலகத்தை ஸத்யம் என்று அனுபவிக்கிறான். ஒருவன் ஒருவஸ்துவை ஸத்யமாக அநுபவிக்கிறேன் என்று சொன்னாலே அவ்வஸ்துவானது பொய் என்று ஸித்தாந்தமாகிறது. காரணமோவெனில் ஸத்யமான வஸ்து அநுபவத்திற்கு விஷயமாகாது அன்றோ.

இறைவனை "உளது" என்று சொன்னால் அவ் இறைவனை அறிவினாலேயோ மனதினாலேயோ அநுபவிக்க முடியாது. மனதினால் அனுபவித்து இறைவனை "உளது" என்று சொல்லமுடியாது. ஏனெனில் இறைவனைப் போல் ஜீவனும் "உளது" ஆக இருக்கிறான்.

உண்மையில் இறைவனே ஜீவனாக இருப்பதினால், ஜீவ—ஈச்வர பேதமானது சாஸ்திர ஸம்மதமாகாது. அப்படியே அநுபவ ஸித்தமும் ஆகாது. எனவே பொய்யான உலகை ஸத்யம்போல் "உளது" என்று அநுபவித்துவரும் "பொய்யான உண்மைப்பொருள்

கள்'' முருகப்பெருமான் அல்ல என்று சொல்லி, முருக பெருமானை யதார்த்த நிலையில் ''உளது,' என்றூர். உதாரணமாக ஒருவனுக்கு நடுநிசியில் எங்கும் இருட் டாக யிருக்கும்போது ''நான் இருக்கிறேனு இல்லையா'' என்ற சந்தேகம் தோன்ருமல் ''நான் இருக்கிறேன்'' என்ற சஞ்சலமற்ற உறுதியான எண்ணத்துடன் ''நான் இருக்கிறேன்'' என்று சொல்லுகிருன்.

ஏன் தெரியுமா? தன்னுடைய இருப்பில் ஒருவனுக் கும் சந்தேகமில்லை. காரணம்? நான் என்பவன்தான் பரம்பொருள்.

மஹான்களிடம் ஒருவன் உபதேசம் பெறச் சென்ருல் அவர்கள் சொல்லும் முதல் வார்த்தையோ யெனில் ''நான் என்பவனைத் தெரிந்துகொண்டு வா'' என்பதேதாகுகும்.

ஆனுல் ஒவ்வொருவனுக்கும் இருட்டில் கயிறைப் பார்த்து ''ஸர்ப்பமா-கயிரு'' என்ற சந்தேகம் உண்டா கிறதே தவிர அதாவது உண்மையில் அங்கு ''உளது'' எதுஎன்று சந்தேகம் உண்டாகிறதேதவிர தன்னுடைய இருப்பில் ஸந்தேகம் வருவது இல்லை. ஏன்? ''நான் என்பவன்'' உண்மையில் உளது. உண்மையில் ''உளது'' ஆகிய நான் என்பவனே பரம்பொருள்.

ஆனுல் ஒரு காலத்திலும் இல்லாமல் மலடியின் குழந்தைபோல் பொய்யான ப்ரபஞ்சத்தை ஸத்யம் போல் ''உளது'' என்று சொல்லும் ''உளது'' ஆக முருகப்பெருமான் ஆகமாட்டான். எனவே உளது அன்று என்று சொன்னுர்.

நான்காவதாக இலதன் என்ருர். அதாவது இல் லாத பொருளும் முருகன் அல்ல என்று சொல்லுகிருர். இது ஓர் அபூர்வ வீசேஷணம். இல்லாத வஸ்து மாயா

தத்வம். இந்த இடத்தில் இலதன் என்ற பதத்திற்கு ஒரு காலத்தில் இருந்து மற்ளெரு காலத்தில் அழியும் இம் மாயா உலகம் என்று அர்த்தமல்ல. அதாவது உண்மையில் இல்லாத ப்ரபஞ்சம் என்று பொருள் அல்ல. ஒரு காலத்திலேயும் இல்லாததான முயல் கொம்புபோலவும், மலடியின் குழந்தை போலவும் உள்ள, இல்லாத வஸ்துவும் முருகன் அல்ல என்று சுட்டிக்காட்டுகிருர் அருணகிரிநாதர்.

ஆகையால் ஆத்மாவானது பரிபூர்ண வஸ்துவாக இருக்கின்றபடியால் ஆத்மா இல்லாத இடமே இல்லே. எல்லாம் ஆத்மஸ்வருபமாக இருக்கும் பொழுது வேறு வஸ்து இருப்பதற்கு இடமேது. வேறு வஸ்து இருப்பது உண்மையாஞல் ஆத்மா பரிபூர்ண வஸ்துவாகாது. ஆஞல் ஆத்மாவைத் தவிர வேறு வேருகவுள்ள வஸ்துக்கள் ஸ்பாவமாக இருப்பை உள்ளதல்ல. எனவே ஆத்மதத்வத்தைக் காட்டிலும் இல்லாத தத்வம் ஒன்று இருக்குமாஞல் அதுவும் முருகன் அல்ல.

மேலும் 'இல்லே இல்லே' என்று சாதிக்கும் நாத்திக தத்வமும் முருகன் அன்று. இதற்குக் காரணம் இறைவன் இருக்கிருன் என்பதிஞல் அல்லவா. அதாவது இல்லே என்று ஸாதிக்கும் நாத்திகவாதம் இருப்பதிஞல்தான் 'இருக்கிறது என்று ஸாதிக்க வேண்டியிருக்கிறது. எப்படியிருந்தாலும் உளதன் இலதன் என்ற இரண்டு பதங்களும் வாதத்திற்கு விஷயமாக இருக்கின்றபடியால் இரண்டு தத்துவங்களும் முருகன் அல்ல என்று நிர்த்தாரணமாக வெளியாகின்றது. ஆதலால் இலதன் என்று சொன்ஞர்.

ஐந்தாவதாக இருளன் என்றார். அதாவது எல்லாவற்றையும் மறைக்கின்ற இருள்சூழ்ந்த வஸ்துவும் முருகன் அல்ல என்று அர்த்தம்.

அதாவது பகலில் தோன்றுகின்ற வஸ்துக்கள் இரவு வந்ததும் புலப்படுவதில்லை. காரணம் இருள் நிறைந்து இருப்பதால். அதாவது அக்ஞானத்தை இருள் என்று அறியவேண்டும். ஞானமானது அக்ஞானத்தினால் மூடப்பட்டிருப்பதால் ஞானம் பாஸிக்கிறது இல்லை. தோன்றப்படும் வஸ்துக்களை இருளானது மறைக்கின்றது என்ற ஓர் எண்ணம் அறிவில் உண்டாகின்றபடியால், இருளானது மித்யாதத்வமாகவே பரிணமிக்கின்றது. அதனால் இருளானது மற்ற வஸ்துக்களைப் புலப்படாமல் செய்தாலும், ஆத்மாவினுடைய இருப்பை மறைக்கும் விஷயத்தில் சக்தியற்றதாகவே ஆகின்றது. இதற்குக் காரணமோவெனில் ஸ்வயம்பிரகாசமான ஆத்மாவை நாடியே அதன் பிரகாசத்தால்தான் பிரபஞ்ச வஸ்துக்கள் பிரகாசித்துப் புலப்படுகின்றன. அந்த ஆத்மபிரகாசத்தினால்தான் இருளும் நமக்கு இருளாகத் தோன்றுகின்றது. எனவே முருகனை இருளன் என்று சொன்னார்.

ஆறாவதாக ஒளியன் என்றார். எதையும் பிரகாசிக்கச் செய்கிற ஒளியும் முருகன் அல்ல என்றார். இருளினால் மறைக்கப்பட்ட பொருளாகிய இந்த உலகத்தை சூர்யனானவன் பிரகாசம் செய்து வைத்தபோதிலும், அந்த சூரியனானவன் தன்னைத்தானே பிரகாசம் செய்து வைத்துக்கொள்ள ஸாமர்த்யமுள்ளவனாக ஆவதில்லை. பிராணிகளுடைய 'தீ' என்ற புத்தியையே தன்னைப் பிரகாசித்து வைத்துக்கொள்ளும் விஷயத்தில் ஆச்ரயிக்கிறான். அந்தத் 'தீ'யை

பிரகாசம் செய்துவைக்கும் விஷயத்தில் ஆத்ம ஜ்யோதியே காரணமாகிறது.

எந்த இடத்தில் சூரியனும் சந்திரனும் பிரகாசிப்பது இல்லையோ, அந்த இடத்தின் பிரகாசத்திஞல் சூரியனும் சந்திரனும் பாஸிக்கின்றதோ, அந்த இடத்தையே ஆத்மஜ்யோதி என்று அறியவேண்டும். ஆத்மஜ்யோதி இல்லையென்ருல் சூர்யன் ஸ்வயமாகப் பிரகாசிக்க சாமர்த்யமுள்ளதாய் ஆகாது. ஆகவே சூரியனைப் பிரகாசிக்க வைக்க ஆத்ம ஜ்யோதி தேவையாக இருப்பதால் சூர்யனும் ஒளியற்றவனே ஆகிருன்.

மேலும் ஒரு பிரகாசமானது தன்னைவிடப் பிரகாசமற்ற பொருளைத்தான் புலப்படவைக்குமே தவிர, தன்னைவிடப் பிரகாசமுள்ள பொருளைப்புலப்பட வைக்காது. ஆதலால் சூர்ய ஒளியானது ஆத்ம ஒளியைப் பிரகாசிக்க வைப்பதில் ஸாமர்த்யமுள்ளதாக ஆகிறது இல்லை. ஆத்ம ஜ்யோதிஸ்ஸிற்கு சூர்யனுடைய ஒளி விஷயமாக ஆகின்றபடியால், விஷயமாக ஆகின்ற சூர்யனுடைய ஒளியும் முருகனுக ஆகாது என்ருர்.

இவ்வாறு முருகன், உருவன்று, அருவன்று, உளது அன்று, இலது அன்று, இருளன்று, ஒளியன்று எனப் பல மாதிரி நின்று வருகிருர்.

"சும்மா இரு சொல்அற" என்ற உபதேச மந்திரத்தின் அடிப்படையான ஞானமார்க்கத்தைத்தான் இந்தப் பாட்டில் விஸ்தாரப்படுத்தியிருக்கிருர் அருணகிரிநாதர். ஆகையால் காணப்படும் உருவப் பொருள் இறைவன் அல்ல என்று சொல்லி, இறைவனை ரூபமில்லாதவன் என்று எண்ணும்படிசெய்து, அந்த ரூபமில்லாத ஸ்வரூபமும் இறைவன் அல்ல என்று சொன்ஞர்.

அப்படியே ஸத்யமாக அநுபவித்துவரும் ஜகத்தும் இறைவனுக ஆகாது என்று சொல்லி, இறைவனே இல்லாமல் இருக்கப்பட்ட மாயையோ என்று எண்ணும்படி செய்து, அந்தப் பொய்யான மாயையும் இறைவன் அல்ல என்று சொன்னுர்.

அப்படியே ப்ரம்மத்தினிடத்தில் ப்ரபஞ்சமானது கல்பிக்கப்பட்டது என்ற தெளிவான ஞானத்தை மறைக்கின்ற இருளும் இறைவன் அல்லஎன்று சொல்லி கல்பிக்கப்பட்ட ப்ரபஞ்சத்தை ஸத்யம் போல் பாஸிக்க வைக்கின்ற சூரியனின் ஒளியை இறைவனுக எண்ணும்படிச் செய்து, அவ் ஒளியானது ஆத்ம ஜ்யோதிஸில் லயத்தையடைந்து பிரகாசமற்றதாக ஆகி விடுகின்றபடியால் அவ் ஒளியும் இறைவன் அல்ல என்று சொன்னுர்.

இதனுல் இறைவன் உருவமும் அருவமும் இல்லாமல், அப்படியே உருவ அருவமாயுள்ள நிலையிலும் இல்லாமல், அப்படியே உளதும் இலதும் இல்லாமல், அப்படியே இருளும் ஒளியுமாக இல்லாமல், அப்படியே இருள் ஒளியாக இருக்கும் நிலையிலும் இல்லாமல், இறைவன் நின்று வருவதால் அவ் அகண்ட சச்சிதானந்த மூர்த்தியாக விளங்கி வரும் இறைவனே மெய்ப் பொருளாகும் அன்ருே! அம்மெய்ப்பொருளாகிய முருகப்பெருமானே தெய்வீகமான சுத்த ப்ரம்மத்தின் அவதாரமுமாக விளங்குகிருர்.

ஒப்பற்ற வேற்படையைத் தமது திருக்கரத்தில் தாங்கிவரும் முனிவராகவும், நம் குருவாகவும் விளங்கி வருகிருர்.

அன்னை பராசக்தியானவள் வேலினைத் தமது இரு கண்களில் வைத்துக்கொண்டு இருக்கிருள். இந்த

தத்துவத்தை முருகப்பெருமானே ஞானசம்பந்தமூர்த்தி யாக அவதரித்து அம்பிகையின் கண்களைத் துதித்துப் பாடும்போது,

ஊனேறு வேலின் உருவேறு கண்ணி

என்று வர்ணித்திருக்கிறார்.

இத்தகைய மஹாமகிமையினைக் கொண்ட சக்தி வேலை உபாஸித்துவரும் பக்தர்களுக்கு பயம், துன்பம், கஷ்டம், தரித்திரம், தீராநோய்கள் முதலிய எல்லாவிதமான தீவினைகளும் நீங்கி அவர்களுடைய உள்ளத்திலும் க்ருஹத்திலும் அஷ்டலக்ஷ்மிகள் தாண்டவம் ஆடுவார்கள். ஒருவிதமான குறைவு மின்றி நிறைந்த மனதினையுடையவர்களாகவே இருந்து வருவார்கள்.

பக்தர்களுக்குத் துணையாக நிற்பதில் கருணைக் கடலான முருகப்பெருமானின் ஒப்பற்ற வேலுக்கு நிகராக எதுவுமே இல்லை.

ஆறுபடை வீட்டினையுடைய தணிகாசலக் கடவுளின் ஒப்பற்ற வேலின் பெருமையை மும்மூர்த்திகளினு லும் வர்ணிக்க இயலுமோ.

உலகமெலாம் தொழுதேத்தும் மாறிலாத திருக் கரத்து வேலைப் போற்றி மகிழ்வதே எமக்கு என் றென்றும் வேலை என்று வேல் வணக்கம் என்ற நூலில்,

கார்த்திகேயன் கை வேலை
காண்பதே எமக்கு வேலை...
ஆறு முகன் கரத்து வேலை
அடுப்பதே எமக்கு வேலை...
நாதன் செவ்வேளின் வேலை
நாடுவதே எமக்கு வேலை...

பன்னிருகையன் வேலைப்
பணிவதே எமக்கு வேலை...
மலர்க்கரத்து சக்தி வேலை
வேண்டுவதே எமக்கு வேலை...
சிவசுப்ரமணியன் வேலைச்
சேவிப்பது எமக்கு வேலை...
விண்ணவன் கரத்து வேலை
விளம்புவது எமக்கு வேலை...
சீருரும் இவன்கை வேலைச்
சிந்திப்பது எமக்கு வேலை...
ஒப்பிலான் கரத்து வேலை
ஓதுவது எமக்கு வேலை...
தட்டாமல் அவன்கை வேலைத்
தரிசிப்பது எமக்கு வேலை...

என்று அருமையாய் ஆழ்ந்த கருத்தினைக்கொண்ட் தத்துவங்கள் போதிக்கப்படுகிறது.

ஊசிக்கும் காந்தத்திற்கும் உள்ள உறவுபோல் அடியார்களுக்கும் வேலுக்கும் உறவு இருந்து வருகிறது. அடியார்கள் முருகனின் வேலைப்பற்றிப் பேசுவதையே தமது தொழிலாகக் கொண்டு அவ்வேலையே ஆராதித்து வருகிறார்கள். வேல் பூஜை செய்து வருகிறார்கள். தனிப்பட்ட முறையில் வேலை ஆராதிக்கின்றார்கள். அடியார்கள் காந்தம்போல் வேலினைத் தம்மிடம் வரவழைத்து விடுகிறார்கள். அடியார்கள் விரும்பிய வண்ணமே வேலானது வேலை செய்கிறது.

நல்லோர் நினைவில் நடனம் புரியும்
பொல்லாதவரை பொடிப்பொடியாக்கும்

தன்மையினைக் கொண்டது குமரனின்வேல்.

ஆழ்ந்த கருணைக்கும் அன்பிற்கும் உறைவிட மாகத் திகழ்ந்து விளங்கி வருகிற அருணகிரியார் நம் குரு என்று முருகனை வர்ணிக்கின்றார். தன்மை யில் கூறாமல் பன்மையில் நம் குரு என்று சொன்னது, பெருமையினும் பெருமையே. நம்முடைய குரு ஸாதாரண குருவல்ல. குருமூர்த்தியாய் மௌன நிலை யில் அமர்ந்து ஜீவப்ரம்ம ஐக்கியஸாக்ஷாத்காரத்தைப் போதித்துவரும் எல்லாம் வல்ல தக்ஷிணாமூர்த்திக்கே குருவாக இருந்தவர். ஈசருடன் ஞானமொழி பேசும் ஞானக்கடல் அன்றோ நம் குரு.

இத்தகைய மஹிமையினைக் கொண்ட முருகப் பெருமான் அடியேனைத் தடுத்து ஆட்கொண்டு "சும்மா இரு சொல்அற" என்று உபதேசித்து எனது ஞானக் கண்ணைத் திறந்து, ஞானபண்டித குருநாதனாக என் முன் தோன்றித் தரிசனம் தந்து அருளினாரே! இம் மாபெரும் கருணைகொண்ட மாறிலா தெய்வத்தை அடியேன் நம்முடைய குரு என்று அழைத்தால்தான் உள்ளமானது பேரின்பத்தினை அடையும் என்பதினால் நம் குரு என்று இறைவனை அழைக்கின்றார்.

ஆதலால் செல்வக் குமரா! உன்னை அடியேன் அளவிலா அன்பினாலும் ஆனந்தத்தினாலும்,

நம்குரு என்றும், நம்முனி என்றும்,
நம் தனிவேல் என்றும், நம்முருகன்

என்றும் அழைக்கின்றேன். ஏன் தெரியுமா? நீ நம்மைச் சேர்ந்தவன். அடியார்களின் துயரத்தைத்துடைப்பவன். மந்திர மூர்த்தியாக இருந்து பக்தர்களுக்கு மந்திரோப தேசம் செய்யும் முனிவனாக நீ விளங்குகிறாய்.

நமக்குக் கஷ்டம் வரும்பொழுது அதனைப் போக் கடிக்க ஒப்பற்ற வேல் உண்டு.

வேலில் அனேக விதங்கள் உண்டு. துஷ்டர்களை ஸம்ஹரிப்பதற்கு ஒரு வேல். பக்தர்களைக் காப்பாற்றி அருளுவதற்கு ஒரு வேல்.

நம்முடைய வேல் என்பது, நமக்கு என்றும் அருளினையே பொழிந்துகொண்டிருக்கும் வேலேயாகும். இதனாலே தனிவேல் என்று அதாவது ஒப்பற்ற வேல் என்று அறியவேண்டும்.

வேல்முருகா, வேல்முருகா, வேல்முருகா என்று வாயாரவும் நெஞ்சாரவும் நான் கதறுகிறேன். ஏன் தெரியுமா? நீ நம் முருகன் அன்றோ! தமிழர்களின் தனித் தெய்வமல்லவா நீ. அடியார்களின் துயரங்களை தீர்த்தருளும் ஆத்ம பந்துஅல்லவா நீ.

உனது அருளினைக் கொண்டே அடியார்கள் துறவிகள் ஆகிவிடுகிறார்கள்.

வேல் என்ற மந்திரமானது ஞானிகளும் துறவிகளும் ஸதா ஜெபித்துக்கொண்டு இருக்கும் மஹா மந்திரமேயாகும். எந்த இடத்தில் ஸதா காலமும்,

வேல்முருகா வேல்முருகா வேல்முருகா
வேல்முருகா வேல்முருகா வேல்முருகா

என்று கோஷித்துக்கொண்டு இருக்கின்றார்களோ அவ்விடத்தில் ஆறுபடை வீடுடையவனான செல்வக் குமரன் தமது திருக்கரத்தில் ஒப்பற்ற வேலினை வைத்துக்கொண்டு திருவிளையாடல் செய்து கொண்டே இருப்பான். இதில் கொஞ்சம் கூட ஐயமில்லை.

எனவே, நெஞ்சை அள்ளும் செல்வக்குமரா! கண்ணைப் பறிக்கும் கார்த்திகை பாலனே! சிந்தையைக் குளிர்விக்கும் சிங்காரவேலனே! நினது திருவருளினைப் பெறாதவர்கள் உனது நிஜஸ்வருபத்தை அறிய முடியுமா அப்பனே!

நினது அருளினுல் அடைய முடியாதது உண்டோ! அருளினைக்கொண்டே எதையும் பார்—அருளின்றி அறிவினுல் எதையும் பார்க்காதே. அருளின்றி அறிவானது சோபிக்காது. முதலில் அருளைப்பெற யத்னம் செய். அருள் கிடைத்தால் அறிவானது தானே வரும் என்று மகான்கள் உலகத்தினர்களைப் பார்த்து முதலில் இறைவனின் அருளினைப் பெறுங்கள், மற்றவை எல்லாம் தானுகவே வரும் என்று போதிக்கின்ருர்கள்.

எனவே நினது அருளினையே நாடி அடியேன் நிற்கிறேன். நினது அருளினுல் அடைய முடியாதது ஒன்றுமே இல்லை.

இறைவனின் திருஅருளின் பெருமையை ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் தமது திருவாசகத்தில்,

செத்திடமும் பிறந்திடமும்
இனிச்சாவா திருந்திடமும்,
அத்தனையும் அறியாதார்
அறியுமறி வெவ் வறிவோ,
ஒத்தநிலம் ஒத்தபொருள்
ஒருபொருளாம் பெரும்பயனை
அத்தனெனக் கருளியவா
ருர்பெறுவார் அச்சோவே!

என்று தேன் சொட்டச் சொட்டச் சொல்கின்ருர். இறைவனின் அருள் ஒன்றே இத்தகைய பெருமையினைக் கொண்டது.

எனவே மேலான கருணையினுல் இறைவனின் அருளைப்பெற்று அருள்வடிவாக, இறைவனே சொல்வதுபோல் "ஹே உலகத்தினர்களே! நான் சொல்வதைக் கேளுங்கள். முருகனுடைய 'அருளினைப் பெரு

மல், அறிவினை அடைந்திருக்கிறோம் என்ற மமதை யைக் கொண்டு, அறிவின் மூலமாக வேதாந்த விசாரம் செய்து மும்மூர்த்திகளுக்கும் முதல்வனுயும், மெய்ப் பொருளாகிய ஒப்பிலா வேற்படையையுடையவனுயு முள்ள ஞானபண்டிதனுகிய முருகப் பெருமானின் உண்மையான ஸ்வரூபத்தை அறிந்துவிடலாம் என்று புறப்படாதீர்கள். அறிவினைத் தருபவனும் அவன் அறிவினை எடுப்பவனும் அவன் அல்லவா?

அறிவினுல் முருகனை அறியலாம் என்றோ அல்லது அடையலாம் என்றோ என்று தோன்றும் எண்ணங்களை அடியோடு விட்டுவிடுங்கள்.

நமக்கெல்லாம் குருவாக இருப்பவர் குமரக் கடவுள் ஒருவனே! ஆதலால் நீங்கள் எல்லோரும் பக்திச்ரத்தையுடன் முருகனை நெஞ்சில் நிலைநிறுத்தி திருநீற்றினைத் தரித்துக்கொண்டு,

குமராய நம:

என்று ஜபம் செய்து வாருங்கள். மறு க்ஷணமே அவ னுடைய அருளை நீங்கள் அடைந்து, அதன் மகிமையி னுல் அவன் பெருமையைத் தெரிந்துகொண்டு முடிவில் ப்ரம்மானந்தத்தை அடைவீர்கள்.

எனவே அருள் இல்லையேல் குமரனை அறியவே முடியாது என்பதினை ஸித்தாந்தமாக இப்பாட்டில்,

அருள் கொண்டறியார் அறியுந்தரமோ

என்று நிந்தித்து சொல்லுகிருர் அருணகிரிநாத சுவாமிகள். என்னே, அருளின் பெருமை! என்னே அருளில்லாத அறிவின் தாழ்மை.

இமயத்திலிருந்து குமரி வரையில் வானளாவ நிற்கின்ற மாபெரும் ஆலயங்களை நாம் கண்குளிரக் காண்கின்றோமே—இவை அனைத்தும் எதனைச் சுட்டிக் காட்டுகின்றன தெரியுமா? இறைவனுடைய அருள் ஒன்றையே ஆகும். அடியார்களின் உள்ளத்தில் உரம் பெற்று வளர்ந்த இறைவனுடைய அருளே மாபெரும் ஆலயங்களாக எழுகின்றன அன்றோ!!

அறியும் அறிவெல்லாம் அவன் அருளை அடைவதற்கே. அருளில்லாத அறிவானது சோபிக்காது.

எனவே குமரனின் அருளைப் பெறுவதற்கு இந்தப் பாடலே மேலான மந்திரமாகத் திகழ்கின்றது.

ஆதலால் இப்பாடலை உள்ளமுருகிப் பாராயணம் செய்து வருபவர்கள் குமரனின் அருளைப் பெற்று இந்த அரிதாகிய மானிடப் பிறவியின் பயனை அடைவார்களென்பது முற்றிலும் திண்ணம்.



# கழல் பெற்றுக் கடைத்தேறு

## 14



கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே! ஒழிவாய் ஒழிவாய்
மெய்வாய் விழிநா சியொடும் செவியாம்
ஐவாய் வழிசெல் லும் அவாவினையே.

### பதவுரை

மனனே—(முருகனுடைய திருவடிகளை நினையாமல் உலக சிந்தனையிலிருந்து வரும்) மனமே, மெய்—சுகத்தினை அனுபவிப்பதற்குக் காரணமாக இருக்கின்ற உடலும், வாய்—(பேசுகின்ற) வாயும், விழி—(பார்க்கின்ற) கண்ணும், நாசியொடும்—(வாஸனைகளை நுகருகின்ற) மூக்கும், செவிஆம்—(சப்தங்களைக் கேட்கின்ற) காதும் ஆகிய, ஐவாய்—ஐந்து பொறிகளின் அதாவது ஐந்து இந்திரியங்களின், வழி—வழியாக அதாவது மூலமாக, செல்லும்—செல்லுகின்ற, அவா—ஆசைகளாகின்ற, வினை—துன்பங்களை, ஏ—ஆசையே துன்பமாக இருப்பதால் அவ்வாசைகளையே, ஒழிவாய்—விட்டுவிடுவாய், ஒழிவாய்—அடியோடு விட்டுவிடுவாய், கைவாய்—திருக்கரத்தில்சிறந்து விளங்குகின்ற, கதிர்வேல்—ஒளிமயமான

வேலினைக்கொண்ட, முருகன்—முருகப்பெருமானின், கழல் —திருவடிகளை, பெற்று—(அவருடைய அருளினால்) அடைந்து, உய்வாய்—(அத்திருவடிகளையே துணையாகக் கொண்டு மானிடப்பிறவியின் பயனை அடைந்து) நற்கதியை அடைவாயாக.

**தாத்பர்யம்:**

பந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும் மூலகாரணம் மனமே ஆகும். எனவே துன்பத்தினை உண்டுபண்ணும் விஷயாதிகளில் மூழ்கிக்கொண்டிருக்கும் மனதை அதிலிருந்து திருப்பி முருகப்பெருமானுடைய சரணாரவிந்தங்களில் கொண்டுபோய் விடுகின்றார். இதையே ராஜயோகம் என்று சாஸ்திரங்கள் போதிக்கின்றன.

மனதானது முருகனுடைய திருவடிகளை அடைந்து அங்கேயே ஸ்திரமாக வஸிக்க வேண்டுமானால் ஜன்மாந்திரத்தில் மலைபோல் புண்ணியத்தைச்செய்திருக்க வேண்டும். தவிர செய்கின்ற காரியங்களையெல்லாம் நிஷ்காம்யமாக செய்து அப்படியே ஈச்வரார்ப்பணமாகவும் செய்திருக்கவேண்டும்.

எனவே நான் செய்கிறேன் என்ற அகங்காரமும், செய்கின்ற காரியத்திற்குப் பலனை எதிர்பார்க்காமலும் செய்கின்ற காரியத்தை ஈச்வராராதனையாகசெய்கிறவர்களுக்குத்தான் இறைவனின் அருளானது கிடைக்கும். இறைவனின் அருள் இருந்தால்தான் செய்யும் கர்மாக்களை இறைவனுக்கு அர்ப்பணம்செய்ய மனம்வரும்.

ஆனால் மனிதர்களோ வெளில் புத்தியாகிய விவேகத்தையிழந்து இந்திரியங்களுக்கு அடிமையாகி விடுகிறார்கள். உள்ளத்தில் ஆசையானது அதிகரிக்க அதிகரிக்க மனிதனானவன் மேன்மேலும் துன்பத்தினையே அனுபவிக்கின்றான்.

ஆசையானது மூன்று வகைப்படும்! ஒன்று மண்ணாசை, இரண்டாவது பொன்னாசை, மூன்றாவது பெண்ணாசை. இம்மூன்று ஆசைகளையும் அனுபவிக்க வேண்டுமென்ற எண்ணமானது மனதில் உண்டாகும் பொழுது அதற்கு இணையாக இந்திரியங்கள் இருந்து வருகின்றன. ஆசைக்கு அளவே இல்லை. மண்ணாசை பொன்னாசை இவைகளிருக்கும் மனதை ஒருவேளை உபதேசம் மூலமாகத் திருப்பினாலும் திருப்பலாம். ஆனால் பெண்ணாசையில் உழன்று கொண்டிருக்கிற மனதை இறைவன் அருள் ஒன்றினால்தான் திருப்ப முடியுமே தவிர அன்னியில் முடியவே முடியாது.

தவிர உலக இன்பங்களை அனுபவிக்க ஆசையை ஒட்டி அந்த அந்த இந்திரியங்கள் ப்ரதானத்தை அடைகின்றன. உதாரணமாக ஒருவனுக்குச் சுவையுள்ள பதார்த்தம் ஒன்றை அனுபவித்து சாப்பிட வேண்டுமென்ற எண்ணம் மனதில் உண்டாகி அப் பதார்த்தம் அவனுக்குக் கிடைக்கவில்லையென்றால் மனோவருத்தத்தையே அடைகிறான். காரணம் அவனுடைய ஆசை நிறைவேறவில்லை யென்பதினால் அல்லவா.

இதைப்போலவே ஒருவன் தன்னுடைய உள்ளத்தில் எழும் ஆசையைப் பூர்த்திசெய்து கொள்ளும் விஷயத்தில் மற்றொருவன் தடங்கலாகயிருந்தால் அவனுக்கு, அவனிடம் கோபம் உண்டாகி முடிவில் விரோதத்தையே உண்டு செய்துகொள்கிறான். ஆசையானது விரோதத்தையே உண்டுபண்ணுகிறதே தவிர நட்பினை உண்டுபண்ணுவதில்லை.

இதனால்தான் ஞானிகள் எல்லாவிதமான ஆசைகளையும் துறந்து துறவிகளாக ஆகிவிடுகின்றார்கள்.

ஆதலால் துறவிகளுக்கு எந்தப் பொருள்களாலும் எக்காலத்திலும் எக்காரணத்தைக்கொண்டும் பயமும் துன்பமும் ஏற்படுவதில்லை. ஏனெனில்

ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்,
ஆசை விடவிட ஆனந்த மாமே.

என்று சொல்லுகிறார் திருமந்திரத்தில் திருமூல நாயனார்.

மேலும் இறைவனிடத்தில் ஒருவன் பிறவாமையை வேண்டினால், அவ்வேண்டுதல் அவனைத் துன்பத்திற்கு ஆளாக்காது. இதையே திருவள்ளுவர்

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை
மற்றது, வேண்டாமை வேண்டவரும்

என்று சொல்லுகிறார்.

தவிர பாட்டில் துன்பங்களை தரும் ஆசைகளையே விட்டுவிட்டு ஒழிவாய் என்றார். மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை ஆகிய மூன்று ஆசைகளில் வைத்துமேலான துன்பத்தினைத்தரக்கூடியது பெண்ணாசையேயாகும். இப்பெண்ணாசையில் விச்வாமித்திரர் முதலாகிய முனிவர்களே சிக்கித்துன்பத்தினை அடைந்திருக்கிறார்கள். ஆகையால் மாதராசையில் கிடப்பவன் தன்னுடைய உடம்பு வாய் கண் மூக்கு காது முதலிய எல்லாவற்றினாலும் தன் காமமாகிய பிணியைத் தீர்த்துக்கொள்வான். பெண்ணாசை நெருப்பினைப்போன்றது. மனிதனின் உள்ளத்தை அடியோடு சுட்டெரித்துவிடும்.

ஆகையினால் ஹே மனமே! நான் கடைசியாக உனக்குச் சொல்வது என்னவென்றால் நீ பெண்ணா

சையை வளர்க்கக்கூடாது. இவ்வாசையானது உன்னை முருகனின் திருவடிகளை நினைக்கவிடாது. ஒவ்வொரு இந்திரியங்களினுலும் பெண்ணுசையை அனுபவிக்க வேண்டுமென்று நினைக்கிருயே இந்த எண்ணம் உன்னுடைய அறியாமையையே எடுத்துக் காட்டுகிறது.

ஆனுல் இறைவனிடத்தில் உண்டாகும் ஆசையானது துன்பத்தினைத் தரக்கூடியது அல்ல. இன்பத்தினையே தரக்கூடியது. இதனுல்தான் மஹாபுனிதவதியாகிய காரைக்கால் அம்மையார் அளவிலா ஆசையினுல் இறைவனை வேண்டுகின்ருர் பின்வருமாறு:

"இறவாத இன்ப அன்புவேண்டிப்
பின் வேண்டுகின்ருர்
பிறவாமை வேண்டும் மீண்டும்
பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும் இன்னும்
வேண்டு நான் மகிழ்ந்துபாடி
அறவா! நீ ஆடும்போது உன்
அடியின் கீழ் இருக்க"

என்ருர்.

ஆதலால் ஹே மனமே! நீ காரைக்கால் அம்மையார் போல் உன் ஆசையெல்லாவற்றையும் முருகனிடத்தில் செலுத்தி நற்கதியை அடைவாய். விஷயாதிகளில் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் நீ உலகப்பற்று தலை அடியோடு விட்டுவிட்டு ஜோதிமயமான ஞான வேலைக் கையில் தாங்கிவரும் முருகப்பெருமானின் திருவடிகளை அடைந்து கொள்வாய். இல்லையேல் நீ நரகத்தையே அடைவாய். முருகனின் அருளுக்குப்

பாத்திரமானல்தான் நீ பேரின்பத்தை அடையலாம். முருகப்பெருமானின் திருவருளைப் பெற்று மெய்ப் பொருள் எது என்று எண்ணிப்பார். இறைவனையே உனக்கு இன்றியமையாத இணையற்ற துணைவனக வைத்துக்கொள். எனவே நீ கதிர்வேல் முருகன் திருவடிகளை ஸதா நினைத்துக்கொண்டே இரு. இல்லையேல் ஆசைகளாகிய வினைகள் உன்னைவந்து அணுகும் இந்திரியங்களை நீ நிக்ரஹம் செய்யவேண்டும். அதற்கு அளவிலாமல் ஈச்வர பக்தி வேண்டும்.

நீயோ தேரினுடைய நிலையில் இருக்கிருய். இந்திரியங்களாகிய குதிரைகளை மனதாகிய தேரில் கட்டிவிட்டால், மனதாகிய தேர் எந் நிலையில் எங்கு போய் நிற்கும் என்று சொல்லமுடியாது. ஆகவே புத்தியாகிய ஸாரதியை மனதாகிய தேரில் அமர வைத்து இந்திரியங்களாகிய குதிரைகளை பக்தியாகிய கயிறினல் கட்டி ஓட்டினல்தான் நீ முக்தியாகிய பிற விப்பயனை அடையமுடியும். இல்லையேல் நீ எவ்விதம் அடைவாய்? நீயே சொல்.

நீயோ பெண்ணாசையில் மூழ்கிக்கிடக்கின்ருய். பெண்ணாசையே உனக்கு இயமனக இருந்துவருகிறது என்பதினை நீ அறிகின்ருய் இல்லை. நிலையில்லாத பெண்ணாசையாகிய மோகத்தோடு கூடிய இன்பத்தை விட்டுவிடுவாய். கண்ணுக்கினிய தோற்றமுடையவள், நினைக்கின்ற இச்சையின்படி கோலாகலஞ் செய்பவள் என்றெல்லாம் பெண்ணினை நீ வர்ணிக்கின்ருய்.

அழிந்துபோகும் நெஞ்சே! இன்னும் சொல்கிறேன் கேள்.

அடியார்களுக்குத் தொண்டு செய்வதற்கே இந்த உடம்பானது தரப்பட்டுள்ளது. அப்படியே தேவாரம்

திருமந்திரம் திருப்புகழ், பெரியபுராணம், ராமாயணம் பாகவதம் முதலிய அரிய நூல்களை வாயாரப் படிப்ப தற்கும், பாடுவதற்கும், இறைவனின் வேதமந்திரங் களை உச்சரிப்பதற்குமே வாயானது இருந்துவருகின் றது. ஆலயங்களில் இறைவனுக்கு நடக்கும் திரு விழாக்களைக் கண்ணாரக் கண்டுகளிப்பதற்கே கண்ணு னது ஏற்பட்டது.

பழநிஆண்டியைப் பஞ்சாம்ருதத்தினுல் அபிஷே கம் செய்து வாஸனை நிறைந்த புஷ்பங்களினுல் அர்ச்சனை செய்து அப்பரிமளத்தோடு கூடிய திவ்ய வாஸனையை மூக்கினுல் நுகர்ந்து ஆனந்தத்தை அடை வாய். இறைவனுக்கு அர்ப்பணம் செய்யும் பொருள் கள் திவ்யமான வாஸனையுடன் இருக்கவேண்டும். அதையறியவே மூக்கானது உள்ளது.

அதுமட்டுமல்ல பக்தர்கள் ஆயிரக்கணக்காக. சேர்ந்துகொண்டு

**வேல் முருகா வேல் முருகா வேல் முருகாவே**
**வேல் முருகா வேல் முருகா வேல் முருகாவே**

என்றும்

**வேலனுக்கு அரோகரா, என்னப்பனுக்கு அரோகரா**
**முருகனுக்கு அரோகரா, பாலனுக்கு அரோகரா**
**கந்தனுக்கு அரோகரா, பழநியாண்டிக்கு அரோகரா**
**குமரனுக்கு அரோகரா, ஆறுமுகனுக்கு அரோகரா**

என்று ஆரவாரம் செய்கின்றூர்களே, அதைச் செவி கொடுத்துக் கேட்பதற்கே செவியானது இருந்து வரு கிறது.

தவிர எல்லா இந்திரியங்களிலும் வைத்து கண்ணு னது உயர்ந்த இந்திரியமானதினுல், அவ்விந்திரியத் தின் பயனைத் திருஞானசம்பந்தர்

கண்ணினால் அவர் நல்விழாப்
பொலிவு கண்டார்தல்

என்று ஸித்தாந்தமாகச் சொல்லி மானிடப்பிறவியின் பயன் இறைவனைத் தர்சித்துக் கண்ணாரக் களிக்கவே ஏற்பட்டது என்கிறார்.

ஆகையினால் ஹே மனமே! ஒவ்வொரு குன்றிலும் திருவிளையாடல் செய்யும் முருகனை நீ கணகுளிரக் காணவேண்டாமா. அதிலும் கண்ணிருக்கும்பொழுதே நீ இறைவனின் பற்பல காவடி ஆட்டங்களைக்கண்டு ஆனந்திக்க வேண்டாமா. காவடியை எடுத்து அடியார்கள்மெய்மறந்து உடல்முழுதும் திருநீறு அணிந்து கொண்டு ஆடும் ஒரு வைபவத்தை நீ இந்த மானிடப் பிறவியில்தான் காணமுடியும். மானிடப்பிறவியோ மிகவும் அரிதானது. அடுத்த பிறவி என்னவென்று நமக்குத் தெரியாது.

மனமே, முருகன் ஒருவன்தான் அடியார்கள் ஆடும்வண்ணம் ஆடுவான். அவ்விதம் அடியார்கள் இஷ்டம்போல் ஆடுவதே முருகனுடைய திருவிளையாடல் ஆகும்.

இதனால் அல்லவா ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

ஒரு நாமம் ஓருருவம்
ஒன்றுமில்லாற் காயிரந்
திருநாமம் பாடிநாம்
தெள்ளேணங் கொட்டாமோ!

என்று திருவாசகத்தில் தம்முள்ளம் உருகும்படிச் சொல்லி இறைவனைப் புகழ்கின்றார்.

பக்தர்கள் இஷ்டம்போல் இறைவன் தோன்றுவார் என்பதினை பரமயோகியான தாயுமான சுவாமிகள்

பாட்டுக்கோ அன்பினுக்கோ
பத்திக்கோ அன்பர் தங்கள்
நீட்டுக்கெல்லாம் குறுகி
நின்ருய் பராபரமே

என்று பேரின்பத்தேன் சொட்டச் சொட்டச் சொல்லு கின்ருறென்ருல் இறைவனின் கருணையினை என்ன வென்று சொல்வோம் !

எனவே முருகனின் திருவடிகளே பதினுன்கு லோகங்களுக்கும் சரணுலயம் என்பதைச் சொல்லவும் வேண்டுமா! அம் முருகப் பெருமானின் அத்யாச் சர்யகரமான வைபவத்தையே அடியார்கள் கழுத்தில் பற்பல காவடி ரூபமாக சுமந்து ஆடிக்கொண்டு இருக் கிருர்கள். ஏ மனமே! நீ அதனைக் கண்கள் இருக்கும் போதே காணவேண்டாமா. காவடிகளின் பெருமையைக் காது கேட்கும்போதே கேட்டு மகிழவேண்டாமா. உடலில் உயிர் இருக்கும்போதே ஒவ்வொரு குன்று தோறும் சென்று காவடி ஆட்டத்தின் ரகஸ்யத்தைத் தெரிந்து அநுபவிக்க வேண்டாமா. வாயினுல் காவடி யின் பெருமையைப் பாடவேண்டாமா. இதையெல்லாம் கண்டு நீ காவடியை எடுத்து மெய்மறந்து ஆடவேண் டாமா. சொல் மனமே!

நீ எல்லா ஆசைகளையும் விட்டுவிட்டு, முக்கிய மாகப் பெண்ணுசையை ஒழிக்கும் பொருட்டு காவடி களின் பெருமையைக் கொஞ்சம் சொல்லுகிறேன் கேள். கேட்கும்பொழுதுதான் உனக்கு முருகனின் பெருமை நன்ருகத்தெரியும்: ஒருதரம் செவிகொடுத் துக் கேட்டால் பிறகு நீ கேட்டுக்கொண்டே இருப்பாய். பாடிக்கொண்டே இருப்பாய். மெய்மறந்து ஆடிக் கொண்டே இருப்பாய். குமரனை நினைத்துக்கொண்டே

யிருப்பாய். செல்வக்குமரனின் காவடி எங்கே அதனைக் கொண்டு வா, நானும் எடுத்து ஆடுகிறேன் என்பாய். எனவே சொல்கிறேன் செவிகொடுத்துக் கேள்.

**பால்காவடி பன்னீர்க்காவடி புஷ்பக்காவடியாம்**
**சர்க்கரைக்காவடி சந்தனக்காவடி சேவல் காவடியாம்**
**ஸர்ப்பக்காவடி மச்சக்காவடி முக்திக்காவடியாம்**
**மலையைச் சுற்றிக் காவடி ஆட்டம் தினமும் நடக்குதாம்.**

அங்கும் மிங்கும் காவடிகள்
எங்கும் நிற்கும் காவடிகள்
திருவேரகத்தில் காவடிகள்
தணிகாசலத்தில் காவடிகள்
பழநிமலையில் காவடிகள்
பழமுதிர்சோலையிலே காவடிகள்
குன்றுதோறும் காவடிகள்
சுவாமிமலையில் காவடிகள்
திருபரங்குன்றில் காவடிகள்
திருசெந்தூரில் காவடிகள்
பரம்பொருள் காவடிகள்
பந்தமறுக்கும் காவடிகள்.

**தேனாலேகாவடிகள் பாலாலே காவடிகள்**
**அன்பாலே காவடிகள் இன்பமான காவடிகள்**
**சாம்பிராணி காவடிகள் ஸர்வமும் காவடிகள்**
**பஞ்சாக்ஷரகாவடிகள் பஞ்சாம்ருத காவடிகள்**
**ஞானவேல் காவடிகள் சக்திவேல் காவடிகள்**
**முக்திவேல் காவடிகள் கதிர்வேல் காவடிகள்**
**அருள்வேல் காவடிகள் அன்புவேல் காவடிகள்**
**முனையவேல் காவடிகள் கனகவேல் காவடிகள்**
**நல்லவேல் காவடிகள் இனியவேல் காவடிகள்**
**சுடர்வேல் காவடிகள் சுத்தவேல் காவடிகள்**

அழகுவேல் காவடிகள் புனிதவேல் காவடிகள்
பெருவேல் காவடிகள் செவ்வேல் காவடிகள்
வடிவேல் காவடிகள் திருவேல் காவடிகள்
பருவேல் காவடிகள் வெற்றிவேல் காவடிகள்
அயில்வேல் காவடிகள் வல்வேல் காவடிகள்
கருணைவேல் காவடிகள் எதிர்வேல் காவடிகள்.
வஞ்சிரவேல் காவடிகள் அனையவேல் காவடிகள்
சதுர்வேல் காவடிகள் ஸாவேல்காவடிகள்

என்று ஆயிரக்கணக்கான காவடிகள் குமரனிருக்கும் குன்றெல்லாம் குவிந்து நிற்கின்றன. அம்மாபெரும் காவடிகள் எதனை நினைவூட்டுகிறது தெரியுமா? அண்ட சராசரங்களையெல்லாம் ஆட்டிவைக்கும் முருகப்பெருமானே ஆருயிர்கட்கெல்லாம் அடைக்கலம்என்பதினைக் காட்டவில்லையா! மானிடப்பிறவி அடைந்த ஒவ்வொருவனும் கண்ணிருக்கும்போது காணவேண்டிய ஒரு மாபெரும் காட்சியன்றோ காவடி ஆட்டம்.

ஆகையினால் ஹே மனமே! கண்களினால் முருகனுடைய திவ்யஸ்வருபத்தைத் தர்சனம் செய், காதுகளினால் முருகனுடைய திருவிளையாடல்கள் ஆகிய ஸ்காந்தமஹாபுராணத்தை ச்ரவணம் செய். எண்ணற்ற நாமங்களைக் கொண்டு திவ்யமான புஷ்பங்களினால் முருகனுடைய திருவடிகளில் அர்ச்சனை செய். முருகா என்று கோடிக்கணக்காக அவனுடைய திவ்யநாமங்களைக்கையார எழுது. இதுவே மானிடப் பிறவியை அடைந்ததின் பயனாகும். தேகத்தினால் முருகப்பக்தர்களுக்கு உயிர் இருக்கும் வரையில் தொண்டு செய். தலையினால் முருகனை வணங்கு.

ஆலயம் தொழுவது சாலவும் நன்று

என்று ஔவைத் தாயின் பொன்மொழியைக் கடைப்பிடித்து குன்றுதோறும் சென்று முருகப்பெருமானைத்

தரிசனம் செய்வாய். இவ்விதம் நீ செய்தால் ஆசைகளாகிய துன்பங்களிலிருந்து விடுபட்டுப் பேரின்பம் பெறலாம். மறு பிறவி எப்பிறவியோ. எனவே இப்பிறவியிலேயே ஆறுபடை வீடுடையோனுன முருகனைத் தரிசித்து அவன் அருளினைப் பெற்றுக்கொள். இவ்வித உண்மையை நீ அறிகின்ருய் இல்லை.

ஆனால் நீயோ வெனில் பெண்ணுசையில் மூழ்கினவனுய் இருக்கிருய். இந்திரியங்களைப் பெண்சுகத்திலேயே லயிக்கவைக்கிருய். அற்பசுகத்தில் ஆசையை வைக்கிருய். இப்போது சுகம் போல் இருப்பது பின்பு துக்கமாக மாறிவிடும். இதை நீ சிந்தித்துப் பார்க்கிருய் இல்லை.

வாயினுல் மங்கையர்கள் அழகை வர்ணிக்கின்ருய் அம்மங்கையர்கள் பேசும் வார்த்தைகளில் இன்பத்தினைக் காண்கிருய். வாயினுல் முத்தமிட்டு மகிழ்கின்ருய். மங்கையர்களின் உச்சி முகர்ந்து ஆனந்திக்கின்ருய். இருகைகளினுல் ஆலிங்கனம் செய்துகொண்டு உடம்பினுல் காமசுகத்தினை அடைகிருய். அவர்களுடைய அழகில் ஈடுபட்டு மங்கையர்களின் பின்னுல் நிழல்போல் அலைகின்ருய். காமசுகத்தினையே பேரின்பம் என்று எண்ணி அலைகின்ருய். இதனுல் முடிவில் நீ அடையப்போகும் சுகம் ஒன்றுமில்லை. நீ ஆசையை நாளுக்குநாள் பெருக்கிக்கொண்டே இருக்கிருய். இதன் விளைவாக உன்னிடத்தில் துன்பம்தான் பெருகிக்கொண்டே வருகிறது.

நீ ஆசை அற்றவனுய் இரு. முருகனிடத்தில் அன்பினைச் செலுத்து. கருணைவிழிகளும் கனிந்த நோக்கும் திருமேனியில் திருநீறும் திருக்கையில் ஒளி பொருந்திய கதிர்வேலும் கொண்டு அருள் புரியும்

முருகனின் திருவடிகளையே சரணுலயம் என்று நம்பி முத்தமிழினுல் முருகனைப்பாடு. அருந்தமிழினுல் முருகனை அழைப்பாய். இனிய தமிழினுல் முருகனை மகிழவை. இதைவிட நீ செய்யவேண்டியது ஒன்று மில்லை. இவ்விதம் முருகனைப்பாடி மானிடப்பிறவி யின் பயனை அடைவாய். முருகப்பெருமானின் அருள் இல்லையேல் உனக்கு எங்கும் எதுவும் இல்லை.

ஹே மனமே! முருகனின் பெருமையையே எங்கும் புகழ்ந்திடும்படி செய். இந்த ஜன்மாவானது முருகப்பெருமானை தியானம் செய்வதற்காகவே ஒப்படைக்கப்பட்டிருக்கிறது என்ற த்ருடமான எண் ணத்துடன் இருந்து கொண்டு ஒரு விநாடி கூட வீணுக்காமல் முருகப்பெருமானின் திருவடிகளில் மேலான ஆசையுடன் ஆத்மப்ரீதியை வைத்து, மண்ணுசை பொன்னுசை பெண்ணுசை என்ற விஷயாதி களில் பரம வைராக்கியத்தை அடைந்து, எல்லாவித மான ஆசைகளையும் விட்டு விட்டு கந்தரநுபூதியில் கரைந்து அநுபூதிமயமாக இருக்கக்கடவாய். இதுவே எனது இறுதியான உபதேசம் உனக்கு.

இதனுல் கதிர்வேல் முருகனின் பாதகமலங்களையே சரணுலயம் என்று ஒரே சிந்தனையில் இருப்பவர்கள் எல்லாவிதமான துன்பங்களிருந்தும் விடுபட்டு, அதே சமயத்தில் முக்தியையும் அடைகிருர்கள் என்பது திண்ணம். இதையே பாட்டில்,

முருகன் கழல் பெற்று அவாவினை
ஒழிவாய் ஒழிவாய்

என்றும்

முருகன் கழல் பெற்று உய்வாய்

என்றும் சொல்கின்றார் அருணகிரிநாதர்.

எனவே இந்திரியங்கள் லயத்தையடைய வேண்டிய இடம் முருகப்பெருமானின் திருவடிகளேயாகும். முருகபத்தியொன்றினால்த் தான் இந்திரியங்களை நிக்ரஹம் செய்ய முடியும் யென்பதினால், அத்தகைய பக்தியோகத்தை கடைப்பிடிக்க வேண்டுமென்று எல்லாவற்றிகும் மேலான மன ற்கு முருகனின் பெருமையை எடுத்து உபதேசித்து அப்படியே ஆசையினால் வரும் துன்பத்தினையும் எடுத்துக் காட்டி ராஜயோகத்தின் பெருமையை நமக்கெல்லாம் போதிக்கின்றார் அருணகிரிநாதர்.

எனவே ஹேமனமே! இந்திரியங்கள் விஷய சுகத்தை அனுபவிக்கச் செல்லும் பொழுது அதை நீ நிக்கிரஹம் செய்வாய். ஆனால் அவைகள் செல்வக் குமரனை நாடுமேயாகில் அதே இந்திரியங்களை அடக்காமல் அவைகளைப் போகும் வழியே போகும்படி செய்வாய். நீ இவ்விதம் செய்வாயேயாகில் நீ செய்யும் கார்யமானது எல்லாவற்றிற்கும் மேலான ராஜயோகமே ஆகுமென்பதில் சிறிதும் ஐயமில்லை.



# கருணையின் பெருக்கை எண்ணி எண்ணி உருகுதல்

## 15



முருகன் குமரன் குகனென் றுமொழிந்
துருகும் செயல்தந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவும்
குருபுங்கவ எண் குணபஞ் சரனே.

**பதவுரை**

பொரு புங்கவரும் — (அசுரர்களுடன்) போர் செய்த தேவர்களும், புவியும்—மண்ணுலகத்திலுள்ளவர்களும், பரவும்—போற்றிப் புகழ்ந்து வணங்குகின்ற, குரு புங்கவ—ச்ரேஷ்டமான குரு மூர்த்தியே, எண்குண பஞ்சரனே—எட்டு கருணரஸங்களுடன் கூடிய குணங்களாகிய கூடாக இருப்பவனே, முருகன் என்று—(உன்னை) முருகன் என்றும், குமரன்—குமரன் என்றும், குகன் — குகன் என்றும், மொழிந்து—வாயாரச் சொல்லி, உருகும்—(என் உள்ளமும் உடலும்) உருகும் வண்ணமுள்ள, செயல்—செயலை அதாவது தன்மையை, தந்து—(எனக்கு) அளித்து, உணர்வு—

மெய்வுணர்வாகிய அநுபவஞான நிலையை, என்று-எப் பொழுது எந்நாளில், அருள்வாய்—அருளப் போகிருயோ? தெரியவில்லையே.

**தாத்பர்யம்:**

அசுரர்களோடு போர்புரியும் முப்பத்து முக்கோடி தேவர்களும், இம்மண்ணுலகில் வாழ்கின்ற எல்லாப் பிராணிகளும் போற்றிப் புகழ்ந்து துதிக்கப்படுகின்ற ஹே குருசிரேஷ்டனே! எட்டுவிதமான அஸாதாரண குணங்களுக்கு இருப்பிடமானவனே, நான் எப் பொழுது உன்னை 'முருகா முருகா' என்றும், 'குமரா குமரா' என்றும், 'குகனே குகனே' என்றும் வாயாரச் சொல்லி உள்ள முருகி மனம் மகிழ்ந்து துதிக்கும் தன்மையை அடைந்து அதன் மூலமாக மெய்வுணர் வாகிய அநுபவ ஞான நிலையை அடையப்போகிறேனே தெரியவில்லையே. நீதான் எனக்கு எப்பொழுது தந் தருளப் போகிருயோ தெரியவில்லையே என்று சொல் கிருர் அருணகிரியார்.

மும்மூர்த்திகளுக்கும் முருகப் பெருமான் குருவாய் விளங்கி வருகின்றபடியால் ஞான பண்டிதனை முருகனைக் குருபுங்கவ என்று பாட்டில் புகழ்கின்ருர்.

அடுத்தபடியாக முருகனை எண் குண பஞ்சரனே என்கிருர்.

திருவள்ளுவர் திருக்குறளில் இறைவனை,
எண் குணத்தான்

என்று கூறினர். இதற்குப் பரிமேலழகர் தம்முடைய உரையில் எட்டுவித குணங்கள் யாவையென்று கூறு வதாவது.

தன் வயத்தன் ஆதல், தூய உடம்பினன் ஆதல், இயற்கை உணர்வினன் ஆதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவு இல் ஆற்றல் உடைமை, வரம்பு இல் இன்பம் உடைமை என இவை.

இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது.

'அணிமாவை முதலாக உடையன எனவும், கடை இலா அறிவை' முதலாக உடையன எனவும் உரைப் பாரும் உளர். என்று மேல் கூறியவண்ணம் உரை எழுதியிருக்கிருர். இதனுல் இறைவனுக்கு முக்கிய மாக எட்டு குணங்கள் இருக்கின்றன.

சிலர் அணிமா, மஹிமா, லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்ற எட்டுவித மான ஸித்திகளை இறைவன் கொண்டுஇருப்பதால் இறைவனை எண்குணத்தான் என்கிருர்கள் என்று பரிமேலழகரே சொல்லுகிருர். இப்படி ஒவ்வொருவர் ஒவ்வொருவிதமாக இறைவனுடைய குணங்களை அந்த அந்த ஸந்தர்ப்பங்களுக்குத் தகுந்தவாறு சொல்லி ஆனந்திக்கிருர்கள்.

எண்ணற்ற கல்யாண குணங்களையுடையவன் இறைவன். அதில் முக்கியமாக எட்டு குணங்களைப் பொறுக்கியெடுத்து இறைவனை அழைத்துத் துதிக் கிருர்கள் பக்தர்கள்.

திருவள்ளுவர் 'எண்குணத்தான்' என்று மட்டும் தான் கூறினுர். காரணமோவெனில் பக்தர்களுடைய மனோபாவத்தை யாரால் அறிய முடியுமென்பதே யாகும்.

சில பக்தர்கள் இறைவனுடைய வீர ரஸத்தில் லயித்து எட்டு விதமாக வீர ரஸத்தை வர்ணிப்பார்

கள். சிலர் எட்டுவிதமாக சாந்த ரஸத்தை வர்ணிப்பார்கள்.

உதாரணமாகத் தாரையானவள் தன்னுடைய கணவரான வாலியானவன் ஸ்ரீ ராமபிரானால் கொல்லப்பட்ட செய்தியைக் கேட்டு ஸ்ரீ ராமபிரானை நிந்தித்துப் பேச வேண்டுமென்ற எண்ணத்துடன் அழுது கொண்டே ஸ்ரீராமரிடம் ஓடி வருகிறாள். அந்நிலையில் தாரையானவள் ஸ்ரீராமபிரானுடைய ஸ்வரூபத்தில் மாபெரும் பெருமையைக் கண்டு,

த்வமப்ரமேயஸ்ச துராஸதஸ்ச
ஜிதேந்திரியஸ்சசோத்தம தார்மிகஸ்ச
அக்ஷய்யகீர்த்திஸ்ச விசக்ஷணஸ்ச
க்ஷிதிமாக்ஷவாந் க்ஷதஜோபமாக்ஷ:

என்று வர்ணிக்கிறாள்.

எனவே இறைவனை எட்டுவிதமாக ஸந்தர்ப்பங்களை அனுசரித்து வர்ணிப்பதென்பது மஹான்கள் கடைப்பிடித்து வரும் ஓர் உன்னதமான உயர்ந்த மார்க்கமாகும்.

இதனால்தான் மஹா ஞானியாகிய திருவள்ளுவர் இறைவனை,

எண் குணத்தான்

என்று மட்டும் சொல்லி, அதாவது ஹே உலகத்தினர்களே! இந்த அரிதாகிய மானிடப் பிறவியானது இறைவனை அடைவதற்காகவே ஏற்பட்டிருக்கின்றபடியால் இறைவனுடைய எண்ணற்ற குணங்களிலிருந்து நீங்கள் உங்கள் மனதிற்கு மிகவும் பிடித்த எட்டு குணங்களை எடுத்து அந்தக் குணங்களில் இன்பத்தைக்

கண்டு இறைவனை இடைவிடாமல் துதி செய்து கொண்டே இருங்கள். அதன் மகிமையினால் நீங்கள் இறைவனின் திருவடி நிழலை அடைந்து பேரின்பத்தை யடைவீர்கள் என்ற ஒரு மகத்தான உபதேசத்தை உலகிற்குச் செய்து அருளியிருக்கிறார்.

எனவே பரிமேலழகர், சைவாகமத்தில் இறைவனுக்குப் பொதுவாகச் சொல்லப்பட்ட எட்டு குணங்களை எடுத்துக் கூறினார்.

ஆதலால் 'எண்குண பஞ்சரனே' என்பதற்குப் பொதுவாக இறைவனுக்குள்ள எட்டு குணங்களை பொருள் கொள்வது என்று இந்தப் பாட்டில் அதுவும் இந்த இடத்தில் சரியல்ல.

மேலும் இந்தப் பாட்டில் மேல்கூறிய எட்டு குணங்கள் சொல்லப்படவில்லை. மேல்கூறிய எட்டு குணங்களும் முருகப்பெருமானுக்கு இருந்தாலும் அந்த எட்டு குணங்களை ப்ரகாசப்படுத்த அருணகிரி நாதர் முருகப்பெருமானை,

எண்குண பஞ்சரனே

என்று இந்தப்பாட்டில் அழைக்கவில்லை. அப்படிச் செய்தால் அது அருணகிரிநாதருடைய ஹ்ருதயமும் ஆகாது அன்றோ!

பொதுவாக இறைவனுடைய பெருமையைச் சொல் என்று கேட்டால், மேல்கூறிய எட்டு குணங்களைச் சொல்லலாம். அப்பொழுது அது நன்றாகப் பொருந்தும்.

ஆனால் அநுபூதியென்பது இறைவனுடைய அருளினைக்கொண்ட மாபெரும் கருணையினால் ஏற்படக் கூடியதாகயிருப்பதால், இந்தப் பாடலில் முருகப்

பெருமானுடைய அஸாதாரணமான மாபெரும் எட்டு வித மங்களகரமான கருணை ரஸங்களையே அருணகிரி நாதர் எடுத்துச் சொல்கிறார்.

எனவே 'கைவாய் கதிர்வேல்' என்ற முன் பாட்டில் விஷயாதிகளில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும் மனதை அதிலிருந்து திருப்பி முருகன் திருவடிகளைப் பெற்று நற்கதியினை அடைவாயென்று உபதேசிக்க அம்மன மானது ஸகந்தானுபூதியை என்று அடைவேன் என்று ஏங்கி, அம்மாபெரும் ப்ரம்மானந்தமாகிய ஸ்கந்தானு பூபதியை என்று தந்தருள்வாய் ஐயனே என வேண்டு கிறது இந்தப் பாட்டில்.

ஆதலால் எல்லாம்வல்ல ஞானபண்டிதனாகிய முருகப்பெருமானுடைய எட்டுவிதங்களான கருணை ரஸத்தையே இப்பாடலில் சொல்லி முருகப்பெருமானை மெழுகுபோல் உருகும் வண்ணம் செய்கிறாரே தவிர மற்ற குணங்களைச் சொல்லி அல்ல. எனவே,

எண்குண பஞ்சரனே

என்றால் எட்டுவிதமான கருணாரஸத்திற்கு இருப்பிட மாகவுள்ள ஒரு கூடுபோல் முருகன் இருந்து வருகி றான் என்று பொருள்.

மேலும் 'பஞ்சரனே' என்பதிலுள்ள 'ஏ' காரமானது முருகப்பெருமானுடைய வரம்பில்லாத கருணை ரஸத்தை சுட்டிக்காட்டுவதுமல்லாமல், நவ ரஸங்களில் வைத்துக் கருணை காட்டுவது என்பதே மேலான ரஸமாகுமென்றும், அக்கருணையையே தனக்கு ஆலயமாக முருகப்பெருமான் வைத்துக்கொண்டிருக் கிறார் என்பதினையும் காட்டுகிறது.

எனவே முருகனுடைய கருணையே யாவற்றிலும் கலந்து நிலவிநிற்கின்றது. குமரனுடைய கருணை என்ன

என்ன காரியங்களைச் செய்து விடுகின்றது தெரியுமா. எண்ணவொண்ணாத வியப்பினையுண்டுசெய்து பேச வொண்ணாத நிலையில் நம்மை வைத்துவிடுகின்ற தன்றோ!!

ஆதலால் முருகப்பெருமானின் கருணாரஸங் களுடன் கூடிய எட்டு குணங்களோவெனில் பின்வரு மாறு அறியவும்.

1. அனாத ரக்ஷகனாகயிருந்து கொண்டு அடியார்களைக் கைகொடுத்து தூக்குதல்.
2. ஜாதிபேதமற்ற மாபெரும் கருணையை அடியார்களிடத்தில் கனிந்து காட்டுதல்.
3. அடியார்களுடைய உள்ளத்தில் எழும் அன்பெனும் பிடியில் அகப்படுதல்.
4. தனக்கென்று ஒன்றும் இல்லாமல் அடியார்களின் இச்சைபோல் ஆடுதல்.
5. ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் திருவிளையாடல்கள் செய்துமகிழ்வித்தல்.
. எல்லையிலா கருணையைப் பொழிந்து பூமியினும் பொறுமையாய் இருத்தல்.
7. எல்லாமாயும் எப்பொருளாயுமிருந்து உலகிற்கே அருள்மலையாய்த் திகழுதல்.
8. அடியார்களின் சுகதுக்கங்களைத் தன் னுடையதாகவே எண்ணி அவர்களுடைய யோக க்ஷேமங்களை அன்புடன் வகித்தல்.

மேல்கூறிய எட்டு குணங்களையே முருகனுடைய கல்யாண குணங்களுக்குள் மிகவும் உயர்ந்ததாகவும் மங்களகரமாகவும் சாஸ்திரங்களிலும் ஸ்காந்தமஹா

புராணங்களிலும் ஸ்கந்தோபநிஷத்திலும் சொல்லப் பட்டிருக்கிறது.

கற்களை உயிராக்கி அவ்வுயிரினையுடைய கற்களைக் கலை மிளிரும் சிலைகளாக்கிப் பேச வைக்கும் தன்மை யினையே கொண்டது மேல் கூறிய எண்குணங்கள். அதில் ஒரு குணத்தின் மகிமையைச் சொல்லிக் கந்தர் அநுபூதியை அனுபவிப்போம்.

ஆறுபடை வீடுகளில் இரண்டாவது படை வீடே திருச்செந்தூராகும். திருச்செந்தூருக்கு அருகில் ஆத்தூர் என்ற ஒரு கிராமம். அந்தக் கிராமமானது தாம்ப்ரபர்ணிநதியும் ஸமுத்திரமும் ஸங்கமம் அடையும் ப்ரதேசத்திற்கு அருகில் உள்ளது.

அந்தக் கிராமத்தில் வேலன் என்று ஒருவன் இருந்தான். அவன் ஜாதியில் சண்டாளன் - எனினும் அவன் முருகப்பெருமானிடத்தில் தன் உயிரினையே வைத்திருந்தான. முருகன் ஒருவனே கண்கண்ட தெய்வம் என்று முருகனிடத்தில் பூரண மன நம்பிக்கைகொண்டு 'ஸகலமும் முருகமயம்' என இருந்தான்.

ஜாதியில் சண்டாளனுக இருந்தபோதிலும் சாத்வீகமான சைவ ஆகாரம் கிடைத்தால் அதையே புசித்துக் கொண்டு, தாம்பிரபர்ணியின் நிர்மலமான ஜலத்தை முருகனின் கருணையின் பெருக்கே என்று எண்ணி பானம் செய்வான். நாள்தோறும் அதிகாலையிலும், நடுப்பகலிலும் அப்படியே சாயங்காலத்திலும் தாம்பரபர்ணி ஸமுத்திர சங்கம கட்டத்தில் திவ்யமாக ஸ்நானம் செய்துவிட்டு, ஈரத்தோடு கூடிய துணியினை அணிந்துகொண்டும், உடம்பெல்லாம் திருநீற்றினை அணிந்து கொண்டும், வானளாவ முருகனின் நாம ஒலி நிலவி நிற்கும்படி வாயார,

செந்தூர்வேலா! வேல்முருகா! செந்தூர்வேலா!
வேல்முருகா! செந்தூர்வேலா! வேல்முருகா!

என்று ஓயாமல் அலேபோல் புலம்பிக்கொண்டே தன்னுடைய உள்ளத்தை முருகனிடத்தில் கரைத்து, முருக நாம ஒலியில் ஒன்ருய் கலந்து நிற்பான்.

திருச்செந்தூர் க்ஷேத்திரத்தில் குடிகொண்டிருக்கும் செல்வக்குமரனைக் கண்டு களித்து ஆனந்திக்க பக்த கோடிகள் திரள் திரளாக செல்வதைப் பார்த்து வேலனே வெனில், 'செந்தூர் வேலா! இருகரைபுரண்டு வெள்ளப் பெருக்கானது நதியில் ஏற்பட்டாலும்கூட நாயினிற்கு நக்கித்தான் தன்னுடைய தாகத்தைத் தணித்துக்கொள்ள முடியும் என்று இருப்பதுபோல் நாயினினும் கேடுகெட்ட சண்டாள ஜாதியில் நான் பிறந்துவிட்டபடியால், உன்னுடைய ஸந்நிதியிற்கு வந்து உன்னைக் கண்குளிர இமைகொட்டாமல் தரிசித்து, வாயார செந்தூர்வேலா, ' செந்தூர்வேலா, என்று கதறிக் கதறி எனது உடல் ஆவி அனைத்தும் உருகும் வண்ணமுள்ள அம்மெய்யுணர்வு நிலையை எப்போது நான் அடையப் போகிறேனே? தெரியவில்லையே!

செந்தூர்வேலா, நான் என் செய்வேன்? என் கர்ம வினை என்னைச் சண்டாளனுகப் பிறக்க வைத்து விட்டதே. உலகம் என்னைச் சண்டாளனென்றும் புலையனென்றும் சொல்லித் தள்ளிவிட்டாலும், அதனைக் குறித்து நான் வருந்தவில்லை. ஆனல் மாபெரும் கருணைக் கடலாகயிருக்கும் நீயும் என்னைச் சண்டாளன் என்று சொல்லித் தள்ளிவிட்டால், நான் எங்குச் சென்று யாரை அடைக்கலம் புகுவேன்? உன்னைத் தவிர கண்கண்ட தெய்வமே இல்லை. உன்னை

செந்தூர்வேலா, வேல்முருகா என்று வாழ்த்தும் ஒரு பாக்கியத்தை எனக்குத் தந்திருக்கிருயே, அதுவே போதும் ஐயனே என்று சண்டாளனுகிய வேலன் ஒருவாறு மனத்தில் சமாதானம் அடைந்தான்.

சில நாட்களுக்கு பிறகு திருச்செந்தூரில் திருவிழா தொடங்க, எண்ணற்ற பக்தகோடிகள் இரவும் பகலு மாக, திருவிழாவைக் காண திரள் திரளாகச் சென்று கொண்டிருந்தனர்.

வழக்கம்போல் வேலன் நதியில் ஸ்நானம் செய்து விட்டு செந்தூர்வேலா! வேல்முருகா! என்று உயர்ந்த குரலில் முருகனின் நாமத்தை உச்சரித்துக்கொண்டிருந் தான். அவ்வேளையில் ஒரு வயது முதிர்ந்த கிழவ ரான பிராமணர் நதியில் குளிக்க இறக்கினர். தவறிப் போய் அருகிலுள்ள சுழலில் சிக்கிக்கொண்டு மூச்சு திணறிக்கொண்டு இருந்தார்.

ப்ராணவியோகத்திலிருக்கும் அவர் காதில் 'செந்தூர் வேலா—வேல்முருகா'—என்ற நாமம் மணி யடிப்பதுபோல் விழுந்தது. சப்தம் வரும் திசையை நோக்க அங்கு அவர் வேலனைக் கண்டார். உடனே அக் கிழவர் வேலனைப் பார்த்து "அப்பா! உயிர் போகும் நிலையிலிருக்கிற என்னைக் கைதூக்கிவிடு" என்று கூக்குரலிட்டார்.

ஆனல் ஜாதியில் சண்டாளனுகப் பிறந்த வேலனே உத்தமோத்தமமான ப்ராமண சரீரத்தைத் தொட்டு இழுப்பதற்குப் பயந்து கொண்டு, "பெரியவரே! நான் ஜாதியில் சண்டாளன் ஆயிற்றே, சண்டாளன் ஆயிற்றே" என்று சொல்லியவண்ணமாய் பெரிய வரைத் தொட்டு எடுக்காமல் நின்முன்.

அப்போது அக்கிழவர் வேலனை நோக்கி ''அப்பனே! நீ நினைப்பது முற்றிலும் தவறு. ஆபத் காலத்தில் தோஷமில்லை என்று சாஸ்திரம் சொல்லு கிறது. இதற்கெல்லாம் மேலாக நீ செந்தூர் வேலா வேல் முருகா என்று மந்திரமயமான முருகனின் திருநாமங்களை நாவார உச்சரித்துக்கொண்டிருக் கிருயே. இது ஒன்றே போதும் உனது சரீரம் அதிபரிசுத்தமானது என்பதினை எடுத்துக் காட்ட. முருகனின் நாம உச்சாரண மகிமையினுல் உனது சரீரம் தேவ சரீரமாக இருக்கிறது. இதை நீ அறியமாட்டாய். ப்ராமணனுன நான் அறிவேன். எனவே உன்னுடைய திருக்கைகளின் ஸ்பர்சத்தினு லேயே நான் எனது ஜன்ம ஸாபல்யத்தை அடைவேன். இன்னும் சில விநடிக்குள் என் உயிர் என்னை விட்டுப் போய்விடும். அதற்குள் என்னைத் தூக்கிக் கரையில் விடுவாய்'' என்று வேண்டினுர்.

உடனே வேலனும் பிராமணனுடைய வாக்கியமே மேலான பிரமாணம் என்று அக்கிழவரைச் சுழலி லிருந்து கைகொடுத்துத் தூக்கிக் கரையில் விட்டு அவர் உயிரைக் காப்பாற்றினுன்.

பிறகு அஞ்சலி செய்தவண்ணமாய் அவரை வலம் வந்து ஸாஷ்டாங்கமாய் அவர் திருவடிகளில் விழுந்து வணங்கி எழுந்தான்.

ஆனுல் என்ன ஆச்சர்யம்! அவ்வயோதிகரைக் கண்டான் இல்லை. அவ்விடத்தில் மாருது தோகை மயில் மீதில் வள்ளி தேவஸேனை ஸமேதராய் சர்வாலங் காரத்துடன் திருச்செந்தூர் வேலன் தமது ஆறுமுகங் களுடனும் பன்னிருகைகளுடனும், சக்திவேலைத் தமது ஒரு திருக்கரத்தில் தாங்கியவண்ணமாய்த் தோன்றி

வேலனுக்குக் காட்சி அளித்தார். யோகிகளும் ஞானிகளும், முனிவர்களும் காணுதற்கரிய முருகப் பெருமானின் திவ்யரூபத்தை நேரில் கண்ட வேலனுடைய கைகள் தலைமேல் குவிந்தன. கண்களிலிருந்து ஆனந்த அருவி பெருகி வழிந்தது. உரை தடுமாறியது. உடம்பெல்லாம் மயிர்க்கூச்சலிட்டது. அன்பின் பெருமகிழ்ச்சியால் என்ன செய்வதென்று தெரியாமல் "செந்தூர்வேலா, வேல்முருகா செந்தூர்வேலா" என்று புலம்பிக்கொண்டே செந்தூர் வேலனின் திருப்பாத கமலங்களில் விழுந்து விழுந்து வணங்கினான்.

அடியார்களின் ஆனந்தமே தமது ஆனந்தமெனக் கருதும் முருகப்பெருமான், வேலனை நோக்கி "அப்பனே, இவ்வுலகில் யாவரும் வியப்பினை அடையும் வண்ணம் நீ நம்மிடம் அன்பினைக்கொண்டு நமது நாமத்தை வானளாவ உச்சரித்துக்கொண்டிருந்தாய். உனது அன்பினைக் கண்டு நாம் மகிழ்ந்தோம். நமது மந்திரமயமான நாமத்தை நீ உச்சரித்தமையால் உனது தேகம் தேவமயமாகிவிட்டது. இனி நீ உன் இஷ்டம்போல் எக்காலத்திலும் நம்முடைய ஸந்நிதிக்கு வந்து நம்மைக் கண்குளிர தரிசிக்கலாம் என்று அருளி மறைந்தார்.

முருகனின் கருணையினை எண்ணி எண்ணி மனம் மகிழ்ந்து வேலன் மனதினும் வேகமாய் திருச்செந்தூர் ஆலயத்திற்குள் சென்று செந்தூர் வேலனின் சந்நிதியில் 'வேல்முருகா வேல்முருகா' என்று சொல்லிக் கொண்டு மெய்மறந்து நின்றான். 'இதனைக் கண்ட ஜனங்கள் "சண்டாளன் ஆலயத்திற்குள் வந்துவிட்டான். விரட்டுங்கள் அவனை, அடியுங்கள் அவனை, தள்ளுங்கள் அவனை" என்று சொல்லிக் கொண்டே வேலனை விரட்ட முன்வந்து முயன்றார்கள்.

ஆனல் என்ன ஆச்சர்யம்!!! யாவரும் கேட்கும் வண்ணம் சுவாமியின் கர்பக்ரஹத்திலிருந்து ஓம் என்ற ப்ரணவ சப்தம் தோன்றி, அவ் ஓங்காரத்தி லிருந்து முருகப்பெருமான் தோன்றி "பக்தர்களே, வேலனை சண்டாளன் என்று நினையாதீர்கள். நமது நாம உச்சாரணத்தினல் வேலன் தெய்வீகத்தன்மையை அடைந்துள்ளான். எனவே வேலன் நம்மைச் சேர்ந்த வன். வேலனுக்கு ஆகவே யாம் இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தில் நமது பூர்ண ஸாந்நித்யத்துடன் விளங்குகிறேம். நமது நாம உச்சாரணமே நம்மை அடைய சுலபமான வழி என்ற உயர்ந்த தத்துவத்தை நிலைநாட்டினவன் வேலன்" என்று சொல்லி அருளினர்.

பிறகு வேலனிடம், அன்பனே! என்பால் வந்து ஸதாகாலமும் இணையில்லாத பேரின்பம் அதனை அநுபவித்துக் கொண்டிருப்பாயாக என்று சொல்லி எல்லாம் வல்ல முருகப் பெருமான் மறைந்தருளினர்.

இதிலிருந்து என்ன தெரிகிறது? நாம உச்சாரணம் ஒன்றே முக்தியை அளிக்க சக்தியுள்ளது என்பது அல்லவா. முருகனுடைய நாமம் முருகனைக் காட்டி லும் வேறலல்ல. முருகனின் நாமத்தை உச்சரிக்கிற வன் முருகனைக் காட்டிலும் வேறல்ல.

வேலனுடைய சரிதத்திலிருந்து முருகனுடைய எட்டுவிதமான கருணரஸத்தையும் அறியலாம்.

கைகொடுத்து தூக்குதல் என்பதை வேலன் மூல மாகக் கைகொடுத்து பிராமணனைத் தூக்கிவிட்டதி லிருந்தும், ஜாதி பேத மற்ற மாபெரும் கருணை என் பதை சண்டாளனன வேலனை ஆட்கொள்ளும் பொருட்டு வயது முதிர்ந்த பிராமணனுக வந்து சுழலில் சிக்கித் தவித்துக் கொண்டிருப்பவன் போல்

காட்டியதிலிருந்தும், அன்பெனும் பிடியில் அகப்படுதல் என்பதை முருகப்பெருமான் பிராமண ரூபத்தில் வந்து வேலனுடைய கைப்பிடியில் அகப்பட்டுச் சுழலிலிருந்து கரையினை அடைந்ததுபோல் காட்டியதிலிருந்தும், அடியார்களின் இச்சைபோல் ஆடுதல் என்பதை, செந்தூர்வேலன் ஸந்நிதியினை அடைந்து ஸந்நிதியில் நின்றவாறே 'செந்தூர்வேலா வேல்முருகா' என்று நாவாரக் கதறவேண்டும் என்று வேலன் இச்சித்தது போலவே, அவ்வேலனுக்குத் திருச்செந்தூர் முருகன் ஸந்நிதிக்கு வரும் பாக்கியத்தை அளித்ததிலிருந்தும், திருவிளையாடல் செய்து மகிழ்வித்தல் என்பதை மாறுவேஷத்திலிருந்து திருவிளையாடல் செய்து மகிழ்வித்ததிலிருந்தும், பூமியினும் பொறுமையாய் இருத்தல் என்பதை, நாளைக்கு செந்தூர் வேலனைக் காணலாம், நாளைக்கு செந்தூர், வேலனைக் காணலாம் என்று ஒவ்வொரு நாளும் பொறுத்துப் பொறுத்துக் காத்திருந்த வேலன் மூலமாகவும், அருள்மலையாய் திகழுதல் என்பதை வேலன் இருக்கும் இடம் வந்து வள்ளி தேவஸேனு ஸமேதராய்த் தோன்றி வேலனுக்குத் திவ்ய தரிசனம் அளித்து அருளியதின் மூலமாகவும், அடியார்களின் சுகதுக்கங்களைத் தன்னுடையதாக எண்ணுதல் என்பதை, திருச்செந்தூர் க்ஷேத்திரத்திலிருந்து வேலனை சண்டாளன் என்று தள்ளும்போது அதனை ஸகியாமல் தனக்கு ஏற்பட்ட துக்கமாகவே கருதி யாவரும் அறிய முருகப்பெருமான், 'வேலனுக்கு ஆகவே இந்த க்ஷேத்திரத்தில் நமது ஸாந்நித்யம் விளங்கி வருகிறது' என்று சொன்னதின் மூலமாகவும் முருகப்பெருமானின் எட்டு விதமான கருணாரஸம் வெளியாகிறது. இதனுல் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்ருல், முருகப்பெருமானுக்கு

இருக்கும் அநந்த கல்யாண குணங்களில் வைத்து மேல் கூறிய எட்டு குணங்களே முருகப்பெருமானை அலங்கரிக்க வைக்கிறது என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இவ்வாறு முருகனின் கருணாவைபவம் ஸ்காந்த மஹாபுராணாதிகளில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

அதிகம் சொல்வானேன். சிவபெருமானுடைய பூர்ண அவதாரமாகிய ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் முருகனின் பெருமையை வர்ணிக்கும்பொழுது,

ங்ருணாமங்திய ஜா நாமபி
ஸ்வார்த்த தானே
குஹாத் தேவமங்யம்
நஜானே ந ஜானே

என்று அதாவது தள்ளப்பட்ட கீழான சண்டாள ஜாதியில் பிறந்த மனிதர்களுக்கும் மோக்ஷமாகிய அபீஷ்டத்தைக் கொடுப்பதில் முருகனைக் காட்டிலும் வேறான தெய்வத்தை நான் அறியவில்லை நான் அறிய வில்லை என்று இரண்டு முறைசொல்லி ஸத்யம் செய்கிறார்கள். எனவே ஸ்ரீ ஆதிசங்கரபகவத் பாதாளுடைய வாக்கைக் காட்டிலும் மேலான ப்ரமாணம் என்ன வேண்டும்.

இதுபோல் முருகப்பெருமானுடைய ஒவ்வொரு குணமும் கருணாரஸத்தையே ப்ராதான்யமாக வைத்துக் கொண்டிருக்கின்றபடியால் இந்த கோரமான கலியுகத்தில் சுப்ரமண்ய ஸ்வாமியைக் காட்டிலும் மேலான தெய்வமே இல்லை என்பதைச் சொல்லவேண்டுமா.

இத்தகைய பெருமையுள்ள எட்டு குணங்களினைக் கொண்டு ஒரு கூடுபோல் முருகன் இருக்கிறார் என்பதினால் எண்குணபஞ்சரனே என்றார்.

மேலும் எட்டு குணங்களை உடையவனே என்று சொன்னால் போதாதா, பஞ்சரனே என்று ஏன் சொல்கிறார். பஞ்சரம் என்றால் கூடு. பொதுவாக கூடு என்று சொன்னால் கிளிக்கூடே நினைவுக்கு வருகிறது. எனவே அருணகிரியார் கந்தர் அநுபூதியை முருகனுடைய வலது தோளில் அமர்ந்து கிளி ரூபத்தில் பாடிக் கொண்டிருக்கும் பொழுது தன்னுடைய கிளி ரூப நிலையினை நினைத்து மகிழ்கிறார். தத்வமோ வெனில், கிளியின் தர்மம் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்வது. ஆதலால் உலகிலுள்ள ஒவ்வொரு பிராணிகளும் ஜன்மாவை ஸபலம் செய்து கொள்ள வேண்டுமானால் மேல் கூறிய எட்டு குணங்களினால் செய்யப்பட்ட முருகனாகிய கூட்டில் அமர்ந்து கொண்டு ஒரு கிளி சொல்லுவது போல் திருப்பித் திருப்பி 'முருகா முருகா' என்றும் 'குமரா குமரா' என்றும் 'குகா குகா' என்றும் மந்திரபுரச்சரணம் செய்து கொண்டே இருக்க வேண்டும். அப்பொழுதுதான் உள்ளம் நெகிழ்ந்து மெழுகுபோல் உருகும். உள்ளம் உருகினால் உடலும் உருகும். உடல் உருகினால் புலகாங்கிதம் உண்டாகும். புலகாங்கிதம் உண்டானால் உணர்ச்சி உண்டாகும். உணர்ச்சி உண்டானால் அன்பு உண்டாகும், அன்பு உண்டானால் அறிவு உண்டாகும், அறிவு உண்டானால் உணர்வு உண்டாகும், உணர்வு உண்டானால் மெய்வுணர்வு உண்டாகும். மெய்வுணர்வு உண்டானால் முருக அநுபவ ஞானநிலை யுண்டாகி முடிவில் கந்தரனுபூதி உண்டாகும்.

இவ்வித கந்தரனுபூதியை நாம் எல்லோரும் முருகனுடைய மந்திரமாகிய நாம உச்சாரணையினால் அடையலாம் என்பதை அருணகிரியார் நமக்கெல்லாம் மேலான கருணையுடன் எடுத்துச் சொல்லி அருள்கிறார்.

மேலும் பாட்டில் முருகன் குமரன் குகன் என்ற மூன்று நாமங்கள் மூவினைகளை வேரோடு அறுத்துத் தள்ளி முக்தியை அளிக்கும் மந்திரமாக இருந்து வருகிறது.

**முருகன்:** முருகு என்றால் இளமையோடும் அழகோடும் இருப்பவன்

**குமரன்:** குமார என்ற வடமொழிச்சொல் தமிழில் தீர்க்கம் குறைந்து குமரன் என்று ஆனது 'கு' என்றால் அக்ஞானம். 'மா' என்றால் அழிப்பது. அதாவது இல்லை என்று செய்வது எனவே அக்ஞானத்தின் கார்யமாகிய பொய் யான மித்யாப்ரபஞ்சத்தை மூன்று காலத் திலும் இல்லவேயில்லை என்ற மெய்வுணர் வான அநுபவ நிலையைத் தருபவன்.

**குகன்:** குஹா என்ற உச்சரிப்பு சிற்றெறும்பிலிருந்து ப்ரும்மா பர்ய்ந்த முள்ள எல்லா ஜீவராசி களுடைய ஹ்ருதயமாகிய குஹையில் அந்தர் யாமியாகவும் சாக்ஷியாகவும் விளங்கி வரும் பரம்பொருளையே குறிக்கிறது.

எனவே இம்மூன்று மஹாமந்திரங்களில் இளமை யோடு இருத்தல், பொய்யான ப்ரபஞ்சஞானத்தைப் போக்கடித்தல், ஹ்ருதயமாகிய குகையில் அந்தர்யாமி யாக வசித்தல் என்ற தத்வமானது உள்ளடங்கி இருக் கிறது.

ஆதலால் – இருப்பது, வளர்வது, குறைவது, அழிவது, ஆவது, முடிவது என்ற முதலான வேறு பாடுகள் அற்று மூன்று காலங்களிலும் ஒரே அகண்டானந்தருபமாய் விளங்கிவரும் ஆனந்தத்

தையே இளமையோடு கூடிய அழகு என்றும் அவ்வழ கையே முருகு என்றும், அம் முருகையே ஸ்வரூப மாகவுடையவனை முருகன் என்றும் அறிய வேண்டும். அழகும் இளமையும் இருக்கும் மிடத்தில்தான் ஆனந் தம் தோன்றும். ஆனந்தத்தால்தான் ப்ரேமை உண்டா கும். ப்ரேமை உண்டானுல்தான் ஒருவன் ஆத்மப்ரீ தியை வைப்பான். ஆத்மப்ரீதிக்கு முருகன் பாத்திர மாகின்றபடியால் முருகன் ஆத்மாவாக ஆகின்ருன். அதாவது ஆத்மாவாக இருக்கிருன்.

எனவே ஆத்மா மேற்கூறிய ஆறுவிதமான தோஷங்கள் அற்று இளமையோடும் அழகோடும் சென்ற காலம் நிகழ்காலம் வரும்காலம் என்ற மூன்று காலங்களிலும் ஒரே ஆகண்ட ஆனந்தமய மான வஸ்துவாக இருப்பதால் ஆத்ம தத்துவத்தையே முருகன் என்று வேதங்கள் போதிக்கின்றன.

அப்படியே அவித்தையினுடைய கார்யமாயும், மூன்று காலத்திலும் பொய்யாக இருக்கின்ற இந்த மித்யாப்ரபஞ்சத்தை ஸத்யம் என்றே அனுபவித்துக் கொண்டு இருந்து வரும் ப்ராணிகளுக்கு 'சும்மா இரு சொல் அற' என்ற மந்திரத்தின் மூலமாக உபதேசித்து மூன்று காலத்திலும் ப்ரபஞ்சமானது பொய்யாகவே இருந்து வருகிறது என்ற அநுபவ நிலையைத் தந்த ருளும் ஞானபண்டிதனையே குமரன் என்று சாஸ்திரங் கள் இடைவிடாமல் போதிக்கின்றன.

அப்படியே சிற்றெரும்பிலிருந்து ப்ரும்மா பர்யந்த முள்ள ஸகல ஜீவராசிகளுடைய ஹ்ருதயமாகிய குஹாசத்தில் அந்தர்யாமியாகவும் கேவலம் சாக்ஷியாக வும் விளங்கி வருகின்ற ஸுப்ரமண்ய ஸ்வாமியையே

குஹன் என்று வேதங்களும் சாஸ்திரங்களும் போதிக்கின்றன.

இதனுல் முருகா என்ற மந்திரத்திஞல் ஆனந்தத்தையும், குமரா என்ற மந்திரத்திஞல் சித்தையும் குஹா என்ற மந்திரத்திஞல் ஸத்தையும் க்ரஹித்துக் கொள்ள வேண்டும்.

இதஞல் ஸத்து சித்து ஆநந்தமாக முருகப் பெருமான் விளங்குகிருர்.

இவ்விதம் அகண்ட ஆனந்தமயமாக விளங்கி வரும் ஸாக்ஷாத் ஸுப்ரமண்ய ஸ்வாமியை முருகன் குமரன் குஹன் என்ற மந்திர ரூபமாகத் தியானித்து அம்மூன்று மந்திரங்களையும் திருப்பித் திருப்பி உச்சரித்து அப்படியே மனனம் செய்து, முடிவில் அம்மந்திர ரூபமாகவே முருகனைத் தியானம் செய்து மெய்மறந்து அதன் பலனுக முருகனிடத்தில் மனோ நாசம் ஏற்பட்டு, முருகனுடைய ஸ்வரூபம் ப்ரத்யகாத்ம ஸ்வரூபமாகப் பாஸிக்கும் பொழுது உண்டாகும் நிர்விகல்பமான மெய்வுணர்வின் ஸ்வஸ்வரூபத்தின் ஆனந்த நிலையையே பக்திரஸத்தின் பரமகாஷ்டையென்று கீதாசாஸ்திரம் போதிக்கிறது.

நாம உச்சாரணையினுல் உள்ளமுருகி உண்டாகும் மெய்வுணர்வு நிலையையே பக்தியின் பரமபுருஷார்த்தமென்று அத்வைதஸித்தி என்ற மஹா வேதாந்த நூலின் கர்த்தாவான மதுஸூதன ஸரஸ்வதி யாகிய யதீச்வர ஸ்வாமிகள் பக்தி ரஸாயனம் என்ற நூலின் மூலமாக ஸித்தாந்தம் செய்கிருர்கள்.

எனவே எண்குண பஞ்சரனுக இறைவன் இருக்கிருன். பக்தனுனவன் கிளியாக இருக்கிருன். எட்டு

துணங்களையே கம்பிகளாகக் கொண்டு விளங்குகிற கூட்டிற்குள் கிளியாகிய மனிதன் பூர்வபுண்யத்தினுல் அமர்ந்து, முருகா, குமரா, குஹா என்று நாவார சொல்லிக்கொண்டே நெஞ்சமெல்லாம் மெழுகாய் உருகி இசையின்பம் தோன்றும்படி மெய்வுணர்வை அடைய வேண்டும். அவ்வின்பமானது முருகனுடைய அருளினுல்தான் கிடைக்கவேண்டும்.

இவ்இணையில்லாத மெய்வுணர்வினை எனக்கு என்று தந்து அருள்வாய் அப்பனே என்று கால விளம்பனத்தை சகியாமல் ஏங்கி ஏங்கி முருகனை வேண்டுகிருர் அருணகிரிநாதர்.

மேலும் பாட்டில்,

**உருகும் செயல் தந்து உணர்வு**
**என்று அருள்வாய்.**

என்று சொன்னதிலிருந்து வெளியாவது யாதெனில்,

நெஞ்சு முருகாதார் முருகனை அறியாதார்

என்பதேயாகும். முதலில் நெஞ்சு உருக வேண்டும். அப்பொழுதுதான் முருகனை அறிய முடியும். இந்தத் தத்துவத்தை திருஞானசம்பந்தர் தமது தேவாரத்தில்,

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே

என்கிருர். ஆதலால், அன்பினுல் நெஞ்சம் கசிந்து உருகி கண்களிலிருந்து ஆனந்தக்கண்ணீர் மல்கி

முருகன் குமரன் குஹன் என்று ஓதுவார் தமை நன்நெறியில் கொண்டுபோய் விடுகிறது மந்திர உச்சாரணம்.

தவிர உருகும் செயல் என்பதினுல் கர்மமார்க்கத்தையும், உணர்வு என்பதினுல் ஸ்வானுபவ ஞானத்தையும், தந்து என்பதினுல் கர்மவினையை அழித்து உணர்வை தருபவன் முருகப்பெருமான் ஒருவனே ஆவான் என்பதையும் அறிய வேண்டும்,

அருளை மறவாதே என்று மஹான்கள் சொல்லுகிருர்களே ஏன்? அருள் இல்லையேல் அவனை அறிந்து அநுபவிக்க முடியாது. எனவே அருள்வாய் முருகா! அருள்வாய். குமரா! அருள்வாய் குகனே! என்று உள்ளம் உருகி அழைக்கிருர்.

முருகனுடைய அருள் பலவிதமாகத்திகழ்கின்றன. சிலர் இறைவனை வாயினுல் போற்றிக் கொண்டே இருப்பார்கள். ஆனுல் அவர்களுடைய மனது இறைவனிடத்திலோ அல்லது அவர்கள் சொல்லும் மந்திரத்தலோ நிற்காது. ஏன்? மனதை அடக்குவது என்பது சுலபமான கார்யம் அல்ல. அதுவும் பக்திமார்க்கத்தில் மனதைச் செலுத்திப் பிடித்து இறைவனிடத்தில் நிறுத்துவது என்பது ஒரு மதம் பிடித்த யானையைக் கட்டுவது போலவேயாகும்.

ஆதலால் முருகன் குமரன் குகன் என்று எது வரையில் மொழிய வேண்டும் என்று கேட்டால் அவன் உள்ளம் முருகனிடத்தில் உருகும் வரையிலென்பதே அதற்குப் பதிலாகும். இறைவனுடைய நாமத்தை உச்சரிப்பதினுல் அவன் இறைவனின் அருளைப்பெறுகிருன். அருளைப் பெற்றவனே அன்பினுல் சிகந்து

உருகுவான். ஆதலால் எண்குண பஞ்சரனே! நான் உன்னை வேண்டுவது யாதெனில்:

உன்னுடைய எட்டுவிதமான கருணைரஸங்களை நினைந்து நினைந்து மகிழவேண்டும். பிறகு நாவினால் உன் கருணையின் பெருமையைச் சொல்லிக்கொண்டே யிருக்க வேண்டும். அப்படியே உன்னை எண்ணற்ற நாமங்களினால் அர்ச்சனை செய்ய வேண்டும். எண் ணற்ற நாமங்களில் வைத்து முருகன் குமரன் குஹன் என்ற மூன்று மந்திரங்களே மேலான மந்திரம் என்று என் உள்ளத்தில் ஒரு த்ருடமான நம்பிக்கையை உண்டாக்க வேண்டும். அதன்பின் முருகன் குமரன் குஹன் என்று அல்லும் பகலும் மொழிந்து கொண்டே இருக்க வேண்டும். இதனால் என்னுடைய உள்ளத் திலுள்ள இருளானது நீங்க வேண்டும். அதன் விளை வாக நான் எதையும் முருகனாகவும் குமரனாகவும் குஹனாகவும் காண வேண்டும். அப்படியே யாவையும் முருகனாகவே எண்ணவும் வேண்டும். அதன் பயனாக நான் உன்னுடைய நாம ஒலியில் கலந்து மெய்மறந்து நிற்க வேண்டும். இதன் விளைவாக நான் உன்னை,

ஈறிலாப் பதங்கள் யாவையும்
கடந்த இன்பமே

என்று ஸ்ரீமாணிக்கவாசக ஸ்வாமிகள் சொல்லியது போல், உணர்ந்து உள்ளம் உருக வேண்டும். இவ்வித நிலையை அடைந்து என் உள்ளம் உருக எனக்கு உன் மாறில்லாத திரு அருள் வேண்டும். உன் அருளினால் தான் உன்னை அறிய முடியும் என்று உணர்வதற்கு உன் அருள் வேண்டும். முடிவில் உனது அருளைப் பெற்று, அதன் மஹிமையினால் எனக்கு,

'நீயே நான்—நானே நீ' என்ற உணர்வு வேண்டும். அவ்வுணர்வு மெய் உணர்வாவதற்கு உனது அருள் வேண்டும். முருகா! நான் உனது அருளையே நாடி நிற்பவன், உனது அருள் இல்லையேல் எதுவுமே இல்லை.

ஆதலால் ஹே குமரா! என் உள்ளத்தை உருகும்படியுள்ள செயலைத்தந்து **'அஹம்ப்ரஹ்மாஸ்மி'** என்ற மெய்வுணர்வு ஆகிய அநுபவ நிலையை என்று தந்து அருள்வாய் முருகா! என்று தந்தருள்வாய் குமரா! என்று தந்து அருள்வாய் குகனே!

இதனுல்தான் கந்தர் அநுபூதியைத் தொடங்கும் பொழுது முதல் பாட்டில்,

நெஞ்சக் கன கல்லு நெகிழ்ந்து உருக

என்று அருணகிரிநாதர் பாட ஆரம்பிக்கின்ருர். காரண மோவெனில் நெஞ்சம் உருகுதலே கந்தர் அனுபூதியை அநுபவிப்பதற்கு அஸ்திவாரம் என்பதினுல் அன்ருே!



# மாபெரும் தியானத்திஞல் பேராசையை அழித்தல்

## 16



பேரா சையெனும் பிணியிற் பிணிபட்
டோரா விஃனயேன் உழலத் தகுமோ
வீரா முதுசூர் படவேல் எறியும்
சூரா சுரலோக துரந்தரனே.

### பதவுரை

வீரா—வீரத்தன்மையுடையவனே, முது—வெகு நீண்ட காலமாக வாழ்ந்து வந்த, சூர்—சூரபத்மா சூரன், பட—அழியும்படியாக, வேல் — வேற்படையாகிய வேலாயுதத்தை, எறியும்—வீசி வீசி எறியும், சூரா—சூரத்தன்மையைக் கொண்டவனே, சுரலோக—தேவலோகத்தை, துரந்தரனே—ரக்ஷிக்கும் பாரத்தைத் தாங்குபவனே, பேராசை எனும்—பேராசை என்று சொல்லப்படுகின்ற, பிணியில்—நோயில், பிணிபட்டு—கட்டுப்பட்டு, ஒரா—(நல்லது எது கெட்டது எது) என்று ஆராய்ந்து அறியும் மெய்வுணர்வு இல்லாத, விஃனயே — கொடிய தீவிஃனயுடையவஞன அடி

யேன், உழலத்தகுமோ—வருத்தத்திஞல் நிலை மாறி மாறி சுழலுதல் நியாயமாகுமா, ஒருபோதும் நியாயமாக ஆகவே ஆகாது என்பது பொருள்.

**தாத்பர்யம்**

மண்ணையனுபவித்து ஆளவேண்டும் என்ப தினை மண்ணுசை என்றும், செல்வத்தை அதாவது பொன்னை அனுபவிக்க வேண்டும் என்பதினைப் பொன் ணுசை என்றும், பெண்ணை மனம் வாக்கு காயம் அப் படியே பஞ்சேந்திரியங்களிஞலும் அனுபவிக்க வேண்டு மென்பதினை பெண்ணுசை என்றும், கெட்ட எண் ணங்களோடு மற்றவர்களுக்குத் துன்பத்தினைச் செய்யு வேண்டுமென்பதினை துராசை என்றும் அப்படியே இன்னும் பலவிதமாக ஆசைகள் சாஸ்திரங்களில் சொல் லப்படுகின்றன.

மேல் கூறிய மண்ணுசை பொன்ணுசை பெண்ணுசை என்ற மூன்று ஆசைகளையும் தாம் நினைத்த அளவில் பெற முடிய வில்லையென்ருலும், தாம் அவ்வாசைகளை அடையும் விஷயத்தில் மற்ருெருவன் பிரதி பந்தகமாக யிருந்தாலும், அந்த இடத்திலேயே மனிதன் துரா சையை அடைகிருன். துராசையைக் கொண்டவன் முடிவில் தான் அழிந்து போவதுமில்லாமல் மற்றவர் களையும் அழிய வைக்கிருன். இதையே உலகில்,

கெடுவான் கேடு நினைப்பான்

என்று சொல்லுகிருர்கள். மேலும் மண்ணுசையை விட பெரிது பொன்ணுசை. பொன்ணுசையை விட பெரிது பெண்ணுசை. இருந்த போதிலும் சாஸ்திர உபதேசத் திஞல் ஒருவனுக்கு மண்ணுசையிலும் பொன்ணுசை யிலும் வைராக்யத்தைக் கொண்டு வந்துவிடலாம்.

ஆனால் பெண்ணாசையானது மோகம் என்ற சக்தி யினையே அஸ்திவாரமாகக் கொண்டிருப்பதாலும், இந் திரியங்களை நிக்ரஹம்செய்து கடும்தவம் செய்துவரும் விச்வாமித்ராதிகளான பரம ரிஷிகளும் கூட மோக வலையில் சிக்குண்டு துன்பங்களை அனுபவிக்கும் பொழுது, விவேகமற்ற பிராணிகள் கடைசி உயிர் போகும் காலம் வரையில் பெண்ணாசையை விட்டவர் களாக ஆகமாட்டார்கள் அன்றோ!

நோயினையடைந்த ஒருவன் ஸ்திரீ சம்போகம் செய் வதேயில்லையென்றால், அவனைப் பெண்ணாசையை வெறுத்தவன் என்று சொல்ல முடியுமா? ஸ்திரீ சம்போகத்தினால் தன் உயிருக்கு நாசம் வந்து விடு மென்ற பயத்தினாலேயே சம்போக விஷயத்தில் அவன் ஈடுபடாமல் இருக்கிறான் அல்லவா?

எனவே பெண்ணாசையென்பது மனதில் உண் டாகும் அவா. அந்த ஆசையைப் பூர்த்தி செய்து கொள்ள மனது துடிக்கிறது. அதற்கு இந்திரியங்கள் அனுகூலமாக நிற்கின்றன. இந்திரிய நிக்ரஹம் ஒன் றால்த் தான் பெண்ணாசையை ஒழிக்க முடியும்.

ஆதலால் ஒரு மனிதன் பெண்ணாசையைத் தீர்த்துக் கொள்ளும் விஷயத்தில் எதையும் தியாகம் செய்து விடுவான். அந்த சமயத்தில் அவனிடத்தில் வேண் டியது—வேண்டாததென்பது கிடையாது. ஆனால் சாஸ் திரங்களும் சமுதாயமும் மனிதனைக் கட்டுப்படுத்து கிறது. அதனால் மனிதன் பெண்ணாசையை விட்டவனா கவோ, பெண்ணாசையில் வைராக்கியத்தை அடைந்த வனாகவோ ஆகமாட்டான்.

எப்படியிருந்த போதிலும் மனிதர்கள் ஆசையற்ற வர்களாக ஆகமாட்டார்கள். ஏன்? ஆசையானது அவர்

களை ஆட்டி வைக்கிறது. ஆசைக்கு அவர்கள் மனம் அடிமையாகி விடுகிறது அன்றோ!

இதையெல்லாம் விட பெரிய ஆசை ஒன்று இருக்கிறது என்கிறார் அருணகிரிநாதர். அதுதான் பேராசை. இப்பேராசையை,

ஆசைக்கோர் அளவில்லை அகிலமெல்லாங்
கட்டியாலினும்

என்று தாயுமானசுவாமிகள் சொல்கின்றார்.

ஆனால் அருணகிரிநாதர் இங்கே பேராசையை ஒரு பிணியாகச் சொல்லுகின்றார். இதற்குக் காரணம்? பிணியினுடைய குணத்தைக்கொண்டுள்ளது பேராசை.

எனவே ஆசை என்பதே நோய். சாதாரண நோயைப் போக்கடிப்பதே கடினம். அதைவிட கடினம் சூலநோய், புற்றுநோய் ஆகியவைகளைப் போக்கடிப்பது. இதையெல்லாம் விட பெரிது பெருநோய். பெருநோயானது நாளுக்கு நாள் குறையாமல் தினமும் வேளைக்கு வேளை பெருகிக்கொண்டே, ஒருவனுடைய அங்கத்தினை அழுகி அழுகி அழுகும்படி செய்து நாள் தோறும் அவனுடைய அங்கத்தினைக் குறைத்துக் கொண்டே வரும். உடலில் உண்டாகிற புண்களில் புழுக்கள் நெளியும். சதைகள் அழுகி அழுகி அதிலிருந்து சீயும் உதிரமும் வடியும். உடம்பெல்லாம் துர்நாற்றம் வீசும். அருகில் வரும்போதே அவனை யாவரும் "போ–போ" என்று தள்ளி விடுவார்கள். இல்லாள் அவனைத் தீண்ட மறுத்து விடுவாள். அதிகம் சொல்வானேன்? பத்துமாதகாலம் அங்கமெல்லாம் நொந்து பெற்று ஈன்றெடுத்த தாயும் பெருநோயினை அடைந்தவனை வேண்டாள். என்னே பெருநோயின்

கொடுமை! இவ்விதக் கஷ்டங்களை எண்ணி எண்ணிப் பெருநோய் பிடித்தவன் மனம் நொந்து வாடுவான்.

இப்பெருநோயினையே பேராசைக்கு உபமானமாக சொல்லியதிலிருந்து, விளங்கும் தத்வமோ வெனில் பேராசை என்பதே பெருநோயாகிய பிணியாகும் என்பதினை எடுத்துக்காட்டவேயாகும்.

பேராசைபிடித்தவனை உலகத்தினர் வெறுத்து விடுகிறுர்கள். இருந்தும் மனிதன் பேராசையை விடுவதில்லை. எதைப்போலத் தெரியுமா? பெருநோய் பிடித்தவனைப்போல். அதாவது பெருநோய் பிடித்தவன் தன்னுடைய சரீரத்தை வைத்துக்கொண்டு சொல்ல முடியாத அளவில் துன்பத்தினை அநுபவித்துக்கொண்டிருந்தாலும் 'இந்த சரீரம் இனித்தேவையில்லை. உயிரினை விடுவதே மேலாகும். இதுவரையில் அனுபவித்த துன்பம் போதும்' என்றெண்ணி தன் சரீரத்தை வெறுத்து உயிரினை விடுவதில்லை. இன்னும் கொஞ்ச காலம் வாழலாம் இன்னும் கொஞ்ச காலம் வாழலாம் என்ற இச்சையினுல் உந்தப்பட்டு பெருநோய் கொண்டுள்ள சரீரத்தினைச் சுமந்து கொண்டே அங்குமிங்கும் திரிந்து திரிந்து அல்லல் படுகிறுன் அன்றே! இதை நாம் கண்ணுல் பார்த்து வருகிறேம். ஆதலால் பேராசையே நாளடைவில் ஒரு பெரும் பிணியாக மாறுகிறதென்பதில் ஐயமில்லை.

இந்த விஷயத்தில், தான் தீராநோயினை அடைந்து நாயினுக்கும் கேடுகெட்டு பெரும் துன்பங்களை அடைந்ததிற்கு மூலகாரணமான பெண்ணுசையையே இந்தப் பாட்டில் பேராசையெனும் பிணி என்று மனம் நொந்து சொல்லுகின்றுர் அருணகிரிநாதர்.

ஏனெனில் பேராசை என்னும் பிணியாகிய பெண் ணுசையே முக்திக்குத் தடங்கலாக நின்று வரு கிறது.

சாதாரணமாக நாம் ஆசைப்படும் பொருள் நமக்குக் கிடைக்கவில்லையென்ருல் மறுக்ஷணமே மனநிம்மதியற்றவர்களாக ஆகிவிடுகிருேம். இருந்தும் அப்பொருளை அடையும் விஷயத்தில் முயற்சி செய்கி ருேம். காரணமோவெனில் அப்பொருள் நமக்கு வேண்டு மென்ற இச்சையே ஆகும்.

இச்சையே பேராசைக்கு மூலகாரணம். பேராசை யினுல் எழும் சுகத்தினையடைய முடியவில்லையென்ருல் மனேவியாதியுண்டாகும். மனேவியாதியே மனிதனைக் கொன்று விடும் என்று உலகில் சொல்வார்கள் அன்ருே! ஆனுல் இச்சித்த பொருள் கிடைத்து விட் டால் மனேவியாதியானது தீர்ந்து விடுகிறது. மீண்டும் அப்பொருளை அடைய வேண்டுமென்ற இச்சை உண் டானுல் அதனை அடைந்து இச்சையைப் பூர்த்திசெய்து கொள்கிருன். ஒரு நிலையில் உலக வஸ்துக்களிடத்தில் பேராசையானது குறைந்து விடும்.

உதாரணமாக மஹாபலி சக்ரவர்த்தியானவன் ஸகலலோகங்களையும் தன் ஆதீனத்தில் வைத்துக் கொண்டிருந்தும் மனச்சாந்தியை அடையாதவனுகவே இருந்து வந்தான். இதற்குக் காரணமோ வெனில் அவன் ஆத்ம தத்துவத்தை அறிந்தான் இல்லை.

எனவே மஹாபலி சக்ரவர்த்தியானவன் தன்னு டைய குலகுருவான சுக்கிராச்சார்யரிடம் அஞ்சலி செய்து

ஹே ஸத்குரோ! நான் என்ற சப்தத்தினுல் சொல்லி அழைக்கப்படும் ஜீவாத்மா-யார்?

என்று கேட்கிருன். இதற்குக் காரணம் பேராசை யானது அவரிடம் நசிந்து விட்டது. இத்தகைய பெரும் சிந்தனையினுல் மஹாபலி சக்ரவர்த்தியோ வெனில் மேலான தியாக புத்தியையுடையவனுக ஆகி தான், பேராசையினுல் அடைந்த ஸகல ஐச்வர்யங் களையும் தானம் செய்ய ஒரு மாபெரும் யாகத்தினைச் செய்தான் என்பது ஸுப்ரஸித்தம் அல்லவா! இந்தத் தத்துவமானது யோக வாஸிஷ்டம் என்ற மஹாக்ரந் தத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்படுகின்றது.

எனவே பேராசை என்பதே பிணி. அப்பிணியினை அனுபவிப்பது என்பதே பிணிபட்டு என்பதாகும். பொருளோ வெனில்:—

சரீரதத்துவமானது கேவலம் சிற்றின்ப அநுபவத் தையே மூலகாரணமாக வைத்துக்கொண்டு சுக்கில சுரோணிதம் இதனை வாயிலாக அடைந்து உண்டா கின்றது. ஆதலால் யௌவனப் பருவத்திலிருந்து வ்ருத்ததசை பர்யந்தம் பெண்ணுசையை அநுப வித்தது போதும் என்ற வைராக்யத்தை மனிதன் அடைகிருனில்லை. இதைப் பரமஞானியான பட்டினத் தார்,

பிறந்த இடத்தை தேடுதே பேதைமட நெஞ்சம்
கறந்த இடத்தை நாடுதே கண்

என்று சுட்டிக்காட்டி போதிக்கின்ருர்.

பெண்களை மேன்மேலும் அனுபவித்துக்கொண்டே யிருக்க வேண்டுமென்ற இச்சையானது பிறப்புக்குரிய குணமேயாகும். ஏன் ? காம இச்சையினுல் ஸ்திரீகளின் சம்போகத்தினைக் கொண்டே சரீரமானது உண்டா கிறது. ஆதலால் பெரும் பிணியை உண்டுபண்ணக்

கூடிய இச்சைக்கே பேராசை என்று அர்த்தம். அதாவது தர்ம பத்தினியிடம் இருந்து அநுபவித்த சுகம் போதாது என்று மேன் மேலும் யௌவனப் பருவத்திலிருக்கும் பல மங்கையர்களிடமிருந்து காம சுகத்தினையனுபவிக்கவேண்டுமென்ற இச்சையையே பிணி என்றும், அந்த இச்சையானது மோகத்தினை உண்டு பண்ணி மனிதர்களுடைய இந்திரியங்களை சக்தியற்றதாகவும், அவ்விந்திரியங்களை மேல்நோக்கிப் போக விடாமல் கீழ்நோக்கிச் செல்லும் வண்ணமு மாகச் செய்கின்றன.

எனவே ஆசையானது பூர்த்தியாகும் வரையில் மேல் கூறிய வண்ணம் பெண்ணாசையினைக்கொண்டு கஷ்டப்படுகிறான். பிறகு ஆசையானது பூர்த்தியாகும் பொழுது, அதாவது பல மங்கையர்களை மாறி மாறி அனுபவித்து இச்சையைப் பூர்த்தி செய்து கொள் வதால் மனிதர்கள் பெருநோயை அடைகிறார்கள். சரீரமானது பெண்களின் சுகத்தை அநுபவிப்பதற்கு ஆதாரமாகவும் இருப்பிடமாகவுமிருப்பதால் பெரு நோயானது சரீரத்தையே வந்தடைகின்றது.

இவ்விதம் பெரு நோயினால் கர்மேந்திரியங்கள் நாளுக்கு நாள் நாசத்தினை அடைந்தாலும், ஞானேந்திரி யங்கள் பெரு நோயினால் நாசத்தினை அடைகிறதில்லை. காரணம்? ஞானேந்திரியங்களுக்கு இருப்பிடம் மனம். உணர்ச்சிக்கு இருப்பிடம் அல்லவா மனம்.

எனவே பெண்களின் மேலுள்ள மோகமாகிய பேராசையானது மனதில் எழும்போது, அந்த சுகத் தைப் பெருநோயினால் துன்பத்தினை அடைந்து வரும் சரீரத்தினால் நுகர முடியாது என்பதினை உணரும் போது மனமானது துடிக்கும். நெஞ்சமானது பெண்

சுகத்தினை நினைந்து நினைந்து மெழுகுபோல் உருகி உருகி முடிவில் மனிதர்களைக் கொன்றுவிடும்.

எனவே பெண் சுகத்தினை அநுபவிக்க வேண்டுமென்ற இச்சையே ஆசையாகும். அப்பெண்சுகத்தினை மேன்மேலும் அனுபவிக்க வேண்டுமென்பதே பேராசையாகும். இதுவே பிணியாகும். எண்ணமாகிய பிணியே மனிதனைக் கொன்றுவிடும். எனவே பெண்சுகத்தினையே ஸதா காலமும் அநுபவித்துக் கொண்டிருக்கும் நிலையையே,

பிணி பட்டு

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வித பிணியில் சிக்கித் துன்பத்தினை அநுபவிப்பதே "வினை" ஆகும். இவ்வினையிலிருந்து விடுபடாமல் அல்லல்பட்டுக்கொண்டிருப்பதே உழலுதல் ஆகும். இவ்விதம் உழலுகின்ற நிலையில் நான் இருப்பது உனக்கு ஞாயமாகுமா முருகா என்பதினையே 'உழலத்தகுமோ' என்று கேட்கிறார் அருணகிரியார்.

இதனாலேயே மஹான்களும், துறவிகளும் ஆசையை அடக்கு ஆசையை அடக்கு என்று ஸதா காலமும் நினைவூட்டிக் கொண்டே இருக்கிறார்கள். ஆனால் பிராணிகளோ அவ்வுபதேசத்தை செவி கொடுத்துக் கேட்பதில்லை. ஏன்? ஆசையானது ஒருவனுக்கு அதிகரித்துக் கொண்டே இருக்கவேண்டும்? அப்படி அளவில்லாமல் வளர்ந்து வரும் ஆசையைத் தடுப்பதற்கு வழிதான் என்ன? ஏன் ஒரு வஸ்துவில் பேராசையானது ஏற்படவேண்டும்? நாம் பேராசையை வைக்கும் வஸ்துவானது எமபாதையைத் தடுக்க சக்தியுள்ளதாக ஆகுமா? இல்லை அந்த வஸ்துதான் நம்முடன் கடைசி காலத்தில் உடன் வரப்போகிறதா?

உலகத்தை ஒட்டிய இன்பங்களெல்லாம் முடிவில் துயரங்களாக மாறுகின்றன என்று பிரத்யக்ஷமாக தெரிந்தும் ஏன் இதை நாம் மனதில் நினைப்பதில்லை? ஈச்வர சிந்தனையினால், வேதங்களின் சிகரமான உப நிஷத்துக்களினால் போதிக்கப்படும் முடிவான தத்து வங்களை ஏன் ஆராய்வதற்கு மனம் வருவதில்லை? பேராசை ஏன் இறைவனை மறைக்கிறது? உயர்வான பரம்பொருளிடம் ஏன் சித்தம் லயிப்பதில்லை? இந்திரி யங்களுக்கு ஏன் அடிமையாகிறோம்? பேராசையைக் கொண்டுள்ள நான் யார்? பேராசையென்பது என்ன? நமக்கும் பேராசைக்கும் என்ன சம்பந்தம்? பேராசை யாகிய பெண்ணாசையைக் கொண்டுள்ளோமே. இது நல்லதா? கெட்டதா? பேராசையாகிய பிணி ஏன் நம்மை விடுவதில்லை? எந்த விஷயத்திலும் ஏன் நமக் குப் பேராசை உண்டாகிறது?

இவ்விதம் பிராணிகள் தத்துவங்களை ஆராய்வ தில்லை. ஆகையால் அவர்கள் பல துன்பங்களுக்கு உள்ளாகி அல்லாடிக்கொண்டே இருக்கிறார்கள். எனவே சாஸ்திர ஞானம் இல்லாதவரையில் பிராணிக்ள் துன்பங்களை அனுபவித்துக்கொண்டுதான் இருப்பார் கள். சாஸ்திரஞானம் உண்டானால் பிராணிகள் உழல மாட்டார்கள். சாஸ்திர ஞானத்தை புத்தியினால்தான் அறியமுடியும். புத்தியை வைத்துக்கொண்டுதான் பேராசை என்னும் பெண்ணாசையைப் போக்கடிக்க முடியும். புத்தியினால் சுகம் துக்கம் புண்ணியம் பாவம் பேராசை இவைகளின் உண்மைப் பொருளை நன்கு அறிந்து வினையைப் போக்கடித்துக் கொள்ளலாம்.

பகவான் கீதையில் அர்ச்சுனனைப்பார்த்து,

ஏஷா தே அபிஹிதா ஸாம்ங்யே
புத்திர்யோகே த்விமாம் ச்ருணு

என்று சொல்லுகிருர். அதாவது "அர்ச்சுஞ இதுவரை ஆத்மஞானத்தைப்பற்றி பேசும் ஸாங்கிய யோகத்தைச் சொன்னேன். இனி அதற்கு உதவியான புத்தி யோகத்தைச் சொல்லுகிறேன் கேள்" என்று உபதேசிக்கிருர்.

எனவே பேராசை என்னும் பிணியை வேருடன் அறுத்துத்தள்ளுவதற்கு சாஸ்திர முறையில் தத்வ விசாரம் செய்து, தத்துவஸாரத்தை மனதில் நன்ருகப் பதியும்படி செய்து கொள்ளவேண்டும். பிறகு சாஸ்திர முறைப்படி தர்மநெறியில் அநுஷ்டானம் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் ஸாங்கிய யோகத்தின் ஸாரம் மனதில் நிலைத்து நிற்கும். ஆகையால் வேதாந்த விசாரமும் உடன் அநுஷ்டானமும் சேர்ந்தால் பேராசை என்னும் பிணியாகிய பெண்ணுசையானது ஒழியும். இல்லையேல் பேராசை என்னும் பிணியைப் போக்கடித்துக்கொள்ள வேறு வழியே கிடையாது. ஆதலால் பலனைக் கருதிச் செய்யும் எல்லா அநுஷ்டானங்களும் ஆசைக்கு வசப்பட்டவைகளே. அத்தகைய அநுஷ்டானங்கள் பேராசையைப் போக்கடிக்காது. இதனுல்தான் கீதையில் பகவான் கர்மாவைச் செய்வதற்குத்தான் உரிமையுண்டு. ஆனுல் ஒருபொழுதும் செய்யும் கர்மாவிற்குள்ள பலனை எதிர்பார்க்க உரிமையில்லை என்ருர். இதன் தத்துவமோவெனில் பலனில் ஆசை வைக்கலாகாது என்பதேதாஞகும்.

ஆசையை வைக்காமல் இருந்தால் பேராசை ஏன் வரப்போகிறது? அப்படியே பேராசையாகிய பிணியும் அப்பேராசையாகிய பிணியை அனுபவிக்கும்போது உண்டாகும் வினையும் ஏன் மனிதனை வந்தடையப் போகிறது?

ஆசையுடன் செய்யும் கர்மாவே கெடுதியாகிய பேராசையை உண்டுபண்ணுகிறது. அவ்விதம் ஆசையுடன் கூடின கர்மாவானது வினைகள் நிரம்பிய பிறவிக்கடலில் மனிதனை உழலச் செய்கிறது. பயனை விரும்பாதவன் பேராசை என்னும் பிணியில் பிணிபட்டு உழலமாட்டான்.

ஆதலால் நதியில் படகு இருக்கலாம். அது தோஷமாகாது. ஆனால் படகுக்குள் நீர் நுழையக்கூடாது. அப்படி நீர் நுழைந்தால் படகு மூழ்கி அழிந்துவிடும்.

அதுபோலவே பேராசை என்னும் பிணியாகிய பெண்ணாசையை உண்டுபண்ணும் இந்த உலகில் மனிதன் வாழலாம். அதனால் ஒருவிதமான தோஷமும் இல்லை. ஆனால் பெண்ணாசையை மனதில் புகவிடக்கூடாது. அப்படி பெண்ணாசையில் மனதை பறி கொடுத்துவிட்டால், அப்பறி கொடுக்கப்பட்ட மனதானது பேராசையையே ஸர்வகாலமும் நாடி நிற்கும்.

ஆதலால் ஹே முருகா! நான் பேராசையெனும் பிணியில் பட்டுப் பெரும் துன்பங்களை அடைந்து மானிடப் பிறவியின் பயனை அடையாமல் அல்லாடிக் கொண்டிருக்கிறேன். இவ்விதம் நான் உழலுவது நியாயமாகுமா? இப்பேராசையாகிய பிணி என்னை விட்டு என்று போகும் ஐயனே. உன்னடியார்கள் துன்பத்தினை அடைய நீ பாராமுகமாய் இருந்துவருவது நியாயமாகாது அப்பனே.

முருகா, ஞானபண்டிதனாகிய உன்னை நான் சரணமடைந்த பிறகும் நான் உழன்றுகொண்டு துன்பத்தினையனுபவிப்பது உனக்கு அழகல்லவே. உன் தர்சன மாத்திரத்தில் அனைத்தையும் துறந்து நான் துறவி

ஆகிவிடவேண்டாமா? அத்தகைய துறவி ஞானம் எனக்கு ஏன் ஏற்படவில்லை.

முருகா நீ ஞானபண்டிதன் மட்டும் அல்ல. வீராதி வீரனும் நீயேதான். காமனை சாம்பலோடு சாம்ப லாக்கிய எல்லாம் வல்ல சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து அவதரித்த ஞானச்சுடர் அன்றோ நீ! ஞானவீரனே! போர்வீரனே காமனையடக்கியாளும் வீரனே. நான் உன்னை வேண்டுவது யாதெனில் ஒன்றே ஒன்றுதான். பேராசை எனும் பிணியாகிய பெண்ணுசை யிலிருந்து என்னைக் கைகொடுத்துத் தூக்குவாய் அப் பனே. என்னுல் முடியாது என்று சொல்லாதே. உன்னுல் முடியாதது ஒன்றுமே இல்லை. நீ வீராதிவீரன் அல்லவா?

நெடுங்காலமாக அண்டசராசரங்களையும் தன் ஆதீனதில் வைத்து அரசு செலுத்திவந்த சூரபத்மா ஸுரனின்மேல் உனது சக்திவேலை வீசி எறிந்து அவனை அழியும்வண்ணம் செய்த சூரன் அல்லவா நீ.

ஈரேழு உலகமும் சூரபத்மாசூரனையே சூரன் என்றும் வீரன் என்றும் புகழ்ந்துகொண்டிருந்தார் களே. அது முற்றிலும் பொய்யென்று நிலைநாட்டின வீராதிவீரன் அன்றோ நீ.

உண்மையில் சூராதி சூரனும் நீயே. வீராதி வீர னும் நீயே. ஹே சுரலோக துரந்தரனே! சூரபத்மனை போரில் வென்று தேவலோகத்தினை ரக்ஷிக்கும் பொறுப்பை ஏகனுகயிருந்து தாங்கி வருகிறேன் என்று அபயமளித்த ஸேனுதிபதி நீ அல்லவா.

சூரபத்மனை ஸம்ஹாரம் செய்ய மும்மூர்த்திகளா லும் முடியாமல் உன்னைத்தானே ஸேனுதிபதியாகத் தேர்ந்தெடுத்தார்கள். இதிலிருந்தே, நீதான் வீரன் என்றும் சூரன் என்றும் விளங்குகிறதே.

இவ்விதம் நீ இருக்க ஹே சுரலோக துரந்தரனே! என்னை ரக்ஷிக்கும் பொறுப்பை நீ எவ்விதம் ஏற்றுக் கொள்ளமாட்டேன் என்று சொல்லமுடியும்? அவ்விதம் நீ கூறினால் அது உனக்கு நியாயமாகுமா?

ஆதலால் என்னுடைய பேராசையாகிய பெண்ணாசையை நீ உன்னிடத்திலேயே திருப்பி விடு. அப்பொழுது அப்பேராசையானது பிணியாகவோ, வினையைத் தருவதாகவோ, என்னை உழலச் செய்வதாகவோ, ஆகாது. அவ்வாசையானது என்னை முக்திநிலையத்தில் கொண்டுபோய்விடும். அதுவே உன்னுடைய உயர்ந்த நிலை. ஆதுவே பேரின்ப ரஸமாகும்.

வீரா! உன்னுடைய ஆனந்த ரஸமயமான திருவடித் தாமரையில் என்னை உறையும்படி செய்து அருள்வாய் அப்பனே. உன்னுடைய திருவிளையாடல்களை ஸதா கேட்டுக்கொண்டேயிருக்கவேண்டும் என்ற பேராசையினை எனக்கு உண்டுபண்ணுவாய்.

சூரனே! என்னுடைய பேராசையை உன்னிடத்தில் திருப்புவாய். அப்போது என் உள்ளத்தில் பக்தியின் பெருக்கானது எடுக்கும். அதன் காரணமாக என் உள்ளத்தில் உரம்பெற்று இருந்த பாபங்களும் உலகப் பற்றுதல்களும் ஆசாபாசங்களும் வேருடன் அறுபட்டு நசித்துவிடும். அப்போது என் உள்ளத்தில் சாந்தி நிலவும். அதன் காரணமாக உன்னைத் தவிர வேறு எந்த விஷயத்திலும் நான் நேரத்தை வீணுக்க மாட்டேன். மானிடப் பிறவியின் பெரும் பயன் உன் நாமத்தை ஸதா சொல்லிக்கொண்டிருப்பதுதான் என்று நிம்மதியான மனதுடன் இருப்பேன் அப்பனே.

ஆதலால் ஹே வீரனே! நான் பேராசையெனும் பிணியில் கட்டுப்பட்டு பிறவிக் கடலில் மூழ்கி உழலு

வது ஒரு காலத்திலும் ஙியாயமாகாது. ஞானபண்டித ஞக நீ இருக்க, உன்னேக் கண்குளிரக் கண்டு தரிசித்து உன் பெருமையை ஸதாகாலமும் புகழ்ந்துகொண்டே யிருக்கவேண்டும் என்ற பேராசையானது எனக்கு உன்னிடத்திலிருக்கவேண்டும். அவ்விதம் என்னு டைய ஆசையெல்லாம் உன்னிடத்திலேயேயிருக்கு மாஞல் நான் ஏன் இப்பிறவிக் கடலில் விழுந்து உழலப்போகிறேன்.

முருகா! எனது மனமானது பேராசையிஞல் கட்டுப்பட்டு எங்நேரமும் பொற்சிலம்புகளேயணிந்த உனது பாதங்களே அடைவதிஞல் உண்டாகின்ற பேரின்பத்தினேயே நாடி வருகிறது. இந்த மானிடப் பிறவியில் எனக்கு நீ பேரின்பத்தை தராவிட்டாலும் அதனேக் குறித்து நான் வருந்தவில்லே. மறு ஜன்ம மானது எனக்கு எப்பிறவியாக இருந்தாலும் சரி, அதனே நான் பொருட்படுத்தவில்லே. அப்பிறவியிலும் உன்னேயடைய வேண்டுமென்ற பேராசையை என்னிட மிருந்து குறைத்து விடாதே அப்பனே.

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா
உன்னடியென் மனத்தே வழுவாது
இருக்க வரந்தர வேண்டும்.

என்று திருநாவுக்கரசு சுவாமிகள் சிவபெருமானே வேண்டிக்கொள்வது போலவே நானும் உன்னே வேண் டிக் கொள்கிறேன். எப்பிறவியிலும் முருகா, உனது உயர்வையே நான் போற்றிப் போற்றி வாழவேண்டும்.

பேராயிரம் பரவி வாஞேர் ஏத்தும்
பெம்மானே

என்று அப்பர் சுவாமிகள் சொல்லியபடி உனது மந்திர மயமான நாமாவை ஆயிரம் தடவைகள் திருப்பித் திருப்பி உச்சரித்துக்கொண்டேயிருக்க வேண்டும்.

நான் கடைத்தேற வேண்டுமானுல் நினது கருணை என்மேல் விழவேண்டும்.

எனவே நான் அல்லல்படுவது ஒரு காலத்திலும் நியாயமாகாது முருகா. உன்னிடத்தில் என்னுடைய பேராசையானது விழுந்து விட்டது. அது தவிர்க்க முடியாததாக உள்ளது. அப்பேராசையோவெனில் நீ ஞானபண்டிதனுக என் கண் முன்னே தோன்றி மெய் ஞானத்தின் உபதேசித்து என் உள்ளத்தில் இதுவரை யில் உறைந்து கிடந்த பேராசை என்னும் பிணியாகிய பெண்ணுசையை உனது ஞான வேலினுல் வேருடன் அறுத்துத் தள்ளவேண்டும். அந்நிலையில் நான் உன் னுடைய அப்ராக்ருதமான திவ்ய ஸ்வருபத்தைக் கண் குளிரப்பார்த்து கை மகிழக்குவித்து தொழுது நெஞ்சார துதித்து தலைவணங்கி நிற்பேன். இதனைவிட இவ்வரி தாகிய மானிடப்பிறவியில் நான் அடையப் போகும் பேரின்பமென்ன இருக்கிறது.

அருள்வடிவானவனே! எனது வாயானது உனை யல்லால் வேறொருவனையும் ஒரு காலத்திலும் ஒரு காரணத்தைக் கொண்டும் வாழ்த்தாது. ஏன் தெரியுமா?

நீ எல்லா தேவதைகளிலும் வைத்து உத்க்ருஷ்ட மான தெய்வம். எல்லா தேவர்களையும் மும்மூர்த்தி களையும் கண்டு அஞ்சாமல் எல்லோரையும் நடு நடுங்கச் செய்துகொண்டிருந்த சூரபத்மாசுரன் மீது நினது சக்தியாகிய வேற்படையை வீசி எறிந்து அம் மாபெரும் சூரனை அழித்த உன்னையே மும்மூர்த்தி களுள்பட முப்பத்து முக்கோடி தேவர்களும், ரிஷி

களும், கின்னர கிம்புருஷர்களும், யக்ஷர்களும், நாகர்களும், அசுரர்களும், அப்படியே முடிவில் சூரபத்மாசூரன் உள்பட யாவரும் ஒன்று சேர்ந்து ஒரே மனதையுடையவர்களாய் கைகளினைத் தலைமேற்கொண்டு தலைவணங்கி உன்னையே,

ஹே வீரா, ஹே சூரா!
ஹே சுரலோக துரந்தரனே!

என்று நாவார போற்றிப் போற்றித் துதிக்கின்றார்களென்றால், உன்னைவிட மேலான தெய்வம் இல்லவேயில்லை யென்பது ஸித்தாந்தமாக வெளியாகவில்லையா?

இத்தகைய பெருமையுடன் நீ இருக்க—உன் திருவடிகளையே சரணாலயம் என்று அடைக்கலமாகக் கொண்ட உன் அடியார்களில் ஒருவனாகிய நான் பேராசையெனும் பிணியாகிய பெண்ணாசையில் சிக்கப்பட்டு எது நல்லது?—எது கெட்டது? என்ற மெய்ஞான உணர்வு இல்லாமையினால் உண்டாகும் துன்பத்தினையடைந்து நான் பெண்ணாசையில் உழன்று கொண்டிருத்தல் ஒரு காலத்திலும் ஒரு காரணத்தைக் கொண்டும் ஞாயமாக ஆகவே ஆகாது. இதில் நான் சத்தியம் செய்கிறேன் முருகா.

எனவே, செல்வக்குமரனின் மாபெரும் பராக்கிரமத்தை எடுத்துப் போதிக்கின்ற இந்த மந்திரமயமான பாடலை எவர்கள் ப்ரதிதினமும் ஆயிரம் ஆவிர்த்தி வீதம் ஒரு மண்டலம் மேலான பக்தியுடன் பாராயணம் செய்து வருகிறார்களோ, அவர்கள் தங்களுடைய உள்ளத்தில் ஓயாமல் எழுந்துகொண்டிருக்கிற பேராசையாகிய பெண்ணாசை யென்னும் பிணியை அடியோடு இல்லாமல் செய்துகொள்வதுமல்லாமல்

எல்லாவிதமான வினைகளையும் அறுத்துத் தள்ளிக் கொண்டு வினையற்றவர்களாக ஆகி அதன் மஹிமை யினால் இந்த நச்வரமான உலகவாழ்க்கையில் பரம வைராக்யத்தை அடைந்து 'அவன் இல்லையேல் அணுவும் அசையாது என்றும்—எல்லாம் முருகப் பெருமானின் ஸ்வரூபமென்றும் — நடப்பதெல்லாம் முருகனின் செயலென்றும்' இருந்துகொண்டு முடிவில் முருகப்பெருமானுடைய திருவடி நிழலில் பேரின்பத்தை என்றென்றும் சாச்வதமாக அனுபவித்துக்கொண்டே யிருப்பார்கள் என்பதில் இப்பாடலே மேலான ப்ரமாண மாகயிருந்து வருகிறது.



# அறிவெல்லாம் அவனை அடைவதற்கே

17



யாமோ தியகல்வியும் எம்அறிவும்
தாமே பெறவேலவர் தந்ததனுல்
பூமேல் மயல்போய் அறமெய்ப் புணர்வீர்
நாமேல் நடவீர் நடவீர் இனியே.

**பதவுரை**

*யாம் ஓதிய கல்வியும்* — (முருகனுடைய அடியார்களாகிய) நாம் குருமுகமாகக் கேட்டுச் சொல்லியும் பெற்ற கல்வியும், *எம்அறிவும்* — நமது மெய்அறிவும், *தாமேபெற* — (நம்மைத் தம்முடன் அகண்ட சச்சிதாநந்த வஸ்துவாகத் தடுத்து ஆட்கொள்ளும் பொருட்டு) தாமே திருப்பிப் பெற்றுக்கொள்ள, *வேலவர்* — வேற்படையைத் திருக்கையில் தாங்கிய முருகப்பெருமான், *தந்ததனுல்* — (நமக்கு) தந்திருப்பதனுல், *பூ மேல்* — (பொய்யாகிய) உலகத்தின் மேல், *மயல்போய்* — (உண்டான) மயக்கங்களை நீக்கி, *அறம்*-தருமத்

தையும், மெய் — (அந்த தர்மத்தையே ஸ்வரூபமாகக் கொண்ட) மெய்ப்பொருளாகிய முருகப்பெருமானையும், புணர்வீர்—(நீயே கதி—நீயே சரணம் என்று) கடைப்பிடித்துக்கொள்ளுங்கள், இனி—(இந்த உண்மையைத் தெரிந்து கொண்டு) இனியாவது, ஏ! — ஹே உலகத்தினர்களே! முருகப் பக்தர்களே! பாமர ஜனங்களே! ஞானமில்லாதவர்களே! நான் சொல்வதைச் செய்யுங்கள், நாமேல்—(முருகப்பெருமான் நமக்குக் கருணையினால் அளித்த) நாவினைக் கொண்டு, நடவீர்—அவன் புகழை அல்லும் பகலும் பாடுங்கள், நடவீர்—மேற்கூறியபடி முருகப்பெருமானின் புகழைப் போற்றிப் போற்றிப் புகழ்ந்து புகழ்ந்து பாடிக்கொண்டே உங்களுடைய மீதிக் காலத்தையாவது கழியுங்கள்.

**தாத்பர்யம்**

கல்வி என்றால் வித்தை என்று பொருள். அந்த வித்தையோவெனில் சாதாரணமான வித்தையல்ல. ப்ரும்ம வித்தையேயாகும். அறிவு என்றால் ப்ரும்ம வித்தையினால் போதிக்கப்பட்ட மெய்ப்பொருளாகிய பரம்பொருளே யாகும் என்ற ஒரு த்ருடமான போதம் நம் புத்தியில் உண்டாவதேயாகும்.

நாம் சிஷ்யபாவத்திலிருந்து கொண்டு ஒரு ஸத்குருவையடைந்து விதி வத்தாக அவர் பாதத்தில் வணங்கி அவர் முகத்தை நோக்கிக் கள்ளம் கபடமற்ற மனதுடன் ஹே ஸத்குரோ! நான் கடைத்தேறும் பொருட்டு என் மீது கருணை கூர்ந்து எனக்குப் ப்ரும்ம வித்தையை உபதேசித்து அருள வேண்டுமென்று அஞ்சலி பந்தத்துடன் ப்ரார்த்தித்துக் கொள்ள வேண்டும்.

அப்போது கருணைக் கடலான குருவானவர் ப்ரம்ம வித்தையை உபதேசிப்பார்.

இவ்விதம் ஸத் குருவினுடைய முகத்திலிருந்து நேராக ஆத்ம தத்துவங்களைக் கேட்டு அதை நன்ருகப் படித்து, பிறகு அத்தத்வங்களை நன்ருக மனதில் சிந்தித்து அப்படியே புத்தியினுல் அறிந்து அதன் பின் உண்மைப் பொருளின் உணர்வுடன் கண்ணுல் பார்க்காமல் வாயினுல் மட்டும் அவ்வரிய தத்துவங்களை திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருப்பதே 'ஒதிய' என்ற பதத்தின் பொருளாகும்.

எனவே கல்வியினுல் வெளியாகும் தத்வம் அறிவு. ஆதலால் கல்வி என்று சொல்லப்படும் ப்ரம்ம வித்தையானது ஒரு விதையைப் போன்றது. விதையில் முளை கண்டவுடன் அவ் விதையை இரண்டாகப் பிரித்துப் பார்த்தால் அதற்குள் ஒரு சிறிய இளம் மரமிருப்பதை காண்கிருேம். அச்சிறிய மரமே ஒரு பெரிய மரமாக வளரப்போகிறது. அத்தகைய சக்தி அதில் உள்ளடங்கியிருக்கிறது.

அதுபோலவே அண்டசராசரங்களிலும் என்ன என்ன சக்தி விசேஷங்கள் இருக்கின்றனவோ, என்ன என்ன வித்தைகளும் சாமர்த்திய விசேஷங்களும் இருக்கின்றனவோ, இவை எல்லாவற்றிச்கும் ஒரு மூலம் இருந்தேயாக வேண்டும். அன்னியில் மூலம் இல்லாமல் ஒன்றுமே தோன்ருது.

ஆகையால் உலகில் இது இது என்று தோன்றும் பொருள்களெல்லாம் ஒரு மூலத்தை ஆதாரமாகக் கொண்டே தோன்றுகின்றன.

அவ்வாதாரம் என்பது என்ன? அது எங்கே இருக்கிறது? 'இது இது' என்பதினை எது பார்த்துக் கொண்டு 'இது இது' என்ற பொருளாக ஆகாமல் 'இது இது' என்று சொல்லப்படும் பொருளுக்கு மூலா

தாரமாக விளங்கி வருகின்றதோ அந்த மூலத்தையே அறிவு என்று சாஸ்திரங்கள் போதிக்கின்றன. அந்த அறிவிலேயே இந்த உலகமானது தோன்றுகிறது.

அறிவு இருக்கும் வரையில்தான் உலகம் தோன்றுமே தவிர அறிவானது ஆத்மாவில் லயித்து நாசத்தை அடைந்து விட்டால் உலகமே தோன்ருது. அந் நிலையில் உலகம் உண்மையில் இல்லவும் இல்லை.

அந்த அறிவு இருக்குமிடம் எங்கே? அது அங்கு மில்லை! இங்கு மில்லை! எங்கு மில்லை! பின்பு எங்கே இருக்கிறது? நம்மிடமே தான் இருக்கிறது. அதாவது அகண்ட சச்சிதானந்த ரூபமாக மூன்று காலங்களி லும் விளங்கி வருகின்ற நம்மிடத்தில் அறிவானது கண்டமாக இருக்கிறது. தவிர நம்மிடத்திலுள்ள அறிவுதான் எல்லாரிடத்திலும் பாஸிக்கிறது. அது தனித்தனியாக ஒவ்வொருவனிடத்தில் தோன்றினுலும் அது வேறுபட்டதல்ல. எல்லாம் ஒன்றுதான் என்று நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

உதாரணமாகப் பூமியில் விழுந்து ஆயிரம் சுக்கல்களான கண்ணுடியில் அதாவது ஆயிரம் கண்ணுடிச் சுக்கல்களிலும் சூரியன் தனித்தனியே தெரிகிறது. இவ்விதம் தனித்தனியே சூரியன் காணப் பட்டாலும் உண்மையிலிருப்பது ஒரே சூரியன் அல்லவா!

எனவே எல்லாவற்றிற்கும் மூலாதாரமாக விளங்கி வரும் அகண்ட சக்தி மயமான அறிவு தான் நம்மிடத் தில் பின்னமாகத் தோன்றுகிறது. இவ்விதம் எல்லா மாயும், எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளும் வஸ்து வாயும் இருப்பதுதான் ஆத்மா. அகண்டமாக இருக்கிற

ஆத்மாதான் ஸத்யம். இந்த ஆத்மாவில் கண்டமாகத் தோன்றுகின்றவைகளெல்லாம் பொய்யேயாகும்.

இதனுல் வேதமாதாவானவள் கோடிக்கணக்கான மாதாவினுடைய ஸ்தானத்திலிருந்து கொண்டு அகண்டமாக யிருக்கிற மெய்ப்பொருளை கண்டம் கண்டமாகப் பலஸ்வருபங்களாகச் செய்து அந்த ஒவ்வொரு கண்டமான ஸ்வருபங்களிடத்தில் அகண்ட சக்தியினை ஆரோஹணம் செய்து "ஸகுணமார்க்கத்தை கடைப்பிடி—அதன் மூலமாக நீ நிர்குண ஞானத்தை அடைவாய்" என்று உபதேசித்தருளி நம்மையெல்லாம் "சிவோஹம்" என்ற நிலையில் கொண்டு போய் விடுகிருள். என்னே வேதமாதாவின் கருணை!!

இது தான் ப்ரும்ம வித்தை—இதனையே பாட்டில் கல்வி என்ற பதத்தினுலும் 'ப்ரம்ம வித்தையில் உள்ளடங்கியிருக்கும் தத்துவத்தினைத் தெரிந்து கொள்ளும் சக்தியினையே 'எம் அறிவும்' என்ற பதத்தினுலும், ப்ரம்ம வித்தையினை அறிவதற்குள்ள மார்க்கமே 'ஓதிய' என்ற பதத்தினுலும் போதிக்கப்படுகின்றன.

இவ்விதம் கல்வியும் மெய்அறிவும் நாம் குருவினிடமிருந்து பெற்றுக் கொள்கிருேம். ஆனுல் உண்மையில் ஞானபண்டிதனுன முருகப் பெருமானே மனித உருவத்தில் குருவாக வந்து ப்ரும்ம வித்தையை உபதேசிக்கின்ருர்.

குரு என்ற சப்தத்தை சொல்லும் போதே அந்த யிடத்தில் ஞானபண்டிதனின் ஸாநித்யம் உண்டாகிறது. இவ்விதம் ப்ரும்ம வித்தையாகிய ஸமுத்திரத்தை நாம் குருவின் மூலமாகத்தான் தெரிந்து கொள்ள முடியும். அப்படிப் ருமம வித்தையை உப

தேசிக்கும் குரு ஞானபண்டிதனைக் காட்டிலும் வேறல்ல என்பதை எடுத்துக்காட்டவே பாட்டில்

யாம் ஓதிய கல்வியும் எம் அறிவும்

என்று சொல்லப்படுகிறது.

இந்தப் ப்ரும்ம வித்தையை ஏன் நமக்கு வேலவர் தரவேண்டும்? தந்ததின் காரணம் இப்ப்ரும்ம வித்தையின் மூலமாக வேதாந்த விசாரம் செய்து இறைவனை நாம் அகண்டானந்தமாக அநுபவிப்பதற்காக அல்லவா. இறைவனுடன் நாம் ஒன்ருகக் கலந்திருப்பதற்கு இறைவன் வேறு—நாம் வேறு என்ற பேத புத்தி அகலவேண்டும். உண்மையில் இறைவன் வேறு—நாம் வேறு என்பது இல்லை. அதாவது இரண்டு என்பது இல்லை. இரண்டாகத்தோன்றுவது ஒன்றுதான் எனவே இருப்பது பரம்பொருள் ஒன்றுதான். அது பெரிதுக்கெல்லாம் பெரிது. சிறிதுக்கெல்லாம் சிறிது. எல்லாப் பொருளுமாய் விளங்கக் கூடிய சக்தி வாய்ந்தது பரம்பொருள் ஒன்றுதான். அப்பரம்பொருளே முருகப்பெருமான். இந்தத் தத்துவத்தை உணரவே முருகப் பெருமான் நமக்குக் கல்வியையும் அறிவையும் தந்திருக்கிருர். மேல்கூறிய ப்ரும்ம தத்வத்தை சாஸ்திரமுறையில் நாம் அநுஸந்தானம் செய்து வந்தால் முருகப் பெருமானின் அருளிஞல் நாம் பரம்பொருள் என்ற அநுபவ நிலையை அடைவோம்.

ஞானமில்லாமல் பொய்யான மாயா ப்ரபஞ்சத்தில் உழலுகின்ற நமக்கு மெய்யறிவாகிய ப்ரும்ம ஞானத்தை தந்து நம்மை அஹம்ப்ரஹ்மாஸ்மி என்ற நிலையில் வைத்து தடுத்து ஆட்கொள்ளும் மாறிலா கருணை வைபவத்தையே பாட்டில்,

தாமே பெற வேலவர் தந்ததனுல்

என்று அருணகிரிநாதர் புகழ்கின்றார்.

யாம் கற்ற கல்வியையும், நம்முடைய மெய் அறிவையும் தாமே திருப்பி நம்மிடருந்து பெற்றுக்கொள்ள வேலவர் நம்மிடம் தந்திருக்கிறார் என்று சொன்னதினால், இதன் உண்மைப் பொருளோவெனில், கற்கும் கல்வியினாலும் மெய்யறிவினாலும் அடையக் கூடிய ஆனந்தானுபவ நிலையையே திருப்பிப் பெற்றுக் கொள்வற்கு என்பதேதான் ஆகும்.

உதாரணமாக எப்படி அழுக்கடைந்த பாத்திரத்தினை புளியைக்கொண்டு தேய்த்து அழுக்கினைப்போக்கி எடுத்துக் கொள்ளுகிறோமோ அதுபோலவே முருகப் பெருமானும் ஞானத்தைத் தந்து அக்ஞானமாகிய அழுக்கைப் போக்கி நம்மைத் தடுத்து ஆட்கொள்கிறார் தருவதும் ஆட்கொள்வதும் அவனுடைய திருவிளையாடல் அன்றோ.

ஆகையால் ஏ உலகத்தினர்களே! நான் சொல்வதைக்கேளுங்கள். இறைவன் நமக்குத் தந்திருக்கும் கல்வியும் அறிவும் இறைவனை அறிந்து அநுபவிப்பதற்காகவே அன்றி உலக சுகத்தினை அநுபவிப்பதற்கு அல்ல. இதனைத் திருவள்ளுவர் மிகவும் அழகாகச் சொல்லுகின்றார் திருக்குறளில் பின்வருமாறு.

கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

எனவே பிறவிப் பிணிக்கு மருந்து இறைவனின் நற்றாள் தொழுவதேயாகும். முருகனை எளிதில் அடைவதற்குச் சிறந்த வழி பக்திபயினை ஊட்டும் கல்வியும் அறிவுமேயாகும். உள்ளத்தில் இன்ப உணர்ச்சியை எழுப்பி அவ்வின்பமே முருகனை அடைவதற்கு சுலப

மான மார்க்கமாக இருக்கிறது என்பதினை நினைவூட்டு கிறது அறிவும் நாம் கற்ற கல்வியும்.

அறிவும் முருகன், அதனை அருளுபவனும் முருகன். அருளி ஆட்கொள்ளுபவனும் முருகன் அன்றோ! நம்மை ஆட்கொள்ளவே நமக்கு இறைவன் கல்வியை யும் அறிவையும் தந்துள்ள காரணத்தினால் நாம் நமது அரிதான மானிடப்பிறவியை வீணாக்கிவிடக் கூடாது.

மேலும் தாமே பெற வேலவர் கல்வியையும் அறி வையும் தந்திருப்பதனால் நாம் எல்லாம்வல்ல அந்த முருகப்பெருமானையே வாயாரப் புகழ்ந்து பாடவேண் டும். கற்ற கல்வியின் பயனை முருகனுக்கே செலவழிப் போம். அதுதான் நாம் செய்கிற மேலான பக்தி யாகும்.

இறைவன் திருவருளினை ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் எவ்வளவு அழகாகச் சொல்லுகிறார்.

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்
வேனைப், பத்திநெறி அறிவித்துப் பழ
வினைகள் பாறும் வண்ணஞ், சித்தமலம்
அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட,
அத்தன் எனக் கருளியவாறார் பெறுவார்
அச்சோவே.

இதனால் என்ன தெரிகிறது? இறைவனின் திரு வருளே நம்முடைய உள்ளத்திலுள்ள அழுக்குகளை வேருடன் அறுத்து நம்மைப் பேரின்ப சிவமாக்கித் தடுத்து ஆட்கொள்கிறது என்பது ஸ்பஷ்டமாக விளங்கவில்லையா.

ஆதலால் ஹே ஜனங்களே, இந்தப் பொய்யான மாயா ப்ரபஞ்சத்தில் மயக்கத்தினை அடையாதீர்கள்.

உலகத்தினைக் கண்டு ஆச்சரியம் அடையாதீர்கள். இவ்வுலகினை இச்சாமாத்திரத்தில் படைத்த முருகனை நினைந்து நினைந்து ஆச்சர்யம் அடையுங்கள். முருகன் ஒருவனே எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான தெய்வம். ஆகையால் நாம் நம்முடைய உள்ளம் பரிசுத்தமாக இருப்பதற்காகவும், மேலான சீரேயஸ்ஸை அடைவதற்காகவும் முருகனுடைய திருப்பாதங்களையே சரணாலயமென்று கடைப்பிடிப்போம்.

ஹே ஜனங்களே, உலகத்தில் ஏன் பற்றுதலை வைக்கிறீர்கள். எதையும் தத்வமாகப் பாருங்கள். நீ யார்?, எங்கிருந்து வந்து இருக்கிறாய்?, இதற்கு முன்பு எங்கு யாருடையவனாக யிருந்தாய்?, உன்னுடைய மனைவி யார்?, உன்னுடைய புத்திரன் என்கிறாயே அவன் யார்?, உன்னுடைய செல்வம் என்பது எது? இவையெல்லாம் உன்னுடன் வரப்போகிறதா? அவைகளிடத்தில் உனக்கு என்ன மயக்கம்.

இறக்கின்றவர்களைத் தினமும் பார்த்துக்கொண்டே இருக்கிறோம். அவ்விதம் மரணம் அடைந்தவர்களில் யாராவது இந்த உலகில் உள்ள பொருள்களையோ அல்லது அவர்களுடைய மனைவி மக்களையோ உடன் எடுத்துச் செல்லுகிறார்களா? அவர்களுடைய சரீரத்தையே மரணம் அடைந்தவர்கள் விட்டுவிட்டுச் செல்லும்போது அன்னிய வஸ்துக்களை எவ்விதம் எடுத்துச் செல்வார்கள்.

தனக்கு நிகர் எவருமேயில்லையென்று அனுபவித்துவந்த செல்வமனைத்தும் வீட்டிலேயே நின்றுவிடுகின்றன. அவ்விதமேமனைவிமக்கள் வாசற்படியிலேயே நின்றுவிடுகின்றனர். உறவினர்களும் சுற்றத்தாரும் சுடுகாட்டுவரையில் வந்து திரும்பிவிடுகின்றார்கள்

நம்முடன் கூடவே வரப்போகிறவர் ஒருவருமே கிடையாது.

யாம் ஓதிய கல்வியும் அறிவும் இதனையே முதன் முதலாக சிந்திக்கச் சொல்லுகின்றது. கல்வியினால் அடையும் பயன் இவ்வித சிந்தனை நம் உள்ளத்தில் உரம்பெற்று வளரவேண்டுமென்பதேதானாகும். தத்வ சிந்தனையே நமது அகக்கண்ணைத் திறக்கச் சக்தி வாய்ந்தது.

ஐச்வர்யத்திலேயே தாண்டவமாடிக்கொண்டிருந்த பட்டினத்தார் ஏன் ஒரு நொடியில் துறவியானார்? இதைச் சிந்தித்துப்பாருங்கள். துறவியாயும் பரம ஞானியும் உள்ள பட்டினத்தடிகளுக்கு இறைவன் அவருடைய மகனாய் வந்து தயிரினைக் கடைந்து வெண்ணையை எடுப்பதுபோல் இவ்வுலகம் அனைத்தினையும் கடைந்து வெண்ணெய் போல் எடுத்து

காதற்ற ஊசியும் வராதுகாண்
கடைவழிக்கே

என்று உபதேசித்து அருளினார் அன்றோ! எத்தனை பெரிய உண்மை அடங்கியுள்ளது அவர் பொன்மொழியில். இதனை இடைவிடாமல் சிந்தித்துப்பாருங்கள்.

இதனால் ஹே உலகத்தினர்களே! இந்த அழியப் போகும் மாயா உலகத்தில் நீங்கள் வைத்திருக்கும் மயக்கத்தினை முருகனின் திருவருளினைக் கொண்டு போக்கடியுங்கள்.

கடைவழிக்கு கூடேவரும் வஸ்துவோவெனில் இந்த மாம்ஸகண்களுக்கு புலப்படாமலிருக்கிற புண்யமும் பாவமுமேயாகும். இறைவன் தந்த கல்வியும் அறிவும் புண்ணியகர்மாவை செய்வதற்கே செலவழிக்க

வேண்டும். பாபகர்மாவை செய்வதற்கு செலவழிக்கக் கூடாது. அவ்விதம் செலவழித்தால் அது தீவினைகளை உண்டுபண்ணும். நல்வினைகளை உண்டுபண்ணுது.

நல்ல கர்மாக்களை நாம் செய்துவந்தால் அது கடைவழிக்கு நமக்குத் துணையாக வரும். தீயகர்மாக் களைச் செய்தால் அது கடைவழிக்குத் துன்பத்தினை தரவே கூடவேவரும்.

ஆதலால் கடைத்தேறுவதற்கு கடைசியாக ஒரு வழி சொல்லுகிறேன் கேளுங்கள்.

தர்மத்தையும், அந்த தர்மத்தின் ஸ்வரூபமான மெய்ப்பொருளாகிய முருகப்பெருமானையும் நீயே கதி-நீயே சரணம் என்று ஒரே மனதுடன் கடைப்பிடியுங் கள். அது ஒன்றே போதும் நாம் உய்வதற்கு.

இதையே பாட்டில் அருணகிரிநாதர் மிகவும் அழகாக

அற மெய்ப் புணர்வீர்

என்று உபதேசிக்கிருர். எனனே அதன் அருமை!

வேதமானது நாம் நம்முடைய ஜன்மாவை ஸபலம் செய்துகொள்ள

தர்மம் சர

என்று கட்டளை இடுகிறது. ஏன்? தர்மம் தலைகாக்கும் என்பதினுல் அல்லவா?

கொடைவள்ளலாகிய மாபெரும் வீரனை கர்ண னைக் கடைசி உயிர்போகும் தருவாயில் எது முன்வந்து காப்பாற்றியது. அவன் செய்த மாபெரும் தர்மம் ஒன்றல்லவா. தர்மத்தை சரணமடைந்த கர்ணனை ஏன் கிருஷ்ண பரமாத்மாவினுல் எளிதில் கொல்லமுடிய வில்லை. சிந்தித்துப்பாருங்கள். தர்மத்தைக் கடைப்

பிடிப்பது என்பதுதான் இறைவனைக்கடைப்பிடிப்பது என்பது. தர்மமும் இறைவனும் ஒன்றுதான்.

தர்மதேவதையானவள் எண்ணற்ற ரூபங்களில் விளங்கிவருகிருள். அதில் கொடை என்ற தர்மத்தைக் கர்ணன் கடைப்பிடித்தான்.

அதிகம் சொல்வானேன். உதாரணமாக ஸ்ரீராமச் சந்திர மூர்த்தியானவர் கானகம் செல்லும்போது அவருடைய மாதாவான கௌஸல்யா தேவியானவள் ஸ்ரீராமரிடம் "ராமா யார் உன்னைப் பரிகாசம் பண்ணிஞலும் நீ அநுஷ்டானம் செய்துவரும் தர்மத்தைவிட்டு விடாதே. எந்தத் தர்மத்தை நீ தைரியத்தோடும், நியமத்தோடும் விடாமல் அநுஷ்டானம் செய்து வருகிருயோ, அந்தத் தர்மமானது உன்னை எப்பொழுதும் காப்பாற்றட்டும்"

என்று தன் குழந்தையாகிய ஸ்ரீ ராமரை ஆசீர்வாதம் செய்து அனுப்புகிருள். ஸ்ரீ ராமரோ வெனில் தர்மத்தின் ஸ்வரூபம். இதனுல்தான்

ராமோ விக்ரஹவாந்தர்ம:

என்று சொல்லுகிறோம். தர்மமூர்த்தியிடம் தர்மம் உன்னைக் காப்பாற்றட்டும் என்று சொல்கிருள் கௌஸல்யை. என்னே தர்மத்தின் பெருமை! இதனுல் தர்மத்தின் சக்தியும் மஹிமையும் அளவுக்கு அடங்காதது—வர்ணிக்க இயலாதது என்பதைச் சொல்லவும் வேண்டுமா.

எனவே நாம் எல்லா தர்மத்தையும் அநுஷ்டிப்பதென்பது ஸாமான்யமான கார்யமல்ல. அதில் இரண்டு தர்மங்களை மட்டும் அநுஷ்டிப்போம்.

அதையே உடலில் உயிர் இருக்கும் வரையில் கடைப் பிடிப்போம். அந்த இரண்டு தர்மங்களோவெனில்,

அங்கு இங்கு எனுதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்தது

என்ற அருள்வாக்கினுல் தாயுமானசுவாமிகள் எந்த மெய்ப்பொருளேச் சுட்டிகாட்டுகிருரோ, அந்த மெய்ப் பொருளானது தர்மத்தையே ஸ்வருபமாகக்கொண்ட முருகப்பெருமானேக் காட்டிலும் வேறல்ல என்ற த்ருடமான எண்ணத்துடன் இருப்பதே முதலாவது தர்மமாகும்.

அப்படியே :-

பரம்பொருளாகிய முருகப் பெருமானே நாவினுல் அல்லும் பகலும் பொருள் உணர்ந்து உள்ளமுருகிப் பாடிக்கொண்டே இருப்பதுதான் நாம் கற்ற கல்வி-மெய்யறிவு இவைகளுடைய பயன் ஆகுமென்றும், அதனுல்தான் நாம் முருகனின் திருவடிகளில் ஒன்ருேடு ஒன்ருய் கலந்து ஸ்கந்தானுபூதியை அனுபவிக்கமுடியுமென்பதே இரண்டாவது தர்மமாகும்.

ஆதலால் ஜனங்களே மேல்கூறிய இரண்டு தர்மங்களேயும் நாம் கடைப்பிடித்துக் கொள்வோம். அது தான் முக்திக்கு வழி காட்டுகிறது.

அரிதான மானிட ஜன்மாவில் இதுவரையிலும் பாப கர்மாவைச் செய்துகொண்டு இந்த மாயா ப்ரபஞ்சத்தை ஸத்யம் என்று அநுபவித்துக் கொண்டே இருந்துவருகிற நாம், எவ்விதம் கடைத்தேற முடியும் என்ருே, முருகப் பெருமான் நம்மை ஆட்கொள்வாரா

என்ருே, நாம் முருகனைப்பற்றிப் பாடுவதற்கு அருகதியுள்ளவர்களாயிருக்கிரேமா என்ருே, இதுவரையிலும் நாம் செய்த பாவம் நம்மை வந்து அணுகாமல் இருக்குமோ என்ருே, காலன் நம்மை வந்து அணுகாமல் இருப்பாஞே என்ருே, நாம் நினைக்கவே வேண்டாம். ஏன் தெரியுமா? உண்மையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

பரம ஞானியான பட்டினத்தடிகள் காஞ்சிமாநகரில் ஏகாம்பரேச்வரஸ்வாமி முன்னிலையில் நின்று மனம் நொந்து சிவபெருமானை நோக்கி

பொல்லாதவன் நெறி நில்லாதவன்
ஐம் புலன் கடமை
வெல்லாதவன், கல்வி கல்லாதவன்
மெய் அடியவர் பாற்
செல்லாதவன், உண்மை சொல்லாதவன்
நின் றிருவடிக்கன்பில்லாதவன்
மண்ணிலேன் பிறந்தேன்
கச்சியேகம்பனே.

என்று சொல்கின்ருர். இத்தகைய பாபியாகிய நான் மண்ணில் ஏன் பிறந்தேன்? அரிதாகிய மானிடப் பிறவியை நினது திருவருளினுல் பெற்று வெறும் வீணே ஆக்கிவிட்டேனே என்று சொல்லிச் சொல்லி மனம் துடிக்கிருர்.

அதுபோல் ஏ உலகத்தினர்களே! நீங்கள்மனம் கலங்க வேண்டாம். நீங்கள் எவ்வளவு பாபியாக இருந்தாலும் பரவாயில்லை. நீங்கள் செய்த எல்லா பாபங்களையும் முருகப் பெருமான் வேருடன் அறுத்துத்தள்ளி உங்களைத் தூய்மையான உள்ளத்தினை

யுடையவர்களாகச் செய்துவிடுவாரென்பதில் ஐய மில்லை. கந்தர் அநுபூதியை நீங்கள் பாட ஆரம்பித் தால் மறுவினாடியே முருகன் உங்கள் உள்ளத்தில் தோன்றுவான். உங்களை எல்லையில்லா ஆனந்தத்தில் மூழ்கவைப்பான்.

ஆகையால் நீங்கள் உங்கள் நாவினால் முருகனைப் புகழ்ந்து புகழ்ந்து பாடுங்கள். நாவினால் வேல் முருகா வேல் முருகா என்ற மந்திரத்தை இடைவிடாமல் ஜபித் துக்கொண்டே இருங்கள். உங்கள் பாபங்களெல்லாம் வேருடன் அழிந்துபோகும்.

எத்தனையோ ஜன்மாக்களில் செய்த புண்ணிய வசத்தினால் நாம் ஊமையாகப் பிறக்காமல் நாவினை யுடையவர்களாகப் பிறந்திருக்கிறோம். நாவினால் தான் நாம் முருகனை வாழ்த்த முடியும். இறைவனைப் புகழ்ந்து புகழ்ந்து நாவினால் பாடுவதே இறைவனை அடைவதற்கு சுலபமான வழியும் சிறந்த உபாயமும் ஆகும். இதுவே வேதத்தின் ஆழ்ந்த கருத்துமாகும்.

வேல் முருகா! செந்தூர் வேலா! வெற்றி வேலா! என்னும் மாசற்ற நாமத்தைச் சொல்லிக்கொண்டே இருங்கள். உலக மயக்கத்தினின்று விடுபடுவதற்கு முருகப்பெருமானைப் புகழ்ந்து பாடுவதைக் காட்டிலும் வேறு வழியே இல்லை.

முருகனைப் பற்றிப் பாடும் பணியே பணியாகக் கொள்ளுங்கள். இவ்விதம் பாடுவதையே பணியாகக் கொண்ட அடியார்களே பரமனையே பாடுவார்கள் ஆவார்கள்.

ஆதலால் வேல் முருகா! வேல் முருகா! என்று சொல்லப்படும் முருகனின் வேற்படையை நாமேல் வைத்துக்கொண்டு இந்தப் பொய்யான உலக மயக்

கத்தினை விட்டு விட்டு முருகன் திருவடியாகிய முக்தி நிலையத்தை நோக்கி நடந்துகொண்டே இருங்கள். திரும்பிப் பார்க்காமல் நடந்துகொண்டே இருங்கள்.

நாவினால் ஸதாகாலமும் வேல் முருகா வேல் முருகா என்று சொல்லிக்கொண்டிருந்தால், 'ஒரு நிலையில் தானாகவே நாவானது வேல் முருகா வேல் முருகா என்று சொல்லிக்கொண்டிருக்கும். இதன் பயனோவெனில் மனிதனானவன் மரணத்தையடையும் தருணத்தில் எல்லா இந்திரியங்களும் உயிர்அற்று ஒடுங்கிப் போனாலும்கூட நாவானது வேல் முருகா வேல் முருகா வென்று உச்சரித்துக்கொண்டேயிருச்கும். அப்போது செல்வக் குமரனின் செஞ்சுடர்வேல் துணையாக அருகில் வந்து நிற்கும். எமபடர்கள் செல்வக் குமரனின் வேலினைக் கண்டு நடுங்கி ஓடுவார்கள்.

ஆதலால் ஹே ஜனங்களே! போனதெல்லாம் போகட்டும். இதுவரையில் செய்த பாபத்தைக் குறித்து நீங்கள் கவலைப்பட வேண்டியதேயில்லை. கந்தர் அநுபூதியைப் படிக்க ஆரம்பியுங்கள். அது போதும். அந்த வினாடியே நீங்கள் பரிசுத்தமுள்ள மனதையுடையவர்களாக ஆகிவிடுகிறீர்கள். தாமரை இலையில் எவ்விதம் தண்ணீர் ஒட்டாதோ அதுபோலவே இதுவரையிலும் நீங்கள் செய்த பாபமானது உங்களை ஒட்டாது.

எனவே முருகப்பெருமானின் திருவருளைப்பெற்று அவருடைய வலது தோளில் கிளி ரூபமாக அமர்ந்து கொண்டு கந்தர் அநுபூதியை இடைவிடாமல் பாடிக் கொண்டிருக்கும் மஹா பாக்கியத்தையடைந்த அருணகிரிநாதர் தாம் மேல்கூறியவைகளெல்லாம் முற்றிலும் உண்மை என்று இந்தப் பாட்டில் இனியே

யுடையவர்களாகச் செய்துவிடுவாரென்பதில் ஐய மில்லை. கந்தர் அநுபூதியை நீங்கள் பாட ஆரம்பித் தால் மறுவினடியே முருகன் உங்கள் உள்ளத்தில் தோன்றுவான். உங்களை எல்லையில்லா ஆனந்தத்தில் மூழ்கவைப்பான்.

ஆகையால் நீங்கள் உங்கள் நாவினால் முருகனைப் புகழ்ந்து புகழ்ந்து பாடுங்கள். நாவினால் வேல் முருகா வேல் முருகா என்ற மந்திரத்தை இடைவிடாமல் ஜபித் துக்கொண்டே இருங்கள். உங்கள் பாபங்களெல்லாம் வேருடன் அழிந்துபோகும்.

எத்தனையோ ஜன்மாக்களில் செய்த புண்ணிய வசத்தினால் நாம் ஊமையாகப் பிறக்காமல் நாவினை யுடையவர்களாகப் பிறந்திருக்கிறோம். நாவினால் தான் நாம் முருகனை வாழ்த்த முடியும். இறைவனைப் புகழ்ந்து புகழ்ந்து நாவினால் பாடுவதே இறைவனை அடைவதற்கு சுலபமான வழியும் சிறந்த உபாயமும் ஆகும். இதுவே வேதத்தின் ஆழ்ந்த கருத்துமாகும்.

வேல் முருகா! செந்தூர் வேலா! வெற்றி வேலா! என்னும் மாசற்ற நாமத்தைச் சொல்லிக்கொண்டே இருங்கள். உலக மயக்கத்தினின்று விடுபடுவதற்கு முருகப்பெருமானைப் புகழ்ந்து பாடுவதைக் காட்டிலும் வேறு வழியே இல்லை.

முருகனைப் பற்றிப் பாடும் பணியே பணியாகக் கொள்ளுங்கள். இவ்விதம் பாடுவதையே பணியாகக் கொண்ட அடியார்களே பரமனையே பாடுவார்கள் ஆவார்கள்.

ஆதலால் வேல் முருகா! வேல் முருகா! என்று சொல்லப்படும் முருகனின் வேற்படையை நாமேல் வைத்துக்கொண்டு இந்தப் பொய்யான உலக மயக்

கத்தினே விட்டு விட்டு முருகன் திருவடியாகிய முக்தி நிலையத்தை நோக்கி நடந்துகொண்டே இருங்கள். திரும்பிப் பார்க்காமல் நடந்துகொண்டே இருங்கள்.

நாவினுல் ஸதாகாலமும் வேல் முருகா வேல் முருகா என்று சொல்லிக்கொண்டிருந்தால், 'ஒரு நிலையில் தானுகவே நாவானது வேல் முருகா வேல் முருகா என்று சொல்லிக்கொண்டிருக்கும். இதன் பயனுே வெனில் மனிதனுனவன் மரணத்தையடையும் தருணத்தில் எல்லா இந்திரியங்களும் உயிர்அற்று ஒடுங்கிப் போனுலும்கூட நாவானது வேல் முருகா வேல் முருகா வென்று உச்சரித்துக்கொண்டேயிருச்கும். அப்போது செல்வக் குமரனின் செஞ்சுடர்வேல் துணையாக அருகில் வந்து நிற்கும். எமபடர்கள் செல்வக் குமரனின் வேலினைக் கண்டு நடுங்கி ஓடுவார்கள்.

ஆதலால் ஹே ஜனங்களே! போனதெல்லாம் போகட்டும். இதுவரையில் செய்த பாபத்தைக் குறித்து நீங்கள் கவலைப்பட வேண்டியதேயில்லை. கந்தர் அநுபூதியைப் படிக்க ஆரம்பியுங்கள். அது போதும். அந்த வினுடியே நீங்கள் பரிசுத்தமுள்ள மனதையுடையவர்களாக ஆகிவிடுகிறீர்கள். தாமரை இலையில் எவ்விதம் தண்ணீர் ஒட்டாதோ அதுபோலவே இது வரையிலும் நீங்கள் செய்த பாபமானது உங்களை ஒட்டாது.

எனவே முருகப்பெருமானின் திருவருளைப்பெற்று அவருடைய வலது தோளில் கிளி ரூபமாக அமர்ந்து கொண்டு கந்தர் அநுபூதியை இடைவிடாமல் பாடிக் கொண்டிருக்கும் மஹா பாக்கியத்தையடைந்த அருணகிரிநாதர் தாம் மேல்கூறியவைகளெல்லாம் முற்றிலும் உண்மை என்று இந்தப் பாட்டில் இனியே

என்ற பதத்தினுல் ஸத்தியம் செய்கிருர். அதாவது இனியே என்ற பதமானது 'இனி'—'ஏ' என்று பிரிக்கப் படுகிறது. 'ஏ' என்பது ஸம்போதனை. அதாவது ஏ ஜனங்களே! என்று பொருள்.

'இனி' என்ருல் இனியாவது என்று பொருள். அதாவது, இனியாவது நாமேல் நடவீர் நடவீர். இதனுலேயே இதுவரையிலும் நாமேல் நடக்கவில்லை என்பது வெளியாகிறது. தவிர இனியாவது என்று சொன்னதினுல் இதுவரையிலும் செய்யவேண்டியதைச் செய்யவில்லையென்பது ஸ்பஷ்டமாக வெளியாகிறது அல்லவா? அதனுலேயே இதுவரையிலும் செய்த குற்றமும் பாபமும் மன்னிக்கப்பட்டது என்பது ஸித்தாந்தமாக வெளியாகிறது. காரணமோவெனில் இனியாவது நாமேல் நடவீர் நடவீர் என்றதனுல். மேலும் இனி என்ருல் பிறகு என்றும் பொருள். எதற்கு பிறகு? தர்மத்தையும் முருகப் பெருமானையும் கடைப்பிடித்த பிறகு. முருகனைச் சரணமடைந்த பிறகு பாபம் நம்மை எவ்விதம் அணுகும்! ஒருகாலும் அணுகாது.

இதன் தத்வமோவெனில் ஹே ஜனங்களே! இதுவரையிலும் நாம் பாபகர்மாவையே செய்து வந்தோம். முருகனை சரணமடைந்ததும் பாபகர்மாவானது முருகப்பெருமானின் அருளினுல் அழிந்துபோயிற்று. இதனுல் பாபமற்றவர்களாக ஆனேம். எனவே இனியாவது நாம் நாமேல் வேற்படையை வைத்துக்கொண்டு நடப்போம் என்பதே பொருளாகும்.

எனவே உலகமயக்கம் தெளிந்து கந்தர் அநுபூதியை அநுபவிப்பதற்கு முருகனின் புகழைப் பாடிக்கொண்டிருப்பதே சுலபமான வழியாகும். முருகனை நெஞ்சில் நிலைநிறுத்தி தியானிப்பது மிகவும் கடினம்,

ஏன்? மனதை ஞானிகளினுலேயே அடக்கமுடிகிற தில்லை. ஆதலால் மனதையடக்குவதற்கு 'பாடும் பணியே' அந்தரங்க ஸாதனமாகயிருப்பதால் பாட்டில்

நாமேல் நடவீர் நடவீர் இனியே

என்று சொல்கிருர். தவிர

காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்

என்றிருப்பதால்—அதாவது நாக்கு இருக்கும்போதே முருகனைப் புகழ்ந்து பாடி இந்த அரிதாகிய மானிடப் பிறவியை ஸபலம் செய்து கொள்ளுங்கள் என்று உப தேசிக்கிருர் அருணகிரிநாதர். இதனுல்தான்

பாட வேண்டும் நான் போற் நின்னையே
பாடி நைந்து நைந்து உருகி.......

என்று சொல்லி சிவபெருமானை வேண்டுகிருர் ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள்.



# கற்பனைக்குக் கடந்த பரம்பொருள்

## 18



உதியா மரியா உணரா மறவா
விதிமால் அறியா விமலன் புதல்வா
அதிகா அநகா அபயா அமரா
வதிகா வல சூரபயங் கரனே.

### பதவுரை

உதியா — உத்பத்தியென்பது இல்லாதவனே, மரியா—மரணமென்பது இல்லாதவனே, உணரா — உணர்வது என்பது இல்லாதவனே! மறவா-மறவாமை என்பது இல்லாதவனே—விதிமால்—ப்ரும்மா விஷ்ணு இவர்களினுல், அறியா—அறியப்படாத, விமலன் — சுத்தப்ரம்மமாகிய சிவபெருமானுடைய, புதல்வா—புதல்வனே, அதிகா—எல்லாவற்றிற்கும் மேலாக நிற்பவனே, அநகா — குற்றமில்லாதவனே பாபமில்லாதவனே, அபயா—பயம்அற்றவனே, அதிகாவல—பெரியதை ரக்ஷிப்பவனுயும் அப்படியே பெரிய ரக்ஷகனுயும்

விளங்குபவனே, அமரா — இறப்பு யென்பதில்லாதவனே (அதாவது என்றென்றும் சிரஞ்சீவியாய் இருப்பவனே,)

(அப்படியே)

அமராவதிகாவல—இந்திரனுடைய இருப்பிடமாகிய அமராவதி நகரைக் காப்பவனே, சூரபயங்கரனே — சூரபத்மா சூரனுக்குப் பயத்தை உண்டுபண்ணுபவனே,

**செல்வக் குமரா உன் பெருமையெல்லாம் என் நாவின் மேல் செல்வமாகத் திகழ அருள்வாய் அப்பனே! என்பது பொருள்.**

**தாத்பர்யம்**

ஸர்வலோகத்திற்கும் சரணுலயம் ஸாக்ஷாத் ஸ்ரீ மஹா விஷ்ணுவேயாவர். அவருடைய பெருமையை வேதத்தில் புருஷஸூக்தம் மூலமாக மிகவும் அமோகமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. விஷ்ணுவின் பெருமையைச் சொல்லாத புராணமே இல்லே. கிருஷ்ண மந்திரத்தை ஜபிப்பவர்களுக்கு மறு பிறப்பே இல்லே யென்றும்,

ஸர்வதேவ நமஸ்கார:
கேசவம் ப்ரதிகச்சதி

என்று எந்தத் தேவதைக்கு நமஸ்காரம் செய்தாலும் முடிவில் அந்த நமஸ்காரமானது கேசவனேயே வந்தடைகிறது என்ற ஒப்பற்ற பெருமையுடன் ஸ்ரீ மஹா விஷ்ணுவானவர் விளங்கி வருகிருர்.

'ராம' என்ற தாரகமந்திரத்தின் ஸ்வருபமாக பாஸித்துக்கொண்டேயிருக்கும் காரணத்திஞல் அம்மகா மகிமை தங்கிய மஹாவிஷ்ணுவை முப்பத்துமுக்கோடி தேவர்களும், அப்படியே அண்டசராசரங்களில் இருந்து வரும் எண்ணிலாகோடி ஜீவராசிகளும் மஹாவிஷ்ணு

வையே ஹே ஜகத்ரக்ஷகா! ஹே ஆபத்பாந்தவா! ஹே அனுத ரக்ஷகா! என்று புகழ்ந்து போற்றி வருகிறுர்கள் அன்ருே!

இம்மாதிரியே ப்ரும்மாவையும் ஸர்வஜகத்திற்கும் சிருஷ்டிகர்த்தா என்றும் அப்படியே தேவர்கள் அசுரர் கள் ராக்ஷசர்கள் ஆகிய எல்லோருக்கும் எண்ணற்ற வரங்களேயளிப்பவரென்றும் வேதங்கள் ப்ரும்மாவின் நான்முகங்களிலிருந்து வெளிவந்ததினுல் வேத புருஷ னென்றும் போற்றிப் புகழ்ந்து ஆராதித்து வருகிறுர் கள் தேவர்கள் உள்பட நாரதாதி முதலான மஹாஷிகள்.

எனவே ப்ரும்மாவானவர் சிருஷ்டிகர்த்தா வென் றும் விஷ்ணுவானவர் ஸர்வலோக ரக்ஷகர் என்றும் விளங்கி வருகிறுர்கள்.

ஆனுல் ஒரு சமயம் விஷ்ணுவும் ப்ரும்மாவும் ஒரு வருக்கொருவர் 'நான்தான் மேலானவன்' 'நான்தான் மேலானவன்' என்று யுகக்கணக்காக வாதம் செய்து கொண்டிருந்தார்கள். இப்படியிருக்கையில் இருவருக் குள் 'யார் மேலானவன்—யார் கீழானவன்' என்று கண்டுபிடிக்க முடியாமல் தேவர்கள் அல்லல்பட்டார் கள். ஒருசமயம் விஷ்ணு மேலானவர் போலும் ஒரு சமயம் ப்ரும்மா மேலானவர் போலும் தேவர்களுக்குத் தோன்றினுர்கள்.

விவேகமற்ற தேவர்கள் சிவபெருமானேயடைந்து, விஷ்ணு ப்ரும்மா இருவருள் யார் பெரியோன் யார் சிறியோன் என்று கேட்டுத் தெரிந்துகொள்ள முன் வர வில்லே. காரணமோவெனில் அவர்கள் சிவபெருமானே ஸாமான்ய தெய்வமாகவும் அப்படியே ஜகத்தையழிப்

பது என்ற கெட்ட தன்மையை உடையவனென்றும் எண்ணியிருந்ததே தாணுகும்.

நிற்க விஷ்ணுவும் ப்ரும்மாவும் தம்முடைய பலா பலத்தைபற்றி தீவிரமாக சண்டை செய்துகொண்டிருக் கையில் ஆகாசத்திலிருந்து ஒரு பெரிய அசரீரி வாக்கு எழுந்தது. அவ்வாக்கோவெனில்:–

"ஹே குழந்தைகளே, அறிவில்லாமல் ஏன் சண்டை போட்டுக் கொள்கிறீர்கள். உங்கள் பலாபலமும், அப் படியே உங்கள் இருவருள் யார் பெரியவன் யார் சிறிய வன் என்பதினை நீங்கள் இருவரும் அறியமாட்டீர்கள். உங்களால் அறியவும் முடியாது.

எனவே உங்கள் இருவருக்கும் மூலகாரண மாயுள்ள சிவபெருமானுக்குத்தான் உங்களுடைய சக்தியின் அளவு நன்கு தெரியும். உங்கள் இருவர் களுடைய முன்னிலையில் இப்பொழுது ஓர் அக்னிமய மாகிய தேஜோ ஸ்தம்பத்தைப் பார்க்கப் போகிறீர்கள். அவ் அக்கினி குழம்பாய் நிற்கும் ஸ்தம்பத்தின் அடி யையோ அல்லது நுனியையோ கண்டுபிடித்தீர்களே யாணுல் அப்பொழுது யார் மேலானவன் யார் கீழான வன் என்று சொல்லப்படும். அதுவரையில் சொல்ல முடியாது.

இந்தப் பந்தயத்தில் நீங்கள் முன்வரவில்லையென் ருல் இருவரும் சமமான சக்தியையுடைவர்களாகவே ஆவீர்கள்" என்பதேதாணுகும்.

அசரீரி வாக்கைக் கேட்ட மாத்திரத்தில் ப்ரும்மா விஷ்ணு ஆகிய இருவர்களும் தங்களுடைய முன்னிலை யில் ஒரே அக்கினி மயமாய் ஜ்வலித்துக்கொண்டிருக்

கும் ஒரு மாபெரும் ஸ்தம்பத்தைப் பார்த்தார்கள். உடனே இருவர்களும் சண்டையைவிட்டு விட்டுப் பர சிவத்தின் அடிநுனியைக் கண்டுபிடிக்கச் சென்ருர்கள்.

வராகருபத்தை எடுத்துக்கொண்டு விஷ்ணுவானவர் பரசிவத்தின் பாதத்தையும், அப்படியே ஹம்ஸபக்ஷி யின்ருபத்தைஎடுத்துக்கொண்டு ப்ரும்மாவானவர் பரம சிவத்தின் சிரஸையும் கண்டுபிடிக்கக் கிளம்பிஞர்கள்.

எத்தனையோ கோடி வருஷங்கள் புரண்டு ஓடின. ஆயினும் பரசிவத்தின் அடியையோ நுனியையோ இரு வராலும் அறியமுடியவில்லை. இருவர்களும் செல்லச் செல்ல பரசிவத்தின் அடியும் நுனியும் எல்லையற்றதாக வளர்ந்துகொண்டேயிருந்தன. இதனுல் விஷ்ணுவும் ப்ரும்மாவும் சொல்லமுடியாத கஷ்டத்தினை அநுபவித் தார்கள்.

முடிவில் இருவர்களும் பரசிவத்தின் அமோகமான மஹிமையை நன்கு அறிந்து, “அந்தோ கெட்டோம். எல்லாவற்றிற்கும் மூலகாரணமாய் விளங்கும் பரசிவத் திற்கு மூலத்தைக் கண்டுபிடிக்கச் சென்ருேமே. இது நடக்கக்கூடிய காரியமா. தவிர பரசிவத்தின் ஸ்வரு பத்தையோ அல்லது சக்தி விசேஷத்தையோ நம்மால் அறியமுடியுமா. என்ன மூடமான காரியம் செய்தோம் என்று பலவாறு மனம் நொந்து பரசிவத்தைக் கண்டு பிடிக்க முடியாதென்று திரும்பி வந்துவிட்டார்கள். இந்த உண்மையை உலகத்தில் சொல்லி சிவபெரு மானே மேலான தெய்வமென்று நிலைநாட்டிஞர்கள்.

இந்தப் புண்ணிய சரித்திரமானது ஸ்காந்த மஹா புராணத்தில் மாஹேச்வர காண்டத்தில் மிகவும் விஸ்தாரமாகத் திகழ்கின்றது.

இத்தகைய விஸ்வருபலீலையையே அடிநுனி இல்லாமை என்கிற திருவிளையாடல் ஆகும்.

நால்வருடைய தேவாரங்களில் சிவபெருமானின் இந்தத் திருவிளையாடலே நடுநாயக மணிபோல் விளங்குகின்றது.

கரியானோடு கமலமலரான் காணாமை
எரியாய் நிமிர்ந்த எங்கள் பெருமான்
கோணா கணையானும் குளிர் தாமரையானுங்
காணார் கழலேத்தக் கனலாய் ஓங்கினான்.

என்று ஞானசம்பந்தர் புகழ்கின்றார்.

இவ்வித மகிமையுள்ள சுத்த ப்ரும்மமாய் விளங்கும் பரம்பொருளாகிய பரசிவத்தையே பாட்டில் விமலன் என்று சொல்லுகிறார். ஒரே நெருப்பு பிம்பமாய் விளங்கும் மூர்த்தியாய் சிவபெருமான் இருந்து வருவதால் அவரிடம் ஒருவிதமான தோஷத்தையும் சொல்ல முடியாது. எனவே விமலன் என்றார். இவ்விதம் பரம்பொருளாயிருக்கும் பரசிவத்தை விஷ்ணுவும் ப்ரும்மாவும் காண இயலுமோ. ஆதலால் பாட்டில்,

விதிமால் அறியா விமலன்

என்றார். விமலனுடைய நெற்றிக் கண்ணிலிருந்து வந்த ஆறு பொறிகளிலிருந்து அவதரித்தவரே முருகப்பெருமான் ஆவார். அதனால், முருகப்பெருமானை,

விமலன் புதல்வா

என்றார்.

விமலனான சிவபெருமானுக்குள்ள வைபவங்களெல்லாம் முருகனுக்கு உண்டு.

மேலும் ச்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் என்பதில் ஸம்ஹாரமே மேலானது. இதனை ச்ருஷ்டி கர்த்தாவான ப்ரும்மாவும் ஸ்திதி கர்த்தாவான விஷ்ணுவும் சேர்ந்து கொண்டு சொல்லுகிறார்கள். ஸம்ஹார மூர்த்தியின் ஸம்ஹார ரகஸ்யத்தை அறிவது மிகவும் கஷ்டம். ஏனெனில் அவருடைய அடி நுனியையே அறியமுடியாதபோது அவருடைய ஸம்ஹார லீலையை எவ்விதம் அறியமுடியும்.

இத்தகைய மகிமையுடன் கூடிய சிவபெருமானின் குழந்தை ஸுப்ரமணிய ஸ்வாமியானவர். எனவே பாட்டில்,

விதிமால் அறியா விமலன் புதல்வா

என்கிறார். விமலனான சிவபெருமானுடைய புதல்வனான முருகப்பெருமானைப் பத்துவிதமான வைபவங்களினால் வர்ணிக்கின்றார் இந்தப் பாட்டில். அவைகளைப் பின்வருமாறு அனுபவிப்போம்.

## உதியா

உதிக்காதவன். அதாவது உற்பத்தியில்லாதவன் எங்கிருந்து தோன்றினான் என்ற சிந்தனைக்கே இடம் கொடுக்காதவன். உதித்தவன்போல் தோன்றுவதால் உதியாதவன் என்று சொல்லுகிறார். அதாவது உண்மையில் பிறப்பு என்ற தர்மத்தையுடையவனாக இல்லாதுபோனாலும் எல்லா ஜீவராசிகளையும் தடுத்து ஆட்கொள்ளும் பொருட்டு அப்ராக்ருதமான திவ்ய மங்கள ஸ்வரூபத்தை யெடுத்துக் கொண்டு இந்தப் புண்ணிய பூமியில் ஆங்காங்கு தோன்றுகிறார் முருகப் பெருமான்.

## மரியா

மரணம் என்பது இல்லாதவன். பிறப்புண்டேல் இறப்புண்டு அன்றோ. மரணம் இல்லாதவனே என்று சொல்லுவதால் பிறப்பு இல்லாதவனென் பதை எடுத்துக் காட்டுகிறார். இதன் பொருளோ வெனில் "ஹே முருகா! நீயோ மரணமில்லாதவன். நாங்களோ மரணதர்மத்தையுடைவர்கள். எனவே எங் களுக்கு மரணபயமுண்டு. உனக்கோ மரணபயமில்லை. அதாவது உனக்கு பிறப்புமில்லை; இறப்புமில்லை. எனவே மரணபயத்தை நாங்கள் இயமனிடமிருந்து அடைகிறோம். ஆதலால் இயமன் வரும்போது மரண பயமில்லாத நீ ஒருவன்தான் வந்து எங்களுடைய மரண பயத்தைப் போக்கடிக்க வேண்டுமென்பதே தானாகும்.

## உணரா

உணராதவனே! அதாவது உணர்வது என்ற தர்மத்தையுடையவனாக இல்லாதவனே இதன் உண்மைப் பொருளோவெனில் உணர்வது என்ப தில்லாமல் இருப்பவனே என்பதே. அவனைக் காட்டி லும் வேறான வஸ்து ஒன்று இருந்தால்தானே உணர் கிறான் என்று சொல்ல முடியும். எல்லாம் அவனேயா யிருக்கும் பொழுது உணர்வு என்ற தோஷத்திற்கு இடமேயில்லை. காண்பதற்கே பொருளில்லாமலிருக் கும்போது அதாவது உண்மையில் காணும் பொரு ளெல்லாம் கயிற்றில் தோன்றும் பாம்புபோல் பொய் யாகவிருக்கும்போது, அப்பொய்ப் பொருளை மெய்ப் பொருளாகக் காண்பதையே மயக்கவுணர்வு எனவும், மெய்ப்பொருளை மெய்ப்பொருளாகப் பார்ப்பதையே மெய்வுணர்வு என்றும் கீதா சாஸ்திரம் போதிக் கின்றது.

மேலும் பொய்யுணர்வை யொட்டி மெய்யுணர்வு என்று சொல்ல வேண்டியிருக்கிறதே தவிர, உண்மை யில் பொய்யுணர்வு உண்டாகாவிடில், அதாவது உதாரணமாகக் கயிற்றில் பாம்பாகப் பார்க்கா விட்டால், கயிற்றைக் கயிருக உணரு என்று சொல்ல வேண்டிய அவகாசமே ஏற்படாது. காரணம்? கயிற்றைக் கயிருகவே காண்பதினுல்.

எனவே இறைவனுக்கு உணர்வதற்கு ஒரு பொருளுமில்லை. ஏனெனில் அவன் எல்லாமாய் எப்பொருளுமாய் இருப்பதால் அன்றே!

## மறவா

உணர்வுண்டேல் மறவுண்டு அன்றே. இறைவனுக்கு உணர்வதற்கு ஒன்றுமில்லை. அதனுல் உணர்ந்ததை மறப்பதற்கு ப்ரசக்தியேயில்லை. அதாவது மறவாத வனே என்று பொருள். மறவா என்று சொன்னதினுல் ஒரு பொருளை இறைவனுனவன் உணர்ந்து அதை மறக்காமல் தன்னுடைய அறிவில் வைத்துக்கொண்டி ருக்கிறுர் என்பது பொருள் அல்ல. உண்மையான பொருளோ வெனில் இறைவனுக்கு உணர்வதற்கு ஒன்றும் இல்லை. அதனுல் மறப்பதற்கும் ஒன்றுமில்லை.

எனவே உணரா—மறவா என்றுல் ஞானமயம் இறைவன் என்பது உண்மையான பொருள்.

## அதிகா

எல்லாவற்றிற்கும் மேலோனே. எல்லா தெய்வங் களுக்கும் தெய்வமாக விளங்குபவனே. அதாவது முருகனைக் காட்டிலும் மேலான தெய்வமே யில்லை என்பது பொருள். இதையே அருணகிரிநாதர் திருப் புகழில்,

அகரமுமாகி அதிபனுமாகி
அதிகமுமாகி அகமாகி

என்று துதிக்கின்ருர்.

சூரபத்மாஸுரனை ஸம்ஹாரம் செய்ய முடியாமல் முப்பதுமுக்கோடி தேவர்கள் சூழ மும்மூர்த்திகளும் ஒன்று கூடி நமக்கு மேலான ஒருவன் தேவை சூரபத்மாஸுரனை ஸம்ஹாரம் செய்ய என்று தீர்மானம் செய்து முருகப்பெருமானையே ஸேனுதிபதியாக தேர்ந்தெடுத்தார்கள். அதன் பின்பு சூரனைஸம்ஹாரம் செய்வதற்கென்றே எல்லா தெய்வங்களுககும் மேலான சக்தியோடு தமது திருக்கரத்தில் வெற்றி வேலை தாங்கி முருகப்பெருமான் விளங்கிவந்த வைபவவிசேஷத்தைப் பார்த்து மும்மூர்த்திகளும் வியப்பினை அடைந்த ஒரு மாபெரும் நிலையையே அதிகா என்ற பதமானது சுட்டிக்காட்டுகிறது.

## அநகா

அகம் என்ருல் பாவம். 'ந' என்ருல் இல்லை. எனவே பாபமில்லாதவனே என்றுபொருள். கர்மாவை யொட்டி ஜன்மாவானது ஏற்பட்டால் அப்பொழுது பிராணிகள் கர்மவினைக்கு உள்ளாவார்கள். எனவே பிராணிகள் நல்வினை தீவினையென்றவைகளுக்கு உள்ளாகவேண்டியிருக்கிறது.

இறைவனேவெனில் கர்மாவையொட்டி பிறப்பதில்லை. பிராணிகள் செய்யும் கர்மாக்களுக்கு பலத்தை கொடுப்பவராக இருக்கிருர். எனவே இறைவன் செய்யும் கர்மாவானது இறைவனுக்கு ஒரு தோஷத்தையும் உண்டுபண்ணுவதில்லை. ஆதலால் இறைவனை அநகா என்ருர்.

## அபயா

பயம் இல்லாதவனே என்று பொருள். த்வைத மானது பயத்தை உண்டுபண்ணுகிறது. இரண்டாவது வஸ்து என்றிருந்தால், அந்த வஸ்துவே பயத்திற்கு காரணமாக பவிக்கிறது. பேதமே பயத்தை தருகிறது. காரணம்? இரண்டாவது வஸ்துவிடமிருந்து துன்ப முண்டாகுமோ என்று எண்ணுவதே பயமாகும்.

பாம்பைப் பார்த்துப் பயமுண்டாகிறது. ஏன்? பாம்பைத் தன்னைக் காட்டிலும் வேருன வஸ்துவாக நினைப்பதால் அல்லவா? அன்னியில் பாம்பி னிடம் விஷமிருக்கிறது என்பதினுல் அல்ல. உதாரண மாகத் தூங்குகிறவன் மேல் ஒரு பாம்பு ஊர்ந்து சென்ருல் தூங்குகிறவன் பயப்படுவதில்லை. ஆனுல் பாம்பினைக்கண்டு முழித்துக் கொண்டிருக்கிறவன் பயப்படுகிருன். காரணமோவெனில் விழித்துக் கொண் டிருக்கும் நிலையில் 'நாம்வேறு–பாம்பு வேறு' என்ற பேத புத்தி உண்டாகிறது. ஆனுல் தூங்கிக்கொண்டி ருக்கும் நிலையில் 'நாம்வேறு–பாம்பு வேறு' என்ற பேதஞானம் உண்டாவது இல்லை. எனவே பேதஞானத் தினுல் பயமும், அத்வைத ஞானத்தினுல் அபயமும் உண்டாகிறது. இறைவனுடைய ஸ்வருபமோ வெனில் அத்வைதமேயாகும். அதாவது இறைவன் எங்கும் எல்லாமாய் நிறைந்திருப்பதால், இறைவனைக் காட்டிலும் வேருன வஸ்து எதுவுமே யில்லை. எனவே இறைவனைப் பயமற்றவனே என்ருர்.

## அமரா

மரணமில்லாத நிலைக்கு அமரநிலை என்று சாஸ் திரங்கள் போதிக்கின்றன. அதாவது இந்நிலையில் மோகமென்பதில்லை, சோகமென்பது இல்லை. பேத

மென்பது இல்லை. அழிவு என்பது இல்லை. இழிவு என்பது இல்லை. இருப்பது ஒன்றே ஒன்றுதான். அது தான் ஆத்மா. ஆத்மாவே ஈச்வரனாக ஆவான்.

அதாவது சென்ற காலம் நிகழ்காலம் வருங்காலம் என்ற மூன்று காலங்களிலும் அழியாத பரம்பொருளே என்று பொருள். எனவே அமரா என்கிறார்.

## அதி காவல

அதி என்றால் பெரிது என்றும் பெரிய என்றும் பொருள். எனவே அதி காவலன் என்றால் பெரியதை ரக்ஷிப்பவன் என்றும் பெரிய ரக்ஷகன் என்றும் தத்வார்த்த ரீதியில் அர்த்தமானது வெளியாகின்றது.

உலகத்தில்பெரியது வேதம். வேதத்தில் சொல்லப் பட்டது அனைத்தும் தர்மமே. தர்மமே எல்லாவற்றிற் கும் மேலான ப்ரமாணமாகும். வேதம் இறைவனுடைய மூச்சாகும். வேதமானது பெரியதைப் பற்றிப்போதிக் கின்றது. பெரிது என்றால் எவ்வளவு பெரிது என்று சொல்லவில்லை. பெரிதிற்குப் பெரிது. அதைவிட பெரி திற்குப் பெரிது என்றுதான் சொல்லிக்கொண்டே வரம்புயில்லாமல் வளர்ந்து கொண்டே போகிறது. அதுபோலவே சிறிது என்று சொன்னால் அதற்கும் சிறிது அதற்கும் சிறிது என்று சிறிதாகிக்கொண்டே போகிறது. எனவே அணுவிற்கு அணுவாயும் பெரிதிற் குப் பெரிதாயும் ஆகிக்கொண்டேயிருக்கிறது எண்ண மானது.

ஆதலால் அதி என்ற பதமானது, எதைச் சொல்லு கிறோமோ "அதைவிட" என்ற பதத்தில் போதிக்கப்படு கின்றது. எனவே அதிகாவல என்பதினை பெரிய ரக்ஷகன் என்ற அர்த்தத்தில் சொல்லும் பொழுது

விளங்கும் பொருளோ வெனில், எல்லாவற்றிற்கும் மேலான ப்ரமாணமான நான்கு வேதங்களை ரக்ஷிப்பவன் என்பதேதாகும். இந்த ரகஸ்யத்தை பகவத்கீதையில்,

யதா யதாஹி தர்மஸ்ய
க்ளாநிர்பவதி பாரத
அப்யுத்தானமதர்மஸ்ய
ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம்

என்று கிருஷ்ணபரமாத்மா உபதேசிக்கிறார். அதாவது அதர்மமானது ஓங்கியும் தர்மமானது தாழ்ந்தும் உலகத்தில் ஏற்படும் ஸந்தர்ப்பங்களில் நான் அவதாரம் செய்து மேலான பிரமாணமானதாயும் தர்மஸ்வரூபமாயுமுள்ள, நான்கு வேதங்களையும் ரக்ஷிக்கின்றார். ஆதலால் 'அதிகாவல' என்றால் வேதரக்ஷகனாக ஆகிறார். வேதத்தை ரக்ஷித்தால்தான் உலகத்தில் யாகங்கள் தர்மநெறியில் நடைபெறும். யாகங்கள் நடந்தால்தான் தேவர்கள் திருப்தி அடைவார்கள். தேவர்கள் திருப்தியடைந்தால்தான் இப்பூமியில் எல்லாப் பொருள்களும் சுபிக்ஷமாக விளங்கிக் கொண்டு லோகம்முழுவதும் ஒருவிதக் குறைவுமில்லாமல் விளங்கி வரும்.

வேதத்தை ரக்ஷிக்கும் பொருட்டு காலங்களை அனுஸரித்து கடவுளானவர் பல ரூபங்களில் அவதரிக்கிறார். உதாரணமாக ஈச்வரனேயில்லை என்ற நாத்திக வாதமானது தலைதூக்கி நிற்கும்பொழுது, அவனில்லையேல் அணுவும் அசையாது என்பதினை நிலைநாட்ட நாயன்மார்கள், ஆழ்வார்கள், பக்தர்கள் மூலமாக வேதத்தைக் காப்பாற்றுகிறார்.

வேதத்திலுள்ள கர்மகாண்டத்தை ஸ்தாபனம் செய்யும் பொருட்டு மஹாமகிமை தங்கிய குமாரில பட்டர் மூலமாகவும், அப்படியே வேதத்தில் சொல்லிய ஞானகாண்டத்தை ஸ்தாபனம் செய்யும் பொருட்டு ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதாள் மூலமாகவும் அவதரித்து ரக்ஷிக்கின்ருர்.

இதைப்போலவே அண்ட சராசரங்களுக்குப் பெரிய காவலஞகவும் இருக்கிருர். ஏன்? நம்மிடமுள்ள பெரிய செல்வத்தை ஒருவரும் கொள்ளைகொண்டு போகாமல் இருக்க. பெரிய செல்வம் என்பது என்ன? இதனை அருணகிரிநாதரே தமது திருப்புகழில்,

நீவே றெனு திருக்க
நான்வே றெனுதிருக்க
நேராக வாழ்வதற்குன்
அருள் கூற

என்று வேண்டுகின்ருர். அதாவது, பரம்பொருளே ஆத்மாவாக ஆகும். இந்த உயர்ந்த அத்வைத நிலையி ருந்து, இறங்கி வந்து 'ஈச்வரன் வேறு—நான் வேறு' என்ற பேதபுத்தியினை அடைவதே நாம் காவலன் அற்றவஞக இருக்கிருேமென்பது. பெரிய நிலையாகிய அத்வைத நிலையிலிருந்து சிறிய நிலையாகிய பேத நிலக்கு நம்மைக் கொண்டுவராமல், பெரியநிலையாகிய அத்வைத நிலையிலேயே நம்மை நிறுத்தி நம்மை அத்வைத பாவத்திலேயே ஈச்வரனை உபாஸிக்கும் ஒரு பெரிய பாக்கியாதிசயத்தை முருகப்பெருமான் அருளிச் செய்வதால், முருகப்பெருமான் பெரிய ரக்ஷகஞக விளங்குகிருர்.

எனவே முருகப்பெருமாஞனவர் பெரிதாகிய ப்ரமாணமாகிற வேதங்களில் சொல்லப்பட்ட பெரிய

அத்வைத ஞானத்தை ஸதாகாலமும் ரக்ஷித்துக்கொண் டேயிருப்பதால் அருணகிரிநாதர் முருகனை 'அதிகாவல' என்று சொல்கின்றார்.

தவிர தேவயானையானவள் பிறந்து வளர்ந்த ஸ்தலமாக அமராவதி எனற நகரமானது இருப்ப தாலும், தேவயானைக்கு அமராவதியில் சொல்ல முடியாத பற்றுதலிருப்பதினாலும், அந்தத் தேவயானை யின் இச்சைப்படி அமராவதி என்ற நகரத்தையும் ரக்ஷித்து வருகிறார். எனவே ஸகுணவர்ணனையில் அமராவதி காவல என்றும் சொல்லலாம்.

## சூர பயங்கரனே

சூரபத்மாஸுரனுக்குப் பயத்தை விளைவித்தவனே என்று பொருள். மும்மூர்த்திகளுக்கும் முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் சூரபத்மாஸுரன் பயத்தை உண்டு பண்ணிக்கொண்டிருந்தான். அந்த சூரபத் மனுக்கு மாபெரும் பயத்தை ஒவ்வொரு விநாடியும் இடைவிடாமல் போர்க்களத்தில் செய்துகொண்டே இருப்பவர் முருகப்பெருமான். எனவே சூரனுக்குச் சூரனாக விளங்கி வருகிறார் முருகப்பெருமான். இய மனைப் புல்லிற்கு சமமாகத் தள்ளிவிட்டு, இயமனிட மிருந்து பயமில்லையென்று எண்ணிக் கொண்டிருந்த சூரனுக்கு செல்வக்குமரன் யமபயத்தை உண்டு பண்ணிவிட்டார். பார்ப்பதெல்லாம் சூரபத்மனுக்கு இயமனாகவே தோன்றின. எனவே முருகனை சூரபயங் கரனே என்றார்.

இவ்விதம் பத்து விதமாக செல்வக்குமரனின் அஸாதாரண வைபவத்தையும் சக்தி விசேஷத்தையும் இப்பாடலானது போதிக்கின்றது. நாம் நாக்கினால் புகழவேண்டியது செல்வக்குமரனின் குணாதிசயங்களே

யாகும். எவ்விதம் புகழவேண்டும், எவ்விதம் எண்ண வேண்டும்? என்பது மனதினுடைய தர்மம். மனது நினைத்தபடி நாவானது வாழ்த்துகின்றது.

ஆதலால் ஏ ஜனங்களே நமது உடலை முருகப் பெருமானுக்கு ஆலயமாகச் செய்து அதில் முருகனை எல்லாவற்றிற்கும் மேலான தெய்வமென்று ப்ரதிஷ்டை செய்து, 'நாமும்-ஈச்வரனும் ஒன்று' என்ற அத்வைத ஞானத்தினுல் போதிக்கப்படும் ராஜயோகத்தினுல் செல்வக்குமரனை உபாஸித்து வருவோம்.

இவ்வித உபாஸனையினுல் நாம் பயமற்றவர்களாகவே இருந்து, முடிவில் முருகப்பெருமான் திருவருளை அடைந்து ஸகல ஐச்வர்யங்களுடன் விளங்குவோமென்பதில் ஐயமில்லை. எனவே நாக்கினுல் செல்வக்குமரனை வாழ்த்துங்கள். துதியுங்கள் - புகழுங்கள்- போற்றுங்கள்-நினையுங்கள்-அநுபூதியைத் திருப்பித் திருப்பிப் பாடுங்கள். இதையே பாடும் பணியாகக் கொள்ளுங்கள். இதையே மானிடப் பிறவியின் பயனுகவும் எண்ணுங்கள்.



# வேற்படையினுல் வறுமையை அழித்தல்

## 19



வடிவும் தனமும் மனமும் குணமும்
குடியும் குலமும் குடி போகியவா
அடி அந்தமிலா அயில்வேல் அரசே
மிடியென் றொருபாவி வெளிப்படினே.

### பதவுரை

*அடி—அடியும் அதாவது ஆதியும் ஆரம்பமும், அந்தம்—அந்தமும் அதாவது முடிவும், இலா—இல்லாத, அயில்வேல்—கூர்மையான வேற்படையை (தாங்கியிருக்கிற), அரசே—அரசனே — அதாவது இறைவனே, மிடி என்று—வறுமை என்று, ஒரு பாவி—ஒரு பாவியானவன், வெளிப்படினே—(ஒருவனிடத்தில்) தோன்றுவானேயாகில், வடிவும்—(அவனிடத்தில்) உள்ள உடல் அழகும், தனமும்—செல்வமும், மனமும்—(தூயமான) மனமும், குணமும்—சிறந்த குணமாகிய நன்நடத்தையும், குடியும்—நல்ல குடியில் பிறந்த*

தன்மையும், குலமும்—உயர்ந்த குலத்தில் பிறந்த பெருந் தன்மையும், குடிபோகிய—(அவனை விட்டு விட்டு நீங்கி) தெரியாமல் வேறிடம் சென்ற விதம், ஆ! — இவ்விதம் வறுமையினால் அனைத்தும் அழிந்து போனது என்னே ஆச்சர்யம்!

**தாத்பர்யம்:**

அநேக ஜன்மங்களில் செய்யப்பட்ட தவத்தின் பயத்தினாலும் புண்ணியத்தின் மகிமையினாலும், பிராணிகள் அரிதான மானிட ஜன்மாவையடைகிறார்கள் அதிலும் இந்த அரிதாகிய மானிட ஜன்மாவில் ஒருவன் அழகு — செல்வம் — நல்ல மனம்—நல்ல குணம்—நல்குடி—அப்படியே உயர்ந்த குலத்திலும் தோன்றி ஸகல வைபவங்களுடன் செல்வக்குமரனை வாழ்த்தி வணங்கி வருவானாகில் அவனைவிட இவ்வுலகில் பாக்கியசாலி யாருமே இல்லையென்று சொல்லலாம்.

இந்நிலையிலிருப்பவர்களைத் தர்மசீலர்கள் என்றே சொல்ல வேண்டும். இறைவனுடைய அருள் இவர்களிடத்திலிருக்கும் வரையில் இவர்களுக்கு ஒருவித மான குறைவும் கிடையாது.

ஆனால் மனிதர்களோ வெனில் காமம்–க்ரோதம்–லோபம்—மோகம்—மதம்—மாத்ஸர்யம் இவைகளினால் சூழப்பட்டவர்களாகயிருக்கின்றபடியால், ஈச்வரசிந்தனையில் மனதைச்செலுத்தாமல் உலக சிந்தனையிலேயே மனதைப் பறிகொடுத்து விடுகிறார்கள்.

தவிர, நாம் ஸர்வஸம்பத்துடன் இருக்கிறோமே. இதற்கெல்லாம் காரணம் செல்வக்குமரன் அன்றோ! அவனுடைய பெருமையையும் மகிமையையும் நாம் ஸதாகாலமும் சொல்லிக்கொண்டே இருக்க வேண்டாமா? ஈச்வர சிந்தனையில் நம் மனதைச் செலுத்த வேண்டாமா. இன்று நிலைத்திருக்கும் இச்செல்வம்

நாளை நிலைத்திருக்குமா. செல்வத்தின் பயன் செல்வக் குமரனை அடைவற்கு மூலகாரணமான ஸத்கர்மாவில் செல்வத்தினைப் பயன்படுத்துவதற்கு அல்லவா.

மேலும் நாம் இன்று நல்ல நிலையில் ஒருவிதக் குறைவுமின்றி இருக்கிறோமென்றால், அனைத்திற்கும் மூலகாரணம் செல்வக்குமரன் அன்றோ! அவன் அருளால் அன்றோ நாம் இதனை அடைந்தோம் என்று நினைத்துக்கூட பார்ப்பதில்லை.

மேல் கூறியவண்ணம் நினைக்காது போனாலும் போகிறார்கள். ஆனால் மிகவும் முக்கியமான தொன்றை மனிதர்கள் நினைத்தே பார்ப்பதில்லை. அது எது? செல்வக்குமரனின் மாபெரும் சக்தியினைப்பற்றி.

எல்லாம் தந்து வாங்கவல்லான்

அன்றோ! செல்வக்குமரன். தருபவனும் அவன். திருப்பி எடுத்துக்கொள்பவனும் அவன். அடிமையை அரசனாகச் செய்வான். அரசனை அடிமையாகச் செய்வான். கோபுரத்தைக் குப்பைமேடாகச் செய்வான். குப்பை மேட்டைக் கோபுரமாகச் செய்வான்.

வாராத செல்வத்தை வரவழைப்பான். வந்த செல்வத்தை நிலைநிறுத்துவான். அப்படியே நிலைநிறுத்தின செல்வத்தைப் பிடுங்கிக் கொள்வான். எனவே அவன் அருள் இல்லையேல் எதுவுமே இல்லை அன்றோ!

ஆக செல்வக்குமரன் செல்வத்தை நமக்கெதற்காகத் தருகிறான்? நாம் வாழ்நாள் முழுவதும்,

அன்னவிசாரம் அதுவே விசாரம்

என்று கழிக்காமல் இருப்பதற்கு அல்லவா? ஆதலால் இறைவனின் அருளினால் செல்வமடைந்த எல்லாப் பிராணிகளும் ஸதாகாலமும் ஆறுபடை வீட்டினை

யுடைய அயில்வேல் அரசனுகிய முருகப்பெருமானை ஸதாகாலமும் வாழ்த்தி வணங்கி வாழ்நாள் முழுவதும் முருகப்பெருமானின் சிந்தனையிலேயே கழிக்க வேண்டு மென்பது ஸித்தாந்தமாகிறது. அதுவேதான் நாம் அரிதாகிய மானிடஜன்மாவையடைந்ததின் பயனுகும்.

ஆதலால் மானிடப்பிறவியில் எவர் இறைவனை வாழ்த்தி வணங்காமல் இருக்கின்ருர்களோ, அவர்களி டத்தில் வறுமையென்று சொல்லப்படும் ஒரு பாவி தோன்றுவான்.

வறுமையென்ற ஒரு பாவி ஒருவனிடத்தில் தோன் றிஞல் அவன் எக்கதியை அடைவான் என்பதினையும், அதிலிருந்து அவன் கடைத் தேறுவதற்கு உபாயத் தையும் அருணகிரியார் இந்தப் பாட்டில் சொல்கின்ருர்.

இறைவனுடைய அருளானது நம்மை விட்டு அகலுமாகில் அதாவது இறைவனுடைய அருள் இல்லா மையே வறுமையென்று சொல்லப்படும். அவ்வறுமை யையே ஒரு பாவியென்ருர். பொருளோவெனில் ஒரு வன் செய்யும் பாபகர்மாவே அவனிடத்தில் வறுமை ரூபமாகத் தோன்றுகின்றது.

கொடிது கொடிது வறுமை கொடிது

என்று ஒளவைத்தாய் சொல்லுகிருர்.

அப்படியே, வறுமையானது யாரை வந்தடையும் என்பதினைப் பரமஞானியான பட்டினத்தடிகளும்,

ஆற்ருேடு தும்பை அணிந்தாடும்
அம்பலவாணர் தம்மைப் போற்ருதவர்க்
கடையாள முண்டே இந்தப் பூதலத்தில்,
சோற்ருவியற்றுச் சுகமற்றுச் சுற்றத்

துணியுமற்று ஏற்ருலும் பிச்சை கிடை
யாமல் ஏக்கற்றிருப்பர்களே.

என்று சொல்கின்ருர். கடவுளை வணங்காதவர்களுடைய கதியோவெனில் மேல் கூறியவண்ணம் அல்லல் படுவதேயாகும்.

ஆதலால் ஒருவனிடம் வறுமை தோன்றுமாளுல் அவ்வறுமையானது அவனிடத்திலுள்ள செல்வங்களாகிய அழகு - செல்வம் - மனம் - குணம்- குடியின் பெருமை-குலம் ஆகிய எல்லாம் நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வந்து முடிவில் வறுமையிலுள்ளவனை ஒருபாவி போல் உலகத்தினருக்குத் தோன்ற வைக்கும். என்னே வறுமையின் கஷ்டம்!

வறுமையானது முதன் முதலில் ஒருவனுடைய மனதை நிம்மதியற்றதாகச் செய்கிறது. அதனுல் மனிதன் மனோவியாதியை அடைகிருன். மனக்கிலேசத்தையடைந்து தன்னிடம் இல்லாமையை எண்ணி எண்ணி மனம் ஏக்கமுற்றவனுக ஆகிருன். அவனுடைய மனமானது விவேகமற்றதாக ஆகிறது. உற்சாகமற்று ஊக்கமற்று ஈச்வர சிந்தனையற்று, உறக்கமற்று ஸதாகாலமும் சிந்தனையிலேயே இருந்து வருவான்.

இதனுல் வேண்டியது வேண்டாதது என்ற பேத புத்தியை அடைந்து, தன்னிடமுள்ள சிறந்த குணமாகிய பண்பினை இழக்கின்ருன். நல்ல போற்றத்தக்க குணங்கள் மனிதனைவிட்டு அகலுகின்றன. பரந்தமனப் பான்மையாகிய சிறந்த குணம் போய் குறுகிய மனதினையுடையவனுக ஆகி, தானம், தர்மம் செய்யும் கார்யங்களில் 'செய்தது போதும்-செய்தது போதும்' என்று சொல்லிக் கொண்டே இருப்பான்.

எனவே சிறந்த குணமானது ஒருவனிடமிருந்து போய் விட்டால் அவன் எதையும் செய்யத்துணிந்து முடிவில் நாணமற்றவனுக ஆகிருன். தான் நல்ல குடியில் பிறந்து வளர்ந்து வந்தவனுயிற்றே என்பதினை எண்ணமாட்டான்.

எக்குடியில் பிறந்தால் என்ன? குலத்திஞல் ஒரு வன் பெரியவனுக ஆகமுடியுமா? என்றெல்லாம் விவேகமற்றுப் பேசுவான். தனது வர்ணுச்ரமதர்மங் களைவிட்டு நீச ஜாதியில் பிறந்தவர்களுடன் சல்லாபம் செய்துகொண்டு காலம் கழித்து வருவான். உயர்ந்த குலத்திலும் உயர்ந்த குடியிலும் பிறந்தவனுகயிருந் தாலும் அதர்மத்தையே செய்துவருவான்.

நாளடைவில் பாபகர்மாவைச் செய்து வறுமையைப் போக்கடிக்க முயல்வான். அன்பாகப் பேசுவது—கபட மற்றுப் பேசுவது—தர்ம சிந்தனையில் நிற்பது—தானம் தர்மம் செய்வது—அடியார்களுக்கு அமுதளிப்பது—இடைவிடாமல் இறைவனைத் துதிப்பது — அடியார் களுக்குத் தொண்டு செய்வது–ஸத்தியத்தையே கடைப் பிடிப்பது—எல்லா உயிர்களிடத்திலும் இணையிலா அன்பினைக் காட்டித் துன்பம் செய்யாமலிருப்பது... குலதர்மத்தையும் தான் பிறந்த குடிதர்மத்தையும் ரக்ஷிப்பது...ஆகிய எல்லா தர்மங்களையும் கைவிட்டு விடுவான். இவ்விதம் எல்லாவற்றையும் வறுமை யானது உறிஞ்சிவிடுகிறது.

இதன் விளைவாக மனிதனிடத்தில் பாபகர்மா வானது வந்து குடிகொள்கிறது. பாபகர்மாவே வறுமை யின் ஸ்வரூபம். எனவே வறுமையைப் பாவி என்ருர். அதிலும் ஒரு பாவி என்ருர்.

பாபத்தை செய்பவன் பாவி எனப்படுவான். பாபங்களோவெனில் கணக்கிட முடியாமல் எண்ணற்ற

கோடிகள் இருந்துவருகின்றன. இவைகளில் வைத்து ஐந்து பாபங்களே மேலான பாபங்கள் ஆகும். இவ் வைந்து பாபங்களோவெனில் கள் குடிப்பது - ஸ்வர் ணத்தைத் திருடுவது - குருவினுடைய மனைவியை சம்போகம் செய்வது - ப்ரம்மஹத்தி ஆத்மஹத்தி என்று சாஸ்திரமானது போதிக்கின்றது. இந்த ஐந்து மஹா பாபங்களை எவன் செய்கிருனே அவனே பஞ்சப் பாதகன் ஆவான். இந்த ஐந்து பாபங்களுக்குப் ப்ராயச்சித்தமே கிடையாது. பாபத்தின் பலனை அனு பவித்தேதான் ஆகவேண்டும்.

இதனையெல்லாம்விட பெரிய பாபம் செல்வக் குமரனை நெஞ்சுருகி நினைக்காமல் இருப்பது. அவன் கழலைப் போற்ருமலும் துதிக்காமலுமிருப்பது. எனவே செல்வக்குமரனை போற்ருமலிருப்பது என்பதே பாப கர்மாவாகவும் பாபகர்மாவை செய்ததாகவும் ஆகின் றது! இவ்விதம் முருக சிந்தனையில்லாமல் இருக்கும் ஒவ்வொருவனும் பாபியாக ஆகிருன். அந்தப் பாபியி னுடைய ஸ்வரூபமே 'மிடி' என்று சொல்லப்படும் வறுமையாகும்.

எனவே வறுமையென்பது இல்லாமையே ஆகும், எது இல்லாமையாகும்? இறைவனுடைய பெருமை நம் மிடத்தில் இல்லாமல் ஆகும். அதாவது இறைவ னுடைய வடிவழகு - இறைவனுடைய செல்வம் - இறை வனுடைய மனம் - இறைவனுடைய குணம் - இறைவ னுடைய குலமும் நம்மிடத்திலிருந்து இல்லாமல் ஆகிவிடும்.

வறுமை ஒருவனிடம் தோன்றி அவனைப் புற்று நோயினைப்போல் அழிக்கத் தொடங்குகையில் முதன் முதலில் பசியையே அஸ்திவாரமாக வைத்துக்

கொண்டு ஆரம்பிக்கின்றது. இதனையே ஔவைத் தாயானவள்

கொடிது கொடிது வறுமை கொடிது

என்று சொல்கின்றார். அதுபோலவே

பசிவந்திடப் பத்தும் பறந்துபோம்

என்பது அனுபவஸித்தமுமாகும்.

ஆதலால் பசியைத் தணித்துக் கொள்ளும் விஷயத்தில் ஒருவனுக்கு வறுமை உண்டானால் அவ் வறுமையானது அவனை வாட்டி வதக்கி நாளடைவில் அவனுக்கு வியாதியை உண்டுபண்ணி அவனுடைய உடலழகினை யெல்லாம் போக்கடித்து, அவனை ப்ரம்மஹத்தி பாபத்தினை செய்தவன்போல மாற்றி விடுகிறது.

அப்படியே செல்வத்தில் வறுமை—எண்ணுவதில் வறுமை-குணத்தில் வறுமை – நற்குடியில் பிறந்தது என்பதில் வறுமை-உயர்ந்த குலத்தின் ஒழுக்கத்தில் வறுமை—ஞானத்தில் வறுமை ஆக எல்லா வறுமை களும் வந்தடைகின்றன. யாரிடம்? இறைவனின் அருளைப் பெறாதவனிடம்.

எனவே வறுமை வாழ்விலே யாருக்கும் வரக் கூடாது. வந்தால் ஸத்கார்யம் செய்யமுடியாது, இக பர சுகத்தை அடைய முடியாது.

வறுமைக்கு நிகராக ஒரு பாவியையும் சொல்ல முடியாது. வறுமையானது உலகத்தினையே அழித்து விடும். ஒரு ராஜ்யத்தில் வறுமையுண்டானால் அவ் வறுமையினாலுண்டாகும் துன்பமானது அந் நாட்டு அரசனையே முடிவில் அழித்துவிடும்.

வறுமையை வரவழைத்தே இறைவன் பக்தர் களுடைய பெருமையை உலகில் நிலைநாட்டுகிருர். புண்ணிய மூர்த்திகளாகத் திகழும் அறுபத்து மூன்று நாயன்மார்களின் பெருமைகளை எடுத்துச் சொல்லும் பெரிய புராணத்தைப் பாராயணம் செய்தால், அப்பொழுது தெரியும் வறுமையானது எப்பேர்ப் பட்டதென்று.

பக்தர்களை சோதிக்கும் விஷயத்தில் வறுமையையே அளவு கோலாகவைத் கொண்டிருக்கிருர் பகவான். ஆனுல் துக் அடியார்களோவெனில் ஈச்வர பக்தி யையே அளவு கோலாக வைத்துக் கொண்டு, இறைவனின் அளவுகோலா கிய வறுமையை அளப்பது மல்லாமல் முடிவில் இறைவனையே அளந்துவிடு கிருர்கள்.

உதாரணமாக எண்ணிலா அருந்தவத்தோராகிய விஸ்வாமித்திர மஹர்ஷி யானவர் சூர்ய குலத்திற்கே திலகமாக விளங்கிக்கொண்டிருந்த அரிச்சந்திரனை ஒரு பொய் சொல்லும் பொருட்டு அவருக்குவறுமையை வரவழைத்தார். இதன் காரணமாக அரிச்சந்திர மஹாராஜாவோவெனில் தமது கையில் தர்மஸ்வ ருபமாய் தாங்கியிருந்த செங்கோலினை விட்டு விட்டு, படிப்படியாக இறங்கி முடிவில் அடிமையாகி சுடு காட்டில் நின்று சுடர்கோலைத் தாங்கி நின்ருர். முடிவில் தமது அன்புக்குரிய மனைவியும், பட்ட மகிஷியுமாயுமுள்ள சந்திரமதியைத் தமது கையினுலேயே வாளினுல் வெட்டி வீழ்த்த முன்நின்ருர்

இதனைக் கண்ட மும்மூர்த்திகளும் உடல்சிலிர்த்து நடுநடுங்கினார்கள்.

வறுமையை வரவழைத்து அதன் மூலமாக மாபெரும் வீரனான அரிச்சந்திரனைப் பொய் சொல்ல வைப்பேன் என்று அரிச்சந்திரனை நினைக்க முடியாத அளவில் அல்லல் படுத்தினார் விஸ்வாமித்திர மஹரிஷியானவர். ஆனால் அரிச்சந்திரன் அல்லல் பட்ட போதிலும் மனம் தளர்ந்தான் இல்லை.

காரணமோவெனில், அன்று செங்கோலினைக் கையில் பிடித்திருக்கும் பொழுது அதனை சக்திவேல் எனக் கருதி கையில் தாங்கி வந்தார்.

சுடுகாட்டில் சுடர்க்கோலைக் கையில் பிடித் திருக்கும்போது அதனைச் சுடர்வேல் எனக் கருதி தாங்கி நின்றார்.

இமயமலையினைப்போன்ற அசைக்கமுடியாத மன உறுதியும், குன்றாத ஈச்வர சிந்தனையும், கொண்ட ஸத்யஸ்வரூபியாகிய அரிச்சந்திரனை வறுமைதான் என்ன செய்ய முடியும்? மும்மூர்த்திகளையும் அடிபணிய வைக்கும் சுட்டெரிக்கும் சுடர்வேலையே அரிச்சந்திர மஹாராஜாவானவர் சுடர் கோலாக தம் கையில் தாங்கினார்.

ஆதலால் இதிலிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டியது யாதெனில் கர்மவினையை ஒட்டியே வறுமையானது நம்மை வந்தடைகிறது. இந்த வறுமையாகிய ஒரு பாவியை ப்ராயச்சித்தத்தினால் போக்கடிக்க முடியாது. பஞ்சபாதகங்கள் செய்த பாவியையும் மன்னித்து விடலாம். ஆனால் வறுமையாகிய பாவியை மட்டும் மன்னிக்கவே முடியாது. இதனால்தான் பாட்டில்

மிடி என்று ஒரு பாவி வெளிப்படினே

என்கின்ருர். வறுமை வருமேயாகில் அவ்வறுமை யுடனேயே மனிதன் அனைத்தும் இழந்து அழிகின்ருன்.

மேலும் மிடி என்று ஒரு பாவி வெளிப்படினே என்றதினுல் அதாவது வறுமை என்ற ஒரு பாவி வெளிவருவானேயானுல் என்று சொன்னதினுல் அந்த மிடி என்ற பாவி இதுவரையிலும் உள்ளடங்கி தன்னுடைய கொடுமையைக் காட்டாமல் இருந்தான் என்பதேதாகுகும். இதுவரையிலும் உள்ளடங்கி இருந்ததிற்குக் காரணமோ வெனில் பிராணிகள் ஈச்வர சிந்தனை செய்து வருவதே தாகுகும். ஈச்வர சிந்தனை யானது வறுமை என்ற பாவியை 'வெளியே வராதே-வெளியே வராதே' என்று அடங்கியிருக்கச் செய்கிறது. இதனுல் ஒருவனிடத்தில், என்று ஈச்வர சிந்தனை குறைந்து, அதர்மமானது காணப் படுகின்றதோ, அந்த க்ஷணமே அவனிடத்தில் வறுமை என்ற பாவி வந்து குடிகொள்கிருன்.

எனவே ஒருவனிடம் வறுமை வருவதற்கும், வந்த வறுமை போவதற்கும் அவனே காரணமாகிருன். ஒருவன் ஈச்வர சிந்தனையிலிருந்து நழுவி உலகமாயை யில் தனது வாழ்நாளைக் கழிப்பானேயாகில் அவனை நாடி வறுமை என்ற பாவியானவன் வருகிருன். பகவத் பக்தி பண்ணிவருகிறவர்களிடத்தில் நமக்கு வேலையில்லையென்று வறுமையாகிற பாவி போய் விடுகிருன்.

ஆனுல் ஒன்று, பக்தியில்லாதவனிடம் வறுமை என்ற பாவி தானுகவே வந்து, அவனுடைய குடி-

குலம்-அழகு - மனம் - குணம் - தனம் ஆகிய அனைத்தையும் அழித்து முடிவில் அவனையும் அழிக்கிறான்.

இதற்கு மாறாக அடியார்களிடத்தில் வறுமை என்ற பாவி ஸ்வயமாக வருவதில்லை. இறைவனால் அனுப்பப்பட்டே வருகிறான். காரணமோவெனில், அடியார்களின் பெருமையை உலகில் நிலை நாட்டுவதற்கு. அடியார்களிடத்தில் வறுமை என்ற பாவி சக்தியற்றவனாகவே ஆகிறான். வறுமை என்ற பாவியை அடியார்கள் சுடர்வேலின் ஸ்மரணத்தினால் சுட்டெரித்து விடுவார்கள். அருள்வேலினையே நினைந்து நினைந்து மனம் மகிழ்வார்கள். செல்வக் குமரனை சிந்தித்த வண்ணமாய் சிவப்பழமாய் விளங்குவார்கள் அன்றோ !

ஆதலால் வறுமை என்ற ஒரு பாவியை மட்டும் போக்கடிப்பதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அவ்வழியோவெனில் அடி அந்தமிலா அயில்வேலினையும், அந்த வேற்படையைத் தமது திருக்கரத்தில் தாங்கிவரும் செல்வக்குமரனையும் ஸதா காலமும் ஸ்மரணம் செய்து கொண்டிருப்பதே யாகும், வேல் ஸ்மரணையினால் முருகனின் அருளைப்பெற்று வறுமை என்கிற பாவியை வேருடன் வெட்டி வீழ்த்தலாம். அத்தகைய வேலினைப் பாட்டில்

அடி அந்தம் இலா அயில் வேல்

என்று புகழ்கின்றார் அருணகிரிநாதர்.

அடி என்றால் ஆரம்பம். அந்தம் என்றால் முடிவு. அயில் என்றால் கூர்மை, வேல் என்றால் வேற்படை, எனவே ஆரம்பமிருந்தால் முடிவு உண்டு. முடிவிருந்தால் ஆரம்பம் உண்டு. ஆரம்பமும் முடிவுமில்லாத

முருகப்பெருமான் ஆரம்பமும் முடிவுமில்லாத கூர்மையான வேற்படையைத் தாங்கி விளங்கி வருகிருர். முருகப்பெருமான் ஒருவனுல்தான் அடி அந்த மிலா அயில்வேலேக் கையில் தாங்கமுடியும். இதர தெய்வங்களினுல் முடியாது என்பதனே எடுத்துக் காட்டவே பாட்டில் 'அரசே' என்று அழைக்கின்ருர்.

இம்மாபெரும் இறைவனின் சக்தியை வியந்து ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

ஆதியும் அந்தமும் இல்லா
அரும் பெருஞ் சோதியை

என்று புகழ்ந்து போற்றுகின்ருர்.

ஆதலால் 'அடி அந்த மிலா அயில்வேலே' அடி அந்த மிலா முருகப்பெருமாஞுவார். வேலினுக்கும் முருகனுக்கும் வித்தியாசம் இல்லே. இரண்டும் ஒன்றே தான் ஆகும். ஒன்று சக்தி மயம். ஒன்று அருள் மயம். இறைவன் அருள்மயம், வேல் சக்திமயம். அதனுலேயே 'அயில் வேல்' என்ருர். அதாவது கூர்மையான வேல் என்ருர். கூர்மையானது என்ற விசேஷணம் வேலின் அத்யாச்சர்யகரமான சக்தி விசேஷத்தை எடுத்துக்காட்டவே ஏற்பட்டது.

ஆகையா.ல் அயில்வேல் என்ருல் கூர்வேல் என்று பொருள். கூர்வேல் என்று சொல்லும் பொழுதே ஊடுருவிச் செல்லும் தன்மையை நினேவூட்டுகிறது. எனவே அயில்வேல் என்ற பதத்திஞல் வேலின் பலவிதமான வீரரஸத்தைப் புகழ்கின்ருர். அயில்வேலே செஞ்சுடர்வேலாகவும், சுடர்வேலாகவும், ஞானவேலாகவும் விளங்கிவருகிறது. இத்தகைய மஹிமையுள்ள வேலேத் தமது திருக்கரத்தில் தாங்கி

வரும் செல்வக்குமரனே எல்லா தெய்வங்களுக்கும் மேலான தெய்வமாகும் என்பதினுல் 'அயில் வேல் அரசே' என்ருர்.

ஆதலால் வறுமையினுல் கஷ்டப்படுபவர்கள் வறுமை என்ற பாவியைக் குத்திக்கொன்று அருகில் வரவொட்டாமல் செய்வதற்கும், வறுமையினுல் கஷ்டப்படாதவர்கள் வறுமை என்ற பாவி தங்களிடம் வராமலிருப்பதற்கும் அடி அந்தமில்லாத அயில்வேலேயும், அவ்வேலினேத் தாங்கி வரும் செல்வக்குமரனேயும் ஒன்ருகப் பாவித்து அல்லும் பகலும் இடைவிடாமல் பக்தி செய்து வருவார் களேயாஞல் அவர்களிடத்தில் வறுமை என்ற பாவி ஒரு காலத்திலும் வரமாட்டான். வருவதற்கும் நடு நடுங்குவான்.

இதனுல்தான் அநுபூதியை,

ஆடும் பரிவேல் அணிசேவல் எனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்

என்று தொடங்கினுர்.

செல்வக்குமரனின் வேலே உபாஸித்து வரும் பக்தர்களேத் தரித்திரம் வந்து அணுகாது. மஹாலக்ஷ்மியானவள் அவர்களுடைய க்ருஹத்தில் தாண்டவம் ஆடுவாள். முருக பக்தர்களுடைய இல்லத்தில் லக்ஷ்மீகடாக்ஷமானது பொங்கி வழிந்து கொண்டிருக்கும். மூதேவிபோய் மஹாலக்ஷ்மியாகிய ஸ்ரீதேவியானவள் வீட்டில் மங்களவதியாய் நிறைந்து இருப்பாள்.

செல்வக்குமரனின் கைகளிலுள்ள பொற்சலங்கையும், கால்களில் அணிந்திருக்கும் பொற்சிலம்பும், ஜில் ஜில் என்று ஒலியைப் பரப்பிக்கொண்டு வீடு

முழுவதையும் நிறைந்ததாகச் செய்யும். குமரனின் கால் சிலம்பின் ஒலியினைக்கேட்டு வறுமையாகிய மூதேவி வீட்டை விட்டு ஓடோடிச் சென்றுவிடுவாள்.

எனவே ஒருவன் இந்த வடிவுந்தனமும் என்ற அநுபூதியை மட்டும் இடைவிடாமல் பாராயணம் செய்து வருவானேயாகில், அவன் ஸர்வ ஐச்வர்ய ஸம்பன்னனுகி அதிதேஜோமயமாய் விளங்குவான் என்பதில் சிறிதும் ஐயமில்லை. எனவே வாயாரச் சொல்லுங்கள். 'வேல் முருகா—வேல் முருகா – வேல்—முருகா' என்று. சொல்லிக்கொண்டேயிருங்கள் 'வேல் முருகா வேல் முருகா வேல் முருகா' என்று.

எனவே மானிட ஜன்மாவையெடுத்த ஒவ்வொருவரும் அடையவேண்டியது இரண்டேயாகும். ஒன்று அருள். மற்ருென்று பொருள்.

தவத்தளவே யாகுமாம்
தான் பெற்றசெல்வம்

என்பது ஔவையார் அருள்மொழி. பூர்வ ஜன்மாவில் செய்த தவத்தின் பயனுக வருவதே செல்வமாக இருந்தாலும், அச்செல்வத்தை நாம் நிலையற்றதாகவே அறியவேண்டும்.

நிலையற்றதாகிய உடம்பை வைத்துக்கொண்டுதான் நாம் நிலையுள்ளதாகிய முக்தி நிலையை அடைய முடியும் அல்லவா. ஆதலால் நாம் நிலையற்றதாகிய உடம்பை முக்தியடையும் வரையில் நிலையுள்ளதாக வைத்துக்கொள்ள வேண்டும். வறுமையினுல் உண்டாவது பசி. அடைந்த செல்வத்தினைக் கொண்டு பசியைத் தணித்துக்கொண்டு முக்தி நிலையை அடைய மூலகாரணமாகவுள்ள இந்த

உடம்பை நிலையுள்ளதாகச் செய்து கொண்டு, ஞானேந்திரியம், கர்மேந்திரியம், மனஸ்–வாக்கு-இந்த உடம்பு இவைகளைத் துணையாகக் கொண்டு என்றும் நிலையுள்ளதாகிய செல்வக்குமரனின் திருவருளைப் பெற யத்தனம் செய்யவேண்டும்.

எனவே தவத்தின் பயனுக நாம் அடைந்திருக்கிற உடல் அழகும்–செல்வமும்–சிறந்த மனமும்–சீலமான குணமும்–உயர்ந்த குடியில் பிறந்த தன்மையும்–உயர்ந்த பண்பினைக்கொண்ட குலதர்மத்தையும் கொண்டு, எல்லாம் வல்ல முருகப்பெருமானின் திருக் கரத்தில் அடியும்–அந்தமும் இல்லாமல் கோடிசூரிய னுக்கொப்பாக ஜ்வலித்துக்கொண்டிருக்கும் வேற் படையை இடைவிடாமல் நெஞ்சில் நிலைநிறுத்தி வாயார வாழ்த்தி வணங்கி வழிபடவேண்டுமென்பதே இப்பாடலின் ஸாராம்சமாகும். அப்பொழுதுதான் நாம் வறுமையாகிய பாவியை வேற்படையினுல் சுட்டெரித் துத்தள்ளி நமது உள்ளத்திலும் இல்லத்திலும் செல்வக் குமரனை மாபெரும் செல்வமாக வைத்துக் கொள்ள முடியும்.

எனவே அரிதாகிய மானிடப்பிறவியை அடைந்த நாம் உலக வாழ்க்கையிலேயே வீணுகக் காலத்தைக் கழித்துக் கொண்டு அருள்தெய்வமாகிய செல்வக் குமரனை ஆராதனை செய்யாதபோனுல் நம்மை வறுமை யென்ற அந்தப் பெரிய பாவியானவன் வந்தடைந்து, வாட்டி வதக்கி அல்லல் படுத்தி முடிவில் நம்முடைய அரிதாகிய மானிடப் பிறவியைப் பயனற்றதாகவே செய்வது மல்லாமல் நம்மை மாபெரும் பாபங்களைச் செய்யுமாறும் செய்துகொண்டே யிருப்பான். இதில் சிறிதும் ஐயமில்லை.

இதனுல்தான் அருணகிரிநாதர் திருப்புகழில்,

உன்புகழே பாடி நானினி அன்புடன்
ஆசார பூஜை செய்துய்ந்திட
வீணுள் படாதருள் புரிவாயே...

என்று வேண்டுகிருர் முருகனை.

ஆகையால் ஒவ்வொருவரும் அடி அந்தமில்லாத வேலின் பெருமையை நன்குணர்ந்து முருகப்பெருமானை இடைவிடாமல் வேல் முருகா—வேல் முருகா என்று நாவார வாழ்த்தி ஆராதித்து, அதன் மஹிமையினுல் நோயற்ற வாழ்வோடும் குறைவற்ற செல்வத்தோடும் பூரணமான ஆயுளோடும் வாழ்ந்து வரவேண்டும் என்பதற்கு இப்பாடலே மேலான வழிகாட்டியாக விளங்கி வருகிறது.



# தத்வமஸிஎனமொழிந்து தடுத்து ஆட்கொள்ளுதல்

## 20



அரிதாகிய மெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா உபதேசம் உணர்த் தியவா
விரிதாரண விக்ரமவேல் இமையோர்
புரிதாரக நாக புரந்தரனே.

**பதவுரை**

*விரிதாரண—(புனரபி ஜனனம்புனரபி மரணம் என்று சொல்லப்படும் பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்காக) பரந்து இருக்கும் ஓடம்போலப் பிராணிகளைப் பிறவிக்கடலில் மூழ்காவண்ணம்) தாங்கிக்கரையில் சேர்ப்பவனே, விக்ரம வேல்—விசேஷமான வீரமும் பராக்ரமமும் வாய்ந்த வேற் படையினையே ஸ்வரூபமாகக் கொண்டவனே! இமையோர்—இமை கொட்டாதவர்களான விண்ணவர்களின், புரி—ஹ்ருதய புண்டரீகமான ஹ்ருதய ஆகாசத்தில், தாரக—''சரவணபவ'' என்ற தாரகமந்திரரூபமாக ப்ரகாசித்துக்*

கொண்டு இருப்பவனே, நாக புரந்தரனே-நாகலோகத்திற்கு இந்திரன் போல் விளங்குபவனே, அரிதாகிய—அடைவதற்கு மிகவும் அரிதாகிய. மெய்ப்பொருளுக்கு—எல்லாமாய் எங்குமாய் விளங்கும் மெய்ப்பொருளாகிய உன்னையடைவதற்கு, அடியேன்—"நீ வேறு — நான் வேறு" என்ற பேத புத்தியினுல் கட்டுப்பட்டு விவேகபுத்தியை இழந்தவனுகிய அடியேனிடம், உரிதா—"நீ தகுதியுள்ளவன்" நீ உரிமையுள்ளவனே ஆவாய் என்று சொல்லி, உபதேசம்—ப்ரும்மவித்தையை, உணர்த்திய—உபதேசித்தருளிய விதம் ஆ—இஃது ஆச்சரியப்படத்தக்கதேயாகும்! என்னே நின் கருணை என்னே நின் பெருமை—என்னே நின் மஹிமை—என்னே நின் பரந்த உள்ளம்!

**தாத்பர்யம்:**

இடைவிடாமல் இறைவனுடைய ஸ்வருபத்தை நினைத்துக்கொண்டே இருப்பதுதான் பக்தியோகம். செல்வக்குமரனிடத்தில் எவர்கள் உடல் உயிர் ஆவி இம்மூன்றையும் அர்ப்பணம் செய்கிருர்களோ அவர்களுடைய யோகக்ஷேமத்தை செல்வக்குமரனே வந்து வகிக்கிருன். ஏனெனில் அடியார்களின் சுகதுக்கமே முருகனுடைய சுகதுக்கமாகும். பக்தர்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பதே முருகப்பெருமானின் மேலான கல்யாணகுணமாகும். இ∴து முருகப்பெருமானின் மன உறுதியினின்றெழும் உன்னதமான பரந்த உள்ளத்தின் ஆற்றலாகும். தவிர அடியார்களின் உயிருக்குயிராயுள்ள அருட்கடவுள் அன்ருே முருகப் பெருமான்! எனவே முருகப்பெருமான் பக்தர்களைப் பற்றி எண்ணுத நேரமே இல்லை, பேசாத நாளே இல்லை. அடியார்களின் அருகிலிருந்துகொண்டு அவர்களின் இன்னல்களைப் போக்கடிப்பதே குமரனின் வேலை அன்ருே!

எங்கும் நிறைந்த அழகுப்பொருளாகிய முருகப் பெருமானை அருணகிரிநாதர் தமது நெஞ்சில் நினைந்து நினைந்து நெகிழ்ந்து உருகி, இந்தப் பாட்டில்,

விரிதாரண—விக்ரமவேல் இமையோர்
புரிதாரக நாகபுரந்தரனே

என்று போற்றிப் புகழ்கின்றார்.

முதலாவதாக செல்வக்குமரனை 'விரிதாரண' என்று புகழ்கிறார். இதனால் முருகனுடைய இயல்பான குணமும், இதர தேவதைகளுக்கு இல்லாத அஸாதாரண சக்தி விசேஷமும் வர்ணிக்கப்படுகிறது.

'விரி' என்றால் விரிந்திருக்கிற அதாவது வரம்பு யில்லாமல் எங்கும் பரந்திருக்கிற என்று பொருள். 'தாரண' என்ற ஸம்ஸ்க்ருத பதமானது தாண்டு, கட என்ற அர்த்தத்தினைப் ப்ரகடனம் செய்யும் 'தர' என்கிற சப்தத்திலிருந்து உண்டாகியது. எனவே இங்கே பிறவிப் பெருங்கடலை நாம் எல்லாம் தாண்டுவதற்கு மூலகாரணமாய் விளங்கும் முருகப்பெருமானையே குறிக்கிறது.

கடலைத்தாண்டுவதற்கு ஓடம் தேவை. ஓடம் இல்லையேல் கடலைத்தாண்ட முடியாதென்பது மல்லாமல் தாண்ட முயலுபவன் அக்கடலிலேயே விழுந்து மூழ்கி முடிவில் இறந்துவிடுவான் அன்றோ!

ஆதலால் ஒருவன் கடலைத்தாண்ட வேண்டுமானால் அவனைத் தாண்டவைக்கும் வஸ்துவானது அவனைத் தாங்கிக்கொண்டே யிருந்தவண்ணமாய்த்தான் அவனைத் தாண்டவைக்க வேண்டுமே தவிர, அன்னியில் அவனைத் தாங்காமல் தாண்டவைக்கவே முடியாது.

எனவே தாங்கும் சக்தியை உடையவனே பிறவிக் கடலிலிருந்து நம்மைத் தாண்டவைப்பான் என்பதினைச் சொல்லவும் வேண்டுமா?

ஆதலால் 'தாரண' என்ற சப்தத்தினுல் 'தரிக்கிறது'—'தாங்குகிறது' என்ற அர்த்தமும் வெளியாகிறது. இதனுல் முருகப்பெருமான் பிராணிகளைப் பிறவிப் பெருங்கடலிலிருந்து கரையேற்றும் விஷயத்தில், தான் ஒரு மாபெரும் ஓடம்போலிருந்து கொண்டு அதில் பிராணிகளை இருக்கச் செய்து அவர்களை அக் கடலில் மூழ்கி அழியாமலிருக்கும் பொருட்டு தாங்கிக் கொண்டுள்ள வண்ணமாய் பிறவிக்கடலைக் கடக்க வைக்கிருர்.

மேலும் ஒரு பெருங்கடலில் ஓர் ஓடம் போகும் பொழுது, புயல் காற்றினுல் சுற்றப்பட்டு இடி மின்னல் இவைகளுடன் கூடிய பெரும் மழையாகியவற்றிற்கு உள்ளாக நேரிடும் அல்லவா. இதனுல் ஓடமானது கவிழ்ந்து அழிந்து போகக்கூடும்.

எனவே ஆகாசம் — அதற்குள் பூமி — அதற்கு மேல் சமுத்திரம் — காற்று — அக்னி — ஆகிய பஞ்ச பூதங்களின் மாபெரும் சக்தியினை அடக்கியாளும் மன உறுதியையுடையவனே பெருங்கடலில் சென்று கொண்டிருக்கும் ஓடத்தினை ஜாக்கிரதையாகத் தாண்ட வைக்கமுடியும். அன்னியில் மனஉறுதியில்லாவிட்டால் வழியில் வரும் இன்னல்களைக் கண்டு பயந்து தானும் அழிந்து போவதுமின்றி ஓடத்தினையும் ஓடத்திலிருப்பவர்களையும் அழியும்படிச் செய்வான் அன்ருே.

எனவே 'தாரண' என்பதினுல் தாரணசக்தியையுடையவன். அதாவது உறுதியான எண்ணத்தினைக் கொண்டவன் என்று அர்த்தம்.

இத்தகைய மாபெரும் உறுதிபடைத்தவனுகச் செல்வக்குமரன் இருந்துகொண்டு பிறவிக்கடலை நாம் கடக்கும்படி செய்கிருன்.

எனவே முருகப்பெருமான் வெறும் ஓடம்போல் மட்டும் இல்லாமல் ஓடக்காரனுயும் இருந்து வருகிருர். இதையே அருணகிரிநாதர் வேளைக்காரன் வகுப்பில்,

யாதும் நிலையற்றலையும் ஏழுபிறவிக்கடலை
ஏறவிடு நற்கருணை ஓடக்காரனும்

என்று முருகனைப் புகழ்கின்ருர். ஸம்ஸாரமாகிய பெருங்கடலைத் தாண்டவைக்கும் ஓடமும் ஓடக்காரனும் முருகன் அன்ருே!

இத்தகைய பெருமைவாய்ந்த பரம்பொருளாகிய ஓடக்காரன்தான் ஸ்ரீமத் ராமாயணத்தில் குஹன் என்ற பெயரில் ஓடக்காரனுக வருகிருன். வந்து என்ன செய்கிருன்? திருவிளையாடல்களைக் காட்டி ஸ்ரீராமபிரானை மகிழவைக்கிருன். என்ன திருவிளையாடல் தெரியுமா?

அண்டசராசரங்களையும் பிறவிக்கடலிலிருந்து தரணம் செய்துவைக்கும் தாரகமந்திரத்தின் ஸ்வருபமாகிய ஸ்ரீராமசந்திரமூர்த்தியை சீதையாகிய சக்தியுடனும், உலகத்தைத் தமது ஆயிரம் தலையினுல் தாங்கி வரும் ஆதிசேஷ பகவானுகிய லக்ஷ்மண சுவாமியுடனும் தன்னுடைய ஓடத்தில் ஏற்றிக்கொண்டு கங்கையைத் தரணம் செய்யவைக்கிருன்.

இவ்விதம் முருகப்பெருமான் இறைவனுக்கெல்லாம் இறைவனுக இருக்கிருர்.

ஆதலால் அருணகிரிநாதர் முருகனை,

விரிதாரண

என்று புகழ்கிறார். இதற்குக் காரணம் தரணத்வசக்தி என்ன-தாரணத்வசக்தி என்ன—மனோதைரியத்வ சக்தி என்ன—ஆகிய இம்மூன்று சக்தி விசேஷங்களையும் முருகப்பெருமானானவர் தன்னுடைய இயல்பான குணமாகக் கொண்டிருப்பது அடியார்களை ஸம்ஸார ஸாகரமாகிய ஸமுத்திரத்திலிருந்து கரையேற்றும் பொருட்டு அல்லவா!

எனவே 'செல்வக்குமரனுக்கு நிகர் செல்வக் குமரனே!' என்ற உறுதியான எண்ணத்துடன்,

"மொழியெல்லாம் முருகன் - அருள் மறையெல் லாம் முருகன் – அருளெல்லாம் முருகன் - அன்பெல் லாம் முருகன் - இன்பமெல்லாம் முருகன் - ஞானமெல் லாம் முருகன் - அழகெல்லாம் முருகன" - என்று இடைவிடாமல் உள்ளம் முழுவதையும் முருகப் பெருமானிடத்தில் பறிகொடுத்து எல்லாம் முருகன் மயம் என்றிருந்து வரும் பக்தர்களுடைய யோக க்ஷேமத்தை திருவிளையாடல் மூலமாக அன்றும் இன்றும் என்றும் வஹித்துவரும் அம்மாபெரும் கருணாஸமுத்திரமாகிய செல்வக்குமரனையே அருணகிரி நாதர் இந்த அநுபூதியில் அன்புடன் உள்ளம் மகிழ்ந்து,

விரிதாரண

என்று அழைக்கின்றார்.

மேலும் கந்தர் அநுபூதிக்குப் பரம தாத்பர்யம் நிர்குண ப்ரம்மத்திலேயே இருந்துவருவதினால் 'விரி தாரண' என்ற பதத்திற்கு,

தாரணாபரிக் ஞானாத் முக்தி:

என்ற சாஸ்திரத்தையே மேலான ப்ரமாணமாகக் கொண்டு, தாரணை என்று சொல்லப்படும் நிர்குண உபாஸனமார்க்க ஸ்வருபமாயும், அவ்வுபாஸனையினால் முடிவில் அநுபவிக்கப்படும் ஸ்கந்தானுபூதி நிலையாயும் விளங்கி வருகிற செல்வக் குமரனையே அநுபூதி நிலையில் 'விரிதாரண' என்று போற்றிப் புகழ்கின்றார். இதன் பொருளைப் பக்தியுடன் அனுபவிப்போம்.

உள்ளும் வெளியுமாய் ஸஞ்சாரம் செய்யும் ப்ராண வாயுவை அடக்குவதே 'தாரணை' என்பதின் முக்யார்த்தமாகும்.

விஷயாதிகளில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும் மனதை அதிலிருந்து திருப்பி இறைவனிடத்தில் நிலைத்திருக்கச் செய்வதே யோகமாகும். இதனையே ராஜயோகமென்று அறியவேண்டும். இந்த ராஜ யோகத்தை மஹான்களினால்தான் 'தாரணை' என்ற மார்க்கமாகக் கடைப்பிடிக்க முடியும். அதாவது அவர்களுக்குத்தான் ப்ராணவாயுவின் ஓட்டத்தை மனதினால் அடக்க முடியும்.

எனவே ராஜயோகத்தினால் ப்ராணவாயுவை மூலாதாரம் - ஸ்வாதிஷ்டானம் - மணிபூரகம் - அனாஹதம்- விசுத்தி - ஆக்ஞா - என்று சொல்லப்படும் ஆறு சக்கரங்களிலும் நிரோதணம் செய்வதே தாரணையாகும்.

சரீரத்திற்கு ஆதாரமாயிருக்கிற மூலாதாரம் என்ற சக்ரத்தில் ப்ருதிவீதத்வமானது விளங்கி வருகின்ற படியால்தான் சரீரமானது ஸ்திதியாக (அங்குமிங்கும் ஓடாமல் இருத்தல்) இருந்துவருகிறது. எனவே எதற்கும் மூலகாரணம் மூலாதார சக்ரமேயாகும்.

அதுபோலவே ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் அக்னி தத்வமானது விளங்கி வருகின்றபடியால் எதையும் இச்சாமாத்திரம் எரிக்கும் குண்டலிநீ சக்தி இருந்து வருகிறது. எனவே எதையும் சுட்டெரிப்பதற்கு (ஸம்ஹார சக்தி) மூலகாரணம் ஸ்வாதிஷ்டமான சக்ரமேயாகும்.

அவ்விதமே மணிபூரக சக்ரத்தில் ஜலதத்வ மானது விளங்கி வருகின்றபடியாலும் அப்படியே இந்த ஜகத்தானது உண்டாவதற்கு முன்பு 'ஸர்வம் ஸலிலமாஸீத் என்ற வேதப்ப்ரமாணத்தினுல் எங்கும் வியாபித்து இருந்தது ஜலதத்வமேயாகும். எனவே எதையும் இச்சாமாத்திரம் ச்ருஷ்டி செய்யும் சக்தி விசேஷமானது மணிபூரக சக்ரத்திலிருந்து வருகிறது.

அப்படியே அநாஹத சக்ரத்தில் வாயுதத்வம் விளங்கி வருகின்றபடியால் எதையும் கடந்து மேலே செல்லக்கூடிய ஓர் ஆபூர்வமான சக்தியானது இருந்து வருகிறது. எனவே எதையும் ஒன்றின் மேல் ஒன்ருகத் தாண்டிக்கொண்டே முடிவில் "ஸர்வமும் நானே" என்ற அநுபவ நிலையைத் தரும் சக்தி விசேஷம் அநாஹத சக்ரத்தில் உள்ளடங்கியிருக்கிறது.

இதற்கு மேலிருந்து வரும் விசுத்தி சக்ரத்தில் ஆகாசதத்வமானது விளங்கிவருகிறது. ஆகாசதத்வத்தில் சப்ததத்வமானது முக்கியத்வமாகயிருக்கிறது. அந்த சப்தமோவெனில் கேவலம் வேத சப்தமேயாகும். அவ்வேத சப்தமோவெனில் ஓம்காரம் என்ற ப்ரணவத்தில் அடங்கி விடுகின்றபடியால், விசுத்தி சக்ரத்தில் விளங்கி வருகிற மஹாமஹிமை தங்கிய ப்ரணவம் என்று சொல்லப்படும் ஓம்காரமே ஸர்வத்திற்கும் மூலகாரணமாக இருந்து வருகிறது.

அதுபோலவே இரண்டு புருவங்களுக்கு நடுமத்தியில் மஹாசக்தியோடு கூடின ஆக்ஞாசக்ரம் விளங்கி வருகிறது,

ஞா ஞானே

என்பதை அநுஸரித்து உபாஸகர்கள் இந்த ஆக்ஞாசக்ரத்தில் ஓங்காரத்தினுள் ஒளிந்து கொண்டும் ஓம்காரஸ்வருபமாயும் உள்ள முருகப்பெருமானை க்ஷணகாலம் மின்னல் போல் ஆத்மாவாக அநுபவிக்கிறார்கள். இதில்தான் மனஸ் தத்வமானது அடங்கியுள்ளது.

ஆதலால் ஸ்வாதிஷ்டான சக்ரத்தின் முடிவில் ருத்ரக்ரந்தி என்று சொல்லப்படும் ஸம்ஹார சக்தியும், அநாஹத சக்ரத்தின் முடிவில் விஷ்ணுக்ரந்தி என்று சொல்லப்படும் ரக்ஷணசக்தியும், அப்படியே ஆக்ஞா சக்கரத்தினுடைய முடிவில் ப்ரம்மக்ரந்தி என்று சொல்லப்படும் ச்ருஷ்டி சக்தியும் இருந்து வருகிறது.

ஆதலால் சித்தநிரோதனமூலமாகத்தான் தாரண சக்தியை அடையமுடியும். தாரணைகள் 360 விதமாக சாஸ்திரங்களில் திகழ்கின்றன. ஒவ்வொரு சக்ரங்களிலும் ஐம்பது ஐம்பதாகப் பிரித்துக்கொண்டும், அப்படியே அதற்கு மேலாகவுள்ள ப்ரும்மரந்திரம் என்று சொல்லப்படும் சக்ரத்தில் அறுபதாகவும் வைத்துக்கொண்டு, அப்படியே மூலாதாரம்—ஸ்வாதிஷ்டானம்—மணிபூரகம்—அநாஹதம்—விசுத்தி—ஆக்ஞா—ப்ரம்மரந்திரம் என்ற ஏழுசக்ரங்களிலும் ஐம்பது விதமான மாத்ருகா அக்ஷரங்களை அந்த அந்த சக்ரங்களுக்குரிய கலைகளாகப் பாவித்துக்கொண்டு, அத்துடன் நாதம் பிந்து கலை இம்மூன்று தத்வங்களுடன் ப்ராணவாயுவை ராஜயோகத்தினுல் அத்வைத

பாவத்தில் நிரோதனம் செய்து அந்தர்முகர்களா யிருந்து கொண்டு அநுஸந்தானம் செய்து வந்தால் கலைகள் எண்ணற்ற கோடிகளாகப் பவிக்கின்றன.

இதைத்தான் அருணகிரிநாதர் தமது திருப்புகழில்,

நாத விந்து கலாதீ நமோநம
வேத மந்த்ர ஸ்வரூபா நமோநம
ஞான பண்டித ஸ்வாமி நமோநம

என்று பாடுகின்ருர்.

ஆதலால் நாதம் பிந்து கலை இவைகளுடன் பிராணவாயுவை சேர்த்து க்ரமமாக ஒவ்வொரு சக்ரத் திலும் தாரணை செய்து அநுஸந்தானம் செய்துவந்தால் முறையே பின்வருமாறு பலனை அடையலாம். மூலாதா ரத்தை அதிஷ்டானமாக வைத்துக்கொண்டு செய்து வரும் தாரணையினுல் புத்தியானது மிகவும் துருகமான தத்வங்களைக் க்ரஹித்து அதையநுஷ்டான முறையில் கொண்டு வரும் ஆற்றலையும், ஸ்வாதிஷ்டானத்தை அதிஷ்டானமாக வைத்துக்கொள்ளும் பொழுது வெகு தூரத்திற்கு அப்பால் நடக்கும் ரகஸ்யங்களை இருந்த யிடத்திலிருந்தே உணரும் சக்தியையும், அநாஹ தத்தை அதிஷ்டானமாக கொண்டால் ஆழ்ந்த கருத் தினைக்கொண்டு வேதசாஸ்திரங்களை அறிந்து அநுப விக்கும் சக்தியையும், விசுத்தியை இருப்பிடமாகக் கொண்டால் ஸர்வக்ஞசக்தியையும், ஆக்ஞாசக்ரத்தை அதிஷ்டானமாகக் கொண்டால் "சும்மா இரு சொல்லற" என்ற மந்திர அநுபவ ஸாக்ஷாத்காரமும், அப்படியே முடிவில் ப்ரம்மரந்திரத்தை அதிஷ்டான மாக வைத்துக்கொண்டு, 'சும்மா இரு சொல்லற' என்ற மந்திரத்தை இடைவிடாமல் தாரணை செய்யும்பொழுது ஸ்கந்தானுபூதியும் ஏற்படுகிறது.

இந்நிலையில் அடியார்களைத் தடுத்து ஆட்கொள்ளும் மார்க்க ரூபமாக இருக்கும் முருகப்பெருமானையே 'விரிதாரண' என்ற ஸம்போதனையினுல் அறிய வேண்டும்.

எனவே யோகக்ஷேமத்தை வஹித்து பிறவிக்கடலிலிருந்து பிராணிகளைக் கரையேற்றும் விஷயத்தில் செல்வக்குமரன் ஓடம் போலிருப்பதுமல்லாமல், ஸ்கந்தானுபூதிக்கு மூலகாரணமாகவுள்ள ராஜயோகத்தையே ப்ராதான்யமாகக்கொண்ட தாரணை என்று சொல்லப்படும் உபாஸனுமார்க்கருபமாகவும் செல்வக்குமரன் இருந்து வருகிருன். ஞானபண்டிதனின் கருணையினைக்கொண்ட திருவிளையாடலேயாகும் இது

எனவே ஞானமயமாயிருப்பவனும் முருகன். ஞானப்பயனுயிருப்பவனும் முருகன். ஞானத்தை அறிவிப்பவனும் முருகன். ஞானத்தை அறிபவனும் முருகன். ஆதலால் ஞானமயமாயுள்ள முருகனை ஞானத்தினுல்தான் எளிதில் அடைய முடியும். ஆகவே, ஞானமார்க்கமே, அதிலும் பக்தியுடன் கூடிய ராஜயோக ஞானமார்க்கமே முருகனுக்கு மிகவும் இன்றியமையாத இனிய தொன்ருகும்.

எனவே தரணம் செய்து வைக்கும் சக்தியும், மூழ்கிப்போகாமல் தாங்கி ரக்ஷிக்கும் ரக்ஷணுசக்தியும், மேலான மனஉறுதியினைக்கொண்ட மனசக்தியும், அப்படியே தாரணுமார்க்கத்தை உபதேசித்து அருளி அநுபவத்திற்குக் கொண்டு வந்து ஸ்கந்தானுபூதியை அநுபவிக்க வைக்கிற சக்தியும் எவனிடத்திலுள்ளதோ அம்மாபெரும் சக்தியினைக்கொண்ட முருகப்பெருமானையே பாட்டில் அருணகிரிநாதர் விரிதாரண என்று புகழ்கின்ருர். இரண்டாவதாக,

விக்ரம வேல்

என்று புகழ்கின்றார்.

'ச்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம்' என்ற மூன்று கார்யங்களையும் இச்சாமாத்திரம் செய்யும் ஆற்றலை வேற்படையானது கொண்டுள்ளதினால் 'விக்ரமவேல்' என்றார். எவர்க்கும் அஞ்சாதது ஞானவேல், வேலை நினைக்கும் போது மயிர் சிலிர்க்கின்றது. அதன் பராக்கிரமத்தைக் கேட்கும்பொழுதோ அல்லது படிக்கும் பொழுதோ உள்ளத்தில் அலைமோதிக்கொண்டு எழும் உணர்ச்சியின் பெருமையை யாரால் எடுத்து உரைக்க முடியும். இனி பிழைக்க மாட்டோம் என்று எண்ணி விழும் பிராணிகள் வேலின் பராக்கிரமத்தை செவி கொடுத்துக் கேட்குங்கால் புத்துயுர் பெற்று எழுவார்கள் அன்றோ!

எனவே செல்வக்குமரனின் பிரிவின்றி அவனது அருள் பொலிகிறது. அப்படியே அவனுடைய அருளின் பிரிவின்றி அவன் வேல் பொலிகிறது. பொருளோ வெனில் வேல் உருவாய் விளங்குவது குமரனே என்பதாகும். முருகன் வேறு–வேல் வேறு என்று கிடையாது. முருகனைக் காட்டிலும் வேற்படையை வேறாக பிரிக்குங்கால் வேலானது கேவலம் உயிரற்ற ஜடவஸ்துவாக ஆகிவிடும் அன்றோ! அந்நிலையில் வேல்பூஜையென்பதே இல்லாமல் ஆகிவிடும். முருகனின் சக்தியை வேல் ஆச்சிரயத்து நிற்கிறது என்று ஆகிவிடும். எனவே மந்திர வேலாக ஒருகாலும் ஆக முடியாதன்றோ.

ஆதலால் முருகனே வேல்ஸ்வருபமாய் பாஸிக்கின்றார். எனவே ஞானிகள் வேலில் முருகனையும்—முருகனில் வேலையும்—பார்க்கின்றார்கள். அதாவது

பக்தியின் உச்சநிலையில் வேற்படையை வழிபட்டு வருபவர்களுக்குக் காணமுடியாதது செல்வக்குமரன். ஏன்? அந்நிலையில் எல்லாமாய் எங்கும் இருப்பது வேல் ஒன்றேயாகும். முருகன் வேலாக இருக்கிருன். அதுபோலவே முருகனைப் பரம்பொருளாய் பார்க்கும் பொழுது வேற்படை முருகனில் மறைந்து அவ்விடத்தில் அருள் சுரக்கின்றது. இத்தகைய மஹிமைவாய்ந்த வேலின் ஸ்வரூபமாகவே முருகப்பெருமான் அதிபராக்கிரமத்தோடு விளங்கி வருவதால் விக்ரம வேல் என்று பாட்டில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இதனுல் வேல் உபாஸனையே முருகோபாஸனை என்று ஸித்தாந்தம் செய்கிருர்.

மூன்ருவதாக,

இமையோர் புரிதாரக

என்ருர். இமையோர் என்ருல் இமைகொட்டாத தேவர்கள் என்று பொருள். இமைகொட்டுபவர்கள் மனுஷ்யர்கள். மரண தர்மத்தையுடையவர்கள் மனுஷ்யர்கள். எனவே இமைகொட்டுதலை கணக்கிட்டு மனுஷ்யர்களுடைய ஆயுளானது விதிக்கப்படுகிறது. தேவர்களுக்கு அவ்விதம் இல்லை. ஆதலால் அவர்கள் இமைகொட்டாதவர்கள். எனவே மரணதர்மத்தை அடையாதவர்கள், அதாவது அமரர்கள் என்று பொருள்.

'புரி' என்ருல் ஹ்ருதயபுண்டரீகம் என்று அர்த்தம். 'தாரக' என்ற பதத்திற்கு **சரவணபவ** என்ற தாரக மந்திரரூபமாக விளங்குபவனே, என்று பொருள்.

திருச்செந்தூரிலுள்ள கந்தமாதன பர்வதத்தில் எழுந்தருளியிருக்கும் செந்தூர் வேலனைத் தர்சனம் செய்து சரவணபவ என்ற தாரகமந்திரத்தின் ரகஸ்

யத்தை அறியும் பொருட்டு, ஒரு சமயம் ஸநத்குமார ஸ்வாமி, நாரத மஹரிஷி, அகஸ்த்யர் ப்ரும்மா, தேவேந்திரன், ஸரஸ்வதிதேவி ஆகியவர் திருச்செந்தூர் வேலனை அடைந்து வணங்கி வேண்டி நின்றார்கள். அப்பொழுது திருச்செந்தூர் வேலனே அவர்களுக்கு சரவணபவ என்ற மந்திரத்தின் மெய்ப்பொருளை உபதேசித்தருளினார்:

சரவணபவ

என்ற மந்திரத்திலுள்ள முதல் அக்ஷரமான 'ச' காரத்தினால் ஸர்வஸம்பத்தையும், இரண்டாவது அக்ஷரமான 'ர' காரத்தால் ப்ரம்ம வித்தையையும், மூன்றாவது அக்ஷரமான 'வ' காரத்தினால் இகபர சுகத்தையும் நான்காவது அக்ஷரமான 'ண' காரத்தால் ஸர்வசத்ருநாசமும், ஐந்தாவதான 'ப' காரத்தால் இயமனை ஜயிப்பதும், ஆறாவது அக்ஷரமான 'வ'காரத்தால் ஸகலரோகநிவிருத்யும் ப்ரகாசப்படுத்தப்படுகிறது.

இந்த மந்திரமே க்ஷடக்ஷரீ மந்திரம் என்று மந்திர மஹோததியில் போதிக்கப்படுகிறது. இதை மூன்று பாகமாகச்செய்து உபாஸிக்கவேண்டும். முதல்இரண்டு அக்ஷரமாகிய 'சர' என்பதினை சக்திகண்டம் என்றும், நடு இரண்டு அக்ஷரமாகிய 'வண' என்பதினை குமர கண்டம் என்றும், கடைசி இரண்டு அக்ஷரமாகிய 'பவ' என்பதினை சிவகண்டம் என்றும் சாஸ்திரங்கள் போதிக்கின்றன. இவ்விதம் சக்தி தத்வத்தையும் சிவதத்வத்தையும் ஒரே அகண்டமான வஸ்து என்று போதிக்கின்ற ஸ்வரூபமே ஸுப்ரமணியஸ்வாமியினுடைய நிஜஸ்வரூபமாகும். இந்த ரகஸ்யத்தைப் போதிக்கின்ற மஹாமந்திரமே சரவணபவ என்ற மந்திரமாகும். இதுவே ஷடக்ஷரீ என்று சொல்லப்பட்டு

இமையோர்களினல் தங்களுடைய ஹ்ருதய புண்டரீகத்தில் அநுஸந்தானம் செய்யப்பட்டு வருகிறது.

இது மஹாமந்திரமானதினுல் இதன் உண்மையை ஒரு ஸத்குருவை நாடி அவர் மூலமாகவேயறிந்து உபாஸிக்க வேண்டும்.

மேலும் இமையோர் என்று சொல்லியது உபலக்ஷணமேயாகும். அது மும்மூர்த்திகளேயும் குறிக்கும். எனவே மும்மூர்த்திகளினுலும் அநுஸந்தானம் செய்யப்பட்டு வரும் மந்திரமே சரவணபவ என்பதாகும்.

ஆதலால் பிராணிகள் தாங்கள் செய்து வரும் பாபங்களேப் போக்கடித்துக் கொண்டு முக்தியை அடைவதற்கு முருகப்பெருமானுடைய மூலமந்திரமாகிய சரவணபவ என்பதினேக் காட்டிலும் மேலான மந்திரமே இல்லே. இதுவே மேலான தாரக மந்திரமாகும். இதில் சிறிதும் ஐயமில்லே.

ஏகோ மோக்ஷ: ஸ்கந்த
ஸாலோக்யமேவ

என்று ஸ்காந்தமஹாபுராணத்திலுள்ள ஸனத்குமார ஸம்ஹிதையில் உள்ள வாக்யமே மேலான ப்ரமாணமாகும். அப்படியே ஸாக்ஷாத் பரமேச்வரனுடைய அவதாரமாகிய ஸ்ரீ ஆதிசங்கரரும்,

குஹாத் தேவ மந்யம்
ந ஜானே ந ஜானே

என்று இருமுறை சொல்லி மேல்கூறிய ஸ்காந்த புராண வாக்யத்தை ஸ்திரப்படுத்துகிருர். மேல் கூறிய இரண்டு வாக்கியங்களின் மெய்ப்பொருளேதெனில், மோக்ஷம் என்பது ஒன்றே-அதுவும் ஸ்கந்தப்

பெருமானுடன் இரண்டற ஒன்ருய் கலப்பதேயாகும். அப்படியே முருகனைக் காட்டிலும் வேருன தெய்வம் நான் அறியவில்லை நான் அறியவில்லை என்பதே தாஞகும்.

இதனுல் இந்தப் பயங்கரமான கலியுகத்தில் ப்ராணிகள் க்ஷுத்திரதேவதைகளை ஆராதிக்காமல் எல்லாம்வல்ல செல்வக்குமரனை மேலான தெய்வ மென்று கடைப்பிடித்து அல்லும் பகலும் சரவணபவ என்ற மஹாமந்திரத்தை விபூதிதாரிகளாகயிருந்து ஸதா ஜபித்துக்கொண்டிருப்பார்களேயாகில் அவர்கள் இந்த ஜன்மாவிலேயே எல்லாவிதமான வினைகளையும் பீடைகளையும் போக்கடித்துக்கொண்டு கந்தர் அநுபூதி யில் லயித்திருப்பார்கள் என்பதினை நினைவூட்டவே

இமையோர் புரி தாரக

என்று புகழ்கின்ருர்.

நான்காவதாக

நாக புரந்தரனே

என்று புகழ்கின்ருர்.

நாகம் என்ருல் நாகலோகம் என்று பொருள். புரந்தரன் என்ருல் இந்திரன் என்று பொருள். எனவே நாக புரந்தரனே என்ருல் நாகலோகத்திற்கு இந்திரன் போன்றவனே. நாகலோகத்தைக் காப்பவனே என்று அர்த்தம்.

இந்த விசேஷணத்தின் தத்வமோவெனில் நாகலோ கத்திலுள்ளது யாவும் கொடிய விஷத்தினையுடைய தக்ஷகன், காளிங்கன், வாஸுகி முதலான எண்ணற்ற ஸர்ப்பங்களேயாகும். நாகம் என்ற சப்தத்திஞல் விஷம் யென்பதினை நினைவூட்டினுர். அநேகவிதமான விஷ

ஜந்துக்களிருந்தாலும் பாம்பு என்ற சப்தத்தைக் கேட்டாலே பிராணிகளுக்கு விஷத்தினுலுண்டாகும் பயத்தினுல் உடல் சிலிர்க்கின்றன.

"பாம்பென்ருல் படையும் நடுங்கும்" என்பது லோகபிரஸித்தம் அன்ருே!

எனவே விஷத்தை அடக்கியாளுபவனும் முருகனே. விஷத்தைக் கொல்பவனும் முருகனே. விஷத்தையுடைய பாம்பு முதலான ஜந்துக்களை ரக்ஷிப்பவனும் முருகனே. ஆதலால் செல்வக்குமரனை ஸ்மரணம் செய்யும் பக்தர்களிடம் விஷபயம் கடுகளவும் அணுகா வண்ணம் முருகப்பெருமானே காப்பாற்றி வருகிருன் என்பதினைச் சொல்லவும் வேண்டுமா. முருகனுடைய வேற்படையைத் த்யானம் செய்வதே எல்லாவிதமான விஷபயங்களையும் போக்கடிக்கும் என்பதைக் கந்தர் சஷ்டிகவசத்தில்,

விடுவிடு வேலை வெருண்டது வோட
புலியும் நரியும் புன்னரி நாயும் எலியுங்
கரடியும் இனித்தொடர்ந்தோடத் தேளும்
பாம்பும் செய்யான் பூரான் கடிவிட
விஷங்கள் கடித்துய ரங்கம் ஏறிய
விஷங்கள் எளிதுடனிறங்க ஒளிப்புஞ்
சுளுக்கும் ஒருதலை நோயும் வாதஞ்
சயித்தியம் வலிப்புப் பித்தம் சூலைசயங்
குன்மம் சொக்குச் சிரங்கு குடைச்சல்
சிலந்தி குடல்விப் பிரிதி பக்கப்பிளவை
படர் தொடை வாழை கடுவன் படுவன்
கைத்தாள் சிலந்தி பற்குத் தரணை
பருவரையாப்பும் எல்லாப் பிணியும்

என்றனைக் கண்டால் நில்லா தோட
நீயெனக் கருள்வாய்.

என்று வேண்டப்படுகின்றது.

எனவே செல்வக்குமரன் மேலே சொல்லப்பட்ட வைபவங்களுடன் விரிதாரணனுயும், விக்ரம வேல் ஸ்வரூபனுயும், இமையோர் புரிதாரகனுயும், நாகபுரந்த ரனுயும் மங்காத பொலிவுடன் திகழ்கின்ருன்.

இத்தகைய மஹிமை கொண்ட குமரனை என்னென்று கூறுவது? என்னவென்று கொள்வது? மாபெரும் கருணைவெள்ளமாகிய முருகனை சரணுலயம் என்று அடை என்ற உயர்ந்த உணர்வானது நமது உள்ளத்தில் எழுகிறது. செல்வக்குமரனின் அருளினையும் அழகினையும் பார்த்துப்பார்த்து மனம் இணையில்லா இன்பபெருக்கில் மூழ்கி ஞானபண்டிதனை நாடியே நிற்கின்றதன்ருே!

ஆகையால் ஞானபண்டிதனே, விவேகமற்றவனுகியநான் பேத புத்தியினுல் நீ வேறு—நான் வேறு, நீயும்நானும் ஒரு காலத்திலும் ஒன்ருகி அகண்டவஸ்துவாய் விளங்கமுடியாதென்றும் இருந்தேன்.

அணைக்கட்டினுல் ஸமுத்திரத்தில் கலக்கமுடியாமல் யிருந்து வரும் நதியானது எவ்விதம் தன்னை ஸமுத்திரத்தைக் காட்டிலும் வேருனதாக நினைத்துக் கொண்டிருக்குமோ, அதுபோலவே குளத்திலுள்ள ஜலமானது எப்படி தன்னைக் காட்டிலும் ஸமுத்திரம் மேலானது என்று நினைத்துக் கொண்டிருக்குமோ, அது மாதிரியே ஜீவனுகிய நான் உன்னைக் காட்டிலும் வேருனவனுகவே நினைத்திருந்தேன்.

ஆனுல் நதியும் குளமும் ஸமுத்திரத்துடன் ஒன்ருேடு ஒன்ருய் கலந்து விட்டால் குளம் நதி என்ற பேதமெல்லாம் போய் ஸமுத்திரம் என்பதொன்றே நிலைத்து நிற்கிறதன்ருே.

அது போலவே கேவலம் ஜீவனுகயிருந்து வரும் என்னிடம் நீயே வலியவந்து "நீயும்-நானும் ஒன்று, மெய்ப்பொருளாகிய என்னை நீ அடைவதற்கு தகுதி யுள்ளவன். தத்வமஸி என்ற வேதவாக்கியம் நீயும் நானும் ஒன்ரு யிருக்கிருேம் என்று போதிக்கின்றது. அதுவே அநுபவஸித்தம். பேதமானது அவித்தை யினுல் தோன்றுகிறது. உண்மையிலிருப்பது ஒன்றே தான். அந்த உண்மையாகிய மெய்ப்பொருள் நீயே. அந்த நீயே நான் என்பது அதனிலும் மெய்ப்பொருள். கயிற்றில் ஸர்ப்பமும், கானலில் நீரும் தோன்றுவது போல் ஆத்மாவில் ஜீவன் தோன்றுகிருன். எனவே "நான்–நீ என்று பிரித்துப் பேசினுலும் உண்மையில் இருப்பது மெய்ப்பொருள் ஒன்றேயாகும்" என்ற அத்வைத ஞானத்தைப் போதிக்கும் ப்ரும்மவித்தையை நான் பெறுவதற்குத் தகுதியுள்ளவன் என்று என்னி டம் சொல்லி, என்னைத்தடுத்து ஆட்கொண்டு, அவ் வரிதாகிய ப்ரும்ம வித்தையை எனக்கு உபதேசம் செய்தருளினதுமல்லாமல் அநுபவிக்கும் பாக்கியாதி சயத்தையும் தந்தருளினுயே.

யோகிகளுக்கும் ஞானிகளுக்கும் துறவிகளுக்கும் துர்லபமாகிய பரம்பொருளாகிய நீ எனக்கு மட்டும் எப்படி வந்து அருளினுய் ஐயனே! அத்தகைய புண்ணி யம் என்னிடம் என்ன இருக்கிறது.

ஹே செல்வக்குமரா, இதிலிருந்து யான் தெரிந்து கொள்வது யாதெனில் அனைத்துக்கும் காரணம் நின்

திருவடிகளில் ஜீவகோடிகள் வைக்கும் நிரதிசயமான பக்தியேயாகும் அன்றோ!

நீ ஞானபண்டிதனாக வந்து ப்ரும்ம வித்தையை உபதேசம் பண்ணின மஹிமையை நினைந்து உன்னைப் போற்றவா? அல்லது நீ பால ரூபத்தில் முற்றிலும் துறந்த முனிவர் போல், நின் திவ்யமங்களதிருமேனியல் மங்காத பொலிவுடன் விளங்கும் திருநீறும், இரண்டு திருவடிகளில் இரண்டு ஸ்வர்ண பாதுகைகளும், ஒரு திருக்கரத்தில் ஞானவேலும், ஒருகையினால் சின்முத்திரையின் மூலமாக "சும்மா இருசொல்லற" என்றமெய்ப் பொருளை உபதேசம் செய்தருளிய அத்யத்புதமானபுன்னகையோடு கூடினகோலமும் கொண்டருளினாயே அதனைக் கண்டு போற்றவா? நின் மாறிலாத கருணையைக் கண்டு போற்றவா?

ஹே செல்வக்குமரா, ஒன்றைவிட மற்றொன்று என் உள்ளத்தை அள்ளுகின்றன. ஏ முருகா நீ ஞானபண்டிதனாய் என் உள்ளத்தில் இடைவிடாமல் தோன்றிக் கொண்டேயிருப்பாய். உன்னுடைய திருவிளையாடல்களில் நீ ஞானபண்டிதனாய் வரும் திருக்கோலத்தை நான் கண்ணார பார்த்து களித்து, நாவார துதித்து, கையார தொழுது, என் உடல் உயிர் ஆவி அனைத்தையும் உனக்கே அர்ப்பணம் செய்து ஸதாகாலமும்,

வேதமந்திரஸ்வரூபா நமோநம
ஞானபண்டிதஸ்வாமி நமோ நம

என்று நாவினால் சொல்லிக்கொண்டேயிருக்க வேண்டும். இதுவே என்னுடைய மாறிலா ஆசை என்பதேயாகும்.

எனவே இந்தப்பாடலை எவர்கள் பிரதிதினமும் பொருளுணர்ந்து ஆயிரம் தடவை பாராயணம் செய்து

வருவார்களோ - அவர்களுக்குத் தேள் - பாம்பு - செய்யான் - பூரான் முதலிய விஷஜந்துக்களினுல் ஒருவிதமான பயமும் உண்டாகாது. அவர்களுடைய நெஞ்சில் முருகனின் வேல் நடனமாடிக்கொண்டே யிருக்கும். அவர்கள் இடைவிடாமல் முருகனின் பெருமையையே பேசி மகிழ்வார்கள்.

முடிவில் அரிதாகிய மெய்ப்பொருளை அறிந்தவர்களாகயில்லாமல் மெய்ப்பொருளாகவே திகழ்வார்கள்.

இதனுல், இத்தகைய புண்ணியவான்களிடத்தில் தெய்வீகம் தாண்டவமாடிக் கொண்டேயிருக்கும். இதுஸத்தியம். எனவே இப்பாடலைப் பாடிக்கொண்டே முருகனை அழைப்போமாக!



# பொன்னடித் தாமரையில் முத்திநெறியைக் காணுதல்

## 21



கருதா மறவா நெறிகாண எனக்
கிருதாள் வனசம் தரவென் றிசைவாய்
வரதா முருகா மயில்வாகனனே
விரதா சூரசூர விபாடனனே.

**பதவுரை**

வரதா—(அடியார்களுக்கு வேண்டும்) வரம் அளிப்ப வனே, முருகா—என்றும் இளமையோடிருப்பவனே, மயில் வாகனனே—(சூரபத்மாசூரனை) மயில்வாகனமாகக்கொண்ட வனே, விரதா—(அடியார்களை ரட்சிப்பது என்பதையே விரத மாகக் கொண்டவனே, அசுர சூர—அசுரனாகிய சூரபத்மனை, விபாடனனே — (இரண்டு கூறாக) நன்றாகப் பிளந்து பேர்த் தெறிந்தவனே (மனதில்) கருதா — நினைக்கமுடியாததாயும் மறவா (மனதில்) மறக்க முடியாததாயும் உள்ள, நெறி— முக்திநெறியை, காண — (யான்) அநுபவிக்கும்பொருட்டு எனக்கு—அடியேனுக்கு, இருதாள் - இரண்டு திருவடிகளாகிய

வனசம் — தாமரைகளே, தர—தருவதற்கு, என்று—எப் பொழுது இசைவாய் — திருவுள்ளங் கொள்ளப்போகிறுய்.

காலதாமதம் செய்தால் அதனை என்னல் சகிக்க முடி யாதென்பதே கருத்து.

**தாத்பர்யம்:**

முருகப்பெருமானுடைய பெருமையை வர்ணித்து முக்திநெறியை யாசிக்கின்றுர். எவ்விதம் யாசிக்கின் றுர்? செல்வக்குமரனின வைபவங்களே,

வரதா! முருகா மயில் வாகனனே
விரதா சுரசூர விபாடணனே

என்று புகழ்கின்றுர்.

அநுபூதியில் உள்ள விசேஷணங்களெல்லாம் முருகப்பெருமானுடைய அஸாதாரண குணுதிசயங் களேயே எடுத்துக்காட்டுகின்றன. அத்தகைய அரிய பதங்களினுல் நாம் முருகனே அழைக்கும்பொழுது நமது உள்ளத்தில் இன்பமானது பெருகி வருகின்றன. கேட்கும்பொழுது உடல் சிலிர்க்கின்றது.

முதலாவதாக 'வரதா! என்று அழைக்கின்றுர்.

பக்தர்கள் என்ன என்ன வேண்டுகிருர்களோ அவை யாவையும் இல்லேயென்று சொல்லாமல் அளிப் பவன் முருகப்பெருமான் ஒருவனேயாகும். அடியார் களே சோதனேக்குள்ளாக்கி அல்லல்படுத்தி அவர்களு டைய மனேபாவத்தைப் பூர்த்தி செய்பவன் முருகப் பெருமான் அல்ல. தானுகவே வந்து அருளி ஆட் கொள்பவன் முருகன். இதனே,

ஒருதிருமுருகன் வந்தாங்
குதித்தனன் உலகமுய்ய

என்று முருகனின் திருஅருளைக் கந்தபுராணம் திரு அவதாரபலத்தில் காண்க. எனவே அடியார்களுக்கு ஒருவித குறையுமில்லாமல் ஸகலஸம்பத்துகளையும் அளித்து வருகிறுன் செல்வக்குமரன். வேண்டுவதை இல்லையென்று சொல்லாமல் வேண்டியவாறே வரங்களை அளித்து வரும் கண்கண்ட தெய்வம் முருகன் அன்றோ. இவ்விதம் ஈரேழு பதினுன்கு லோகங்களிலும் கலயுகவரதன் என்று போற்றப்பட்டும் புகழப்பட்டும் முருகப்பெருமான் எல்லோருடைய நெஞ்சிலும் உருவாகி உரம்பெற்றுத் திகழ்கின்றுன்.

இரண்டாவதாக 'முருகா' என்று அழைக்கின்றுர். முருகப்பெருமான் என்றென்றும் மங்காத இளமையும், தெய்வீகத்தன்மையும், அழியாத அழகும், இயற்கையான மணமும் கொண்டு எல்லோருடைய உள்ளங்களையும் கொள்ளைகொள்கிறுர்.

எனவே முருகனை நாம் நினைக்கும்போதெல்லாம் நம்மனமானது அவனுடைய இளமையிலும் அழகிலும் ஈடுபடுகின்றன. இயற்கையின் அழகு எல்லாம் முருகனுடைய அழகேயாகும். முருகு என்றுல் மணம். முருகு என்றுல் இளமை, முருகு என்றுல் அழகு. முருகு என்றுல் தெய்வத்தன்மை.

அழகு — இளமை — மணம் — தெய்வீகம் இந்நான்கும் கொண்ட பரம்பொருளையே முருகன் என்று அறியவேண்டும். முருகன் என்ற சொல்லில் அழகு இருப்பதால் அங்கேயே இளமையிருக்கிறது. அழகும் இளமையும் இருப்பதால் அங்கே மணம் இருக்கிறது. அழகானது அழியாமலிருப்பதால் இளமையும் அழியாமலிருக்கிறது. எனவே இளமையும், அழகும் மணமும் எந்தயிடத்தில் ஒரே வஸ்துவாய் விளங்குகின்றதோ,

அந்த இடத்திலேதான் தெய்வீகம் தாண்டவமாடி நிற்கும். ஆதலால் அழகும் மணமும் இளமையும் தெய்வீகமும் இருக்கிறயிடத்தில் முருகன் உறைகின்ருன். இயற்கை பாட்டாகும்போது அப்பாட்டிலும் முருகன் கலந்து திகழ்கின்ருன். அப்பாட்டுகள்யெல்லாம் திரண்டு மாபெரும் காவ்யமாஞல் அக்காவியத்தையே கோயிலாகக்கொண்டு அதனுள் மந்திரரூபமாக மிளிர்கின்ருன்.

இத்தகைய கருத்தினை நினைவூட்டுகிறது முருகா என்ற சொல்லானது. எனவே, முருகா, முருகா முருகா என்று சொல்லிச் சொல்லி அழையுங்கள் செல்வக் குமரனை. மறு க்ஷணமே உங்கள் முன் தோன்றுவான் முருகப்பெருமான்.

மூன்ருவதாக மயில்வாகனனே என்றும் அழைக்கின்ருர்.

அனுதியாயும், அபௌர்ஷமாயும், மேலான ப்ரமாணமாயுமுள்ள வேதங்களெல்லாம் ஒன்று சேர்ந்துகொண்டு முருகப்பெருமானைக் கண்டுபிடிக்கச் சென்றபோதிலும்கூட முடிவில் எல்லா வேதங்களும் ஒன்று சேர்ந்துகொண்டு,

யதோ வாசோ நிவர்த்தந்தே
அப்ராப்யா மனஸாஸஹ
(தைத்ரீயோஉபநிஷத்)

என்று சொல்லி அதாவது வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத பரம்பொருளே முருகப்பெருமான் என்று தீர்மானம் செய்து, அம்முருகப்பெருமானைப் பற்றி தங்களால் போதிக்கமுடியாதென்று திரும்பிவந்துவிட்டன. இதனையே திருவாசகம்,

வேதங்கள் ஐயா என ஓங்கி
ஆழ்ந்தகன்ற நுண்ணியனே

என்று போதிக்கின்றது.

இவ்விதம் முருகக்கடவுளைக் கண்டுபிடிக்கச் சென்ற வேதங்கள் எப்படியாவது முருகப்பெருமானை அடைந்தே தீருவது என்ற வைராக்யத்தினையடைந்து, எல்லா வேதங்களும் ஒன்று சேர்ந்து ஒரு மயில் உருவத்தையெடுத்துக்கொண்டு முடிவில் முருகப்பெருமானுக்கு வாஹனமாகயிருக்கும் பாக்கி யாதிசயத்தை யடைந்தன. இந்த விஷயத்தில் ஸ்கந்தோபநிஷத், ஸ்காந்தமஹாபுராணம் முதலியவைகளே மேலான ப்ரமாணமாகும். ஆதலால் வேதமே மயில்ரூபமாக விளங்குகிறது. அவ்வேதமாகிய மயிலையே வாகனமாக முருகப்பெருமான் கொண்டுள்ளார்.

நான்காவதாக 'விரதா' என்று அழைக்கின்றார். அடியார்களையும் பக்தர்களையும் தன்னை சரணமடைந்தவர்களையும் ரக்ஷிப்பதையே தமது மேலான விரதமாக வைத்துக்கொண்டிருக்கிறார். காரணமோவெனில் அடியார்களிடத்தில் தமது உயிரையே வைத்திருக்கிறார் முருகப்பெருமான். தவிர பக்தர்கள் தம்மைக் குறித்தோ இதர தேவதைகளைக் குறித்தோ அநுஷ்டித்துவரும் விரதங்களுக்கு ஒருவிதமான பங்கமும் வராமலிருக்க வேண்டுமே என்று பக்தர்கள் செய்யும் விரதத்தைக் காப்பாற்றி வருவதையே விரதமாகவும் கொண்டுள்ளார்.

எனவே எவ்வகையிலும் முருகப்பெருமான் அடியார்களை எல்லாவித இன்னல்களிலிருந்தும் காப்பாற்றி அவர்களை நோயற்ற வாழ்வுடனும் குறைவற்ற செல்

வத்துடனும் வாழவைப்பதையே விரதமாகக் கொண்டுள்ளார்.

அதிகம் சொல்வானேன். அவன் அருளினை நம்மால் எண்ண முடியுமோ,

முத்தமிழால், வைதாரையும்
அங்கு வாழவைப்போன்

அல்லவா முருகக்கடவுள். இது ஒன்று போதாதா, அவன் பெருமையை நன்குணர.

எனவே ஆண்டியாக இருப்பவன் ஆண்டியல்ல. எல்லோரையும் ஆண்டியாக்க வந்தவன் அல்ல அந்த ஆண்டி. ஆண்டியை அரசனுக்க வந்தவனே ஆண்டி. வாழவைக்க வந்தவன் ஆண்டியாகிய ஆண்டவன். தான் ஆண்டியாகி நம்மைத் தடுத்து ஆட்கொள்கிருனே. இதன் விந்தைதான் என்ன? இதனை யாரால் அறியமுடியும்.

முருகப்பெருமான் தன்னை வைதாரையும் அங்கு வாழவைப்பான் என்பதினை எடுத்துக்காட்டி உலகிற்குப் போதிக்கவே ஐந்தாவதாக,

அசுர சூர விபாடணனே

என்று அழைக்கின்ருர்.

தேவர்களுக்குள்ள தெய்வீக குணங்களோ வெனில் அஹிம்ஸை—இந்திரியநிக்ரஹம்—தயை- தாக்ஷிண்யம்- பக்தி—ஞானம் — தபஸ் — தியானம் – அன்பு- அருள் என்பவைகளேயாகும். இக்குணங்கள் எவரிடத்தில் யில்லையோ அவர்களே அசுரர்கள் ஆவார்கள்.

அசுரகுணங்களையுடையவர்களே அசுரர்கள் ஆவார்கள். தீய குணங்களினுலேயே ஒருவன் அசுரனுகிவிடு

கிருன். ஆனுல் சூரனே வெனில் தீய குணத்தினுல் மட்டும் அசுரன் அல்ல. குலத்தினுலேயே அசுரனுயிருக்கிருன். பிறவியிலேயே அசுரனுகவுள்ள சூரபத்மா ஸுரனேவெனில் அண்ட சராசரங்களிலுள்ள தீய குணங்களுக்கு எல்லாம் இருப்பிடமானவன். கொடுமையும், மாயாசக்தியும், பராக்கிரமும், பயங்கர ரூபமும் சூரபத்மனுடைய இயல்பான ஸ்வரூபமாகும்.

மும்மூர்த்திகளுக்கும் பயப்படாமல் அண்ட சராசரங்களையும் நடுநடுங்கச் செய்து வந்த அந்த அஞ்சா நெஞ்சம் படைத்த மாபெரும் சூரபத்மா சூரனைக்கண்டு மெய்ச்சுடர் ஒளியாய்விளங்கும் செல்வக் குமரன் அஞ்சினுன்இல்லை. தமது திருக்கரத்தில் தாங்கி வந்த சுட்டெரிக்கும் சுடர் வேலை சூரபத்மனின் இரும்பு போன்ற மார்பில் விட்டெறிந்து அம்மாபெரும் சூரனின் உடலை இரு பாகங்களாகப் பிளந்துபெயர்த்து எறிந்தான்.

அந்த இடத்திலேயே சூரபத்மாசூரனின் பராக்ரமமும் அகங்காரமமகாரமும் அக்ஞானமும் மடிந்து மண்ணேடு மண்ணுய் விட்டன. மிஞ்சி நின்றது சூரனின் இருபாகங்களாகிய தேகமே.

பன்னிருகைபாலகன் அவ்வுடலைக் கருணை கூர்ந்து நோக்க, புத்துயிர்பெற்று ஒரு பிளவானது மயிலாகவும், ஒரு பிளவு சேவலாகவும் உருவத்தினையடைந்து பன்னிருகை பாலனின் திருவடிகளை வந்து சரணமடைந்தன.

தஞ்சமென்று வந்தடைந்தவற்கு சரணுலயம் அன்ருே முருகப்பெருமான். எனவே மயிலைத் தமது வாகனமாகவும், சேவலை தமது வெற்றிக்கொடியாகவும் அன்புடன் ஆட்கொண்டு முக்தியை அடையும் விஷயத்

தில் சூரனுக்கு நிகர் எவருமேயில்லை என்பதினை உலகிற்கு எடுத்துக்காட்டி ஆளுகின்ற அண்ணல் அன்றோ செல்வக்குமரன்.

சூரபத்மாசுரனை ஸம்ஹாரம் செய்வதற்கு முன்பு ஒவ்வொரு சமயம் ஒவ்வொருவர் மயிலாகவும் சேவலாகவும் முருகப்பெருமானுக்கு இருந்து வந்தார்கள். அப்படி அவர்கள் மாறி மாறி இருந்தது காலத்தையும் தேசத்தையும், ஸம்பவத்தையும் காரணத்தையும் ஒட்டி ஏற்பட்டதேதானாகும்.

ஆனால் சூரபத்மாசுரனை மயிலும் சேவலுமாகத தமது பன்னிருதிருக்கரத்தினால் எடுத்து ஆட்கொண்ட பிறகு முருகப்பெருமானுக்கு வாகனமாகவும் வெற்றிக் கொடியாகவும் இருந்து வருவது சூரபத்மனேதானாகும். சூரஸம்ஹாரத்திற்கு பிறகு அப்பதவியையடைய யாராலும் முடியாது.

எனவே மேலான ப்ரமாணங்களாகவும், ப்ரளய காலத்திலும்கூட அழியாதவைகளாகவும், இறைவனுடைய மூச்சாகவும் விளங்கிவருகிறதாகவும் உள்ள வேதங்கள் முதன் முதலில் வகித்த மயில் வாகன ஸ்தானத்தையே சூரபத்மாசுரன் அடைந்திருக்கிறான் செல்வக் குமரனின் திருவருளினால் என்பதினை எடுத்துக் காட்டவும், அத்தகைய உயர்ந்த பதவியை நாம் முருகபக்தியினால் அடையமுடியும் என்பதினைக் காட்டவும் அருணகிரிநாதர் இந்தப் பாட்டில் முருகனை,

மயில் வாகனனே அசுரசுர விபாடணனே

என்றும் புகழ்ந்து அழைக்கின்றார். தனக்கு விரோதியாகிய சூரனை அப்போர்க்களத்திலேயே வாழவைத்தான். இப்பொழுதும் சூரபத்மன் எதைச் சொல்லி

வாழ்கிறுன். முருகப்பெருமானின் வாகனமாகிய மயிலும், வெற்றிக்கொடியாகியசேவலும் நானே என்று சொல்லி வாழ்கின்ருன்.

எத்தனே கருணே செல்வக்குமரனுக்கு. இதனுல் தான் அருணகிரியார் திருப்புகழில்,

வைதாரையும் அங்கு வாழவைப்போன்

என்று வாயார போற்றிப் புகழ்கின்ருர் முருகனே.

எனவே ஏ முருகா, உன் பெருமையை நான் நன்கு அறிவேன். நீ ஒருவனே முக்திநெறியை அறிவித்து என்னுடைய சித்த மலத்தைப் போக்கடிக்கவல்லவன். ஆதலால் நான் உன்னே யாசிப்பது யாதெனில் முக்தி நெறியைக் காண மூலகாரணமாயுள்ள உனது இரண்டு பாதங்களே எனக்குத் தந்து அதனே வாழ்த்தி வணங்க அருள்புரிய வேண்டும்.

எதை நினைக்கமுடியாதோ, எதை மறக்கமுடியாதோ, அதுவே முக்தி நெறியாகும். நினேப்புண்டேல் மறதி உண்டு. மறதி உண்டேல் நினேப்புண்டு. நினேவில் தோன்றுவது அனேத்தும் பொய்யே. தோன்றினவைகளே பின்பு மறையும். எனவே அதுவும் பொய். தோன்றுவதும் மறைவதும் எதில். நித்தியமான பரம்பொருளில். தோன்றினதைப் பார்க்கும்கால், தோன்றிய பொருள் — தோன்றிய இடம்—தோன்றிய பொருளினே பார்க்கிறவன் என்று பேதஞானம் வளர்ந்து கொண்டே போகின்றது. எனவே 'கருதா மறவா நெறி' என்ருர். பொருளோவெனில், பேதஞானம் கடுகளவும் உண்டாவதற்கு இடமில்லாமலிருக்கிற கேவலம் எல்லாம் நானே என்ற அத்வைத ஞானத்தையே 'நெறி' என்ற சப்தத்தால் அறியவேண்டும். அத்தகைய அத்வைத ஞான அநுபூதி நிலேயைத் தந்

தருளவேண்டும் என்பதையே காண என்ற பதத்திஞல் அறியவும். எனவே கருதா மறவா நெறிகாண என்ருர்.

எனவே ஞானபண்டிதஞகிய முருகப்பெருமான் உபதேசிக்கும்,

சும்மா இரு சொல்அற

என்ற மந்திரமே முக்திநெறியாகும். இம்மந்திரத்தின் மெய்ப்பொருளே முருகப்பெருமான. இந்த மந்திரத்தின் ஸ்வானுபவமே கந்தர் அநுபூதி.

எனவே "சும்மா இரு சொல்லற" என்ற மந்திரத்தின் ஸ்வானுபவமே,

அஹம் ப்ரஹ்மாஸ்மி

என்ற நிலையாகும். அதாவது நான் பரம்பொருளாய் இருக்கிறேன் என்பது பொருளாகும்.

இந்நிலையை அடைவதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அதுதான் முருகப்பெருமானின் திருவடிகளையே சரணம் அடைவது. முக்தி நிலையத்தை முருகப்பெருமான் தமது திருவடிகளிலேயே வைத்திருக்கிருர். முக்தியானது முருகனின் திருவடிகளில் புகுந்து எழுகின்றது. இதனை மிகவும் அழகாக அருணகிரிநாதர் 'வனசம்' என்ற பதத்திஞல் சூசனம் செய்துகாட்டுகிருர். வனம் என்ருல் ஜலம். ஜம் என்ருல் பிறப்பு. காரணத்தை மேற்கொண்டு இது தாமரையை உணர்த்துகிறது.

எனவே முக்திநெறியை அடைய அதற்குக் காரணமாயிருக்கிற முருகனின் திருவடிகளையும் யாசிக்கின்ருர். இவ்விதம் சொல்வதிஞல் முக்திநெறியானது

முருகனின் திருவடிகளிலிருந்து எழுகின்றது என்பது உணர்த்தல் ஆயிற்று அன்றோ! எப்படியெனில் முருகனின் இரு திருவடிகளேயும் பாட்டில் தாமரைகளாக வர்ணித்தபோதிலும், நேரடியாகத் தாமரை என்று வர்ணிக்கவில்லை. வனசம் என்று காரண இடுகுறியாய் சொல்லித் தாமரையை உணர்த்தியதினுல். மேலும் காரண இடுகுறியாய் தாமரையைச் சொன்னதினுல், தாமரையைக் காணவேண்டுமானுல் அதற்குக் காரணமாயுள்ள ஜலத்தை நாம் காப்பாற்றவேண்டும். நதியிலோ கடலிலோ தாமரையைக் காணமுடியாது. குளமோ குட்டையிலோதான் தாமரையைக் காணமுடியும். அதாவது சலனமற்றுத் தேங்கி நிற்கும் தடாகத்திலோ குட்டையிலேயோதான் தாமரை ஜீவித்துக்கொண்டிருக்கும். ஜலம் ஒரு இடத்திலும் தாமரை ஒரு இடத்திலும் காணமுடியாது.

எனவே முக்திநெறியைக் காணவேண்டுமானுல் முருகனின் இரு திருவடிகளாகிய தடாகத்தில் நாம் இடைவிடாமல் பக்தியாகிய நீரை ஊற்றிக்கொண்டே இருந்தோமாகில், அத்திருவடிகளாகிய தடாகத்தில் அருள்நீரானது வற்ருமல் ஊற்றுவிட்டுக்கொண்டே இருக்கும். அவ்வூற்றிலிருந்து முக்திநெறியின் முடிவு நிலையைப் போதிக்கும் சும்மா இரு சொல்லற என்ற மந்திரம் எழுகின்றது. இதன் தத்துவமோவெனில் முருகனின் திருவடிகளில் நமது உள்ளத்தைப் பறி கொடுக்கவேண்டும். அப்பொழுது முருகன் முக்தி நிலயத்தையே நமக்குப் பறிகொடுத்துவிடுகிருன்.

பக்திநெறியே முக்திநெறியை அளிக்கிறது. அதாவது பக்திநெறி முக்திநெறியாக மாறி முடிவில் பரம் பொருளாய் நிற்கின்றது என்பதில்,

முத்திநெறி அறியாத மூர்க்க
ரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப்
பழவினைகள் பாறும் வண்ணஞ்
சித்தமலம் அறிவித்துச்
சிவமாக்கி எனையாண்ட
அத்தன் எனக்கருளியவா
ருர் பெறுவார் அச்சோவே

என்ற ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளுடைய அருள் வாக்கே மேலான ப்ரமாணமாகும்.

ஆதலால் ஏ முருகா! எனக்கு உன்னுடைய இரு திருவடித் தாமரைகளைத் தருவதற்கு என்று திருவுள் ளங் கொள்ளப் போகிருய். நான் உன்னருளைப் பெற அருகதியற்றவன் என்று தள்ளிவிடாதே ஐயனே.

கல்லாப் பிழையுங் கருதாப் பிழை
யும், கசிந்துருகி நில்லாப் பிழையு நினை
யாப் பிழையு நின் அஞ்செழுத்தைச்
சொல்லாப்பிழையுந் துதியாப் பிழையுந்
தொழாப் பிழையு மெல்லாப் பிழையும்
பொருத்தருள்வாய் கச்சியேகம்பனே.

என்று பரமஞானியான பட்டினத்தார் சொல்வது போல் நான் செய்யாத பிழையே இல்லை ஐயனே. என்ன பிழை செய்தால் என்ன. பெற்றவன் நீ அல்லவா. நீயே என் பிழையை பொறுத்து என்னை வாழவிட் வில்லையென்ருல் யார்தான் என் பிழையைப் பொறுத்து என்னை ஆட்கொள்ளப் போகிருர்கள்.

சூரபத்மனைத் தடுத்து ஆட்கொண்டு அவனுக்கு உன் திவ்யமங்களகரமான பொலிவுடன் கூடிய திரு மேனியை என்றென்றும் தாங்கிக்கொண்டிருக்கும் பாக்கியத்தைக் கொடுத்தருளினையே. அது போல் என்னையும் நீ ஆட்கொள்ளக் கூடாதா. முருகா முருகா என்று கதறி அலறுகிறேனே. என்னுடைய அபயக் குரல் நின் செவிப்பில் செல்லவில்லையா, நின் திருவருளையே ஸதாகாலமும் மேலான சரணமென்று எண்ணி வருகிற எனக்கெப்பொழுது உனது பாத கமலங்களைக் காட்டி அருளப் போகிறாய். எனது உயிருக்கு அமுதமாய் விளங்கும் செல்வக்குமரனே, குன்று தோறாடல் மேவும் மாணிக்கமே. குறை தீர்த் தருளும் குன்றாத செல்வமே. எப்பொழுது உனத் திருவடிகளாகிய தாமரையை என் சிரஸில் வைத்து அருள நீ மனம் கொண்டு முன் வரப்போகிறாய். உன் திருவடியே எனக்கு என்றென்றும் உறுதி என்றிருந்துவரும் என்னைக் கைவிட்டுவிடாதே முருகா, நீயே எனக்கு சரணம், நீயே எனக்கு அபயம், நீயே எனக்கு கதி, நீயே என் மாறிலாத செல்வம்.



# மாபெரும் சிந்தனையில் குமரனின் கழலை எண்ணுதல்

## 22



காளைக் குமரேச னெனக் கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல் வள்ளிபதம் பணியும்
வேளைச் சுர பூ பதி மேருவையே.

### பதவுரை

சுர—விண்ணுலகிற்கும், பூ—மண்ணுலகிற்கும், பதி—தலைவனாயிருக்கிற, மேருவை—மேருமலைபோல் திண்மையும் கம்பீரமான தோற்றமும் தனக்கு நிகர் யாருமில்லை என்ற வானளாவும் தன்மையும் நெஞ்சம் கலங்காமையும்கொண்டு விளங்குகின்ற முருகப்பெருமானை, அதாவது அத்தகைய முருகப்பெருமான், பாளைக்குழல்—பாளை போன்று மிகவும் நீண்டதாயுள்ள கூந்தலையுடைய, வள்ளி—வள்ளிதேவியின், பதம்—பாதங்களை, பணியும்—(அவ் வள்ளிதேவியின் பாதங்

களின் வைப்பின் ஓர் ஒப்பற்ற அழகினைக்கண்டு, அவ்வழகில் ஈடுபட்டு அப் பாதங்களின் அவ்வழகினை அனுபவித்துக் கொண்டேயிருக்க எண்ணங்கொண்டு அப் பாதங்களை அடைந்து) பணிந்துகொண்டிருக்கிற, வேளை—வேளையில் அதாவது வள்ளிதேவியின் ச்ருங்கார ரஸத்தினைப் பானம் செய்துகொண்டிருக்கிற வேளையிலும்,

அப்படியே

பாளைக்குழல் வள்ளி—பாளை போல் மிகவும் நீண்ட கூந்தலையுடைய வள்ளிதேவியானவள், சுர பூபதி மேருவை—விண்ணுலகத்திற்கும் மண்ணுலகத்திற்கும் அதிபதியாயிருக்கிற மேருமலை போன்ற முருகப்பெருமானை, ஏ—அடைந்து, பதம்—குன்றுத இளமை–மணம் — மாறிலாத அழகு–தெய்வீகத்தன்மை இவைகளுடன் விளங்கும் மங்கள விக்ரஹமாகிய முருகப்பெருமானின் மார்பாகிய ஸ்தானத்தில், பணியும்—தன்னுடைய குடங்கள் போன்ற இரண்டு ஸ்தனங்களும் நன்றாக அமையும் வண்ணம் ஆலிங்கனம் செய்து ச்ருங்கார ரஸத்தினால் முருகனை ஸ்நானம் செய்யவைத்து தன்னுடைய பாளைபோன்ற நீண்ட கூந்தலின் அழகை முருகன் பார்த்து தமது கையினால் தடவுவதற்கு ஏற்றவாறு முருகனின் தோளில் தலைசாய்ந்த வண்ணமாய் இருந்து வருகிற, வேளை—வேளையிலும்கூட (உன்னை) காளை என—காளைப் பருவத்தையுடையவன் என்றும், குமரன் என—அஞ்ஞானத்தை அழிப்பவன் என்றும், ஈசன் என—சிற்றெறும்பிலிருந்து ப்ரும்மா பர்யந்தமுள்ள ஸகல பிராணிகளுடைய ஹ்ருதயபுண்டரீகத்தில் கேவலம் சாக்ஷியாகயிருந்துகொண்டு அந்த அந்தப் பிராணிகளை அவர் அவர்களுடைய கர்மாவையனுஸரித்து அந்த அந்தக் கார்யங்களில் ப்ரவ்ருத்திக்க வைக்கின்ற பரமேச்வரனென்றும், கருதி—எண்ணி, தாளை—(அம்முருகக்கடவுளுடைய) திருவடிகளை, பணிய—(மனது-வாக்கு-காயம்) இவைகளைக்கொண்டு வணங்கும் வண்ணமுள்ள, தவம்—புண்ணிய தவநிலையை, எய்திய—(அடியேனுக்கு) தந்தவிதம் ஒன்று இருக்கிறதே, ஆ—அது மிகவும் அதிசயப் படத்தக்கதே ஆகுமன்றோ.

சிவசக்தி ஐக்கிய தியானமே உபநிஷத் தியானமாகும் என்பதே பொருள்.

**தாத்பர்யம்:**

கந்தர் அநுபூதியில் இப் பாடலானது பூர்ண சந்திரன் போல் ஸகல பிராணிகளுடைய உள்ளங்களை ஆனந்திக்கச் செய்யும் மஹா மந்திரமேயாகும். இதைப் பொருள் உணர்ந்து திருப்பித் திருப்பி பாராயணம் செய்பவர்கள் தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்று சொல்லப்படும் அறம் பொருள் இன்பம் வீடு என்பவைகளை க்ரமமாக அடைவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை என்பதால் இப்பாடலே இதற்கு மேலான ப்ரமாணமாகும்.

பரம்பொருளாகிய முருகப் பெருமானின் பட்ட மஹிஷியான ஸ்ரீ வள்ளி தேவியின் அபரிமிதமான ஸௌந்தர்யத்தை வர்ணித்து, அந்த ஸௌந்தர்யாதிசயத்திலே ஸகலவிதமான ஸௌபாக்யமும் குடிகொண்டிருக்கிறதென்றும், கவிகளின் கற்பனைக்கு அடங்காததென்றும் கருதி ப்ரும்மா முதலான கவிகளெல்லாம் வள்ளிதேவியின் அழகை வர்ணிக்கும் தருணத்தில், அநந்வயாலங்காரத்தையே சொல்லி வர்ணிக்கிறார்கள். அதாவது தேவியின் அழகிற்கு நிகர் தேவியின் அழகேயாகும் என்று வர்ணிக்கிறார்கள்.

ஆனால் வள்ளிதேவியின் அழகின் எல்லையைக் கண்டுபிடிக்கச் சென்ற முருகப் பெருமானேவெனில் பாளைபோன்ற நீண்டகூந்தலையுடைய வள்ளிதேவியின் அன்ன நடையினால் அலங்கரிக்கப்பட்ட திருவடிகளின் வைப்பில் உள்ளம் முழுவதையும் பறிகொடுத்து விட்டார். பொருளோவெனில் வள்ளிதேவியின் திருவடியழகானது முருகப் பெருமானின் உள்ளத்தைக்

கொள்ளை கொண்டுவிட்டது என்பதேயாகும். எனவே முருகப்பெருமான் வள்ளிதேவியின் ஒப்பற்ற பாதங்களின் அழகில் ஈடுபட்டு அவ்வழகினை இடைவிடாமல் அனுபவித்து வருகிறார் அன்றோ.

அவ்விதமே வள்ளிதேவியும் முருகப்பெருமானுடைய திருவடியழகில் தன்னுடைய மனத்தைப் பறிகொடுத்து ஸதாகாலமும் அவ்வழகிய பாதங்களைப் பணிந்து முத்தமிட்டுப் பேரின்பத்தை அநுபவித்து வருகிறாள் அன்றோ!

எனவே வள்ளி–முருகன் ஆகிய இருவர்களினுடைய அழகையும் ஒரே அகண்டமான அழகு என்று அறிய வேண்டும்.

ஆதலால் முருகனை ஒட்டிச் சொல்லுங்கால்

பாளைக்குழல் வள்ளிபதம் பணியும்

என்றும், அப்படியே வள்ளியையொட்டிச் சொல்லுங்கால்

பாளைக்குழல் வள்ளி பணியும் பதம்

என்றும் பிரித்துப் பொருளினை அனுபவிக்கவும்.

எனவே வள்ளிதேவி பணியும் பதமோவெனில் முருகப்பெருமானின் திவ்ய ஸ்வருபமேயாகும்.

ஆதலால் பணியும் என்றால் முருகனுடைய இஷ்டம்போல் என்று அர்த்தம்.

இதனையனுஸரித்து வள்ளிதேவியானவள் தன்னுடைய குடங்கள்போன்ற இரண்டு ஸ்தனங்களையும் நன்றாக முருகப் பெருமானின் திருமார்பில் அமையும் வண்ணம் ஆலிங்கனம் செய்து ச்ருங்கார ரஸத்தினால் முருகனை ஸ்நானம் செய்யவைத்து, அப்படியே தன்னு

டைய பாளைபோன்ற நீண்ட கூந்தலின் அபரிச்சின்ன மான அழகை முருகப் பெருமான் பார்த்து தமது பன்னிரு கைகளினுல் தடவுவதற்கு ஏற்றவாறு வள்ளி தேவியானவள் முருகனின் தோளில் தலைசாய்ந்த வண்ணமாய் பணிந்து இருக்கிருள்.

இவ்விதம் முருகப்பெருமானே வள்ளிதேவியா கவும், வள்ளிதேவியே முருகப் பெருமாஞயும் இருக் கிருர்கள் என்பதினைப் போதிக்கவே இந்தப் பாடலை அருணகிரிநாதர் அருளியிருக்கிருர்கள்.

மேலும் ச்ருங்கார அவஸ்தையின் உச்சநிலையில் முருகப்பெருமானுடைய சரணுரவிந்தமானது வள்ளி தேவியின் முகராவிந்தத்திலும், வள்ளிதேவியினுடைய சரணுரவிந்தமானது முருகனுடைய முகராவிந்தத் திலும் லயத்தினையடைந்திருக்கும் வைபவத்தையே

'வள்ளிபதம் பணியும்'

என்றும்,

'வள்ளி பணியும் பதம்'

என்றும் சொல்லப்படுகின்றது. அதாவது வள்ளி தேவியினுடைய பாதஸ்பர்சம் முருகனுடைய முகத்தில் படும்படியும், அப்படியே முருகனுடைய பாதஸ்பர்சம் வள்ளியினுடைய முகத்தில் படும்படியும் இருந்து வருகிற நாயகி நாயக பாவாதிசயத்தையே புகழ் கின்ருர் இந்தப் பாட்டில்.

முருகனின் திருவிளையாடல்களில் ஒன்ருகிய திருவிளையாடல் இச்சாசக்தியாகிய வள்ளிதேவியுடன் பணிந்திருப்பது. சிவனும் சக்தியும் ஒன்று – அதுவே மேலான உபநிஷத்ஞானம் என்பதினை வாரி இறைக் கின்றது இந்தப் பாடல்.

வள்ளியின் அழகும் – முருகனின் அழகும் ஒன்று சேர்ந்து ச்ருங்கார ரஸத்தின் வரம்புயில்லாத இன்ப மாகத் திகழ்கின்றன.

மேலும் இச்சாசக்தியின் ஸ்வருபமே வள்ளிதேவி யாவாள். ஒவ்வொரு பிராணிகளிடத்திலும் இச்சா ஸ்வருபமாக வள்ளிதேவியானவள் பாஸித்து வரு கிருள். இச்சையானது சிற்றின்பம் பேரின்பம் என இரண்டாகப் பிரிக்கப்படுகின்றது. சிற்றின்பத்தில் ஏற் படும் மாபெரும் இச்சையே இறைவனின் அருளினுல் முடிவில் பேரின்ப இச்சையாக மாறுகின்றது. உள்ளத் தில் எழும் காதலானது இறைவனிடத்தில்உண்டாகும் பொழுது அதை தெய்வீகக் காதல் என்று சாஸ்திரங் கள் இடைவிடாமல் போதிக்கின்றன.

எனவே இச்சாசக்தியாகிய வள்ளி தேவியை முருகப்பெருமான் பணிந்தார்என்ருல், அதன் உண்மை யான பொருளோவெனில், எண்ணற்ற கோடானகோடி உயிர்களினுடைய உள்ளத்தில் எழுகின்ற ஸகல விதமான இச்சைகளையும் பூர்த்தி செய்யும் பொருட்டு முருகப் பெருமான் நிர்குணப்ரும்ம நிலையிலிருந்து கருணையினுல் ஸகுணப்ரம்ம நிலையையடைந்து பூர்த்திசெய்து வைக்கிருர் என்பதேதானுகும்.

ஆனுல் உலகிலுள்ள ஸௌந்தர்யங்களின் கூட்டமே திரண்டு ஸமஷ்டி ருபத்தில் வள்ளிதேவி யாக விளங்கி வருகின்றபடியால், வள்ளிதேவியின் ஒரு அபரிமிதமான இளமை பொருந்திய அழகிற்கு உபமானமும் இல்லை. தேவியினுடைய அழகிற்கு தேவியே நிகரானவள் அன்ருே!

அதுபோலவே முருகப்பெருமானுடைய அழகிற்கு நிகர் முருகனைக் காட்டிலும் வேருனதொன்றைச் சொல்லமுடியாது. முருகு என்ற பதத்திற்கே இளமை

பொருந்திய அழகு என்று பொருள். அந்த அழகும் அபரிச்சின்னமான அழகேயாகும்.

எனவே முருகனின் அழகை அடியார்கள் அநுபவிக்கும் விதம் வியக்கத்தக்கதேயாகும்.

வீர்யத்தில் அழகு – கோபத்தில் அழகு – ஆனந்தத்தில் அழகு – இன்பத்தில் அழகு–துன்பத்தில் அழகு-திருவிளையாடலில் அழகு-அடியார்களைத் தடுத்து ஆட்கொள்வதில் அழகு-காம்பீர்யத்தில் அழகு–கடைக்கண்ணில் அழகு–பேசுவதில் அழகு ஞானபண்டிதனுய் வருவதில் அழகு-பரம ஆண்டியாய் நிற்பதில் அழகு-பாலமுருகனில் அழகு-ஆறுமுகத்தில் அழகு-பயத்தில் அழகு-அழைப்பதில் அழகு–வரம் அளிப்பதில் அழகு-அவன் வருவதில் அழகு-வந்து மறைவதில் அழகு-மீண்டும் தோன்றுவதில் அழகு-வள்ளியை மணம் புரியச் செல்வதில் அழகு-அடியார்கள் குறை தீர்ப்பதில் அழகு-அழகினை அபஹரிப்பதில் அழகு–அழகை அளிப்பதில் அழகு-அழகுடன் ஒன்ருேடு ஒன்ருய் கலந்து திகழ்வதில் அழகு–முடிவில் வள்ளிதேவியுடன் ஐக்கியமாவதில் அழகு என்று முருகனின் அழகினை அனுபவிக்கின்ருர்கள்.

ஆதலால் இச்சா சக்தியான வள்ளிதேவியோவெனில் சரவணபவ என்ற ஷடக்ஷரீ மந்திரத்தை எண்ணிலா கோடி ஜபம் செய்து மேருபர்வதத்தைப் போல் நிஷ்டையில் நின்று எல்லாவிதமான இச்சைகளுக்கும் அதிஷ்டான தேவதையாய் விளங்கிவருவதுமல்லாமல் எல்லா இச்சைகளுக்கும் இருப்பிடமாகவும் இருந்து வருகிருள்.

மேருபர்வதத்தை உபமானமாக சொன்னதின் கருத்தோவெனில் பின்வருமாறு கூறப்படுகிறது:—

ஸாக்ஷாத் ஸர்வேச்வரனுன சிவபெருமான் மேருபர் வதத்தின் உச்சியில் வீற்றிருப்பதால் அண்டசராசரங் களிலுள்ள பொக்கிஷங்கலெல்லாம் மேருமலையில் குடிகொண்டிருக்கின்றன. அச்செல்வங்களை யெல்லாம் கடந்து கற்பனைக்கு கடந்த ஜோதியாயிருக்கிற சிவ பெருமான், சக்தி வேறு-சிவன் வேறு என்ற பேதமற்று சிவனும் சக்தியும் ஒரே அகண்டமான சக்தியென்றும், அப்படியே சிவனைப்பார்க்கும்போது, சக்திதத்துவ மானது சிவனிலும், சக்தியைப் பார்க்கும்பொழுது சிவதத்வமானது சக்தியிலும் இருக்கின்றது என்ற தத்துவத்தை,

சிவம் சாந்தம் அத்வைதம்

மேலான பிரமாணத்தனைக் கொண்ட உபநிஷத் வாக் யத்தினுல் ப்ரகடணம் செய்து கேவலம் செஞ்சுடர் இன்பப் பழமாய் விளங்கி ஜகத்தைக் காப்பாற்றி வரு கிருர் அன்ரே.

எனவே 'மேருவை' என்ற பதத்தை முருகனுக்கும் வள்ளிதேவிக்கும் அந்வயம் செய்துகொள்ள வேண் டும். இல்லலாவிடில் அருணகிரிநாதருடைய உள் ளத்தை இந்தப் பாட்டில் நாம் காணமுடியாது. ஆகையால்,

மேருவைப் போன்ற வள்ளிதேவியானவள் முருக னிடம் லயத்தையடைவதும், அப்படியே மேருவைப் போன்ற முருகப்பெருமான் வள்ளிதேவியிடம் லயத்தை அடைவதும் என்ற இன்ப லீலையாகிய திரு விளையாடலே அழகு என்பதின் நிர்தாரணு அர்த்தமாக வும் ச்ருங்காரரஸத்தின் முடிவு நிலையாகவும் ஆகும்.

ஆதலால் பாட்டில் பணியும் என்ற பதத்தை வள்ளிதேவிக்கும் முருகனுக்கும் அந்வயம் செய்யும்

பொழுது, தாழ்ந்து-இறங்கி—பணிந்து என்றே பொருள் கொள்ளவேண்டும்.

எனவே ஒருவனுடைய இச்சையைப் பூர்த்தி செய்ய வேண்டுமானுல் பூர்த்தி செய்கிறவன் தன்னுடைய நிலேயிலிருந்து இறங்கிவந்துதான் பூர்த்தி செய்ய முடியும் அல்லவா.

கருணேயினுலோ அல்லது விருப்பமில்லாமலோ ஒருவன் ஒருவனுடைய இச்சையை பூர்த்தி செய்வானேயானுல், அதனே நாம் பணிந்து பூர்த்திசெய்தான் என்று சொல்ல முடியாது. இ்.து உலக அனுபவமன்ருே!

எனவே பாட்டில் பணியும் என்ற பதமானது மேலான தெய்வீகத் தன்மையினேக் கொண்ட திருவிளேயாடலேயாகும். இதற்கு மாருன முறையில் எண்ணவே கூடாது.

ஆதலால் மேருமலேயைப் போன்ற முருகப் பெருமான் பரப்ரும்ம நிலேயிலிருந்து இறங்கி வந்து ஸகுணப்ரம்மமாகிய வள்ளிதேவியுடன் லயத்தை அடைகிருர். இதனுலேயே பாட்டில் பாளேக்குழல் வள்ளி என்கின்ருர். ஒரு ஸ்திரீயினுடைய கூந்தலே வர்ணிக்கும் பொழுது தலேயிலிருந்து முழங்கால் வரையிலும் அவள் கூந்தல் தொங்குகிறது என்று சொல்வது இயல்பு ஆகும். அத்தகைய வர்ணனேயினுல் இன்பத்தினேத் தரும் அந்தப் பாளேபோன்ற கூந்தலுக்கு ஆதாரம் ஸ்திரீகளுடைய சிரஸேயாகும்.

கேசவர்ணனே என்பது வர்ணனேயில் மிகவும் உயர்ந்த வர்ணனேயாகும். ஸர்வ ஸம்பத்துகளும் நிறைந்தஇடம் கேசம் அன்ருே! வள்ளிதேவியினுடைய கருங்கூந்தலின் சமூகத்தின் நெற்றியிலிருந்து இரண்

டாகப்பிளந்து மத்தியில் ஓடுகின்ற ஸீமந்தஸரணியின் அழகில் முருகனுடைய அழகானது லயத்தையடை கின்றது.

வள்ளிதேவியினுடைய கேசத்தின் உத்தமமான வர்ணனையே பாளைக்குழல் என்பது. பாளைபாளையாக நீண்ட கூந்தலை உள்ள வள்ளிதேவியினுடைய கேச மானது இயற்கையிலேயே கருப்பாகவும் பரிமளமான மணத்தோடும், மிருதுவாகவும் மற்றும் அனேக வைப வங்களுடன் கூடினதாகவும் இருந்து வருகிறது. இத் தகைய அழகினைக்கொண்ட கூந்தலினைக் கண்டே முருகன் வள்ளிபதம் பணிகின்றான். எனவே வள்ளி யின் அழகும் முருகனை அடைந்து பணிகின்றன. அதா வது ஞானப்பாலினைக் கொண்டதாயும், ஸ்வர்ணகல சங்கள் போலியிருக்கின்றதாயுமுள்ள வள்ளிதேவியின் இரண்டு ஸ்தனங்களும் முருகப்பெருமானின் திருமார் பில் நன்றாக அமைந்து விளங்கும் வண்ணம் வள்ளி தேவியானவள் முருகப்பெருமானை ஆலிங்கனம் செய்துகொண்டால்தான் 'பாளைபோல் நீண்ட அத்தேவி யினுடைய கூந்தலின் மேலான லாவண்யாதிசயத்தை முருகப்பெருமான் கண்குளிரப்பார்த்து தன்னுடைய பன்னிருகைகளினாலும் தடவி அனுபவிக்க முடியுமே தவிர, அன்னியில் முடியாதன்றோ!

மேலும் வள்ளிதேவியின் பாளைக்குழலின் இயல் பான அழகும்-மணமும்-மிருதுத் தன்மையும்-தெய்வீக மான வசீகரணசக்தியும் கொண்ட பின்னலங்காரவைப வமும், அப்படியே கும்பங்கள் மாதிரியுள்ள ஸ்தனங் களினைக் கொண்ட முன்னலங்கார வைபவமும் முருக னிடத்தில் லயத்தை அடைந்தால்தான் வள்ளிதேவி யின் அழகினை அழகு என்று சொல்லமுடியும்.

ஆதலால் தெய்வீகத்தினைக்கொண்ட ச்ருங்கார ரஸத்தின் மேலான அத்வைத பாவநிலையையே அருண கிரிநாதர் இந்த அநுபூதியில்

பாளைக்குழல் வள்ளிபதம் பணியும்

என்ற அர்த்தத்தில் முருகனையும், அப்படியே

பாளைக்குழல்வள்ளி பணியும்பதம்

என்ற அர்த்தத்தில் வள்ளிதேவியையும் அங்வயம் செய்து, வள்ளிதேவியில் முருகனையும், முருகனில் வள்ளிதேவியையும் ஐக்கியம் செய்து அவ் இன்ப நிலையையே ஆனந்த ஸமுத்திரம் என்று போதிக் கின்றார். இந்த விஷயத்தில்

ரஸோவை ஸஹ:

என்ற வேதவாக்கியமே மேலான ப்ரமாணமாகும்.

எனவே பாளைக்குழல் வள்ளிபதம் பணியும் என்பதினால் கேவலம் அத்வைத ஐக்யஸாக்ஷாத்காரத் தினால் போதிக்கப்படுகின்ற இன்ப நிலையே மோக்ஷ மென்று சொல்லப்படும் பாரமார்த்திகமான புருஷார்த் மாகும். இதுவே அஹம் ப்ரஹ்மாஸ்மி என்ற நிலை.

எனவே அஹம்ப்ரஹ்மாஸ்மி என்ற இன்பநிலை யையே குறிக்கோளாகக் கொண்டு செய்யப்படும் நாயகி–நாயக ஐக்யமாகிய ச்ருங்காரயனுபவத்தின் லீலையானது, ஜீவனும்-ப்ரும்மமும் ஒன்று என்று போதிக்கும் தத்வமஸி என்று வேதத்தில் சொல் லப்படும் தத்வமஸிஎன்ற உபதேசவாக்கியமேயாகுமே தவிர அன்னியில் கேவலம் சிற்றின்பத்தைத் தரும் லீலையாக ஒருகாலத்திலும் ஆகவே ஆகாது. ஆகவும் முடியாது.

இத்தகைய மஹிமை கொண்ட வேதவாக்கியத்தையே முருகப்பெருமான் சொற்சுவையுடனும் பொருட்சுவையுடனும் அருள்சுவையுடனும் கூடிய இன்பமயமாகிய அருந்தமிழினுல்,

சும்மா இரு சொல் அற

என்று அருட்செல்வமாகிய அருணகிரிநாதருக்கு உபதேசித்தார். இம்மந்திர உச்சாரணையே நம்மைத் தவமெய்தினவர்களாகச் செய்யும். முருகப்பெருமானின் அருள் இல்லையேல், இம்மந்திரத்தை நாம் எத்தனை கோடி ஜன்மாவெடுத்தாலும் அறியவோ அனுபவிக்கவோ முடியவே முடியாது என்பதில் சிறிதும் ஐயமில்லை. இது ஸத்தியம்.

எனவே ஏ முருகா, நீ எந்த வேளையிலும் எனக்கு காளைக்குமரேசனுகவே காட்சி அளிக்கிருய்,- நீ வள்ளி பதம் பணிந்து திருவிளையாடல் செய்யும் பொழுதும், நீ ஞானபண்டிதனுய் வந்து அருளும் பொழுதும், எனக்குக் குமரேசனுகவே தோன்றுகிருய். இவ்விதம் எவ்வேளையிலும் நீ எனக்கு ஒரேமாதிரியாகவே தோன்றுகிருய் முருகா.

செவ்வேளாயாகிய உன்னை எவ்வேளையிலும் நினைக்கும் பாக்கியத்தை எனக்குத் தந்தருளிஞயே முருகா.

முருகா, நான் உன்னை எவ்விதம் கருதி வணங்கி வாழ்த்துகிறேன் தெரியுமா.

எவ்வேளையிலும் உன்னைக் காளைக் குமரேசன் எனக்கருதியே வாழ்த்துகிறேன். சுரபூபதியே, உன்னை இடைவிடாமல் சரணமடைகின்ற தேவர்களுக்கு நீ மேருபர்வதம்போல் இருந்து அவர்களுடைய இன்னல்களைப் போக்கடிக்கின்ருய்.

காளைக்குமேரேசனே, உன்னை நினைக்கும் வேளை யெல்லாம் நல்லவேளை அப்பனே. உன்னை மறக்கும் வேளையெல்லாம் மரணவேளையாகவே யிருக்கின்றது ஐயனே.

ஹே குமரா! நீ என்றும் குமரனுகவே இருக் கின்ருய். அதுவும் காளைக்குமரனுக இருக்கின்ருய். மேலும் ஈசனுகவும் இருக்கின்ருய் என்று புகழ்கின்ருர் அருணகிரியார்.

எனவே காளைக்குமரேசன் என்பதின் தத்வார்த்தமோ வெனில்:— காளையென்ற சப்தமானது நல்ல யௌவன பருவத்தையே குறிக்கும். எனவே எந்தப்பருவத்தில் ஒருவனிடம் பயமில்லாமை—கட்டழகு—வீரம்—தைரியம் பலம்—தலைநிமிர்ந்துபேசுதல்-சுறுசுறுப்பு—சக்தி—மேதை கம்பீரமான தோற்றமும்-அப்படியே கம்பீரமான பார்வையும் விளங்குகின்றதோ அவனை நல்ல காளைப்பருவத்தை அடைந்தவன் என்று சொல்லு கிரேும்.

அதுபோலவே குமரன் என்ருல் நல்ல யௌவன பருவத்தை உடையவனென்றும், இளமை மாருமல் என்றும் பதினுறு வயசு உடையவ்ன் என்றும் பொருள்.

அப்படியே ஒவ்வொரு பிராணிகளுடைய ஹ்ருத யத்திலும் இருந்துகொண்டு, அந்த அந்தப் பிராணி களைப்பொம்மைகள் போல் ஆட்டிவைத்துக்கொண்டு ஒருவன் இருக்கிருன். அவன் எல்லா ப்ராணிகளுக் குள்ளும் இருக்கிருன். எல்லாரிடத்திலும் இருந்து ஆட்டிவைக்கிருன். அவன் அசையவில்லையானுல் எதுவுமே அசையாது. அவன் ஆட்டுகிறதனுல்தான்

எல்லாம் ஆடுகின்றன. அந்தப் பரம்பொருளுக்குத் தான்ஈச்வரன் என்று பெயர். ஈச்வரனே ஈசனாகுவான். எனவே காளைக்குமரேசன் என்றார். முருகன், அவன் ஸ்வருபமாகவே உலகம் நிலைத்து நிற்கின்றது. இதனைத் தமிழ் மறைகள்,

ஈசனெனக் கருதி யெல்லா
உயிர்களையும் நேசத்தால்
நீ நினைந்து கொள்

எனவும்

எப்பொருள்களுந் தானாகி
யிலங்கிடப்படுவன் ஈசன்

எனவும்

ஊனாயுயிரானாய் உடலானாய் உலகானாய்

எனவும்

ஆலயமே காயம் அறிவே சிவலிங்கம்

எனவும் போதிக்கின்றன. ஆதலால் எவ்வேளையிலும் முருகப்பெருமான் ஞானமூர்த்தியாய் விளங்கி ஞான பண்டிதனாய் அருள்கிறார்.

ஈசருடன் ஞானமொழி
பேசும் முகம் ஒன்றே

என்று புகழ்கின்றார் அருணகிரியார். ஞானச்செல்வனும் ஈசான சீலனும், லீலாமூர்த்தியும் செல்வக் குமரனல்லவா.

மேலும் இந்தப்பாட்டில் 'காளை' என்ற சப்தத்தில் தொடங்குகிறது. இது மிகவும் மங்களகரமானது. மேரு என்ற பதத்தில் முடிகிறது. இது அதைவிட மங்களகரமானது. அநுபூதியானது அருந்தவத்தினால்

அடையக்கூடியது. எனவே இதன் பொருள் ஞானத்தையே நாடி நிற்கும் அன்ரே. த்வனியர்த்தம் முக்தியை அடைய வழிகாட்டி. மஹான்கள் த்வனியர்த்தத்திலேயே இன்பத்தைக் காண்பார்கள். எதைப்போலென்ருல், இவ்வுல அழகினைக் கண்டு அவர்கள் ஒரு அளவுதான் மகிழ்வார்கள். ஆனுல் அவர்கள் முழுதும் மகிழ்வது இவ்வுலகத்தைப் படைத்த இறைவனின் பெருமையைக் கண்டேயாகும்.

எனவே 'காளை' என்ருல் ரிஷபத்தை நினைவூட்டுகிறது. நாலு பாதங்களுடைய தர்மத்தை நாலுகால்களாகக் கொண்ட ரிஷபமோவெனில், புண்ணியங்கள் அனைத்தும் திரண்டு ஒன்றுசேர்ந்து எண்ணவொண்ணுத மேருபர்வதமாக பாஸித்து வருகிறது. அம்மேரு பர்வதத்தின் மேல் தர்மமூர்த்தியாக காளையாகிய ரிஷபம் தர்மத்திற்குமேல் ஒன்றுமேயில்லை என்பதினை தர்சனமாத்திரம் உபதேசித்தருளும் வண்ணம் தலை நிமிர்ந்து நிற்கும் வைபவத்தை யாரால் வர்ணிக்க முடியும்.

அத்தகைய ரிஷபத்தின் மேல் 'சிவன்–சக்தி' என்ற பேதமற்று சிவன் இல்லையேல் சக்தியில்லை— சக்தியில்லையேல் சிவன் இல்லை என்று உன்னதமான பரம்பொருளாய் சிவபெருமான் சிவசக்தி ரூபமாய் கேவலம் ஞானச்சுடராய் விளங்கி வருகிருர். இச்சிவ பெருமானையே மறைகளெல்லாம் ஈசனுக்கு ஈசன் என்று புகழ்கின்றது.

இவ்விதம் மஹா மஹிமை தங்கிய ஈசனுகிய சிவபெருமானுக்கே ஈசனுய் விளங்கி வருகிருன் ஒருவன். அவன் யார்? அவன்தான் என்றும் பதினுறு வயதினையுடைய குமரன். அவன் எப்பேர்ப்பட்டவன்?

அவன் காளை போல் பயமற்றவன். அதாவது காளை யானது தர்மத்தின் ஸ்வரூபமானதினுலும், தர்மமா னது எதற்கும் தலைவணங்காது என்பதினுலும், தர்ம மானது எல்லாவற்றிற்கும் மேலானது என்பதினுல் பயமற்றது என்பதினுலும், அந்தத் தர்மத்தையே முரு கப்பெருமான் வேல்வடிவமாகத் தன் கையில் தாங்கி வருவதினுல் எதனைக் கண்டும் அஞ்சாத வண்ண முள்ள நெஞ்சத்தினைக்கொண்டு தனக்கு நிகர் எவரு மேயில்லையென்று ரிஷபமாகிய காளைபோல் விளங்கி வருகிருர். இதனுல்தான் அருணகிரியார் காளைக் குமரன் என்று புகழ்கின்ருர்.

மேலும் காளைக்குமரனைப் பார்த்தால், சிறிய வய துடன் தோன்றுகிருன் ஆகிலும் குமரனுடைய சக்தியை அளவிடும்போது, அச்சக்தியானது அளவுக்கு அடங்காமல் மேன்மேலும் அதிகரித்துக் கொண்டே இருக்கிறது.

எனவே குமரனுடைய மூர்த்தி சிறியதானுலும் கீர்த்தியைப் பார்க்கும்கால் அது பெரிதுக்கும் பெரி தாகவே இருந்து வருகிறது.

இச்சா சக்தி-க்ரியா சக்தி-ஞான சக்தி என்ப தினைப் பேசும்போது அவ்விடத்தில் சரீர தர்மத்தை யொட்டிய வயதிற்கு, ப்ராதான்யமே இல்லை அன்ருே!

தேஜஸாம் ஹி ந வயஸ்ஸமீக்ஷ்யதே

என்ற சாஸ்திரமே மேலான ப்ரமாணம்.

ஆதலால் குமரன் என்ற பதத்தினுல் யுவனுக யிருந்து வ்ருத்தர்களான சிஷ்யர்களுக்கு, மௌன நிலையுடன் தமது சின்முத்திரையினுல் தத்வமஸி என்ற மஹா வாக்கியத்தை உபதேசித்தருளும் ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தியென்றே அறியவேண்டும். அந்த

குமரனுகிய தக்ஷிணு மூர்த்திக்கே எண்ணவொண்ணுத ப்ரும்மதத்வமாகிய ஓம் என்ற பிரணவத்தின் உண்மைப்பொருளை உபதேசித்தருளிய ஞானபண்டிதனுகிய செல்வக்குமரனையே ஈசன் என்ற பதத்தினுல் புகழ்கின்ருர் அருணகிரியார்.

இவ்வித வைபவங்களுடன் முருகப்பெருமான் காளைக்குமரேசனுக விளங்கி வருகிருர்.

எனவே எண்ணற்ற ஜன்மங்களில் பக்தியோடும் சாஸ்திரத்தில் சொல்லியபடி தானதர்மங்களை ஈச்வர ஆராதனருபமாக ஆகும்படி எவர்கள் செய்து வந்தார்களோ, அப்பேர்ப்பட்ட புண்ணியவான்களுடைய உள்ளத்தில்தான் முருகப்பெருமான் தோன்றுவார். பூர்வபுண்ணியம் ஒன்றே முருகபக்தியை உண்டு பண்ண சக்திவாய்ந்தது. முருகபக்தியே எல்லாவற்றிற்கும் மேலானதாகும்.

ஆகையினுல் ஏ குமரா, நான் என்ன தவம் செய்தேனே தெரியவில்லை, விஷயாதிகளில்போய்க்கொண்டிருக்கும் எனது மனதை உனது இரு திருவடிகளில் லயிக்க வைத்தாயே. உன் கருணைதான் என்ன.

முருகா! எனது நாவானது ஸதாகாலமும் குமரேசாய நம: குமரேசாய நம: என்று இடைவிடாமல் உச்சரித்துக்கொண்டே இருக்கிறது. அதன் மஹிமையினுல் நீ என் உள்ளத்தில் காளைக்குமரேசனுகத் தோன்றி இன்பத்தினை உண்டுபண்ணுகிருய். இந்நிலையில் உன்னைக் குமரேசனுக நான் என் உள்ளத்தில் தியானித்து மகிழ்கின்றேன்.

எனவே ஏ குமரா! உன் ஸ்மரண மஹிமையினுல் நான் என்னுடைய உயிர் உடல் ஆவி அனைத்தையும் உன் திருவடிகளில் அர்ப்பணம் செய்கிறேன்.

குமரா, பரமோத்க்ருஷ்டமான உன்னுடைய திருவடிகளையே நான் சரணாலயமாக அடையும் ஒரு புண்ணியத்தை எனக்குத்தந்தருளினாயே இஃது உனது கருணையே ஆகும். உன்னை வணங்கும் தவப்பயனைத் தந்தருளிய உனக்குநான் என்ன கைம்மாறு செய்வேன்.

நின் கருணையை நினைந்து நினைந்து வியப்பினை அடைகிறேன் முருகா. இப்பொழுது நான் அடைந்திருக்கும் தவப்பயனை நிலையாக எப்பொழுதும் நான் அனுபவிக்கும்படி செய்வாய் அப்பனே.

என்னே ரமுநின் இருதாள் மலரைப்
பொன்னே யெனயான் புனையப் பெறுமோ

என்று மஹான்கள் யாசிப்பது போல், எந்நேரமும் உன்னுடைய இருதிருவடிகளையும் பொன்போல் அடியேன் முடியில் புனல இயலுமோ. ஏ செல்வக்குமரா, என்னையும் ஒரு பொருளாகக் கருதி எனக்குத் தவத்தினைத் தந்தருளினாயே. இம்மானிடப் பிறவியில் இதைவிட பாக்கியம் எனக்கு வேறென்ன இருக்கிறது. உன்னை வணங்கும் பாக்கியத்தினைத் தந்தாயே. இதை நான் யாரிடம் சொல்லி மகிழ்வேன் முருகா.



# திருவடி தியானத்திஞல் பிறவிப் பயனே அடைதல்

## 23.



அடியைக் குறியா தறியாமையிஞல்
முடியக் கெடவோ முறையோ முறையோ
வடி விக்ரமவேல் மகிபா குறமின்
கொடியைப் புணரும் குணபூதரனே

**பதவுரை**

வடிவிக்ரமவேல் மகிபா—கூர்மையும் மேலான ஆற்றலும் பொருந்திய அதிபராக்ரமத்துடன் கூடிய வேற்படையை கையிலேந்தியுள்ள அரசே!, குற மின் கொடியை—குறவர் குலத்தில் அவதரித்த மின்னல் கொடி போன்ற வள்ளி தேவியை, புணரும்—ச்ருங்காரசேஷ்டையிஞல் புணர்ந்து வள்ளியே தாஞகவும் தானே வள்ளிதேவியாகவும் இருக்கின்ற, குணபூதரனே—எண்ணிலாகோடி குணங்களுக்கு மலே போன்றவனே, அடியை—(உனது) திருவடிகளே, குறியாது—மனதில் நிலேநிறுத்தி தியானம் செய்யாமல், அறியாமையிஞல்—ஈசனுக்கு ஈசஞய் விளங்குகின்ற நின் பாதகமலங்களே மேலான முக்தி நிலேயம் என்று நான் அறியவில்லே

என்ற ஒரே காரணத்தினுல், முடியக்கெடவோ—(அரிதாகிய மானிடப்பிறவியை அடைந்த முழுப்பயனை நான் அடையாமல்) முற்றிலும் அழிந்து கெட்டுப்போவதா? அதாவது அறியாமை என்பதே அழிவிற்கு காரணம். இதில் நான் என்ன செய்யமுடியும் என்று நீ என் விஷயத்தில் பராமுகனுக இருப்பாயேயாஞல் அது முற்றிலும் தவறேயாகும், முறையோ—எனவே நான் அழிய நீ பார்த்துக்கொண்டிருப்பது உனக்கு) நியாயமாகாது, முறையோ—(குற்றங்களை ஆரோபணம் செய்து உதாஸீனனுக இருப்பது அன்னிய தேவதைகளுடைய முறை—அதை நீ கடைப்பிடித்தால் அது உனக்கு) முறையுமாகாது அழகுமாகாது.

**தாத்பர்யம்:**

கந்தர் அநுபூதியில் இப் பாடல் மிகவும் ஆச்சர்யகரமான வர்ணனையைக்கொண்டது. தவிர முருகப்பெருமானின் அருளைப் பெறுவதற்கு இப்பாடல் மந்திரம் போல் விளங்குகிறது.

“குறமின்:கொடியை’’ என்பதிஞல் வள்ளிதேவியையும், ‘வடிவேல் விக்ரம மகிபா’, “குண பூதரனே’’ என்பதிஞல் முருகனையும், ‘புணரும்’ என்பதிஞல் வள்ளிதேவி – முருகன் ஆகிய இருவர்களுடைய ஐக்யத்தையும் மிகவும் அற்புதமாக வர்ணிக்கின்ருர் அருணகிரிநாதர்.

குண பூதரனே:

எண்ணிலாகோடி குணங்களுக்கு இருப்பிடமாகிய மலை போல் விளங்குகிருன் முருகன். குணங்கள் அனைத்தும் முருகனே. முருகனிடமிருந்தே எல்லா குணங்களும் எழுகின்றன - முருகனிடத்திலேயே லயத்தையும் அடைகின்றன.

குணங்களுக்கு அப்பாற்பட்டவனும் - குணங்களுக்கு உள்பட்டவனும் - குணங்களாக இவ்வுலகில்

தோன்றுபவனும் – முருகப்பெருமானே ஆவான். ஆதலால் முருகப்பெருமானின் திருவிளையாடல்களின் மெய்ப்பொருளை நம்மால் அறிய இயலுமோ.

குணமென்னும் குன்றேறி நின்றார்

என்று திருவள்ளுவர்சொல்கின்றார். எனவே முருகனின் ஒவ்வொரு குணத்தையும் நினைக்குங்கால் அது ஒரு மாபெரும் மலைபோல் அடியார்களுடைய உள்ளத்தில் வளர்ந்துகொண்டே போகின்றது. இஃது வியப்பையே தருகிறது.

அடுத்தபடியாக வள்ளிதேவியை 'குற - மின் – கொடியை' என்கின்றார்.

வேதாந்தரீதியாக வள்ளிதேவியோவெனில் ப்ரும்ம வித்யாரூபிணியான பராசக்தியாகவே பாஸித்து வருகிறாள். இவ்வித மஹிமைவாய்ந்த வள்ளிதேவியை சாஸ்திரங்களும் தேவிபாகவதம் முதலான புராணதிகளும் 'உபநிஷத் சுந்தரி' என்று புகழ்கின்றது.

ஆதலால் வள்ளிதேவியை கேவலம் வேடனுடைய மகளென்றோ அல்லது குறவனுடைய மகளென்றோ நினைக்க முடியாது.

ஒரு சமயம் த்ரிலோகஸஞ்சாரியான நாரத மஹர்ஷியானவர் ஸநத்குமார ஸ்வாமியை அடைந்து தனக்கு ப்ரும்ம வித்தையை உபதேசித்தருளவேண்டுமென ப்ரார்த்தித்துக்கொண்டார். அப்பொழுது ஸநத்குமார ஸ்வாமியானவர் நாரதமஹர்ஷியிடம் "நாரதமுனிவரே! நீர் ப்ரம்ம வித்தையை எம்மிடமிருந்து பெற யோக்கியதையற்றவராக இருப்பதுமல்லாமல் நீர் அவ்வித்தையை பெறும் விஷயத்தில் அதிகாரியும் ஆகமாட்டீர்" என்று சொல்லி நாரத மஹர்ஷிக்கு ப்ரம்ம

வித்தையை உபதேசம் செய்ய மறுத்துவிட்டார். நாரதரும் தன் அபாக்யத்தை எண்ணி மனம் நொந்து திரும்பிச் சென்றார். ஆனால்,

வித்யார்த மாகதம் சிஷ்யம்
த்யக்த்வா வநசரோபவத்

என்றசாஸ்த்திரமானது "ப்ரம்ம வித்தையைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசையுடன் வரும் ஸத்சிஷ்யனை எவனொருவன் தனக்கு உபதேசிக்கும் சக்தியிருந்தும் உபதேசிக்காமல் வந்தசிஷ்யனை நிராகரித்துதிருப்பியனுப்பி விடுகிறானோ, அவனுக்கு சாஸ்திரமானது வேடனாகப் பிறக்கும்படி தண்டனையை விதிக்கின்றது.

எனவே ஸநத்குமாரஸ்வாமியே நம்பிராஜன் என்று சொல்லப்படும் வேட அரசனாக இம்மண்ணுலகில் வந்து அவதரித்தார். அங்கிலேயில் அவரிடத்தில் யிருந்த ப்ரும்மவித்யா ருபிணியான பராசக்தியே அவரைவிட்டுப் பிரிய மனமில்லாமல், லோகரீதியாக அவருடைய புத்திரியென்ற வியாஜருபமாக அவதரித்து வள்ளிதேவி என்ற திருமாமம் சூட்டப்பட்டு குறத்தி மகள் என்றும் வேடர் மகள் என்றும் விளக்கி வந்தாள் என்பதே சாஸ்திரங்களின் மேலானஸித்தாந்தமும் உண்மையுமாகும்.

இத்தகைய வள்ளிதேவியை அருணகிரிநாதர் இணையற்றதொரு மின்னற் கொடியாகப் புகழ்கின்றார். மின்னல் கொடியானது இமைப்பொழுதில் தோன்றி மறையும் தன்மையுடையது. கருத்த மேகங்களினுடைய மத்தியில் மின்னல் உண்டாகும்பொழுது தான் கருத்த நீருண்ட மேகத்தின் அழகையனுபவிக்க முடியும். கார்மேகங்களுக்கு பெருமையையும் அழகையும் அளிப்பது மின்னலேயாகும்.

ஆனுல் மின்னற் கொடியாகிய வள்ளிதேவியோ வெனில் அனுதி காலமாக விளங்கும் மின்னல் கொடியேயாவாள். பிராணிகளுடைய உள்ளத்தில் மின்னல்போல் தோன்றி ஒரு புத்துணர்ச்சியை உண்டு பண்ணிக்கொண்டே யிருப்பவள் அன்னை வள்ளிதேவி யாவாள்.

கொடியைப்போல் மெல்லிய இடையழகும், அதற் கொத்த நடையழகும் கொண்ட வள்ளி தேவியானவள் மின்னல்போல் தோன்றி மறைவாள்.

குறவர் குலத்திற்கு மின்னற்கொடி வள்ளிதேவி. குறவர்கள் இயற்கையிலேயே கருப்பான நிறமுடைய வர்கள். இவர்களுடைய கூட்டங்களின் மத்தியில் வள்ளிதேவியானவள் வரும்பொழுது மின்னற்கொடி போல் தோன்றுவாள்.

இவ்விதம் நுண்ணிய இடையழகு—நடையழகு— ஒளி அழகு மற்றும் நீங்காத இளமையின் அழகு எல் லாம் ஒருங்கே அமைந்ததாக விளங்குபவளாயும், லாவண்யமாகிய அம்ரு ப்ரவாஹத்தின் ஸ்வருபமாயும் சிருங்காரரஸத்தினை அனுபவிப்பதற்கென்றே எடுத்த அதிசௌந்தர்யத்தோடு கூடின மின்னற் கொடியைப் போன்ற திவ்யமங்கள ருபத்தையுடையவளாயுமுள்ள வள்ளிதேவியை புணரும் தெய்வமோவெனில் முருகப் பெருமானே ஆவான்.

மேலும் கொடியானது மலைமேல் படர்ந்து கொண்டே போகும். அக்கொடியைத் தாங்கி நிற்பது மலையன்ருே.

அதுபோலவே மின்னற்கொடி போன்ற வள்ளி தேவியானவள் தன்னை எல்லாவித குணங்களையு முடைய முருகப்பெருமான் புணரவரும்போது, தன்

னுடைய நுண்ணிய இடையழகினுலும் நடையழகினு லும், மின்னல்போன்ற காந்தியினுலும் முருகப் பெருமானை பலவிதமாக தழுவி ச்ருங்கார லீலைகளைச் செய்வாள். அவ்வேளையில் செல்வக்குமரன் தன்னுடைய பன்னிருகைகளினுலும் வள்ளிதேவியை வாரி எடுத்து தழுவிக்கொண்டு ஆறுமுகங்களினுலும் அவளை உச்சிமோந்து பன்னிரு கண்களினுலும் குற மின்கொடியாகிய வள்ளியின் அழகினைப் பானம் செய்துகொண்டு ச்ருங்காரரஸமாகிய பேரின்ப ஸமுத்திரத்தில் லயித்திருப்பன் அன்றோ.

மேலும் மின்னலானது இமையளவு நேரத்தில் தோன்றி மறையும் இயல்பினைக்கொண்டது. அது போலவே வள்ளிதேவியானவள் தன்னைப் புணரவரும் முருகனின் கண்ணோடு தன் கண்ணினைக் கலந்து நோக்கும் பொழுது, வெட்கத்தால் வள்ளியின் கடாக்ஷமானது பின்வாங்கியும், ஆசையினல் மீண்டும் முன்னேக்கி முருகனின் கண்களில் கலங்கின்றது. முருகனுடைய பார்வையானது வெட்கமறியாதவை யாதலால் அப்பார்வையானது வள்ளிதேவியின் பார்வையை தன்னிடமிருந்து பின்வாங்கும்படியும், முன்நோக்கும்படியும் வேகமாகச் செய்கின்றது. இதனுல் வள்ளியின் காதலும் வெட்கமும் அதிகரிக்கின்றன.

எனவே வள்ளிதேவியின் கண்களின் நோக்குதலும் பின்வாங்குதலும் ஒரு மின்னல் தோன்றி மறையுமளவில் ஏற்படுகின்றபடியால் வள்ளிதேவியை மின் கொடி என்று புகழ்ந்து வர்ணிக்கின்ருர். இவ்விதம் மின்னல்கொடி போன்ற வள்ளிதேவியின் திருமேனியிலேயே முருகப்பெருமானுடைய பன்னிரு கண்களும் தங்கியிருப்பவைகளாக ஆகி மேலான கருணையிலே திளைத்து எல்லா உயிர்களையும் தமது பன்னிரு கை

களினுல் எடுத்து ஆட்கொண்டு ஸகலலோகங்களேயும் ரக்ஷித்து வருகின்றது என்பதினேச் சொல்லவும் வேண்டுமா!

எனவே தஞ்சத்தருள் சண்முகனேயே இப்பாடலில் குணபூதரனே என்கிருர்.

ஆகையால் எண்ணிலாக்கோடி குணங்களுக்கு இருப்பிடமாயுள்ள ஹே குணபூதரனே! உன்னிடத்தில் நான் என்றென்றும் மேலான பக்தியையுடையவன்.

உன் திருவடிகளுடைய மஹிமையை நான் அறிய வில்லே என்று என்னிடம் சொல்லுகிருயே. உண்மை யில் மெய்ப்பொருளாகிய உன் திருவடிகளினுடைய பெருமையையும் சக்தியையும் யாரால் அறியமுடியும்.

நான் உன்னுடைய திருவடிகளே என் நெஞ்சில் நிலேநிறுத்தி தியானிக்கவில்லேயென்றும், அப்படியே ஈசனுக்கு ஈசனுய் விளங்குகின்ற நின் பாத கமலங் களே மேலான முக்தி நிலேயம் என்றும் நான் அறிய வில்லே என்ற ஒரே காரணத்தினுல், அரிதாகிய மானி டப் பிறவியை அடைந்த முழுப்பயனே நான் சிறிதும் அடையாமல் முற்றிலும் அழிந்து கெட்டுப் போவதா? ஹே முருகா! விக்ரம வேலா!

"எண்ணரிய பிறவிதனில் மானிடப்
பிறவிதா னியாதினும் அரிது அரிதுகாண்,
இப்பிறவி தப்பினு லெப்பிறவி வாய்க்குமோ
யேது வருமோ அறிகிலேன்"

என்று மகான்கள் சொல்லியவண்ணம் எல்லாப் பிறவி களிலும் வைத்து மானிடப் பிறவியே மேலானதாயும் சிறந்ததாயுமுள்ள பிறவியாகும். இம்மானிடப் பிறவி

யில் நான் உன்னை சரணுலயமாக அடைந்திருக்கிறேன் ஐயனே. என்னைக் கைவிட்டுவிடாதே அப்பனே.

இதுவரையில் உனது பெருமையை அறியாத நான் இப்பொழுது ஏதோ புண்ணியவசத்தால் தெரிந்து கொண்டேன்.

ஹே முருகா "அக்ஞானத்தினுலும் அறியாமையினுலும் அழிந்துபோகின்ற உன்னை நான் எவ்விதம் காப்பாற்ற முடியும்" நீ அழிந்துபோவது உன்னுடைய கர்மவினை" என்று சொல்லி என்னை நீ கைவிட்டுவிட்டால் நான் யாரைச் சரணமடைவேன். இதுவரையிலும் நான் இவ்வுலகில் அல்லல்பட்டதே எனக்குப் பெரிய தண்டனையாகும். இனியும் என்னுல் அல்லல் படமுடியாது அப்பா.

செங்கோலைத் தன்னுடைய கையில் தாங்கிவரும் மன்னனிடம்தானே குடிமக்கள் தங்கள் குறைகளையும் சுகதுக்கங்களையும் சொல்லிக்கொள்வார்கள். மக்களின் துயரங்களை துடைப்பவன் மன்னனன்ருே. செங்கோல் தாங்கிவரும் மன்னன் எதையும் தன் செங்கோல்போல் வளையாமல் நேர்மையாக இருக்கவேண்டுமென்று இச்சிக்கிருன். குற்றம்செய்தவர்களைத் தண்டித்து நல்வழியில்நடக்கவைத்து அவர்களை காப்பாற்றுகிருனே தவிர அழியவைப்பதில்லை. இதையெல்லாம் எடுத்து ஸர்வ ஞுன உனக்கு நான் சொல்லவேண்டுமா ஐயனே.

சரணமடைந்தவர்களை கைவிட்டுவிடுவது என்பது உனக்கு அழகல்லவே. கைகொடுத்து தூக்குவது என்பது உன்னுடைய இயல்பான குணமல்லவா.

ஹே முருகா! ஈரேழு பதினுன்கு லோகங்களிலும் உன்னுல் செய்ய முடியாதது ஒன்று உண்டோ.

அனைத்துலகம் ஆக்குவாய் காப்பாய்
அழிப்பாய்
அருள் தருள்வாய் போக்குவாய்

என்று திருவாசகம் உனது மாறிலா சக்தியினைப் புகழ்கின்றது. இதனைவிட மேலான அருள்வாக்கு என்ன இருக்கிறது உனது சக்தியினை எடுத்துக்காட்ட நீயே சொல்லுவாய் அப்பனே.

எனவே ஹே குமரா! அண்டசராசரங்களுக்கும் நீ ஒருவனே நிகரில்லாத அரசனாக விளங்குகிறாய், அதி பராக்கிரமத்துடன் கூடிய உன்னுடைய கூர்மையான வேற்படையை நம்பியே ஸர்வலோகங்களில் உள்ளவர்கள் நிலைத்துயிருக்கிறார்கள். தேவேந்திரன் தேவேந்திரனாகவும் மும்மூர்த்திகள் மும்மூர்த்திகளாகவும் இன்று இருந்து கொண்டு ச்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் முதலியவைகளைச் செய்து வருகின்றார்கள் என்றால் அதற்கு மூலகாரணம் உன்கையில் தாங்கிவரும் அந்த மஹா மஹிமை தாங்கிய கூர்மையான மந்திர மயமான வடிவிக்கிரம வேல் அல்லவா? இந்த வேலை நம்பித்தானே நான் வாழ்கின்றேன்.

என்னைக் கைகொடுத்து தூக்குவது உனக்கு ஒரு பெரிய காரியமா. சொல் அப்பனே. கைகொடுத்து அருளும் தெய்வம் நீ ஒருவன்தானே இருக்கிறாய்.

ஆகையினால் ஏ முருகா! உனது கூர்மையான வேலினால் எனது அறியாமையாகிய பாறையைத் தவிடு பொடியாக்கி எனது வினைகள் அனைத்தையும் அறுத்து தள்ளுவாய் அப்பனே. உன்னிடம் வேல் எதற்காக இருக்கிறது. என் போன்ற அஞ்ஞானிகளைக் காப்பாற்றுவதற்காக அல்லவா,

எனவே ஹே வடிவேலா! உன்னேயே சரணமென்று உன்னுடைய வடிவேலை நான் என் நெஞ்சில் நிறுத்தி தியானம் செய்துவரும் பொழுது, உன் முன்னிலையி லேயே நான் அரிதாகிய என்னுடைய மானிடப் பிறவி யின் பயனே இழந்து முற்றிலும் அழிந்து கடைசியில் மண்ணேடு மண்ணுகப் போவேனேயாகில், அது ஒரு பொழுதும் நியாயமாக ஆகாது அப்பனே.

தன்னைச் சரணமடைந்தவன் அழியும்பொழுதும் கூட பராமுகனுய் இருந்தான் முருகப்பெருமான் என்ற இழிவுச் சொல்லுக்கு நீ ஆளாவாய். இவ்வித இழிவுச் சொல்லை நான் எவ்விதம் செவி கொடுத்துக் கேட்பேன் முருகா. நீயே சொல்.

ப்ரும்மா விஷ்ணு சிவன் முதலிய தேவர்கள் சரணமடைந்தவர்களைக் கைவிட்டு விடுகிருர்கள் என்று கேட்டிருக்கிறேன். ஆனுல் செல்வக்குமரன் கைவிட்டு விட்டான் என்று இதுவரையிலும் நான் கேட்ட தில்லையே அப்பனே.

எனவே வரம்பில்லாத கருணையையுடைய நீ என் னிடம் அறியாமை என்ற காரணமாகிய வரம்பை வைத்து நீ கைவிட்டுவிட முடியாது.

அப்படி நீ என்னைக் கைவிட்டு விட்டால், அச் செயல் ஞாயமாக ஆகாது. அது உன்னுடைய இயல் பான குணமும் ஆகாது. நீயிருக்க நான் அழிந்து போனுல் அது உன்னுடைய தவறேயாகும்.

கடவுளை நம்பினேர் கைவிடப் படார்

என்ற மந்திரத்தை நான் தலைமேல் வகித்து உன்னைச் சரணமடையும்போது நீ என்னைப் பரான்முகனுயிருந்து கைவிட்டுவிட்டாய் யென்றுல் அதனுல் விளைவது

என்ன தெரியுமா? நீ தமிழ்த் தெய்வமாகிய ஔவைத் தாயின் பொன்மொழியை கடைபிடிக்கவில்லையென்பது மல்லாமல், கைவிட்டவனுகவும் ஆகிருய். மற்றும் 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்பதினை கடைபிடித்து சரண்மடைந்தவனை கைவிட்டாய் என்பது மல்லாமல், ஔவைத்தாயின் பொன்மொழியை பரிபாலிக்கும் பாக்கியமற்றவனுகவும் ஆய், உலகத்தினர்களுக்கு இனி ஔவைத்தாயின் பொன்மொழியை கடைபிடிக்காதீர்கள் என்று சொன்னவனுகவும் ஆகின்ருய். எப்படிபார்த்தாலும் நீ என்னைக் கைவிடுவது முறையாக ஆகவே ஆகாது.

செல்வக்குமரா! நான் அழிந்து போனுல் போகிறேன். ஆனுல் நீ சரணுகதவத்ஸலன் என்ற பெருமையை இழந்து விடுவாய். அதைக் குறித்துதான் நான் உன்னிடம் என்னைக் கைகொடுத்து தூக்கச் சொல்லுகின்றேன்.

ஏ முருகா, உன்னை நான் நினைக்கும் நேரமெல்லாம் என் உள்ளத்தில் தொடர்ந்து குன்ருமல் பாயும் அருள் ஒளி நீ அன்ருே. இத்தகைய ஒளியினையுடைய உனது திருவடிகளையே நான் முக்தி நிலையம் என்ற ஒரு த்ருடமான சிந்தனையுடன் ஸதாகாலம் போற்றி புகழ்ந்து வருகின்றேன்.

முருகா, உனது திருவடியை அடைந்து அங்கே ஓய்யாமல் அலைமோதிக்கொண்டிருக்கும் ஸ்கந்தானுபூதி ஆகிய ஸமுத்திரத்தில் கலந்து "நான் — என்னுடையது" என்ற அகங்காரமும் மமகாரமும் அற்று இருப்பதே இந்த அதிதுர்லபமான மானிட ஜன்மாவின் குறிக்கோளாகும் என்ற ஒரு திருடமான உணர்வுடன் நான் இருந்து வருகிறேன்.

அறியாமையினுல் நான் எண்ணற்ற பிழைகள் செய்திருக்கிறேன். அனைத்தையும் பொறுப்பது உனது கடமை. அருளுவது உனது இயல்பான குணம். அருளி ஆட்கொள்வது உனது மாறிலா கருணை.

ஹே முருகா, நீ ஒருவன்தான் நல்லார்க்கும் பொல்லார்க்கும் எல்லார்க்கும் அருளினையே பொழிந்து கொண்டு மங்காத பொலிவுடன்கூடிய அருள் தெய்வமாக விளங்கி வருகிருய் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அத்தகைய அருள் மலையாகிய உன்னை, கர்மவினையினுலும், அல்லல்படுவதினுலும் வேகும் நெஞ்சினைக் கொண்ட நான்,

மிகவும் கொடியேன் விதிகுன்றிடவந்
திகமும் பரமும் பெற என்றிசைவாய்

என்று மஹான்கள் யாசித்தவண்ணம் யாசிக்கிறேன். எனவே ஹே வடிவிக்ரமவேல் மகிபா, மிகவும் கொடிய வஞகிய என்னுடைய விதிவழி வந்த கர்ம வினைகள் குன்றிட நீ என்று என் முன் தோன்றி எனக்கு இகபர சுகத்தை தந்தருளப்போகிருயோ தெரியவில்லை.

ஆகையினுல் குணமின் கொடியைப் புணரும் குண பூதரனே, நான் அழிந்துபோவது எவ்வகையிலும் ஞாயமாக ஆகாது ஐயனே.

எனவே இவ்வரிய மானிடப் பிறவியில் நாம் அறிந்தும் அறியாமலும் எத்தனையோ பாபங்களைச் செய்கிருேம்.செய்யும் பாபங்களுக்கு தகுந்தபலனையும் அடைகிருேம். மீண்டும் பாபங்களையே செய்கிருேம். ஏன் தெரியுமா?நாம் இறைவனின் பெருமையை உணர்வதில்லை.

அறிவுடையோர்களும்—ஞானிகளும்— யோகிகளும் சுட்டிக் காட்டு மிடம் இறைவனின் திருவடியே யாகும்.

இறைவனின் திருவடி தியானமே பிறவித் துன்பத்தினைப் போக்கடிக்க சாமர்த்திய முள்ளது.

ஆகையினால் இப்பாடலை உள்ளுருகி எவர்கள் பாடிக்கொண்டே குன்றுதோறும் ஏறி முருகனைக் கண் குளிர கண்டு மகிழ்கின்றார்களோ அக்கணமே அவர்கள் பாப மற்றவர்களாக ஆகிவிடுகிறார்கள். மானிடப் பிறவியின் பயனை அடையவும் அடைகிறார்கள் அன்றோ!

வேலின் மஹிமையை பாடிக்கொண்டே முருகனைத் தொழுவார்கள். முருகனின் திருவிளையாடல்களில் இன்பத்தினைக்கண்டு களிப்பார்கள். 'முருகனின் திருவடி தியானத்தினால் மானிடப் பிறவியின் பயனை முற்றிலும் அடையலாம்' என்பதற்கு அவர்களுடைய வாழ்க்கை உலகிற்கு ஒரு எடுத்துக்காட்டாக இருந்து வரும்.

ஆகையால் ஜன்ம ஸாபல்யத்தை அடைவதற்கு இப்பாடலை பாராயணம் செய்வதே மிகவும் சுலபமான வழியாகும்.



# அருள் இருந்தால் அரிது என்பது இல்லை

## 24



சூர்வேல் விழிமங்கையர் கொங்கையிலே
சேர்வேன் அருள்சேரவும் எண்ணுமதோ
சூர்வேரொடு குன்றுதொளைத் தநெடும்
போர்வேல புரந்தர பூபதியே.

பதவுரை:

சூர் வேரொடு — (அஞ்ஞானத்தையே ஸ்வரூபமாகக் கொண்டு, அதன் காரணமாக மஹாமாயா சக்திகளுடன் ஒரு மாமரம்போம் கிளைபட்டு எழுந்த) சூரபத்மாஸுரனை வேரொடும், குன்று—(அப்படியே மாயா சக்தியில் வல்லவனாகிய) மலைபோல் தோன்றுகின்ற கிரவுஞ்சாஸுரனையும், நெடும் போர்—ஜயா அபஜயம் அதனைச் சொல்ல முடியாமல் வெகு காலமாக நடந்து வந்த மாமெரும் போரில் தொளைத்த — தொளைத்து சிதைத்து சின்னாபின்னமாக ஆக்கிய, நெடும் வேல்—நீண்டுகொண்டே போகிற வேற் படையைத் தாங்கியிருக்கிற (நீயோவெனில்), பூ—பூலோகத்திலுள்ள ஸகலப் பிராணிகளுடைய, புரம்— (இந்த உடல்

ஒழிந்து போகாமல் வளையவருவதற்கு மூலகாரணமான) இதயமாகிய தலத்தை, தர—தாங்கும் விஷயத்தில், பதி-தலைவனாக இருக்கும் முருகப்பெருமானே, ஏ—இஃது உனது பரந்த மனப்பான்மையும், மேலான ஔதார்ய குணத்தையும், காரணமற்ற கருணையாகிய இயல்பான குணத்தையும் அல்லவா காட்டுகின்றது, கூர் வேல் விழி—உருவத்தினாலும் கூர்மையினாலும் வேலினையொத்த கண்களுடைய, மங்கையர் —விலைமாதர்களாகிய தாஸிகளின், கொங்கையில்—முலைகளிலே, ஏ-விலைமாதர்களின் முலைத்தடத்தை அடைந்து அனுபவிப்பதே இவ்வரிதான மானிடப் பிறவியின் பயன் என்ற ஒரே எண்ணத்தினையுடையவனாய் வேறு ஒரு சிந்தனையும் மில்லாமல் இருந்து வருகிற, சேர்வேன்—(அவ்விலைமாதர்களின் முலைத்தடத்திலே) விரும்பி அடைந்து அனுபவித்துக் கொண்டிருக்கிற நான், அருள்—அருளினை வாரி இறைக்கின்ற நினது திருவடியை, சேரவும்-அடைய வேண்டுமென்ற ஒரே மனோபாவத்துடன் எண்ணுமதோ-(என்மனதினால்) எண்ண இயலுமோ. ஒரு காலத்திலும் எண்ண இயலாது என்பது பொருள். இதையே 'ஓ' காரம் உணர்த்துகிறது.

அப்படியே

அருள்—நினது காரணமற்ற அருளானது, சேரவும்—(ஏதோ முன்னோர்கள் செய்த புண்ணியவசத்தினால் என்னிடம்) அடையுமேயானால் அதாவது என்மேல் விழுமேயானால் அந்த க்ஷணமே, அது — (பெரிதுக்குப் பெரிது - பெரிதுக்குப் பெரிது — சிறிதிற்கு சிறிது — சிறிதிற்கு சிறிது என்று வேதங்களினால் புகழப்படும்) பரம்பொருளாகிய அது, ஓ — 'அ உ ம' என்ற மூன்று மாத்திரைகளைக் கொண்டு பிரணவம் என்று சொல்லப்படும் 'ஓம்'காரமாகிய முருகப்பெருமானைக் காட்டிலும் வேறல்ல என்று எண்ணும்—(என் மனமானது) இடைவிடாமல் எண்ணிக்கொண்டே யிருக்கும்.

**தாத்பர்யம்**

உலகில் ராம ராவண யுத்தத்தையே அதி பயங்கரமான யுத்தம் என்று சொல்லுவார்கள். ஆனால் சூரபத்ம

னுக்கும் முருகப்பெருமானுக்கும் நடந்த யுத்த மஹிமையை நினைக்குங்கால், அது ராம ராவண யுத்தத்தைக் காட்டிலும் எத்தனையோ கோடி பயங்கரமானது.

சூரபத்மனேவெனில் போர்க்களத்தில் மாபெரும் வில்லினையேந்தி, கண்களிலிருந்து அக்கினிஜ்வாலைகள் வீச, "தேவர்களின் சந்தோஷத்தையும், விஷ்ணுவின் அகம்பாவத்தையும், ப்ரும்மாவின் கர்வத்தையும், அடியோடு அழித்து மண்ணோடு மண்ணாக்கி விடுகிறேன் என்று சொல்லிக்கொண்டு கிளேப்பட்டு மேலே எழுந்தான். எழுந்த அம்மாபெரும் சூரபத்மாஸுரன் இருபத்து நாலாயிரம் யானைகளுக்கு ஒப்பான சக்தியினைக் கொண்ட பாணத்தைத் தேடி எடுத்து தனது வில்லில் பூட்டி காதுவரையிலும் நாணையிழுத்து மஹா மந்திரத்தை உச்சரித்து செல்வக் குமரனின்மேல் ப்ரயோகித்தான்.

ஆனால் என்ன ஆச்சர்யம்! சூரபத்மனல் ப்ரயோகம் செய்யப்பட்ட அந்தப் பாணமானது மண்ணுலகம் விண்ணுலகம் மற்றுமுள்ள எல்லா லோகங்களிலும் சென்று சூரியசந்திராதிகளுடைய சாந்தியை அடக்கி, சப்தஸாகரங்களையும் வற்றடித்து, பூ மண்டலம் பாதாளம் இவைகளைத் தொளைத்து பயங்கரமான கொடுமைகளைச்செய்து, காலாக்னியை வீசிக்கொண்டே அண்டசராசரங்களையும் பயத்தில் நடுநடுங்கவைத்து, விஷப்பெருக்கை கக்கிக்கொண்டு பற்பல நிறங்களுடன்கூடிய ஸர்ப்பங்களாகத் தோன்றிக் காளகூட விஷத்தினைக் கக்கிக்கொண்டு முடிவில் செல்வக் குமரனின் உயிரை அபஹரிக்க ஸர்ப்பத்தினைக் கண்ட கருடனைப்போல் ஓடிவந்தது.

இதைப்போலவே க்ரவுஞ்சாஸுரனும் தனது மாயா சக்தியினல் உலகனைத்தையும் பயமுறுத்திக்

கொண்டும்கொடுமைகளைச் செய்துகொண்டும் செல்வக் குமரனை நோக்கி மாயா மலையுருவங்கொண்டு பாய்ந்து வந்தான். போரில் ராக்ஷஸர்களுடைய மண்டைகள் பிளந்தும், மார்புகள் பிளந்தும், நெற்றி உடைந்தும், கரங்கள் முறிந்தும், புஜங்கள் தாழ்ந்தும், வீரகண்டை யணிந்த எண்ணற்ற கால்கள் முறிந்தும், எங்கும் ஒரே பிணஸ்வருபமாய் அப்போர்க்களமானது மிகவும் பயங் கரமான ஓர் இரத்த சமுத்திரமாய் தோன்றின.

இதனைக்கண்டு அண்டசராசரங்களும் அஞ்சின. ஆனால் செல்வக்குமரன் அஞ்சினான் இல்லை. கோடி சூரியனுக்கு ஒப்பான தமது கூர்மையான சக்திவேலை மனோவேகத்தினும் வேகமாய் வீசி எறிந்தான். மறு வினாடியே அம்மஹா மஹிமைதாங்கிய சக்திவேலானது க்ரவுஞ்சாஸுரனை துளைத்து தவிடு பொடியாக்கியது. கிளைபட்டு எழுந்த சூரபத்மாஸுரனை இரண்டுதுண்டாக பிளந்து தள்ளி அவனை குலத்தோடு வேருடன் வெட்டி வீழ்த்தியது. அத்துடன் அழிந்தார்கள் அக்ஞானமும் மாயையுமாகிய சூரபத்மாஸுரனும் க்ரவுஞ்சாஸுரனும்.

குமரனால் விடப்பட்ட வேலானது ‘நெடும் வேல்’ என்று அறியவேண்டும். எல்லையில்லாமல் நீண்டு கொண்டே போய்க்கொண்டிருக்கிற வேலே ‘நெடு வேல்’ என்று புகழப்படுகிறது.

முருகப்பெருமானால் விடப்பட்ட வேலானது ஒருவ னைப் பின்பற்றி தொடர்ந்து எல்லையில்லாமல் சென்று கொண்டேயிருக்கும் அன்றோ. வேலினால் துரத்தப்பட் டவன் மும்மூர்த்திகளைச் சரணமடைந்தாலும் கூட, துரத்தப்பட்டவன் மும்மூர்த்திகளினாலும் காப்பாற்றப் படாமல் கைவிடப்பட்டவனாய் கதியற்று மீண்டும் அவ் வேலினால் துரத்தப்படுபவனாகவே ஆவான். எனவே

முருகனின் வேற்படைக்கு நிகர் எதுவுமேயில்லை. வேலிற்கு முருகனே நிகர் ஆவான். காரணமேனெனில் வேலே முருகனுவான். முருகனை சரணமடைவது என்பதுதான் வேலினை சரணமடைவது ஆகும். எனவே வேற்படையில்;

நல்லோர் நினைவில் நடனம் புரியும்
பொல்லாத்தவரை பொடிபொடியாக்கும்

என்ற உண்மை மிளிர்கின்றது. வேரோடு அழக்கவும் வேரோடு வளர்க்கவும் குமரனின் வேல் ஒன்றினுல்தான் முடியும்.

எனவே சூரஸம்ஹாரத்தையே ‘நெடும் போர்’ என்றும் அச்சூரனையும் க்ரவுஞ்ச மலையையும் வேரொடு அழித்த வேற்படையையே ‘நெடும் வேல்’ என்றும் பாட்டில் புகழப்படுகின்றது.

மஹாபயங்கரமான போரைச் செய்பவனும், மஹா பராக்கிரமமுள்ள வேற்படையைத் தாங்கிவரும் குமரனைக் கடுமையான தன்மையுடையவன் என்று நினையாதீர்கள். குமரனை சல்வக் குமரனுக நினையுங்கள். அன்பின் உருவமே குமரன். எங்கும் நிறைந்து எல்லாமாய் உள்ளவன் குமரன்.

எனவே மஹாமகிமையுள்ள வேலைத் தாங்கியுள்ள செல்வக்குமரனை அருணகிரியார் இந்தப் பாட்டில்

புரந்தர பூ பதியே

என்று அன்பினுல் மனம் கசிந்து அழைக்கின்றுர். ‘பூ’ என்றுல் பூலோகத்திலுள்ள ஸகல ப்ராணிகளையும் குறிக்கும். ‘புரம்’ என்றுல் ப்ரர்ணிகளுடைய தேகத்திருக்கும் முக்கியமான ஸ்தலமான ‘இதயமே’யாகும். ‘தரன்’ என்றுல் தாங்குபவன் என்று பொருள். ‘பதி’

என்றால் தலைவன் என்று அர்த்தம். ‘ஓ! என்றால் வியப்போடு பெருமையை நிர்த்தாரணம் செய்கின்ற சப்தமேயாகும் இந்த இடத்தில்,

காமம்-க்ரோதம்-லோபம்- மோகம் - மதம்-மாத்ஸர்யம்-வறுமை-கர்மவினைகள்-முதலியவைகளினால் கட்டப்பட்டு பிராணிகளோவெனில் மனம் ஒடிந்து போய் தீராத துன்பங்களையனுபவித்துக்கொண்டு அல்லல் பட்டுக்கொண்டே இருக்கிறார்கள் அன்றோ. எதைச் செய்வதென்று தெரியாமல் மனம்போன போக்கெல்லாம் போய் முடிவில் மனிதர்கள் சக்தியற்றவர்களாக ஆகிவிடுகிறார்கள். எல்லாவற்றிற்கும் மூலகாரணமான மனது ஒடிந்துபோய் முடிவில் அவர்களையே அழித்து விடுகின்றது. இதனை நாம் வாழ்க்கையில் காண்கின்றோம்.

இவ்விதம் நமது ‘இதயமாகிய புரம்’ ஒடிந்து போய்விட்டால் நமது அரிதாகிய மானிடப் பிறவியே பயனற்றதாக ஆகிவிடும்.

உதாரணமாக வறுமையினால் ஒருவனுடைய இதயத்திலுண்டாகும் தாபத்தைத் தாங்குவதற்கு ஒருவன் இல்லாத போனால் தாபத்தினையடைந்தவன் அத் தாபத்தினையே காரணமாகக் கொண்டு அழிந்து போகிறான் என்பதை எடுத்துச் சொல்ல வேண்டுமா?

ஆனால் வறுமையினால் வாடும் பிராணிகள் சொல்லும் உலக வாக்யமோவெனில்,

மரம்வைத்தவன் தண்ணீர் விடாமலா
போகப் போகிறான்.

என்பதேயாகும். எத்தனை உயர்ந்த கருத்தினைக் கொண்டது இச்சொல். இ௳த ஒவ்வொருவரும்

சிந்தித்துப் பாருங்கள். அச்சிந்தனையிலேயே உண்மை விளங்கும். இவ்வுண்மையையே பொலிவுடன் எடுத்துக் காட்டுகிறது, 'புரந்தர பூபதியே' என்ற வர்ணனை.

ஆதலால் பிராணிகள் இதயதாபத்துடனும் வேகும் நெஞ்சுடனும் நடமாடிக் கொண்டிருக்கிறார்கள் என்றால் - என்ன அர்த்தம்? இதன் பொருளோவெனில் ஒவ்வொருவனுடைய இதயமாகிய புரத்தில் உண்டாகும் தாபங்களை முருகப்பெருமான் இதய வாஸியாக இருந்து கொண்டு தாங்கி வருகிறான் என்பதேயாகும். இவ்விதம் மனதிலுண்டாகும் தாபத்தை தாக்குவதில் வேறொரு தெய்வத்தையும் நிகராகச் சொல்ல முடியாது. இதில் குமரனே தலைவனாக விளங்குகிறான். இவ்விதம் காரணமற்ற கருணையினால் பரந்த மனதினைக்கொண்ட முருகப்பெருமான் நம்முடைய இதய வாஸியாக இருந்து நமது தாபங்களைத் தாங்கி வருகிறான்.

ஓம் குஹேசாய நம:

என்ற மஹாமந்திரத்தின் லக்ஷியார்த்தமே இந்தப் பாட்டில் 'புரந்தர பூபதியே' என்ற வர்ணனையாக ஏற்பட்டது.

இத்தகைய பெருமை வாய்ந்த முருகப்பெருமானின் திருவடிகளில் மனதை அர்ப்பணம் செய்து அத்திருவடியையே முக்தி நிலையமென்று எண்ணாத வண்ணம் செய்வதற்கு மூலகாரணமோவெனில் ஒன்றே ஒன்றுதான், அதுவோவெனில்,

கூர்வேல் விழி மங்கையர் கொங்கை.

மங்கையர்களுடைய கண்களானது கூர்வேலினைப் போல் உருவத்தினையுடையது மல்லாமல், வேலினைப் போல் மனிதர்களுடைய உள்ளத்தில் பாய்ந்து காம

மாகிய அனலை மூட்டி அவர்களைக் காமத்தினுல் வாட்டி வதைக்கின்றது. இதனுல் மனிதர்கள் காமபரவசர் களாகி இரவும் பகலும் விலைமாதர்களையே எண்ணி எண்ணித் தங்களுடைய இந்திரியங்களின் சக்தியை யிழந்து நாளடைவில் சரீரத்தையும் கெடுத்துக் கொண்டு படுகுழியில் விழுந்துவிடுகிருர்கள்.

நாணமற்ற மங்கையானவள் தன்னுடைய கூர் வேல் விழிகளினுல் இமைகொட்டாமல் ஒருவனைப் பார்ப்பாளேயாகில் அந்த இடத்திலேயே அவன் தன் னுடைய மனதை பறிகொடுத்து அவளுடைய முலைத் தடத்திலே வீழ்ந்து கிடப்பான் அன்றோ!

விலைமாதர்களின் கண்களின் வசீகரண சக்தி அபரிமிதமானது என்பதினைக் காட்டவே 'கூர்வேல் விழி என்று சொன்னுர். தவிர ஸாமுத்திரிகா சாஸ் திரத்தில் ஸ்திரீகளுக்கு இயற்கையான முலையழகையே மேலான அழகாகச் சொல்லப்பட்டிருக்கிறது. எனவே ஒரு விலைமாதின் ஸ்தன அழகானது மலைபோன்ற மன வுறுதியினைக் கொண்டவனையும் மாற்றிவிடும். மன மானது மங்கையர்களின் கூர்வேல் போன்ற கண்களி னுல் குத்தப்பட்டால், அவ்விணுடியே அம்மனமானது அவர்களை நாடிச்செல்லும். ஸ்தனங்களையே 'சங்கநிதி பதுமநிதி' என்ற இரு செல்வங்களாக நினைத்துக் கொண்டிருக்கிருர்கள் விலைமாதர்கள்.

ஆனுல் மனிதர்களோவெனில் விலைமாதர்கள் நினைப்பதற்கு மேலான செல்வமாகவே அவர்களுடைய ஸ்தனங்களின் அழகைக் கருதி, ஐம்பொறிகளின் மூல மாக அதை அனுபவிக்கின்ருர்கள். இதனுல் ஸ்திரீ சாபல்யத்தையுடைய மனிதர்களுடைய உலகம் விலை மாதர்களிடத்திலேயே அடங்குகின்றது. எனவே

சிற்றின்பத்திலேயே லயித்தை அடைந்து விடுகின்றனர் கள். ஏன் தெரியுமா? அவர்கள் சிற்றின்பத்தில் வரம்பைக் காண்கின்றார்கள் இல்லை! ஆதலால் அவர்களுக்குப் பேரின்பம் என்றொன்றிருக்கிறது என்பதே தெரியாமல் ஆகிவிடுகிறது.

மையாடு கண்ணியர்

என்றும்,

பெண்ணாகி வந்தொருமாயப் பிசராம்
பிடித்திட்டென்னைக் கண்ணால் வெருட்டி

என்றும்,

வரிக்கோல வேல்விழியார்
அனுராக மயக்கிற்சென்று

என்றும்,

அம்பினுங்கொடிய கண்ணாள்
ஆயிரம் சிந்தையாளை

என்றும் அப்படியே திருவாசகத்தில். விலைமாதர்களின் கூர்வேல் போன்ற கண்களின் பார்வையும், அவர்களின் குடங்கள் போன்ற ஸ்தனங்களின் பாகமும் எல்லாம்வல்ல இறைவனின் திருவடிகளை அடைவதற்குத் தடங்கலாகவே இருக்கின்றன என்பதினை,

தையலார் மையலிலே
தாழ்ந்துவிழக் கடவேனை

என்றும்,

வெந்து விழும் உடற்பிறவி

மெய்யென்று வினைபெருக்கிக்,

கொந்து குழற் கோல்வளையார்

குவிமுலைமேல் வீழ்வேனை

என்றும்,

பொய்யெல்லாம் மெய்யென்று

புணர்முலையார் போகத்தே

மையலுறக் கடவேனை...

என்றும் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் சொல்லி இறைவனின் அருளினை நாடுகின்றார் என்றால், விலைமாதர்களின் கூர்வேல் கண்களும் ஸ்தனங்களும் எத்தகைய வசீகரண சக்தியினைக்கொண்டது என்பதை எடுத்துக் கூறவும் வேண்டுமா.

இவ்விதம் காமாந்தகாரர்களாய் விலைமாதர்களின் மேல் வீழ்ந்து கிடந்துழலும் மனிதர்கள் செல்வக்குமரனின் அருள் நிலையமான திருவடிகளை ஒரு காலத்திலும் கடுகளவுக்கூட எண்ண முடியாது என்பதில் ஐயமில்லை. முருகனின் அருளைய்யுடைம் விஷயத்தில் அவர்கள் மடுவிற்கும் மலைக்கும் உள்ள வித்தியாசத்தில் இருப்பார்கள் அன்றோ.

கூர்வேலினைப் போன்ற கண்களினால் மூட்டப்பட்ட காமமானது மனிதனின் உள்ளத்தில் மலைபோல் வளர்ந்துகொண்டே போகிறது. அம்மலைபோன்ற காமமாகிய ஆசையானது மோகமாகமாறி விலைமாதர்களின் மலைபோன்ற கொங்கையிலே லயத்தையடைகிறது. இதன் விளைவாக மனிதன் கற்பனைக்கு அடங்காத தியான சக்தியினையுடைய தன்னுடைய தூயமான

மனதை விலைமாதர்களின் பார்வையிலும் அவர்களுடைய ஸ்தனங்களிலும் பறிகொடுத்து இதயமற்றவனாக மாறுகிறான் அன்றோ! இஃது என்ன கஷ்டம்!

எனவே, ஒன்றின்பின் ஒன்றாக எண்ணற்ற முறையில் எண்ணற்ற விலைமாதர்களிடமிருந்து அனுபவிக்க வேண்டுமென்ற எண்ணங்களாகிய பலவிதமான கிளைகளைக் கொண்டு உள்ளத்தில் வளர்ந்துகொண்டேயிருக்கிற காமமாகிய மரத்தையும், அப்படியே உள்ளத்தில் மலைபோல் வளர்ந்துகொண்டு வரும் காமமாகிய மலையையும் ஒருவன் வேரொடு அழிப்பானேயாகில் அப்பொழுதுதான் அவன் குமரனின் திருவருளை பெறமுடியுமே தவிர அன்னியில் குமரனின் திருவருளை ஸ்மரணம்கூட செய்யமுடியாது.

எனவே குமரனின் மஹா மஹிமை தங்கிய நெடும் போர் வேலை மனதில் ஸ்மரணம் செய்துகொண்டு இடைவிடாமல்,

வேல்முருகா வேல்முருகா வேல்முருகாவே
வேல்முருகா வேல்முருகா வேல்முருகாவே
வேல் வேல் வெற்றிவேல் வேல் வேல்
வெற்றிவேல் வேல்வேல் வெற்றிவேல்

என்று மனிதர்கள் நாவினால் உச்சரிப்பார்களேயானால், அவர்களுடைய உள்ளத்தில் உரம்பெற்று எண்ணற்ற கிளைகளை விட்டுக்கொண்டே வளர்ந்து கொண்டிருக்கிற காமமாகிய மாபெரும் மரத்தையும் மோகமாகிய மலையையும், முருகப் பெருமான் தமது கையில் தாங்கிவரும் கூர்மையான வேற்படையினால் குத்தித்துளைத்து தவிடுபொடியாக்கி வந்த வழிதெரியாமல் ஆக்கிவிடுவார். அப்பொழுது அவர்

களுடைய ஞானக்கண்ணானது திறக்கப்படுகின்றன, இந்நிலையினை அடைந்தவர்களுடைய உள்ளமானது குமரனின் அருளையே நினைந்து நினைந்து உருகி நிற்கும். இவர்களுடைய விஷயத்தில் விலைமாதர் களின் கூர்மையான கண்களின் பார்வையோ, அல்லது அவர்களின் குடங்கள் போன்ற ஸ்தனங்களின் அழகோ, காமத்தை மூட்டும் விஷயத்தில் தனது வசீகரண சக்தியை இழந்து செத்துவிடுகின்றன. காரணமோவெனில் இவர்களுடைய உள்ளத்தில் நடன மாடிக்கொண்டிருக்கும் சக்தி வேலானது உள்ளத்தில் எழுகின்ற காமத்தைச் சுட்டு எரித்துவிடுகின்றன. எனவே முருகனை உபாஸிப்பவர்கள் மோகவலையில் சிக்கி அழிந்து போவதில்லை.

குமரனின் அருளானது நம்மேல் விழவேண்டு மானால் நாம் மஹான்களுடைய நூல்களையும் உப தேசங்களையும் கடைப்பிடிக்க வேண்டும்.

மனம்போன போக்கெல்லாம் போக வேண்டாம்.

என்று ஔவைத்தாய் சொல்லியதுபோல், உலகமாயை யில் கிடந்துழலும் மனதை அவ்வழியே செல்லவொட் டாமல் அதிலிருந்து திருப்பிக் குமரனின் பெருமை களைச் சொல்லும் நூல்களையே மனிதர்கள் படித்துப் பாராயணம் செய்யவேண்டும். இவ்வழியே குமரனின் அருளைப் பெறுவதற்கு சுலபமான வழியும் மேலான வழியுமாகும்.

எனவே மனிதர்கள் இறைவனின் அருளைப்பெறும் பொருட்டு, மனிதர்கள் இன்பமென்று அனுபவித்து வரும் பெண்களின் சுகமும், அழகும் இறைவனை யடையும் விஷயத்தில் வெறுத்து தள்ளத்தக்கதே,

என்று பரம ஞானியான பட்டினத்தடிகள் சொல்கிறார்கள்.

> சீறும் வினையது பெண்ணுரு வாகித்
> திரண்டுருண்டு, கூறுமுலையும் இறைச்சி
> யுமாகிக் கொடுமையினாற் — பீறு மலமு
> முதிரமுஞ் சாயும் பெருங்குழி விட்
> டேறும், கரைகண்டிலேன் இறைவா
> கச்சியேகம்பனே.

அதுபோலவே சித்தர்களும்,

> யோனி வழியே பிறந்து
> யோனி வழியேயுழன்று
> யோனி வழியே யொடுங்கும்
> ஊமர்காள்—யோனிவழி
> வாரா வொருவனையே
> வந்தித்தால் யோனிவழி
> வாரா வகை அருளுவான்.

எனவே விலைமாதர்களை நினைத்து மோகவலையில் விழுந்து அழியும் மனிதர்களுக்கு மேல்கூறிய பரம ஞானிகளின் உபதேசம் முக்தி நிலையத்திற்கு வழி காட்டுவதுமல்லாமல் அழியும் மனிதர்களை உடன் அழைத்தும் செல்லுகின்றதன்றோ!

ஆகையால் கூர்மையான வேல் போன்ற கண்களினால் மனதைக் கொள்ளை கொள்ளுகின்ற விலைமாதர்களின் குடங்கள் போன்ற முலைத்தடத்திலே ஒருவன் தன்னுடைய உடல் உயிர் ஆவி அனைத்தையும் பறி கொடுப்பானேயாகில் அவனால் முருகனின் திருவருளைப் பெறஇயலுமோ, ஏன்? திருவருளை நினைக்கவும்கூட

இயலாது என்பதை உணர்த்துகிறது 'எண்ணுமதோ' என்பதிலுள்ள 'ஓ' காரம்.

இதற்குமாறாக ஒருவன் எவ்வளவு கொடியவனாகவும், காமாந்தகாரனாயும் இருந்தாலும்கூட அவனிடத்தில் ஏதோ முன்னோர்களின் புண்ணிய வசத்தினால் குமரனுடைய அருளானது விழுமேயானால் அந்த க்ஷணமே அவன் மெய்ஞானத்தை அடைவான் அன்றோ. இ.்து முருகனின் வியக்கத்தக்க திருவிளையாடலே யாகும். இதையே பாட்டில்,

அருள் சேரவும் எண்ணுமதோ

என்கின்றார் அருணகிரிநாதர்.

அருள்-முருகனுடைய அருளானது
சேரவும்-ஒருவனிடத்தில் விழுவதும்.

அதாவது சேரவும் என்பதிலுள்ள 'உம்' காலத்தையும், அருள் சேர்ந்த பிறகு உண்டாகும் எதிர்கால வைபவத்தையும் நிர்தாரணம் செய்து காட்டுகிறது. இதன் தத்வமோவெனில் முருகனின் அருள் வந்து சேருவதும்–மெய்ஞான அறிவு உண்டாவதும் ஒரே ஸமயத்தில் இமைப்பொழுதில் ஏற்படுகின்றன. அதாவது அருளின் வருகையே அக்ஞானத்தின் மறைவு என்பதேயாகும்.

பகலின் வருகையே இரவின் மறைவு. இரவின் மறைவே பகலின் வருகை. பகலின் மறைவே இரவின் வருகை. இரவின் வருகையே பகலின் மறைவு. இதனைப் போலவே அருள் சேரவும் எண்ணம் எழுவதும் ஒரே நேரத்தில் ஏற்படுகின்றன.

அவ்விதம் எழுகின்ற எண்ணம் யாது என கேட்போமாகில், அதற்கு பதிலோவெனில்

எண்ணு மதோ

என்பதிலிருக்கிறது.

எண்ணும்+அது+ஓ=எண்ணுமதோ.

எனவே சொல்லப்படும் எல்லா பொருளையும் 'இது ப்ரும்மமல்ல' 'இது ப்ரும்ம மல்ல' என்று தள்ளிவிடும் 'நேதி நேதி' என்ற வேத வாக்கியத்தினுல் எந்த ஒரு வஸ்துவானது தள்ளப்படாமல் அகண்ட சச்சிதானந்த வஸ்துவாய் கேவலம் பேதமற்ற அத்வைத நிலையில் விளங்கி வருகின்றதோ, அப்பேர்ப்பட்ட பரம்பொரு ளாகிய,

'அது'

ஸகல வேதங்களுக்கும் மூலமாயுள்ளதாயும், மஹர்ஷி களினுல் அஹம்ப்ரஹ்மாஸ்மி என்ற நிலையை அடை வதற்கு மேலான மந்திரமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அநுஸந்தானம் செய்யப்பட்டு வருவதாயும், எல்லா ஜகத்தையும் 'அ'கார 'உ'கார 'ம'கார ரூபமாக நிறைத் துக் கொண்டிருப்பதாலும், அப்படியே அர்த்தப்ர பஞ்சமானது சப்த ப்ரபஞ்சத்தில் அடங்கி அந்த சப்தப்ரபஞ்சமானது 'அ'கார 'உ'கார 'ம'காராத்மக மான மூன்று மாத்திரைகளில் அடங்கி மஹர்ஷிகளி ஞல் 'அ உ ம' என்ற மூன்று மாத்திரைகளோடு ஸதா காலமும் தியானிக்கப்பட்டு வருவதாயுமுள்ள, ப்ரண வம் என்று சொல்லப்படும் மஹாமகிமை தங்கிய ஓம் காரமே முருகப்பெருமான் ஆவான் என்பதையே எண்ணுமதோ என்பதிலுள்ள 'ஓ' காரத்தினுல் உணர வேண்டும்.

இவ்விதம் குமரனுடைய அருளானது மனிதர் களிடம் சேரவும், அந்த க்ஷணத்திலேயே அவர் உலக

மாயையிலிருந்து விடுபட்டு முருகனை ப்ரணவம் என்று சொல்லப்படும் மஹா மகிமை தங்கிய ஓம்காரமூர்த்தி யாக மனதில் எண்ணுகிறார்கள். தியானிக்கிறார்கள். அநுஸந்தானம் செய்கிறார்கள். போற்றிப்புகழ்கின்றார் கள்.

எனவே அருள் இல்லையேல் எதையும் பெறமுடி யாது. அருள் இல்லையேல் எதுவும் அரிது. ஆனால் குமரனின் அருள் இருக்குமேயாகில் அரிது என்பதே கிடையாது. அவன் அருளைப்பெற வழிதேடவேண்டும். அருளைப்பெற புண்ணியம் வேண்டும். எனவே புண்ணிய கர்மாவை நிறைய செய்ய வேண்டும். அருளு டையாருக்கு எவ்வுலகமும் உண்டு. அருள் இல்லாத வர்க்கு எவ்வுலகமும் இல்லை. எனவே அருளே அநுபூதி யாகும். அநுபூதியை இசைமாரி பொழிந்து குமரனின் அருளைப் பெறுங்கள்.



# மிகக் கொடுமையான தீவினை வாழ்வை அழித்தல்

## 25



மெய்யே எனவெவ் வினைவாழ்வை யுகந்
தையோ அடியேன் அலையத் தகுமோ
கையோ அயிலோ கழலோ முழுதும்
செய்யோய் மயிலேறிய சேவகனே.

**பதவுரை**

*கையோ* – பன்னிரு கைகளும், *அயிலோ* – வேலும் *கழலோ*—இரு பாதங்களும், *முழுதும்*—(அப்படியே நினது) திருமேனி முழுவதும், *செய்யோய்*-சிவந்த நிறமாக உடையவனே *மயிலேறிய சேவகனே*—மயில் மீது ஏறிய போர் வீரனே, *வெவ்வினை*—கொடிய தீவினைகளோடு கூடிய, *வாழ்வை*—உலக வாழ்க்கையை, *மெய்யே என*—மெய்யானதே என்று(எண்ணி) *உகந்து*—விரும்பி மகிழ்ந்து அதனை ஏற்று, *ஐயோ*—அப்படி உண்மை தெரியாமல் விரும்பி அனுபவித்த உலக வாழ்க்கையில் ஒவ்வொரு வினாடியும் சொல்ல முடியாத தீவினைகளே நிறைந்திருக்கிறது என்பதினை அறியும் பொழுது அப்படியே

அவ்வுலக வாழ்க்கையிலிருந்து விடுபட்டு உன் திருவடிகளை அடைய முடியாமல் கட்டுப்பட்டு இருக்கும் என்னுடைய நிலையை நினைக்கும்பொழுது நான் எத்தனை பெரிய பாவியாக ஆகிவிட்டேன். (அப்பேற்பட்ட மனோநிலையையே உணர்த்துகின்றது ஐயோ என்ற சொல்), அடியேன்—உனது அடியவனாகிய நான், அலையத் தகுமோ—(உண்மை தெரியாமல் தீவினைகளை அடைந்து) அங்குமிங்கும் உழலுவது நீதியாகுமா? தகுதியாகுமா?

**இவ்விதம் அலைவது ஒரு பொழுதும் நீதியாகவே ஆகாது ஐயனே என்பது பொருள்.**

**தாத்பர்யம்:**

முருகப்பெருமானுடைய அபரிமிதமான வைபவங்களையும் திருவிளையாடல்களையும் அறிந்து அனுபவிக்கும் பொழுதுதான், ஜீவகோடிகளுக்கு இவ்வுலக வாழ்க்கையானது நச்வரமானதென்றும், தீவினைகளையும் துன்பங்களையும் கொண்டதென்றும் தெரிய வருகிறது.

எனவே தத்துவம் நிறைந்த த்வனியார்த்தத்தையே மேலானதாகக் கொண்ட இந்தப் பாட்டில் குமரனின் கருணையே புகழப்படுகின்றது.

ஹே குமரா! கருணையின் வடிவமே நீ. நீ அருளி ஆட்கொள்வதற்கு முன்னால் நினது மாறிலா கருணை அடியார்களை ஆட்கொண்டு விடுகிறது. இந்நிலையில நீ பெரிதா — நினது கருணை பெரிதா—என்று பார்க்கும் பொழுது நினது கருணையே ஒப்பற்றதாக நிற்கின்றது. நினது கருணையானது எல்லோருடைய மனதையும் கவர்ந்து இழுக்கிறது. உள்ளத்தினைக் கரைத்து உருக வைத்து உன் பெருமையை உணரவைத்து உன்னிடமே இழுத்துச் செல்லுகின்றது.

செல்வக் குமரா! உன்னுடைய பன்னிரு கைகளும், உன்னுடைய வேற்படையும் உன்னுடைய இரு பாதங்களும் ஏன் செந்நிறமாகக் காணப்படுகின்றன.

நினது கையும் வேலும் கழலும் மட்டும்தான் செந்நிறமாகயிருக்கிறதென்ருல் அப்படியே நினது திவ்யமான திருமேனி முழுவதும் செந்நிறமாகவே இருக்கின்றனவே. இவ்விதம் நீ இருப்பதற்கு என்ன காரணம்? நினது திருமேனி அழகு ஜீவகோடிகளுடைய உள்ளங்களைக் கவர்ந்து அவர்களுக்கு முக்திநிலையத்தை அளிக்கின்றது அன்ரோ.

உரையற்ற தொன்றை உரைசெயும் ஊமர்காள்
கரையற்ற தொன்றை கரைகாண லாகுமோ

என்று திருமூலநாயனர் அருளியபடி உரையற்றும் கரையற்றும் இருக்கின்ற உன் பெருமையை அறிந்து மொழிய என்ஞல் இயலுமோ அப்பனே.

கற்பனைக்கு அடங்காத தத்துவனே, உன்னை அப்பர் சுவாமிகள்,

நால்வேதத் தப்பால் நின்ற

பரம்பொருள் என்று சுட்டிக் காட்டுகின்ருர். குமரா, உன்னை வேதாந்தமென்ற காட்டிற்குள் சென்று என்ஞல் கண்டுபிடிக்க முடியுமா? நீயோவெனில் கட்டுக்கு அடங்காமல் வளர்கின்ற கருத்துக்களைக் கொண்ட லீலைகளைச் செய்கின்ருய்.

முருகா நினது பன்னிரு கைகள் ஏன் செந்நிறமாக இருக்கின்றன?

நீ ஸதா காலமும் அடியார்களை ரக்ஷிக்குன் பொருட்டு பன்னிரண்டுவிதமான ஆயுதங்களைப் பம்,

னிருகைகளில் தாங்கிவருகிருயே அதனுலா, அல்லது பிறவிக் கடலில் மூழ்கித் தத்தளித்துக்கொண்டிருக்கும் ஜீவகோடிகளை ஒருவர் பின்னுல் ஒருவராக கை கொடுத்துத் தூக்கிவிடுகிருயே அதனுலா, அல்லது பார்வதிதேவியை மகிழவைப்பதற்காக பாலகனுக மாறி மண்ணில் கோயில் குளம்கட்டி விளையாடுகின்ருயே அதனுலா, அல்லது நான்முகனிடம் ஞான வாதம் செய்து நான்முகனைத் தோற்கடித்து சிறைக்குள் நினது பன்னிருகையினுல் இழுத்துச்சென்ருயே அதனுல் சிவந்திருக்கிறதா, அல்லது அசுரர்களையும் அடியார்களுக்குத் துன்பம்விளைவிப்பவர்களையும் குத்தி தொளைக்கும் வேலில் உள்ள இரத்தம் வழிந்துவரும் வேலினைத் தாங்கி வருகிருயே அதனுல் சிவந்து இருக்கிறதா, அல்லது தமிழ்த் தெய்வமாகிய ஔவைத் தாய்க்கு சுட்டபழம் வேண்டுமா சுடாதபழம் வேண்டுமாவென்று சொல்லிக் கடினமான நாகமரத்தைக் கைகளினுல் உலுக்கினுயே அதனுல் சிவந்து இருக்கிறதா அல்லது குஹனுக அவதரித்து முதலில் ஸ்ரீராமபிரானையும் அதற்குப் பிறகு. ராமனை மீட்டுச் செல்லவந்த பரதனையும் உன்னுடைய படகில் ஏற்றிக்கொண்டு கங்கையைத் தரணம் செய்துவைக்கையில் படகை நீயே உன் கையினுல் தொழுதுகொண்டு சென்ருயே அதனுல் சிவந்துயிருக்கிறதா?

குமரா! நினது அருளினைக் காட்டும் பன்னிருகைகள் தான் செந்நிறமாகயிருக்கிறதென்ருல் அது போலவே நினது வேலும் சிவந்து விளங்குகின்றது.

சூரபத்மன்—சிங்கமுகன்—தாரகாசூரன், க்ரவுஞ்சா சூரன்-முதலிய அஸுரர்களை தொளைத்து அவர்களுடைய தேகத்தில் ஊடுருவிச் சென்றமையினுல் அவ்வசுரர்

களுடைய ரத்தம் தோய்ந்து நினது வேலானது செந்நிறமாக இருக்கின்றதா, அல்லது அடியார்களுக்கு ஒரு விதமான ஆபத்தும் வரக்கூடாதென்று இமையளவு கூட துயிலாமல் இரவும் பகலும் வேற்படையானது இருந்து வருகின்றபடியால் அதனால் செந்நிறமாக இருக்கின்றதா. அல்லது வேலாகிய நான் கந்தனின் கருணையே ஆகும் என்பதையெடுத்துக்காட்ட செந்நிறமாக இருக்கின்றதா. எதனால் வேலும் செந்நிறமாக இருக்கின்றது.

செல்வக் குமரா! நினது கையும் அயிலும் சிவப்பு. அதுபோல் நினது இருபாதங்களும் சிவப்பு நிறமாக இருக்கின்றதே.

நினது இருதிருவடிகள் சிவப்பாக இருப்பதற்கு எத்தனையோ காரணங்கள் உண்டு.

ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அடக்கி ஏக சக்ராதிபதியாக அரசு புரிந்துவந்த சூரபத்மாஸுரனால் பலவிதமாகத் துன்புறுத்தப்பட்டு வந்த மும்மூர்த்திகள் உள்பட முப்பத்து முக்கோடி தேவர்களும் நீ முன் நான் முன் என்று போட்டிப் போட்டுக்கொண்டு மரகதம் மாணிக்கம் முதலியவைகளினால் இழைக்கப் பட்ட கனத்த கிரீடங்களுடன் உன்னைச் சரணமடைந்து வணங்கும் பொழுது, அவர்களுடைய எண்ணற்ற கிரீடங்கள் ஒன்றன்பின் ஒன்றாக உன் திருவடிகளை உராய்வதினால் சிவந்து இருக்கின்றதா. அல்லது,

நீ குன்றுதோறும் சிகரத்தில் வேல்வாங்கி நின்றால் தான் அடியார்களை இயமன் நோக்கி வரும்பொழுது வரும் வழியிலேயே தடுக்கலாமென்று ஒவ்வொரு குன்றிலும் வேல்வாங்கி நின்று வருகிறாயே, இதனால் நினது கழல் செந்நிறமாக இருக்கின்றதா.

அல்லது வள்ளிதேவியை நாடியும் வள்ளிதேவியுடனும் நீயோவெனில் குன்றுதோறும் ஓடி விளையாடுகின்ருய். அதனுலும் நினது திருவடிகள் சிவந்து இருக்கின்றதா. தவிர நீ குகனுகத் தோன்றி ஸ்ரீ ராமபிரானும் சீதாதேவியும் துயில் கொள்ளும்போது கண் கொட்டாமல் ஒரு கையில் மாபெரும் வில்லும் மற்ருெரு கையில் அம்பும் தாங்கி இரவு முழுவதும் சேவகனுக நின்று வந்ததினுல் உன்னுடைய இரு கழல்கள் செந்நிறமாக இருக்கின்றதா.

அல்லது மாம்பழத்தை அடையமுடியாமல் கோபித்துக்கொண்டு அனைத்தையும் துறந்து ஞானப் பழமாய் விளங்கிக் கொண்டு குன்றினை நோக்கிச் சென்ற குமரனுன உன்னைச் சிவசக்தியுள்பட யாவரும் குமரா குமரா எங்கே செல்கின்ருய் என்று உன்னையழைக்க நீ அதைச் செவிகொடுத்துக் கேட்காமல் குன்றின் மேல் ஏறிக்கொண்டே இருந்ததினுல் அக்குன்றுகளிலுள்ள முள்ளும் கல்லும் நினது திருவடிகளில் குத்தப்பட்டு அதனுல் உன்னுடைய கழல்கள் செந்நிறமாக இருக்கின்றனவா?

அல்லது சூரபத்மனிடம் அதிபயங்கரமான போரினைச் செய்து அம்மாபெரும் சூரனைக் கொன்று வீழ்த்தி நீ வீராதி வீரனுகவும் சூராதி சூரனுகவும் நின்று கொண்டு அப்போர்க்களத்தில் எண்ணற்ற கோடி அஸுரர்கள் மாண்டு கிடப்பதைக் கண்டு மனந்தாங்காமல் அனைவரையும் நினது பன்னிரு கண்களினுல் பார்த்து அவர்களை பாபமற்றவர்களாகச் செய்யும் பொருட்டு இரத்த சமுத்திரமாகத் தோன்றும் போர்க்களத்தில் சுற்றிவரும் பொழுது, அவ்இரத்தத்தினுல் மூடப்பட்டு நினது வீரக் கழல்கள் இருந்ததினுல் செந்நிறமாக நின் கழல்கள் இருக்கின்றதா.

முருகா! பரிபூரணமான கருணையைக் கொண்டவனே! மிகுந்த இரக்கமுடையவனல்லவா நீ?

அணைக்கும் கையும், ஆட்கொள்ளும் வேற்படையும், அபயமளிக்கும் நினது இரு கழலும் செந்நிறமாகவே இருக்கின்றன. இஃது என்னே வியப்பு?

ஐயனே! இதற்கெல்லாம் மேலான வியப்பு நீ முழுதும் செந்நிறமாய் தோன்றுவது அன்றோ. இதன் தத்துவம்தான் என்ன.

சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணிலிருந்து வெளிவந்த செஞ்சுடர் பழம் அல்லவா நீ. நெருப்புக் குழம்பின் நிறம் செந்நிறமாகயிருப்பதால் நீ முழுதும் சிவப்பாக இருக்கிறாயா அல்லது உமாதேவியானவள் சரவணப்பொய்கையில் ஞானப்பழமாய் ஆறுகுழந்தைகளாய் முகமலர்கொண்டு புன்னகையுடன் கூடிய முகங்களைகொண்ட உன்னிடத்தில் அன்பென்னும் அலைகளினால் மோதப்பட்ட மனதை அர்ப்பணம் செய்து தமது தளிர்போன்ற இரண்டு கரங்களையும் நீட்டி வாரி எடுத்து தன்னுடைய செஞ்சந்தனத்தினால் அலங்கரிக்கப்பட்ட மார்பில் இறுக்கி அணைத்துக் கொண்டு உனக்கு ஆறுமுகங்களும் பன்னிருகைகளும் விளங்கும்படிச் செய்து உன்னுடைய உச்சிகளை மோந்துமோந்து, அழகிய முதுகினை தடவிக்கொடுத்து கந்தா என்று அழைத்து அனுபவிக்கும் காலத்தில் உமாதேவியின் ஞானகலசங்களாகிய ஸ்தன்யத்திலிருந்து ஞானப்பால் சுரக்க அதனை ஆறுமுகங்களோடு கூடிய உனக்கு ஊட்டினாள் அன்றோ. இவ்விதம் ஜகன்மாதாவான உமாதேவியின் அலங்காரத்தினால் உனது திருமேனி முழுவதும் செந்நிறமாக இருக்கின்றதா?

அல்லது சூரஸம்ஹாரம் செய்யும் தருணத்தில் சூரனால் ப்ரயோகிக்கப்பட்ட பயங்கரமான ஆயுதங்களினால் தாக்கப்பட்டு உனது திருமேனி முழுவதும் செந்நிறமாக இருக்கின்றதா?

இத்தகைய செந்நிறத்தைக் கொண்ட உன்னை என்னவென்று கூறுவது குமரா? திரையற்ற நீர்போல் நெஞ்சினை இன்பக் கடலில் அழுத்துகின்றது நின் சிவந்த திருமேனியைக் காணும்கால்குமரா! அமைதிக்கு இருப்பிடமான அருள்மலையல்லவா நீ. அருளின் நிறம் சிவப்பன்றோ!

ஞானச்சுடரிலிருந்து வெளிவந்தவன் அன்றோ நீ. நெருப்புக் குழம்பாய் தோன்றும் சிவபெருமானே நீ ஆவாய். சிவபெருமானின் நிறமே நீ ஆவாய். சிவ பிரானின் நிறமோவெனில் செம்மை நிறமேயாகும்.

மும்மலத்தையும் போக்கும் நிறம் செம்மை நிறம் என்று சுட்டிக்காட்டுகிறார்.

பவளம் போல் மேனியில் பால் வெண்ணீரும் என்ற தேவாரத்தினால் திருநாவிற்கு அரசு சுவாமிகள்.

ஆதலால் பவளம் போல் சிவப்பாய் இருக்கின்றார் சிவபெருமான். சிவபெருமானின் செல்வக்குமரனாகிய நீயும் சிவப்பாக இருப்பது இயல்பு அன்றோ!

ஆகையால் ஹே குமரா! உன்னுடைய நிறமும் செம்மை. உன் கழலும் செம்மை. உனது வேற்படையும் செம்மை. உன்னை அடைய எண்ணும் உள்ளமும் செம்மையாகத்தானே இருக்கவேண்டும்.

எனவே இறைவனுடைய நிறம் செந்நிறமேயாகும். மன்னனை இறைவனுக்கு ஒப்பாக இந்தப் பாரத பூமியில் கருதிப் போற்றி வாழ்த்தி வருவதால்தான் கவி

களெல்லாம் மன்னனை வர்ணிக்கும்போது செங்கை மலர்ந்தது—செங்கை தலைமேல் குவிந்தது என்று வர்ணிக்கின்றார்கள். ஈவதினாலேயே ஒருவனுடைய கையானது செங்கையாக மாறுகின்றது. அதனாலேயே அக்கையானது போற்றவும் படுகின்றது.

கொடுத்துக்கொடுத்து செந்தாமரைபோல் கரங்கள் விளங்கி வந்தமையால்தான், அம்மாபெரும் வீரனான கர்ணனை அன்றும் இன்றும் என்றும் கொடைவள்ளல் கர்ணன் என்று புகழ்கின்றார்கள். கர்ணனின் செங்கையானது கொடுப்பதற்கே வந்தது-வாங்குவதற்கு அன்று. எல்லாம் கொடுக்க வல்லனான இறைவனே தனது கையை நீட்டி செந்நிற கையினையுடைய கர்ணனிடமிருந்து செந்நிறமான இரத்தம் மூலமாக கர்ணனின் தானதர்மங்களைத் தானமாகப் பெற்றுக் கொண்டார் என்றால் செந்நிறத்தின் மகிமைதான் என்ன.

அடியார்களுக்கு சேவகனாக இருக்கிற முருகன் போர்க்களத்தில் மயில் ஏறும் வீரனாக விளங்குகிறான்.

செந்நிறம் கொண்ட திருமேனியும் சரணாலயமாகிய சிவந்த திருவடிகளும் சூரனை வேரொடு அடித்த சுடர்வேலும் ஆகிய இவைகளுடன் செவ்வண்ணப் பெருமானாகிய செல்வக்குமரனுடைய மாபெரும் புகழ் கவிகளின் கற்பனைக்கும் அடங்காதது அன்றோ.

இத்தகைய அற்புதமான கோலத்தோடு விளங்கும் குமரனை நினையாமல் மனிதர்கள் இந்த அழியும் உலக வாழ்க்கையில் ஈடுபட்டு அதையே மெய்யென்று எண்ணி அல்லல்பட்டு வருகின்றார்கள். குமரனை அடைய ஆசையும் ஆர்வமும் அவர்களுக்கு இருந்த போதிலும் அவர்கள் இந்த மாய உலகை விட்டுவிடுகிறார்கள் இல்லை. இ∴து என்ன கஷ்டம், இ∴து என்னே ஆச்சர்யம்!

எனவே கொடுமையான தீவினையால் மனிதர்கள் ஜன்மாவை எடுக்கிறார்கள். கர்மவினையை அனுசரித்துக் கஷ்டத்தையோ சுகத்தையோ அடைகிறார்கள். பொய்யான உலக வாழ்க்கையை உண்மையென்று மகிழ்ந்து ஈச்வர சிந்தனையற்று இருக்கிறார்கள். மானிட வாழ்க்கையானது கடலில் தோன்றும் அலையினைப் போன்றது. கடலிலுள்ள திரையை எப்படி ஒன்று இரண்டு என்றெண்ண முடியாதோ அதுபோலவே மனிதர்களுடைய பிறப்பின் எண்ணிக்கையையும் எண்ண முடியாது. நேற்றுஉள்ளவர்கள் இன்று இல்லை. இன்று உயிருடன் இருப்பவர்கள் நாளை இருப்பதில்லை. இதை மனிதன் சிந்திப்பதில்லை அன்றோ! நிலையற்றது மனித வாழ்க்கை.

குடங்கவிழ் நீரோட்டம் என்று இரு

என்றிதனை பட்டினத்தடிகள் போதிக்கின்றார். வாழ்க்கையானது நல்வினை தீவினை இவைகளினால் வருகின்றது. எனவே அந்த வாழ்க்கையானது திரும்பவும் வினைக்கு ஆளாகாமல் குமரனின் அருளினையே நாடிச் செல்லவேண்டும்.

மனிதர்கள் புண்ணியமே செய்யவேண்டுமென்று நினைத்தாலும் பாபத்தைச் செய்கிறார்கள். ஏன்? காமத்திற்கு உள்ளாகிறார்கள் மனிதர்கள். உலக வாழ்க்கையை விரும்பி நிற்பவர்கள். பாபமே செய்து வருவார்கள். ஏன் தெரியுமா? அவர்கள் உலக வாழ்க்கையை உண்மையென்று நினைப்பதால் அன்றோ!

ஒருகர்மாவானது ஜன்மாவை தருமேயானால் அந்த கர்மாவும் முக்தியை அளிக்க சக்தியற்றதேயாகும்.

எனவே புண்ணியகர்மாவைச் செய்தாலும் பிறப்புண்டு. புண்ணிய கர்மாவானது சுகத்தையளிக்கவும்—

பாபகர்மாவானது துக்கத்தை யனுபவிக்கவும் பிறப்பைத் தருகின்றது. ஆதலால் பிறப்புண்டேல் இறப்புண்டு. இறப்புண்டேல் பிறப்புண்டு.

ஆகையால் நமக்குப் பிறவாமைவேண்டும். அப்படி மீண்டும் பிறப்புண்டேல் இறைவனை மறவாமை வேண்டும். முருகனை மறக்காமலிருப்பதற்கு இதயத்தில் அவனை வைக்கவேண்டும், முருகதியானத்தினுல் இதயத்தை சுத்தம் செய்யவேண்டும். நாவினுல் வேல் முருகா—வேல் முருகா என்று சொல்லி அகண்டமான புண்ணியம் செய்யவேண்டும். கந்தர் அநுபூதியில் ஒவ்வொரு அநுபூதியையும் ஆயிரம் தடவைகள் சொல்ல வேண்டும்.

பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மான்

அன்றோ செல்வக்குமரன். ஆறுபடை வீட்டினை இரவும் பகலும் நினைக்கவேண்டும்.

இந்தப் பிறப்பிற்கு அப்புறம் நமக்கு என்ன பிறப்பு என்று சொல்லமுடியாது. ஆனால் இந்தப் பிறப்புக்குப் பிறகு நாம் நிச்சயம் இருக்கிறோம் என்பதில் ஐயமில்லை அன்றோ.

எனவே இப்பிறவியிலேயே நாம் நல்ல காரியங்களை ஈச்வரார்ப் பணமாகச் செய்யவேண்டும்.

இறைவன் இருக்கிறான். அவன் ஸர்வக்ஞன். அவன் ஸர்வ சக்திமான். அவன் எல்லாமாய் எங்கும் எல்லாவற்றிலும் இருக்கின்றான் என்ற ஒரு எண்ணமானது உள்ளத்தில் உருவாகி மலைபோல் வளர்ந்து கொண்டேயிருக்கவேண்டும். இந்நிலையில் இறைவன் நமக்கு மிகவும் எளியவனாக இருக்கிறான் என்பதிற்கு,

தீர்ந்த அன்பாய அன்பர்க்கு
அவரினும் அன்ப போற்றி

என்ற ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளுடைய அருள் வாக்கே மேலான ப்ரமாணமாகும்.

எத்தனை கோடி ஏணி வைத்தாலும் காணவொண்ணுதவன் செல்வக்குமரன். ஆனல் நாம் உள்ளம் உருகி ஒருதரம் முருகா—என்று சொல்லி ஒருஅடி முன் வைத்தால், முருகப்பெருமானேவெனில் நம்மை நோக்கி நூறுஅடி முன்வைத்து

அப்பனே! நான் இருக்க
உனக்குப் பயம் ஏன்?

என்று அருளி அபயமளிக்கின்ருறென்ருல் முருகனின் பெருமையை நம்மால் சொல்ல இயலுமோ.

எனவே புண்டரீகத்தினும் செக்கச் சிவந்த முருகனின் கழலினை இந்த அரிதாகிய மானிடப் பிறவியிலேயே நாம் அடையவேண்டும். அதற்கு நாம் உலக வாழ்க்கையைக் கொஞ்சம் கொஞ்சமாக வெறுத்து வர வேண்டும். இவ்விதம் நாம் செய்து வந்தால் இந்த அழியும் தேகம் மண்ணேடு மண்ணய் போகும் முன்பே முருகனின் இரு பாதகமலங்களைக் காணலாம். இது ஸத்தியம் அன்ரே!

இத்தேக மொடு காண்பனே

என்று பரமயோகியும் ஞானியுமான தாயுமானவர் ஏங்குகின்ருர். இவ் அருள்வாக்கை நினைந்து நினைந்து சொல்லிச் சொல்லி உணர்ந்து பின்பு புணர்ந்து பாருங்கள். மெய்ப்பொருள் தானுகவே சுடர் விட்டெரியும் உங்கள் உள்ளத்தில்.

ஹே முருகா! உனது பெருமையை நினைக்கும் பொழுதுதான் இவ்வுலக வாழ்வு பொய் என்று தோன்றுகிறது. ஐயனே, உனது கழல்கள் என்னை வா—வா என்று இழுக்கின்றன. அதனைவிட என்னுடைய தீயவினைகள் என்னை எங்கே போகிறாய் எங்கே போகிறாய் என்று இழுக்கின்றனவே. அப்பனே, அருள் செல்வனே,

ஒரு பாம்பினின் வாயிற் அகப்பட்ட தவளைபோல் நான் தவித்துக் கொண்டிருக்கிறேன். பாம்பு பாதி விழுங்கிவிட்டதே என்ற ஞானமில்லாத தவளையானது தனக்கு முன்னால் பறந்து கொண்டிருக்கும் ஈயினைப் பிடிக்க எப்படி நாக்கை நீட்டுமோ அதுபோல் பாதி யமபாதையை அடைந்த நான் மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை இவைகளைவிட மனமில்லாமல் ஐம்பொறி களினால் முக்கியமாக பெண்ணாசையை நுகர்ந்து அனு பவிப்பதற்கு அங்குமிங்கும் அலைந்துகொண்டிருக் கிறேனே. இது உனக்கு நியாயமாகுமா. நீ இருக்க நான் இவ்விதம் அலைவது தகுமா.

ஐயனே, நான் உனக்கு என்றென்றும் அடிமைப் பட்டவன் அல்லவா! நான் உன்னுடைய பக்தன் அன்றோ! பக்தனைக் கைவிடுவது உனக்கு அழகாகுமா.

ஹே குமரா! என்னுடைய நிகழ்காலத்தை நினைத் துப் பார்த்தால் ஜன்ம ஜன்மாவிற்கு எனக்கு நற்கதி கிடையாத வண்ணம் பாபம் செய்திருக்கிறேன். இப் பொழுதும் பாபம் செய்து கொண்டேதான் இருக் கின்றேன். வருங்காலத்தில் நான் பாபம் செய்யாமலா இருக்கப் போகிறேன்.

ஐயோ இதனை நினைத்தால் என்வயிற்றில் நெருப்பு வைத்தாற்போல இருக்கிறதே. குமரா, ஐயையோ

என்னைப் போல் ஒரு பாவி இவ்வுலகில் யாருமே கிடையாது.

முருகா! வெற்றிவேலா, நான் செய்த பாபங்களை எண்ணி எண்ணி மனம் நொந்து உன் முன்னிலையில் ஐயோ–ஐயோ என்று சொல்லிக் கதறுகிறேன். உன் செவியில் ஏறவில்லையா? என்மீது உனக்கு இரக்கம் வரவில்லையா? ஐயோ பாவம் என்று சொல்லி என்னை ஆட்கொள்ளக் கூடாதா. முருகா! இதனால் உனக்கு என்ன குறைவரப் போகிறது. ஏதோ புண்ணியவசத்தினால் உன் வேலின் பெருமையை நான் கொஞ்சம் கேட்டிருக்கிறேன். அதனையே சக்தியாகக் கொண்டு உன்னை யாசிக்கிறேன்.

குமரா! நீ உனது கையில் தாங்கிவரும் வேலின் நுனியினால் துஷ்டர்களைக் கொன்று வீழ்த்துகிறாய். அவர்களுடைய இரத்தம் தோய்ந்து அது நினது வேலின் நுனியிலிருந்து வழிந்து வேலினைத் தாங்கியிருக்கும் நினது கையில் விழுகின்றது. பிறகு அந்த இரத்தம் வேலின் அடியை அடைந்து நினது காலை ஆச்ரிக்கின்றது. ஏன் தெரியுமா? அடியார்களினால் அலங்கரிக்கப்பட்டதன்றோ நினது பாதம். பொருளோவெனில் நீ துஷ்டர்களை நிக்ரஹம் செய்து அவர்களுடைய உடலில் ஸாரமாயிருக்கிற இரத்தம் மூலமாக நீ அவர்களை நினது வேலில் தாங்கி, அவ்வேலின் நுனியினை நினது செவிவரையில் வரும் வண்ணம் வைத்துக் கொண்டு, இரத்த ரூபமாக இருக்கிற துஷ்டர்களிடம், "அன்பர்களே! எமது வேல்பட்ட மாத்திரத்தில் நீங்கள் பரிசுத்தமானவர்களாக ஆகிவிட்டீர்கள். இத்தகைய சக்தியினை நான் அடைவதற்கு, மூலகாரணமாக இருப்பவர்கள் என் திருவடியில் குடிகொண்டிருக்கும் எண்ணற்ற அடியார்களே ஆவார்கள்.

அவர்கள் அன்பினுல் உடல் உயிர் ஆவி அனைத்தையும் என்னிடம் அர்ப்பணம் செய்தவர்கள். நீங்கள் அவர்களை அடைந்தால்தான் பரிபூர்ணமான முக்தியை அடைந்தவர்களாக ஆ வீ ர் க ள். எனவே நீங்கள் அடியார்களை அடையுங்கள் என்று அருளிக் கையில் வழியும் இரத்தத்தை தாங்காமலிருந்து விடுகிறுய். இதுபோல் துஷ்டர்கள் வேலினுல் வீழ்த்தப்பட்டு வேலினுல் ஆட்கொள்ளப்பட்டு உன்னுல் அருளப்பட்டு உனது கையில் வழியப்பட்டு நினது பாதங்களை அடைந்து அடியார்களுக்கு அடியார்களாக ஆகி ஜன்மாவை ஸபலம் செய்து கொள்கிறுர்கள்.

எனவே செல்வக்குமரா! நான் பக்திமார்க்கத்தின் மூலமாக உன்னை அடைவது என்பது எத்தனை கோடி ஜன்மாயெடுத்தாலும் முடியவே முடியாது ஐயனே.

முத்தமிழால், வைதாரையும்
அங்கு வாழவைப்போன்

அல்லவா நீ. நான் இதுவரையிலும் உன்னை வணங்கி வாழ்த்தாமலும் உனது பெருமையை எடுத்துச் சொல்லாமலும் இருந்ததே பெரிய குற்றமாகும்.

இதெல்லாம் போதாதென்று கேவலம் சிற்றின்பத்தையே மேலானதாக எண்ணிப் பொய்யான இவ்வுலக வாழ்க்கையிலேயே என்னுடைய காலம் முழுதும் கழிததுவிட்டேன்.

ஆலயம் தொழுவது சாலவும் நன்று

என்று ஔவைத்தாய் சொல்லிய அருள் வாக்கை தலைமேற்கொண்டு குன்றுதோறும் வந்து நின்னை வணங்கி வாழ்த்திப் புகழ்ந்து போற்றினேன் இல்லை.

ஐயனே, நான் மன்னிக்க முடியாத குற்றங்களைச் செய்தவன். எனவே நீ என்னிடம் இரக்கம் கொண்டு நினது வேற்படையினால் என்னைக் குத்தி என் உள்ளத்தில் உரம் பெற்று வளர்ந்த அக்ஞானமாகிய சூரனைக் கொன்று வீழ்த்தி என் உள்ளத்தை நிர்மலமாகச் செய்து என்னை உன் அடியார்களுக்கு எல்லாம் அடியாராகச் செய்து ஸதாகாலமும் நின்பெருமையை பாடிக் கொண்டேயிருக்கும் ஒரு பாக்யாதிசயத்தை தந்து அருள்வாய் அப்பனே.

எனவே பக்தியுடன் யார் இந்தப் பாடலை ப்ரதி தினமும் பாராயணம் செய்துவருகிறார்களோ அவர்கள், அவர்கள் செய்யும் பாராயண மஹிமையினால் எல்லா விதமான துன்பங்களையும் போக்கடித்துக்கொண்டு இந்த நச்வரமான உலகவாழ்க்கையை வெறுத்து, முடிவில் துன்பமற்றவர்களாக ஆகி முருகப்பெருமானின் திருவடி நிழலையடைவார்கள் என்பது திண்ணம்.



# அண்டசராசரங்களுக்கும் ஆதாரம் முருகபெருமானே

## 26



ஆதா ரமிலேன் அருளைப் பெறவே
நீதான் ஒரு சற்றும் நினைந்திலையே
வேதா கம ஞானவினோத மனோ
தீதா சுரலோக சிகா மணியே,

### பதவுரை

வேத ஆகம—வேதங்கள் ஆகமங்கள் இவைகளை ஸ்வரூப மாகவும் பொருளாகவும் உடையவனே, ஞான வினோத—ஞானத்தில் விளையாடுபவனே, சுர லோக சிகாமணியே—தேவ லோகத்திற்கு முடிமணியாக விளங்குபவனே, ஆதாரம் இலேன்—ஒருவிதமான தாங்குதலும் இல்லாதவனாகிய நான், அருளை—(உனது) திருவருளை, பெறவே—பெறுவதற்கென்றே, நீதான்—(அருளை வாரி வாரி இறைப்பதற்கென்றே நீ முருகப் பெருமானாய் அவதரித்திருக்கின்றபடியால்-அதாவது அருளை பொழிவதையே குறிக்கோளாகக் கொண்ட) நீயே அதாவது நீ தானாகவே, ஒருசற்றும்—ஒரு சிறிதளவேனும், நினைந்திலை — நினைந்தாயில்லையே? ஏ – 'ஏ'காரமானது

தன்னுடைய மனோ வேதனையையும் முருகனை இரங்க வைக்கும் தன்மையையும் காட்டுகிறது.

**தாத்பர்யம்**

இந்த உலகத்தில் நாம் தெரியாத விஷயங்களைத் தெரிந்து கொள்ள எண்ணற்ற கருவிகள் இருக்கின்றன. சில விஷயங்களைக் கண்ணால் பார்த்தும், சில வற்றைக் காதினால் கேட்டும் அப்படியே சில விஷயங்களை ஊஹத்தாலும் தெரிந்து கொள்கிறோம்.

ஆனால் மனதிற்கும் வாக்கிற்கும் புலப்படாத பொருள் ஒன்று இருக்கிறது. அதுதான் பரம்பொருள். பரம்பொருளை எவ்வாறு அறியமுடியும்.

எனவே இந்திரியங்களுக்கும், மனதிற்கும் வாக்கிற்கும் புலப்படாத பரம்பொருளைச் சுட்டிக்காட்டி போதிக்கும் அறிவிற்குத்தான் வேதம் என்று பெயர்.

வேதத்தின் மஹிமையோ வெனில் எல்லையில்லாதது. வேதம் நான்கு வகைப்படும். ருக்வேதம்-யஜுர்வேதம்-ஸாமவேதம் - அதர்வணவேதம். இந்த நான்கு வேதங்களும் சிக்ஷை, வியாகரணம், நிருக்தம், கல்பம், சந்தஸ், ஜ்யோதிஷம், என்று ஆறு அங்கங்களாகப் பிரிக்கப்படுகின்றன. ஒன்று ஒன்றை விட மேலானது.

முதலாவது அங்கமாகிய சிக்ஷையில் இன்ன அக்ஷரத்திற்கு இன்ன ஸ்வரமென்பது சொல்லப்பட்டிருக்கிறது. வேதங்களுக்கு ஆதாரபூதம் 51 மாத்ருகா அக்ஷரங்களேயாகும். அக்ஷரங்களின் ஸ்வரம் தவறினால் விபரீதமான பலன்தான் ஏற்படும்.

மேலும் வேதங்களுக்கு நான்கு உபவேதங்கள் இருக்கின்றன.

நாம் நோயற்ற வாழ்வோடும் குறைவற்ற செல்வத்தோடுமிருப்பதற்கு உத்தமமான வழிகளைப் போதிக்கின்றது ஆயூர்வேதம்.

நம்மிடம் ஒருவிதமான துன்பமும் வராமலிருக்கும் பொருட்டும், ராஜ்யத்திற்கு ஒருவிதமான கஷ்டம் வராமலிருக்கும் வழியினை போதிக்கின்றது அர்த்த சாஸ்திரம்.

தன்னுடைய தேசத்திற்கு மற்றவர்களினால் நேரும் ஆபத்தை போக்கடிப்பதற்கு உள்ள வழியையே போதிகின்றது தநுர்வேதம். ஆயுத விசேஷங்களைப்பற்றியும் எதிரியை எப்படி முறியடிப்பது என்பதைப் பற்றியும் போதிக்கின்றது தநுர்வேதம்.

நடனம் கீதம், வாத்தியம் முதலியவைகளினால் மனோல்லாஸத்தை உண்டுபண்ணும் மார்க்கத்தை போதிக்கின்றன காந்தர்வவேதம்.

எனவே வேதங்கள் அநாதி. ஆதியும் அந்தமும் அற்றது. வேதங்கள் பகவானுடைய மூச்சேயாகும்.

வேத நெறி தழைத்தோங்க முருகப்பெருமான் திருஞானசம்பந்தராக அவதரிக்கின்றார் என்று சேக்கிழார் சுவாமிகள் சொல்லுகின்றார்கள்.

வேதங்களை ரிஷிகள் ஹ்ருதயத்தில் வைத்திருக்கிறார்கள். குருபக்தியினால்தான் வேதத்தை அறிய முடியும்.

வேதமானது இப்படிச்செய் அப்படிச்செய் என்று கட்டளையிட்டுக்கொண்டே இருக்கின்றது. வேதத்தின் பொருளை அறியவே புராணங்கள் சாஸ்திரங்கள் வந்தன. இதிஹாஸங்களும் வேத புருஷனையே போதிக்கின்றன. வேதமே ராமாயணமாக வெளிவந்தது.

மஹாபாரதத்தை ஐந்தாவது வேதம் என்று புகழ்கிறார்கள். ஏன்? வேதப் பொருளையே அது போதிக்கின்றது.

மேலும் வேத சப்தமே ஜகத்தை ச்ருஷ்டி செய்ய மூலகாரணம். வேதங்கள் அளவுக்கடங்காதது. அது போலவே ச்ருஷ்டியும் கோடிக்கணக்கானவை.

பரத்வாஜ மஹர்ஷியானவர் மூன்று ஆயுள் முடிய வேதாத்தியனம் செய்து வந்தார். அதன் மஹிமையினால் அவர் முன்னே சிவபெருமான் தோன்றி, மஹர்ஷே உமக்கு இப்பொழுது நான் நான்காவது ஆயுளைத் தந்தால் நீர் என்ன செய்வீர் என்று கேட்டார். உடனே மஹர்ஷியானவர், சிறிதும் தயங்காமல் சிவபெருமானிடம் தாம் அடையும் நாலாவது ஆயுளிலும் வேதத்தையே பாராயணம் செய்து கொண்டிருப்பேன் என்றார். உடனே சிவபெருமான் மனம் மகிழ்ந்து மஹர்ஷியினுடைய எதிரில் மூன்று பெரிய மலைகளைத் தோன்ற வைத்து, தமது கையில் ஒருபிடி மண்ணை எடுத்து ப்ரத்வாஜரிடம் காட்டி, மஹர்ஷே, தாங்கள் மூன்று ஆயுள் முடிய வேதாத்யனம் செய்தது அனைத்தும் இந்தப் பிடிமண்ணிற்குள் அடங்கிவிட்டன. நீர் இன்னும் கற்றுக்கொள்ள வேண்டியது இம்மலைகள் போல் இருக்கின்றன என்று சொல்லி மறைந்தார்.

இன்னும் பரத்வாஜமஹர்ஷி வேதாத்யனம் செய்து கொண்டேதான் இருக்கிறார். இவ்விதம் அளவுக்கடங்காத மஹிமையினைக் கொண்டது வேதங்கள். எனவே ஈச்வரபூஜைகளுக்கு ப்ரமாணம் வேதங்களேயாகும்.

இதுபோலவே ஆகமங்களும் பலவகையாகப் பிரிகின்றன. அவைகளாவன: சிவாகமங்கள், சக்தி ஆகமங்கள், வைஷ்ணவ ஆகமங்கள். கணேச ஆகமங்கள், குமாரதந்திர ஆகமங்கள்.

ஒவ்வொரு ஆகமங்களும் அந்த அந்த தேவதைகளை எப்படி பிரதிஷ்டை செய்து ஆராதித்து பலனையடைவது என்பதையே ஸித்தாந்தமாக போதிக்கின்றன. ஆகவே சிவாகமங்கள் 28, சக்தி ஆகமங்கள் 64. விஷ்ணு ஆகமங்கள் இரண்டு. ஒவ்வொரு ஆகமத்திலும் வாமபாகம் தக்ஷிணபாகம் என்று இரண்டு முறையுண்டு.

அப்படியே ஆகமங்களில் சரியை-கிரியை-யோகம்—ஞானம் என்று நாலு பிரிவுகள் உண்டு.

சரியை இறைவனை அடையும் வழிபாட்டினைப் போதிக்கின்றது. கிரியை என்பது ஆலயநிர்மாணத்தை சொல்லுகிறது. அப்படியே யோகம் என்பது ஆத்மா ஈச்வரனிடத்தில் ஐக்யமாகும் விதத்தையும் எவ்விதம் தியானம் செய்ய வேண்டுமென்பதையும் சொல்லுகிறது. முடிவான சிவானுபவ நிலையைப் போதிக்கின்றது ஞானம்.

மேலும் வேதமானது கர்மகாண்டம்-ஞானகாண்டம் என இரண்டாகப்பிரிக்கப்படுகின்றது. ஞானகாண்டமே உபநிஷத் பாகமாகும். உபநிஷத்தே நாலுமஹாவாக்யங்களை போதிக்கின்றன. அங்குதான் முருகப் பெருமானின் நிஜஸ்வருபத்தைக்காணலாம்.

இவ்விதம் வேதம், ஆகமம், தர்மசாஸ்திரம், இதிஹாஸம், புராணம், காவ்யங்கள், பாவம், ராகம், தாளம் இசை அனைத்தும் முருகப்பெருமானின் ஸ்வருபமாகவே போதிக்கப்படுகின்றன.

இவ்விதம் வேதமும் ஆகமமும் மஹாஸமுத்திரம் போலும் அகாயம் போலும் இருந்து வருகின்றன. வரம்பினைக் கடந்த பெருமையினைக் கொண்டது.

இத்தகைய விஷயங்கள் குருமுகமாக விஸ்தார மாகத் தெரிந்து கொள்ள வேண்டியவைகள். எனவே இவைகளின் விஸ்தாரம் இத்துடன் நிறுத்தப்படு கிறது.

## வேத ஆகம

ஹே முருகா! நீ வேதங்களாகவும் ஆகமங்களாக வும் இருக்கிருய். வேதாகமங்களின் பொருளாகவும் இருக்கிருய். வேதங்களுக்கு எல்லாம் உன்னிடத்தில் தான் பரம தாத்பர்யம். தவிர என்றும் அழியாப் பொருளான உன்னே அடைந்ததனுல்தான் மேலான பிரமாணமாக வேதங்கள் திகழ்கின்றன. நீயோ வேத புருஷனுய் விளங்குகின்ருய். ஹே குமரா, உன்னே

ஓதாதே வேத முணர்ந்தாய் போற்றி

என்று அப்பர் சுவாமிகள் புகழ்கின்ருர். ஆகையால் வேதம் இல்லேயேல் நீ இல்லே. நீ இல்லேயேல் வேதம் இல்லே. ஹே வேதஸ்வருப! நீதான் எல்லாவற்றிற்கும் முதல்வன். முக்குணமும் கொண்டவன். தோன்றுவதும் தோன்ருமையும் நீ அன்ருே! எல்லாவற்றிலும் நிறைந் திருக்கிருய். ஹே குமரா! ஆகம சாஸ்திரங்கள் உன் னேயே போதிக்கின்றன. வேதாகமங்களின் உண்மைப் பொருளே உன்னுல்தான் விளக்க முடியுமே தவிர அன் னியில் ஒருவராலும் முடியாது. வேதத்தை ரக்ஷிப்பதற் காகவே நீ அவதாரம் செய்கிருய். உனக்கு ஆதாரம் வேதம், வேதத்திற்கு ஆதாரம் நீ. நீ வேதமாக இருப் பதால்தான் வேதம் எல்லாவற்றிற்கும் மேலான ப்ரமா ணமாகயிருக்கிறது. உலகில் பேசும்போதுகூட வாழ்க் கையில் மனிதர்கள்

நீ சொல்வதென்ன வேதவாக்கா,
நீ சொல்வதற்கு வேதப்ரமாணம் உண்டா.

என்று ஒருவருக்கு ஒருவர் பேசிக்கொள்கிறார்கள்.

ஆதலால் எந்தப் ப்ரமாணத்தை நாம் சொன்னோமேயானால் எல்லா ப்ரமாணங்களும் தலை தூக்காமல் அடங்கி விடுமோ அந்த ப்ரமாணமே வேத ப்ரமாண மாகும். எனவே குமரா! நீ வேதப்ரமாணமாகவே இருக்கிறாய். ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் நீ வேதப்ர மாணமாயும் ஆகம ப்ரமாணமாயும், புராணப்ரமாண மாயும், இதிஹாஸப் பிரமாணமாயும், காவ்யப்ரமாண மாயும், ஞானப்ரமாணமாயும் இருப்பதால்தான் மனிதர்கள் ஈச்வர சிந்தனையில் நடமாடுகின்றார்கள். எங்கு பார்த்தாலும் கோயில்களை எழுப்புகின்றார்கள்.

திருவண்ணாமலை – மதுரை–தஞ்சாவூர்–சிதம்பரம்–வைதீச்வரன் கோயில்–திருச்செந்தூர் - இன்னும் மற்றும் குன்றுதோறும், அப்படியே மூலைமுடுக்குகளிலும் ஆலயங்கள் வானளாவ எழுகின்றனவே, அனைத்தும் வேதப்ரமாணங்களை ஆதாரமாகக் கொண்டதல்லவா.

எனவே குமரா! நீ வேத புருஷன் மட்டுமல்ல. ப்ர மாண புருஷனும் நீதான்.

## மன அதீதா

முருகா! உன்னுடைய ஸ்வருபமானது மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாதது. நான்கு முகங்களுடைய ப்ரும் மாவும் ஐந்து முகங்களுடைய சிவபெருமானும், அப் படியே ஆயிரம் முகங்களுடைய ஆதிசேஷபகவானும் உன்னுடைய உண்மையான தத்துவத்தை அறிந்தார் கள் இல்லை.

செல்வக் குமரா! இவ்விதம் நீ பரசிவத்திற்கே புலப்படாமல் இருக்கிறாய். மனம் "வாக்கு என்பது உன்னை அறியும் விஷயத்தில் செத்து விடுகின்றன அன்றோ

இவ்விதம் சப்த ரூபமான வேதங்கள் உன்னை அறிய முடியாமல் நீ ஜாதி—குணம்—க்ரியை—ஸம்பந்தம்—அநுப்பிரவேசம் இவைகளுக்குள்படாத நிர்குணப்ரும்மம் என்று போதித்து திரும்பிவிட்டன என்ருல் மனதினுல் உன்னை அறிய இயலுமோ. மனதத்துவத்திற்கும் மேல்பட்டவன் அல்லவா நீ. எனவே உனது அருளினுல்தான் உன்னை அறியவேண்டும். அன்னியில் இதில் வேறு வழியே இல்லை.

ஹே ஆறுபடை வீட்டினையுடையோனே! நீ சப்த ரூபமான வேதமாயும் — வேத புருஷனுயும் விளங்குகிருய். உன் பெருமைதான் என்ன!

வேதாகமனுயும் மனேதீதனுயும் இருக்கிற நீ ஞான விநேதனுய் இருந்து வருகிருயே. இஃது என்னே உன் லீலை.

இந்த உலகம் தோன்றுவதற்கு முன்னுலிருந்தது கேவலம் சப்தப்ரும்மம் ஒன்றேயாகும். அது எங்கும் எல்லாமாய் நிறைந்திருந்தது. அதைத்தான் 'நாதப்ப்ரம்மம்' என்றும் 'அக்ஷரப்ரம்மம்' என்றும் சொல்வார்கள்.

'சப்தம்' என்பது 'அக்ஷரம்' அழியாத பொருள். மூலசக்தியின் உருவமே அக்ஷரம்தான்.

ரிஷிகள் ஸ்வானுபூதியில் அனுபவிக்கும் பரம்பொருளே அக்ஷரம் ஆகும்.

அங்கிரஸ் முதலான ரிஷிகள் தங்களது வாக்காகிய வஜ்ராயுதத்தினுல் குகைப் பாறைகளை உடைத்து தவிடு பொடியாக்கி விருத்திரன் என்ற இருட்டினுல் மூடிவைக்கப்பட்டிருந்த ஞான ஒளிகளை மீண்டும் திருப்பி அடைந்தனர் என்பதற்கு வேதமே மேலான ப்ரமாணமாக விளங்குகிறது.

இதிலிருந்து மந்திரங்களே இதயமாகிய குஹை யில் மறைந்திருக்கும் ஞான ஒளியைச் சுடர்விட்டு எரி யும்படி செய்வதற்கு மூலகாரணமாக இருக்கின்றன.

ஹே முருகா! மந்திரங்களைக் காட்டிலும் மேலான தத்துவமே இல்லையன்றே.

ஐம்பத்தியொன்று மாத்ருகா பீஜாக்ஷரங்களே மந் திரங்களின் ஜீவநாடியாக இருக்கின்றன. நினது ஸ்கந் தானுபூதியும் 51 பீஜாக்ஷரங்களையே ஜீவனாகக் கொண் டுள்ளது. இத்தகைய பெருமைகளையும் சக்திகளையும் கொண்ட உன்னைப் புகழும் ஸகஸ்ரநாமமானது

ஓம் அசிந்த்ய சக்தயே நம:

என்று தொடங்கி

ஓம் ஸ்ரீ வல்லீதேவஸேனாஸமேத
ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமினே நம:

என்று முடிவினை அடைகிறதென்றால் நின் பெருமை தான் என்ன. ஹே வேதபுருஷனே உன்னை நான்,

நாத பிந்து கலாதர நமோ நம
வேத மந்திர ஸ்வரூப நமோ நம

என்று வாயார துதி செய்கின்றேன்.

## ஞான விநோத

ஹே முருகா! நீ ஞானத்தில் விளையாடுகின்றாய். எந்த ஞானத்தில்? வேதமாகிய மந்திரஸ்வருபமாகிய ஞானத்தில் திருவிளையாடல் செய்கின்றாய். செல்வக் குமரா! நினது திருவிளையாடலானது சிலசமயங்களில் மந்திரங்களுடன் திகழ்கின்றது. இத்தகைய மந்திர

திருவிளையாடல்களை புண்ணியவான்களிடத்திலேயே செய்கின்றாய்.

ஞானமற்றவர்களிடத்திலும் ஞானமுள்ளவர்களிடத்திலும் லீலைகளைச் செய்கிறாய். குமரா, நீயோவெனில் சிலசமயம் அக்ஞானத்தால் லீலை செய்கிறாய். என்னிலையிலும் திருவிளையாடலே செய்து ஜீவகோடிகளை மகிழ வைக்கின்றாய்.

வேதநெறி தழைத்தோங்க திருஞானசம்பந்த மூர்த்தியாய் அவதரித்த ஞானச்சுடர் அல்லவா நீ.

ஹே ஞானவிநோத! பெரியவன் சிறியவன் என்று பார்க்காமல் எவனிடத்தில் ஞானம் இருக்கின்றதோ அவனிடத்தில் நீ விநோதனாக லீலை செய்கிறாய். ஒரு கடுகளவு ஞானம் ஒருவனிடத்திலிருக்குமேயானால் நீ அவனை அடைவது என்பது திண்ணம்.

ஞானமானது எண்ணற்ற கோடி உருவங்களாக மிளிர் விட்டு எரிகின்றது.

உபநிஷத் ஞானத்தில் நீ விளையாடும் பொழுது அதன் அழகே அழகு. அந்நிலையில் நீ கேவலம் ஞான பண்டிதனாகவே லீலைகளைச் செய்கின்றாய். மேலும் வற்றாத சரவணப் பொய்கையில் ஞானக்கொழுந்தாய் அவதரித்து அண்டசராசரங்களையும் ஆட்டிவைத்தாயே, இதன் பொருள்தான் என்ன. ஞானவேலினை ஏந்தி நீ ஞானபண்டிதனாய் அருளும் ஒரு வைபவத்தை நான் எவ்விதம் போற்றிப் புகழுவேன்.

செஞ்சுடர் வேலனே! ஞானத்தினைப் புகலும் காவியங்களாகிய ஸமுத்திரத்தில் கவிகளுடன் விளையாடுகின்றாயே.

நீ ஞானவிநோதன் அல்லவா. நின் திருவிளையாட லின் குறிக்கோள் ஞானத்தில் அன்றோ!

ஹே முருகா! உன்னுடைய வலது தோளில் அமர்ந்து நீ செவிகொடுத்துக் கேட்கும் வண்ணம் என்னைத் தடுத்து ஆட்கொண்டாயே. நான் என் வாழ் நாளில் என்றாவது நினைத்ததுண்டா நின் மாறிலா கருணை என்னை ஆட்கொள்ளும் என்று.

செல்வக் குமரனே! யான்யாகிய என்னை விழுங்கி நின் அநுபூதியில் லயித்திருக்கும் பொழுது உன்னை நான்

ஞான விநோத

என்று புகழும் வேளையில் என் மனோ நிலையை என்ன வென்று சொல்லி அநுபவிப்பேன்.

ஞானத்தில் விநோதம்–அருளில் விநோதம்–அன் பில் லீலை–ஆட்கொள்வதில் திருவிளையாடல்–கவிதை யில் விநோதமும் அருளும்–ஞான சல்லாபத்தில் விநோ தம்–ஒளியில் லீலை–இருளில் லீலை–மனோ நிலையில் விநோதம்–புகலுவதில் விநோதம்–வந்து வாதாடுவதில் விநோதம்–அக்ஞானத்தை அழிப்பதில் விநோதம்– பெரிது பெரிது என்று சொல்லி விளையாடுவதில் விநோ தம்–தோன்றும் ஞானத்தில் லீலை–மறையும் ஞானத்தில் விநோதம்–தோன்றிக்கொண்டே இருக்கும் ஞானத்தில் விநோதம்–மறைபொருளாய் நிற்பதில் விநோதம்.

அப்படியே கவிகளின் கற்பனையில் அடங்கியும் அடங்காமலும், அப்படியே அடங்கியடங்காமலும் மிளிர்கின்ற ஞானத்தில் விநோதம்–வைதோரையும் வாழவைப்பதில் விநோதம்–அறிவில் லீலை–அறியாமை யில் திருவிளையாடல். ஆட்கொள்வதில்லை.

என்று நினைப்பவர்களிடத்தில் திருவிளையாடல்.

இவ்விதம் நீ உள்ளத்தில் உறம் பெற்று ஞான விநோதனாய் எவ்வேளையும் தோன்றித் திருவிளையாடல் செய்கின்றாய்.

ஹே சுரலோக சிகாமணியே, தேவேந்திரன் உள்பட முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் நீ மணிமுடி போல் விளங்குகிறாய். சூரஸம்ஹாரத்திற்கு முன்பு தேவர்கள் மும்மூர்த்திகளையே மணிமுடியாக கருதியிருந்தார்கள். ஆனால் சூரஸம்ஹாரத்திற்காக நீ அவதரித்த நாளிலிருந்து இன்று வரையிலும் நீதான் தலைவனாக இருந்து வருகிறாய்.

நீ ஸேனாதிபதியல்லவா! அண்ட சராசரங்களையும் அடக்கியாளும் ஸேனாதிபதி நீ ஒருவனே ஆவாய். எனவே நினது பாதங்களையே தேவர்கள் தங்கள் தலையில் மணியாக அலங்கரித்துக்கொண்டிருக்கின்றார்கள். அத்தகைய வீராதி வீரனும் சூராதி சூரனும் நீ அல்லவா.

இவ்விதம் அருணகிரிநாதர் முருகனுடைய லீலா வைபவத்தைச் சொல்லி அதையனுபவிக்க முடியாதவன் எத்தகைய துன்பத்தினை அடைவான் என்பதினைத் தன்மயபாவத்தினை யடைந்து முருகனிடம் நெஞ்சமுருகி,

ஆதார மிலேன் அருளைப் பெறவே
நீதான் ஒரு சற்றும் நினைந்திலையே

என்று தன் குறைகளைச் சொல்லி வருந்துகிறார்.

ஹே வேதஸ்வரூபனே, உன்னுடைய அருள் ஏற்படவேண்டுமானால் அளவிலா பக்தியுடன் புண்ணிய கர்மாக்களைச் செய்யவேண்டும். கணக்கற்ற அளவில் தான தர்மங்களையும் செய்யவேண்டும்.

வேதத்தைச் சரணமடைய வேண்டும். உன்னிடமிருந்து எழும் மூச்சே வேதமன்ரே! நான் சொல்வதை செய் நற்கதியை அடைவாய். இதற்கு நானே ப்ரமாணம்'' என்று வேதமே சபதம் செய்கின்றது.

ஹே முருகா, நானேவெனில் ஆதாரமற்றவனுக இருக்கிறேன். வேதத்தைச் சரணமடைந்து அதில் கூறிய வண்ணம் புலன்களையடக்கி உன்னை ஆராதனை செய்தேன் இல்லை. நல்லவர்களிடத்தில் அன்பினைக் கொண்டு உன் திருவடிகளை அணுவளவுகூட பக்தி செய்யவில்லை. 'நான் ஞானவான்' என்னும் கர்வத்தையடைந்து இந்த உலக வாழ்க்கையை என்றென்றும் மெய்யென்று சிற்றின்பங்களிலேயே காலத்தைக் கழித்தவன்.

ஹே குமரா! கடுகளவும் அறிவில்லாதவனுகிய நான் நல்வினை தீவினை இவைகளையறிந்து அதன்படி நடப்பதற்குள்ள சக்தியற்றவன். ஒருவிதத்திலும் புண்ணியம் செய்யாதவன். தீய எண்ணங்களையுடையவன். சஞ்சலம் அற்ற மனதோடும் பக்தியோடும் உன்னை ஸ்மரணம் செய்யவில்லை. வீணுக ஆயுள் முழுவதும் தர்க்கத்திலேயே என் காலத்தைக் கழித்து வந்தேனே தவிர ஞானவினேதனுகிய உன்னைச் சரணம் அடையவில்லை. உன்னைப் பஜனம் பண்ணவில்லை.

ஜகத்துக்கெல்லாம் ஆதாரம் நீ. உன்னையின்றி எனக்கு ஆதாரம் யார் இருக்கிருர்கள். இதை நீயே சொல் ஹே முருகா. என் குறைகளைக் கேட்டு என்னை யார் ஆட்கொள்ளப் போகிருர்கள்.

என்னுடைய மனைவி புத்திரர்கள், என் வீடு வாசல் என்னுடைய செல்வம் இவைகளில் ஏன் எனக்குப் பற்றுதல் வரவேண்டும். நாம் எங்கிருந்து வந்தோம்.

எங்கே போகப் போகிறோம். யுவதிகளிடத்தில் ஏன் மன மானது நாடுகின்றது. இவ்வித தத்துவங்களை இது வரையிலும் நான் நினைத்ததே இல்லை.

இவ்விதமிருக்கிற நான் என்ன ஆதாரத்தை வைத் துக்கொண்டு, உன்னுடைய அருளைப் பெறமுடியும். குமரா நீ என்னிடம் ஒருவிதமான நல்ல குணத்தையும் காணமுடியாது ஏன் தெரியுமா? நான் வேதங்களையும் சாஸ்திரங்களையும் கடைப்பிடிக்காதவன்.

ஏ முருகா! உனக்கு ஆதாரம் வேதம், அதை நான் அறிந்தேன் இல்லை. நீ மனோபாவத்தையும் பக்தியை யுமே மேலானதாகக் கொண்டவன். இவையிரண்டும் எனனிடத்தில் இல்லை. பக்தி நெறியும் முக்தி நெறியும் அறியாத மூர்க்கர்களுடன் பழகித் தீய நெறியை நாடியுள்ள என்னைக் கைவிட்டுவிடாதே ஐயனே.

ஹே முருகா! இந்நிலையில் நான் எல்லா தெய்வங் களினாலும் கைவிடப்பட்டிருக்கிறேன். என்னைக் கை கொடுத்து தூக்குவதற்கு ஒருவரும் இல்லையே. உனது அருளை நான் எவ்விதம் பெறமுடியும். உனது அருளைத் தவிர நான் வேறு ஒரு தெய்வத்தினுடைய அருளைப் பெற இச்சிக்கவும் இல்லை. உனது அருள்தான் முக்தியை அளிக்கும். நான் உன்னிடத்திலிருந்து எதை யும் அடைய விரும்பவில்லை. ஏன் தெரியுமா? விரும் பும் பொருள் அனைத்தும் அநித்யமேயாகும். வேறு பொருள் வேண்டுமானால் நான் உன்னிடம் சரணம் புகுந்திருக்கவே மாட்டேன்.

உனது அருளைப் பெறவே நான் தவித்துக்கொண் டிருக்கிறேன். உன்னுடைய அருளானது உன்னால் செய்யமுடியாதவைகளைச் செய்து முடிக்கும் சக்தியை யுடையது. அந்த உன்னுடைய அருளை நான் பெறு

விடில் என்னுடைய வினைகள் என்னைவிட்டு எவ்விதம் அகலும்.

ஒருவிதமான ஆதாரத்தைக் கொண்டும் நான் உன்னிடம் வரமுடியவில்லை. கடுகளவுகூட நான் நினது அருளைப் பெற அருகதியில்லாதவன். அவ்விதமிருக்கிற நானேவெனில் இப்பொழுது நினது அருள்வொன்றையே அடையத் தகுந்த வஸ்துவென்றும், அடைய வேண்டிய வஸ்துவென்றும் துடிதுடித்து நிற்கிறேன்.

முடவன் கொம்புத் தேனிற்கு ஆசைப்பட்டது போல் நான் உனது அருளைப் பெறவே ஆசைப்பட்டு நிற்கிறேன். என்னைக் கைவிட்டுவிடாதே முருகா.

ஹே அருள் மலையே! அருள் என்னும் ஊற்றே என்று உன்னைப் புண்ணியவான்கள் புகழ்கின்றனர்கள். செல்வக் குமரா! இவ்விதம் கதியற்று அல்லல்பட்டு வரும் என்னை நீ பார்த்தும் கூட பேசாமலிருக்கிறாயே. என் குறைகளை எல்லாம் எடுத்து நான் உன்னிடம் சொல்ல வேண்டுமா. நீ ஸர்வக்ஞன் அல்லவா. முருகப் பெருமானே! நீயாகவே என்னைக் கரையேற்றக் கூடாதா.

என்னை ஆட்கொள்ளும் விஷயத்தில் நீதான் ஒரு சற்றும் நினைந்திலையே. இஃது என்னே கஷ்டம்.

முருகா, விஷ்ணுப்ரும்மா முதலானவர்கள் என்னைக் கைவிட்டுவிட்டார்கள் என்பதைப் பற்றி நான் சிறிதும் மனம் வருந்தவில்லை.

ஏனென்றால் அடியார்களை சோதனைக்கு உள்ளாக்கி அல்லல்படுத்திதான் அவர்கள் அருள்வார்கள். இஃது அவர்களுடைய இயல்பான தன்மை, ஆதாரமற்ற வனாகிய நான் சோதனையைத் தாங்க சக்தியற்றவன்.

வரம்பு கடந்த கருணையையுடையவனே! கருணையையும் அருளையும் வாரிவாரி இறைக்கின்றவனே, அடியார்களின் துயரத்தை அவர்களுடன் இருந்து தாங்குபவனே. அடியார் சொல்லும் வண்ணம் ஆடுபவனே. நீ தானாகவே என்னைப் பற்றி நினைக்கவில்லையே. நான் அல்லல் பட்டு உழலுகின்றபோது என் மனோ நிலையை நீ அறியாமலா இருக்கிறாய்.

ஹே குமாரா, காரணத்தைச் சுட்டிக்காட்டி அல்லல் படும் ஜீவராசிகளைக் கைவிடக்கூடாது என்றும், அவர்களிடத்திலேயே ஒப்பிலா அருளைப் பொழியவேண்டுமென்பதற்காகவே எடுத்த அவதாரம் அன்றோ, முருகாவதாரம். இத்தகைய ப்ரபாவமுள்ள அருள் மலையே, நீ நினைக்கவில்லையே. இஃது ஆச்சரியமாக இருக்கிறதே. இதில் வியக்கத்தக்கது நீ ஒரு சற்றும் நினைத்தாய் இல்லை என்பதேயாகும்.

முருகா, நீ ஏன் என்னைப்பற்றி நினைக்கவில்லை? அதுதான் என் உள்ளத்தை வாட்டுகிறது. இவ்வளவு நாள் வறுமையினாலும், மற்றும் எத்தனையோ அளவுக் கடங்காத துன்பங்களை அனுபவித்த போதிலும் அதெல்லாம் எனக்கு இப்பொழுது ஒரு கடுகளவாகத் தோன்றுகிறது. ஆனால் நீ தானாகவே ஒரு கடுகளவு கூட என்னைக் குறித்து நினைக்காமலிருந்தாயே அது ஒரு பெரிய மலையாக மாறி என் உள்ளத்தில் வரம்பு இல்லாத துன்பங்களை உண்டுபண்ணுகின்றது. இதனைக் குறித்துதான் நான் வருந்துகிறேன்.

முருகா, நீ ஒரு சற்றும் நினைக்கவில்லை என்பது எதை எடுத்துக்காட்டுகிறது தெரியுமா? உன்னை நினைக்காதவர்கள் எல்லாம் செத்து மண்ணோடு மண்ணாகவேண்டு மென்பதையே அன்றோ. குழந்தையின்

மனோநிலையை அறிந்தல்லவா தாயானவள் குழந்தையை போஷிக்கின்றாள். அதுபோல் என் மனோநிலையை அறிந்து நீ செய்யக்கூடாதா.

மனோபாவத்தை தானாகவே அறிந்து அல்லல் படுபவர்களுடைய குறைகளைத் தீர்க்கும் தனித் தெய்வ மல்லவா நீ.

இதனால் முருகனின் அருள் ஒன்றுதான் எல்லா வற்றிற்கும் மேலாக நிரங்குசமாய் விளங்கி வருகிற தென்றும், அதையே ஒவ்வொரு ஜீவராசியும் அடைய வேண்டு மென்பதையும், முக்திக்கு வழிகாட்டியாக வும் முக்தியாகவும் அவ்வருளே இருந்து வருகின்றது என்பதையும் பாட்டில்

அருளைப் பெறவே

'என்பதினால் சுட்டிக்காட்டுகின்றார்'. மேலும் அண்ட சராசரங்களில் உள்ள ஜீவகோடிகளின் சுகதுக் கங்களுக்கு பொறுப்பாளி, முருகபெருமானே ஆவான் என்பதை '**நீ**' என்று அழைப்பதினாலும், அப்படியே பொறுப்பானது முருகனுடைய கையில் இருந்து வரு கின்றபடியால்,முருகப்பெருமானானவர் ப்ராணிகளுக்கு அருளும் விஷயத்தில் "ப்ராணிகள் தன்னைப் பக்தி செய்தார்களா, ஆராதித்தார்களா, புண்ணியகர்மா செய்தார்களா" என்றெல்லாம் ஆராயாமலிருந்து கொண்டு ப்ராணிகள் எத்தகைய பாவிகளாயிருந்தா லும் அவர்களை தானாகவே மனம் இரங்கிவந்து ஆட் கொண்டே தீரவேண்டுமென்பதையும், எடுத்துக் காட்டவே பாட்டில் '**தான்**' என்ற பதத்தினாலும், அப் படியே கோடிக்கணக்கான ஜன்மங்களில் அல்லல்பட்டு வரும் ஜீவகோடிகளுடைய இன்னல்களையும், அவர்கள் அல்லல்பட்டு வருவதையும் குறித்து முருகப்பெரு

மான் அணுவளவு சிந்திப்பாரேயாகில், அந்த விஞடி யிலேயே ஜீவகோடிகளெல்லாம் ஒன்றுதிரண்டு புத்துயிர் பெற்றுப் பொய்யான இவ்வுலக வாழ்வை வெறுத்து, குன்றெல்லாம் குமரன் என்ற ஒரே எண்ணமாய் எண்ணிலா கோடிவகை காவடிகளை ஆண்கள் பெண்கள் என்ற பேதமற்று ஆபாலவிருத்தர் பர்யந்தம் தமது தோள்களில் தாங்கினவண்ணமாய், வானளாவும் குரலில்,

வேல் முருகா வேல்முருகா வேல் முருகா வே
வேல் முருகா வேல் முருகா வேல் முருகா வே
வேல் வேல் வெற்றிவேல் வேல் வேல்
வெற்றிவேல்-வேல் வேல் ஞானவேல்
வேல் வேல் சக்திவேல் வேல் வேல்.
சக்திவேல் ஞானவேல் வெற்றிவேல்
வெற்றிவேல் சக்திவேல் ஞானவேல்
ஞானவேல் வெற்றிவேல் சக்திவேல்
சக்திவேல் வெற்றிவேல் ஞானவேல்
ஞானவேல் சக்திவேல் வெற்றிவேல்
வெற்றிவேல் ஞானவேல் சக்திவேல்

என்று முழக்கம் செய்து ஜீவகோடிகள் பேரின்பமாகிய ஸமுத்திரத்தில் மூழ்கி நான்—நீ என்ற பேதமற்று முருகனுகவே ஆகிவிடுவார்கள். இத்தகைய ஒப்பற்ற சக்தியினை மறைத்து வைத்திருக்கிருன் முருகப்பெருமான் தன்னுடைய கடுகளவு சிந்தனையில் என்பதையும், இச்சாமாத்திரம் ப்ரபோச்ருஷ்டிஹி என்பதினையும் உலகத்திற்கு எடுத்துக்காட்டவே அநுபூதியில்

ஒரு சற்றும் நினைந்திலேயே

என்று முருகப்பெருமானின் அருள் பொங்கிவழியும் பொருட்டு முருகனின் உள்ளத்தை இரக்கமான குர லில் தொடுகின்றார் அருணகிரிநாதர்.

எனவே முருகப்பெருமான் நினைத்தானேயாகில் நமக்கு சகல ஸௌபாக்கியங்களும் உண்டு. அவன் நினைக்காதபோனால் நமக்கு ஒன்றுமே யில்லை. பட்டி னத்தடிகள் சொல்லியதுபோல்

சோற்றுவியற்றுச் சுகமற்றுச்
சுற்றத் துணியு மற்று
ஏற்றாலும் பிச்சை கிடையாமல்
ஏக்கற்றிருப்பர்களே

எனவே குமரனின் அருள் இல்லையேல் மேல்கூறியபடி ஒருவிதமான சக்தியுமில்லாமல் நாம் அலைந்து கொண்டே இருக்கவேண்டும். ஆகையால் அக்கதியை நாம் அடையாமல் இருப்பதற்கு முருகப்பெருமானை நினைக்கவேண்டும்.

இவ்விதம் நீ இருக்க ஏ குமாரா! நீ ஒரு சற்றும் நினைந்திலையே. நினைக்கவேண்டிய நீ நினைக்கவில்லை பார்த்தாயா. மிகவும் எளியவனாயும் மஹா பாபியாகி யும் உள்ள என்னை நீ சற்று நினைத்தால்தான் உன் அருளை அருள் என்று சொல்லப்படும். அன்னியில் அதை அருள் என்று சொல்லமுடியாது.

ஒரு சற்றும் நினைந்திலையே என்பதினை சுட்டிக் காட்டி, முருகா தானாகவே ஊற்றெடுத்து சுரக்கும் நினது அருளாகிய வெள்ளப்பெருக்கிற்கும் அணை கட்டி அவ்வருளாகிய வெள்ளமானது என்மேல் விழாதவண்ணமுள்ள துர்ப்பாக்கியவனாக நான்

இருந்து வருகிறேன். அதனுல்தான் ஐயனே நீ ஒரு சற்றும் என்னைப்பற்றி நினைத்தாய் இல்லை.

நான் என்ன செய்வேன்—முருகா! ஐயோ, கதியற்ற வனுக ஆகிவிட்டேனே. செல்வக்குமரா! என் நெஞ்சிலே உண்டாகும் வேதனையை நான் யாரிடம் சொல்வேன் அப்பனே. கருணைக்கடலே! என் நெஞ்சானது துன்பமாகிய நெருப்பில் விழுந்து வேகுகின்றதே.

முருகா நீ நினைக்காவிட்டால் நான் என்ன செய்ய முடியும். இனி நான் செய்வது ஒன்றே ஒன்றுதான். என்னுடைய உயிர், உடல், ஆவி யெல்லாம் உன்னிடம் அர்ப்பணம் செய்து முருகா முருகா என்று கதறிக் கொண்டேயிருப்பேன். நீ நினைத்தால் நினை. எல்லாம் உன் இஷ்டம்.



# அருளினைக் கொண்டு தலைவிதியினை அழித்தல்

## 27



மின்னே நிகர் வாழ்வை விரும்பியயான்
என்னே விதியின் பயனிங் கிதுவோ
பொன்னே மணியே பொருளே அருளே
மன்னே மயிலேறிய வானவனே.

### பதவுரை

பொன்னே—பொன்போலிருந்து பொன்னின் தன்மை களையெல்லாம் கொண்டவனே, மணியே—மாணிக்கம்போல் திகழ்ந்து இருப்பவனே, பொருளே—வேதங்களின் ஸார பூத மான பரம்பொருளே. அருளே—அருள் வடிவாக நிற்கின்ற வனே, மயிலே—மயில் ஸ்வரூபமாக விளங்குபவனே, மன்னே றியவானவனே—எப்பொருட்கும் யாவருக்கும் இறைவனை அநந்த கல்யாண வைபவங்களுடன் திகழ்ந்து வரும் சிவபெரு மானின் தோளில் அமர்ந்து ப்ரணவோபதேசம் செய்தருளிய தேவனே, மின்னே நிகர் வாழ்வை—மின்னலைப்போல் இமை யளவில் தோன்றி மறையும் நிலையில்லாத உலக வாழ்வினை,

விரும்பிய யான்—(நிலையுள்ளது என்று) அதில் பற்றுடையவ ணுக இருக்கிற யான்,என்னே—(இவ்விதம் இருப்பதற்கு கார ணம்) என்னவென்று சொல்வேன், இங்கு—இவ்வுலக வாழ் வில், விதியின் பயன்—கர்மவினையின் அதாவது என் தலைவிதி யின் பயன், இதுவோ—இதுதானே? இவ்விதம் நிலையற்ற உலக வாழ்வை நிலையுள்ளதென்று சொல்லிக்கொண்டே ஆயுளை வீணுக்கிக்கொண்டிருப்பதே என் தலைவிதியின்[பயனுக இருக்குமானுல் அதனை என்னவென்று சொல்லுவேன்.

**தாத்பர்யம்**

எல்லாவற்றிற்கும் ஆதாரமாகத் திகழ்கின்றவன் முருகப்பெருமான் ஒருவனே ஆவான். முருகனின் அருள் ஒன்றுதான் ஜீவகோடிகளுடைய வாழ்வில் தலை விதியின் பயனுகிய துன்பங்களை வேரொடு அறுத்துத் தள்ளும் சக்தியினைக் கொண்டது. அவ்வருளினை அடைவதே இம் மனிதவாழ்வின் குறிக்கோளாகும். அவ்வருளைப் பெற குமரனின் புகழை நாம் பாடவேண் டும். எவ்விதம் அவன் புகழைப் பாடுவது, எவ்விதம் அவனை வர்ணிப்பது. முருகனைக் காண வல்லவர்கள் யார்? அவனைக் காணத்தான் இயலுமோ? அவனை வர்ணிக்கத்தான் இயலுமோ?

எனவே அரி-அயனுக்கு முருகப்பெருமான் அரியவ ணுகயிருந்தாலும்கூட அருணகிரியின் அன்பாகிய பிடி யில் அகப்படும் முருகன் அருணகிரியின் தேன்மொழி யில் உருப்பெற்று மங்காத பொலிவுடன் பாரோர் வியக்கும் வண்ணம் பரவி நடனம் செய்கிருன்.

அத்தகைய ஜீவகலையுடன் தெய்விகம் பொருந் திய வர்ணனையினுல் நாம் முருகனை நெஞ்சமெல்லா முருகி அழைப்போமேயாகில், அந்த க்ஷணமே முருக னின் அருளானது நம்மேல் விழ ஆரம்பித்துவிடுமென்

பதில் ஐயமுண்டோ! முருகனின் அருளானது நமது தலைவிதியின் பயனாகிய இன்னல்களை அழித்துக் கொண்டே வரும்.

எனவே முருகனை உள்ளம் பூரித்து எழும் வண்ணம் இப்பாடலில் அருணகிரிநாதர்

பொன்னே மணியே பொருளே அருளே

மன்னே மயிலேறிய வானவனே

என்று புகழ்கின்றார், ஒவ்வொரு வர்ணனையும் ஆழ்ந்த கருத்தினைக் கொண்டது. இவ்வினிய மொழியால் செல்வக்குமரனை பாடிப் பாடி மகிழுங்கள். குமரனின் பெருமையும் அருளும் வர்ணனை ரூபமாக பொலிவதைப் பார்த்தும் கேட்டும் அனுபவியுங்கள், எனவே பக்தியென்னும் ஓடத்தில் அமர்ந்து முருகனின் பெருமையாகிய ஸமுத்திரத்தில் ஸஞ்சாரம் செய்து கொண்டு குமரனுடைய அருளை அடைவோமாக.

## பொன்னே:

இறைவனை அடியார்கள் பொன்னே என்று புகழ்ந்து போற்றி மகிழ்கின்றார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிவபெருமானை.

பொன்னார் மேனியனே

என்று அழைக்கின்றார். தாயுமானவரோவெனில்

அரும் பொனே மணியே என் அன்பே
என் அன்பான அறிவே என் அறிவில்
ஊறும் ஆனந்த வெள்ளமே

என்று பாடிப் பரவச மடைகிறார். அதுபோலவே இராமலிங்க சுவாமிகளும் சிவபெருமானை,

மாற்று அறியாத செழும் பசும்
பொன்னே! மாணிக்கமே சுடர்
வண்ணக் கொழுந்தே!

என்று போற்றிப் புகழ்கின்ருர். அவ்விதமே சிவ பெருமானைப் பார்த்து

பொற்பாதமும் காணப்பெற்ருல்
மனிதப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே

என்று அப்பர் சுவாமிகள் துதிக்கின்ருர்.

இவ்விதம் செம்பொன்ஞகவே சிவபெருமானை அடியார்கள் புகழ்ந்து போற்றுகிருர்கள்.

செம்பொன்ஞகிய செஞ்சுடரிலிருந்து தோன்றிய வன் முருகப்பெருமான். பொன்னிலிருந்து செய்யப் பட்ட நகை பொன்னைக் காட்டிலும் வேறல்லவே! இரண்டும் ஒன்றேதான். ஆனல் ஸ்வருபம்தான் வேறு. அது போலவேதான் சிவபெருமானும் முருகப் பெருமானும் ஆவர். ஞான நிஷ்டையில் ஞானிகள் பொன்ஞர் மேனியஞன சிவபெருமானையே பொன்ஞர் மேனியஞன முருகப்பெருமாஞக அனுபவிக்கிருர்கள்.

எனவே "சிவனே முருகன்-முருகனே சிவன்" என்று தில்லைக்கூத்தனின் முன்னிலையில் அனுபவித்த வர் அருணகிரிநாதர்.

அஞ்சு முகந் தோன்றில்
ஆறு முகந் தோன்றும்

என்று சொல்லி சிவனும் முருகனும் ஒரே அகண்ட மான வஸ்துஎன்கிருர் நக்கீரர்.

இதனுல்தான், அருணகிரியார் இங்கு முருகனை 'பொன்னே' என்று புகழ்கின்ருர்.

சிவபெருமானைப் போல் பொன்னிறமானவனே! நீ நிறத்தால் மட்டும் பொன்னல்ல, மற்றும் எல்லா வைபவங்களிலுைம் பொன்ணுக விளங்குகின்ருய் அன்ருே!

பொன்னைக் காய்ச்சக் காய்ச்ச அதன்ஒளி குன்ருது அதுபோலவே முருகனை உள்ளத்தில் நினைக்க நினைக்க அவன் அணையாமல் சுடர் விட்டுக்கொண்டே இருப் பான். அதுபோலவே பொன்னைக் காய்ச்சி எந்த உரு வத்தினை வேண்டுமாணுலும் நாம் நினைத்தது போல் செய்து கொள்ளலாம். பொன்னைக் காய்ச்சி தட்டத் தட்ட நம்மிஷ்டம்போல் அது வளைந்து கொடுக்கும். அதுபோலவே முருகப்பெருமானும் பக்தர்கள் எந்த எந்த கோலத்தில் தன்னை உள்ளத்தில் நினைக்கின்ருர் களோ, அந்த அந்தக்கோலத்தில் அவர்கள் நினைத்த வாறு தோன்றி அவர்களை ஆனந்திக்க வைக்கின்ருர். இதனுல்தான் முருகனைத் தமிழ்மறைகள் 'அடியார் களுக்கு எளியவன்' என்று போதிக்கின்றன.

மேலும் உலகத்திலுள்ள பொருள்களில் வைத்து மிருதுவானதும் கடினமானதும் பொன்னேயாகும். அதுபோலவே முருகப்பெருமானுடைய மேனியானது மிருதுவிற்கு மிருதுவாகவும், உருண்டு திரண்டு மொழுமொழுப்பாகவும் இருந்து வருகிறது. வள்ளி தேவயானையை ஆலிங்கனம் செய்து கொள்ளும் தருணத்தில், இதற்கு மாருக சூரபத்மன் முதலான அசுரர்களிடம் யுத்தஞ் செய்யுந் தருணத்தில் எதிரி

களின் ஆயுதங்களினுல் அடிக்கப்பட்டு நினைக்க முடியாத அளவில் கடினமாகவும் இருக்கிறது.

பொன்னை விரும்பாதவர்கள் எவ்வுலகிலும் யாருமில்லை. பொன்னை வைத்துக் கொள்வதிலேயே ஆசையைக் காண்கிருர்கள் மனிதர்கள். பொன்னுல் ஆபரணங்களைச் செய்து அதை ஆசையுடன் அணிந்து கொள்கிருர்கள்.

அதுபோலவே முருகனைப் போற்ருதவர்கள் எவருமே யில்லை. மும்மூர்த்திகளினுலும் விரும்பி ஆராதிக்கப்பட்டவன் முருகப்பெருமான்.

ஒரு திருமுருகன் வந்து அங்கு
உதித்தனன் உலக முய்ய

என்று கந்தபுராணம் புகழ்கின்றது முருகனை.

எனவே அழகு, இளமை, மணம், தெய்வீகம் இந் நான்கினையும் இயல்பாகவே கொண்ட முருகனை மனிதர்கள் செல்வமாக வைத்து பூஜைசெய்கிருர்கள். முருகா என்ற மந்திரத்தை ஆபரணமாக அணிந்து கொள்கிருர்கள். அதன் பலனுக அவர்கள் அழியாத அழகையும் இளமையையும் தெய்வீக மணத்தோடு கூடிய தன்மையையும் அடைகிருர்கள்.

ஆகையால் பொன்னுகத்திகழுபவன் முருகப்பெருமான், நடராஜமூர்த்தியை எவ்வளவு வர்ணித்தாலும் மனமானது திருப்தியடையாது. பொன்னம்பல வாணன் என்று சொன்னுல்தான் எல்லா வர்ணனையும் நிறைகிறது. அத்தகைய மகிமை தங்கிய சிவ பெருமானின் செல்வக் குமாரனுக முருகப்பெருமான் திகழ்வதினுல் 'பொன்னே' என்று நெஞ்சாரப் புகழ்கின்ருர் அருணகிரிநாதர்.

## மணியே

அதுபோலவே பொதுவாக முருகனை 'மணியே' என்கிறார். இவ்வர்ணனையானது குமரனின் ஸகல வைபவங்களையும் எடுத்துக்காட்டுகிறது:

மாணிக்கம் போல் விலைமதிக்க முடியாத மணியே! ஒளி பொருந்தியவனே! நடுநிசியில் ஒரு ஸர்ப்பமானது தன்னிடமுள்ள மாணிக்கத்தினைக் கக்கி அதன் துணையினால் எவ்விதம் இரை தேடச்சென்று கொண்டிருக்கிறதோ, அது போலவே எவ்வளவு கொடியோனாக ஒருவன் இருந்த போதிலும், அவன் ஒருமுறை வேல் முருகா என்று சொல்வானேயாகில் அம்மந்திரமானது அவனுடைய வாழ்க்கை முழுவதும் மாணிக்கம்போல் அவனுக்கு துணையாக இருந்து ஞானவழியைக் காட்டியருளுகிறது.

தவிர ஆலயத்திலுள்ள மணியானது எவ்விதம் தம்மிடமுள்ள ஒலியை வானளாவ பரப்பி "உலகத்தினர்களே, இறைவனுக்கு பூஜை நடக்கும் வேளை இது. இவ்வேளையில் நீங்கள் உலக சிந்தனையை மறந்து இறைவனைத் தியானியுங்கள்" என்று நினைவூட்டிக் கொண்டேயிருக்கிறதோ, அதுபோலவே முருகப்பெருமானும் ஒவ்வொரு ப்ராணிகளுடைய உள்ளத்தில் மணியினைப்போலிருந்து கொண்டு இது நல்லது—இது கெட்டது—இது முக்திக்கு வழி-இது தர்மம்-இது அதர்மம்-ஈச்வர சிந்தனையில் இரு-அன்புடன் இரு—ஜீவ ஹிம்சை செய்யாதே-தேவாரம் திருப்புகழ் திருமந்திரம் ராமாயணம் பாகவதம் முதலிய அரிய ஞானநூல்களைப்படி என்று ஆலய மணியினைப்போல் ஒலியை செய்து ஞானவழியைக் காட்டிக் கொண்டேயிருக்கிறார்.

மேலும் மன்னர்களின் மகுடத்தில் மணியாக ஒளி வீசிக்கொண்டு இருப்பவன் முருகப்பெருமான், முருகனை மணிபோல் சிரஸில் வைத்து வணங்கி வருகிறார்கள் வானோர்கள்.

## பொருளே

சென்ற காலம் நிகழ் காலம் வருங்காலம் என்ற மூன்று காலங்களிலும் ஒருவிதமான மாற்றலையும் அடையாத அகண்டானந்த ஸச்சிதானந்த மூர்த்தியாய் விளங்கும் பரம்-பொருளே முருகப் பெருமான் ஆவர். அதுமட்டுமல்ல. எல்லாவற்றிலும் உண்மைப் பொருளாய் இருப்பவன். எல்லாமாய் இருப்பதில் மெய்ப்பொருளாய் விளங்குபவன். எல்லோராலும் மனம் வாக்கு காயம் என்ற மூன்றும் வணங்கப் படும் பரம்பொருள். பெரிது பெரிது என்று சொல்லச் சொல்ல வரம்பில்லாமல் வளர்ந்துகொண்டே இருப்பவன். சிறிதிற்கு சிறிதாயும் பெரிதிற்கு பெரிதாயும் விளங்கும் ஒப்பில்லாத பரம்பொருள். பொருளுக்குப் பொருளாய் திகழுபவன்.

மனிதர்கள் இவ்வுலகைவிட்டுப் போகும் கடைசி தருவாயில் துணையாக கூடவருகின்ற பரம்பொருளே முருகப்பெருமான். எனவே பொருளே எனப் புகழ்கின்றார்.

## அருளே

அருள் வடிவானவன் முருகன். அவன் அருளைப் பெறவே ஜீவகோடிகள் அலைகின்றன. அவன் அருள் இருக்குமானால் அடையமுடியாதது ஒன்றுமே யில்லை. அறிவினால் ஒருவன் மமதையை அடைவானேயாகில்,

அம்மமதையானது அருளைப் பெற்றவன் மூலமாக அடக்கப்படும்.

இவ்வுலகில் காணும் எல்லா சக்திகளும் ஒன்று கூடித் திரண்டு ஒரே சக்தியாய் தோன்றினுலும்கூட, அவ்வனைத்த சக்தியும் அருளினை யடைந்தவன் முன் னிலையில் தலைவணங்கி விடுகின்றன.

அத்தகைய அருளானது, இறைவனிடம் அன்பினை கொண்டவனிடமே தோன்றி வரும். எனவே அவ் வருளை அன்பினுல் அடியார்கள் அடைகின்ருர்கள். இதன் மஹிமையை இராமலிங்க சுவாமிகள் பின்வரு மாறு சொல்லி அனுபவிக்கிருர்கள்.

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே,
அன்பெனும் குடில்புகும் அரசே,
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே,
அன்பெனும் கருத்தமர் அமுதே,
அன்பெனும் கடத்துள் அடங்கிடுங் கடலே,
அன்பெனும் அணுவுளார் ஒளியே,
அன்பெனும் உயிருள் ஒளிர்தரும் அறிவே,
அன்புருவாம் பரசிவமே.

ஆதலால் அன்புநிலவி நிற்கும் இடத்தில் அரு ளானது ஊற்றெடுக்கிறது. ஊற்றெடுத்து பெருக் கெடுக்கிறது. பெருக்கெடுத்து நம்மைப் பேரின்பத்தில் மூழ்கவைக்கிறது.

எனவே அருள் இல்லையேல் எதுவுமே இல்லை,

அவன் அருளாலே அவன்
தாள் வணங்கி

என்று அருளின் பெருமையைப் போதிக்கின்றது திரு வாசகம். ஆதலால் ஆண்டியிலிருந்து அரசன் முடிய அருளையே நாடி நிற்கின்றனர்.

அதிகம் சொல்வானேன் :—

திரௌபதியினிடத்தில் அருளானது சேலை மூலமாக நீண்டது. சேக்கிழார் இடத்தில் அருளானது பெரியபுராணமாக எழுந்தது. அருளினால் ஸமுத்திரத்தைத் தாண்டினார் ஆஞ்சநேயர். அருளானது அந்தணர் உருவங்கொண்டு பொற்கரத்தினால் திருவாசகத்தை எழுதியது. அருளானது அண்ணாமலைக் கோபுரத்தின் கீழ் நின்று, கோபுரத்தின் மேலிருந்து கீழேவிழும் அருணகிரியை இரு திருக்கரங்களினால் தாங்கியது.

அருளானது சிறுத்தொண்டர் குழந்தையை அறுக்க வைத்தது. அருளானது அப்பூதியடிகளின் குழந்தையை உயிர்பெற்றெழ வைத்தது. அருளானது சுந்தரர்மூலமாக முதலையின் வாயிலிருந்து பாலகனை வரவழைத்தது. அருளானது பூம்பாவையைக் குடத்திலிருந்து உருபெற்று வெளிவரச் செய்தது. அருளானது கண்களைப் பிடுங்கி இறைவனுக்கு அர்ப்பணம் செய்யவைத்தது கண்ணப்பநாயனாரிடம். அருளானது காவிரியை வழிவிடச் செய்தது. அருளானது அப்பரிடம் கல்லை மிதக்கவைத்தது! சுண்ணாம்புக் கால்வாயை சந்தனக்குழம்புபோல் ஆக்கியது. அருளானது நரியைக் குதிரையாக்கியது. இவ்விதம் அருளானது எண்ணிலா கோடியாக ஜீவநாடியுடன் திகழ்கின்றன.

எனவே அருள் என்பதற்கு இருப்பிடம் முருகப்பெருமானே ஆவான். அவன் அருளைப்பெற்றே மும்மூர்த்திகள் உள்பட முப்பத்து முக்கோடி தேவர்களும் அவர் அவர்களுடைய பக்தர்களிடத்தில் அருளைக் காட்டி வருகிறார்கள். அன்றோ!

ஆதலால் அருள்மயம் செல்வக் குமரன். எனவே அருளிற்கு எல்லாம் அருளாய் திகழ்ந்து அருள் மலையாய் விளங்கும் முருகனிடத்தில் எல்லா தேவதை களின் அருளும் லயத்தை அடைந்துவிடுகின்றன யென்பதால் குமரனை,

'அருளே'

என்று அழைக்கின்றார்.

மேலும் கந்தர் அநுபூதியானது மேலான மனப் பான்மையைக் கொண்ட கருத்தினையே கொண்டதாக இருப்பதால் அவ்வநுபூதியிலுள்ள அரும்பத விசேஷ ணமானது உபநிஷத் அர்தத்தையே நாடிநிற்கின்றன என்பதை சொல்லவும் வேண்டுமா. எனவே 'மயிலே' என்பதை தனிப்பட்ட பதமாகக் கொண்டு 'மன்னேறிய வானவனே' என்று அறியவேண்டும். அநுபூதியின் இன்னிசையமைப்புக்காக மன்னே யென்பது முன்னி லும் மயிலே என்பது பின்னிலும் வைக்கப்பட்டிருக் கிறது.

## மயிலே

மயிலைப்போல், திருநடனம் செய்து பக்தர்களை மகிழவைப்பவன் முருகன். மயில் தனது தோகையை விரித்து ஆடுவதுபோல் முருகனும் குன்றுதோறும் திருவிளையாடல் செய்கிறான். கார்மேகத்தைக் கண் டால் மயில் நடனமிடும். இங்கே பக்தர்களைக் கண் டால் குமரன் நடனம் செய்வான்.

மேலும் மயிலினுடைய திருநடனமானது பார்வதி தேவியின் உள்ளத்தை மகிழச் செய்வதுபோல், செல்வக் குமரன் தன்னுடைய நடனத்தினால் பார்வதி

தேவியின் உள்ளத்தையே கொள்ளை கொள்கிருன் அன்ருே !

பார்வதி தேவியின் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் அழகினை மயில் கொண்டுள்ளது. எனவே முருகனை அழகே என்று அழைப்பதற்குப் பதிலாக மயிலே என்று அழைத்தார்.

## மன்னேறிய வானவனே

அனந்த கல்யாண குணங்களுடன் எப்பொருட்கும் யாவருக்கும் இறைவனுய் விளங்குபவன் சிவபெருமானே யாவர். நாரணனும் நான்முகனும் காணயியலாத செஞ்சுடர் மேனியன். தனக்கு தாயும் தந்தையுமில்லாதவனுயிருந்து உலகனைத்திற்கும் தாயும் தந்தையுமாய் விளங்குபவன். 'தாயும்' ஆனவர் அவர். இத்தகைய சிவபெருமானை சுந்தரமூர்த்தி சுவாமிகள்

மன்னே மாமணியே
மழபாடியுள் மாணிக்கமே
அன்னே உன்னை அல்லால்
இனி யாரை நினைக்கேனே

என்று மெய்சிலிர்க்க இறைவனையழைத்து சரணமடைகிருர்.

எனவே மன்னே என்ற பதமானது இங்கு சிவபெருமானையே குறிக்கிறது.

இவ்வித வைபவமுள்ள சிவபெருமானின் தோளில் ஏறி அமர்ந்துகொண்டு அவருடைய செவியில் ப்ரணவத்தின் பொருளை உபதேசித்தருளியவன் ஞானக்கடலான முருகப்பெருமானே ஆவான். இந்நிலையிலுள்ள குமரனை

ஞானபண்டித ஸ்வாமி நமோ நம

என்று சொல்லித் தலைவணங்குகிறார் அருணகிரியார்.

முருகனுடைய திருவிளையாடல்களில் வைத்து 'ஈசருடன் ஞானமொழி பேசும்' திருவிளையாடலே தெய்வீகவுணர்ச்சியை சிற்றெறும்பிலிருந்து ப்ரும்மா பர்யந்தமுள்ள எல்லா ஜீவகோடிகளுடைய உள்ளத்திலும் வாரி இறைக்கின்றது. இத்திருவிளையாடலை எண்ணி எண்ணி மனமகிழ்ந்து பொன்மொழியினால்,

மன்னேறிய வான வனே

என்று போற்றிப் புகழ்கின்றார் அருணகிரிநாதர் இப்பாடலில். இறைவனுக்கு இறைவனாய் விளங்கும் பரம்பொருள் அல்லவா முருகன்.

மேல் கூறிய பாலமுருகனின் ஞானமொழி பேசும் திருவிளையாடல் 36–வது அநுபூதியில் விஸ்தாரமாக அனுபவிப்போம்.

இவ்விதம் ஹே முருகா, நீ ஒளியாயும் ஒலியாயும், பொன்னாயும் மணியாயும் பொருளாயும் அருளாயும் மயிலாயும் மன்னேறிய வானவனாயும் என் உள்ளத்தில் உறைகின்றாய். இருந்தும் நான் இந்த மின்னல் போன்ற உலகைவாழ்க்கையை விரும்பி அதையே அனுபவித்து வருகிறேன்.

மின்னல் வருவதும் போவதும் தெரியாது. அது போலவே மனித வாழ்க்கையையும் மின்னலுக்குத் தான் ஒப்பிடமுடியும், நேற்று உயிருடன் இருந்தவர்கள் இன்று உயிரினை விட்டுவிடுகிறார்கள். இன்று உயிருடன் இருப்பவர்கள் நாளை உயிருடன் இருப்பதில்லை.

கண்மூடித் திறப்பதற்குள் கணக்கற்ற கோடி உயிர்கள் செத்துப் பிறக்கின்றன.

மனையாளு மக்களும் வாழ்வுந்
தன முந்தன் வாயின்மட்டே
இனமான சுற்ற மயானமட்டே
வழிக் கேது துணை

என்று பட்டினத்தடிகள் சொல்லியும் உலகில் பார்த்தும்கூட அதனை உண்மையை அறிந்தேன் இல்லை. இவ்வுலக வாழ்வில் வெறுப்பையும் அடைந்தேன் இல்லை. மரணம் வருவதற்கு முன்னதாகவே நல்ல காரியங்களில் மனதை செலுத்த என்னால் முடியாத வண்ணம் விதி என்னை ஆட்டிவைக்கின்றதே.

முருகா! உன்னை நினைந்து உருகி உன் புகழைப் பாட மனம் வரவில்லையே. மனைவி மக்கள் வீடு வாசல் என்று மின்னல்போல தோன்றி மறைகின்ற உலக வாழ்வை பெரிதாக எண்ணி எண்ணி அதையே ஸதா காலமும் நினைந்து இருக்கின்றேனே. இதன் உண்மை தான் என்ன?

ஹே முருகா! பொய்யாகிய இவ்வுலக வாழ்க்கையை நிலையுள்ளது என்று நம்பி இதுவரையில் என் உடல் ஆவி பொருளாகிய அனைத்தையும் என் குடும்பத்திற்கே அர்ப்பணம் செய்தேன்? இவ்விதம் செய்து வந்த யான் எப்பேர்ப்பட்டவன் தெரியுமா?

இமைப்பொழுதில் மின்னல்போல அழியும் இவ்வுலக வாழ்வை பொய்யென்று கனவிலுங்கூட கருதாதவன். பேராசைக்கு இடமாகிய இந்தச் சரீரத்தைச் சுமந்துகொண்டு மெய்ப்பொருள் எது என்பதறியாமல் கதியற்றவனாக இருப்பவன்.

முருகா! ஆசைக் கயிற்றினுல் கட்டப்பட்டு ஆடும் பம்பரமாயும், ஓயாத நோயினிற்கு இருப்பிடமாயும் மாயாவிகாரமாயும், மரணப்பஞ்சரமாயும் சோற்றுத் துருத்தியாயும், துற்நாற்றத்தோடு கூடியதாயுமுள்ள பொய்யான வாழ்வை ஸத்தியமானது என்று வாதிப் பவன் நான்.

ஐயனே! உலகம் முழுவதும் உன்னைப்போற்றிப் புகழும் பொழுது நான் மட்டும் ஏன் உன் சிந்தனையில் லாமல் இருக்கிறேன். இ∴து என்னே ஆச்சரியம்!! விதியின் பயன் என்று பெரியோர்கள் சொல்லுகிருர் களே அந்த விதியின் பயனு இது? இவ்வாறு உனது ஸ்மரணமே இல்லாமலிருப்பதற்குக் காரணம் என்ன? விதியே இதற்குக் காரணமாக இருக்குமானுல், விதி யின் கொடுமையைப்பற்றி நான் என்னவென்று சொல் வேன்.

முருகா! தலைவிதி தலைவிதி என்று சொல்லிக் கொண்டே நான் என் ஆயுளைக் கழிக்க வேண்டுமா? நீயே சொல்வாய் அப்பனே. விதியை மதியால் வெல்ல லாம் என்று மஹான்கள் சொல்கிருர்களே. அத்தகைய மதியையாவது நீ எனக்கு உபதேசிக்கக்கூடாதா.

முருகா இவ்வுலக வாழ்க்கையில் தவித்துக் கொண்டிருக்கும் என்னிடம் நீ "விதியை என்னுல் மாற்றமுடியாது. விதியானது யாரை விட்டது? ஸ்ரீராம பிரானையே காட்டுக்கு அனுப்பவில்லையா?" என்றெல் லாம் என்னிடம் சொல்லாதே. விதியை உன்னுல் மாற்றமுடியும் என்பதை நான் நன்கு அறிவேன், அதை மாற்றுவது உன் பொறுப்பு. நீ எப்படி மாற்று வாயோ அது எனக்குத் தெரியாது. தெரியவும் வேண் டாம்.

முருகா! விதியின் விளைவு வியக்கத்தக்கதே? உன் பெருமை தெரியும் முன்புதான் உலகவாழ்வை விரும்பினேன் என்பது இல்லை. உனது பெருமை தெரிந்தும் உலகவாழ்வை விரும்பி அதையே அனுபவிப்பதில் மோகம் கொண்டவனுய் இருக்கிறேன். இதுதான் வியப்பிலும் வியப்பு.

''கர்மவினையை'' ஒட்டியே ஒருவனுக்கு நீ சுகத்தையும் துக்கத்தையும் அளிக்கின்ருய் என்பது நன்கு வெளியாகிறது. ஒவ்வொருவனுடைய தலையில் அவன் செய்த கர்மவினையை ஒட்டி ப்ரும்மாவானவர் தலையில் எழுதுகிருர். அதைப்பார்த்து நீ சுகதுக்கங்களைத் தருகிருய்.

நீ இவ்விதம் ப்ரும்மா தலையில் எழுதியவண்ணமே ப்ராணிகளுக்கு சுகதுக்கங்களைக் கொடுத்து வந்தால் அது மிகவும் வருந்தத்தக்கதேயாகும். அன்ய தெய்வங்களைப்போல் நீயும் விதியென்று சும்மாயிருந்து விடமுடியாது. நீ ப்ரும்மாவினிற்கே கட்டளையிட்டு விதித்தவன் அல்லவா!

எனவே விதியின் கொடுமையை சகியாமல், மனம் நொந்துநொந்து, அப்மனோவேதனையை தாள சக்தியில்லாமல், இறைவனை நோக்கி ''முருகா! நான் உன்னை ஸ்மரணம் செய்துகொண்டிருக்கும் போதும்கூட விதியானது என்னை வந்து வாட்டுகின்றது. நீ அதைப் பார்த்துக் கொண்டே இருக்கிருய். என் வேதனையைக் குறைக்கவும் மாட்டேன் என்கிருயே. கேட்டால் எல்லாம் விதியின் செயல் என்று விதியின்மேல் பாரத்தை போடுகிருய்!! நானோவெனில் உன்னை,

பொன்னே மணியே பொருளே அருளே
மன்னே மயிலேறிய வானவனே

என்று உள்ளம் உருகி அலைழக்கும்போது என்னுடைய தலைவிதியானது உன்னால் அழிக்கப்படாமல் இருக்குமானால், அதற்குக் காரணம் இரண்டேதான் இருக்க வேண்டும்.

ஒன்று நாம் அழித்தால் ப்ருமாவினால் எழுதப்பட்ட தலைஎழுத்தானது அழியுமோ-அழியாதோ என்ற சந்தேகம் உன்னிடம் ஏற்பட்டு நீ அழிப்பதற்குப் பயந்து கொண்டு விதியின்மேல் பாரத்தைப் போட்டு சும்மாயிருந்திருக்க வேண்டும்.

இல்லை! உண்மையாகவே விதியானது உன்னைக் காட்டிலும் சக்திவாய்ந்ததாக இருக்கவேண்டும். இந்நிலையில் நான் ஏன் உன்னைச் சரணமடைய வேண்டும். விதியினை எழுதின ப்ரும்மனையே சரணமடைவேனே. ஆகையினால் 'என்னே' என்ற பதத்திலுள்ள 'ஏ' காரமானது இரக்கத்தைக் காட்டுகிறது. என் விதியின் கொடுமை என்னை இவ்வாறு அல்லல்பட்டுக்கொண்டிருக்க வைக்குமானால், என் நிலையைக்கண்டு நீ இரங்கி என் துயரத்தைத்துடைக்க வேண்டாமா. உனக்கு என்னிடத்தில் இரக்கம் வரவேண்டாமா. நான் சொல்லாமலே நீ உன் அருளை என்னிடத்தில் செலுத்த வேண்டாமா என்பதை த்வனிக்க வைக்கிறது. அது போலவே 'ஏ' காரமானது மீண்டும் தன்னுடைய ஆதாரமற்ற நிலையைக் காட்டுகிறது.

ஹே முருகா! என்ன இருந்து என்ன பயன். விதியானது என்னை வாட்டி வதைக்கிறதே. விதியானது உன்னை ஸ்மரணம் செய்ய விடுவதில்லையே. விதியின் 'கொடுமையை' குறித்து வருந்துவதா? அல்லது உனது பாராமுகத்தைக் குறித்து ஏங்குவதா? அல்லது விதியின் சக்தியை எண்ணி வியப்பை அடைவதா?

அல்லது நான் ஆதாரமற்றவன் என்று சொல்லி அழுவதா? அல்லது நீ பாராமுகனுய் இருக்கிருய் என்று எண்ணி விதியை அழித்துக்கொள்ள வேறு தெய்வத்தை சரணமடைவதா? ஒன்றும் செயய முடியாமல் இருக்கிறேனே.

முருகா! விதியானது என்னிடத்தில் விளையாடும் பொழுது, நீயும் என்னிடத்தில் விளையாடுகிருயே, உன் விளையாட்டானது என் உள்ளத்தால் எண்ணக் கூடாத சிந்தனைகளை யெல்லாம் எண்ண வைக் கின்றன.

முருகா! விதியின் பயன் விதியின் பயன் என்று சொல்லி என்னைக் கைவிட்டுவிடாதே. நீ சொல்லும்படி எல்லாம் விதியாகவே இருக்கட்டும். உன்னுல் விதியை மாற்ற முடியாதா? மன்னேறிய வானவனே! உன்னுல் முடியாதது என்ன இருக்கிறது. உன் பெருமை எனக்குத் தெரியாதா? உருவத்தால் சிறியவன் நீ. ஞானத்தால் பெரியவன் நீ, உன்னையே மேலான போற்றப்படும் பரம்பொருள் என்று முப்பத்து முக்கோடி தேவர்களும் போற்றுகின்ருர்களே, அருள் மலையே! என்னிடம் உனது அருளைச் செலுத்த மாட்டாயா?

அது பெரிது அது பெரிதென்று
சொல்லும் யாவரும்
முடிவில் அது சிறிது
அது சிறிதென்று நின்றனர்,
எது பெரிது எது பெரிதென்று
எண் தவத்தோரெல்லாம்
அறுபடை வீட்டினையே
பெரிதென்று ஏத்துகின்றனர்

என்று உன் பெருமையைத் தெரிந்து உணர்ந்த மஹான்கள் சொல்லுகிறுர்கள்.

முருகா! என்னைக் கைகொடுத்து தூக்கிவிட மாட்டாயா. என்னே உன் லீலை, என்னே உன் பாராமுகம்.

முருகா, நினது ஆறு திருமுகங்களில் ஒரு முகமாவது என்னிடத்தில் கருணையைச் செலுத்தாதா?

மாசற்ற மணியே! மின்னலைப் போன்ற வாழ்விலே நீ மின்னல் போலாவது என்னுடைய உள்ளத்தில் தோன்றக்கூடாதா?

செல்வக்குமரா, நீ என் உள்ளத்தில் தோன்றவில்லை. நீ தோன்றிஞல் என் தலைவிதியானது வந்த வழி தெரியாமல் மின்னலைப்போல் மறைந்து போய் விடும்.

வியாதியானது என்னைவிட்டு அகன்றுவிட்டால் என் நெஞ்சமெல்லாம் உன்னையே நாடிநிற்கும். அப்பொழுதுதான் நான் மானிடப்பிறவியின் பயனை அடைந்தவனுக ஆவேன்.

முருகா! நீயோ வெனில் பொன்னில் பதித்த மாணிக்கமாகவும் பரம்பொருளில் உறைகின்ற அருள் மலையாயும் மயிலில் அமரும் இறைவனுகவும் இருக்கின்றுய். எதற்காக நீ இவ்விதம் தோன்றுகிறுய்? என் போன்றவர்களுடைய விதியினை அழித்து அதன் பயனுக நாங்கள் உன்னுடைய பொற்பாதங்களை அடைந்து பேரின்பத்தை அடைவதற்கு அன்றே.

முருகா! என் சொல்லி உன் பெருமையை நான் ஏத்துவேன். கையார உன்னைத் தொழுகின்றேன் அப்பனே, என் தலைவிதியை அழித்து ஞானமதனை

அருளி என்னைத் தடுத்து ஆட்கொள்வாய் முருகா— இதுவே நான் உன்னை யாசிப்பது.

ஆகையால்,

மறந்து மலசலங்கள் மாயப்புழுக் கூட்டை
விட்டுக் கரந்து உன் அடியினைக் கலந்து
நிற்பதெக்காலம்

என்று பட்டினத்தடிகள் யாசிப்பதுபோல், நாமும் மின்னல் போல் தோன்றி மறையும் இவ்வுலக வாழ்வை வெறுத்து, இந்த அநுபூதியின் மூலமாக முருகப் பெருமானின் திருவடியில் கலந்து இன்புற்று யிருப் மோமாக



# ஆண்டியாய்த் திகழும் பழநி ஆண்டியே
## ஆண்டவனுக்கு ஆண்டவன்

## 28



ஆனு அமுதே அயில்வேல் அரசே
ஞானுகரனே நவிலத் தகுமோ
யானுகிய என்னை விழுங்கி வெறும்
தானுய் நிலை நின்றது தற்பரமே.

பதவுரை:

ஆனு அமுதே — தெவிட்டாத அமுதமே, அயில்வேல் அரசே—கூர்மையான வேலிற்கு அரசனே, ஞானு கரனே—மெய்ஞான ஸ்வரூபனே, நவிலத் தகுமோ—உன் பெருமையை எடுத்துச் சொல்லத்தான் இயலுமோ. (அதுபோலவே) யான் ஆகிய—ஒரு ஸமயம் அசுத்த ஜீவனுயும், ஒரு ஸமயம் சுத்த ஜீவனுயும் மாறிமாறி இருந்து வருகிற, என்னை—(மேல் கூறிய வண்ணம்) மாறிமாறி நிலைமாறுவதினுல் அந்த அந்த நிலைக்கு தகுந்த மாதிரி ஈசவரனுக்கும் ஜீவனுக்கும் பேதத்தை பற் பல விதங்களாக ஸாதித்துக் கொண்டும், ஜீவன் ஈச்வர

னுடைய அம்சம்—ஜீவ'ன் ஈச்வரனுக ஒருகாலும் ஆகமுடியாது என்ற அக்ஞானத்தினுல் மூடப்பட்டவனுயும், அப்படியே ஆத்மாவானது ஸத்தாயும், சித்தாயும் ஆனந்தமாயும், அத்துவித்மாயும், பரிபூரணமாயும், ஞான மயமாயும் இருந்து வருகிற கேவலம் அகண்டாகார ஆனந்தரூபியான பரப்ரும்மமேயாகும் என்றஉண்மையான மெய்யறிவு ஞானமில்லாமல்இருந்து கொண்டு ஸர்வக்ஞன்போல் அகங்கார மமகாரங்களினுல் சூழப்பட்டு கேவலம் ஞானசூன்யனுய் திரிந்து வருகின்ற என்னுடைய அக்ஞானத்தை, விழுங்கி—நீ ஞானபண்டிதனுய் வந்து, ''சும்மா இரு சொல்லற'' என்ற மஹாமந்திரத்தை எனக்கு உபதேசித்தருளி என்னுடைய அக்ஞானத்தை வேரொடு போக்கடித்து, வெறும்—(அவ்வுபதேச மஹிமையினுல்) கூடஸ்தசிதேகரஸனுகிய ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறுன வஸ்துவானது சென்றகாலம் நிகழ்காலம் வருங்காலம் என்ற மூன்று காலங்களிலும் உண்மையில் இல்லவே இல்லே என்றும், அந்த ஆத்ம ஸ்வரூபமே, தானுய்—'அங்கு இங்கு' என்று சுட்டிக்காட்டமுடியாமல் எல்லாமாயும் எங்குமாயும் ஒரேபரிபூரண வஸ்துவாய் வியாபித்து நிறைந்து அகண்டாகார ரூபமாய் இருந்துகொண்டு, நிலே-''சும்மா இரு சொல்லற'' என்ற மஹாமந்திரத்தின் பொருளான மேலான ஞானநிலேயில், நின்றது—'நானே ப்ரம்மமாக இருக்கிறேன்' என்ற தன்னுடைய ஸ்வரூப நிலேயிலிருந்து மீண்டும் திரும்பி வராமல் நிலேபெற்று நின்றது, தத்பரமே—(எதுவோவெனில்) 'தத்' என்ற பதத்தினுல் சொல்லப்பட்ட பரம்பொருளேயாகும். அதாவது 'நீயே நான்-நானே நீ' என்ற பேதமற்ற அகண்டானந்த நிலேயேயாகும். நவிலத் தகுமோ—இந்த ஸ்வானுபவ ஆத்மானந்த நிலேயையும்தான் எடுத்துச் சொல்ல இயலுமோ.

**உன்னுடைய நிலேயும் என்னுடைய நிலேயும் உண்மையில் ஒரே அகண்டானந்த நிலேயாக இருப்பதால் எந்த விதத்திலும் இதன் பெருமையை எடுத்துச் சொல்ல முடியவே முடியாது என்பதே வேதங்களின் பரம தாத்பர்யம்.**

**தாத்பர்யம்:**

ஆறுபடைவீட்டினுள் மூன்ருவது வீடுஆகிய திரு ஆவினன்குடி என்று சொல்லப்படும் பரமமங்களகர மான பழநி மலேயின் உச்சியில் ஞானஐச்வர்ய ஸம் பன்னனுய் விளங்கிவரும் ஞானபண்டிதனுன முருகப் பெருமானேயே இந்த அநுபூதியில் புகழ்கிருர் அருண கிரிநாதர்.

ஸகல ப்ராணிகளுடைய சிரஸ்ஸிலும் அம்ருதப் பிரவாகமானது ஸகஸ்ரகமலம் என்று சொல்லப்படும் ப்ரும்மரந்திரத்திலிருந்து வருகிறதென்பது யோக சாஸ்திரத்தின் பரம ஸித்தாந்தமாகும்.

எனவே ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் அக்னி தத்வ மானது 'ரூப' தன் மர்த்திரையாக பாஸித்து வரு கிறது. ஸ்வாதிஷ்டான சக்ரத்தின் உச்சஸ்தானத் திற்கு ரிஷியோவெனில் அக்னி ஸ்வருபரான பரமேச் வரனே ஆவர். அத்தைகைய ஞானச்சுடரான பரமேச்வ ரன் ராஜயோகத்திஞல் உபாஸித்து வரும் தெய்வமே குண்டலிநீ சக்தி ரூபமாகயிருந்து வருகிற முருகப் பெருமான் ஆவான்.

இந்த மார்க்கத்தையே ராஜயோகிகள் கடைப் பிடித்து வருகிருர்கள். பரமரிஷிகளும் இதையே மேலானதாகக் கொண்டு ராஜயோகத்திஞல் குண்டலிநீ சக்தியையடைந்து அம்ருதப்ரவாஹத்தால் முழுகப் பட்டவர்களாக ஆய்விடுகிருர்கள். இந்நிலேயில் அவர் கள் 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' (நான் ப்ரும்மமாக இருக்கி றேன்) என்ற ஸ்வானுபவானந்தமாகிய ஸ்கந்தானுபூ தியை அடைகிருர்கள். எனவே இந்த நிலேயில் ஈச்வர னுக்கும் - ஜீவனுக்கும் பேதமென்பதே கிடையாது. வ்யவஹாரதசையில்தான் ஜீவன் - ஈச்வரன் என்ற

பேதமே தவிர, உண்மையில் இரண்டும் ஒரே அகண்டமான ஆனந்த ஸ்வரூபமேயாகும். அந்த ஆனந்தமும் எல்லாமாய் எங்கும் நிறைந்து மேல் கீழ் என்ற வித்யாசம் சிறிதுமில்லாமல், அப்படியே ஆனந்தத்தை ஒரு ஸாதனத்தை அபேக்ஷித்து அதன் மூலமாக அடைவதென்பது இல்லாமல் ஸ்வயமாகவே ஆனந்த ஸ்ரூபமாக இருந்து வருவதேயாகும்.

மேலும் வேதமானது ஆனந்தத்தை மனுஷ்யானந்தத்திலிருந்து தொடங்கி ப்ரம்மானந்தம் முடிய, பதினொன்று விதமாகப்போதிக்கின்றது. ஒன்றைவிட் மற்றொன்று நூறு நூறு மடங்கு மேன்மேலும் அதிகரித்துக் கொண்டே போகிறது. முடிவில் ப்ரம்மானந்தத்தை அடைகிறது.

எனவே வேதத்தில் சொல்லப்பட்ட பதினொன்று விதமான ஆனந்தங்கள் எல்லாம்,

ஏதஸ்யைவாநந்தஸ்ய அந்யாநி
பூதாநி மாத்ராமுப ஜீவந்தி

என்ற வேதவாக்கியத்தை அனுஸரித்து ப்ரம்மானந்தத்தினுடைய அணுவிலும் அணு என்று சொல்லப்பட்டிருக்கிறது.

எனவே எந்த ஒரு ஆனந்தமானது அனுபவித்திற்கு உள்ளாகிறதோ, அந்த ஆனந்தங்கள் எல்லாம் நாளடைவில் வெறுக்கக்கூடியவைகளே யென்பது தான் வேதத்தின் பரம தாத்பர்யமும் பரமஸித்தாந்தமுமாகும்.

பக்தர்களுடைய பக்திக்குத் தகுந்தவாறு ஆனந்தமானது நிலையயடைகிறது. ஆனந்தமேதான் இன்பம். அந்த இன்பமோ வெனில் பேரின்பமேயாகும்.

எனவே ப்ரும்மாவிலிருந்து சிற்றெறும்பு வரை யிலுமுள்ள எண்ணற்ற ஜீவகோடிகளையும் ஆனந்திக் கச் செய்கின்றவன் முருகப்பெருமாஞகயிருப்பதால், முருகப்பெருமானை பாடலில்

ஆஞ அமுதே

என்றுஅழைக்கின்ருர் அருணகிரிநாதர். முருகபக்தியில் இடைவிடாமல் லயித்து வருகின்ற ராஜயோகிகளின் சிரஸில் எல்லையில்லாத அம்ருதப்ரவாஹ ரூபமாக விளங்கி வருகின்ருன் முருகப் பெருமான். அது போலவே ப்ராணிகளுடைய ஹ்ருதய புண்டரீகத்தி லும் அம்ருதரூபமாக முருகப்பெருமான் விளங்கி வரு கிருர். எனவே செல்வக் குமரனேவெனில் ஜீவகோடி களிஞல் உண்டு அனுபவித்து தெவிட்டாத இன்பரூப மாக இருக்கிருர்.

ஜீவகோடிகளுடைய ஆத்மப்ரேமைக்கு மேலான இருப்பிடமாக முருகப்பெருமான் விளங்கிவருவதால், ஜீவகோடிகள் முருகனை ஆத்மஸ்வரூபமாக அனுபவிக் கிருர்கள். ஆத்மாவிடத்தில் ஒருவனுக்கு ப்ரே மையோ ஆத்மாவையொட்டியே ஏற்படுகிறது. ஆத்மா வையொட்டி ப்ரேமையானது ஏற்படுவதால் ஆத்மாவா னது ஒன்றையும் அபேக்ஷிக்காமல் ஸ்வயமாகவே இன்பமயமாய் இருந்தேயாக வேண்டும். எனவே 'ஆஞ அமுதே' என்கிருர்.

எனவே ஹே முருகா! நீ தெவிட்டாத அமுதமாக இருக்கின்ருய். நீ மாறுதலற்ற பேரின்பமாய் விளங்கு கின்ருய். இந்த நிலையே உன்னுடைய நிஜஸ்வரூபமான நிர்குணநிலை. இத்தகைய இன்ப நிலையில் ஞானிகள் இருந்து வருகிருர்கள். இந்நிலையில் சோகம் என்பது மில்லை. மோகமென்பதுமில்லை. வேண்டிய வஸ்து

வேண்டாத வஸ்து என்ற பேத ஞானம் அற்ற நிலை. இந்திரியங்களுக்குப் புலப்படாமல் இன்ப மயமான நிலை.

ஆகையினுல் குமரா, நீ நிர்குணமான பரம்பொரு ளாய் இருப்பதால் உன்னை வேதங்களும் சாஸ்திரங் களும் 'ஆனு அமுதே' என்று போதிக்கின்றது.

அதுபோலவே ஸகுண பக்தி 'மோக்ஷம் என்ற புருஷார்த்தத்தை விட மேலானதேயாகும் என்று வேதங்களே போதிக்கின்றன. வேத புருஷனுகிய நீ வேதங்களுக்கே விஷய மாகாமலிருக்கிருய். இருந்தும் நீயே கருணையினுல் இந்த புண்ணிய பூமியில் அப்ராக்ருதமான திவ்யமங்கள விக்ரஹத் தோடு திரு அவதாரங்கள் செய்து ஜீவகோடிகளுக்கு இன்பத்தை அளிக்கின்ருய்.

இந்தரகஸ்யத்தை அறிந்த புண்ணியவான்கள் உன்னுடைய திருவிளையாடல்களாகிய கதாம்ருத ஸாகரத்தில் மூழ்கின்றவர்களாய் இருந்து கொண்டு, தங்களுடைய பிறவித் துன்பங்களை வேரொடு போக்க டித்துக் கொள்ளுகிருர்கள்.

ஹே முருகா! உன்னுடைய கதாம்ருதமாகிய திரு விளையாடல்களை சொல்லிச் சொல்லி இன்பத்தினை யடைவதே பக்தியோகத்தின் பரமகாஷ்டையாகும்.

பக்தர்களும், பக்தியையடைய விரும்புபவர்களும், உலகாசையை அனுபவிக்க இச்சை கொண்டவர்களும் உன்னையே மேலான தெய்வமென்று உபாஸிக்கின்ருர் கள். உனது பெருமையை என்னவென்று சொல்வேன்.

உன்னுடைய திருவிளையாடல்களில் எல்லையற்ற இன்பத்தினை ஞானிகள் கண்டு உன்னுடைய திவ்விய

மான ஸ்வருபத்தை உள்ளத்தில் நிலைநிறுத்தி பூஜித்து வருகிருர்கள். ஸகுண பக்தியே மேலான புருஷார்த்தம் என்று அவர்கள் வீடு - பிள்ளை - பெண் - மனைவி - செல்வம் - அனைத்தையும் புல்லுக்கு ஸமனுகத் தள்ளி விட்டு செல்வக்குமரனுன உன்னையே என்றென்றும் அழியாத செல்வமாகவும், தெவிட்டாத ஆனு அமுதமாகவும் அனுபவிக்கின்ருர்கள்.

'அமுதம்' என்ருல் மோக்ஷமாகும். 'நீயோ ஆனு அமுதமாய்' இருக்கின்ருய். மஹாம்ருதாப்தி என்று சொல்லப்படும் பெரிய அமுத ஸமுத்திரமாய் இருக்கிருய். உன்னைப் பக்தி செய்வதே அமுதமாகும்.

உன் திருவிளையாடலின் பெருமையை எடுத்துப் பேசுவதே உனக்குத் திருவமுது அளித்ததாகுமன்ருே!

நீ பக்தி ஒன்றுக்கு மட்டுமே கட்டுப்பட்டவனுய் இருக்கிருய். ஏனெனில் உனக்கு பக்தர்களுடைய மனுேபாவத்தை மீறி நடப்பதற்கு இச்சையில்லை அன்ருே!

ஹே முருகா! உன்னுடைய மனுேபாவத்தை சிவ பெருமான் மீறினுர் என்பதின் பொருட்டல்லவா, நீ அனைத்தையும் துறந்து ஆண்டியாய் ஆவினன்குடியில் வந்து குடிகொண்டிருக்கிருய். ஹே முருகா! என்னே உன் பெருமையும் பரந்த உள்ளமும்.

ஐயனே! நீ ஆண்டியாய் பழநியில் ஞானபண்டிதனுய் நிற்கின்ருயே? இதன் உண்மைதான் என்ன? பக்தர்களிடத்தில் உனக்குக்கோபமா? இல்லை சிவபெருமானிடத்தில் உனக்குக்கோபமா?

நீ பக்தர்களிடம் கோபத்தினை ஒருகாலத்திலும் அடைய மாட்டாய். ஆண்டியாய் நின்று 'அப்பனே,

யானிருக்க பயம் ஏன்?' என்று சொல்லி ஆட்கொள் ளும் தெய்வம் நீ ஒருவன் தான் என்ற உறுதியான மன துடன் உன் திருவடியையே சரணாலயம் என்று போற்றிவரும் அடியார்களின் துயரங்களைத் துடைக் கவே நீ ஆண்டியாய் நிற்கின்றாய்.

எனவே முருகப்பெருமான் அனைத்தையும் துறந்து ஆண்டியாகிய ஆண்டவனாய் நிற்பதின் தத்வமோ வெனில்:—

ஒரு ஸமயம் துர்வாஸ மஹர்ஷியானவர் ஒரு பெரிய மாம்பழத்தைக் கையில் எடுத்துக் கொண்டு சிவபெருமானை தர்சிப்பதற்காக மஹா கைலாசத்திற்கு வந்தார். மஹர்ஷி வரும்பொழுதே அவர் கையிலுள்ள பழத்தைப் பார்த்து, விநாயகரும், முருகனும் தனக் குத்தான் அந்தப் பழம் வேண்டுமென்று சிவபெருமானை வற்புறுத்தினார்கள். தவிர பழத்தை இரண்டாக அறுத்துப் பெற்றுக் கொள்ளவும் இச்சைபடவில்லை. உடனே சிவபெருமானானவர் இரு குமாரர்களையும் நோக்கி "உங்கள் இருவர்களில் யார் ஒருவர் இந்த விஸ்தாரமாகவுள்ள உலகத்தை பிரதக்ஷிணம் செய்து முதலில் வருகின்றார்களோ அவர்களுக்கு இந்தப் பழ மானது தரப்படும்" என்று கூறினார்.

உடனே செல்வக் குமரன் தனது மயில் மீதேறி பூமியை ப்ரதக்ஷிணம் செய்யக் கிளம்பிவிட்டார்.

ஆனால் மஹாகணபதியானவர் தமது வாஹன மாகிய பெருச்சாளியின் மீது ஏறிக் கொண்டு பூமி யைப்ரதக்ஷிணம் செய்யக்கிளம்பினார். ஆனால் என்ன ஆச்சர்யம்! மஹாகைலாசத்தின் வாயிலில் நின்று கொண்டிருக்கும் காமதேனுவானது அவர் கண்ணில் பட்டது. உடனே மூலக்கடவுளாகிய விநாயகருக்கு

மூலதத்துவமானது நினைவிற்கு வந்தது. அக்கணமே அவர் காமதேனுவின் முன்னிலையில் நின்று விழுந்து வணங்கி எழுந்தார். அப்போது அவர் காமதேனுவின் உடலில் வீற்றிருக்கும் பார்வதி பரமேச்வரர்களைக் கண்டார். அப்படியே காமதேனுவின் உடலில் உலக கனைத்தையும் கண்டார்.

வேத சாஸ்திரங்களின் பெருமையை நன்குணர்ந்த விநயகர் உடனே காமதேனுவை ஒருமுறைக்கு மூன்று தரம் ப்ரதக்ஷிணம் செய்துவிட்டு மிகவும் வேகமாய் சிவபெருமானிடம் பழத்தைப் பெற கையை நீட்டினார்.

இதனைக் கண்ட பார்வதி பரமேச்வரர்கள் ஆச்சர்யத்தையடைந்தார்கள்!

உடனே மஹா கணபதியானவர் "தந்தையே! இதில் அதிசயப்படுவதற்கு ஒன்றுமில்லை. வாயிலில் நிற்கும் காமதேனுவை ப்ரதக்ஷிணம் செய்துவிட்டேன். காமதேனுவை ஒருமுறை ப்ரதக்ஷிணம் செய்தால் பூமி முழுவதையும் ப்ரதக்ஷிணம் செய்த பலனை அடைகிருன் என்று சாஸ்திரங்கள் போதிக்கின்றவே. மேலும் காமதேனுவின் குக்ஷியில் ஸர்வ லோகங்களும் அடங்கியிருப்பதால் நான் செய்தது சாஸ்திர ஸம்மதமானதேயாகும். தவிர காமதேனுவின் உடலினுள் தாய் தந்தையர்களாகிய உங்கள் இருவர்களையும் கண்டேன். எனவே பழத்தை எனக்குக் கொடுத்துவிடுங்கள்" என்று கேட்டார்.

சிவபெருமானும் மஹா கணபதி செய்தது சாஸ்திர ஸம்மதம் எனக் கருதி பழத்தை மஹா கணபதிக்கு அளித்து விட்டார்.

ஆனால் என்ன ஆச்சர்யம்! சிறிது நேரத்திற்கெல்லாம் செல்வக் குமரன் உலகம் முழுவதையும்

ப்ரதக்ஷிணம் செய்து சிவபெருமானின் முன்னுல் மயில் வாகனத்தில் வந்து இறங்கினுர். விநுயகருடைய கையில் பழத்தையும் கண்டார்.

உண்மையை வினவினுர் சிவபெருமானிடத்தில். சிவபெருமானும் ''குமரா! காமதேனுவின் குக்ஷியில் பஞ்சாசத் கோடி விஸ்தீர்ணமான பூமி முழுவதும் அடங்கியிருப்பதாலும் வேத சாஸ்திரரீதியாக அவனே பழத்தைப் பெற அர்ஹதியுள்ளவன். எனவே அவனி டமே பழத்தைக் கொடுத்துவிட்டேன். நீ சிறியவனுன தால் இந்த உண்மை உனக்கு விளங்காமல் உலகம் முழுவதையும் சுற்றி அலேந்தாய். போனது போகட் டும்'' என்று சொன்னுர்.

செஞ்சுடர் பொறியிலிருந்து தோன்றின செஞ்சுடர் வேலனின் பன்னிரு கண்களிலிருந்தும் தீப்பொறிகள் பாய்ந்தன. திருக்கரத்தில் தாங்கியிருந்த சக்திவேல் துடித்தது. அதரம் துடித்துப் புருவங்கள் வில்போல் வளேந்தது. முகம் சிவந்தது.

''தந்தையே! நீர் நன்று செய்தீர் இல்லே. தாங்கள் 'உலகம் முழுவதும் ப்ரதக்ஷிணம் செய்து முதலில் வருபவனுக்கே பழத்தை அளிப்பேன்' என்று சொல் லும் பொழுது, அச் சொல்லானது ஒருவனுடைய வீர ரஸத்தையே நாடி நிற்கிறதே தவிர ஒருவனுடைய யுக்தியை நாடி நிற்கவில்லே. காமதேனுவை சுற்றினுல் உலகத்தை ப்ரதக்ஷிணம் செய்த பலன் உண்டு என்ற உண்மை எனக்குத் தெரியாதா. தவிர தாய் தந்தையர்க ளாகிய நீங்கள் இருவர்களும் காமதேனுவின் உடலில் விளங்குகிறீர்கள் என்ற உண்மையும் எனக்குத் தெரி யாதா. எனினும் நான் மயிலில் ஏறிச் சென்றேன். இது யுக்தியை நாடிச் செய்யக்கூடிய பந்தயமல்ல.

வீரத்தை நாடிக் கூறும் பந்தயம் என்று எண்ணி யல்லவா சென்றேன். இதனை சிந்தித்து பார்க்காதது உமது அறிவீனமே தவிர எமதுதோல்வியல்ல. உமது அறிவீனத்தை எமது தோல்வியாக நீர் என்னிடம் கூறுகிறீர்.

காமதேனுவைப் பிரதக்ஷிணம் செய்தால் உலகைப் பிரதக்ஷிணம் செய்த பலனும் பார்வதி பரமேச்வரர் களைப் ரதக்ஷிணம் செய்த பலனும் உண்டாகுமென்பது ஸாதுக்களிடத்திலும் பக்தர்களிடத்திலும் அடியார் களிடத்திலும் ஒட்டி ஏற்பட்ட சாஸ்திரமே யாகும். ஒருவனைத் தோற்கடிப்பதற்காக சாஸ்திர ஞானத்தை யுக்தியாகக் கொள்வதற்காக அல்ல.

எனவே பரமமங்கள ரூபிணியான உமாதேவியுடன் சேர்ந்திருக்கிற உம்முடைய முன்னிலையில் சாஸ்திர ஞானமும் நேர்மையும் செத்துவிட்டன. இதைப் போலவேதான் அடியார்களுடைய மனோபாவம் ஒன்று யிருக்க நீங்கள் அதைக் கடுகளவும் பொருட்படுத் தாமல் சாஸ்திர ஞானத்தைக் கொண்டு அவர்களு டைய உள்ளத்தைப் புண்படுத்திவிடுவீர் அன்றோ! தந்தையே அதனை என்னால் ஒரு விநாடிகூட பொறுக்க முடியாது. குமரனை வெறும் குமரன் என்று நினைக் காதீர்கள். அவனை வெறும் குமரன் என்று ந னைத்தால் அது உம்முடைய அறிவீனமேயாகும்.

இனி எனக்கு இம்மஹா கைலாஸத்தில் வேலை எதுவுமே இல்லை 'குமரன் குருபரன்' என்பது மட்டும் ஞாபகம் இருக்கட்டும்.

இவ்விதம் கோபத்தினையடைந்த முருகப்பெரு மான் அனைத்தையும் துறந்து மஹாகைலாஸத்தைவிட்டு வெகு வேகமாக இறங்கி திருஆவினன்குடியென்று

புகழப்படும் மஹா புண்ணிய மலையாகிய பழனி மலையின் மீது ஏறி ஞானப்பழமாய் விளங்கி நின்றார்.

பழநிப் பதிவாழ் பால குமாரா
ஆவினன் குடிவாழ் அழகிய வேலா

என்று சஷ்டிகவசம் முருகனைப் புகழ்கின்றது.

முருகப்பெருமானின் உயர்ந்த திருவிளையாடலே ஞானபண்டிதனாயும் ஞானப்பழமாயும் விளங்கி வருவது. முருகனின் திருவிளையாடல் தெவிட்டாத இன்பமேயாகும். ஆனா அமுதம் அன்றோ முருகன்.

முருகா முருகாவென்று அழைத்தால் உள்ளம் தானாகவே உருகும். உருகும் உள்ளத்தில் தான் முருகன் தோன்றித் தெவிட்டாத இன்பமதனை ஊட்டுவான்.

எல்லா சமயங்களும் முருகனுக்குப்பொதுவானதே. முருகன் எல்லா சமயங்களுக்கும் பொது. ஏன் தெரியுமா? அவன் தெவிட்டாத ஆனா அமுதமாக இருப்பதால்தான் எல்லா சமயங்களும் நிலைத்து நிற்கின்றன. எனவே எங்கு சென்று எதைப் பார்த்தாலும் முருகனின் விளையாட்டைத் தவிர வேறு எதுவுமே இல்லை.

வேறு படும் சமய மெலாம் புகுந்து
பார்க்கின், விளங்குபரம் பொருளே
நின் விளையாட்டல்லால் மாறுபடும்
கருத்தில்லை முடிவின் மோன வாரிதி
யின் நதித்திரள் போல் வயங்கிற்றம்மா.

என்று சொல்லி பரமயோகியான தாயுமான சுவாமிகள் அனுபவிக்கின்றார்.

எனவே எண்ணிலாகோடி ஜீவராசிகளிடம் தெவிட்டாத இன்பருபமாக திகிழ்கின்ருன் முருகப்பெருமான். அமுதம்போல் இனியவனுயும் தெவிட்டாத ஞானப்பழமாயும் முருகப்பெருமான் பழநிமலையில் பரிபூர்ண ஸானித்ய கலையுடன் விளங்குகிருர். அடியார்கள் பழநியையடைந்து ஞானப்பழத்தை ருசி பார்க்கிருர்கள். முடிவில் ஞானப்பழத்தின் இனிய ரசத்தைப் பருகி ப்ரம்மானந்தத்தை அடைகிருர்கள். ஜீவகோடிகளின் செயல் எல்லாவற்றிலும் ஞானப்பழமாய் உறை பெற்று நிற்கிருன் குமரன்.

அன்னை உமாதேவியின் ஸ்தனங்களிலிருந்து ஞானமாகிய அம்ருதத்தைப்பானம் செய்து ஞானமுதமாய் திகழ்கின்ற நிகரற்ற தெய்வம்தான் பழநிமலையில் 'ஆனு அமுதமாய்' மிளிர்கின்றது.

ஹே முருகா! நீ எங்களுக்கு மட்டும்தான் அமுதமாய் இருக்கிருய் என்பதில்லை. மும்மூர்த்திகளுக்கே அமுதமாய் திகழுபவன் அல்லவா நீ.

நீ அனைத்தையும் துறந்து ஞானச்சுடராய் செஞ்சுடர் வேலைத் தாங்கி தென்னகத்தை நோக்கி வரும் பொழுது உன்னைப் பார்வதி பரமேச்வரர்கள் "ஆனு அமுதே! ஆனு அமுதே! எங்கே செல்கின்ருய், எங்களை விட்டு எங்கே செல்கின்ருய், எங்களை விட்டு எங்கே செல்கின்ருய்" என்று கதறினுர்களே. அப்பொழுதும் அவர்களை நீ திரும்பிப் பார்த்தாய் இல்லை.

ஆனுல் நான் உன்னை "ஆனு அமுதே" என்று அழைக்கும் பொழுது நீ என்னைக் கருணைகூர்ந்த கண்களால் பார்க்கின்ருயே. இத்தகைய திருவிளையாடலின் மெய்ப்பொருள்தான் என்னே! தெவிட்டாத இன்பமே, பக்தி என்னும் வலையில் அகப்படுபவனே.

கண்ணால் உன்னைக் காண்கின்றேன். என்ன புண்ணியம் செய்தேனோ இத்தகைய பாக்யத்தை அடைவதற்கு.

அருள் நனி சுரக்கும் அமுதே

என்று திருவாசகம் சிவமயமாய்யிருக்கிற உன்னைப் புகழ்கின்றது அப்பனே. மேலும் முருகா உன்னை நான்

அயில் வேல் அரசே

என்று புகழ்கின்றேன்.

நீ வேலுக் கெல்லாம் அரசன், ஞான தண்டத்தினை தாங்கி நிற்கும் தண்டாயுதபாணியல்லவா நீ. உன் பெருமையை என்னால் நவிலத்தான் இயலுமோ.

பழநிமலையில் முருகன் கையில் வைத்திருக்கும் ஞானதண்டாயுதத்தையே 'அயில்வேல்' என்பதினால் குறிக்கப்படுகிறது. 'அயில்' என்றால் உண்ணுதல் என்று பொருள்.

எனவே ஞானதண்டத்தின் ஸம்ஹாரசக்தியையும் ரக்ஷணசக்தியையும் எடுத்துக்காட்டுகிறது அயில் வேல் ஆனது.

தண்டாயுதமோ வெனில் அடியார்களின் இருதய கமலங்களில் எந்நேரமும் குடிகொண்டுயிருப்பது மல்லாமல், எல்லாவிதமான பகைவர்களையும் வேரோடு கொன்று குவித்திடும். எனவே துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனம் செய்வதே தண்டாயுதத்தின் குறியாகும்.

பேய்–பூதம்-பில்லி-சூனியம்– பிணி–தேள்– பாம்பு-செய்யான்–பூரான்-மற்றுமுள்ள பற்பல விஷ ஜந்துக்களினால் அடியார்களுக்கு ஏதாவது துன்பம் ஏற்படு

மாகில், அத்துன்பத்திற்குக் காரணபூதமான ஸகல விஷஜந்துக்களையும் விழுங்கிவிடும் முருகனின் தண்டாயுதம். மலைபோல்வரும் துன்பங்களையும், கஷ்டங்களையும் அடியோடு அழித்து அருகில் வரவொட்டாமல் தடுத்து நிற்கும் ஆயுதமன்றோ தண்டாயுதம், மகாப்ரளய காலத்தில் அண்டசராசரங்களும் நாசத்தை அடைகின்றது. ஆனால் தண்டாயுதம் ஒன்று மட்டும் தான் அந்நிலையிலும்கூட அழியாமல் இருக்கிறது.

எனவே பழநியில் இருக்கும் பாலகுமரன் கையில் தாங்கியிருப்பது ஞான தண்டமேயாகும். ஞானமயமான அக்கினியினால் எதையும் எரித்துவிடலாம்.

எல்லா சக்திகளையும் விழுங்கக்கூடிய சக்தியினைக் கொண்டது ப்ரம்மதண்டம். அந்த ப்ரம்மதண்டமே தண்டாயுதமாய் பொலிவுடன் மிளிர்கின்றது.

சிவபெருமானிடமிருந்து ஸகல விதமான அஸ்ர ரகஸ்யங்களையும் பெற்று விச்வாமித்திரரானவர் வஸிஷ்டபகவானிடம் யுத்தத்திற்குச் சென்றார். எதற்காக? அவருடைய காமதேனுவைப் பெறுவதற்காக.

சக்தியினால் காமதேனுவை அடையலாமெனக் கருதி தன்னுடைய அஸ்திரசக்தி முழுமையும் வஸிஷ்டர்மேல் காட்ட முயன்றார். ஆனால் வஸிஷ்டரோவெனில் தன்னுடைய ப்ரம்மதண்டாயுதத்தை தன்முன்னால் நிறுத்தி, ''ஹே அரசே! நீர் சிவபெருமானிடமிருந்து அருந்தவத்தினைக் கொண்டு பெற்ற சக்தியனைத்தையும் இந்தப் ப்ரம்மதண்டத்திடம் காட்டுவீராக'' என்று கூறினார்.

ஆனால் என்ன ஆச்சர்யம்! விச்வாமித்ரரினால் விடப்பட்ட ஸகல சக்திகளையும் ஒரே ப்ரம்மதண்ட

மானது விழுங்கி வெறும் தானுய் தனக்கு நிகர் எதுவுமேயில்லையென நின்றது. இதனுல் ப்ரம்ம தண்டமே தண்டாயுதமாகத் திகழ்கின்றதென்பது தெரியவில்லையா. எவ்விதம் சிவபெருமான் கனலாய் ஓங்கி நின்ருரோ, அதுபோலவே ஞானக்கனலாய் ஓங்கிப் பழநி ஆண்டியின் கையில் ஓங்கி நிற்கின்றது தண்டாயுதம்.

தண்டாயுதமோ வெனில் ஒரு தூண்போன்ற ஸ்வரூபத் தன்மையுடையது.

தூணின் உடைய தர்மமோ வெனில் தாங்குவது அன்ரு! எனவே பக்தர்களுடைய துன்பங்களையும் இன்னல்களையும் உடனிருந்து தாங்கி வருகிறது தண்டாயுதம்.

சிவபெருமான் பிக்ஷை ஆண்டியாய் வரும்பொழுது ஓட்டைத் தன் கையில் வைத்துக்கொண்டிருந்தார். யாசக மூர்த்தியாய் வந்தார். ஆனுல் குமரனே வெனில் பிக்ஷை ஆண்டியாய் வரவில்லை. வெறும் ஆண்டியாகவே வந்தார். கையில் தண்டாயுதத்தைத் தாங்கி வந்தார். ஏன் இவ்விதம் வந்தார்? இதன் பொருளை சிந்தித்துப் பாருங்கள்.

உள்ளிருக்கும் ஆத்ம வஸ்துவே செல்வமாகும். ஆத்ம தத்துவத்தைத் தவிர மற்ற பொருளே கிடையாது. மற்ற வஸ்துக்கள் இருப்பதாகக் கருதினுல் அது மாயையாகும். அது செல்வமாகாது.

செல்வமற்ற பொருளை செல்வமாகக் கருதுவதே அக்ஞானம். அனைத்தையும் துறந்தால்தான் உள்ளிருக்கும் செல்வம் வெளிவரும். எனவே துறவி யாவருக்கும் மேலானவன்.

அடைந்து அடைந்து அரசன் ஆளுகின்ருன். துறந்து துறந்து ஆண்டியாய் ஆனபின்பு அரசனையும்

ஆளுகின்ருன் முருகன். அண்டசராசரங்களையும் தாங்குவதில் ஒரு மாபெரும் தூண்போல் விளங்கு கிறது குமரனின் திருக்கரத்திலுள்ள தண்டாயுதம்.

எல்லா ஆயுதங்களையும் முடிவில் தண்டமிடும்படி செய்யும் சக்தி விசேஷமே தண்டாயுதமாகும்.

ஆதலால் சிவபெருமான் அனைத்தையும் இழந்து ஆண்டியானுர். ஆனல் முருகனே வெனில் அனைத் தையும் துறந்து ஆண்டியானுன். எத்தனை எத்தனை மாபெரும் உண்மை இத்திருக்கோலத்தில் புதைந்து கிடக்கிறது பார்த்தீர்களா. எத்தனையோ கோடி பிறவி யெடுத்தாலும் இதன் உண்மையைத்தான் அறியமுடி யுமா?

ஆதலால் தண்டாயுதத்தின் பெருமையை சொல்லி, அவ்வாயுதமே செல்வத்திற்கு இருப்பிடமாயும், பகை வர்களைக் கொன்று குவிக்கத்தக்கதாயும், அடியார் களின் இன்னல்களை விழுங்கி அவர்களுக்கு ஒரு மாபெரும் துணையாகவும் நிற்கின்றது என்பதை சுட் டிக் காட்டுகிருர் அருணகிரிநாதர்.

எனவே ஹே முருகா! இத்தகைய மகிமையுள்ள தண்டாயுதத்தை நீ தாங்கி நிற்கின்ருய். ஆயுதங் களுக்கெல்லாம் அரசனுக விளங்குகிறது நின் கையி லுள்ள தண்டாயுதம். அத்தண்டாயுதத்தைத் தாங்கி வரும் அரசன் அல்லவா நீ.

அரன் – அரி - அயன் – ஆகிய மும்மூர்த்திகளின் நெஞ்சாகிய ஆலயத்தில் மாறிலாத தெய்வமாக விளங்கிவரும் அரசனுகிய ஆண்டியல்லவா நீ அரனை விபூதியாகவும், அரியை ருத்ராக்ஷமாயும் அயனை தண் டாயுதமாயும் கொண்ட ஆண்டியன்ருே நீ. இதன் உண்மையை யாரால் அறியமுடியும் அப்பனே!

முருகா! ஞானப்பழம் நீ அப்பா, ஞானகரன் நீ அல்லவா, ஞானஸ்வருபனே, நின் பெருமையை சொல்ல இயலுமோ.

ஹே குமரா! ஞானகரன் என்ற ஸ்வருப லக்ஷணத்தினால் அலங்கரிக்கப்பட்ட பரம்பொருளாய் இருக்கின்றாய் நீ. ஸகல ஞானங்களும் உன்னிடத்திலேயே லயத்தை அடைகின்றன. உன்னுடன் ஒன்றாய் கலந்தவர்கள் மீண்டும் இவ்வுலகை அடைவதில்லை. அடையவும் மாட்டார்கள். அடையவும் அவர்களை நீ விட மாட்டாய்.

நீ ஞான மயமாகவே இருக்கின்றாயே தவிர, ஞானத்தை அறிந்தவனாக இருக்கிறாய் இல்லை.

ஹே ஞானப்பழமே! உன்னுடைய ஸந்நிதியை யடைந்து நீ ஞானப்பழமாய் நிற்கும் கோலத்தினை ஒருவன் கண்ணாரக்கண்டு மகிழ்வானேயாகில், அப்பொழுதே அவனுடைய பேதபுத்தியானது நாசத்தை அடைகிறது. அதற்கு மாறாக ஞானத்தினையடைந்து அம்ருதத்துவ ப்ராப்தியை அடைந்தவனாகிறான். இந்த அத்வைத மானஸ தீர்த்த ஸ்நானத்தைத்தான் 'ஞானஸ்னானம்' என்று சொல்லுவார்கள் ஞானிகள்.

ஹே முருகா! ஞானப் பழமாய் திகழும் உன்னைக் கண்ணாரப் பார்த்தால்தான் என் அந்தராத்மா இன்பத்தினையும் சக்தியையும் அடைகிறது. எனவே ஞானஸ்வருபனாகிய உன்னிடத்தில் என் மனதை அர்ப்பணம் செய்கிறேன் ஐயனே.

முருகா! நீயோவெனில் ஞானமாகிய அமிர்தத்தை எல்லா தேசத்திலும் எக்காலத்திலும், எல்லா திக்கிலும் பெருக்கெடுத்து ப்ரவாஹிக்கின்றபடி செய்கிறாய்.

அந்த ஞான ப்ரவாஹத்தில் பக்தகோடிகளும் அடியார்களும் ஸ்னனம் செய்துகொண்டே இருக்கின்ருர்கள்.

இவ்வித மஹிமையுள்ள உன்னே எவர்கள் ஞானப் பழமாய் உள்ளத்தில் வைத்து இடைவிடாமல் பூஜித்து வருகிருர்களோ, அத்தகைய மஹானுபாவர்கள் ‘அஹம்ப்ரஹ்மாஸ்மி’ என்ற அனுபவ நிலேயை அடைகிருர்கள்.

இதனுல்தான் உன்னே நான் ‘ஞானகரனே’ என்று அழைக்கிறேன்.

இவ்விதம் மஹாமஹிமை கொண்ட பழநி ஆண்டியை அருணகிரிநாதர் இந்த அநுபூதியில் ஒருமைப் பட்ட உள்ளத்துடன்,

ஆனு அமுதே அயில்வேல் அரசே
ஞானகரனே நவிலத் தகுமோ?

என்று சொல்லுகின்ருர்.

மேலும் ஹே முருகா! நீ ஞானபண்டிதனுய் வந்து உபதேசித்தருளிய பெருமையை என வென்று சொல்வேன்.

செல்வக் குமரா! ஒரு சமயம் நான் சுத்த ஜீவனுயும் ஒரு சமயம் அசுத்த ஜீவனுயும் இருக்கிறேன்.

நான் அடையும் நிலேக்கு ஏற்றவாறு ஈச்வரனுக்கும் ஜீவனுக்கும் பேதத்தை ஸாதிக்கிறேன். ஜீவன் ஈச்வரனுடைய அம்சம்-ஜீவன் ஈச்வரனுக முடியாது – ஈச்வரனுடன் ஒன்ருய் கலந்து விட்டால் நாம் எப்படி ஆனந்தத்தை அனுபவிக்க முடியும். அதனுல் நாம் ஈச்வரனே அடைந்தாலும், அந்நிலேயில் பேத ஞானம் உண்டு–தண்ணீரில் பால் கலந்தால் எப்படி இருக்-

குமோ—அப்படித்தான் நாமும் ஈச்வரனுடன் கலந்து இருக்க முடியும்—ஸமுத்திரக்கரையில் நின்ருல்தான் ஓயாமல் அடித்துக்கொண்டிருக்கும் அலேயின் அழகை காண முடியும். நாம் சமுத்திரத்தில் கலந்துவிட்டால் ஸமுத்திரத்தின் அழகை எவ்விதம் அனுபவிக்க முடியும். அதுபோலவே நாம் ஈச்வரனேக் காட்டிலும் கடுகளவாவது வேருக இருந்தால்தான் ஈச்வரனே அனுபவிக்க முடியும்-இல்லேயேல் முடியாது, என்றெல்லாம் குதர்க்கமான முறையில் வாதித்துக் கொண்டிருக்கிறேன்.

ஆனுல் அக்ஞானத்தினுல் மூடப்பட்டவனுயும், அப்படியே ஆத்ம ஸ்வரூபமானது ஸத்தாயும் சித்தாயும் ஆனந்தமாயும் அத்துவிதீயமாயும் பரிபூர்ண ஞானஸ்வரூபமாயும் இருந்து வருகிற கேவலம் அகண்டாகார ஆனந்த ரூபமான பரப்ரும்மமேயாகும் என்ற உண்மையான மெய்யறிவு ஞானமில்லாமல் இருந்து கொண்டு ஸர்வக்ஞன்போல் அகங்கார மமகாரங்களினுல் சூழப்பட்டு கேவலம் ஞான சூன்யனுய் திரிந்து வருகின்ற 'யானுகிய என்னே' நீ ஞான பண்டிதனுக வந்து கைகொடுத்துத் தூக்கி ஞானேபதேசம் செய்தருளினுயே. இதனே நான் எனவென்று சொல்லிப் புகலுவேன்.

'சும்மா இரு சொல் அற' என்ற மஹா மந்திரத்தின் மூலமாக நீ எனக்கு ஆத்ம ஞானத்தைப் போதித்தாயே.

ஹே பரமகுருவே! ஜீவன் வேறு—ஈச்வரன் வேறு என்பது வேத ஸம்மதம் அல்ல. ஜீவனும் சேதனம் தான், ஈச்வரனும் சேதனம்தான். ஒன்ருய் விளங்கும் சேதன வஸ்துவின் இயல்பினே ஒரு போதும் வேறு

படுத்திக் கூறமுடியாது. அப்படி வேறுபடுத்தி பேச வேண்டுமானுல் குணத்தில்தான் வேற்றுமையைச் சொல்ல முடியும்.

உதாரணமாக ஸமுத்திர ஜலத்தை யெடுத்தே ஸமுத்திரத்தில் தர்ப்பணம் செய்யவில்லையா. அது போலவே ப்ரம்மத்தினுடைய ப்ரதிபிம்பமே ஜீவனு வான். ப்ரதிபிம்பமாக யிருக்கிறஜீவனேவெனில் பிம்ப மாகிய ஈச்வரனை ஆராதித்து பிரதிபிம்ப பாவத்தை விட்டு பிம்பமாகிய ஈச்வரனுகிருன்.

எனவே ஜீவனுனவன் 'தான் ப்ரம்ம மாவதற்கு முன்பும் ஈச்வரன்தான். ஈச்வரன்–ஜீவன் என்ற பேத ஞானம் இருக்கும் பொழுதும் ஜீவனுனவன் ஈச்வரன் தான். ஜீவனிலை போனபிறகும் ஈச்வரன்தான். ஆத லால் ஆத்மாவானது மூன்று காலங்களிலும் ஈச்வரன் தான், ஆகையினுல் ஜீவேச்வரபேதம் உண்மை இல்லை. ஜீவனும் ஈச்வரனும் ஒன்றுதான் என்ற தத்துவத்தை போதிக்கின்ற மஹா மந்திரமாகிய,

சும்மா இரு சொல் அற

என்ற உபதேசமே எக்காலத்திலும் ஸத்தியமாக வுள்ளது.

அக்கினியின் ஸம்பந்தத்தினுல் ஜலம் சுடுகிறது என்று சொல்லுகிறேமே தவிர உண்மையில் ஜலம் சுடும் தன்மையைக் கொண்டதல்ல. அதுபோலவே மாயையின் ஸம்பந்தத்தினுல் ஜீவனுனவன் ஈச்வர னைக்காட்டிலும் வேருன வஸ்துவாகத் தோன்றுகிருன். ஆனுல் உண்மையில் 'தத்வமஸி' என்ற உபநிஷத் வாக்யத்தினுல்; ஜீவனுனவன் பரப்ரம்மமாகவே போதிக்கப்படுகிருன்.

ஹே குருபரா! 'சும்மா இரு சொல் அற' என்ற உபதேசத்தினுல், என்னுடைய அக்ஞானமாகிய இருளை நினது திருக்கரத்திலுள்ள தண்டாயுதமானது விழுங்கிவிட்டது.

எந்த விஞடியில் எனது இருளானது உன்னுடைய தண்டாயுதத்தினுல் விழுங்கப்பட்டதோ, அப்பொழுதே துக்கஸ்வருபி யென்று எண்ணிக் கொண்டிருந்த ஜீவாத்மாவானது, உன்னுடைய உபதேச மஹிமையினுல் 'தன்னை கூடஸ்த சிதேக ரஸனுகிய ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேருன வஸ்துவானது, சென்ற காலம் நிகழ் காலம் வருங்காலம் என்ற மூன்று காலங்களிலும் உண்மையில் ஒருகாலும் இல்லவே யில்லை என்றும், அந்த ஆத்மஸ்வருபமே அங்கு இங்கு என்று சுட்டிக்காட்ட முடியாமல் எல்லாமாயும் எங்குமாயும் ஒரே பரிபூர்ண வஸ்துவாய் வியாபித்து நிறைந்து அகண்டாகார ரூபமாய் பாஸித்துக் கொண்டு'சும்மா இரு சொல் அற' என்ற மஹாமந்திரத்தின் மேலான நிலையில் ''நானே ப்ரம்மமாக இருக்கிறேன்'' என்ற தன்னுடைய ஸ்வஸ் ஸ்வருபநிலையிலிருந்துமீண்டும்திரும்பிவராமல் நிலைபெற்றுநின்றது.

ஹே முருகா! அவ்விதம் நிலைபெற்று நின்ற வஸ்து எதுவோ வெனில் 'தத்' என்ற பதத்தினுல் போதிக்கப்படுகின்ற பரம்பொருளே யாகும். அதாவது அந்தப் பரம்பொருள் நீயே ஆவாய்.

எனவே நான் உன்னுடைய உபதேசத்தினுல், அடையும் நிலையோ வெனில், 'நீயாகவே நான் ஆகிறேன்' என்பதேதான் ஆகும்.

ஹே முருகா! உன்னுடைய நிலையும் என்னுடைய நிலையும் உண்மையில் ஒரே அகண்டானந்த நிலையாக

இருப்பதால் எந்த விதத்திலும் இதன் பெருமையை எடுத்துச் சொல்ல இயலுமோ, ஆத்மானந்த நிலையை நவிலத் தகுமோ.

முருகா! உன் உபதேசத்தின் பெருமையை நினைக்க நினைக்க அதன் பெருமை அதிகரித்துக் கொண்டே போகிறது. நீ ஞானப்பழமாயும் ஆறு அமுதமாயும், அயில்வேல் அரசாயும் ஞானகரனாயும் இருந்து ஞான பண்டிதனாய் விளங்கும் நின் திருமேனியின் அழகை எவ்விதம் எடுத்துப் புகழ்வேன். உன் பெருமையை எடுத்து என்னால் சொல்ல முடியாது ஐயனே.

ஹே குமாரா! நீ ஞானப்பழம் அன்றோ! உன்னுடைய சரணாரவிந்தத்தில் மனதை அர்ப்பணம் செய்து உன் பெருமையைப் புகழ்ந்து போற்றுவதே வாழ்க்கையின் பயனாகும். உன்னுடைய சக்தியை என்னால் அளக்க முடியுமா ஐயனே! 'நான்' என்ற சப்தத்தால் சொல்லப்படும் ஆத்மாவானது பரமாத்மா வாகிய உன்னைக்காட்டிலும் வேறுபட்டவனல்ல என்ற ஞானத்தை தந்தருளினாயே. இதனை நவிலத்தகுமோ ஐயனே.

இதனையே பாட்டில்

யானாகிய என்னை விழுங்கி வெறும்
தானாய் நிலை நின்றது தற்பரமே

என்று அதிசய வாசகமாகப் புகழப்படுன்றது.

எனவே அரிதாகிய மானிடப் பிறவியை யடைந்த ஒவ்வொருவரும் திரு ஆவினன் குடி என்று புகழப் படும் பழநிமலையை அடைந்து அம் மலையின் உச்சியில் ஞானப்பழமாய் நின்று கொண்டு திருவிளையாடல்

செய்யும் செல்வக் குமரனைக் கண்குளிர கண்டு மகிழ்ந்து வாயார அநுபூதியைப் பாடவேண்டும்.

எண்ணமெல்லாம் பழநியிலே

என்று யிருந்து விடுகிறார்களே அடியார்கள். ஏன் தெரியுமா? எண்ணற்ற கோடி தெய்வங்கள் உடல் உயிர் பொருள் அனைத்தையும் துறந்து ஞானப்பழத்தினைக் கண்டுகளிக்க இரவுபகலாக ஊண் உறக்கமில்லாமல் பழநியில் காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஞானப்பழம் நீ அப்பா! ஞானப்பழம் நீ அப்பா!

என்று ஞானிகள் அழைக்கின்றார்கள் முருகனை. நாமும் ஞானிகள் அழைப்பது போலவே,

ஞானப்பழம் நீ அப்பா! ஞானப்பழம் நீ அப்பா!
தமிழ் ஞானப்பழம் நீ அப்பா!

என்று முருகனை வாயார அழைத்து மகிழ்வோமாக.



# பாமாலையிருல் அறியாமையை அழித்தல்

# 29



இல்லே யெனுமாயையில் இட்டனைநீ
பொல்லேன் அறியாமை பொருத்திலையே
மல்லேபுரி பன்னிரு வாகுவில்என்
சொல்லே புனையும் சுடர்வேலவனே.

**பதவுரை**

மல்லே புரி - (சூரபத்மன் முதலான அசுரர்களுடன்) முஷ்டி யுத்தம் செய்கின்ற, பன்னிரு வாகுவில்-பன்னிரண்டு தோள்களிலும், என்-அடியேனுடைய, சொல்லே-சொற்களி ருலேயே, புனையும்-தொடுக்கப்பட்ட பாமாலையையே அணிந் திருக்கும், சுடர் வேலவனே-ஒளி வீசுகின்ற வேலாயுதத்தை யுடையவனே, இல்லேஎனும் மாயையில்-சென்ற காலம் நிகழ் காலம்-வரும் காலம் என்ற மூன்று காலங்களிலும் கடுகளவு கூட இல்லவே இல்லை என்று வேதங்களின் சிகரமாகிய உப நிஷத்துகளிருல் போதிக்கப்படும் இந்த மாய கல்பிதமான ஜகத்தில்-அதாவது பொய்யாகிய உலக வாழ்க்கையில், நீ-மாயா அதீதனுகிய நீ, இட்டனை-என்னை அகப்படச் செய்து

மாயா கல்பிதமான இந்த மித்யா பிரபஞ்சத்தை உண்மை யானதே என்று எண்ணி அனுபவிக்கும்படி செய்து பாபகர் மாக்களை செய்யவைத்தாய். அறியாமை-மெய்யறிவு ஞானம் இல்லாமையினுல், பொல்லேன்-பாபகர்மாக்களை செய்து வரு கின்ற கொடியவனுகிய என்னை, பொருத்திலை-நீ பொறுத்து மன்னித்து அருளவில்லையே, ஏ-பொறுத்து மன்னிப்பது உனது இயல்பான தன்மையாக இருந்தும் நீ என்னிடத்தில் உன் கருணையைக் காட்டவில்லையே. கருணையைக் காட்ட வேண்டிய நீ பொறுத்து அருளவில்லையென்றால் நான் என்ன செய்வேன். நீயே சொல்.

**தாத்பர்யம்:**

மஹா பராக்ரமசாலியான சூரபத்மாஸுரன் மாபெரும் போர்க்களத்தில் தன்னுடைய ஆயுதங்களை யெல்லாம் இழந்து ஆயுதமற்றவனுக வெறும் பூமியில் நிற்பதைப் பார்த்த முருகப்பெருமான் தன்னுடைய வேல் முதலிய ஆயுதங்களைத் தனித்திருக்க வைத்து அம் மாபெரும் சூரனுடன் மல்யுத்தம் செய்வதற்கு முன் வந்தார்.

மல்யுத்தத்தில் குமரனுடைய பராக்கிரமத்தைப் பார்த்து நடுநடுங்கி நின்றான் சூரபத்மன். ஆயினும் சூரனே வெனில் மலைபோன்ற தோளினைக் கொண்டு குமரனிடம் மல்யுத்தம் செய்தான். தனது தோளின் வலிமையைக் கொண்டு குமரனைக் குத்திக்கொன்று விடலாம் என்று நினைத்த சூரபத்மனே வெனில், நிமி ஷத்திற்கு நிமிஷம் மேன்மேலும் அதிகரித்துக் கொண் டிருக்கும் குமரனின் தோள்வலிமையை நினைத்து மனம் தளர்ந்தவனுனன்.

ஆயினும் சூரபத்மன் ஆகாய மார்க்கத்தில் மேல் கிளம்பி, அப்படியே அதிவேகமாய் ஒரு மலை கீழ்

நோக்கி விழுவது போல் குமரனின் மேல் விழுந்து தனது முஷ்டியினுல் வீராவேசத்துடன் குமரனின் பன்னிரு தோள்களிலும் குத்தி த்வம்ஸம் செய்தான்.

ஆனுல் இதற்கெல்லாம் செல்வக்குமரன் அஞ்சினுன் இல்லை. அஞ்சா நெஞ்சம் படைத்த முருகப்பெருமானின் பன்னிரு தோள்களும் பன்னிரு குன்றுகள் போல் மல்யுத்தம் செய்யப்பூரித்து எழுந்தன. குமரனேவெனில் சூரனுக்கு சூரனுய் விளங்கிக் கொண்டு தன்னுடைய பன்னிரு கைகளினுலே மல்யுத்தம் செய்து வந்தார்.

அது மட்டுமல்ல. சூரபத்மனின் சக்தியனைத்தும் செத்து விட்டன முருகனின் முன்னிலையில். முஷ்டி யுத்தம் செய்து குமரனை ஜெயித்து தன் கைகளால் குமரனைக்கட்டிப் பிடித்து நசுக்கிக்கொன்று விடலாமென்று போன சூரபத்மாஸுரனேவெனில் குமரனுல் குத்தப்பட்டு ரத்தத்தைக் கக்கிக் கொண்டு புறம் காட்டி ஓடி மறைந்தான்.

இவ்வளவு பராக்ரமத்தோடும் வைபவத்தோடும் விளங்கி வருகிறது குமரனின் பன்னிரண்டு தோள்களும். குன்றுகளுக்கு ஒப்பான தோள்களையுடையவன் குமரன் அன்றோ. எனவே பாட்டில்,

மல்லே புரி பன்னிருவாகுவில்

என்று புகழப்படுகிறது.

இதனுல்தான் நக்கீரர் திருமுருகாற்றுப் படையில்

மொய்ம்பின் சுடர் விடுபு வண்புகழ்
நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்

என்று முருகனின் தோளின் பெருமையைப் புகழ்கின்றார்.

அதாவது மிக்க வலிமையினால் படைக்கலங்களை வீசி எறிந்து பகைவர்களின் உடல்களைப் பிளந்து அவர்களின் உயிரை வாங்கும் உயர்ந்த தோள் என்றும் அப்பன்னிரு தோள்கள் அதனாலேயே பெறும் புகழினைக் கொண்டது என்கின்றார்.

புஜங்களின் பராக்கிரமமானது தோள்களின் வலிமையை நாடி நிற்கிறது. தோள்வலிமையைக் கொண்டே முருகப் பெருமான் மும்மூர்த்திகள் உள்பட முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் கைகொடுத்து அவர்களை சூரபத்மனிடமிருந்து சிறைமீட்டு வைத்தார்.

எனவே அண்டசராசரங்களும் முருகனின்பன்னிரு தோள்களையே ஆச்சிரயித்து இருக்கின்றன. அதனை நம்பியே தேவர்கள் தேவர்களாகவும், இந்திரன் இந்திரனாகவும், மும்மூர்த்திகள் மும்மூர்த்திகளாகவும் இருக்கிறார்கள் அன்றோ!

இந்தப் பாட்டில் முருகனின் தோள்களின் வலிமையை எடுத்துப் புகழ்கிறார். கந்தர் அலங்காரத்தில் பன்னிரு தோள்களின் பெருமையும் அழகையும் வர்ணிக்கிறார் அருணகிரியார்.

பத்தித் திருமுகமாறுடன் பன்னிரு
தோள்களுமாய்த்தித்தித்
திருக்கும் அமுது கண்டேன்

ஹே முருகா, அருள் நிறைந்த விழிகள் பொருந்திய அழகிய ஆறு திவ்ய முகங்களுடன் பன்னிரண்டு தோள்களுமாய் அப்படியே பன்னிரு மேன்மை தாங்கிய புஜங்களுடன் தித்திக்கின்ற அமுதமயமாக விளங்கு

கின்ற உன்னுடைய இனிமையான திவ்ய ரூபத்தை அடியேன் ஞானக் கண்ணினுல் கண்டேன். இதைவிட எனக்கு என்ன பாக்கியம் வேண்டும் ஐயனே! எனப் புகழ்கின்ருர் முருகனை.

அப்படியே முருகனின் பன்னிரு தோள்களே, எண்ணற்ற பூர்வ ஜன்மங்களில் செய்த கர்ம வினைகளின் துன்பங்களும் இன்னல்களும் நம்மைவந்து அணுகாமலிருப்பதற்கும், அப்படி அக்கர்மவினைகள் நமக்கு ஒருவேளை துன்பங்களைத் தருமேயாகில் அவைகளை வேருடன் அறுத்துத்தள்வதற்கும் இடைவிடாமல் துணையாக இருக்கின்றன என்பதை அலங்காரத்தில்,

முன்பு செய்த பழிக்குத் துணை அவன்
பன்னிரு தோளும்

என்று சொல்லி நமக்கெல்லாம் ஒரு மனோதைரியத்தை தந்து அருளியிருக்கிருர்.

ஆதலால் ஹே முருகா! உன்னுடைய பன்னிரு தோள்களைக் கண்ணுரக் கண்டு களிக்க உன் அருள் வேண்டும். உனது அருளினுல் நான் ஞானக்கண்ணை யடைந்து

தோள் கண்டார் தோளே கண்டார்

என்று கம்பர் சொல்லியது போல் உனது தோளின் அழகினைப் பார்த்துப் பார்த்து ஆனந்தித்துக் கொண்டே இருப்பேன். உன்னுடைய பன்னிரு தோள்களின் பெருமையை எடுத்து எடுத்து புகழ்ந்து பாடிக் கொண்டே இருப்பேன். அதன் மஹிமையினுல் என் கர்ம வினைகளைப் போக்கடித்துக் கொள்வேன். கர்ம வினைகளை போக்கடிக்கும் விஷயத்தில் உன் பன்னிரு

தோள்களே எனக்குத்துணையாக இருக்கின்றன ஐயனே என்று சொல்கின்றார்.

எனவே அபாரமான வலிமையுடனும் தேஜஸ்ஸுடனும் விளங்கி வரும் குமரனுடைய பன்னிரண்டு தோள்களைப் பற்றிப் புகழ்ந்து பாடுவதையே பாடும் பணியாக நாம் எல்லோரும் கொண்டோமேயாகில், அந்த க்ஷணமே முருகனின் அருளானது நம்மேல் விழும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

எனவே முருனின் அருளினைப் பெறமுடியாமல் அல்லல்படும் மனிதர்களின் நிலையிலிருந்து கொண்டு தன் கஷ்டங்களை முருகனிடம் சொல்லி முறையிடுகிறார் அருணகிரிநாதர்.

ஹேமுருகா! நீயோ வெனில் சுடர் வேலைத் தாங்கி வருகிறாய். ஞான ஒளியினை வீசும் நினது சுடர்வேல் என் அறியாமையை என்றுதான் போக்கடிக்கப் போகிறதோ? தெரியவில்லை அப்பனே.

கானல் நீர் போன்ற இந்த மாயாவுலகில் என்னை விழும்படி செய்தாயே. நிலையற்றதான இவ்வுலக வாழ்க்கையில் என்னை அகப்படும்படி செய்து என்னை அல்லல்பட வைக்கிறாயே. இதனால் நீ அடையப் போகும் பயன்தான் என்ன?

ஞானப்பழமே! நீ பக்ஷபாதமற்றவன் அன்றோ! நீஎன்னை இந்தப் பொய்யாகியநிலையற்றவாழ்க்கையில் இடுவதற்கு நானேதான் காரணம். ஐயனே! என் கர்ம வினையை அனுஸரித்து நீ என்னை இந்த உலக வாழ்க்கையில் இட்டனை. நீ ஜீவகோடிகள் செய்யும் கர்மாக்களை அனுஸரித்து அதற்கு ஏற்றவாறு ஜீவகோடிகளுக்கு ஜன்மாவை அளிக்கிறாய்.

நான் செய்த கர்மாவை ஒட்டி எனக்கு இந்தப் பிறவியை அளித்தாய் அன்றோ. நிலையற்றதாகிய இந்த உலக வாழ்க்கையை நான் உண்மை என்று அனுபவித்து வருகிறேன்.

ஹே முருகா! ஒரு காலத்திலும் 'இல்லவே இல்லை' என்று சொல்லப்படும் இந்த ஜகத்தை ஸத்தியம் என்றும், இந்த ஜகத்திலிருந்து கொண்டு நிலையற்றதான இந்த உலகவாழ்க்கையையும் ஸத்யமென்று எண்ணும்படி என் கர்மவினையானது என்னை ஆட்டிவைக்கிறது.

இதன் விளைவாக நானேவெனில் என் மனைவி, என் குழந்தை, என் வீடு, என் வாசல் என்று சொல்லிக்கொண்டும் என் மனைவி மக்களை ரக்ஷிக்கவேண்டுமென்றும், இருக்கும் வீடு வாசலை அழியாமல் காப்பாற்றவேண்டுமென்றும் அநேகவிதமான மார்க்கங்களைக் கடைப்பிடித்து மஹா பாபங்களை செய்து வருகிறேன்.

ஹே குமரா! பூர்வ கர்ம வினையானது என் அறியாமையைத் துணையாகக் கொண்டு மேன்மேலும் என்னை பாபங்களைச் செய்ய வைக்கின்றன. 'நான்–எனது' என்னும் 'அகங்கார மமகாரங்கள்' என்னிடத்தில் என்னை இந்தக் கதிக்கு ஆளாக்கி விட்டது.

ஐயனே! என்னுடைய அறியாமையானது என்னைக் கொடும்பாவியாகச் செய்து விட்டது. நான் எப்பேர்ப் பட்டவன் தெரியுமா? சொல்லுகிறேன் கேள்.

நான் மிகவும் பொல்லாதவன். தீய காரியங்களைச் செய்பவன். ஒரு விதமான தர்மநெறியிலும் நில்லாதவன் இந்திரியங்களை அடக்காதவன். அறிவு கடுகளவுமில்லாதவன். அடியார்களிடம் அன்பினைக் காட்டாதவன். உண்மையை ஒருகாலும் சொல்லாதவன், நின்

திருவடியில் சிறிதும் அன்பில்லாதவன். திருக்கோயிலிற்கு சென்று இறைவனை வணங்காதவன். இத்தகைய கொடும்பாவியாக நான் இருக்கிறேன்.

ஹே முருகா! இதற்கெல்லாம் காரணம் நினது அருள் என்னிடத்தில் கடுகளவுகூட இல்லை அப்பனே. நினது அருள் என்னிடத்தில் விழுமேயாகில் என் அறியாமை என்னை விட்டு என்றோ போயிருக்கும். கர்மவினையின் காரணமாக என்னை இந்த நிலையில்லாத உலக வாழ்க்கையில் இட்டனையே. உன்னால் என் கர்ம வினையைப் போக்க முடியாதா ஐயனே.

சுடர் வேலவனே! நான் கொடும்பாவியாக இருப்பதற்கு மூலகாரணம் என்னுடைய அறியாமை. அறியாமையினால் உன் குழந்தையாகிய நான் எண்ணற்ற குற்றங்கள் செய்திருக்கலாம். ஆனால் என்னைப் பெற்றவனாகிய நீ அதனைப் பொறுத்துக் கொள்ள வேண்டாமா.

ஹே முருகா, பெற்றவன் நீ பெற்றவள் குறமகள் என்றிருக்க பிள்ளையாகிய என்மீதில் நீ உன்னுடைய ஒப்பில்லாத அன்பினைச் செலுத்தவேண்டாமா?

ஆனால், நீயோவெனில் பிள்ளையென்று என்மீது அன்பினைக் காட்டி நான் செய்த குற்றங்களைப் பொருத்திலையே.

முருகா! உன்னையே சரணம் என்று சொல்லி உன்னிடம் அடைக்கலம் அடைந்த என்னைச் சோதிக்கின்றாயே. இது உனக்கு அழகாகுமா.

ஐயனே இதுவரையிலும் நான் பொல்லாதவனாகயிருந்தாலும் இனிமேல் நான் நல்லவனாகவே இருந்து வருவேன்.

முருகா! பொல்லாதவனாக இருந்தேன் என்பதற் காக என்னை மன்னிக்கவே மாட்டாயா. செய்த பிழையைப் பொறுத்து அருளமாட்டாயா. நான் செய்த பிழையை பொறுக்காமல் இருக்கிறாயே, பொறுத்துக் கொள்ள வேண்டியவன் நீ அல்லவா.

முருகையா! என் சொல்லாகிய பாடல்களை அழகிய ஆபரணங்கள் என்று மலையாக நினது பன்னிரு தோள்களிலும் அணிந்து கொண்டிருக்கிறாயே. என் சொல்லாகிய மாலையை நினது ஒளிவீசும் சுடர் வேலுக்கு நிகராக எண்ணும் நீ என் அறியாமையைப் பொறுத்திலையே. இதன் உண்மைதான் என்ன?

முருகா! நீ என்னை மன்னிக்காவிட்டாலும் பரவா யில்லை அப்பனே. நின் கருணையின் உண்மையை என் னால் அறிய இயலுமோ ஐயனே. நினது பரந்த உள்ளத் தின் பெருமையை என்னவென்று நான் சொல்லிப் போற்றுவேன்.

என் சொல்லாகிய தோத்திரமாலையை ஆபரணமாக நினது அழகிய பன்னிருதோள்களிலும் அலங்காரமாய் அணிந்து கொண்டதின் உயர்ந்த மனப்பான்மைதான் என்ன? வள்ளி—தேவயானை இவர்களுடைய திருக்கரங் களைவிட என்னுடைய பாமாலை ம்ருதுவாக இருக்கின் றனவா, அல்லது அடியார்களின் பாமாலைகளுக்கு இருப் பிடம் நினது பன்னிரு தோள்களா அல்லது பக்தர்களு டைய பாமாலையில் ததும்பிக் கொண்டிருக்கும் பக்தி ரஸத்தை அனுபவிப்பதற்கு ஸவுகரியமாக இருக்கு மென்பதற்காகத் தோளில் அணிந்து கொண்டிருக் கிறாயா, அல்லது சூரபத்மனின் முஷ்டியினால் குத்தப் பட்டு அதனால் உண்டான வலியை அடியார்களுடைய பாமாலையானது போக்கடிக்கின்றதா அல்லது அன்பின்

பெருக்கை வற்ருமல் பெரிதாக்கிக் கொண்டேயிருக்கிறது சொற்றமிழ் பாமாலே என்பதற்காகவா, அல்லது உன்னேத் தமிழர்களின் தனித் தெய்வம் என்று சொல்கிருர்களே அதற்காகவா, அல்லது அடியார்களுடைய பாமாலேயானது என்றும் வாடாமல் மணம் வீசிக் கொண்டிருக்கும் என்பதற்காகவா, அல்லது பன்னிரு தோள்களில் இருந்தால்தான் வள்ளி-தேவயானே இருவர்களினுலும் பாமாலேயிலுள்ள பக்திரஸத்தை அனுபவிக்க முடியும் என்பதற்காகவா, அல்லது நினது பன்னிருகண்களினுல் பாமாலேயை அருள் மாலேயாக செய்வதற்காகவா? உனது மனேபாவத்தை என்னுல் அறிய முடியுமா ஐயனே.

ஹே முருகா, தந்தையும் நீ. குருவும் நீ. மைந்தனுகிய அடியேன் பொல்லாதவனுக இருந்தாலும் என்னுடைய பிழைகளேப் பொறுத்து அருள வேண்டியது உன்னுடைய முக்கியமான கடமையேயாகும் அன்றே.

எனவே உன்னேச் சரணமடைந்த என்னே செழித்து மேன்மேலும் வளரும்படியாகச் செய்வது உன்னுடைய கடமையல்லவா.

சுடர் வேலவனே! பிழைகளேப் பொறுத்து அருள வேண்டிய நீ பொறுத்திலேயே. ஞானப் பழமே ஒளி பொருந்திய சுடர் வேலினுல் என் அறியாமையைப் போக்கடிப்பாய் ஐயனே.

ஹே முருகா! நீ என் பிழைகளேப் பொறுத்தாலும் சரி, பொறுக்கா விட்டாலும் சரி, நான் சொல்வதைத் தான் நான் சொல்லிக் கொண்டிருப்பேன். ஐயனே, உண்மையில் நான் நல்லவன்தான். பக்தியுள்ளவன் தான். உனது அடியார்களிடத்தில் பக்தியுள்ளவனும்

தான். என் பாமாலேயானது நான் எப்பேர்ப்பட்டவன் என்பதை உன்னிடம் எடுத்துச் சொல்லும்.

எனவே நான் பொல்லாதவனுயிருப்பதற்கு மூல காரணம் என் அறியாமையே ஆகும். அறியாமைக்கு மூலகாரணம் என் கர்மவினே. எனவே சுடர்வேலினுல் அறியாமையை போக்கி ஞானமதனேத் தந்தருளி என் பிழைகள் அனேத்தையும் பொறுத்து மன்னித்து அருளி ஆட்கொள்வாய் அப்பனே. மேலும் இந்த அநுபூதியில்,

என் சொல்லே புனயுஞ் சுடர் வேலவனே

என்று சொல்லும்பொழுது, அருணகிரிநாதருடைய மனேபாவமோவெனில், முருகப் பெருமானுடைய மாபெரும் கருணரஸத்தை எண்ணி எண்ணி உள்ளத்தில் மகிழ்வதேயாகும். எனவே

ஹே முருகா, நின் கருணேயை நான் எவ்விதம் சொல்லி மகிழ்வேன். என்னுடைய சொல்லாகிய பாமாலேயைத்தான் நீ நினது பன்னிரு தோள்களிலும் அலங்காரமாய் கொண்டாய் என்பதில்லே.

செல்வக் குமரா, நாயினிற்கும் கடையேனுகிய என்னேயும் ஒரு பொருளாகக் கொண்டு நினது வலது தோளில் என்னே அமர வைத்து, என்னேத் தாங்கிக் கொண்டு கந்தர் அநுபூதியைப் பாடிக்கொண்டே இரு—நான் செவி கொடுத்துக் கேட்டுக் கொண்டே இருக்கிறேன் என்று சொல்லி என்னே அன்று கைகொடுத்து தூக்கினுய் என்பதுமட்டுமல்ல ஐயனே—கடைசி காலத்திலும் என்னே சிரஞ்சீவியாக இருக்க வைத்து நினது திருத்தோளினுல் என்னேத் தூக்கிக் கொண்டிருக்கிருயே.

இதனை நான் என்னவென்று சொல்வது. சிலர் கருணை என்றும்—சிலர் இதனை அன்பு என்றும்—சிலர் ப்ரேமைஎன்றும்—சிலர் இதனை நினது இயல்புஎன்றும் சொல்லுகிறார்கள். ஆனால் நானோ வெனில் இதனை நினது அருள் என்றே சொல்கிறேன் ஐயனே. எனவே இதனை நாம் என்னவென்று சொல்லுகிறோம். அருண கிரியின் பாக்கியமே பாக்கியம் என்று சொல்லுகிறோம்.

எனவே நாமெல்லோரும் கந்தர் அநுபூதியைப் பாடிக்கொண்டிருப்பதையே நமது மேலான பாடும் பணியாகக் கொண்டு நமது அரிதாகிய மானிடப் பிறவியை ஸபலம் செய்துகொள்வோமாக.

இந்நிலையில் நாமிருப்போமேயாகில் நம்மால் அடைய முடியாதது எதுவுமேயில்லை. இதற்கு இப் பாடலே ப்ரமாணம்.



# வாக்கு இழந்த பூரணமாய் திகழும் அநுபவ நிலையையே ஒவ்வாததென உணர்வித்தல்

## 30



செவ்வான் உருவில் திகழ் வேலவனன்
றொவ்வாததென உணர்வித் ததுதான்
அவ்வாறறிவார் அறிகின்றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப்பதுவே.

செவ்வான் உருவில்—சிவந்த வானத்தின் நிறம் போன்ற திருமேனியோடு, திகழ்—பிரகாசிக்கின்ற, வேலவன்—வேலாயுதத்தையுடைய முருகப் பெருமான், அன்று—(பால ரூபத்தில் குருவாக வந்து அருளையில் அடியேனுக்கு ஞானோபதேசம் செய்த) அந்த நாளில், உணர்வித்தது—என்னுடன் 'நான்-நீ என்ற பேதபாவமற்று கேவலம் அத்துவைதவஸ்துவாய் கலந்து' ஆத்மானந்தமாகிய ஸ்வானுபூதி நிலையை எனக்குத் தந்து, அதை "சும்மா இரு சொல் அற" என்று உபதேசிக்கும் பொழுதே உண்டாகும்படி செய்ததுமல்லாமல், தான்-உபதேசிப்பவனும், உபதேசம் பெறுபவனும், உப

தேசிக்கின்ற மந்திரமும் உண்மையில் ஒரே பரம்பொருளே யாகும், என-என்று உபநிஷத்தினுல் (தத்வமஸி) என்ற மஹா வாக்கியத்தினுல் போதிக்கப்படும் மெய்ப்பொருளோ வெனில், ஒவ்வாதது-எந்த தத்வத்திற்கும் மேலானதாகவே நின்று கொண்டு ஸகல மஹிமையுடன் கூடியதாய் ஒப்பிலாத பரம்பொருளேயாகும் என்பதேபரமஸித்தாந்தமாய்ஸ்வானு பவ நிலேயில் விளங்கி வருகின்றபடியால், அவ்வாறு-உன் னுடைய 'சும்மா இரு சொல் அற' என்ற உபதேசத்தினுல் உண்டாகும் அத்வைதானுபூதி ஆனந்தநிலேயை ஆத்மானந்த அனுபூதி நிலேயாகவே, அறிவார்-உபதேசம் பெற்று தெரிந்து கொள்பவர்கள், அறிகின்றது அலால்-ஈச்வரனுகிய உன்னே யும், ஜீவனுகிய தன்னேயும், ஜீவனும் ஈச்வரனும் ஒன்றே என்ற மெய்ப்பொருளே போதிக்கின்ற "சும்மா இரு சொல் அற" என்ற உபதேசவாக்கியமாகிய மந்திரத்தையும் ஒரே அகண்டமான ஆத்மஸ்வரூபம் என்று ஸ்வானுபவானந்த நிலேயிலிருந்து வருவதே அல்லாமல், எவ்வாறு-(தன்னேக் காட் டிலும் இரண்டாவது வஸ்துவே இல்லேயென்ற ஸ்வானுப நிலேயில் இருக்கும்பொழுது) எந்த வகையில், ஒருவர்க்கு-வேறொருவர்க்கு, இசைவிப்பது-அறியும்படி சப்த ரூபமாக எவ்விதம் சொல்லமுடியும், ஏ-அகண்டானந்தானுபவ நிலேயின் மஹிமையைப் போதிக்கின்றது. எனவே, உபதேசிக் கின்ற குருவும், உபதேசம் பெறுகின்ற சிஷ்யனும், உபதேசிக் கப்படுகின்ற தத்வமும் வ்யவஹார ரீதியில் மூன்று தத்துவங் களாக தோன்றுகிறதே தவிர உண்மையில் மூன்றும் பிரிவில் லாத ஒரே அகண்டமான பரம்பொருளேயாகும் என்பதே பரம தாத்பர்யமும் ஸித்தாந்தமும் ஆகும்.

**தாத்பர்யம்:**

தனக்கு ஞானேபதேசம் செய்தருளிய முருகனே அருணகிரிநாதர் இந்தப் பாட்டில்

செவ்வான் உருவில் திகழ்வேலவன்

என்று வர்ணிக்கின்றூர்,

ஆனால் நக்கீரரோ வெனில் தமது திருமுருகாற்றுப் படையில்

உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடல்கண்டு ஆ அங்கு
ஓவு அற இமைக்கும் சேண் விளங்கு
அவிர் ஒளி

உறு நர்த் தாங்கிய மதனுடை நோன்தாள் என்று முருகனை அதிகாலையில் எழும் சூரியனைக் வர்ணிக்கின்றார்.

உலகத்திலுள்ள உயிர்கள் எல்லாம் மகிழும்படியாக எழுந்து மேருமலையை வலமாக சுற்றிவரும் சூர்ய பகவானானவர் எல்லா உயிர்களினாலும் புகழப்படுகின்றார். அத்தகைய சூர்ய பகவான் கீழ்க்கடலிலே காணப்பட்டு அங்கிருந்து எழுகின்றார். இருந்தும் சூரியனுடைய ஒளியானது இடை இடையே கடுகளவும் நீங்காமல் ஆகாயம் முழுவதும் பரந்து விளங்குகின்றது.

அதுபோலவே முருகப்பெருமானும் தன்னைத்தஞ்சமென்று வந்து அடைந்தவர்கள் மிக்க கொடியவர்களாகஇருந்தபோதிலும் அவர்களை தனது பாதகமலங்களில் சேர்த்துக்கொண்டு கருணைபுரிகிறான்.

சூரியபகவான் இருளைப் போக்குவதுபோல் முருகனும் ப்ராணிகளுடைய அக்ஞானமாகிய இருளைப் போக்கி முக்தியை அளிக்கிறான்.

சூர்ய அஸ்தமன ஸமயத்தில்தான் ஆகாயம் செவ்வானாக விளங்கிவரும். மாலைவேளையில் சூர்யனுடைய கிரணங்கள் சிவந்தநிறத்தையடைந்து ஆகாயம் முழுவதையும் சிவப்பு நிறமாகத் திகழச்செய்யும்,

அவ்வேளையில் ஆகாயம் செம்பொன்னைப் போலவே விளங்கி எல்லோருடைய உள்ளங்களையும் மகிழச் செய்யும். தவிர அந்தச் செவ்வானனது அஸ்தமன வேளையைக் காட்டுவதுமல்லாமல், ப்ரதோஷ ஸமயத்தையும் நினைவூட்டி, ப்ராணிகளை 'இறைவனை ஆராதிக்கும் நேரம் வந்துவிட்டது. திருநீற்றினை நெற்றியிலும் தேகத்திலும் அணிந்துகொண்டு ஆலயம்சென்று சிவலிங்க தர்சனம் செய்யுங்கள், வீணுக காலத்தை கழிக்காதீர்கள், ஸந்திவேளையில் லிங்கதர்சனத்திற்கு அமோகமான பலனை சாஸ்திரங்கள் போதிக்கின்றன. எனவே மாலையில் வானனது செவ்வானுக மாறினவுடன் செய்து.கொண்டிருக்கும் எல்லா காரியங்களையும் நிறுத்திவிட்டு ஈச்வர சிந்தனையில்ஈடுபடுங்கள். அஸ்தமன வேளையில்தான் எல்லாவிதமான தோஷங்களும் ப்ராணிகளை வந்து அடைகின்றன.

இதற்கெல்லாம் ப்ராயச்சித்தம் ஒன்றே ஒன்றுதான். ஸந்திவேளையில் ஈச்வரனை ஆராதிப்பதே மேலான ப்ராயச்சித்தமாகும்.

சூர்யனுகத் திகழ்கின்ற முருகனை உருவத்தில் செவ்வானுகப் புகழப்படுகிறது.

சிவந்த வானம் பொன்னிறமாகத்திகழுவதுபோல் குமரனின் திருமேனியும் செம்பொன் நிறமாகத் திகழ்கின்றது,ஆனுல் பாட்டில் 'செவ்வான் உருவில்'என்று சொன்னதால் இந்த இடத்தில் பரந்த ஆகாயத்தையே முருகனுக்கு முக்கியமாக உபமானமாய் சொல்லப்பட்டது.

எனவே நிறத்தில் சிவப்பாயும், உருவத்தில் வானுயும் முருகன் விளங்குகிறுன். செவ்வானின் அழகை ப்ராணிகள் இருந்தயிடத்திலிருந்தே அனுப

விப்பார்கள். காரணமோவெனில் ஆகாயம் எங்குமிருப்பதால், அது போலவே முருகப்பெருமானை இருந்த இடத்திலிருந்தே பிராணிகள் தங்களுடைய இதயமாகிய ஆகாயத்தில் இதயாகாச வடிவில் அனுபவிக்கின்றார்கள்.

மேலும், மாலை வேளையில் எவ்விதம் சூர்யனுடைய சிவந்த கிரணங்களுடைய சிவப்பு நிறத்தை ஆகாயமானது தாங்கி செம்பொன் நிறமாக மாறி சூர்யன் மறையும் வரையில் செவ்வானாகவே புகழப்படுகிறதோ அதுபோலவே முருகப்பெருமானும் தஞ்சமென்று தன்னை ஒருவன் சரணடைந்து விட்டால், அவன் முக்தியடையும் வரையில் அவனுடைய யோக க்ஷேமத்தை தாங்கி, அடியார்களுக்கு எளியவன் முருகப்பெருமான் என புகழப்படுகின்றார்.

ஆகையால், அஸ்தமன வேளையானது செம்பொன்னை உருக்கி வார்த்தால் எப்படியிருக்குமோ அது போலவே இருக்கும். அப்படியே செம்பொன் நிறமானது ஆகாயமானதும் தோன்றும். அந்திவானுடைய செம்மையான கிரணங்களாகிய கர அழகினை என்னவென்று வர்ணிப்பது.

ஆனால் முருகன் உண்மையில் இயற்கை வாயிலாக நின்று தனது அழகை செவ்வானில் பொழிகின்றான். இல்லையேல் செவ்வானிற்கு அழகு ஏது? உலகிலுள்ள உயிர்களெல்லாம் முருகனின் அழகையே நாடி நிற்கின்றன.

தவிர ஆகாசத்தையே ப்ரம்மமாக வேதங்கள் போதிக்கின்றன. ப்ரம்மத்தை இதய ஆகாசத்திலே தான் அனுபவிக்க முடியும். இதயமாகிய ஆகாசம் செந்நிறத்தைக் கொண்டது. சப்த ப்ரபஞ்சமெல்லாம்

லயத்தை அடையும்போதுதான் இதயத்தில் அமைதி நிலவி நிற்கும். அப்போது உள்ளத்தில் முருகன் தோன்றுவான்.

மேலும் செவ்வான் உருவில் திகழ் வேலவன் என்பதின் தத்வமோவெனில்;—

சூர்யனுடைய உக்ரமெல்லாம் குறைந்து அஸ்தமனத்தையடையும்போதுதான் செவ்வான் தோன்றுகிறது. அதுபோலவே விஷயாதிகளில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும் கர்மேந்திரியங்களையும் ஞானேந்திரியங்களையும் அடக்கி, 'ஸோஹம் பாவனையில்' உபாஸித்து வருபவர்கள் முருகனைத் தங்களுடைய இதயாகாசத்தில் அகண்ட வஸ்துவாய் அனுபவிப்பார்கள்.

முருகன் ஒவ்வொரு ஜீவகோடிகளினுடைய இதயாகாசத்தில் செவ்வான்போல் அடி–முடி–மேல் கீழ்–இடம்–வலம்–என்பதில்லாமல் பரம்பொருளாய் விளங்காவிடில் ஜீவகோடிகள் என்ன பாடுபடும் தெரியுமா? இதனுல்தான் முருகப்பெருமான் ஆனு அமுதாக இருந்து அமுதம்பொழிந்து உயிர்களிற்கு பேரின்பத்தினை மூட்டுகிருன்.

எனவே, செவ்வான் உருவில் என்னுஞ் சொல்லிலோ மனதை கொள்ளை கொள்ளும் அழகான ஆழ்ந்த கற்பனைகள் மிளிர்கின்றன. எண்ணும்போது மாபெரும் மகிழ்ச்சி உள்ளத்தில் எழுகின்றது.

ஹேமுருகா. நீ மட்டும் செம்பொன் நிறத்தினைப் போன்ற செவ்வானுய் தோன்றுகிருயென்பது இல்லை. அதிகமான காந்தியுடன் கூடிய வேலாயுதத்தையுடையவன் நீ. நினது வேலாயுதமும் செம்பொன் நிறமாகவே ஜ்வலிக்கின்றது. வேலில்லையேல் நீ இல்லை.

வேலினைவிட்டு விட்டு உன்னைப்புகழமுடியுமா ஐயனே. நினது திருக்கரத்தில் வேலானது ஒளியுடன் திகழ் கின்றதலால் அல்லவா உயிர்கள் எல்லாம் கவலையற்று வாழ்கின்றன.

ஹே குமரா! உன்னைப்பற்றி எண்ணாத இடமில்லை பேசாத தெய்வங்கள் இல்லை. புகழாத இடமில்லை. நினது! அமுதமயமான செவ்வான் உருவை தர்சித்த மாத்திரத்தில் துன்பமெல்லாம் நீங்கி இன்பமயமாகும் அன்றோ! ஹே இன்பமயமான பரம்பொருளே! நீ அன்று அதாவது 'நான் திருவண்ணாமலைக் கோபுரத்திலிருந்து தலை கீழாக விழுந்து எனது உயிரினை மாய்த்துக் கொள்ளும் தருணத்தில் நினது திருக்கரத்தினால் என்னைத் தாங்கி, அருணை கோபுரத்தின் மேல் பால முருகனாய்தோன்றி செவ்வான் உருவில் திகழ் வேல வனாக எனக்கு காட்சி தந்தருளினாயே, அம்மாபெரும் திருக்கோலம் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டது ஐயனே. அத்திருக்கோலமே என் நெஞ்ச மெல்லாம் நிறைந்து நிலவி நிற்கிறது. அதன் மஹிமையினால் நீயே எல்லாமாய் விளங்குகின்றாய் அப்பனே.

அதுமட்டுமா, அத்திருக்கோலத்துடன் நினது கால்களில் பொற்சிலம்பும் கையில் பொற்சலங் கையும் குலுங்க முகத்தில் புன்னகை பெருக்கெடுக்க திருக்கையில் ஞான வேலினைத் தாங்கி கருணைகூர்ந்த கண்களினால் என்னை ஆறாத அன்பினால், நோக்கி நினது பொன்வாயினால், "அப்பா அருணகிரி! என்னைப்பார். யாம் இங்கிருக்க உனக்குப் பயம் ஏன்? நான்கு வேதங்களின் ஸாரபூதமான மந்திரத்தை உனக்கு நானே உபதேசிக்கிறேன். இம் மந்திரத்தை

உபதேசிக்கும்போதே நீ ஸ்கந்தானுபூதியை அடை வாய். அந்த உபதேச மந்திரமே

'சும்மா இரு சொல் அற'

என்பதாகும். இம்மந்திரத்திற்கு நிகர் இம்மந்திரமே யாகும். இதன் பெருமையை சொல்லால் சொல்ல இயலாது. இதன் மஹிமையை ஸ்வானுபவத்திலேயே தான் காணமுடியும். இம்மந்திரத்தில் உலகனைத்தும் உறைந்து நிற்கிறது! என்று உபதேசித்து அருளினயே. நின் கருணையினை நான் எவ்விதம் புகலுவேன் ஐயனே.

முருகா, நீ உபதேசித்த தத்வமந்திரமானது அறி விற்கும் வாக்குக்கும், எட்டாதது. எனவே அது ஒவ்வாதது. உபதேசிப்பவனும்-உபதேசம் பெறுப வனும்-உபதேசமந்திரமும்' ஒன்றாக இருக்கும் பொழுது அறிபவன் யார்? அறிவிப்பவன் யார்? அறியப்படும் பொருள் யாது?

முடிவுள்ள வஸ்துவைப்பற்றி பேசலாம். அது வாக்கிற்குள் அடங்கியது. முடிவில்லாத தத்துவத்தைப் பற்றி எவ்வாறு பேசமுடியும். ஊமை தன்னுடைய அனுபவத்தை எவ்விதம் எடுத்து பிறருக்கு கூற முடியும். அது போலவே முடிவில்லாத பரம்பொருளா கிய உனது பெருமையை எவ்விதம் நவிலமுடியும். நீயே சொல்வாய் அப்பனே.

எனவே, எதற்கும் ஒவ்வாத தத்துவமாகவே நீ ஆகின்றாய். அத்தகைய உன்னை ஒவ்வாத பரம் பொருள் என்றேதான் அனுபவிக்கவேண்டும்.

ஹே முருகா! உன்னையும், உன்னால் உபதேசிக்கப் பட்ட தத்துவத்தையும் ஒவ்வாதது. என அறிந்து

அதனை அப்படியே அனுபவிக்கிறார்கள் ஞானிகளும் யோகிகளும் அன்றோ!

ஸ்வானுபவமானது ஊமையனுபவிப்பது போல் அல்லவா. ஊமை எவ்விதம் தன்னுடைய அனுபவத்தை எடுத்து சொல்வான்!

அதுபோலவே உன்னை ஆத்மாவாக அனுபவிப்பவன், அத்தகைய இணையற்ற ஆத்ம சுகத்தை

எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பது?

இது முடியும் காரியமா ஐயனே? நீயே சொல். முருகா, அத்வைத அனுபவமே நீ. இந்த அனுபவம் எத்தனையோ கோடி ஜன்மங்களில் செய்த புண்ணியத்தினால் உண்டாகிறது. அதுவும் முக்கியமாக நினது அருளினைக் கொண்டே அல்லவா! எனவே 'எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பதுவே' என்பது வேதாந்தத்தின் பரம காஷ்டையல்லவா. அத்வைத அனுவபநிலையல்லவா அது.

ஸகல சாஸ்திரங்களும் அத்வைதத்திலேயே லயத்தையடைய வேண்டுமே தவிர, அன்னியில் அந்த சாஸ்திரங்கள் ப்ராமாண்யத்தை அடையவே அடையாது. பனிக்கட்டியானது கரைந்து தண்ணீராக மாறுவது பனிக்கட்டியின் தர்மம் அல்லவா? பனிக்கட்டி பனிக்கட்டியாகவே இருக்க முடியுமா. ஒருநிலையில் தான் பனிக்கட்டியாக இருக்கும். எப்பொழுதுமே பனிக்கட்டி பனிக்கட்டியாக இருக்கமுடியாது.

அதுபோலவே ஜீவனாக கருதிவரும் உயிர்கள் ஒரு நிலையில்தான் ஜீவன்களே தவிர உண்மையில் ஜீவன்கள் ஈச்வரனே ஆவார்கள்.

எனவே எண்ணற்ற மதக்கொள்கைகள் வாதங்கள் எல்லாம் 'தான்ப்ரம்மபாவத்தை அடையும் வரையில்தான் தோன்றிவருகிறது. ஆனல் உண்மையில் ஸ்வானுபாவத்தை அடைந்து விட்டால் ஒருவிதமான வாதத்திற்கும் அவகாசமே இல்லே. ஏனெனில் ப்ரம்ம பாவ நிலேயில் வாதம் செய்பவன் இல்லே. அங்கே வாதம் செய்வதற்கு ஆள் இல்லே. அங்கே வாதத்திற்கு ஏற்ற தத்துவமில்லே. எல்லா வாதங்களேயும் கடந்து

அங்கு இங்கு எனுதபடி
எங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளோடு நிறைந்து

இருப்பவனுக்கு வாதம் ஏது? மோகம் ஏது? வேண்டியது வேண்டாதது என்பது ஏது? துன்பம் ஏது?

இந்நிலேயில்—எப்படி ? எவ்வாறு? ஸ்வானுபவத்தை எடுத்து மற்றவர்க்கு சொல்லமுடியும். ஸ்வானுபவ நிலேயிலிருந்து கலேந்து வந்த பிறகு தான் சொல்லவேண்டும்.

எனவே சொல்லும் அவஸ்தை வேறு—அனுபவிக்கும் அவஸ்தை வேறு, ஆதலால் சொல்வதை அனுபவிக்கலாம். ஆனுல் அனுபவிப்பதை சொல்ல முடியாது. ஏனெனில் ஆத்மானுபவமானது வெறும் சொல்லாக வெளிவரும்பொழுது அது இந்திரியங்களுக்கும் அறிவிற்கும் விஷயமாகின்றது அல்லவா.

ஸுஷுப்தியிலிருப்பவன் அந்த நிலேயிலிருந்து இறங்கிவந்து-நான் நன்ருகத் தூங்கினேன் என்று

சொல்கிருனே தவிர ஸுஷுப்தி நிலையில் நான் நன்ருகத் தூங்குகிறேன் என்ற அறிவு இல்லாமல் கேவலம் ஸாக்ஷியாகவே இருந்துவருகிருன்.

ஆதலால் ஆத்மானுபவத்தை போதிக்கமுடியாது. ஆனுல் ஊகத்தினுல் அனுபவத்தை போதிக்கலாமோ வென்ருல் அதுவும் முடியாது? ஏனெனில் ஊகமானது அனுபவமாகாது. அது புத்தியின் ஒருவிதமான சக்தி விசேஷமே யாகும்.

ஆதலால் ஒரு நிலையினுடைய தாரதம்யத்தை எடுத்துப் பேசுவோமாகில், அந்நிலையானது அறிவினுல் அனுபவிக்கப்பட்டதேயாகும். அறிவினுல் அனுபவிக் கப்பட்ட பொருள்களையெல்லாம் உயிரற்ற பொருளா கவே கருதவேண்டும். காரணமோ வெனில் அப் பொருள்கள் அனுபவத்திற்கு உள்ளாகின்றன.

ஆத்மதத்வமானது எல்லாவற்றிற்கும் மேலா னதும் முடிவில்லாததுமாக இருப்பதால் ஒவ்வாத தத்துவமாகவும், மற்றவர்க்கு எடுத்துப் போதிக்க முடியாத தத்துவமாகவும் இருக்கின்றது.

எனவே 'சும்மா இரு சொல் அற' என்ற மந்திரத் தின் மெய்ப்பொருளாகிய முருகப்பெருமானை உபா ஸிப்பவன் முருகப்பெருமாஞகவே ஆகிவிடுகிருன் என்று வேதம் கோஷிக்கிறது. ஆராதிக்கும் தெய்வத்தை ப்ரம்மமாக நினைப்பானே யாகில் ஆராதிப்பவன் பரப்ரம்மமாகவே ஆகிவிடுகிருன் அன்ரே!

ஆதலால் உபநிஷத்தினுல் போதிக்கப்பட்ட ஞானமார்க்கமே எல்லா தத்துவங்களைவிட பெரிய தும் உயர்ந்ததுமாகும். ஏனெனில் அவித்யையைப்

போக்கடிப்பது ஞானம் ஒன்றுதான். ஞானத்தினுல் தான் மோக்ஷம் என்று வேதம் புகட்டுகிறது.

ஆத்ம ஞானமானது குரு உபதேசத்தினுலும் தபஸ்ஸினுலும்தான் அடையப்பட வேண்டியது. எனவே ஆத்ம தத்துவத்தை உபதேசம் செய்யும் குருவே ஈச்வரனுவான். குருபக்தியே ஈச்வர பக்தியாகும். குருபக்தி ஏற்படுவதற்கு ஸத்கர்மாவை செய்யவேண்டும்.

இதனுல் என்ன தெரிகிறது? மோக்ஷத்தை அடைய ஞானமே வழிகாட்டுசிறது. பக்தியும் கர்மாவும் ஞானத்தை அடைவதற்கு ஸாதனமேயாகும். ஆதலால் ஸத்கர்மாவின் மூலமாய் சித்த சுத்தி ஏற்பட்டு அதன் மூலமாக குருபக்தி உண்டாகி அந்த குருவையே ஈச்வரனுக எண்ணி அக்குருவினுடைய அருளினுல் ஞானத்தையடைய வேண்டும்.

மேலும் ப்ரம்மக் ஞானமே மோக்ஷ நிலையாகும். ப்ரம்மக் ஞானத்தை அடைந்த ஞானிகள் எல்லா வற்றையும் முருகனுகவே அனுபவிப்பார்கள். 'தான்' என்பதை முருகனிடத்தில் கரைத்து விடுவார்கள். எனவே மிஞ்சுவது முருகப்பெருமானே யாகும் அன்ருே.

ஆதலால் பரம்பொருளே முருகப்பெருமானின் உண்மையான தத்வம் என்பதினை மெய்ஞானத்தினுல் அறிந்து 'சும்மா இரு சொல் அற' என்ற உபதேச மஹிமையினுல் 'நானே ப்ரம்மம்-ப்ரம்மமே நான்' என்பதினைக் காட்டுகின்ற 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்ற நிலையை அடைகிருர்கள் மெய்ஞானிகள்.

எனவே இத்தகைய ஆத்மானுபவ நிலையை எவ் விதம் மற்றவர்க்கு எடுத்து போதிப்பது. மற்றவர்க்கு

போதிக்கப்படாத நிலையாக அத்வைத நிலையானது இருப்பதால்தான் அதை

ஒவ்வாதது

என்கின்றார் பாட்டில்.

ஹே முருகா! மஹாபாபியான எனக்கு நீ ஞான பண்டிதனாய் வந்து 'சும்மா இரு சொல் அற' என்ற மந்திரத்தை உபதேசம் செய்து, அதை ஒவ்வாதது என்று எனக்கு அநுபவ நிலையில் தந்தருளினாயே அப்பனே. ஹே குமரா, நினது மாறிலா கருணை என்ன என்னவெல்லாம் செய்துவிடுகிறது.

எனவே அத்வைத அனுபவநிலையே 'ஒவ்வாதது' ஆகும். அலைகளும் கடலும் போல் ஜீவன்களும் ஈச்வரனும். உண்மையில் இரண்டும் ஒரே பொருளாகும். பேதமற்ற அத்துவைத நிலை ஒன்றே ஸத்ய மான நிலை. இதில்,

ஏகமேவாத் விதீயம் ப்ரஹ்ம

என்ற வேதவாக்கியமே மேலான ப்ரமாணம். இந்த மெய்ஞானத்தை உணர்வித்தவன் ஒப்பிலாத மஹிமை யுடன் கூடியவன். ஒப்பிலாதவன் உணர்வித்ததுதான் மெய்யறிவு ஆகும். அந்த மெய்யறிவோ வெனில்

ஜீவனும் ஈச்வரனும் ஒன்றே

என்பதாகும். எனவே முருகப்பெருமான் உபதேசித் தருளியது, 'ஒவ்வாதது' என்று சொல்லப்படும் ஆத்ம தத்துவமேயாகும்.

அந்த ஆத்ம தத்துவத்தை 'ஒவ்வாதது' என சொல்வதற்கு காரணமோவெனில், ஆத்மாவானது

ஸத்தாயும்—சித்தாயும்—ஆனந்தமாயும் — இருப்பதே யாகும்.

'ஒவ்வாதது' என சொல்லப்படும் ஆத்ம தத்துவமே, மற்றவர்க்கு எடுத்துச் சொல்ல முடியாத தத்துவமும் வஸ்துவும் ஆகும். எந்த விதத்திலும் ஆத்மானுபவத்தை எடுத்துக் கூற முடியாது அன்ரோ.

ஆத்மாவை ப்ரம்மமாக உபாஸிப்பவர்கள் இறைவனேயும் ப்ரம்மமாகவே அனுபவிக்கிருர்கள்.

உபதேசிப்பவன்—ஒவ்வாதவன். உபதேசிக்கின்ற தத்வம் ஒவ்வாதது. உபதேசம் பெறுபவன் ஒவ்வாதவன். எனவே ஞானதசையில் மூன்று தத்துவங்களும் ஒன்றேயாகும். இவ்வாறே ஞானிகள் அறிகின்ருர்கள். அனுபவிக்கவும் செய்கிருர்கள்.

ஆதலால் ஹே முருகா! நீ உபதேசித்தருளியதின் உண்மையான பெருமையை எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பது. எனவே,

எவ்வா ெறுருவர்க்கு இசைவிப்பதுவே

என்பதின் உள்பொருளோ வெனில், அதாவது முருகப் பெருமான் உபதேசித் தருளியது மிகவும் உயர்ந்த ஞான தத்துவமானதிஞல் அதை எவ்விதம் பக்குவமில்லாதவர்களுக்கு உபதேசிப்பது? என்று அர்த்தமல்ல. ஆஞல், உண்மையான பொருளோவெனில்,

முருகப்பெருமான் உபதேசித்தருளிய தத்வமானது ஆத்ம தத்வமாய் இருப்பதாலும், அந்த ஆத்மாவைக் காட்டிலும் உண்மையில் வேெருரு தத்வமும் இல்லை என்பதாலும், ஆத்மானுபவநிலையில் நான்—நீ என்ரே, ஜீவன்—ஈச்வரன் என்ரே, பேதமில்லாததிஞலும்

உண்மைபோல் காணப்படும் எல்லாப் பொருள்களும் ஆத்மாவில் வெறும் கல்பிதம் என்று இருப்பதி ஞலும், யதார்த்த நிலையில் இதன் பெருமையை வாக்கினுல் எடுத்துச் சொல்லவே முடியாது' என்ப தேயாகும்.

ஆதலால் சொல்லமுடியாத தத்வத்தை எவ்வாறு ஒருவர்க்கு சொல்வது?

எனவே சொல்லமுடியாத வஸ்துவே ஒப்பில்லாத வஸ்துவாகும்? அந்த ஒப்பில்லாத வஸ்துவே ஆத்மா வாகும். அந்த ஆத்மாவைக்காட்டிலும் வேருெரு வஸ்துவும் கிடையாது என்பதே நான்கு வேதங்களின் பரமஸித்தாந்தமுமாகும். இதுவே ஸத்யமும் ஆகும்.

எனவே வேதாந்தமென்ற அரண்யத்தில் சென்று முருகப்பெருமானின் உபதேசமஹிமையைப் போதிக் கின்ற நந்தவனமாஹிய உபநிஷத்தினை அடைந்து ஸ்கந்தானுபூதியை அனுபவிக்க முடியாமல் அல்லல் பட்டுக்கொண்டிருக்கிற உயிர்களுக்கெல்லாம் இப் பாடல் ஒரு காமதேனுவைப்போல் இருந்துவருகிறது.

ஆக, இப்பாடலை எவர்கள் நன்கு பொருளு ணர்ந்து அமைதியான மனதுடன் பாராயணம் செய்து வருகிருர்களோ, அவர்கள் நிச்சயமாக முருகப் பெருமானை செவ்வான் உருவில் கண்குளிரக் கண்டு களிப்பார்கள். அதுமட்டுமல்ல, ஞானபண்டிதனுய் திகழும் செல்வக்குமரன் அவர்களுடைய உள்ளத்தில் தோன்றி,

அப்பனே! ஆத்ம தத்துவமானது 'சும்மா இரு சொல் அற' என்ற மந்திரத் தில் புதைந்து கிடக்கிறது. அது ஒவ்வா

தது. அதை ஒவ்வாதது என்று நீ அறிவாய். அதாவது,

"நீயே நான்--நானே நீ"

என்ற அத்வைத நிலையை ஒருவர்க்கு ஒருகாலும் இசைவிக்கவே முடியாது என்ற மேலான உண்மைப் பொருளையே நான் உபதேசத்தருளுகிறேன்.

என்று அவர்கள் செவியில் விழும் வண்ணம் உபதேசித்தருளுவார் யென்பதில் சிறிதும் ஐயமில்லை.

எனவே நாம் எல்லோரும் ஒருமைப்பட்ட மனதுடன் இப்பாடலைப் பாடிக்கொண்டே முருகப்பெருமானின் திவ்விய அருளைப் பெறுவோமாக.



## என் நிலையை அடைந்திடினும்

# வேல் முருகா–வேல் முருகா என்றே வாழ்த்தி எழுவேன்

## 31



பாழ்வாழ் வெனுமிப் படுமாயையிலே
வீழ்வாய் என என்னை விதித் தனையே
தாழ்வா னவைசெய்தன தாம் உளவோ
வாழ்வாய் இனி நீ மயில்வாகனனே.

**பதவுரை:**

*மயில் வாகனனே*—மயிலை வாகனமாக உடைய முருகக் கடவுளே, *பாழ் வாழ்வு எனும்*—நிலையற்று அழிந்துபோகிற உலக வாழ்வு என்று சொல்லப்படும், *படு மாயையிலே*—இக் கொடிய மாயா உலகத்தில் கல்பிதமாக இருந்த போதிலும் உண்மைபோலவே தோன்றி அனுபவிக்கின்ற நிலையற்ற வாழ்வாகிய படுகுழியிலே, *வீழ்வாய் என*—(நீ உன் பூர்வகர்மாவை யொட்டி) வீழ்ந்து உழலக் கடவாய் என்று, *என்னை*—அடியேனை, *விதித்தனையே*—அனுபவிக்கச் செய்தாயே, *தாழ்*

வானவை—(அதன் விளைவாக) என்னுல் ஏதாவது இழிவான செயல்கள், செய்தன உளவோ—(என்னுல்) செய்யப்பட்டன வைகளாக இருக்கின்றதா? இல்லை அப்படி ஏதாவது இழி வானசெயல்களைசெய்திருந்தாலும்கூட, தாம்—தாம் ஆர்க்கும் குடியில்லாதன்மையனுக இருந்து எல்லாம் தாமே தந்து மீண் டும் அதனை வாங்கும் சக்தியுடையவனுகவும் இருந்து வருகிற நீ, இனி நீ வாழ்வாய்—(என் உள்ளத்தில் தோன்றிக் கருணை யுடன் என்னிடம்) அப்பனே! இது வரையிலும் நீ செய்த தீய செயல்களை மன்னித்தேன். இனியாகிலும் நீ அவ்வித தீய செயல்களைச் செய்யாதே என்ற எண்ணத்துடன் என்னிடம்) இனி நீ நோயற்ற வாழ்வுடனும் குறைவற்ற செல்வத் துடனும் நீண்ட ஆயுளைப்பெற்று வாழ்வாய். இதில் சிறிதும் ஐயமில்லை என்று அனுக்கிரஹம் செய்வாய் ஐயனே.

அப்படியே

இனி —(நான் எத்தகைய துன்பத்தினை அனுபவித் தாலும் கூட) இனிமேல் எனக்கு வேறு கதியே கிடையாது என்ற ஒரே மனதையுடையவனுய் இருந்துகொண்டு, நீ வாழ் வாய்—ஞாலமெல்லாம் நின் புகழே திகழ வேண்டும் என்று வானளாவ நின் பெருமையைப் போற்றி வருவேன். எனவே நின் பெருமையே ஓங்கி நிற்கட்டும்.

**தாத்பர்யம்:**

முன்பாட்டில் ஆத்ம தத்துவமானது மற்றவர்க்கு எடுத்துப் போதிக்க முடியாத ஒவ்வாத தத்துவம் என்று சொல்லப்பட்டது.

ஆனுல், ஆத்ம ஸ்வரூபமாகிய பரப்ரம்மத்தை ப்ரம்மமாக அனுபவிக்க முடியாமல் ப்ராணிகள் அல்லல்பட்டு வருகின்ருர்கள். இதற்கு மூலகாரணம் படுமாயையே ஆகும்.

எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாகிய ஆத்ம ஸ்வருபத்தில் உண்மையில் இந்த த்வைத ப்ரபஞ்ச

மென்பது கொஞ்சம்கூட இல்லவே இல்லை. ஆனால் அதை இருப்பதுபோல தோன்றச் செய்கின்றது.

அதுபோலவே மூன்று காலங்களிலும் ஒருவித மான மாறுதல்களும் இல்லாமல் விளங்கிவருகின்ற ஆத்ம ஸ்வரூபத்தை மறைத்து அதை இருப்பதாகத் தோன்றாமலும் செய்கின்றது.

எனவே இல்லாததை யிருப்பது போலவும், உண்மையில் இருப்பதை இல்லாததுபோலவும் ஏற்படு வதற்கு ஒரு காரணம் அவசியம் இருந்தே ஆக வேண்டும்.

இருக்கும் பொருளை மறைக்கின்ற சக்திக்கு ஆவரண சக்தியென்றும், இல்லாத பொருளை இருப் பது போலத் தோன்றச் செய்கின்ற சக்திக்கு விக்ஷேபண சக்தியென்றும் பெயர். 'ஆவரணம்- விக்ஷேபணம்' என்ற இரண்டு சக்தியோடு கூடிய தத்வத்தைத்தான் 'மாயா' தத்வம் என்று சாஸ்திரங் கள் போதிக்கின்றன.

எனவே மாயையினால் தோன்றுகின்ற இந்த ப்ரபஞ்சத்தை அஞ்ஞானிகள் ஸத்யம் என்று அனுப விக்கின்றார்கள். அதனால் அவர்களுக்கு ஆத்மஸ்வ ரூபம் எனதென்று தெரியவில்லை. ப்ரம்மவித்தை ஒன்றினைக் கொண்டே 'மாயையினால் கல்பிக்கப்பட்ட இந்த ஜகத்தானது நாசத்தையடையுமே தவிர, அன்னி யில் ஜகத்தானது ஸத்தியம் போல்தான் இருந்து வரும்.

எனவே ஆத்ம வித்தையினால் அவித்யை என்ற படுமாயையை போக்கடித்துக் கொண்ட புண்யவான் களிடத்தில் ப்ரம்ம ஸ்வரூபம்தான் பிரகாசிக்குமே

தவிர மாயாகல்பிதமான ஜகத்தானது பிரகாசிக்காது. காரணம்? அவர்கள் பரப்ரம்மத்திலேயே ரமித்துக் கொண்டு இருப்பார்கள். ஆனல் இதற்கு மாருக அஞ்ஞானிகளின் விஷயத்தில் கல்பிதமாகிய இந்த ஜகத்துதான் பாஸித்துவருமே தவிர ஸ்வயம்பிரகாசமாகிய ப்ரம்மம் பாஸிக்காது.

மேலும் ப்ரம்மத்தைப் பகலென்றும் ஜகத்தை இருளென்றும் கீதா சாஸ்திரமானது போதிக்கின்றது. இரவாகிய ஜகத்தில் மஹான்கள் தூங்குகின்ருர்கள். பகலாகிய ப்ரம்மத்தில் விழித்துக் கொண்டிருக்கிருர்கள்.

ஆனல் அஞ்ஞானிகள் பகலாகிய ப்ரம்மத்தில் தூங்கிக்கொண்டும், இரவாகிய மாயையில் விழித்துக் கொண்டும் இருக்கிருர்கள்.

இவ்விதம் விபரீத ஞானத்தை காட்டும் சக்தியைத் தான் மாயா சக்தியென்றும், மாயையினுடைய ஸ்வரூப லக்ஷணமென்றும் சொல்லப்படுகிறது.

உதாரணமாக சந்திரன் ஒன்றுதான். இரண்டல்ல. இருந்தும் சிலருக்கு பார்க்கும்பொழுது இரண்டு போல் தோன்றுகிறது. தோன்றுவதினுல் இரண்டாய் விடுமா? இரண்டாய் தோன்றுவதற்குக் காரணம் கண்ணின் தோஷம். அதுபோலவே இருப்பது உண்மையில் ஆத்மஸ்வருபம் ஒன்றேயாகும். அதையே பரப்ரும்மம் என்று உபநிஷத் போதிக்கின்றது.

ஆனல் ஸச்சிதானந்த ரூபமான பரப்ரும்மமாகிய ஆத்ம ஸ்வருபத்தில், அஞ்ஞானிகள் இந்த மாயா கல்பித நச்வரமான ஜகத்தைப் பார்க்கிருர்கள்.

இதைத்தான் ஜகத்குருவான ஸ்ரீ ஆதி சங்கரரும்

ஏகச் சந்த்ர: ஸத்விதீயவத்

என்று உபதேசித்து போதிக்கின்றூர்கள். பொருளோ வெனில் ஒரே சந்திரனுனது இரண்டாகத் தெரிவது போல், ஒரே ப்ரம்மத்தினிடத்தில் இரண்டாவது வஸ்துபோல் தோன்றுகின்ற மாயா கல்பிதமான ஜகத்தைப் பார்க்கின்றூர்கள் என்பதேயாகும்.

ஆதலால் இதையே படுமாயை என்று அறிய வேண்டும். இப்படுமாயையில் நமது வாழ்வானது ஊசலாடி வருகிறது. உலக வாழ்வானது நிலையற்றது. இன்று இருப்பவர்கள் நாளையிருப்பதில்லை. மாயையானது ஜீவகோடிகளை வ்யாமோஹப்படுத்தி துன்பக் கடலில் தள்ளுகின்றது.

மாயா கல்பிதமான இந்த ப்ரபஞ்சத்திற்கு அடிமையாகி விட்டால் நமது அரிதாகிய மானிடப் பிறவியே வீணுகி விடுமன்றே.

இதையே ஆதி சங்கரபகவத்பாதாளும்

ஆத்மாநம் மாநுஷம் ப்ராப்ய
ப்ராப்ய தத்ராபி பௌருஷம்
இத: கோங்வஸ்தி மூடாத்மா
யஸ்து ஸ்வார்த்தே ப்ரமாத்யதி

என்று பச்சைமரத்தில் ஆணியடிப்பதுபோல் உபதேசித்து அருளியிருக்கிறூர்.

எல்லாப்பிறவியிலும் வைத்து மானிடப் பிறவியே மிகவும் அரிதாகும். அதிலும் அரிது புருஷனுகப் பிறப்பது. எனவே புமானுகப் பிறந்தும், ஆத்ம ஸ்வருபத்தை தெரிந்து கொண்டு 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்ற முக்திநிலையை அடையும் விஷயத்தில்

யத்னத்தைச் செய்யாத போனல் அவனை விட் மேலான மூடன் வேறு ஒருவனுமே இல்லை என்று உபதேசிக்கிருர்கள்.

ஆகையினுல் ஆத்ம விசாரமே படுமாயையில் இருந்து நம்மை விடுவித்து விடும். அப்பொழுதுதான் பாழ்வாழ்வானது நல்லவாழ்வாகும். அன்னியில் ஆத்ம விசாரம் செய்யாத வாழ்வெல்லாம் பாழாப் போன வாழ்வேயாகும் என்பதில் ஐயமில்லை.

ஈச்வர சிந்தனையில் ஈடுபடும் வாழ்வெல்லாம் நல் வாழ்வேயாகும். முருகனிடத்தில் பக்தி செய்யும் அடியார்களிடத்தில் இப்படுமாயையாகிய ஜகத் தானது துன்பத்தினை உண்டு செய்யாது. இறைவனை அடைவதற்காகவே இம் மானிடப்பிறவியை நமக்கு இறைவனே தந்தருளியிருக்கிருர். நமது வாழ்வானது நிலையற்றதாக இருந்தாலும், அந்நிலையற்ற வாழ்வில் நிலையுள்ள இறைவனை நாம் காணவேண்டும்.

அப்பொழுது பாழ் வாழ்வானது அழிந்து நல் வாழ்வாக மாறும். படுமாயையானது நாசத்தை யடைந்து பரப்ரம்மமானது ப்ரகாசிக்கும்.

எனவே மானிடப்பிறவியை அடைந்தவர்கள் இறைவன் திருவடியை அடைய யத்னம் செய்வார் களேயாகில், அப்பொழுது அவர்களுடைய வாழ் வானது உயர்ந்த வாழ்வாகும் அன்ருே.

இந்த தத்துவத்தை புண்ணிய மூர்த்தியான ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் பெரிய புராணத்தில்,

ஊனடைந்த உடம்பின் பிறவியே
தானடைந்த உறுதியைச் சாருமால்

தேனடைந்த மலர்ப் பொழில் தில்லையுள்
மாநடஞ்செய்வரதர் பொற்றாள்தொழ

என்கின்றார். மானிடப் பிறவியின் பயன் இறைவனை அடைவதேயாகும் என்று ஸித்தாந்தமாக சொல்கின்றார் சேக்கிழார் சுவாமிகள். இதனால் என்ன தெரிகிறது? மானிடப் பிறவியின் பயனை எண்ணிஎண்ணி வாழ்வோர்கள் மாயா கல்பிதமான உலகையும் உலக வாழ்க்கையையும், அதனாலுண்டாகும் துன்பங்களையும் புல்லாகத்தள்ளி விடுவார்கள் என்பதே பரம தாத்பர்யமாக விளங்கவில்லையா!

நிலையற்ற உலக வாழ்வு என்னும் இக்கொடிய மாயா வாழ்விலே நாம் இருந்தாலும், இறைவனுடைய பொன்னடியில் மனதை அர்ப்பணம் செய்வோமாகில் நமது மானிடப் பிறவியானது கடைத்தேறும் அன்றோ.

எனவே அரிதாகிய மானிட வாழ்வில் நாம் அடையப்படும் பொருளும் அரிதாகியதாகவே யிருக்க வேண்டும். அவ்வரிதாகிய பொருளோவெனில் இறைவனின் பொற்பாதமே யாகும். இந்த மனிதப் பிறவியில் நாம் இறைவனுடைய பொற்பாதங்களைக் காணலாமென்றால் இந்த மனித வாழ்வு கட்டாயமாக நமக்கு வேண்டும்.

மனித வாழ்வு பாழ்வாழ்வாக இருந்தால் என்ன? பாழ்வாழ்வில் அடையும் பொருள் இறைவனின் பொற்பாதமன்றோ! பொற்பாதம் அழியாத பொருள் அல்லவா? இக் கருத்தினை அப்பர் சுவாமிகள்,

இனித்த முடைய எடுத்த பொற்
பாதமுங் காணப் பெற்றால்

மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே

என்று எவ்வளவு அழகாகச் சொல்லுகின்ருர்கள். இதில் புதைந்து கிடக்கும் ஆழ்ந்த கருத்தினை சிந்தித் துப்பாருங்கள். அப்பொழுது உண்மைப்பொருள் சுடர்விட்டு எரியும்.

எனவே ஹே முருகா! நீயோவெனில் என்னை

பாழ்வாழ் வெனுமிப் படுமாயையிலே
வீழ் வாய்என என்னை விதித்தனையே

இவ்விதம் நீ என்னை இந்த நச்வரமான உலக வாழ்வில் வீழ்ந்து வருந்தும்படி செய்தாயே. இதனுல் நீ அடையப்போகும் பயன்தான் என்ன? ஏன் எனக்கு இந்த ஜன்மாவை தந்து பாழ் வாழ்வு எனும் படுமாயை யில் வீழ்த்திஞய்?

ஹே முருகா! சரணம் என்று உன் திருவடிகளை அன்பர்கள் வந்தடையும்போது அவர்களுக்கு அருள் புரிகின்ற கருணை வடிவுள்ள தெய்வமல்லவா நீ. அப்பேர்ப்பட்ட நீயோவெனில் ‘என்னுடைய பூர்வ வினையை நான் அனுபவித்து தீரவேண்டும். அதன் பின் என்னை ஆட்கொள்ளவேண்டும்’ என்ற ஒரே எண்ணத்திஞல் எனக்கு இம்மனிதப் பிறவியை அளித்தாய்.

ஆனுல் ஹே முருகா! பாம்பினின் வாயில் அகப் பட்டுக் கொண்ட தவளை தப்பித்துக் கொள்ள முடியுமா? அதுபோலவே நச்வரமான வாழ்வினை யுடைய நான் இப்படுமாயையிலே வீழ்ந்து கிடக் கிறேன்.

ஹே முருகா! ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கிற இப் படுமாயையில் அகப்பட்டுக் கொண்டு ஜீவகோடிகள் பிறந்து கொண்டும் இறந்து கொண்டும் பலவிதமான துன்பங்களை அடைகிருர்கள். செய்யும் கர்மாவிற்கு தகுந்தபடி பலத்தை இந்த ஜன்மாவிலேயோ அல்லது வேறு பிறவியிலேயோ அனுபவிக்க வேண்டுமே என்ற எண்ணமே அவர்களுக்கு உண்டாகாது. படு மாயையில் வீழ்ந்து கிடப்பவர்களின் செவியில் சாஸ்திரஞானம் ஏருது. ஆனல் அவர்கள் மனைவி மக்கள் செல்வம் என்று சொல்லிக்கொண்டே காலத்தை நயனம் செய்வார்கள். பேராசையின் ஸ்வரூ மாகவே அவர்கள் இருந்துகொண்டு உலக வாழ்க்கை யிலேயே மனதை செலுத்தி வருவார்கள். ப்ரத்யக்ஷ மாகக் காணப்படும் மனைவி மக்கள் செல்வம் இவை களால் விளங்குகின்ற உலகவாழ்க்கையை ஸத்யம் என்று சொல்லிக்கொண்டு, தங்கள் ஜன்மாவை பயனற்றதாகச் செய்து கொள்கிருர்கள். எண்ணற்ற பாப கர்மாக்களை செய்கிருர்கள். இதன் காரணமாக அவர் அவர்கள் செய்யும் கர்மாவிற்குத் தகுந்தபடி நரகத்தில் தண்டிக்கப்பட்டு, அதுபோதாதென்று பிறப்பு இறப்பு என்ற பிறவிக்கடலில் மூழ்கி அல்லல் பட்டுக் கொண்டு இருந்துவருகிருர்களே தவிர, மேலான புருஷார்த்தத்தை அடைவதற்கு அவர் களுக்கு இந்தப் பாழ்வாழ்வில் ஸந்தர்ப்பமே ஏற்படா மல் போய்விடுகிறது அன்ருே!

என்னுடைய மனைவி, மக்கள் என்று சொல்லிக் கொண்டு நச்வரமான உலக வாழ்க்கையில் ரமித்துக் கொண்டு ஆத்மவிசாரமில்லாமல் காலத்தை நயனம் செய்கிருர்கள். மாயையானவள் ப்ராணிகளை

மோக்ஷத்தை அடைவதற்கு மூலகாரணமான ஞான மார்க்கத்தைக் கடைபிடிப்பதற்கு விடுவதில்லை.

ஹே குமரா! பாழ் வாழ்வினுடைய கொடுமையை என்னவென்று சொல்வேன். இதனைவிட கொடுமையான படுமாயையில் ப்ராணிகளைத் தள்ளிவிடுகிறாய். எனவே ஆயிரத்தில் ஒருவன் தான் உலக வாழ்க்கையை வெறுத்தவனாக இருக்கிறான்.

முருகா! இதற்கெல்லாம் காரணம் என்ன தெரியுமா? மாயையானது ப்ராணிகளுடைய இந்திரியங்களையும் புத்தியையும் தன்னுடைய சக்தியினால் அபகரித்து விடுகிறது. எனவே மனதை இழந்த ப்ராணிகள் தங்களுடைய வாழ்வை பாழ்வாழ்வு என எண்ணுகிறதில்லை. இந்திரியங்களுக்கு வசமாகி விடுகிறார்கள். அதன் விளைவாக தர்மகாரியத்தில் ஈடுபடுவதில்லை. பாபகர்மாவை சுகத்திற்காக செய்கிறார்கள். தயை தாக்ஷிண்யம் அன்பு முதலியவை யற்றவர்களாக ஆகிறார்கள். பக்தி மார்க்கத்தில் மனதை செலுத்துவதில்லை. மனம்போன போக்கெல்லாம் போகிறார்கள். தர்ம நெறியில் நிற்காமல் நெறிதவறி வாழ்க்கையை வீணாக்குகிறார்கள். பொய்பேசி துன்பம் செய்கிறார்கள்.

இவ்விதம் நிலையற்ற மாயா உலகில் ப்ராணிகள் பரம மூடர்களாக உழலுகின்றார்கள். எனினும் அகங்காரத்தினாலும் மமதையினாலும், தாம் இவ்விதம் படுமாயையில் அகப்பட்டு அரிதாகிய மானிடப்பிறவியை நஷ்டமாக்கிவிட்டோமே என்பதைஉணராமல் மற்றவர்களையும் துர்போதனையினால் கெடுத்துவிடுகிறார்கள்.

எனவே ஹே மயில்வாகனனே! நீ ப்ரம்மாவிடம் ‘‘ப்ராணிகளின் பூர்வ கர்மவினையை அனுசரித்து அவர்

களுக்குஜன்மாவையும், அதற்கேற்றசுகதுக்கங்களையும் கொடு'' என்று கட்டளையிட்டு இருக்கிறாய். அதற்கு ஏற்றவாறு ப்ரும்மாவும் என்னை இந்த அழிந்துபோகும் உலக வாழ்க்கை எனும் படுமாயையில் வீழ்வாய் என்று விதித்திருக்கிறார்.

எனவே ஹே குமரா! நான் என் ஜன்மாவைக் குறித்து வருந்தவில்லை. மஹான்கள் சுக துக்கங்களை கர்மவினையின் பலனேயாகுமென்று அதனைப் பொருட் படுத்தமாட்டார்கள். ஆனால் நான் வருந்தும் காரணமோவெனில் இந்த அரிதான மானிடப்பிறவியில் மாயையின் காரணமாக உன்னுடைய ஸ்மரணமில்லா மல் ஜன்மாவானது வீணாய்விடக்கூடாது என்றுதான் நான் பயப்படுகிறேன். எனவே ஹே முருகா! உலக வாழ்வானது நிலையற்றது அன்றோ. இந்த நிலையற்ற வாழ்வில் நான் உன் திருவடியை அடைய வேண்டாமா ஐயனே.

மயில்வாகனனே! நின் கருணையை நான் என வென்று புகல்வேன். என் பூர்வ கர்மவினையை அனு சரித்து எனக்கு பசு-பக்ஷி-ம்ருகாதி வகைகளில் ஜன் மாவைத் தராமல் மனிதனாகப் பிறக்கும் பாக்யத்தை தந்தருளினாயே! ஐயனே, இம் மண்ணுலகில் உண் டாகும் பிறவிகளில் நீண்ட ஆயுளையுடைய பிறவியல் லவா மானிடப் பிறவி. அந்த மானிடப் பிறவியிலே நான் பிறக்கும்படி செய்தருளினாயே. இப்பிறவியில் தான் உன்னையடையலாம் என்பதற்காக அல்லவா நீ இவ்விதம் செய்திருக்கிறாய். முருகா, இதனை நான் நன்குஅறிவேன். அதுமட்டுமல்ல. எல்லோருக்கும் இவ் வரிய இம்மானிடப் பிறவியின் பயனை எடுத்துச் சொல்லவும் சொல்வேன்.

கருணைக் கடலே, நீ என்றும் அடியார்களுடைய யோகக்ஷேமத்தை வஹிப்பவன் அல்லவா. உனது பெருமையை உனது வாஹனமாகிய மயில் ரூபத்தி லுள்ள சூரபத்மனே நன்கு அறிந்தவன். அம்மாபெரும் சூரபத்மாஸூரனே உனது பெருமையை எடுத்துப் பேச வல்லோன்.

ஹே முருகா! உன்னை மயில்வாகனனே என்று அழைக்கும் வேளையில், உனது மாபெரும் கருணை சூரபத்மனை ஆட்கொண்ட ஒரு திருவிளையாடலாகிய காட்சி அன்றோ என் கண் முன்னே வந்து நிற்கிறது.

வைதாரையும் அங்கு வாழவைப்போன்

என்னும் மாபெரும் பெருமையுடன் நீ விளங்கி வரு கிறாய் என்பதற்கு இதைவிட மேலானது என்ன வேண்டும் ஐயனே.

முருகா உன்னை நினைந்து நினைந்து மகிழ்கிறேன். நீ தனித்தெய்வமாய் பொலிவதைக் கண்டு இன்பத் தினை அடைகிறேன். உன்னுடைய மஹிமையைஎண்ணி எண்ணி உள்ளமுருகி பரவசமடையும் அடியேன் எவ் விதம் இழிவான கார்யங்களைச் செய்வேன்.

முருகா! இப்பிறவியில் நான் அறிந்து என் நெஞ் சார ஒருவிதமான கெட்ட காரியங்களையும் செய்த தில்லை. மனம்-வாக்கு-காயம் என்ற மூன்று கரணங் களினாலும் ஒருவரையும் ஹிம்சித்தது இல்லை-உன்னை அடைய அரிதாகிய மானிடப்பிறவியை அளித்தாயே என்று நான் மனம் மகிழ்ந்துயிருக்க தாழ்வான செய் கைகளை செய்யத் துணிவேனா ஐயனே. உன்னைப் புகழ் வதற்கே நேரமில்லாத நான் ஏன் தாழ்வான காரியங் களை செய்யப்போகிறேன்?

அப்படி ஏதாவது என்னுடைய புத்திக் குறைவினுல் தாழ்வான காரியங்கள் செய்திருப்பேனுகில், அவைகளை நான் மனமறிந்துசெய்ததாகாது அப்பனே.

எல்லா உயிர்களையும் வாழவைக்கின்ற நினது புகழ் வானளாவி நிற்கட்டும்.

எனவே மும்மூர்த்திகளையும் வாழவைக்கும் பரம் பொருளே முருகப்பெருமானுவான். இதனுல்தான் முருகனை அருணகிரிநாதர்

வாழ்வாய் இனி நீ

என்று சொல்லுகின்ருர். இதன் உட்கருத்தோவெனில்,

ஹே மயில்வாகனனே! இதுவரையிலும் தாழ்வான காரியங்களை செய்து வந்தவர்களுடைய உள்ளத்தில் நீ பிரகாசிக்காமல் இருந்தாய். நீ அப்படியே இருந்துவிட்டால் அவர்களுடைய அரிதாகிய மானிடப்பிறவி வீணுகிவிடும் அன்ருே. மாயா உலகினை ஸத்யம் என்று எண்ணுவோர் தாழ்வான காரியங்களைத்தான் செய்வார்கள். அது அவர்களுடைய இயல்பு. தவிர மாயை அவர்களை ஆட்டி வைக்கிறது.

ஹே முருகா! இந்த மாயா உலகில் பெண்ணுசையினுல் நான் அடைந்த துன்பத்திற்குத் தான் எல்லையுண்டோ. அதன் கொடுமையை நான் நன்கு அறிவேன் அப்பனே. அத்தகைய கொடுமையை யாரும் அடையக் கூடாது. ஆதலால் உனது திருவருளைப்பெற்ற அடியேனுகிய அருணகிரி உன்னிடம் ஒரே ஒரு வரத்தை வேண்டுகிறேன் ஐயனே. அதனை இல்லையென்று சொல்லிவிடாதே அப்பனே. தஞ்சத்தருள் சண்முகன் அல்லவா நீ.

எனவே இதுவரையிலும் உன்னை உயிருக்குயிராய் உள்ளத்தில் வைத்து, ஜீவகோடிகள் பூஜிக்காவிட்டா லும் அதனை நீ ஒரு பெரிய குற்றமாக எடுத்துக் கொள்ளாமல், இனியாவது நீயாகவே கருணை கூர்ந்து அவர்களுடைய உள்ளத்தில் எழுந்தருள்வாய் அப் பனே.

அதுமட்டுமல்ல, நீ உன்னை சரணமடைந்த ஒவ் வொருவருடைய உள்ளத்திலும் ஞானபண்டிதனாகத் தோன்றி 'அப்பனே, நீ இதுவரையிலும் செய்த குற்றங் களை நான் மன்னித்துவிட்டேன். எனவே உனக்கு நரக பயம் உண்டாகாது. இனியாவது எமது புகழையெடுத் துப் பாடுவாயாக. அதனைக் கேட்டு யாம் மகிழ்வோம். யாம் இருக்க பயம் ஏன் உனக்கு? இனி நீ நோயற்ற– வாழ்வோடும் குறைவற்ற செல்வத்தோடும், குன்றாத முருக பக்தியுடனும் இனி நீ வாழ்வாய்.'' என்று அபயமளிக்கவேண்டும் முருகா. இதுவே யான் உன்னை யாசிப்பது.

முருகா! தெரிந்தும் தெரியாமலும் செய்த பிழையை மேலான கருணையினால் பொறுத்துக் காத் தருளவேண்டும். பாழ்வாழ்வைப் போக்கடித்து பெரு வாழ்வை கொடுத்தருள்வாய் ஐயனே. அப்பொழுதுதான் நான் உன் புகழைப் பாடிக்கொண்டே இருக்க முடியும்.

ஆதலால் ஹே முருகா! ஜீவகோடிகளிடம் உள்ள குறைகளை யெல்லாம் குணமெனக் கொண்டு அந்த ஜீவகோடிகளை படுமாயையில் வீழ்ந்து அழியும் முன்பு நீ அவர்களையெல்லாம் வாழவைப்பாய் ஐயனே! வரம் பினைக் கடந்த கருணை வரம்பினை நாடி நிற்குமோ. நீ வரம்பில்லாத கருணையின் பெருக்கல்லவா.

மேலும் 'வாழ்வாய் இனி நீ' என்பதை முருகனை ஒட்டிச் சொல்லும் பொழுது கருத்தோ வெனில், முருகனை 'வாழ்வாய் இனி நீ' என்று அருணகிரியார் ஆசிர்வாதம் செய்தார் என்பது பொருள் அல்ல. நாம் முருகனை வாழ்த்தக்கூடாது. வாழ்த்தவும் முடியாது. ஏனெனில் முருகப்பெருமானே உலகனைத்தையும் வாழ வைப்பவன். அவன் ஒருவனே நம்மை 'வாழ்வாய் இனி நீ' என்று வாழ்த்த முடியும். எனவே,

வாழ்வாய் இனி நீ

என்றால் முருகனின் ஒப்புயர்வு இல்லாத பெருமையும் புகழும் வானளாவ உலகமெங்கும் நிலவி நிற்கட்டும். இயல்பினால் என்றும் இன்பமதனைப் பெருக்கிக் கொண்டேயிருக்கும் முருகனின் பெருமை தழைத்து ஓங்கட்டும். குமரனின் புகழ் எல்லோரையும் எல்லா வற்றையும் தாமாகச் செய்து மகிழ்ச்சி யென்னும் கடலில் மூழ்கவைத்து தனிப்பெருமையுடன் விளங் கட்டும். எவ்வுலகோரும் ஏத்தித் தொழும் தெய்வமாய் நிற்கட்டும். நாலு வேதங்களை உணர்ந்த நான்மறை யோர் அதிசயிக்கும் வண்ணம் ஞானப்பழமாகிய நின் அநந்த கல்யாண குணங்கள் ஓங்கி விளங்கட்டும். இறைவனை வாழ்த்துவது என்பது உலகெல்லாம் இன் புற்றிருப்பதற்கு அன்றோ.

எத்தனை பெரிய கருத்தினைக் கொண்டுள்ளது அருணகிரிநாதரின் அருள்வாக்கு, பார்த்தீர்களா. மஹான்களுடையசிந்தனையில் நம்முடைய உள்ளத்தை கரைக்க வேண்டும். அப்பொழுதுதான் நாம் இறை வனின் பெருமையை அனுபவிக்க முடியும்.

இதனால்தான் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் தேனினைப் பொழியும் திருவாசகத்தில்

நமச்சிவாய வாழ்க நாதன்தாள்வாழ்க
இமைப்பொழுதும் என் நெஞ்சில்
நீங்காதான் தாள்வாழ்க

என்று இறைவனை மனமார வாழ்த்துகின்ருர்.

ஆகையினுல் நாம் மிகவும் முக்கியமாகக் கடைப் பிடிக்க வேண்டியது ஒன்றே ஒன்றுதான். அந்த ஒன்ருேவெனில் நாம் எந்நிலையை அடைந்தாலும் கூட நமது மனமானது தளர்ச்சியை அடையவே கூடாது. நம்முடைய உள்ளத்தில் எழும் ஈச்வர பக்தியானது நம்முடைய வாழ்க்கையில் மாறி மாறி உண்டாகும் சுக துக்கங்களை ஒட்டினதாக இருக்கக்கூடாது.

எனவே இடைவிடாமல் நாம் எண்ணவேண்டியது முருகனின் சக்தியின் மஹிமை ஒன்றினைப் பற்றியே. தேடவேண்டியது முருகனின் திருவடிகளையே. பார்க்க வேண்டியது குன்றுதோறும் சென்று முருகனின் திரு விளையாடல்களையே. பாடவேண்டியது குமரனின் பெருமையைப் பற்றியே. இதனுல்தான் பாட்டில்

வாழ்வாய் இனி நீ மயில்வாகனனே

என்று சொல்லி முருகனின் பெருமையைப்பற்றி பாடிக் கொண்டிருப்பதே ஸ்கந்தாநுபூதியை அடைய சுலப மான வழி என காட்டி அருளுகிருர் அருணகிரிநாதர் என்பதே இப்பாடலின் பரம தாத்பர்யமாகும்.

ஆகையால் நாம் இனி செய்ய வேண்டியது யாதெனில் — இடைவிடாமல் முருகப்பெருமானின் திருவிளையாடல்களின் பெருமையை உலகெலாம் பரவும்படி பேசிக்கொண்டே இருக்க வேண்டும் அப் பொழுது நம்முடைய கர்மவினைகள் தானுகவேஅழிந்து

போய்விடும். அதன் பயனாக நாம் இக்கொடிய மாயா உலகத்திலிருந்து விடுபட்டவர்களாக ஆகி முடிவில் தியான நிஷ்டர்களாக ஆகி ஸ்கந்தானுபூதியில் லயித்தவர்களாகவே இருந்து வருவோம் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இறைவனின் பெருமையைப் பற்றி பாடிக்கொண்டிருப்பதற்கே நாம் இப் பிறவியை எடுத்துயிருக்கிறோம்.

எனவே கூறும் அடியார்களின் வினைகளைத் தீர்த்து வைக்கும் முருகனின் அருளைப் பெறுவதற்கு இப் பாடலை இடைவிடாமல் பாடிக்கொண்டே இருப்போமாக.



# கலைஞானம் அனைத்தும் குமரனின் வடிவமேயாகும்

32



கலையே பதறிக் கதறித் தலையூ
டலையே படுமா றதுவாய் விடவோ
கொலையே புரிவேடர் குலப் பிடிதோய்
மலையே மலை கூறிடு வாகையனே.

பதவுரை

கொலையே புரி—(வேட்டையாடுவதினுல்) கொலைத் தொழில்களை செய்து வருகின்ற, வேடர் குலப் பிடி—வேடர் குலத்தில் வளர்ந்த பெண் யானையைப் போன்ற வள்ளி தேவியை, தோய்—(ஒருவருடைய மார்பு மற்றொருவருடைய மார்பில் நன்ருக உரைந்து அமையும் வண்ணம் நினது பன்னிரு கைகளினுல் வள்ளிதேவியுடன் ஒன்ருேடு ஒன்ருய் கலந்து ஆலிங்கனம் செய்து மனம் மகிழ்ந்து) தழுவுகின்ற உன்னை, மலையே—தன்னுடைய தவத்தின் பயனுக ஷடக்ஷர மந்திரத்தின் பொருளாகிய முருகப் பெருமான் அன்ருே நம்மைத் தழுவுகிருன் என்று உள்ளம் பூரித்து உன்னுடைய

அழகை தன்னுடைய கண்களினுல் பானம் செய்துகொண்டு உன்னுடைய பன்னிரு கண்களுடன் கலந்து உன்னைத் தன்னுடைய உருண்டு திரண்டுள்ள இரு கரங்களினுலும் ஆருத காதலுடன் தழுவும்பொழுது, அவ்வள்ளிதேவியினுல் வர்ஷிக்கின்ற இன்பமாகிய அமுதத்தினுல் நினைக்கப்பட்டவனுய் இருந்துகொண்டு சிறிதும் அசங்காமல்) மலைபோல் இருப்பவனே, மலை கூறிடு வாகையனே—(வானளவ எழுந்திருக்கின்ற) மலைகளினுல் புகழும் வாகை மாலையையுடையவனே, கலையே—ஸகல விதமான சாஸ்திர நூலில் சொல்லப்பட்ட கலைகளையே புருஷார்த்தமென்றும் அல்லது கொலையே புரிகின்ற வேடர்களைக் கண்ட கலைமானுேவெனில், பதறி—(மேல் கூறிய சாஸ்திர நூல்களை தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆர்வத்தினுல்) மனம் பதைத்து அல்லது தன்னுடைய உயிருக்கு ஆபத்து வந்துவிடுமோ என்று பயத்தினுல் உடல் பதைபதைத்து, கதறி—(மேல் கூறிய சாஸ்திர நூல்களை) வாயினுல் பலதடவை திருப்பித் திருப்பி உயர்ந்த குரலில் கத்திக்கொண்டும், ஓதிக்கொண்டும், சொல்லிக்கொண்டும் அல்லது தன்னுடைய ஆபத்தை வெளியிட்டுக் கொள்வதுபோல் கதறிக் கொண்டும், தலையூடு—தலையிலுள்ள புத்தி உண்மையான மெய்யறிவு எதுவென்று நிச்சயம் செய்ய முடியாமல் கலங்கி அல்லது தன்னுடைய கிளைபோன்ற கொம்பினையுடைய தலையை தனக்கு ஆபத்து வராமலிருப்பதற்காக ஆட்டிக்கொண்டு, அலையே—கடலிலுள்ள அலையைப் போல் ஒன்றின் பின் ஒன்ருகப் பலவிதமான எண்ணங்களை சொல்லிக் கொண்டும், அல்லது அலையைப்போல் ஓயாமல் பாாப்பதையெல்லாம் கண்டு பயந்து மருண்டு அங்குமிங்குமாய் தலையை அசைத்துக் கொண்டும், படுமாறு—இருக்கும் வண்ணமாகவே காலத்தைக் கழித்துக் கொண்டும் அல்லது பயத்திலேயே இருக்கும் வண்ணமாய் இருந்துகொண்டும், அதுவாய்—மேல்கூறிய சாஸ்திர ஞானத்தை அனுபவமில்லாமல் பேசிக்கொண்டு வெறும் சாஸ்திரப்புழுவாய் இருக்கும் வண்ணம் அல்லது மேல் கூறிய மான் போல் இயமனுடைய

வருகையை எண்ணி எண்ணி உயிரினைக் கையில் பிடித்துக் கொண்டு ஒருவிதமான கதியுமில்லாமல் அலையைப்போல் ஓயாமல் அடித்துக்கொண்டும், விடவோ—ஆகிவிடவோ யான் கற்ற சாஸ்திரத்தின் பயன் அல்லது நான் அங்குமிங்கும் அலைந்து அல்லல்பட்டு வாழ்க்கையை கழிப்பதுதான் என் அரிதாகிய மானிட வாழ்வின் பயனோ. தெரியவில்லையே.

**தாத்பர்யம்:**

கந்தர் அநுபூதியில் இந்தப் பாடல் ஒரு விலை மதிக்கமுடியாத மாணிக்கம் ஆகும்.

வேடர்களுடைய தர்மம் வேட்டையாடுவது. ஜீவ ஹிம்ஸை செய்யாமல் வேட்டை ஆடமுடியாது. பொதுவாக வேடர்கள் கொடிய விலங்குகளிடமிருந்து தமக்குத் துன்பம் நேரிடாமலிருப்பதற்கும், தங்களுடைய ஆகாரத்திற்காகவும் வேட்டை ஆடுவார்கள். எனவே அவர்கள் ஜீவஹிம்ஸை செய்யும் பொழுது, தாம் ஜீவஹிம்ஸை செய்கிறோமே என்றஞானமில்லாதவர்கள். எனினும் அவர்கள் ஜீவஹிம்ஸை செய்தே வாழ்ந்து வருவதினால்

கொலையே புரி வேடர்

என்று சொன்னார். அத்தகைய வேடர் குலத்திற்கே ஒரு பெரிய தனிப் பெருமையை உண்டுபண்ணும் வண்ணம் வள்ளிதேவியானவள் வேடர்குலத்தில் மேன்மை பொருந்திய பெண் யானையைப்போல் வளர்ந்து வந்தாள். ஸகலவிதமான அழகுடனும் கூடிய வள்ளிதேவியோ வெனில், இயற்கையான மணமும் நிறைந்த கருங்கூந்தலும், திருவடிகளில் பொற்சிலம்பும், மெல்லிய பொன்போன்ற விரல்களில் நீலமணி, கருப்புமணி பதித்த பொன்மோதிரங்களும்,

வைரத்தால் இழைத்த கடகங்களை இருகைகளிலும், தொடிகளை தோள்களிலும், மார்பிலே மரகதம் பவளம், முத்துக்கள், கருமணி, பொன் முதலியனவைகளால் அலங்கரிக்கப்பட்ட மாலையும், வில்போன்ற புருவங்களினைக் கொண்ட கண்களில் மைதீட்டியும், திருவடிகளில் மருதாணி தீட்டியும், இருசெவிகளிலும் இரத்தின குண்டலங்களும், இருகன்னங்களில் மஞ்சளும், கழுத்தில் மஞ்சள் நிறத்தினைக்கொண்ட பரம பரிசுத்தமாகிய மங்களகரமான தாலியும் இவைகளுடன் விளங்கி வருகிறுள் அன்றோ.

இத்தகைய அலங்காரத்துடன் வள்ளிதேவி முருக பெருமானுக்கு அளவில்லாத வியப்பினையும் மகிழ்ச்சியினையும் உண்டுபண்ணி வருகிறுள். எனவே வள்ளி தேவியை பெருமையுடன் பெண் யானையாக வர்ணிக்கிறுர் அருணகிரிநாதர்.

மேலும் யானை என்றுல் ஐச்வர்யத்தை குறிக்கின்றது என்ற அர்த்தத்தில் வள்ளிதேவியானவள் பெண்களின் குலத்திற்கு ஒப்பற்றதொரு பெண்யானையாக விளங்கி வந்தரள்.

தவிர எப்படி இந்திரனுடைய யானையை ஐராவதமென்று சொல்லுகிறேமோ, அதுபோலவே அருணகிரிநாதரும் வள்ளிதேவியை

வேடர் குலபிடி

என்று வர்ணிக்கின்றுர். அபரிச்சின்னமான ஸௌந்தர்யமெல்லாம் திரண்டு வள்ளிதேவியாக விளங்குகிறது அன்றே! கம்பீரமாகவும் யானைபோல் அசைந்து அசைந்து நடக்கும் பராசக்தியாகிய வள்ளி தேவியின் அழகினை யாரால் வர்ணிக்க முடியும்.

மேலும் வேடர்களுக்கு யானையை அடக்குவது யென்பது இயல்பு அல்லவா? எவ்வளவு மதம் பிடித்த யானைகளையும் [illegible] அடக்கி விடுவார்கள் தங்களுடைய வீர்யத்தினுல். ஆனுல் பெண்யானையைப் போன்ற வள்ளிதேவியை கண்டு அவர்கள் நடு நடுங்கி அவ்வள்ளிதேவியின் மனம் சிறிதும் கோணுமல் இருக்கும் பொருட்டு கண்ணுக்கு கண்ணுயும், உயிருக்கு உயிராயும் அன்புடன் வளர்த்து வந்தார்கள். ப்ரும்மாவினுலும் கூட அவ்வள்ளீதேவியின் அழகின் வைபவத்தை வர்ணிக்க இயலுமோ.கற்பனைக்கு கடந்த ஸௌந்தர்யம்வள்ளியினிடத்தில்மங்களப்பொலிவுடன் திகழ்கின்றன.

தவிர வள்ளிதேவியானவள் வேடர் குலத்திற்கே தித்திக்கும் தெவிட்டாத தேனுகயிருந்து கொண்டு வேடர் குலத்திற்கே குலதெய்வமாய் விளங்குபவள். கருணை கூர்ந்த விழிகளும் கனிந்த நோக்கும் உடைய வள்ளிதேவியானவள் எல்லா உயிர்களுக்கும் தாயாக விளங்கிக்கொண்டு வள்ளியம்மை என்ற திவ்ய நாமத்துடன் போற்றிப் புகழப்படுவள் அன்ருே.

எனவே கொலையே புரிகின்ற வேடர்களோவெனில் தங்கள் குலத்திற்கே ஒரு பெரும் தனிப்பெருமையைத் தந்து அதனை உயரவைத்த வள்ளிதேவியை ஊண் உரக்கமில்லாமல் காத்துவந்தார்கள். இதனுல் அவர்களுக்கு வேட்டையாடுவதற்குகூட நேரமில்லாமல் போய்விட்டது. அதன் விளைவாக அவர்கள் செய்யும் ஜீவஹிம்ஸையானது நாளுக்கு நாள் குறைந்துவந்தன. தவிர

கொலையே புரி வேடர் குலம்

என்பதிலுள்ள வேடர்குலம் என்ற பதமானது தொனி அர்த்தத்திஞல் மிகவும் மேலான குலம் என்பதையும் தொனிக்க வைக்கின்றன.

ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் வேடர் குலத்தில் கண்ணப்பநாயனுராக அவதாரம் செய்து தன்னுடைய ஒரு கண்ணைப் பிடுங்கி அர்ப்பணம் செய்தது போதாது என்று இரண்டாவது கண்ணையும் பிடுங்கி சிவபெருமானின் கண்ணில் அப்பப்போகும் தருணத்தில் முக்தி அடைந்தார்.

சிவபெருமான் வேடனுக வந்து அர்ச்சுனனிடம் போர் செய்து, அவன் வீர்யத்தைக் கண்டு, மலைத்து பாசுபதாஸ்திரத்தை அவனுக்கு அளித்து அருளினுர்.

கருணுமூர்த்தியான ஸ்ரீ ராமபிரான், வால்மீகி மஹர்ஷியின் முன்னிலையில் வேடனுக வந்து, அம் மஹர்ஷியின் முன்னிலையிலேயே காமசுகத்தை அனுபவித்துக் கொண்டிருந்த இரண்டு புருக்களில், ஆண் புருவாகிய ஒன்றை அம்பினுல் கொன்று வீழ்த்தி வால்மீகி மஹர்ஷியின் கருணை எந்த அளவிலிருக்கின்றது என்பதினை சோதித்தார். அதுமட்டுமல்ல.

ஸ்ரீ முருகப்பெருமானே வேடர்குல அரசனுக ஸ்ரீமத் ராமயாணத்தில் குகனுகத் தோன்றி திருவிளையாடல் செய்தார் அன்றே! அதுமட்டுமல்ல, வேடனுக வந்து வள்ளிதேவியிடம் லீலாவினோதம் செய்யவும் செய்தார்.

எனவே இத்தகைய மேன்மையான எண்ணங்களில் நம்மைக் கொண்டு செல்லுகிறது 'வேடர் குலப் பிடி' என்ற பதமானது.

மேலும் வேடர் குலப்பிடி என்று வர்ணிக்கப்படும் வள்ளிதேவியின் அழகானது முருகப்பெருமானின் உள்ளத்தைக் கௌவின. அதன் விளைவாக முருகப் பெருமான் பெண் யானையினைப்போன்ற வள்ளி தேவியை அடைந்து, தன்னுடைய மார்பு அவ்வள்ளி தேவியினுடைய ஸ்தனங்களில் நன்ருக உரைந்து அமையும் வண்ணம் செய்து தனது பன்னிரு கண்களி ஞல் தேவியின் அழகை பானம் செய்து கொண்டே தன்னுடைய பன்னிரு கைகளினுல் வள்ளிதேவியை அணைத்து ஆலிங்கனம் செய்து மனம் மகிழ்ந்து தழுவிக்கொள்வார்.

அப்பொழுது வள்ளி தேவியோ வெனில் 'தன்னு டைய தவப்பயனுகிய ஷடாக்ஷரத்தின் பொருளாகிய முருகப்பெருமான் அன்ருே நம்மை அன்பினுல் தழுவு கிருர்' என்று எண்ணி எண்ணி உள்ளம் பூரித்து முருகப்பெருமானுடைய அழகின் ஒரு ஒப்பற்ற வைப வத்தை தன்னுடைய கண்களினுல் பானம் செய்து கொண்ட வண்ணமாய் முருகப்பெருமானுடைய கனிந்த பார்வையுடன் கூடிய பன்னிரு கண்களுடன் ஒன்ருேடொன்ருய் கலந்து முருகப்பெருமானைத் தன்னு டைய உருண்டு திரண்டு மிருதுவாய்வுள்ள இரு கரங் களினுலும் ஆருத காதலுடன் தழுவி மகிழ்வாள்.

இவ்விதம் முருகப்பெருமானை ஆலிங்கனம் செய்து மகிழ்கின்ற வள்ளி தேவியினுல் வர்ஷிக்கின்ற அமிர்தரஸத்திஞல் நினைக்கப்பட்டவராய் இருந்து கொண்டு சிறிதும் அசங்காமல் மலைபோல் திகழ்ந்து நிற்கின்ருர் முருகப்பெருமான்.

இத்தகைய இனிமையும் எழிலும் புகழும் நிறைந்த முருகனையும் வள்ளி தேவியையும் நினைந்து நெஞ்சு நெகிழ்ந்து அருணகிரியார் பாடலில்,

கொலையே புரி வேடர் குலப்பிடி
தோய் மலையே

என்கின்றார்.

அடுத்தபடியாக வர்ணிக்கின்றார் முருகனை,

மலைகூறிடு வாகையனே

என்று. அதாவது மலைகளினால் புகழப்படும் வெற்றி மாலையை உடையவனே என்று பொருள்.

ஹே முருகா! மலைகளுக்குத்தான் மலைபோன்ற உனது பெருமையும் மஹிமையும் தெரியும். குன்றெல்லாம் குமரன் என்று சொல்லுகிறார்களே. அதன் பொருள்தான் என்ன ஐயனே. நீ வாழும் மலைகளோ வெனில் புண்ணியங்களின் பெருமையையே எடுத்துக் காட்டுகின்றன.

ஹே குமரா! குன்றிலிருந்து, ஞானச் சுடராகிய சிவபெருமான் வீற்றிருக்கும் மஹாகைலாஸம் வரையில், குமரனாகிய நீயே திருவிளையாடல் செய்கின்றாய். ஏன்? இன்னும் செய்துகொண்டேதான் இருக்கின்றாய். கைலைமலையில் முனிவர்களும், பரமரிஷிகளும், அப்படியே எண்ணற்ற தேவர்களும் தவம் செய்து வருகின்றார்கள். தவத்தின் பயனே குன்றாகும். எல்லா உயிர்களும் உறையுமிடம் குன்றாகும். காரணமோ வெனில் குமரன் இருக்குமிடம் அல்லவா குன்றுகள்.

மேலும் ஸஞ்சீவினி முதலான பரம ஓஷதிகள் உறையுமிடம் மலையேயாகும். மலைக்க வைக்கிற அதிசயங்கள் நிறைந்த இடமே மலையாகும். அத்தகைய மலைகள் குமரனைப் புகழ்கின்றன. எவ்விதம் தெரியுமா? பெரும் வீரனாகவும், பெருங் கருணை

கொண்ட கொடையாளியாகவும், பேரழகனுகவும் முருகனைப் புகழ்கின்றன.

காரணம் என்ன? எண்ணற்ற கோடி அடியார்களின் திருவடிகளினுல் அலங்கரிக்கப்பட்டுள்ளது அல்லவா மலைகளும் குன்றுகளும். அநுபூதியைப் பாடிக்கொண்டே மலையேறுவார்கள் அடியார்கள். சிவபெருமாஞலும் பார்வதி தேவியாலும் ‘குமரன் எங்கே—குமரன் எங்கே’ என்று குன்றெல்லாம் தேடப் பட்டனவையல்லவா. குமரன் குடி கொண்டிருக்கும் இடமன்ரே குன்றுகள். குமரன் லீலைகள் செய்யும் இடமல்லவா குன்றுகள்.

எனவே வானளாவ ஓங்கி எழுகின்ற மலைகளெல்லாம் ஒன்று சேர்ந்து நம்முடைய கல்லாகிய நெஞ்சைப் பிழிந்து ‘‘உயிர் இருந்தும் உயிரற்றவர்களே, ஏன் கீழ்நோக்கியே பார்க்கின்றீர்கள். தலை நிமிர்ந்து வானைப் பாருங்கள். செம்பொன் என திகழும், செஞ் சுடர் வேலுடன் அங்கே திருவிளையாடல் செய்கிருன். அவன் பெருமையையே நாங்கள் சொல்லிச் சொல்லி மகிழ்கிரேம். எனவே நீங்களும் காவடியை எடுத்துக் கொண்டு மலையாகவும் குன்ருகவும் நிற்கும் எங்கள் மேல் முருகனின் புகழைச் சொல்லிக்கொண்டே ஏறி வாருங்கள். எங்களுடன் சேர்ந்து நீங்களும் வானளாவ ‘வேல் முருகா வேல் முருகா’ என்று நாவாரச் சொல்லிச் சொல்லிக் கதறுங்கள்’’ என்று மலைகள் குமரனின் வெற்றியைப் புகழ்ந்து போற்றுகின்றன.

ஞானத்திஞல் வெற்றி-வீரத்திஞல் வெற்றி—யோகத்திஞல் வெற்றி—தடுத்து ஆட்கொள்வதிஞல் வெற்றி-கருணையில் வெற்றி-அணைப்பதில் வெற்றி—

என்று தொட்டதெல்லாம் வெற்றியையே காண்கிறான் முருகன்.

ஆதலால் மன்றினுள் ஒரு காலைத் தூக்கி ஆடும் தெய்வம் பெரிதா? அல்லது குன்றின்மேல் ஒரு வேலைத் தூக்கி ஆடும் குமரனாகிய தெய்வம் பெரிதா? என்ற ஒரு விவாதம் உண்டாகுமேயாகில் அதற்கு என்ன பதில்? யார் இவ்வினாவிற்கு விடையளிக்க வல்லார்?

அருள் மலையாகிய அருணகிரிநாதரே இதற்கு இப்பாடலில்

மலை கூறிடு வாகையனே

என்பதினால் பதில் கூறி அருளுகிறார்.

அதாவது மலைகளுக்கெல்லாம் அரசனாகிய இமய மலையாகிய நான் சொல்லுகிறேன். தனக்கு நிகர் தானேயாகும் என்ற மாபெரும் சக்தியுடன் விளங்கி வரும் சிவபெருமானை நான் தாங்கி வந்தாலும் கூட அப்பரசிவத்தைக் காட்டிலும் மேலான தெய்வம் ஒன்று இருக்கிறது. அத்தகைய மஹிமையுள்ள தெய்வமோவெனில்

ஈசருடன் ஞானமொழி பேசி ஈசனுக்கு ஞானமொழி அருளும் ஞானப் பழமாகிய முருகப்பெருமானேயாவான். அம்முருகப் பெருமானே பர்வதராஜனாகிய என்னை விட்டு விட்டு இறங்கித் திரு ஆவினன் குடி என்று புகழப்படும் பழநிமலையில் ஆனா அமுதமாய் ஞானதண்டாயுதத்தை திருக் கரத்தில் தாங்கி நிற்கின்றார். அச்செல்வக் குமரனே வேலைத் தூக்கி

குன்றெல்லாம் விளையாடுகிருன். எனவே வேலைத் தூக்கி விளையாடும் குமரனே எல்லாத் தெய்வங்களிலும் உறைந்து எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான தெய்வமாக விளங்குகிருன் என்பதில் நானே ப்ரமாணமாக நிற்கிறேன்.

குமரனே மேலானதெய்வம் என்பதே எனது தாரக மந்திரமும் மூச்சுமாகும். எனவே எனக்கடங்கிய உலகிலுள்ள மலைகளும் குன்றுகளும் குமரனின் பெருமையையே புகழ்ந்து இடைவிடாமல் பாடிக் கொண்டிருக்கும். இது எண்ணற்ற உயிர்களாகிய உங்களுக்கு நான் உபதேசிக்கும் தாரக மந்திரம்.

ஆதலால் மேற்கூறிய பரம தத்துவத்தையே

மலை கூறிடு வாகையனே

என்பதினுல் போதிக்கின்ருர் அருணகிரிநாதர்.

ஆகையால் ஹே முருகா! நானுேவெனில் ஸகல கலைகளையும் தெரிந்து கொள்ள வேண்டுமே என்று மனம் கலங்கி பற்பல விதங்களில் திருப்பித் திருப்பி ஓதி மனப்பாடம் செய்தவன். எனினும் வேதசாஸ்திரங்களின் உண்மையான பொருளினை அறிந்தேன் இல்லை, இரவும் பகலும் இடைவிடாமல் சிந்தனையோடு கூடினவனுய் மனநிம்மதியற்று இருக்கிறேன். கர்மாவினுல் முக்தியா அல்லது ஞானத்தினுல் முக்தியா? என்பதை அறியாதவன். வேதமானது சில இடங்களில் ஜீவனும் ஈச்வரனும் பேத தர்மத்துடன் கூடியவர்கள் என்று

போதிக்கிறது. சில இடங்களில் ஈச்வரனும் ஜீவனும் ஒரே அகண்டமான வஸ்து என்று ஸாதிக்கின்றது. அவித்யை என்ருல் என்ன? வித்தையென்ருல் என்ன? என்று எண்ணி எண்ணி மனதிற்கு நிம்மதியில்லாமல் ஆகிவிட்டது.

ஹே முருகா! சாஸ்திரங்களும் வேதங்களும் ஸமுத்திரம் போல் இருக்கின்றன. சாஸ்திர ஞான மாகிய அலேகளினுல் என் புத்தியானது ஸதாகாலமும் அடிபட்ட வண்ணமாய் இருக்கின்றது. நான் கற்ற கலேகள் எல்லாம் வீணுகி விட்டனவே.

தவிர தர்க்கத்தினுல் உன்னே அறிய முயன்றேனே. அருளினுல் அடைய வேண்டிய உன்னே அறிவினுல் அடைய முயன்றேனே. என்னே என் அறியாமை.

ஹே முருகா! கல்லாத பேர்களே இவ்வுலகில் நல்லவர்கள். படித்தும் மெய்அறிவு இல்லாத என் கர்மத்தை எனவென்று நான் சொல்வேன். ஞானத் தினுல் முக்தியென்று ஒருவன் கூறினுல் உடனே அதற்கு மாருக கர்மாவினுலேயே முக்தி என்று ஸாதிக் கும் மூர்க்கன் அன்ருே நான். அதுபோலவே கர்மா வினுல் முக்தியென்ருல் ஞானத்தினுல்தான் முக்தி யென்று நவிலுவேன்.

ஹே முருகா! அதுபோலவே ஒவ்வொரு மொழி யிலும் கொஞ்சம் கொஞ்சம் தெரிந்து கொண்டு எல்லாம் தெரிந்தவன் போல் நடிப்பவன்நான். எத்தனே கலேகள் கற்ருல் என்ன? நான் என்ற அகந்தை ஒழிய வில்லேயே.காமக்ரோதம் என்னேவிட்டு நீங்கவில்லேயே.

முருகா, நான் கற்ற கல்வியெல்லாம் என்னேயே ஏமாற்றி விட்டதே. கேவலம் சாஸ்திர ஞானம் முக்தி

யினைத் தராது என்பதினை இப்பொழுதுதான் உணர்ந்தேன் ஐயனே.

இதனால்தான் ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கரரும்

பஜ கோவிந்தம் பஜகோவிந்தம்
பஜ கோவிந்தம் முடமதே

என்று உபதேசிக்கிறார். ஏன்? வாழ்க்கையின் முடிவுக் காலம் வரும்பொழுது சாஸ்திர ஞானம் காப்பாற்றாது. இறைவனின் நாமோச்சாரணமே இயமன் வரும் பொழுது நமக்குத் துணையாக இருக்கும் அன்றோ!

முருகா, 'கலை–கலை' என்று சொல்லிக்கொண்டே புத்தகப் புழுவாய் காலத்தைநயனம் செய்தேனே தவிர கலையில் உன்னைப் பார்க்கவில்லை அப்பனே. சஞ்சலம் அற்ற மனதோடும் பக்தியோடும் உன்னை தியானம் செய்யவில்லை முருகா. ஆனால் நானோவெனில் ஸதா காலமும் வ்யாகரணம் தர்க்கம் முதலிய சர்ச்சையில் ஈடு பட்டு சாஸ்திரஞானமே புருஷார்த்தமென்று எண்ணி உன்னை ஸ்மரணம் செய்யாமல் இருந்து விட்டேன். வேல் முருகா–வேல் முருகா என்று உன்னை வாயாற துதிக்கவில்லையே.

இதனால்தான் ஸ்ரீ ஆதி சங்கரர் சிவானந்த லஹரியில்

வ்ருதா கண்ட க்ஷோபம் வஹஸி
தரஸா தர்க்க வசஸா
பதாம்போஜம் சம்போர்பஜ
பரம ஸௌக்யம் வ்ரஜ ஸுதீ :

என்று சொல்கிறார். அதாவது ஹேமனமே நான் சொல்வதைக்கேள். வீணாகத் தர்க்கத்தில் காலத்தைக் கழிக்கிறாய்! சிவனுடைய திருவடிகளை சரணமடைவாய்

மற்றவை யாவும் கடைசி காலத்தில் பயனற்றவை யாகவே ஆகிவிடும் என்கிருர்கள்.

ஹே முருகா, நான் சாஸ்திரப் புழுவாய் ஆகி விட்டேனே தவிர நான் வேதப் பொருளாகிய உன்னைத் துதித்தேன் இல்லை. கல்வியின் பயன் உன்னை அடை வதற்காக அல்லவா? அது முற்றிலும் என்னிடத்தில் பொய்யாகிவிட்டது அன்ரோ.

எனவே கலைகளைக் கற்பவன் உன்னைக் கலையில் பார்ப்பதில்லை அப்பனே. அதனுல்தான் அவன் கலை யின் பயனை அடைவதில்லை. இதனைத் திருவாசகத்தில்

கல்வி என்னும் பல் கடல் பிழைத்தும்

என்று சொல்கின்ருர் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள். கடத்தற்கரியது கடலாகும். கல்வியாகிய கடலை மனி தன் கடப்பதில்லை. ஏன்? இறைவனைக் காண்கிருன் இல்லை மனிதன் தான் கற்கும் கல்வியில்.

எனவே ஹே முருகா! பற்பல கலைகளைப் படித்தும் நான் அக்கலைகளினுல் பயனற்றவனுகவே இருக்கின் றேன். அதுமட்டுமல்ல, வேறுவிதமாகவும் கஷ்டப் பட்டு வருகிறேன். அதனையும் சொல்கிறேன் கேள் அப்பனே. உன்னிடம் சொல்லாமல் நான் என்குறையை யாரிடம் புகலுவேன்.

ஹே முருகா, கொலை புரியும் வேடர்களைக் கண்ட வுடன் காட்டிலே வசித்துவரும் ஸாதுவான கலைமான் கள் மனம் பதைபதைத்து தன்னுடைய உயிருக்கு ஆபத்து நேரிடுமோ வென்று கதறிக்கொண்டு அக் காட்டிலேயே அங்கும் இங்குமாய் ஒடிக்கொண்டும் தன்னுடைய தலையை ஆட்டிக்கொண்டும் ஒடும் பொழுது அம்மான்களுடைய கிளைகள் போன்றகொம்பு

கள் செடிகளிலும் மரக்கிளைகளிலும் சிக்கிக்கொண்டு தப்பித்து ஓட முடியாமல் முடிவில் வேடர்களுடைய அம்பிற்கு இரையாகும்.

அதுபோலவே ஹே முருகா! இந்த ஸம்ஸாரமாகிய பிறவிக்கடலிலே உழலுகின்ற நான் வறுமையினாலும் அப்படியே வியாதியினாலும் துன்பத்தினையடைந்து மன நிம்மதியில்லாமல் உயிரினைக் கையில் பிடித்துக் கொண்டு

'தலையூடு அலையே படுமாறு'

அதாவது என்னுடைய தலையில் ப்ரும்மாவினால் எழுதப்பட்டது என்று சொல்லப்படும் விதியானது என்னை இந்த நிலையற்ற உலக வாழ்க்கையில் ஈடுபடும் படி செய்து அங்குமிங்குமாய் அலைந்து அல்லல் படுத்துகின்றது. இதனால் நான் ஒரு மானினைப்போல் கதியற்றவனாக ஆகிவிட்டேன் அப்பனே.

வெற்றி மாலையை அணிந்து விளங்கும் ஹேமுருகா நினது பெருமையையும் சக்தியினையும் மலைகள் வானளாவ புகழுகின்றனவே. அதிலிருந்து உனது சக்தியை நான் நன்றாகத் தெரிந்து கொண்டேன்.

அஸுரர்களை வேரொடு நாசம்செய்த உனக்கு என்னுடைய இன்னல்களைப் போக்கடிப்பது ஒரு பெரிய காரியமா அப்பனே. அசுரர்களை அழிக்கின்ற உனது பன்னிரு கைகளே வள்ளி தேவியையும் தழுவுகின்றது. அடிக்கும் நினது கைகளே அடியார்களை அணைக்கும் கைகளாகவும் விளங்குகிறது.

எனவே மக்களின் உள்ளத்தில் உணர்ச்சியை எழுப்பி பேரின்பத்தையே அளிக்கக்கூடியது கலையாகும்! கலைகளுக்கு அப்பால் நிற்கும்முருகப்பெருமானை

நாம் மெய்யறிவினுல் கலையிலேயே காண்போமாகில் அக்கலையானது அந்நிலையில் முக்தியையே அளிக்கின் றது. இதனை அறியாமல் கலையே முடிவு என்று தலை தடுமாறி அல்லல்படுகிருர்கள் மனிதர்கள்.

ஹே முருகா! தெய்வப் புலவராகிய சேக்கிழார் சுவாமிகள் தான் கற்ற கலையின் பயனுக, தெய்வீகம் பொருந்திய பெரிய புராணத்தை தில்லைக் கூத்தனின் முன்னிலையில் அருளி தில்லைக் கூத்தனுடைய ஜோதி யிலேயே ஒன்ருேருென்ருய் கலந்தார் அன்ருே. இன்றும் சேக்கிழார் சுவாமிகள் பெரிய புராணத்தை தில்லையில் நடனமிடும் நடராஜப் பெருமானின் திருவடியின் கீழ் நின்று பாடிக்கொண்டே இருக்கிருர்.

ஹே குமரா என்னையும் ஒரு பொருளாகக்கொண்டு ஆட்கொள்வாய் அப்பனே. இதுவே என்னுடைய இறுதி ஆசை முருகா.

எனவே மானிடப் பிறவியை அடைந்த நாம் எல் லோரும் வெறும் சாஸ்திர ஞானத்தை மட்டும் அறிந்த வர்களாக இருந்தால் போதாது. ஒவ்வொரு கலையி லும் இறைவனின் திருவருள் எவ்விதம் நிலவி நிற் கிறது என்பதைக் காணவேண்டும். இவ்விதம் இறை வனின் திருவருளை நாம் ஒவ்வொரு கலையிலும் காண் கிருேம் என்பதே நாம் ஒவ்வொரு கலையிலும் மெய்ப் பொருளைக் காண்கிருேம் என்பதாகும். இதனுல்தான் திருவள்ளுவர்

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும்
அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு

என்று உபதேசிக்கிருர். இதன் உண்மைப்பொருள்தான் என்ன? ஹே உலகத்தினர்களே! நீங்கள் கற்கும் கலை

எவ்வித கலையாகயிருந்தாலும் சரி. கற்கும் கலைகளாகவே ஆய்விடாதீர்கள். கற்கும் கலைகள் எத்தனையோ விதங்களில் பொருள்களை உணர்த்தலாம், ஒவ்வொரு பொருள்களையும் தெரிந்துகொள்வதற்கு உங்கள் வாழ்நாளை கழித்து விடாதீர்கள். கற்கும் கலையே வாழ்க்கையின் பயனாக கருதி வாழ்நாளை வீணாக்கி விடாதீர்கள். கற்கும் கலையில் இறைவனைப் பாருங்கள். கலையின் பொருளில் மெய்ப்பொருள் மிளிர்கின்றதைப்பாருங்கள் அதுதான் அறிவு. அறிவினால் கற்கும் கலையில் நாம் இறைவனைப் பார்த்தால் இறைவனின் திருவருள் தானாகவே நம்மேல் வந்துவிழும். இந்நிலையில் நாம் இறைவனின் பெருமையை நன்கு உணர்ந்து உலகில் காணப்படும் கலைகளனைத்தையும் இறைவனின் வடிவமாகவே கண்டு பேரின்பத்தை அனுபவிப்போமென்பதில் சிறிதும் ஐயமில்லை.



# கந்தன் கருணையினுல் மாபெரும் துன்ப வாழ்வை அழித்தல்

## 33



சிந்தாகுல இல்லொடு செல்வமெனும்
விந்தாடவி யென்று விடப் பெறுவேன்
மந்தாகினி தந்த வரோ தயனே
கந்தா முருகா கருணுகரனே.

### பதவுரை

மந்தாகினி—கங்கா தேவியினுல், தந்த—சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து வெளிவந்த ஆறு நெருப்புப் பொறிகளையும் தலைமேற்கொண்டு உலகத்தின் நன்மையைக் கருதி சரவணப்பொய்கையில்விட்ட, வரோதயனே—(நீயோவெனில் சிவபெருமானுல் தேவர்களுக்கு அளிக்கப்பட்ட) வரத்தினை யொட்டி தோன்றிய மூர்த்தியே, கந்தா—கந்த பெருமானே அதாவது பேதங்களையெல்லாம் போக்கடித்து அபேதமாய் ஓரே பரம்பொருளாய் விளங்குபவனே, முருகா—என்றும்

மாருத தன்மையுடன் கூடிய இளமை-அழகு-மணம்-தெய் வீகத்தன்மை இவைகளுடன் விளங்கும் தாரகமந்திர ரூபனே, கருணாகரனே—பெருங்கருணை வடிவமாய் எல்லாவற்றிலும் தோன்றுபவனே, சிந்தாகுலம்—சிந்தையின் துயரங்களுக்கு இடமான, இல்லொடு—மனைவி மக்கள் முதலியவர்களுடன், செல்வம் எனும்—செல்வம் என்று சொல்லப்படும், விந்தாடவி—வியப்புக்கு உரிய காட்டிலிருந்து, என்று—எந்த நாள் (நாளைக் குறிப்பாகச் சொல்லமுடியாமல் தவித்துக் கொண்டு) விடப் பெறுவேன்—நான் விட்டகன்று உன் திரு வடியை அடைவேனோ தெரியவில்லையே.

**தாத்பர்யம்**

முருகனின் கருணையே கருணை என்ற சொல்லிற்கு இருப்பிடமாகும். ஊனினை உருக்கி ஞானஒளிதனை உள்ளத்தில் பெருக்கி ஒப்பில்லாத ஆனந்தக் கடலில் உயிர்களை முழுகச் செய்கின்றன குமரனின் கருணை. குமரனோவெனில் ஜீவகோடிகளின் வாழ்வில் கலந்து ஜீவகோடிகளின் இன்னல்களையும் கஷ்டங்களையும் தன்னுடையது போலவே எண்ணி ஜீவகோடிகளின் வாழ்வில் கலந்து ஜீவகோடிகளின் துயரங்களை தாங்கி வருகிறான்.

குமரனின் பெருங் கருணையை சொல்லும் பொழுது அருணகிரிநாதர்

மந்தாகினி தந்த வரோதயனே

என்று பாடுகின்றார். எதற்காக? நமக்கெல்லாம் சிவ பெருமானின் கருணையை நினைவூட்டுவதற்காக அன்றோ! கருணையைப் பொழியும் முகம் அல்லவா காமேச்வரனின் முகம். சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து கருணை ஆறு செஞ்சுடர்களாக வெளி வந்தது. எதற்காக? சூரபத்மாஸுரனின் ஆணவத்தை

சுட்டெரித்து ஆட்கொள்வதற்கு! அக்கருணை ஆறு முகங்களுடனும் மங்காத ஞானப் பொலிவுடனும் தோன்றின. எங்கே அக்கருணை தோன்றியது? சரவணப் பொய்கையில்? சரவணப் பொய்கையில் கருணையைத் தோன்ற வைத்தவள் மந்தாகினியாகிய கங்காதேவியே.

கங்காதேவியின் கருணையானது கருணைக்கடலான சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து வெளித் தோன்றிய ஆறு செஞ்சுடர் பொறிகளைத் தன்னுடைய தலையால் தாங்கி அதனை சரவணப் பொய்கையில் விட்டன.

அங்கு அந்த சரவணப் பொய்கையிலேயே உலக முய்யத் திரு அவதாரம் செய்தார் முருகப்பெருமான்.

தேவர்களுக்கு சிவபெருமானால் அளிக்கப்பட்ட வரத்தினை தேவர்களின் துயரங்கள் நீங்கும்படி முருகப் பெருமான் தோன்றினார். எவ்விதம் தோன்றினார்?

ஆறு ஞானப்பழங்களாய் தோன்றினார். ஆறு ஞானப் பழங்களையும் ஒரே ஞானப் பழமாய் சேர்த்து எடுத்தாள் அன்னை பராசக்தியாகிய பார்வதிதேவி.

அப்போது உமையின் கருணை, பெருக்கினை எடுத்தது குமரனிடத்தில், குமரனின் அழகு உமையின் உள்ளத்தை அள்ளியது. உடனே உமையானவள் ஆறு ஞானக் குழந்தைகளையும் சேர்த்துயெடுத்து ஒருமேனியாக்கினாள். ஏன்? ஞானத்தில் பேதத்தை வேதம் போதிக்கவில்லை. பேதமிருக்கும் இடத்தில் கருணை தோன்றாது. அப்படி தோன்றும் கருணையும் உண்மையில் கருணையாகாது. எனவே பேதத்தில் ஒற்றுமை

யைப்பார், அதுவே ஞானம். ஆறுமுகத்திற்கும் ஆதாரமாய் ஒரு மேனிதான் இருக்கிறது.

எண்ணற்ற கோடி முகங்களை ஒருமுகப்படுத்தவே ஆறுமுகன் தோன்றினன் அன்றோ! இதுவே வேதத்தின் பொருள்.

கருணைக்கு ஒருமுகம்-கருணைக்கு ஒரு தெய்வம் -திசையிற்கெல்லாம் ஒரு தெய்வம்; அத்தெய்வமே முருகப்பெருமானுவான். அம்முருகப்பெருமானையே கந்தபிரான் என்று புகழ்கின்றது கந்தபுராணம்:

தாயென வாரல் போந்து
தனங்கொள் பாலருத்தலாலே-
ஏயதோர் கார்த்திகேய னென்
றொரு தொல்பேர் பெற்றான்,
சேயவன் வடிவம் ஆறுந்திரட்டி நீ
ஒன்றாய்ச் செய்தாய்-
ஆயதனலே கந்த னுமெனும்
நாமம் பெற்றான்.

கருணையை உடையவன் கந்தன். கருணையினல் உமையானவள் ஆறு குழந்தைகளாய் இருந்ததைப் பார்த்து ஒன்றையும் விட மனமில்லாதவளாய் தாய்ப் பாசத்தினல் கட்டப்பட்டு ஆறு குழந்தைகளையும் ஆறாத காதலுடன் ஒன்றாய் சேர்த்து திரட்டி மார்பினுடன் அணைத்துக் கொண்டு தன்னுடைய தேன்மொழியினல் 'கந்தா' என்று அழைத்தாள். இதன் தத்வம் தான் என்ன?

ஹே கந்தா நீ கருணையின் வடிவமே யாவாய். சிவ பெருமானின் கருணையே நீ. என்னுடைய கருணையெல்

லாம் நீயே ஆவாய் அப்பனே. எனவே உன்னை உல கனைத்தும் ஒன்று சேர்ந்து கொண்டு ஒரே குரலில் ஒரே மனதுடன்

கந்தா, முருகா, கருணாகரனே

என்று புகழட்டும். கங்காதேவியினால் அளிக்கப்பட்ட கருணையின்பெருக்கு நீ—என்று உன்னைப்போற்றட்டும். சிவபெருமானினால் தேவர்களுக்கு அளிக்கப்பட்ட வரத்தை ஸத்யமாய் நிலைநாட்டுவதற்காக வந்த கந்த பெருமானே நீ ஆவாய் என்று உயிர்கள் உன்னை இடைவிடாமல் துதிக்கட்டும்.

'கந்தா' உயிர் யாவற்றிற்கும் நீயே அடைக்கல மாக இருக்கும் தனித்தெய்வமாய் விளங்குகின்றாய்.

ஆரவாரமின்றி சில இடங்களில் மெல்ல மெல்லச் செல்லும் மந்தாகினியாகிய கங்கையைப்போல் நீயும் உன்னுடைய அடியார்களிடத்தில் ஒருவிதமான ஆர வாரமுமின்றி அடியார்கள் அதிசயிக்கும் வண்ணம் அவர்களுடைய யோக க்ஷேமங்களை என்றென்றும் வகித்து வருவாய் அப்பனே.

முருகா, உன்னை 'கந்தா' என்று சொல்லும்போது என்னுடைய வாய் இனிக்கிறது. உள்ளம் மகிழ்கிறது. கந்தா உன்னைப் பற்றிப் பேசுவதைக் கேட்கையில் என்னுடைய இரு செவிகளும் இனிக்கிறது.

இவ்விதம் கந்தனின் பெருமையும் கருணையும் திகழ்கின்றன.

கருணைக்கு இருப்பிடம் முருகப்பெருமான் அன்றோ. உலகில் உள்ள உயிர்கள் யாவும் கந்தனின் கருணையையே நாடுகின்றன. அக்கருணையை அடை யவே ஜீவகோடிகள் தேடி அலைகின்றன.

முருகனின் கருணையே இம்மையிலும் இன்பம் தந்து, மறுமையிலும் பேரின்பத்தை அளிக்கின்றது. மேலும் தோற்றத்திற்கு அழிவு உண்டு என்னும் வேத மானது கந்தனின் கருணையிற்கு அழிவை கூறவில்லை. காரணமொவெனில் கருணையின் வடிவமே கந்தபெரு மான் ஆவான். கந்தன் என்று புகழப்படும் முருகப் பெருமான் உயிர்களின் மேல் காட்டுகின்ற அன்பு, கருணையாக மலர்ந்து என்றென்றும் அழியா இன்பத் தினையே ஊட்டும்.

எனவே ஒளி தோன்றினுல் இருள் அழிவதைப் போல, கந்தனின் கருணை தோன்றினுல் எல்லாத் துன் பங்களும் அழிந்து போய், வாழ்க்கையானது என்றும் வாடாமல் செழித்து வளம்பெற்று வளர்ந்து வரும். கந்தன் கருணையைப்பெறுவதற்கு நமக்கு உயிர் களிடத்தில் அன்பும் கருணையும் இயல்பாக இருக்க வேண்டும். ஆகவே கருணை கொண்ட நெஞ்சம் முடை யவர்கள் ஸம்ஸாரமாகிய உலக வாழ்க்கையில் பற்று தலற்றவர்களாகவே இருப்பார்கள். கருணையுள்ளவர் கள் யாருக்கும் அடிமையில்லை. அவர்களிடத்தில் கந்தன் கருணை குடி கொண்டிருப்பதால் அவர்கள் நரகத்தில் உழன்று இன்னல் படுவதில்லை. ஆதலால் எந்தநாளும் அவர்களிடத்தில் இன்பமே நிலவி நிற்கும் அன்ரே.

எனவே முருகனே கருணை-கருணையே முருகன். கந்தனின் கருணை இல்லாதவர்களுக்கு இவ்வுலக இன் பமும் இல்லை;பேரின்பமும் இல்லை. இதனை உறுதியாக கூறுகின்ருர் திருவள்ளுவர்.

அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள்
இல்லார்க்கு இவ்வுலகம் இல்லாகி யாங்கு

எனவே கருணை கனியும்போது அதனை மஹான்கள் அருள் என்று சொல்லுகின்றார்கள்.

இதனால்தான் அருணகிரியார்

மந்தாகினி தந்த வரோதயனே
கந்தா முருகா கருணாகரனே

என்பதினால் இறைவனின் பெருங்கருணையின் பெருமையை நாமெல்லாம் இடைவிடாமல் எண்ணி எண்ணி மகிழவேண்டுமென்பதை நினைவூட்டிக் கொண்டிருக்கிறார். என்னே அருணகிரிநாதரின் கருணை!

ஆதலால் கருணையே தவத்திலிருக்கும் எல்லாம் வல்ல சிவபெருமானிடம் உமாதேவியை துணிந்து செல்லவைத்தது. கருணையே சிவபெருமானை அன்புடன் உமாதேவியை அங்கீகரிக்க வைத்தது. கருணை வடிவமான சிவனும் கருணை வடிவமான சக்தியும் கருணையினால்ஒன்றாகியது. கருணையேசிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு செஞ்சுடர்களாகவெளி வந்தது. கருணையே வெளிவந்த ஆறு செஞ்சுடர்களை ஆறு கருணா வடிவங்களாக ஆக்கியது. கருணையே மந்தாகினியாகிய கங்காதேவியை, அவ்வாறு கருணா வடிவங்களாகிய செங்சுடர்களைத் தலைமேல் தாங்கி சரவணப்பொய்கையில்இட வைத்தது. கருணையே அவ்வாறு செஞ்சுடர்களை ஆறுகுழந்தைகளாக மாற்றியது. கருணையே ஆறு மங்கையர்களை அவ் ஆறு குழந்தைகளுக்கும் ஸ்தன்ய பானம் பண்ண வைத்தது. கருணையே உமாதேவியை அவ் ஆறு குழந்தைகளையும் ஒன்றாகச் சேர்த்து கந்தபெருமானாகச் செய்தது. கருணையே பேதமாக இருந்த ஆறு தத்துவங்களையும் அபேதமான அகண்ட ப்ரம்மமாகச் செய்தது. அவ்

வகண்ட பரம்பொருளாகிய கந்தபெருமான் கருணை யினால், கருணை வடிவான உமாதேவியின் கருணையை எல்லாம் திரட்டி ஒரே கருணையாகச் செய்து அதனை உமாதேவியின் ஸ்தன்யங்களிலிருந்து வெளிவரும் ஞானப்பாலாக மாற்றி உண்டு களித்து மகிழ்ந்தார்.

எனவே ஆதியிலும் கருணை. முடிவிலும் கருணை- கருணைக்கு ஆதியுமில்லை அந்தமுமில்லை. அம்மாபெரும் கருணை வடிவமே முருகப்பெருமானவார். முருகனின் திருஅவதாரம் முருகனின் திருவிளையாடலே யாகும்.

ஆதலால் கருணையே முருகனவான், முருகனே கருணையாகும். எனவே முருகன் என்பதில் உள்ளடங் கியது கருணையே யாகும். பொருளோவெனில் இளமை யில் கருணை-அழகில் கருணை-மணத்தில் கருணை-தெய் வீகத்தில் கருணை—அதுபோலவே கருணையில் இளமை- கருணையில் அழகு-கருணையில் மணம்-கருணையில் தெய்வம் என திகழ்கின்றது உண்மை.

கருணையே எங்கும் நிறைந்தது. கருணையேவரம்பு யில்லாதது. கருணை ஒன்று மட்டுமே என்றும் அழியா மல் உள்ளது. வேதாந்தத்தின் உட்பொருள்தான் கருணை. கருணையைப் பற்றிப் பேச வல்லார் யார்? கருணையிற்கு வரம்பு போட இயலுமோ? வரம்பிற்கு உட்பட்டால் அதுதான் கருணை ஆகுமா?

ஆதலால் கருணையே எழுத்தாயும்-சொல்லாயும்- பாட்டாயும்—சப்தமாயும் - அருளாயும் - தெய்வங்களா யும்-ஞானமாயும்-இன்பமாயும்-பரம்பொருளாயும்-ஆட் கொள்ளும் சக்தியாயும்-அப்படியே கற்பனைக்கு கடந்த எண்ணங்களுக்கு இருப்பிடமாயும் விளங்குகிறது.

ஆகையினால் கருணையை விட்டு தெய்வத்தைப் பிரிக்கவோ, அல்லது தெய்வத்தை விட்டுக் கருணையை பிரிக்கவோ முடியாது. முருகனுடைய அவதாரமே கருணையினால் தோன்றியது. கருணையை வைத்துக் கொண்டுதான் உலகனைத்தையும் ஆள்கிறான் முருகன். முருகன் கருணாகரனாக இல்லாதபோனால் ஜீவகோடிகள் வாழமுடியாது. கருணையே நமக்கெல்லாம் மேலான ஆற்றலை அளிக்கின்றது. எனவே முருகப்பெருமானை

மந்தாகினி தந்த வரோதயனே
கந்தா முருகா கருணாகரனே

என்று சொல்லும்பொழுது மேல்கூறிய பெருமைகளைக் கொண்ட எண்ணங்களெல்லாம் நம்முள்ளத்தில் செங் கதிர் சூரியனைப்போல் எழுகின்றன. எண்ணங்களுக்கு சக்தி இருப்பதால்தான் நாம் ஸதாகாலமும் இறைவனை எண்ணிக் கொண்டிருக்கிறோம். இதனால்தான் கவிகளும் ஞானிகளும், யோகிகளும், சித்தர்களும் அடியார்களும்

எண்ணமெல்லாம் பழநியிலே

என்று நாவார பாடி மகிழ்கின்றார்கள் அன்றோ!

எனவே எல்லையில்லாத கருணைக் கடவுளே, உன்னிடத்தில் நான் வேண்டுவது யாதெனில்

சிந்தா குல இல்லொடு செல்வமெனும்
விந்தாடவியென்று விடப்பெறுவேன்

என்பதேயாகும்.

ஹே முருகா! நான் ஸதா காலமும் சிந்தனையினால் மனம் கலங்கினவனாகவே இருக்கிறேன். மனைவி மக்கள் அப்படியே சுற்றத்தார், வீடு, வாசல், செல்வம் முதலியவைகளினால் துன்பத்தினையே அடைகிறேன்.

செல்வமெனும் விந்தையாகிய பெருங்காட்டிலிருந்து வெளிவரமுடியாமல் அல்லல்பட்டு வருகிறேன் ஐயனே.

என்னுடைய மனைவி யார்? என்னுடைய புத்திரன் யார்? செல்வம் என்பது எங்கிருந்து வந்தது. இவைகளின் மேல் எனக்கு ஏன் பற்றுதல் ஏற்படுகிறது? நான் யார்? நான் எங்கிருந்து வந்தேன். இந்த வழியில் என் சிந்தனையானது போகிறது இல்லை ஐயனே.

மேல் கூறியதிற்கு மாறாக உலகவாழ்க்கையிலேயே என்னுடைய சிந்தனையானது நிலவி நிற்கிறது அப்பனே.

ஆதலால் நிலையற்ற நிலையில் நமது வாழ்நாளானது நகர்ந்துகொண்டே இருக்கின்றது. மனைவி மக்கள் செல்வம் இவைகளையே வாழ்க்கையின் குறிக்கோளாக நினைத்து மனிதர்கள் மகிழ்கின்றார்கள். ஆனால் அனைத்தையும் முடிவில் துன்பத்திற்கு இருப்பிடமாகவே காண்கிறார்கள்.

உலகில் வறுமையினால் கஷ்டப்படுகிறவனும், செல்வத்தினால் நிறைந்திருப்பவனும் துன்பத்தையே அனுபவிக்கிறான். ஏன்? மனைவி மக்களிடத்தில் பாசமும், செல்வத்தினிடத்தில் பேராசையும் கொள்வதினால் அல்லவா?

தவிர மனைவி மக்களிடத்திலுள்ள பாசமானது இயமனுடைய பாசத்தைவிடக் கொடியது. பாசமானது நல்வாழ்வை பாழ்வாழ்வாக செய்கின்றது.என்னுடைய மனைவி மக்கள் நன்றாக இருக்கவேண்டும். அவர்களுடைய மனம் கோணாமல் நாம் அவர்களுக்கு எல்லா சுகபோகங்களையும் கொடுக்க வேண்டும். அவர்களுடைய வருங்கால சுகத்திற்காக அவர்களுக்கு

பெரும் செல்வத்தை சேர்த்து வைக்க வேண்டும் என்று பலவாறு உண்டாகிற சிந்தனையினால் மனிதர்கள் துன்பத்தினையே அடைகிறார்கள், இதனால் செல்வத்தை தவறான முறையில் அடைகிறார்கள்.

உண்மையில் செல்வமானது ஒரு வியப்புக்குரிய பெருங்காடுபோல் விளங்குகின்றது அன்றோ. இச் செல்வத்தையே இப்பாடலில்

செல்வமெனும் விந்தாடவி *

என்று சொல்லப்படுகிறது, அதாவது 'விந்தை-அடவி' எனப்பிரித்து விசித்திரமானதும் வியக்கத்தக்கதும் ஆகிய செல்வமெனும் பெருங்காடு என்று பொருள். என்வே செல்வமானது விசித்திரமான ஒரு பெருங் காடே யாகும்.

ஆதலால் விசித்திரமான காட்டில் உள்ளவையெல் லாம் விந்தையோடு கூடினவைகளே. பயங்கரமான விலங்குகளும் பயங்கரமான ஸர்பங்களும் எண்ணற்ற விஷ ஜந்துக்களுக்கும் இருப்பிடம் காடேயாகும். இக் கொடிய காட்டினிற்குள் ஒருதரம் சென்று விட்டால் மீண்டும் வெளிவர வழிதெரியாமல் அக்காட்டிற்குள்ளே அலைந்து திரிந்து முடிவில் பெரும் துன்பங்களிற் குள்ளாகி அக்காட்டிலேயே உயிரினை விடுகிறான் அன்றோ.

அதுபோலவே மனைவி மக்கள் சுற்றத்தார்கள் என்னும் பாசத்தினால் கட்டப்பட்டு செல்வமெனும்

---

* விந்தா அடவி—விந்திய மலையைச் சார்ந்த காட்டி னின்றும் என்ற அர்த்தம் இந்த இடத்தில் பொருத்த மில்லா தது. விந்தியமலை காட்டை இங்கு உவமையாக கூறவில்லை.

காட்டிற்குள் நுழைகிறுன் மனிதன். ஆனுல் முடிவில் துன்பத்தையே அடைந்து எல்லையில்லாத சிந்தனைக்கு உள்ளாகிறுன்.

சிந்தையென்ற மனக்கவலைக்கு மேலான சத்ருவே இல்லை. சிந்தனைக்கு மனிதன் உள்ளாகி விட்டானே யாகில் முடிவில் அச்சிந்தையானது அவனுடைய உயிரையே அபகரித்து விடும்.

எனவே கவலையோடு கூடியமனமும், செல்வத்தில் பேராசையும் கொண்டவனுவெனில் ஒரு பெருங் காட்டிற்குள் அகப்பட்டவனே ஆவான். செல்வத்தினை வைத்துக்கொண்டு மனிதன் பாபகர்மாவையே செய்கிறுன். ஏழைகளுக்குத் தானம் தர்மம் செய்வதில்லை. செல்வத்தை தேடி புதைத்து வைக்கிறுர்கள். புதைத்து வைத்த செல்வம் கடைசி தருவாயில் கூட வரப் போகின்றதா?

காதற்ற ஊசியும் வாராது காண்
கடைவழிக்கே

என்று பட்டினத்தடிகளுக்கு சிவபெருமான் உபதேசித்த அருள் மொழியை சிந்தித்துப் பாருங்கள். மனிதனுவெனில் செல்வம் செல்வம் என்று சொல்லிக் கொண்டே அதைத்தேடி அலைகிறுன். அடைந்த செல்வம் கொஞ்சம் குறைந்து விட்டால் கவலைக்கு உள்ளாகிறுன். அதன் விளைவாக தர்ம நெறியிலிருந்து தவறுகிறுன் அன்றே. செல்வம் படைத்தவர்கள் கவலைக்கு உள்ளாவார்களே ஆகில் அத்துடன் அவர்களின் வாழ்க்கையும் முடிவடைகிறது. எதைப்போல்? காட்டுத் தீயினுல் அழியப்பட்ட காட்டினைப்போல். காடானது தீயினுல் அழியும்போது காட்டிலுள்ளவைகளெல்லாம் எரிந்து சாம்பலாகிவிடும்.

அதுபோலவே மனைவி மக்கள்-சுற்றத்தார்-வீடு-வாசல்-முதலியவைகளைக் கொண்ட ஒருவனுடைய செல்வமானது நாளுக்கு நாள் குறையுமே யாகில், அச் செல்வமாகிய பெருங்காட்டிற்குள் நிலையற்ற வாழ்வை நிலையுள்ளதாக எண்ணிவந்த அவன் அச்செல்வமாகிய காடு அழியும்போது அத்துடன் தானும் மனைவி மக்களுடன் மாய்ந்து போவான்.

இதையே ஸ்ரீ ஆதி சங்கரரும்

அர்த்த மனர்த்தம் பாவய நித்யம்
நாஸ்தி தத ; ஸுகலேச : ஸத்யம்

என்று உபதேசித்தருளுகிறார்.

இதன்பொருளோவெனில், மனிதனே! செல்வத்தை பிரயோஜனமற்றதாகவே எப்பொழுதும எண்ணிக் கொள். அந்தச் செல்வத்தினால் உண்மையில் சிறிதும் சுகமில்லை என்பதேயாகும்.

செல்வத்தை வைத்துக் கொண்டு ஒவ்வொருவனும் புண்ணியத்தை சம்பாதிக்க வேண்டும். அறிவில்லாதவன் பாபத்தையே செய்வான். உலகில் பொதுவாகவே செல்வத்தை வைத்துக்கொண்டு நாம்பாபகர்மாவையே செய்துவருகிறோம். அவ்விதம் நாம் செய்யக்கூடாது.

செல்வத்துப் பயனே ஈதல்

என்று சொல்லியிருப்பதால், நாம் இடைவிடாமல் தான தர்மங்களைச் செய்துவரவேண்டும். அப்பொழுது தான் நாம் அடைந்த செல்வம் பயனுள்ளதாகும் அன்றோ! கொடை வள்ளலாகிய கர்ணன் மறைந்த போதிலும்கூட அம்மாபெரும் வீரனாகிய கர்ணனின் புகழ் இன்றும் மறையாமல் உலகில் கொடையிற்கு 'ஒரு கர்ணன்' என்று புகழப்படுகிறது.

எனவே ஹே முருகா, நான் மேதை யில்லாமல் செல்வத்தை வைத்துக் கொண்டு தீய செயல்களையும், ஈச்வர பக்தியில்லாமலும், தானதர்மங்கள் செய்யாமலும் இருக்கிறேன். இதன் காரணமாக நான் என் நேரமும் கவலை கொண்ட மனதையுடையவனாகவே இருக்கிறேன்.

ஹே குமரா, நல்ல புத்தியைத் தந்தருள்வாய் அப்பனே. மேலான ஆற்றலை தந்து இந்த நிலையற்ற உலக வாழ்க்கையிலிருந்து என்னைக் காப்பாற்றி ஆட்கொள்வாய் ஐயனே. குறைவிலாத நிறைவாக எங்கும் நிறைந்த தனிப்பெருமையினைக் கொண்ட தெய்வமல்லவா நீ. ஹே கருணைப் பெருங்கடலே, துன்பமாகிய பெருங்கடலில் மூழ்கி வெளிவரமுடியாமல் அமுங்கி ஒரு துணையுமின்றி அநாதையாய் இருக்கும் என்மீது கருணை கூர்ந்து காப்பாற்ற மாட்டாயா, துன்புற்று அநாதையாகவந்தவர்களுக்கு பொற்பாதங்களைக்காட்டி அபயமளித்து ஆட்கொள்ளும் அநாதரக்ஷகனே என்னையும் நினது அடியார்களில் ஒருவனாகக் கருதி ஆட்கொள்வாய்.

எனவே ஹே முருகா என்னுடைய செல்வமனைத்தையும் அழித்து மனைவி மக்கள் என்னும் நிலையற்ற இந்த உலக வாழ்க்கையில் எனக்குள்ள பற்றுதலையெல்லாம் அகற்றி எனக்கு மேலான ஆற்றலைத் தந்து அருள்வாய். என்றும் அழியாச் செல்வமாகிய நீ என்னுடைய நெஞ்சில் நிறைந்த செல்வமாய் தோன்றுவாய் அப்பனே. என்னுடைய மனைவி மக்கள் சுற்றத்தார் மற்றுமுள்ள யாவரிடத்திலும் நீயே நிறைந்த செல்வமாய் விளங்குவாய் ஐயனே. அப்பொழுது என்னுடைய மனைவிமக்கள் எனக்கு அனுகூலமாக நின்று செல்வக்

குமரனாகிய உன்னை என்னுடைய வீட்டில் நிறைந்த செல்வமாக வைத்து பூஜிப்பார்கள். என்னுடைய உள்ளமும் மேலான ஆற்றலை அடையும் அப்பனே.

ஹே கந்தா, அரிதாகிய இம்மானிடப் பிறவி தப்பினால் அடுத்த பிறவி எப்பிறவியாக வாய்க்குமோ? தெரியவில்லையே ஐயனே, எனவே என்னுடைய இறுதி ஆசையை சொல்லுகிறேன். அதனைப்பூர்த்தி செய்வாய் முருகா. நீ கருணாகரன் அல்லவா முருகா. நீஎன்னுடைய நெஞ்சிலும் என் இல்லத்திலும் நிறைந்து செல்வக்குமரனாய் திகழ வேண்டும். குமரனாகிய நினது பொற்பாதங்களில் திவ்ய புஷ்பங்களினால் நான் அர்ச்சிக்க வேண்டும். நினது திருவிளையாடல்களை பாடியும் கேட்டும் மகிழ வேண்டும். என் நாவினால் நின் மாறிலா புகழைப் பாடவேண்டும். 'வேல் முருகா—வேல் முருகா' என்று எந் நேரமும் சொல்லிக் கொண்டே நின் திருவடிகளில் என் வாழ்நாள் முழுவதையும் கழிக்க வேண்டும். அப்படியே முடிவில் நினது அருளினால் கந்தர் அநுபூதியில் லயித்துவிட வேண்டும். இதுவே எனது இறுதி ஆசை அப்பனே.

எனவே நமது உள்ளத்தில் எழும் சிந்தனையினால் உண்டாகும் துன்பங்களையெல்லாம் அடியோடு இல்லாமல் செய்து கொள்வதற்கு மந்திரமயமான இப்பாடலை இடைவிடாமல் பாடிக் கொண்டிருப்போமாக.

மேலும், கந்தன் கருணையினால்த்தான் நாம் இந்த நச்வரமான மாபெரும் துன்ப வாழ்வை அழித்துக் கொள்ள முடியுமே தவிர அன்னியில் இதற்கு வேறு வழியே கிடையாது. கந்தன் கருணை நம்மிடம் விழுமேயாகில் நம்மை எதுதான் என்ன செய்ய

முடியும்? இந்த உண்மையை அருணகிரிநாதர் கந்தர லங்காரத்தில்,

நாள் என்செய்யும்? வினைதான்
என்செய்யும்? என்னை நாடி
வந்தகோள் என் செய்யும்?
கொடும் கூற்று என்செய்யும்?
குமரேசர் இருதாளும் சிலம்பும்
சதங்கையும் தண்டையும்
சண்முகமும் தோளும் கடம்பும்
எனக்கு முன்னே வந்து
தோன்றிடினே.

என்று சொல்லி நமக்கெல்லாம் மூலபலம் முருகப் பெருமானே ஆவார் என்று மூலபலமிருக்குமிடத்தைச் சுட்டிக்காட்டுகிறார் அன்றோ!



# மாபெரும் ப்ரம்மசர்ய தியான சக்தியினுல் எழும் காமனை அழித்தல்

## 34



சிங்கார மடந்தையர் தீநெறி போய்
மங்காம லெனக்கு வரந் தருவாய்
சங்க்ராம சிகர்வல சண்முகனே
கங்கா நதி பால க்ருபாகரனே.

### பதவுரை

சங்க்ராம-போர் செய்யும் திறமையுள்ளவனே, சிகாவல- ஓங்காரமாகிய மயில் மீதிலேறி விளையாடுபவனே, சண்முகனே-வியாபகமான முகத்தோடு கூடியவனே, அதாவது ஆறுமுகக் கடவுளே, கங்காநதிபால - கங்காதேவியின் புதல்வனே, காங்கேயனே, கங்காதேவியின் - புதல்வனுன பீஷ்மரினின் சகோதரனே, க்ருபாகரனே கருணைவடிவான வனே, சிங்கார மடந்தையர் - காதற்சுவையை உண்டு பண்ணுகின்ற அழகு நிறைந்த ஆபரணம்-ஆடை மணமுள்ள புஷ்பம் முதலிய பற்பல அலங்காரங்களையுடைய விலைமாதர்

களிடம், தீநெறிபோய்-சிற்றின்பானுபவமென்னும் கொடிய வழியில் சென்று, மங்காமல்-என் அறிவு மயக்கம் அடையாமலிருக்க - எனக்கு - காம அதிதப்தனுகிய எனக்கு, வரம் ஞான நெறியாகிய பேரின்பானுபவத்தை ப்ரம்மசர்ய அனுஷ்டான மூலமாக வரத்தை, தருவாய் - தந்து அருள்வாயாக.

**தாத்பர்யம்:**

காமம் என்னும் ஸமுத்திரத்தில் மூழ்கிக்கிடப்பவர்கள் விலைமாதர்கள். இவ் விலைமாதர்களோ வெனில் சின்றின்ப சுகத்தையே பேரின்பமாக தோன்றச் செய்பவர்கள். அதுவும் அச்சிற்றின்பத்தை ஸமுத்திரத்திலுள்ள அலைகள் போல் ஓயாமல் ஒன்றின்பின் ஒன்ருக பற்பல வழிகளில் உண்டாகும்படி செய்வார்கள்.

மேலும் புதிது புதிதாகவுள்ள ஆபரணங்கள், ஆடைகள், வாஸனையுள்ள புஷ்பங்கள் ஆகியவைகளை அணிந்துகொண்டு தங்களுடைய கருங்கண்களில் காமரஸத்தை தேக்கி உறுதியான மனதையுடையவர்களுடைய மனதையும் மாற்றிவிடுவார்கள். விலைமாதர்களோ வெனில் காமசுகத்திற்கு இருப்பிடமாகஇருந்து எழில் குலுங்க நடக்கும் நடையைக் கண்டு மனிதர்கள் சொக்கிப்போகிருர்கள்.

அந்தி வேளையில் விலைமாதர்களின் அழகானது, தவளையை ஸர்பம் கௌவுவதுபோல மனிதர்களுடைய உள்ளத்தையும் விவேகத்தையும் கௌவி 'விடுமன்ருே!

எனவே விலைமாதர்கள் தர்மத்தை வளர்க்காமல் நாணம் அன்பு முதலியவைகளை விட்டு, மனிதர்களுடைய உள்ளத்தில் காமமாகிய கனலை எழுப்பி செஞ்சுடர் சூரியனைப்போல் மனிதர்களுடைய உள்ளத்தை

பொசுக்கிவிடுகிருர்கள். தீய நெறியை உடையவர் களாகிய மடந்தயர்கள் பாபகர்மாவை செய்ய சிறுதும் அஞ்சார்கள்.

எனவே சிங்கார மடந்தயர் தீநெறி போய் தம் முடைய விவேகத்தை இழப்பவர்கள் தங்களுடைய தர்மபத்தினியிற்கு மட்டும் துரோகம் செய்கிருர்கள் என்பது மட்டும் மல்ல, அவ்விலைமாதர்களினுல் தூண் டப்பட்டு கொலை, களவு, பொய், கள்குடிப்பது முத லான மகாபாபங்களையும் செய்வார்கள், தர்மத்திற்கு பயந்து நடக்கமாட்டார்கள். விலைமாதர்களின் அழ கில் தங்களுடைய மனதைப் பறிகொடுத்துவிட்டு நாயினிற்கும் கேடுகெட்டு அவ்விலைமாதர்களின் கால டியிலேயே விழுந்து கிடப்பார்கள் அன்ருே!

எனவே தாஸிகளிடத்திலிருந்து உண்டாகும் சுக மெல்லாம் பாம்பினின் விஷத்தைப்போன்றமையால் பாட்டில்

சிங்கார மடந்தையர் தீநெறி

என்ருர். தவிர விலைமாதர்களிடம் ஒருவன் ஒருமுறை போகசுகத்தை அனுபவிப்பானேயாகில், அவன் அவ் விலைமாதர்களை விட்டு மீண்டும் தர்மநெறியில் திரும்ப மாட்டான். அவளிடத்திலேயே அவளுடைய அழ காகிய கள்ளை குடித்துக்கொண்டு வீழ்ந்துகிடப்பான். முடிவில் அழிந்தும் போவான். ஆதலால்

மங்காமல் எனக்கு வரந்தருவாய்

என்று யாசிக்கிருர். ஏன்? விலைமாதர்களின் கண்வீச் சில் சிக்காதவர்கள் யாருமேயில்லை என்பதேயாகும். இதனைக் கவிசக்ரவர்த்தியாகிய கம்பர்.

ஊறு ஞானத் துயர்ந்தவராயினும்
வீறுசேர்முலை மாதரை வெல்வரோ

என்ருர்.

எனவே மேலான தவபலத்தையுடையவரும், இந்திரிய வலிமையுடையவரும் அப்படியே உடல் வலிமையுடையவரும் ஸ்திரீசாபல்யத்திற்கு உள்ளாகி, காமத்திற்கு அடிமையாகி விடுகிருர்கள் அன்றே!

ஆதலால் முருகப்பெருமானின் திருவருளினைக் கொண்டுதான் நாம், ஜன்ம ஸாபல்யத்தை அடைய முடியுமென்பதினுல், முருகப்பெருமானிடம்

வரந் தருவாய்

என்று வேண்டுகிருர் அருணகிரியார். ஆதலால் பாட்டில் 'வரம் தருவாய்' என்பதினுல், இந்திரிய நிக்கிரஹசக்தியே வேண்டப்படுகின்றது. இந்திரியங்களை அடக்கவேண்டுமாஞல் முதலில் மனதை அடக்க வேண்டும். மனதையடக்கி விட்டால், இந்திரியங்கள் மனதில் லயத்தை அடைந்துவிடும். ஆனுல் மனதை அடக்குவதென்பது ஸாமான்ய கார்யமல்ல. மனதின் சக்தியை கந்தரந்தாதியில்

செந்திலா யொருகால் திரிகையில்
ஆயிரக்கோடி சுற்ருேடுந் திருத்துளமே

என்று சொல்கின்ருர் அருணகிரியார்.

ஹே திருச்செந்தூர் வேலா! ஒரு தரம் குயவனின் சக்ரமானது சுற்றி வருவதற்குள் என்னுடைய மனதானது ஆயிரம் கோடி தரம் சுற்றி விடுகிறது. இந்த மனதை நான் எவ்விதம் அடக்குவேன். எனவே செந்தூர் வேலஞகிய நீயே என்னுடைய

மனதையடக்க வல்லவனுக இருக்கிருய். அதனுல் என்னுடைய மனதின் சலனத்தை நீக்கி எனது மனதை நினது திருவடிகளில் சஞ்சலமில்லாமல் நிலைத்திருக்கும்படி செய்தருள வேண்டும் என்பதேயாகும்.

மேலும் காமசுகத்தை அநுபவிப்பதற்கு பஞ்ச பூதங்களின் கார்யமாகிய சரீரம் இருப்பிடமாகயிருப்பதால் அதனை

மடந்தையர்

என்பதினுலும் அப்படியே மோகம் உண்டாவதற்கு மூலகாரணமான ஆபரணம் ஆடை, திவ்வியமான வாஸனை பொருந்திய புஷ்பங்கள் இவைகளுடன் கூட ஆடல் பாடல் என்று பலவித அலங்காரங்களை,

சிங்காரம்

என்பதினுலும் அப்படியே, காமம் க்ரோதம் லோபம், மோகம், மதம், மாத்ஸர்சம் இவைகளினுல் மதுபானம் செய்வது-கொலை - களவு ஆகிய ஏனைய பாபங்களை செய்ய தூண்டுகின்றநெறியை

தீ நெறி

என்பதினுலும் அறியவேண்டும்.

அப்படியே காமபரவசனுய் தவித்துக்கொண்டிருக்கும் மனதை விஷயசுகமாகிய ஸ்திரீபோகத்திலிருந்து திரும்பும்படி யாசிக்கப்படுகின்றது என்பதை

போய் மங்காமல்

என்பதினுலும்

அதுபோலவே எங்கும் வியாபித்திருக்கப்பட்ட முகத்தையுடைய ஷண்முகனை, சரீரத்திற்குள் பிரகாசித்துக் கொண்டிருக்கிற மூலாதாரம்—ஸ்வாதிஷ்

டானம்—மணிபூரகம்-அநாஹதம்—விசுத்தி–ஆக்ஞை–என்றஆறுசக்கரங்களிலும் கேவலம் ஜ்யோதிர்மயமாய் விளங்கும்படியும் அதன் மூலமாக மனோநிக்ரஹத்தையும், அதன் மூலமாக இந்திரிய நிக்ரஹத்தையும், அதன் மூலமாக காமசுகத்தையனுபவிக்க துடித்துக் கொண்டிருக்கிற ரேதஸ்யை அதோரேதஸ்ஸாக (கீழ் நோக்கிச் செல்லுகின்றதாக) செய்யாமல் அதற்கு மாருக ஊர்த்துவ ரேதஸ்ஸாக (மேல் நோக்கிப் போகிற தாக) செய்து அருளவேண்டும். அதற்கேற்ற அநுஷ்டான சக்தியையும் தரவேண்டும் என்பதினை

எனக்கு வரம் தருவாய்

என்பதினுல் உணர்த்துகிருர் அருணகிரிநாதர்.

மேலும் பூர்வகர்மாவை அனுஸரித்து முருகப் பெருமானை, ஊர்த்துவரேதஸ்வுள்ளவனுக இருந்து கொண்டு உபாஸிப்பதற்கு தகுந்த பாக்யாதிசயம் தன்னிடமில்லாமையினுல், அத்தகைய பாக்யாதிசயத்தை தந்து தன்னை மேலான ஞானநிஷ்டையில் வைக்குமாறு ப்ரார்த்திக்கிருர் என்பதையே எடுத்துக்காட்டுகிறது 'எனக்கு வரம் தருவாய்' என்பதிலுள்ள தருவாய் என்ற பதமானது.

இத்தகைய உபாஸனு சக்தியை அளிக்க ஞான பண்டிதனுகிய முருகப்பெருமானுல்தான் முடியுமே தவிர அன்னிய தேவதைகளினுல் முடியவே முடியாது. ஞானப்பழம் அல்லவா முருகப்பெருமான். குமரனின் பெருமையை யாரால் கூறமுடியும். நான்மறைகளை ஒரே ஸமயத்தில் ஓதும் சக்தியினையுடையவனும், உலகனைத்தையும் படைப்பவனுமாகிய ப்ரும்மனிடம் ஞானப்போர் செய்து ப்ரும்மனை சிறையிலிட்டவன் அன்ருே செவ்வக்குமரன். ஓங்காரமாகிய மயிலின்

மீது ஏறி விளையாடும் குமரன் ஆதியந்தமிலாத சிவபெருமானுக்கு ஞானமொழியினை உபதேசித்த ருளியவன் அல்லவா. எனவே வீரத்திலும் ஞானத் திலும் போர் செய்கின்றவனும் ஓங்காரமாகிய மயிலின் மேல் ஏறி விளையாடுபவனும் ஆகிய ஷண்முகனே ஜீவகோடிகளுடைய உள்ளத்தில் எழுகின்ற காமத்தை சுட்டெரிக்க வல்லவன்.

ஞான வேலினைப் பிடித்து குன்றுதோறும் ஆடி விளையாடும் குமரனை நெஞ்சமெல்லாம் உருகி

சங்க்ராம சிகாவல சண்முகனே

என்று புகழ்ந்து மகிழுங்கள். அவ்விநாடியிலேயே ஷண்முகனின் பன்னிரு கண்களிலிருந்தும் க்ருபை யானது பெருக்கெடுத்து உங்களுடைய இன்னல்களை வந்தவழி தெரியாமல் அடித்துக்கொண்டுபோய்விடும். எனவே பாட்டில்

க்ருபாகரனே

என்றார். க்ருபையிற்கு இருப்பிடம் குமரன். க்ருபை யின் வடிவம் குமரன். க்ருபையை செயலில் காட்டி அருளுபவன் குமரன்.

மேலும் குமரனை அருணகிரிநாதர்

கங்கா நதிபால

என்று அழைக்கின்றார்.

‘கங்கா நதிபால’ என்றால் காங்கேயன் என்று பொருள். கங்காதேவியானவள் சிவபெருமானின் நெற்றியிலிருந்து வந்த ஆறு அக்னிப் பொறிகளை சரவணப் பொய்கையில் விட்டமையால் குமரனைக்காங்

கேயன் என்று தேவர்கள் புகழ்ந்தார்கள். கங்கா தேவியின் புதல்வனே என்று பொருள்.

தவிர அநுபூதியானது மேலான மந்திர நூலாக விளங்குகின்றபடியால் சப்தத்தினுல் உண்டாகும் மேலான தொனியர்த்தத்திலேயே ஆனந்தம்டைந்து லயத்தை அடையுமன்றோ.

ஸத்ரீய: ஸமஸ்தா: தவதேவிபேதா:

என்று மந்திர சாஸ்திரமாகிய தேவீமாஹாத்மயத்தில் உலகில் காணும் ஸ்த்ரீகளெல்லாம் தேவிபராசக்தியின் ஸ்வருபமாகவே போதிக்கப்படுகின்றது. இத்தகைய ஞானமுண்டாவதற்குள்ள சக்திவிசேஷமே இப்பாடலில் வேண்டப்படுகின்றது.

நிற்க பீஷ்மாசாரியாளும் கங்காதேவியின் புத்திரனுகின்ற படியால் அம்மாபெரும் வீரனுகிய பீஷ்மரை இங்கு நினைவூட்டி நம்முடைய உடம்பில் பீஷ்மரின் சக்தியை உரம்பெற்று வளரச்செய்கிருர்.

பீஷ்மரோ வெனில் தன்னுடைய தந்தையின் மனே நிலையை தானுகவே அறிந்து ஒருவருக்கும் தெரியாமல் தனிமையில் அந்த செம்படவனிடம் சென்று வணங்கி

“பெரியவரே! என்னுடைய தந்தையினுடைய சுகத்திற்காக வாழ்நாள் முழுவதும் கலியாணம் செய்து கொள்ளாமல் ப்ரும்மசாரியாகவே இருந்து கொண்டுமாபெரும் ப்ரம்மசர்யத்தையேகடைப்பிடித்து வருவேன். இது வெறும் பேச்சல்ல. இது ஸத்யம்” என்று சொல்லி, மீண்டும் அந்த செம்படவனிடம் “பெரியவரே உமது அன்புக்குரிய மகளாகிய ஸத்யவதியை எமது தந்தையாகிய சந்தனுமஹாராஜாவிற்கு

பட்டமஹிஷியாக திருமணம்செய்துகொடுப்பீர்! என்று மாபெரும் சபதத்தை மும்மூர்த்திகளுள்பட முப்பத்து முக்கோடி தேவர்களின் முன்னிலையில் சபதம் செய்த மாபெரும் வீரனன்றோ பீஷ்மர். எனவே பீஷ்மரின் நாமத்தைச் சொல்லும் பொழுதே காமம்–க்ரோதம்–லோபம்–மோகம்-மதம்–மாத்ஸர்யம்--முதலானவைகள் நடுநடுங்கி ஓடிவிடுகின்றன.

ஆதலால் ஹே கங்கா நதி பாலனாய் விளங்கும் முருகா நினது சகோதரன் என்று சொல்லப்படும் காங்கேயனாகிய பீஷ்மரின் ப்ரும்மசர்ய சக்தியில் ஒரு கடுகளவு சக்தியை எனக்குத்தந்து, உலகிலுள்ள ஸ்திரீகளையெல்லாம் தேவிபராசக்தியாக எண்ணும்வண்ணம் அருள்புரிவாய் அப்பனே.

எனவே இங்கு பீஷ்மரை தொனிஅர்த்தத்தில் நினைவூட்டி, நமக்கெல்லாம் இந்திரியங்களை அடக்கும் சக்தியை அளிக்கிறார்.

மஹான்களை ஸ்மரணம் செய்தால் அந்த ஸ்மரணையே சக்தியை அளிக்கும்.

உதாரணமாக ஆஞ்சநேய ஸ்வாமியானவர் ஸமுத்திரத்தை எவ்விதம் கடந்து சீதா தேவியைக் காண்பது என்று மலைத்து நிற்கும் பொழுது, சாம்பவானானவர் அனுமாரைநோக்கி, 'ஹே ஹனுமன்! தாங்கள் மலைத்து நிற்கவேண்டாம். முன்பு மஹாவிஷ்ணுவினால் எடுக்கப்பட்ட வாமனாவதாரத்தை ஸ்மரணம் செய்யுங்கள். மூன்றே அடியினால் உலகனைத்தையும் அளந்த இறைவனின் சக்தியானது அவனுடைய ஸ்மரணையினால் உம்மிடம் உண்டாகும்'' என்று கூறினார். அவ்வாறே அனுமாரும் உலகளந்த வாமனாவதாரத்தை ஸ்மரணம் செய்து ஸமுத்திரத்தைக் கடந்தார் அன்றோ.

எனவே 'கங்கா நதி பால' என்ற ஸம்போதனை யானது முக்கியமாக இங்கு பீஷ்மரையே நினைவூட்டு கிறது. அம்மாபெரும் பீஷ்மருடைய ப்ரும்மசர்யத்தை

சிங்கார மடந்தையர் தீநெறி போய்
மங்காமல் இருப்பதற்கு

நாமும் கடைப்பிடிக்க வேண்டுமென்பதையே எண்ணச் செய்கிறது. ஸ்திரீகளிடத்தில் உண்டாகும் மோகத்தை பீஷ்மரின் தியாக உள்ளம் போக்கடிக்கிறது.

எனவே 'கங்கா நதி பால' என்பதில் நுட்பமாகத் தோன்றும் த்வனியை நாம் ஸ்மரணம் செய்ததும், அந்த விநாடியிலேயே நம்முடைய உள்ளத்தால் அம் மாபெரும் பீஷ்மருடைய ப்ரும்மசர்ய சக்தியானது உருவடைந்து எழுகின்றன. இறைவனுடைய அருளை நம்முடைய உள்ளத்தில் பொழியும்படியும் செய்கின் றன. த்வனி அர்த்தம் என்னென்னவெல்லாம் செய்து விடுகிறது.

எத்தனை பெரிய சிந்தனையில் நம்மைக் கொண்டு போய் விடுகிறது பார்த்தீர்களா 'கங்கா நதி பால' என்ற ஸம்போதனையானது. சிந்திக்கமுடியாத அள வில் நமது சிந்தனையைக் கொண்டு போய் விடுகிறார் அருணகிரிநாதர். பீஷ்மரின் ப்ரும்மசர்ய சக்தியனைத் தையும் புதைத்து வைத்திருக்கிறார் 'கங்காநதிபால' என்ற ஸம்போதனையில். எனவே,

சிங்கார மடந்தையர் தீநெறிபோய்
மங்காமல் எனக்கு வரம் தருவாய்

என்று வேண்டுவதின் உண்மைப் பொருள் என்ன தெரியுமா?

இந்திரிய நிக்ரஹம் ஒன்றினால்தான் உள்ளத்தில் காமமாகிய நெருப்பை அணைக்கமுடியும். காமமாகியது உள்ளத்தில் எழும்பொழுது மனிதன் தர்மமாகிய பாதையை விட்டுவிட்டுத் தீநெறியாகிய பாதையிலேயேதான் நடந்து செல்வான். அந்நிலையில் அவனுடைய நேர்மையான புத்தியானது 'இது தர்மம்–இது அதர்மம்' என்பதை நிர்த்தாரணம் செய்ய முடியாத அளவில் ஆகிவிடுகிறது.

இவ்விதம் தீயநெறியில் சிங்கார மடந்தையர்களினால் செலுத்தப்பட்ட புத்தியானது ஈச்வரசிந்தனை யற்றதாகவே இருந்து வருகின்றபடியால் முதன் முதலில் தீயநெறியிலிருந்து அந்த புத்தியை திருப்புவதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது.

அந்த தர்ம வழியோவெனில் ஞானிகளும் துறவிகளும் கடைப்பிடித்து வரும் தர்மவழியேயாகும்.

அந்த வழியை நாம் கடைப்பிடிக்க வேண்டுமானால் மஹான்களாகிய துறவிகளுடைய புனிதமான கதாம்ருதகடலை நாம் இடைவிடாமல் பானம் செய்துகொண்டும், ச்ரவணம் செய்துகொண்டும் இருக்கவேண்டும்.

அப்பொழுது நமது புத்தியானது மங்காமல் பொலிவுடன் விளங்கிவரும். எனவே பொலிவுடன் மங்காமல் இருந்துவரும் நமது புத்தியானது சிங்கார மடந்தையர்களினால் காட்டப்படுகின்ற தீமையாகிய நெறியை நாடிச் செல்லாது. மேலும் சிங்கார மடந்தையர்களிடத்தில் காணப்படும் சிங்கார அழகினையெல்லாம் நம்முடைய புத்தியானது அன்னை பராசக்தியினுடைய அழகாகவே எண்ணுமே தவிர அதற்குமாறாக அவர்களுடைய சிங்கார அழகை காமசுகத்தை தரக் கூடியது என்று எண்ணவே எண்ணாது.

தத்வமோவெனில் ஹே முருகா! சிங்காரமடந்தையர் தீயநெறியில் சென்று கொண்டிருக்கிற நான் கடைதேறும் பொருட்டு, எனக்கு நல்ல புத்தியை அளிப்பாய்—மஹான்களுடைய திவ்ய சரிதத்தையே நான் இடைவிடாமல் கேட்டுக்கொண்டிருக்கும்படி என்னை செய்வாய்—தியாகத்தின் பெருமையை என் உள்ளத்தில் எழுப்பி தியாகசக்தியை எனக்கு தந்தருள்வாய்.

எல்லா ஸ்திரீகளையும் அன்னை பராசக்தியின் வடிவமாகவே கருதும்படி என்னைச் செய்வாய். இதற்கெல்லாம் மேலாக எவருடைய திருநாமத்தை நினைத்த மாத்திரத்தில் எழுகின்ற காமமாகிய உணர்ச்சி அந்த இடத்திலேயே செத்துவிடுகின்றதோ, அத்தகைய மஹாபெருமையும் சக்தியும் வாய்ந்தது இமயமலையினைப்போல் அசைக்கமுடியாத ப்ரம்ம சர்யத்தையுடைய பீஷ்மாசார்யாளுடைய சக்தியானது. அத்தகைய ப்ரும்மசர்யசக்தியில் கடுகளவாவது என் உள்ளத்தில் எழும்படிச் செய்வாய் அப்பனே. ஹே முருகா! முக்தி நிலையத்திற்கு வழிகாட்டியும் துணையுமல்லவா பீஷ்மருடைய ஸ்மரணம்.

இதனுல்தான் 'கங்கா நதிபால' என்று உன்னை அழைத்து, ஹே கங்காநதி பாலனுகிய முருகா! உனது சகோதரனுயும் கங்கா நதிபாலகனுகியுமுள்ள காங்கேயன் என சொல்லப்படும் பீஷ்மரை உனக்கு நினைவூட்டுகிறேன்! என்று சொல்லி மகிழ்கின்ருர் அருணகிரிநாதர்.

எனவே எவர்கள் பீஷ்மாசாரியரையும் முருகப் பெருமானையும் பக்தியுடன் மனதில் தியானம் செய்து, பொருளுணர்ந்து இப்பாடலை ஆயிரம் தடவை பிரதி

தினமும் பாராயணம் செய்து வருகின்றார்களோ அவர்கள் நிச்சயமாக முருகப்பெருமானின் க்ருபையினால் பீஷ்மாசார்யாளுடைய ப்ரும்மசர்ய சக்தியையடைந்து காமத்தினால் உள்ளத்தில் எழுகின்ற உணர்ச்சியையும் தீயநெறியையும் சுட்டெரித்து தள்ளி விட்டு, எல்லாவற்றிற்கும் மேலான

> தியாக நெறியில் முருகனை
> கண்குளிரக் காண்பார்கள்

என்பது திண்ணம். இதில் இப்பாடலே மேலான ப்ரமாணமாகும் அன்றோ.

எனவே இப்பாடலைப் பாடப்பாடத்தான் இப்பாடலின் பெருமை நன்கு தெரியும். ஆதலால் இப்பாடலைப் பாடிக்கொண்டே இருப்போமாக.



# முக்தி நிலையத்தைக் காண குமரனின் மலர்க் கழல் தியானமே சுலபமான வழி

# 35



விதிகாணு முடம்பை விடாவினையேன்
கதிகாண மலர்க்கழ லென்றருள்வாய்
மதி வாணுதல் வள்ளியை அல்லது பின்
துதியா விரதா சுரபூதியே.

**பதவுரை**

மதி—அறிவு நிலையமான அல்லது எட்டாம் பிறை சந்திரனை உருவத்தில் ஒத்த, வாள்—ஒளி பொருந்திய, நுதல்—நெற்றியையுடைய, வள்ளியை அல்லது-வள்ளிதேவியை அல்லாமல், பின் துதியா-வேறு ஒருவரையும் புகழாத, விரதா—கொள்கையையுடையவனே, சுர பூ பதியே-விண்ணுலகிற்கும் மண்ணுலகிற்கும் அரசனுய் விளங்குபவனே, விதி-நல்வினை தீவினை என்பதின் பயனுகிய அதாவது பூர்வ ஜன்மாவில் செய்த கர்ம வினையினுல், காணும்—அடையப்பட்டு தோன்றுகின்ற, உடம்பை-தேகத்திலுள்ள அபிமானத்தை, விடா-

(இந்தத் தேகம் அழியப்போகின்ற வஸ்து என்ற மெய்யறிவு இல்லாமல்) விடாமல், வினையேன்-(மேன்மேலும்) வினை அதிகரிப்பதற்குக் காரணமான கர்மாக்களை செய்து கொண்டேயிருக்கும் அஞ்ஞானியாகிய அடியேன், கதி காண-முக்தியாகிய நிலையத்தை அடைந்து அதை ப்ரத்யக்ஷமாக அனுபவிப்பதற்கு, மலர்-மலர்போல் மிருதுவான, கழல்-(உனது) பாதங்களை, என்று-எப்பொழுது-எந்த நாளில்-எந்த வேளையில், அருள்வாய்-தந்து அருளப் போகிறாயோ தெரியவில்லையே.

தாத்பர்யம்

ப்ரமவித்யா ஸ்வரூபிணியான வள்ளி தேவியின் ச்ருங்கார ரஸத்தைப் புகழ்ந்து ப்ரம்ம ரஸத்தை யாசிக்கின்றார் அருணகிரியார், முருகப்பெருமானிடம்.

வள்ளிதேவியின் நெற்றியானது எட்டாம் பிறைச் சந்திரிகையின் ஒளிக்கு ஒத்ததாக இருக்கிறது. காரணமோவெனில் உத்தமமான ஸ்திரீகளுடைய நெற்றியானது இரண்டு பக்கங்களிலும் பிறைச் சந்திரனை போல் வளைந்திருக்கும். எனவே ஸர்வேச்வரியான வள்ளி தேவியின் வைபவத்தை என்னவென்று சொல்வது.

வள்ளிதேவியின் நெற்றியோவெனில் கீழ்முகமாக நோக்கியிருக்கும் எட்டாம் பிறைச் சந்திரிகையைப் போல் உருவத்தினாலும் காந்தியினாலும் பாஸித்து வருகிறது. இதைப் பார்த்தால் உண்மையில் வள்ளிதேவியின் நெற்றியிலுள்ள அபரிமிதமான ஸௌந்தர்யாதிசயமும் சாந்தியுமே பிறைச்சந்திரனாக வானில் திகழ்கின்றது என்று சொல்லலாம். தவிர வானில் ஊர்த்வ முகமாயுள்ள எட்டம்பிறை சந்திரனின் ஒரு அத்யத்புதமான அழகானது வள்ளிதேவியின் நெற்றியிலுள்ள

பரம மங்களகரமான திலகம் என்று சொல்லப்படும் சிவந்த பொட்டை சரணமடைந்து, அவ்வள்ளி தேவி யின் நெற்றியிலேயே தன்மைய பாவத்தையடைந்து அப்படியே அவ்வள்ளிதேவியின் கருங்கூந்தலை இரண்டு பாகமாகப் பிளந்துவரும் மஹிடு என்னும் ஸீமந்த ஸரணியில் பெருக்கெடுத்து முன்புறமாக ஓடி வரும் அம்ருத ப்ரவாஹத்தினல் நினைக்கப்பட்டதாக வும் ஆகின்றது. இதனல் வள்ளிதேவியே எட்டாம் பிறைச்சந்திரனை அம்ருத ரஸத்தினல் நிரப்பி வருவது மல்லாமல் அந்த எட்டம்பிறைச் சந்திரனில் குடி கொண்டும் இருக்கிருள். ஆதலால்

சந்த்ரமா மநஸோஜாத :

என்று வேதத்தில் சொல்லியபடி சந்திரனே மனதிற்கு அதிஷ்டான தேவதையுமாக இருக்கிறபடியால், வள்ளி தேவியின் நெற்றியைப் பிறைச் சந்திரனுக மனதில் பாவித்து உபாஸிப்பவர்கள் மனதை அடக்கும் சக்தி யையுடையவர்களாக ஆகிருர்கள். இந்த விஷயத்தில் ஊர்த்வ முகமாக வானில் திகழும் சந்திரனுனது அதோ முகமாக ஆகி வள்ளிதேவியின் நெற்றியை யடைந்து தன்மயத்வபாவத்தை அடைந்ததே மேலான சாஸ்த்திர ப்ரமாணமாகும்.

எனவே மனோ நிக்கிரஹம் ஏற்பட்டு விட்டால், தானுகவே மனிதர்களுக்கு 'நான் யார்' என்ற ஆத்ம தத்வத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ப்ரம்ம ஜிஞ்யாஸம் ஏற்படும். உலக வாழ்க்கையில் அபிமா னத்தை விட்டு நீரிலுள்ள தாமரை இலையைப்போல் மனைவி மக்களுடன் வாழ்வார்கள்.

மேலும் தத்வார்த்த த்ருஷ்டியில்

மதி வாணுதல் வள்ளியை

என்பதற்குப் பொருளோவெனில் :—

'மதி' என்ருல் அறிவு. 'வாள்' என்ருல் 'ஞான வாள்! 'நுதல்' என்ருல் நெற்றி.

எனவே ப்ரம்மவித்தையென்கிற ஞான வாளானது நெற்றியிலுள்ள இருபுருவங்களுக்கும் மத்தியில் ஒளி பெருக்கிஞல் ஜாஜ் ஜ்வல்யமாக ப்ரகாசித்துக்கொண்டு இருக்கிறது. இத்தகைய வைபவத்தோடு கூடிய நெற்றியை உடையவள் வள்ளிதேவி.

முருகப்பெருமாஞே வெனில் இவ்வித பெருமை யினைக்கொண்ட வள்ளிதேவியின் முகத்தின் ஸௌந்தர்யாதிசயத்தை இடைவிடாமல் புகழ்வதையே வ்ரதமாக கொண்டுள்ளார். ஞானத்தில் ஸகலமும் அடங்கி விட்டபடியாலும், ஞானத்திஞலேயே அக்ஞானத்தை சுட்டெரிக்க வேண்டுமென்று கீதா சாஸ்திரம் போதிப்பதாலும் அத்தகைய ஞானத்தையே வர்ஷிக்கின்ற நெற்றியை யுடையவளாக வள்ளியானவள் விளங்கி வருகின்றபடியாலும், முருகப்பெருமாஞல் எவ்விதத்திலும் ஞானமானது துதிக்கப்பட்டதாக ஆகிறது.

தவிர அழகின் பெருக்கே வள்ளியின் உருவம். எனவே அழகின் கூட்டமாக விளங்கும் கோயிலாகவே வள்ளிதேவி விளங்குகிருள்.

எனினும் அழகாகிய கோயிலிற்குள் ஒப்பிலாத பெருமையுடன் ஒரு அழகு ஸ்வயம் ஜ்யோதியாய் பொலிவுடன் விளங்குகிறது. அதுதான் ப்ரம்மஞானம். ஞானமாகிய அழகு.

அத்தகைய ஞானமாகிய அழகை நாடிச் செல்லுகிருன் முருகப்பெருமான். வேதங்களுக்கு எல்லாம்

தாயாக ஞானமானது நிற்கிறது. எனவே தாயாகிய ஞானம் ஒன்றினுல்தான் மோக்ஷம் என்ற பரமபதத்தை அடையமுடியுமென்று கீதா சாஸ்திரத்திலும் ஸகல விதமான உபநிஷத்துகளிலும், சாஸ்திரம் புராணம் முதலியவைகளிலும் ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது என்பதினுல் ஞானரூபிணியான வள்ளிதேவியை அடைந்து துதி செய்வதைத் தவிர வேருெருவரையும் முருகப்பெருமான் துதிசெய்வதில்லை.

மேலும் அழகின் பெருமை அழகிற்குத்தான் தெரியும். வள்ளியோவெனில் அபரிச்சின்னமான ஸௌந்தர்யத்துடன் கூடினவள். அத்தகைய ஸௌந்தர்யவதியாகத் தன்னை புகழுகின்ற முருகப்பெருமானை இடைவிடாமல் ச்ருங்கார ரஸத்தினுல் வர்ஷிக்கின்ருள்: தன்னுடைய தர்மபத்தினியாகிய வள்ளிதேவியின் ஸௌந்தர்யாதிசயத்தை அவ்வள்ளிதேவியின் செவியில் விழும்வண்ணம் அவள் முன்பாக நின்றுபுகழ்ந்து மகிழ்வாரே தவிர அன்னியில் அவளுக்கு மறைமுகமாக வேருெருவரிடத்திலும் புகழமாட்டார்.

அதுபோலவே அழகின் கூட்டமாகிய வள்ளிதேவியின் நெற்றியில் பொலிவுடன் விளங்கும் 'ஞானம்' அதனை தான் ஞானப்பழமாயிருந்து கொண்டு

ஞானமொன்றினுல்தான் மோக்ஷம்

என்று துதிப்பாரே தவிர அன்னியில் மறைமுகமாக நின்று கொண்டு ஞானத்தினுல் மோக்ஷமென்ருே அல்லது வேறுவிதமாகப் போதிக்கின்ற கர்மாவினுல் மோக்ஷம் என்று ஒருகாலும் துதிக்கமாட்டார். ஏன்? கர்மாவானது ஞானத்தை அடைய ஸாதனமே தவிர ஞானமாகாது. எனவே ஞானத்தையே துதிக்கிறவனுய்

இருப்பது மல்லாமல் அதையே விரதமாகவும் கொண் டிருக்கிறார் முருகப்பெருமான்.

எனவே ஹேசுரபூபதியே! பூர்வ ஜன்மாவில்செய்த நல்வினை தீவினை என்ற இருவினைகளின் காரணமாய் இம் மானிடப்பிறவியை அடைந்திருக்கிறேன்; இம் மானிடப்பிறவியை நான் நிலையுள்ளதாகக் கருதி மேன் மேலும்ஓயாமல் ஜன்மாவைக் கொடுத்துக் கொண்டிருக் கும் கர்மாக்களையே செய்து வருகிறேன். அதுவும் வேதவிஹிதமான கர்மாவை செய்வதில்லை. பாபகர்மா வையே செய்கிறேன், இந்நிலையில் நான் எவ்விதம் முக்தியை அடையமுடியும்.

ஹே முருகா, நான் நற்கதியை அடைய உனது வீரக் கழல் களை என்று எனக்குக் காட்டி அருளப்போகி றாயோ தெரியவில்லையே. ஞானத்தினால்தான் வினைகளை எரிக்க முடியுமென்று கீதா சாஸ்திரம் முதலியவைகள் போதிக்கின்றன. அனைத்தும் நினது திருவடியிலேயே குடிகொண்டிருக்கின்றன.

ஹே குமரா! பரம உத்க்ருஷ்டமானது உனது திருவடி. அத்திருவடிகளே எனக்கு சரணாலயம். உனது மலர்போன்ற ம்ருதுவான பாதங்களை நான் என்று என் மனதில் வைத்து தியானம் செயயப்போகிறேன்.

முருகனுக்கு மேலான தெய்வமே இல்லையென்று வேதங்கள் கோஷிக்கின்றதே, எனக்கு மீண்டும் ஜன்மம் இல்லாமல் செய்தருள்வாய் அப்பனே. குமரா, நான் பூர்வ கர்மவினையினால் அல்லல் படுகிறேன். மீண்டும் வினைகளையே செய்கிறேன். இந்நிலையில் நான் எவ் விதம் உன்னை அடையமுடியும். நினது திருவடிகளே ஞானமாகிய ஓடமாக இருக்கிறது. அதனை நீ எனக்குத்

தந்தால் அதில் ஏறி அமர்ந்துகொண்டு நான் இவ்வினைகளாகிய கடலைத் தாண்டி விடுவேன்.

ஹே குமரா! நான் நற்கதியைக்காண நினது மலர்க் கழல் என்று தந்து அருளப்போகிறாய். 'நீயே நான்—நானே நீ' என்ற அத்வைத நிலையில் என்று நான் உன்னை அனுபவிக்கப்போகிறேன்.

ஆதலால் வாழ்க்கையில் காணவேண்டியது முருகனின் மலர்க்கழலே யாகும். 'மலர்க்கழல்' என்று சொன்னால் ம்ருதுவான மலர் போன்ற திருவடிகள் என்பது ஸாமான்னிய அர்த்தமே ஆகும்.

எனவே 'மலர்க் கழல்' என்றால் பக்தர்களுடைய மனதை மலரச் செய்கின்ற 'கழல்' என்று பொருள். எவ்விதம் சூரிய வெளிச்சம் வருவதற்குள் இருளானது போய்விடுகிறதோ அதுபோலவே முருகனுடைய மலர் போன்ற கழல்களை நாம் காண்போமேயாகில், அந்த வினாடியிலேயே நம்முடைய மனதிலுள்ள இருளானது போவதுமல்லாமல் மனதாகிய தாமரையை மலரவும் செய்கிறது. மனதாகிய தாமரை மலர்ந்தால் சிரஸில் உள்ள 'ஸகஸ்ரகமலம்' என்று சொல்லப்படும் ஆயிரம் தளமுள்ள தாமரையானது மலர்கின்றது. அதன் மூலமாக 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற மேலான நிலையை அடைகின்றோம். இதையே

கதி காண மலர்க் கழல்
என்றருள் வாய்

என்று வேண்டுகின்றார். இறைவனின் திருவடிகளின் சக்தியை

இணையார் திருவடி என்றலை மேல்
வைத்தலுமே — துணையான சுற்றங்கள்
அத்தனையுந் துறந்தொழிந்தேன்.

என்று திருவாசகம் புகழ்கின்றது. என்னே இறைவனின் திருவடி தர்சன மஹிமை. இச்சா சக்தி-க்ரியா சக்தி-ஞானசக்தி-ஆகிய மூன்று சக்திகளுக்கும் இருப்பிடம் முருகனின் மலர்க்கழல் அல்லவா, இதனுல்தானே ஞானிகளும் யோகிகளும் அடியார்களும் தேவர்களும் முருகனின் திருவடிகளையே தியானித்து வருகிருர்கள்.

ஹே குமரா! எண்ணற்ற துன்பங்களை அனுபவித்து, கடைசியாக இவ்வரிய மானிடப்பிறவியின் முழுப்பயனை அடைவதற்கு உன் 'மலர் கழலே' முக்தி நிலையம் என்று கண்டுகொண்டேன். என்மேல் உன் கருணையை செலுத்தமாட்டாயா அப்பனே. நான்என்ன அவ்வளவு பாபி ஆகிவிட்டேனு.

முருகா! உன்மலர்க்கழலை சரணமடைந்தவர்களுக்கு பிறப்பும் இறப்பும் இல்லை என்பதினுல் அவர்களை 'அம்ருதா :' என்று வேதம் புகழ்கின்றதே. தவிர இந்த சரீரம் இருக்கும் பொழுதே முக்தியை அடையலாமென்று வேதமாதாவானவள் போதிக்கிருள். ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதாளும் வேதமாகிய தாயின் வாக்கியங்களைத் தலைமேல் கொண்டு

> இந்த சரீரம் அழியாமலிருக்கும் பொழுதே அதைஇல்லாததுபோல்செய்து கொள்வதுதான் 'அம்ருதமாகும்' அதாவது மோக்ஷமாகும் என்று ஸித்தாந்தமாக ஸ்தாபித்திருக்கிருர்கள் அன்ருே.

எனவே அத்தகைய ஜீவன் முக்தியையே நான் வேண்டுகிறேன்.

ஹே முருகா! உன்னுடைய திருவடிகளை, நாளை காணலாம் நாளை காணலாம் என்று ஏங்கி நிற்கிறேன்.

என்னுல் கால விளம்பனத்தை சகிக்க முடியவில்லையே. நினது மலர்க் கழலில் முக்தியாகிய தேவி தலை வணங்குகிருள் அன்ருே. எனவே நினது மலர்க்கழலினை எனக்கு என்று அருள்வாய் அப்பனே. உன்னுடைய பொற்பாதங்களைக் காணும் வரையில் எனக்கு மன நிம்மதி கிடையாது.

எனவே ஹே முருகா, என்னுடைய தலைவிதியானது எத்தகைய துன்பத்தை யெனக்கு தந்தாலும் சரி, நான் அத்துன்பங்களனைத்தையும் அனுபவிக்கத் தயாராக இருக்கிறேன். ஐயனே! உன்னுடைய 'மலர்க் கழல்' ஒன்றுதான் முக்தியை யளிக்க சக்தியுள்ளதாகயிருந்து வருகிறதென்பதை நான் அறிந்த பின்பு, இந்த அரிதாகிய மானிடப்பிறவியை நான் ஒருவிஞடி கூட உன்னுடைய ஸ்மரணமில்லாமல் வீணுக்கி விடமாட்டேன்,

அப்பனே! பக்தர்களைச் சோதிப்பது உனக்கு அழகல்லவே! முருகா என்று எவர்கள் உள்ளமுருகி உன்னை ஒருதரம் அழைக்கின்ருர்களோ, அவர்களுடைய வாழ்க்கையை உருவாய் திகழும்படி செய்து கொண்டிருக்கும் கண்கண்ட தெய்வமல்லவா நீ. எனவே என் மீது கருணை கூர்ந்து

கதி காண மலர்க்கழல் லென் றருள்வாய்

அப்பனே என்று சொல்லி, உலகத்தினர்களாகிய நமக்கு முருகப்பெருமானின் திருவடிகளைச் சுட்டிக் காட்டி, நம்மிடம் 'ஹே உலகத்தினர்களே, முக்தி நிலையத்தை அடைந்து அனுபவிப்பதற்கு எல்லாம் வல்ல முருகப்பெருமானின் திருவடித்தியானமே மேலனதாகவும் அதி சுலபமானதாகவும் இருந்து வருகின்றபடியால், அக்குமரனின் மலர்க்கழல்களையே ஸதா

தியானம் செய்து கொண்டிருங்கள்'' என்று போதித் தருளுகிறார் அருணகிரிநாதர்.

முருகனின் மலர்க்கழல்களைக் காண்பது என்பது தான் 'கதி' என்று சொல்லப்படும் முக்தியையடைவது என்பது. இதனால்தான் சுவாமி மலையில் வீற்றிருக்கும் ஞான பண்டிதனிடம்

இடைவிடாது எடுத்த பிறவி
வேரறுத்து உன் இனியதாள்
அளிப்பது ஒரு நாளே

என்று சொல்லி வேண்டுகின்றார்.

எனவே மஹான்களுடைய அருள்வாக்கே மந்திர மாக விளங்குகின்றபடியால் நாம் இந்த அநுபூதியை இடைவிடாமல் குமரனின் 'மலர்க் கழல்களை'க் காணும் பொருட்டு பாடிக்கொண்டே இருப்போமாக.



# ஞானப்பழமாய் நின்று ஈசருடன் ஞானமொழி பேசும் திருவிளையாடல்

# 36



நாதா குமரா நமஎன் றரனுர்
ஓதாய் எனவோதியதெப் பொருள்தான்
வேதா முதல்விண்ணவர் சூடுமலர்ப்
பாதா குறமின் பதசேகரனே

**பதவுரை**

வேதா முதல்-ப்ரும்மாவிலிருந்து தொடங்கி, விண்ணவர்-தேவர்கள் முடிய, சூடும்-(தங்களுடைய சிரஸின் மேல்) அலங்காரமாய் சூட்டிக்கொள்ளும், மலர்பாதா-(ம்ருதுவானதும் மணமுள்ளதுமான) மலர்போன்ற திருவடிகளை யுடையவனே, குறமின்-குறவர் குலத்தில் அவதரித்த மின்னல்கொடி போன்றவளாகிய வள்ளிதேவியின், பதசேகரனே-திருவடிகளைத் தன்னுடைய சிரஸில் அலங்காரமாகக் கொள்பவனே, அரனுர்-சிவபெருமானுனவர், நாதா-(உன்னைக் குருவாக பாவித்து உன்னிடம்) நாதத்தின் முடிவில் விளங்குகின்ற

வனே—தலைவனே, குமராநம–குமாராய நம: என்று–என்று வாயால் துதித்து தலையால் வணங்கி கையால் தொழுது, ஓதாய் - உன்னை நோக்கி ப்ரணவமாகிய ‘ஓம்’ காரத்தின் மெய்ப்பொருளை உபதேசித்து அருள்வாயாக, என - என்று உன்னிடம் குரு சிஷ்ய பாவத்திலிருந்து வேண்டும் பொழுது, ஓதியது - நீ குருவாயிருந்து கொண்டு சிவபெருமானுக்கு அவ்வேளையில் உபசேத்தருளிய பொருள், எப்பொருள் - எத்தகைய பொருளோ வெனில், தான் - அத்தகைய பொருள் எல்லாம் தான் வைத்து வாங்கவல்லான் ஆகிய ‘தானே’ ஆகும். அதாவது எல்லாமாய் விளங்குகின்ற **‘சரவணபவ’** என்கிற மஹாமந்திரமேயாகும் அன்றோ!

**தாத்பர்யம்**

முருகப் பெருமானுடைய திருவிளையாடல்கள் கடலில் அலைகள் காணப்படுகின்றதனைப்போலவே எண்ணற்ற கோடிவகைகளில் இருந்து வருகின்றன. பக்தகோடிகள் இறைவனை அவரவர்களுக்குத் தோன்றிய வகையிலெல்லாம் தியானம் செய்து பக்திபூர்வமான ச்லோகங்களையும் பாடல்களையும் பாடிப்பாடிப் பொழிந்து இருக்கிறார்கள். அதுமட்டுமல்ல. சிந்தனைக் கெட்டாத ‘நாதப்ரம்மத்தை’ நாமெல்லாம் அநுபவிக்கும் பொருட்டு நம்முடைய சிந்தனைக்கு எட்டுமளவில் சித்திரித்திருக்கிறார்கள் அடியார்கள். இத்தகைய அடியார்களின் கருணையை நாம் என்னவென்று சொல்வது?

ஏறுமயிலேறி விளையாடும் முகம் ஒன்றே

என்று சொல்லி அடுத்தபடியாக

ஈசருடன் ஞானமொழி பேசும் முகம் ஒன்றே

என்று சொல்லுகிறார் திருப்புகழில் அருணகிரியார்.

மேல் கூறியதின் பொருள்தான் என்ன? குழந்தையாய் மயில்மீதில் விளையாடும் குமரனே, குருபரனாக

யிருந்துகொண்டு 'ஈசருடன் ஞானமொழி பேசுகிறன்' என்பது தெரியவில்லையா.

எனவே ப்ரம்மனின் கற்பனைக்கெல்லாம் அடங்காமல் ப்ரும்மாவினுலேயே சித்திரிக்கமுடியாத முருகனின்

ஈசருடன் ஞானமொழி பேசுதல்
என்னும் மாபெரும் திருவிளையாடலை

அருணகிரிநாதர் தன்னுடைய ஞானக்கண்ணிஞல் பார்த்து சித்திரித்திருக்கிறர் இப்பாடலில். எனவே இப்பாடலில் என்ன தத்துவம் அடங்கி இருக்கிறது தெரியுமா?

அன்பே பக்திக்கு ஆதாரம்—ஆண்டியாய் திகழும் ஆண்டவன் கருணைக்கடல்—எண்ணற்ற கோடி உயிர்களும் அன்பிற்கு கட்டுப்படாமல் இருக்கவேமுடியாது —அன்பின் சக்தி ஆண்டவனின் சக்தியைக்காட்டிலும் மேலானது—அன்பில் விளைவதுதான் உண்மையானதும் இணையில்லாததுமான சாந்தியாகும்—வேற்றுமையை வேருடன் அழிக்கும் சக்திதான் இறைவனின் நிஜஸ்வருபமாகும்—ஒன்றுமையென்பது வேற்றுமையை பாராட்டாமலிருப்பது என்பது அல்ல, உண்மையிலேயே வேற்றுமை கிடையாது என்பதேயாகும்—மெய்ப்பொருளாகிய பரம்பொருளைக்காட்டிலும் வேறு பொருளே கிடையாது—எனவே தோன்றுவதெல்லாம் இறைவனின் திருவிளையாடலேயாகும்.

அத்தகைய பெருமை வாய்ந்த முருகப்பெருமானின் எண்ணிலா கோடி திருவிளையாடல்களில் ஆறுபடை வீடுகளிலுள்ள நாலாவது வீடாகிய திருவேரகம் என்னும் சுவாமிமலையில் நடந்த

ஈசருடன் ஞானமொழி பேசும்

திருவிளையாடலையே புகழ்கின்றார் அருணகிரிநாதர் இந்தப் பாடலில்.

முதன் முதலில் ஸகல ஸௌபாக்யங்களையும் அளிக்கும் குமரனின் சீர்பாத மஹிமையை

வேதா முதல் விண்ணவர் சூடு மலர்ப்பாதா

என்று வர்ணித்து, இரண்டாவதாக குமரனின் ஞானமும் பக்தியும் சேர்ந்த ச்ருங்கார ரஸத்தை வர்ணிக்கின்றார்.

ப்ரும்மாவிலிருந்து தொடங்கி முப்பத்து முக்கோடி தேவர்களும் தங்களுடைய சிரஸில் முருகனுடைய மலர்போன்ற ம்ருதுவான திருவடிகளையே அலங்காரமாகத் தரித்துக்கொண்டிருக்கிறார்கள். தத்வமோவெனில் முருகனையே யாவரும் குலதெய்வமாக போற்றி வருகிறார்கள் என்பதாகும்.

தவிர பெருமையை எடுத்துக் கூறும்பொழுது கீழிலிருந்து தொடங்கி மேலாக உள்ளது வரையில் சொல்வதே உலக இயல்பு. ஆனால் இங்கு ப்ரும்மாவிலிருந்து விண்ணவர் வரையில் என்று சொல்லியிருப்பது முருகப் பெருமானின் மாறிலாத கருணையே முருகனின் பெருமையினையும்விட பெரிது என்பதை எடுத்துக்காட்டவேயாகும்.

மேலிருந்து கீழ்இரங்கி வருவதே தெய்வீக கருணையாகும்–மழையானது எவ்விதம் மலை–காடு–பூமி– என்று பாராமல் எல்லாவிடங்களிலும் பொழிகின்றதோ அதுபோலவே முருகப்பெருமானும் தன்னுடைய சீர்பாதங்களை மேலோன் கீழோன், என்று பாராமல் யாவருக்கும் தங்கள் தலைமேல் அலங்காரமாகத் தரிக்கும் பாக்கியத்தைத் தந்தருளுகிறார்.

அதுபோலவே முருகனுடைய பாதங்களைவிட மஹிமைவாய்ந்தது வள்ளி தேவியின் பாதங்கள். குறவர் குலத்தில் தோன்றிவளர்ந்த மின்னற்கொடி போன்ற மெல்லிய இடையையுடைய வள்ளிதேவியின் பொற்பாதத்தை தன்னுடைய தலைமேல் அலங்காரமாக வைத்துக்கொள்கிறுர் முருகப்பெருமான்.

ச்ருங்கார ரஸத்தின் உச்ச நிலையில் முருகப் பெருமானவர் வள்ளிதேவியுடன் பர்யங்கத்தில் அமர்ந்துகொண்டு சல்லாபம் செய்துவரும்பொழுது, வள்ளிதேவியின் பாதங்களின் அழகானது முருகனின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு விடுகிறது. இந் நிலையில்

தாள் கண்டார் தாளேயே கண்டார்

என்று கம்பர் கூறியதுபோல் முருகனின் பன்னிரு த்ருஷ்டிகளும் வள்ளிதேவியின் இரு பாதங்களேயே நாடி நிற்கின்றன.

எனவே ச்ருங்கார ரஸமானது வள்ளிதேவியிடம் மிளிர்விட்டுத் திகழும்பொழுது வள்ளிதேவியின் பாத மஹிமையானது மேலோங்கி காணுதற்கரிய காட்சி யாக விளங்குகிறது.

வள்ளிதேவியின் பாதமானது ஒளிப்பெருக்கினுல் சூர்யனுகவும்—அமிர்தமயமாய் இருப்பதால் பூர்ண சந்திரனுகவும்—சிவப்பு நிறத்தினுல் செவ்வாயாகவும் —சரணமடைந்தவர்களுக்கு ஸெம்மியனுன புதனுகவும் —அப்படியே அருளுகின்ற குருவாகவும்—கவித்தன் மையை உண்டுபண்ணுகிற மருதாணி ரஸத்தை வெளி வரச் செய்கின்றபடியால் சுக்ரனுகவும்—மெள்ள மெள்ள நடக்கும் தன்மையைக் கொண்டமயால் சனி

யின் தன்மையை அடைந்ததாகவும்—பாதபூஜை செய்பவர்களுடைய அஞ்ஞானத்தை அழிப்பதில் ராகு வாகவும், கேதுவாகவும் விளங்குகிறது. எனவே நவக்ரஹங்களும் வள்ளிதேவியின் திருவடியிலேயே லயத்தையடைந்துயிருப்பதால், வள்ளிதேவியின் பாத பூஜையே நவக்கிரஹ பூஜையாகும்.

அதுபோலவே வள்ளிதேவியின் பாதத்தில் சங்க ரேகை—சக்கிரரேகை—பத்மரேகை—மத்ஸ்ய ரேகை—அபரிமிதமான அழகு ஆகியவைகள் காணப்படுகின் றன. அனைத்தும் எதற்காக? குழந்தைகளாகிய எண்ணற்ற உயிர்களை உயிருக்கு உயிராய் காப்பாற்று வதற்கல்லவா.

எனவே வள்ளிதேவியிடம் ச்ருங்கார லீலை செய் யும் முருகப்பெருமான் வள்ளிதேவியின் பாத அழகில் ஈடுபட்டு மனதை பறிகொடுத்து அவ்வள்ளிதேவியின் பாதங்கள் தன்னுடைய சிரஸில் நன்ருக அமையும் வண்ணம் வைத்துக்கொண்டு சயனம் செய்கின்றபடி யால்

குறமின் பதசேகரனே

என்கின்ருர். இத்தகைய வர்ணனையை இங்கு கூறிய தின் தத்வமோவெனில், தர்மம்—அர்தம்—காமம்—மோக்ஷம்—என்ற நான்கு புருஷார்த்தங்களில் மோக்ஷ மென்பதே மேலானதாகும். காமத்தைச் சொல்லி அதுக்கு அடுத்தபடியாக மோக்ஷத்தை கூறியிருப்ப தால் காமசுகத்தை நுகராதவன் மோக்ஷத்தை அடை வது அரிது என்பதேயாகும். பீஷ்மாசார்யர் போல இந்திரியத்தை யாரால் அடக்கமுடியும்.

எனவே க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்துகொண்டே தர்மபத்தினியிடம் மேலான ச்ருங்காரரஸத்தை காண்ப

வனே சஞ்சலமற்ற மனதையுடையவஞக ஆகி தர்ம நெறியில் நின்று வழுவாமல் பக்திரஸத்துடன் கூடிய ஞானரஸத்தைக் காண்பான் என்பதே சாஸ்திரத்தின் பரமஸித்தாந்தமாக இருப்பதால் பாட்டில் முருகனே

குறமின் பதசேகரனே

என்று புகழப்படுகின்றது என்பதை மஹான்கள் நன் கறிவார்கள் அன்றே. எனவே

வேதா முதல் விண்ணவர் சூடு மலர்ப்பாதா

என்பதினுல் கர்மமார்கத்தின் பரமதாத்பர்யம் முருகப் பெருமானின் திருவடிகளைத் தலையில்சிரோபூஷணமாக அணிந்து கொள்வதே தாஞகும் என்றும்,

குறமின் பதசேகரனே

என்பதினுல் ச்ருங்கார ரஸத்தோடு கூடிய இல்லற வாழ்க்கையிலேதான் நாம் மேலான பக்திரஸத்தை இறைவனிடத்தில் காணலாமென்றும் இருப்பதினுல், முருகனின் ச்ருங்கார ரஸத்தை வர்ணித்துக்காட்டி, அதன் முலமாக நமக்கு இம்மாயா உலக வாழ்க்கை யிலுள்ள அபிமானத்தை அடியோடு விடும்படி செய்ய வழிகாட்டுகிருர் அருணகிரிநாதர்.

ஆதலால் முருகனைநாம் எல்லா நிலையிலும் எல்லா வற்றிலும் காண்கிறேம்.

பக்தியிலும் முருகன்—கர்மாவிலும் முருகன்—ஞானத்திலும் முருகன்—ஞான அனுபவத்திலும் முருகன்—நாதத்திலும் முருகன்—நாதமுடிவிலும் முருகன்—மௌனத்திலும் முருகன்—நீ என்பதிலும் முருகன்—நான் என்பதிலும் முருகன்—என்று முருகன் திகழ்கின்ருன்.

ஆதலால் முருகப்பெருமானேவெனில் ஒரு ஸமயம் 'வேதா முதல் விண்ணவர் மலர் சூடும் மலர்ப்பாதனுக' விளங்குகிருன்.

மற்ருெரு ஸமயம் 'குறமின் பதசேகரனுக' காட்சி அளிக்கிருர்.

அதுபோலவே ஒரு ஸமயம் நெஞ்சைக் கொள்ளை கொள்ளும் வண்ணம் 'ஈசருடன் ஞானமொழி பேசும் ஞானபண்டிதனுக காட்சி அளிக்கிருர்' அன்ருே.

இவ்விதம் காணுதற்கு மிகவும் அரிதாகிய காட்சியை அளிக்கின்ற முருகனைப் பார்த்து சிவபெருமான் அழைப்பதையே அருணகிரிநாதர்

நாதா குமரா நமஎன்றரனுர்
ஓதாய் எனவோதியதெப்பொருள்தான்

என்று புகழ்கின்ருர் பாட்டில். மேலும்

ப்ரும்ம தந் மங்களம்பரம்

என்பதினுலும்,

பவித்ராணும் பவித்ரம்யோ
மங்களாணும் சமங்களம்

என்ற சாஸ்திரத்தை அனுஸரித்து பரிசுத்தத்திற்கு பரிசுத்தமாகவும், மங்களங்களுக்கெல்லாம் பரம மங்களமாகவும், எல்லாவற்றையும் மேலான பரிசுத்த வஸ்துவாகச் செய்துவைக்கும் மந்திரத்தையே முருகப்பெருமான் சிவபெருமானுக்கு உபதேசம் செய்திருளினுர் அன்ருே! அந்த மந்திரமோ வெனில்,

ஸர்வே வேதா: யத்பதமாபநந்தி-
தபாம்ஸி ஸர்வாணி சயத்வதந்தி-
யதிச்சந்தோ ப்ரம்மசர்யம்சரந்தி-

தத்தே பதம் ஸங்க்ரஹேண
ப்ர்வீமி-ஓமித்யேதத்.

ஏதத்யேவாக்ஷரம் ப்ரம்ம
ஏதத்யேவாக்ஷரம் பரம்
ஏதத்யேவாக்ஷரம் ஞாத்வா
யோ யதிச்சதி தஸ்ய தத்

என்ற கதோபநிஷத் மந்திரத்தாலும், அப்படியே

ஏதத்வை ஸத்யகாம பரம் ச
அபரம் ச ப்ரும்ம யதோம்கார:
ய: புநரேதம் த்ரிமாத்ரேண
ஓமித்யேதே நைவ அக்ஷரேண
பரம் புருஷம் அபித்யாயீத

என்ற ப்ரச்ஞோபநிஷத் மந்திரத்தாலும், அப்படியே

ஓமிதி ப்ரம்ம—ஓமிதீதம்ஸர்வம்

என்ற யஜுர்வேத ஆரண்ய மந்திரத்தாலும், அப்படியே

தத்யதா சங்குநா ஸர்வாணி
பர்ணாநி ஸம்த்ருண்ணாநி
ஏவம் ஓம்காரேண ஸர்வாவாக்
ஓம்கார ஏவ இதம் ஸர்வம்

என்ற சாந்தோக்ய ச்ருதி மந்திரத்திலும், அப்படியே

ஸர்வம் ஓம்காரஏவ, த்ரிகாலாதீதம்
ததப்யோம்காரஏவ.
அமாத்ரச்சதுர்த்தோவ் யவஹார்ய:
ப்ரபஞ்சோபசம: சிவோ-

அத்வைத ஏவமோம்கார
ஆத்மைவ ஸம்விசத்யா-
த்மநாத்மானம் ய ஏவம்
வேத ய ஏவம் வேத

என்று மாண்டுக்ய வேத மந்திரத்திஞலும்

ஓம் இத்யேகாக்ஷரம்ப்ரஹ்ம

என்ற கீதா சாஸ்திரத்திஞலும்

மஹாமஹிமையுள்ள

"ஓம்" காரத்தையே

ஸகலத்திற்கும் மூலகாரணமாயும் ஸாக்ஷியாயும் போதிக்கப்படுகிறது.

வேதங்களுக்கே மூலகாரணம் 'ஓம்'காரம். ஆத்ம லாபத்தைக் காட்டிலும் மேலான லாபம் இல்லவே யில்லைஎன்பதே வேதங்களின் பரமஸித்தாந்தமானபடி யிஞல், மஹர்ஷிகளிஞல் ப்ரம்ம ஸாக்ஷாத்காரத்திற்கு 'ஓம்' காரத்தையே ஏழு கோடி மந்திரங்களுக்கும் மேலான மந்திரரத்னமாக தேர்ந்து எடுக்கப்பட்டு அநு ஸந்தானம் செய்யப்பட்டு வருகிறது.

அத்தகைய 'ஓம்' காரமே எங்கும் வியாபித்திருக் கிறது. இந்த த்ருச்யமான ப்ரபஞ்சமானது முடிவில் சப்த ப்ரபஞ்சத்திலேயே லயத்தை அடைந்து விடு கின்றபடியால் சப்த ப்ரபஞ்சமானது 'அ'கார—'உ' கார—'ம'காராத் மகமான 'ஓம்'காரத்தில் அடங்கி விடுகின்றது.

அந்த 'ஓம்'காரத்தையே மஹாமஹிமை தங்கிய 'ப்ரணவம்' என்று வேதங்கள் கோஷிக்கின்றன. 'ஓம்' காரமே ப்ரம்மவாசக சப்தமாகும். எனவே

ஓம்தத்ஸதிதி நிர்தேச: ப்ரம்மண:
த்ரிவித: ஸ்ம்ருத:

என்ற கீதா சாஸ்திரமானது ப்ரம்மத்திற்கும் அக்ஷரத்திற்கும் அபேதத்தையே போதிக்கின்றது அன்றோ.

எனவே 'ஓம்'காரத்தின் ஸ்வருபமே சரவணபவ என்ற மந்திரத்தின் ஸ்வருபமாகும். இத்தகைய மஹா மஹிமையுள்ள

'சரவணபவ' என்ற ஷடக்ஷரீ மந்திரத்தையே குமரக்கடவுளானவர் சிவபெருமானுக்கு உபதேசித்தருளினர்.

ஆதலால் 'சரவணபவ' என்பதே ப்ரணவமாகும். இப்ப்ரணவமே முமுக்ஷுக்களுக்கு பரமதியான மந்திரமாகும்.

ப்ரம்மவித் ப்ரம்மைவ பவதி

என்ற மந்திரத்தை அனுஸரித்து நிஷ்கள ஸுப்ரமண்யத்தை அறிந்த ஞானியானவன், நிஷ்களபரசிவஸ்வருபியாகாகவே இருக்கிருன் என்று தெரிகின்றபடியால், 'சிவோஹம்' என்ற 'ஸோகம்' பாவனையாகிய உபாஸனையே எல்லாவற்றிற்கும் மேலான உபாஸனையாகும். தவிர

ஹம்ஸ: ஸோஹம் ஸோஹம் ஹம்ஸ:

என்ற மஹாமந்திரத்தையே ரிஷிகள் 'அஜபா' வித்யை என்று போதிக்கின்ருர்கள்.

இந்த வித்தையில் சக்தியாகிய வள்ளியைக் காட்டிலும் வேறுபடாததான நிஷ்களமான ஸுப்ரமண்யத்தையே 'ஹம்ஸ:' என்ற பதத்தின் தத்வமாக போதிக்கப்படுகின்றன.

அதாவது 'ஹம்ஸ:' என்ற மந்திரமே 'நான்' என்பதாகும். 'நான்' என்ற ஆத்மஸ்வரூபமே 'ஹம்ஸம்' என்ற மந்திரத்தின் உட்பொருளாகும்.

தவிர 'ஹம்ஸ: ஸோஹம் ஸோஹம்ஹம்ஸ:' என்ற மந்திரத்தின் அனுஸந்தானமே

ஸுப்ரம்மண்யோஹம்

என்ற அனுபவமுமாகும். அத்தகைய அனுபவத்தின் ஸ்வரூபலக்ஷணமே

சரவணபவ

என்ற மஹாமந்திரமாகும். இந்த மந்திரத்தில் ஸகலமும் அடங்கிவிட்டன.

'ஷடக்ஷரீ' என்கிற மந்திரத்தைக் காட்டிலும் மேலான மந்திரமே கிடையாது.

எனவே ஸுப்ரமண்ணிய ஸ்வாமியே பரமேச்வரனுடைய உபாஸனு மூர்த்தியாயும் ஸத்குருவாயும் விளங்கிவருகின்ருர் என்பதின் பெருமையானது இந்தப்பாட்டில் சொல்லப்படுகிறது.

சக்தியில்லையேல் சிவன் இல்லை. சிவன் இல்லையேல் சக்தி இல்லை. சக்தியே சிவம்-சிவமே சக்தி என திகழ்கின்றது.

சக்தி தத்வமானது மேலோங்கி நிற்கும்பொழுது சிவ தத்வமானது தலை வணங்கி நிற்கிறது. அது போலவே சிவ தத்வமானது மேலோங்கி விளங்கும் பொழுது சக்தி தத்துவமானது தலைவணங்குகிறது காரணமோவெனில், சிவபெருமானுனவர்தபோமஹிமையினுல் பராசக்தியை தன்னுள் அடக்கி எல்லாச் சக்திகளுக்கும் மேலான சக்தியாக விளங்கும் பொழுது அச்

சிவபெருமானுடைய சக்தியனைத்தும் ஆறு செஞ்சுடர் களாக வெளிவந்தது.

அதுபோலவே அன்னை பராசக்தியானவள் தன் னுடைய தபோமஹிமையினுல் சிவபெருமானை தன்னுள் அடக்கி எல்லா சக்திகளுக்கும் மேலான சக்தியாக பாஸித்துவரும்பொழுது அப்பராசக்தியினுடைய சக்தி யனைத்தும் சக்திவேல் ரூபமாகவெளிவந்து ஆறு செஞ் சுடர்களாய் விளங்கும் முருகனிடம் அளிக்கப்பட்டது.

எனவே 'சக்தியும் சிவனும்' சேர்ந்து 'சிவ சக்தி யாய்' விளங்குகிறது. இம்மாபெரும் சக்தியையே ஸுப்ரமண்ய ஸ்வாமியென்றும், குமரனென்றும், முரு கனென்றும், குகன் என்றும், கந்தன் என்றும், புகழ்ந்து போற்றப்படுகின்றன.

இத்தகைய மஹாமஹிமையுள்ள சக்தியின் வடி வமே ஆறு அக்ஷரங்களை ஸ்வரூபமாகக் கொண்ட

சரவண பவ

என்று மந்திரமாக பவித்தது. இம்மந்திர ரூபமான குமரனை சிவபெருமானேவெனில்

ஓம் அசிந்த்ய சக்த்தயே நம:

என்று சொல்லித் தலைவணங்குகின்றார்என்றால் என்னே குமரனின் பெருமை.

ஆதலால் சக்தியின் ஸ்வரூபமே குமரன் ஆவான். ஆத்ம சக்தியை அடைந்த பரம ஞானிகளே! குமரனின் சக்தி விசேஷத்தை அறிந்து அனுபவிப்பவர்கள்.

இத்தகைய மஹா மஹிமையுள்ள குமரனை எவ் விதம் உபாஸிப்பது, ஞானப் பழமாகவா? அல்லது சக்தி ஸ்வரூபமாகவா? அல்லது வேல் ரூபமாகவா?

அல்லது வள்ளிதேவயானை கூடவா? அல்லது ஞான பண்டிதனுகவா? அல்லது நாதரூபமாகவா? அல்லது கலாரூபமாகவா? அல்லது விந்துரூபமாகவா? அல்லது பால ஸுப்ரமண்ய லாவண்ய மூர்த்தியாகவா? அல்லது பழனியாண்டியாகவா? அல்லது சூரஸம்ஹார மூர்த்தி யாகவா? பார்வதி பாலகனுகவா? அல்லது நம்முடைய வீடுகளையும் உள்ளத்தையும் நிறைத்து வைக்கிற செல் வக் குமரனுகவா? என்று சிந்தனையில் ஈடுபடுவதைக் காட்டிலும்

அடியார்களுக்கு குமரன் எளியவன்

என்ற மனுேபாவத்தில் நாம் முருகனை உபாஸிப்பதே மேலான உபாஸனையாகும். அதுவேதான் மஹான்கள் கடைப்பிடித்துவரும் வழியுமாகும்.

இவ்வித மனுேபாவத்துடன் நாம் உபாஸித்தால் தான் நாம் 'கந்தர் அநுபூதியில்' லயிக்க முடியும். தவிர நம்முடைய உள்ளத்திலும் குமரன் மாறி மாறி எல்லா ரூபங்களிலும் தோன்றியவண்ணமாகவே யிருந்து கொண்டு நம்மைப் பேரின்ப வெள்ளத்தில் முழ்க வைப்பான்.

ஆனுல் சிவபெருமானும் பார்வதிதேவியும் உபா ஸிக்கும் பாக்கியமே உண்மையில் பாக்கியம் ஆகும்.

அன்னை பராசக்தியின் மடியில் லீலா விநோதம் செய்துவரும் குமரனைப்பார்த்து சிவபெருமான்குமரனை தானுகவே அனுபவிக்கும் பொருட்டு தன்னுடைய திருக்கரங்களையும் அன்பினுல் நீட்டி-"குழந்தாய் குமார என்னிடம் வா" என்று அழைக்கும் பொழுது குமரனுே வெனில் அன்னை பராசக்தியின் மடியிலிருந்து அதி வேகமாய் சிவபெருமானுடைய மடியை அடைவார்.

சிவபெருமானும் குமரனை மார்புடன் அணைத்துக் கொண்டு உச்சிமுகர்ந்துகுமரனின் மழலைச்சொற்களைக் கேட்டு அமுதமாகிய கடலில் முழ்கியிருப்பார்.

இதைப்போலவே பராசக்தியும் சிவபெருமானுடைய மடியிலிருந்து குமரனை மீண்டும் அடைந்து மனம் மகிழ்வாள். தத்வமோவெனில் 'ஷடக்ஷரீ' மஹா மந்திரத்தை ஏகமாக வைத்து உபாஸிக்க முடியாது. 'ஷடக்ஷரீ' மந்திரம் நெருப்பு மயமானது. அம்மந்திரத்தைப் பிரித்துதான் உபாஸிக்க முடியும்.

இதனுல்தான் அம்மந்திரமானது ஆறு சுடர்களாக வெளிவந்த பொழுது ஒருவர் பின் ஒருவராக மாறிமாறி முடிவில் அன்னை பராசக்தியை அடைந்து அப்படியே அன்னை பராசக்தியின் ஞானப் பாலைக் குடித்து உபாஸனுமூர்த்தியாக மாறினது.

எனவே 'சரவணபவ' என்ற மந்திரத்திலுள்ள முதல் இரண்டு அக்ஷரமாகிய 'சர' என்பதை சக்தி கண்டமாக சாஸ்திரங்களில் போதிக்கப்படுகின்றது. அதுபோலவே நடுவிலுள்ள இரண்டு அக்ஷரமாஹிய 'வண' என்பதை குமரகண்டமாகவும், அப்படியே முடிவிலுள்ள இரண்டு அக்ஷரமாஹிய 'பவ' என்பதை சிவ கண்டமாகவும் சாஸ்திரங்கள் போதிக்கின்றன.

மேலும் 'சரவணபவ' என்ற மந்திரத்தில் சக்தி கண்டமே முதல் ஸ்தானத்தை வஹிப்பதினுல்

மாத்ரு தேவோ பவ

என்ற வேத மந்திரத்தை அனுசரித்து ஸகலத்திற்கும் மூலகாரணம் அன்னை பராசக்தியே ஆவாள் என்பதையும், அப்படியே

பித்ரு தேவோ பவ

என்ற வேதமந்திரத்தை அனுஸரித்து சிவபெருமானுன வர் 'சரவணபவ' என்ற மந்திரத்தில் மூன்ருவதான சிவ கண்டமாக விளங்குகிருர் என்பதே மந்திர சாஸ்திரத் தின் பரம தாத்பர்யமாகும்.

எனவே சிவசக்தியும் சேர்ந்து விளங்கும் தத்து வமே ஸுப்ரமண்ய ஸ்வாமியின் மேலான தத்துவ மாகும்.

ஆதலால் பரதேவதையாகிய அன்னை பராசக்தி யினுடைய ஸ்வருபமே 51 மாத்ருகா அக்ஷரங்களாகும். அவைகளோவெனில் 'அ' காரத்தில் தொடங்கி 'க்ஷ' காரத்தில் முடிவை அடைகிறது. எனவே 51 மாத்ருகா அக்ஷரங்களும் எட்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக் கின்றன.

அவைகளோவெனில்:— அவர்கம்-கவர்கம்—ச்சவர் கம்-டவர்கம்—தவர்கம் - பவர்கம்—யவர்கம் – சவர்கம்— என்று சொல்லப்படும்.

முதலாவதாகிய 'அ' முதல் 'அ:' வரையிலுள்ள அ வர்கத்தை உயிர் எழுத்துக்கள் என்றும் ஸ்வரம் என்றும் சொல்லுவார்கள்.

உயிர் எழுத்துக்கள் ஆக மொத்தம் 16 ஆகும். அதுபோலவே கவர்கத்திலிருந்து தவர்கம் வரையில் ஒவ்வொரு வர்க்கத்திலும் 5 எழுத்துக்களாக ஆக மொத்தம் 25 அக்ஷரங்கள் விளங்குகின்றன.

அப்படியே 'ய'வர்கத்தில் 'யரலவ' என்று நான்கு எழுத்தும், சவர்கத்தில் 'ச ர ஸ ஹ ள க்ஷ' என்ற ஆறு எழுத்தும் சேர்ந்து ஆக மொத்தம் 51 மாத்ருகா அக்ஷரங்களைக் கொண்டதாக பாஸிக்கிறது.

வேதங்களுடைய ஜீவநாடியே 51 மாத்ருகா அக்ஷரங்களாகும். இம்மாத்ருகா மந்திரங்கள் விரிவடையும் பொழுது எண்ணிலா கோடி வேதங்களாக மாறுகின்றன. அதாவது சப்தரூபமாகத் திகழ்கின்றன. அனைத்தும் 'அ-உ-ம' காராத்மகமான மூன்று மாத்திரைகளைக் கொண்ட 'ஓம்' காரத்திலேயே லயத்தை காண்கின்றன. தவிர

ஓம் இத் யுமேதி

என்பதினால் உமாதேவியானவள் ப்ரணவருபமாகவே தோன்றுகிருள். எனவே 'அ-உ-ம' என்பதில் உள்ள 'உ' காரமானது உயிர் எழுத்துகளில் ஐந்தாவது எழுத்தாக விளங்கி

நமசிவாய

என்ற பஞ்சாக்ஷரத்திற்கு உயிர் நாடியாகவுள்ள 'ம' காரத்தையே நாடிநிற்கிறது. 'உ' காரமாகிய சக்தியும் 'ம' காரமாகிய சிவனும் ஒரே தத்வமாய் பாஸித்துக்கொண்டு, உபாஸித்து 'வரும் மூர்த்தியோவெனில் 'அ' காரமாகிய ஸுப்ரமண்ணிய மூர்த்தியே ஆகும்.

அக்ஷராணும் அகாரோஸ்மி

என்ற கீதா சாஸ்திரமேஇதில் மேலான ப்ரமாணமாகும்.

மேலும் 'சர' என்பது சக்தி கண்டமாக இருப்பதாலும், அந்த சக்தியினிடமிருந்தே விஷ்ணுவினுடைய தசாவதாரங்கள் வெளிவந்தபடியினுலும் விஷ்ணு தத்துவமானது சக்தி தத்துவத்தில் அடங்கி 'சர' என்ற அக்ஷத்திற்குள் அடங்கி விடுகின்றன.

இதனுல்தான் அருணகிரிநாதர் திருப்புகழில்

அகரமுமாகி அதிபனுமாகி அதிகமுமாகி
அகமாகி அயனெனவாகி அரியெனவாகி

அரனெனவாகி அவர் மேலாய்..........

என்றும் அப்படியே

அகரமுதலென வுரைசெய் ஐம்பத்தோ
ரக்ஷரமும் அகில கலைகளும் வெகுவிதங்
கொண்ட தத்துவமும் அபரிமித சுருதியு
மடங்குந் தனிப்பொருளை எப்பொருள
மாய........

என்றும் புகழ்ந்து போற்றி மகிழ்கிருர்.

இத்தகைய மஹாமஹிமையுள்ள

சரவணபவ

என்ற மந்திரமானது சக்தி கண்டம்-குமர கண்டம்-சிவகண்டம் என்று பிரிக்கப்பட்டு விளங்கி வருகின்ற படியால் ஸுப்ரமண்யஸ்வாமியானவர் இச்சா சக்தி-க்ரியா சக்தி-ஞானசக்தி என்ற மூன்று சக்தி ருபமாகவும், அப்படியே ஜாக்ரம்-ஸ்வப்னம்-ஸுக்ஷுப்தி என்ற மூன்று விதமான அவஸ்தா ஸ்வருபமாகவும், அப்படியே மேல் கூறிய அவஸ்தைகளுக்கு அபிமானிகளாய் விளங்குகின்ற விச்வன்-தைஜஸன்-ப்ராக்ஞன் என்று பிரித்து சொல்லப்படும் மூன்றுவிதமான த்வம் பதார்த்தமான ஜீவனுகவும், அப்படியே மேல் கூறிய அவஸ்தைகள் ஏற்படுவதற்கு மூலகாரணமாய் விளங்கும் ஸத்வம்-ரஜஸ்-தமஸ் என்று மூன்று குணங்கள் ருபமாகவும், விளங்கி வருகிருர்.

எனவே ஸகல தேவதைகளும் 'ஷடக்ஷரீ' மஹாமந்திரத்தில் அடங்கிவிட்டபடியால்' ஸகல தேவதைகளுக்கும் ஆதார பூதமாகிய ஏழுகோடி மந்திரங்களும் 'ஷடக்ஷரீ' மந்திரத்தின் முன்னிலையில் தலைவணங்கு

கின்றது. 'ஷடக்ஷரீ' மந்திரத்தின் சக்தியானது மற்ற மந்திரங்களில் அநுப்பிரவேசித்திருப்பதால் தான் மற்ற மந்திரங்களெல்லாம் சக்தியுடன் உலகில் திகழ் கின்றன.

எண்ணற்ற கோடி உயிர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளும், ஒரு மாபெரும் திவ்ய காட்சி யையே நினைவூட்டுகிறார் அருணகிரிநாதர்

நாதா குமரா நம என்றரனார் ஓதாய்
எனவோதிய தெப்பொருள்தான்

என்பதினால் இந்தப்பாட்டில்.

ஒருசமயம் ப்ரும்மாவானவர் சிவபெருமானைக் கண்டு தர்சிக்க மஹா கைலாசம் சென்றார். அப்போது திருக் கைலை வாயிலில் விளையாடிக் கொண்டிருக்கும் குமரனைத் துச்சமாகத் தள்ளிவிட்டு உள்ளே சென்றார்.

உடனே கோபமடைந்த குமரனோவெனில் ப்ரம்மா வின் மமதையை அடக்க எண்ணங்கொண்டு, ப்ரும்மா திரும்பி வருவதையே எதிர்பார்த்துக் கொண்டு வாயி லில் காத்திருந்தார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் ப்ரும்மாவும் சிவபெரு மானைத் தர்சனம் செய்துவிட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தார்.

அதனைக் கண்ட குமரனோவெனில் மிகக் கோபத் துடன் "நான்முகனே! சிவபெருமானை தரிசிக்க வரும் யாவரும் எம்மிடம் விடைபெற்றுக் கொண்டே உள்ளே செல்லும்பொழுது, நீர் மாத்திரம் ஏன் எம்மிடம் விடை பெறாமல் உள்ளே சென்றீர்? நீர் மட்டும் அதற்கு விதி விலக்கா என்ன?" என்று கேட்டார்.

உடனே ப்ரும்மாவோவெனில் மமதையுடன் குமரனிடம் "குமரா! எனது பெருமையை நீ அறியாய்? எம்மாலேயே இவ்வுலகமெல்லாம் படைக்கப் பட்டிருக்கிறது. எமது சக்தியை நீ கடுகளவும் அறியமாட்டாய். நான்கு வேதங்களையும் ஒரே ஸமயத்தில் ஓதும் சக்தியை வாய்ந்தவன். நீ குழந்தை. எனவே பெரியோர்கள் காரியத்தில் தலையிடாதே. மேலும் திருக்கயிலையின் உள்ளே செல்வதற்கு நான் யாரைக் கேட்க வேண்டும்" என்று மமதையுடன் பேசினார்.

உடனே அதிக கோபத்தினை அடைந்த குமரனோவெனில், "ப்ரும்மாவே! மமதையானது உமது மெய்யுணர்வை மறைத்திருக்கிறது போலும். குமரனின் பெருமையை அறியாத நீர் எதையுமே அறிய சக்தியுடையவராக ஆகமாட்டீர்.

வேதத்தை ஓதுகிறேன் என்று சொன்னீரே, அப்படியானால் 'ஸ்வரம்' என்று சொல்லப்படும் 'ஓம்'காரம் எதைப் போதிக்கின்றது. அதன் பொருள்தான் என்ன? என்று வினவினார்.

குமரனின் கேள்வி ப்ரும்மாவை அதிரச் செய்தது. குமரன் கேட்கக்கூடிய கேள்வியா இது? அதுவும் நான்முகனாகிய என்னை நோக்கி? என்று எண்ணினார் ப்ரும்மாவானவர். தனக்கு நிச்சயமாக குமரனிடம் தோல்வியே ஏற்படப் போகிறது என்பதையெண்ணி அவருடைய நான்முகமும் வாடினது. சிக்கலான நிலைமையில் அகப்பட்டுக் கொண்டோமே என்று பிரமித்து நின்றார்.

நெருப்பினைத் தெரிந்தோ தெரியாமலோ தொட்டாலும் சுடும் என்பது போல இதுவரையிலும் 'ஓம்காரமாகிய நெருப்பைத் தொடாமலேயே அதனைக்

கொண்டு காலத்தை நயனம் செய்து வந்த ப்ரும்மா வானவர் ப்ரணவத்தின் பொருளை சரிவர உரைத் தார் இல்லை.

உடனே குமரனுேவெனில் "ஹே வீரபாஹு! இந்த நான்முகனை சிறையில் கொண்டுபோய் இடுவாய்" என்று கட்டளையிட்டு வீரகேஸரியை ப்ரும்ம பதவியில் அமர்த்தி தாமே ஒருவிதமான குறைவின்றி ப்ரும்ம பதவியை நடத்தி வந்தார்.

பிறகு வெகுநாட்களுக்குப் பின்பே சிவபெருமான் நந்திகேச்வரர் மூலம் ப்ரும்மாவின் பரிதாபமான நிலைமையை அறிந்தார்.

உடனே சிவபெருமான் குமரனை அடைந்து நடந்த வ்ருத்தாந்தங்களை அறிந்தார். ஆனுல்குமரனின் கேள்வியாகிய "ஓம்காரத்தின் பொருள் என்ன" என் பதை மட்டும் அறியவில்லை. எனவே ப்ரணவத்தின் பொருளைக் குமரனிடம் சிவபெருமான் வினவினுர்.

அவ்வேளையில் குமரனுேவெனில் "தந்தையே, நீர் எமக்குத் தந்தை என்ற முறைமையில் பூஜிக்கத் தகுந் தவர். ஆனுல் ப்ரணவத்தின் மெய்ப்பொருளை என்னிட மிருந்து தாங்கள் அறிய இச்சைப்படுவதால் நான் குருவாகவும்—நீர் சிஷ்யனுகவும் இருக்கவேண்டியது அவசியமாகும் அன்ருே. குரு என்ற நிலை வரும் பொழுது, அந்நிலையானது தந்தை, வயது, பெரியவன், சிறியவன் என்ற வரம்பினை யெல்லாம் கடந்ததாகவே இருக்கின்றது. எனவே நீர் சிஷ்யனுகவும் நான் குரு வாகவும் இருத்தல் மிகவும் முக்கியமான படியால் நீர் இப்பொழுதே சிஷ்யபாவத்தை அடைவீர்" என்று கூறினுர்.

உடனே சிவபெருமான் குமரனைத் தமது வலது

கர்த்தில் வைத்துக்கொண்டு அஞ்சலி செய்த வண்ண மாய் தியான நிஷ்டையில் இருந்தார். அப்பொழுது குமரனும் அதிரகஸ்யமாக சிவபெருமானின் வலது செவியில் ப்ரணவத்தின் மஹா மஹிமையை எடுத்து உபதேசித்தருளினுர்.

இத்தகைய ஞானமொழியை ஈசருடன் பேசும் லீலையையே எடுத்துக் காட்டுகிறது ஆறுபடை வீடுகளில் நான்காவதாக விளங்கும் மஹாமகிமையுள்ள திருவேரகம் என்னும் சுவாமி மலே.

இங்கு குமரன் குருபரனுகயிருந்து தன்னுடைய ஞானமொழியினுல் சிவபெருமானே மலேக்க வைக்கிருர். திருக்கைலேயில் சிவபெருமான் வீற்றிருக்கும் அழகினே

கல்லாலின் புடையமர்ந்து நான் மறை
ஆறங்க முதற் கற்ற கேள்வி—
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனே
இருந்தபடி இருந்து காட்டிச்-
சொல்லாமற் சொன்னவரை நினேயாமல்
நினேந்து பவத் தொடக்கை வெல்வாம்

என்று இவ்வாறு வர்ணிக்கிறது திருவிளேயாடல் புராணம்.

சின்முத்திரையினுல் 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்தை உபதேசித்தருளும் ஞானப்பொலிவுடன் கூடிய சிவபெருமான் அஞ்சலி செய்த வண்ணமாய் தலே வணங்கி குமரனிடம் உபதேசம்பெற வீற்றிருக்கும் ஒரு மாபெரும் காட்சியின் அழகைப் பற்றிப் பேசு

வதா? அல்லது சிவபெருமானின் வலது கரத்தில் அமர்ந்து ஞானவேலை பொற்கரத்தில் தாங்கி உபதேசம் செய்ய அமர்ந்திருக்கும் வைபவத்தைப் பேசுவதா?

இல்லை, குமரன் உபதேசிக்கும் பொருளைப் பற்றி பேசவா? இல்லை சிவபெருமான், ''நாதா, குமரா, ஓதாய்'' என்று முருகனை அழைக்கும் அழகைப் பற்றிப் பேசவா? இல்லை அழைக்கும் மந்திரத்தின் பொருளைப் பற்றிப்பேசவா?எதைப்பற்றிபேசுவது? யார் பேசுவது? யாரால் பேசமுடியும். என்னவென்று பேசுவது? அண்ட சராசரங்களையும் படைக்கும் ப்ரும்மனின் கற்பனைக் கெல்லாம் கட்டுப்படாமல் கடந்து நிற்கும் காட்சி அன்றோ 'ஈசருடன் ஞானமொழி பேசும்' காட்சி இதனைப்பற்றி யாமோ பேசவல்லோம்.

பொருளின் பெருமையும் மஹிமையும் ஒரு பக்கம் இருக்கட்டும். குமரனின் திருவிளையாடலின் அழகே இங்கு புகழ்ந்து பேசுதற்குரியது.

குமரன் ஞானகுருவாய் வீற்றிருக்கும் அழகை என்னென்று கூறுவது? என்னென்று சொல்லி மகிழ்வேன்-நினைக்க நினைக்க அது உள்ளத்தில் இன்பத்தினையூட்டி எல்லா உயிர்களையும் முருகனின் அழகில் உரையும்படி செய்கிறது. எண்ணும்பொழுது உடலில் மயிர் சிலிர்க்கின்றது.

எங்கும் கண்டறியாத திவ்யமான காட்சியெல்லாம் குமரனிடத்தில் காண்கின்றார் சிவபெருமான். அவருடைய உள்ளத்தில் ப்ரும்மானந்தமாகிய கடல் பொங்கி எழுகின்றது.

ஞானபண்டிதனாய் விளங்கும் குமரனைப்பற்றி எவ்விதம் பேசுவது? எவ்விதம் அழைப்பது? எவ்விதம்

துதிப்பது? என்று எண்ணி எண்ணி மதுரமான வாக்கினுல் குமரனை சிவபெருமான் அழைப்பதையே அருணகிரிநாதர்

நாதா குமரா நம என்றரனுர்
ஓதாய் எனவோதிய தெப்பொருள்தான்?

என்கின்ருர்.

நாதஸ்வருபனே! யாவருக்கும் நாதனுய் விளங்குபவனே! வேதமந்திர ஸ்வருபனே! சப்தப்ரம்மமாய் விளங்குபவனே! என்று அழைத்தார்.

அதன்பின் சிவபெருமான்

குமாராய நம:

என்று சொல்லித் தலைவணங்கினுர். பொருளோவெனில் 'கு' சப்தத்தால் அறியாமையையும், 'மார' சப்தத்தினுல் அதை அழிப்பவனும் என்று கொண்டு அறியாமையை அழிப்பவனே என்ற அர்த்தத்தை க்ரஹித்துக் கொள்ளவேண்டும்.

எனவே சிவபெருமான் முருகனை நோக்கி

நாதா குமரா ஓதாய்

என்று அழைப்பதின் மனேபாவமோவெனில்

ஹே குமரா! உன்னுடைய ஸ்வருபத்தை ஒருவர் அறிந்ததுபோல் மற்றவர் அறிவதில்லை. வேதமந்திரத்தில் விளங்கும் நாதமும் நீயே. நாதஸ்வருபனும் நீயே. நாதத்தின் அடியிலும் நடுவிலும் முடிவிலும் நீயே விளங்குகிருய். நாதத்திலிருந்தே இவ்வுலகனைத்தும் தோன்றியது. எனவே நீயே எல்லாமாய் விளங்கி வருகிருய் அன்ருே.

இத்தகைய உன்னை நான்

குமாராய நம:

என்று நமஸ்கரிக்கின்றேன். ஏன் தெரியுமா? நீ ஒருவனே அறியாமையை அழிப்பவன். நான் ஞானமூர்த்தியாய் விளங்கினாலும்கூட என்னிடத்திலும் அறியாமை விளங்குகிறது. ஜகத்தை சிருஷ்டி செய்யும் ப்ரும்மாவினிடத்திலுள்ள அறியாமையே ஜகத்தை அழிக்கும் என்னிடத்திலும் நிலவி நிற்கிறது. எனவே ஜகத்தை பரிபாலிக்கும் விஷ்ணுவிடம் எங்களிடம் உள்ள அறியாமையே நிலவி நிற்கிறதென்பதை சொல்லவும் வேண்டுமா.

மும்மூர்த்திகளாகிய எங்கள் மூவருக்கும் அறியாமை 'ஓம்'காரம் என்னும் ப்ரணவத்திலேயே ஆகும்.

எனவே அரனும் அயனும் அரியும் அறியாதது ப்ரணவம். அரியும் அயனும் அறியாதது அரன். எனவே 'ஓம்'காரமாகிய ப்ரணவமதைக்கொண்டே அயன் ச்ருஷ்டி கர்த்தாவாக ஆகிறார். ப்ரணவத்தைக் கொண்டே அரியும் ஸ்திகர்த்தாவாக ஆகிறார். ப்ரணவத்தைக் கொண்டே நானும் ஸம்ஹார கர்த்தாவாக ஆகிறேன்.

எனினும் எங்கள் மூவருடைய அறியாமையும் 'ஓம்'காரத்தில் நிலவியே நிற்கிறது. எப்படியோவெனில், எவ்விதம் ஒருவன் தீபத்தை வைத்துக் கொண்டு இருள்வழியைக் கடக்கிறானோ அது போலவே நாங்களும் ப்ரணவத்தை வைத்துக் கொண்டே எங்கள் காரியங்களைச் செய்து வருகிறோம். தீபத்தைத் துணையாகக் கொண்டவன் தீபத்தின் ஸ்வருபமாகவோ, தீபத்தின் தத்வத்தை உணர்ந்தவனாகவோ ஆகிறான் இல்லை.

அதுபோலவே நாங்களும் ப்ரணவத்தின் பெருமையை யும் மஹிமையையும் அறிகிறோம் இல்லை.

ஹே குமரா! நான் இப்பொழுது உன்னை வேண்டு வது ஒன்றே ஒன்று. அறியாமையை அழிக்கின்ற வனாகிய உன்னிடத்தில் நான், ஐக்கியத்தை அடைய வேண்டும். எனவே 'ஸோஹம்'என்ற ஆத்மவித்யையே "நமஸ்கார சப்தமானது போதிக்கின்றபடியால் நான் உன்னை 'ஸோஹம்' பாவனையில் நமஸ்காரம் செய் கிறேன்.

தவிர நீ ஞானபண்டிதனாக யிருந்துகொண்டு ஞானோபதேஷ்டாவாக விளங்கி வருகிறாய் அப்பனே.

இத்தகைய மஹிமையுள்ள நீ எனக்கு மஹா மஹிமை தாங்கிய 'ஓம்' என்ற ப்ரணவத்தின் மஹிமை யையும் சக்தியையும் உபதேசித் தருளுவாய்.

ஹே குமரா! ஈசனாகிய நான் 'ஓம்'காரத்தின் ஸ்வ ரூபம் தெரியாமல் இருக்கக்கூடாது.

ஆதலால் எல்லா தெய்வங்களுக்கும் மேலான தாயும், எல்லாவற்றிற்கும் மேலான ஸ்தானமாயும்,ஏழு கோடி மந்திரங்களுக்கும் ஜீவநாடியாய் விளங்கிக் கொண்டிருக்கிறதாயும், எந்த மந்திரத்தை ஜபம் செய் தால் எல்லா மந்திரங்களையும் ஜபம் செய்த பலனை அளிப்பதாயும், எல்லாத் தெய்வங்களையும் பூஜித்த பலனை அளிப்பதாயும், பரம அனுக்கிரஹ மந்திர மாயும், காயத்திரீ ஸ்வரூபமாயும், ஸகல பாபங்களைப் போக்கடிப்பதாயும், ஸகல தர்மங்களுடைய ஸ்வரூப மாயும், பரம மங்களகரமாயும், மஹாவாக்கியங்களின் ஸ்வரூபமாயும், எந்த ஒரு மஹாசக்தி வாய்ந்த **ஷடக்ஷரீ** என்று சொல்லப்படும்

சரவணபவ

என்ற மஹாமந்திரமானது தனக்கு எதுவுமே நிகரில்லை என்று கோடி சூரியனுக்கொப்பான காந்தியுடன் பாஸித்து வருகிறதோ, அத்தகைய "ஷடக்ஷரீ" மந்திரத்தையே எனக்கு உபதேசித்தருள்வாய் அப்பனே.

ஹே குமரா! இத்தகைய மஹா மந்திரத்தின் உண்மையான மெய்ப்பொருளையே நான் உன்னை எனக்கு உபதேசித்து அருள்வாய் என்று தலை வணங்கி சிஷ்யபாவத்திலிருந்து வேண்டுகிறேன் என்கின்றார் சிவபெருமான்.

இவ்விதம் முருகப் பெருமான்,

ஈசருடன் ஞானமொழி பேசும்

திருவிளையாடலை அருணகிரிநாதர் ஞானக்கண்ணினால் பார்த்தார். அப்போது அவருடைய கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் ததும்பி வழிந்தது. அவருடைய சிந்தனையும் உள்ளமும் குமரனின் அழகைக் கவ்வியது. உடனே குமரனை நோக்கி

ஓர் எழுத்தில் ஆறு எழுத்தை
ஓதுவித்த பெருமாளே

என்று புகழ்ந்து ஹே குமரா! ஓம் என்னும் ப்ரணவத்தில் ரத்தினம்போல் புதைந்து கிடந்த

ச ர வ ண ப வ

என்ற ஷடக்ஷரீ ஆகிய ஆறு அக்ஷரங்களைக்கொண்ட மஹா மந்திரத்தை சிவபெருமானுக்கு ஓதினவன் அன்றோ நீ. அதன் மஹிமையை நான் அறியும் வண்ணம் உபதேசித்தருள்வாய் அப்பனே என்று வேண்டுகிறார்.

இவ்விதம் ஞானபண்டிதனுயிருந்து தன்னுடைய பொற்கரத்தில் ஞானவேலைத் தாங்கிவரும் முருகப் பெருமானை எல்லாம்வல்ல சிவபெருமான்

## நாதா! குமரா!!

என்று அழைத்து தலைவணங்கி குவிந்த செங்கையுடன் சீடனுகயிருந்து வரும் ஒரு மாபெரும் கண்கொள்ளாக் காட்சியை தன்னுடைய ஞானக் கண்ணினல் கண்டு களித்த அருணகிரிநாதர் செல்வக் குமரனைத் திருப் புகழில்

நாதவிந்து கலாதீ நமோ நம
வேதமந்த்ர ஸ்வருபா நமோ நம
ஞான பண்டித ஸ்வாமி நமோ நம
வெகுகோடி

என்று புகழ்ந்து கோடிக்கணக்கான வகையில் நமஸ் காரம் செய்கிருர்.

எனவே ஞானபண்டிதனய் விளங்கும் குமரனை 'எப்பொழுது கண் குளிரக் காண்போம்—எப்பொழுது கண்குளிரக் காண்போம்' என்று முப்பத்து முக்கோடி தேவர்களும் இரவு பகலாக காத்துக் கொண்டிருக்கின் றனர்.

திரு ஆவினன்குடியாகிய பழநிமலையில் ஞானப் பழமாய் தண்டாயுதத்துடன் நின்று கொண்டிருக்கும் குழந்தை குமரனே-திருவேரகம் என்னும் சுவாமி மலை யில் ஞானபண்டிதனயும் குருபரனயும் இருந்து கொண்டு அன்னை பராசக்தியை வியக்க வைக்கும் வண்ணம்

## ஈசருடன் ஞானமொழி

பேசித் திருவிளையாடல் செய்கிறார் அன்றோ.

குமரனுடைய 'ஈசருடன் ஞானமொழி பேசும்' திருவிளையாடலை நாம் காணவேண்டாமா? நாம் ஒருமுறை சுவாமி மலையிற்கு செல்வோமாகில் அந்த வினாடியே குமரனின் திருவுருவத்திற்கு அடிமையாகி விடுவோம். ஏன் தெரியுமா? குமரனை யார் என்று நினைத்தீர்கள்.

உலகத்திற்கெல்லாம் முதலாய்நின்ற
தனிப்பொருள் அல்லவா குமரன்.

குமரனைப்பற்றி பேசாத நூல் இல்லை! பேசாதா இடம் இல்லை! பேசாத உயிர்கள் இல்லை! காணாத கண்கள் இல்லை!

ஆகையினால் நாம் ஞானபண்டிதனைக் கண்ணாரக் கண்டு களிக்க சுவாமி மலையிற்கு செல்லவேண்டும். அங்கே நாம் முதன் முதலில் எதைக் காண்போம் தெரியுமா?

வேல் முருகா—வேல் முருகா—வேல் முருகா
வேல் முருகா—வேல் முருகா—வேல் முருகா

என்றும்

ஞானபண்டித ஸ்வாமி நமோ நம
ஞானபண்டித ஸ்வாமி நமோ நம

என்று ஓயாமல் அலையினைப்போல் கோஷமிட்டுக் கொண்டிருக்கும் பக்தகோடிகளாகிய பெருங்கடலினைக் காண்போம். அக்காட்சியானது ஞானபண்டிதனை நம்முடைய கண்களின் முன்னால் கொண்டுவந்து நிறுத்தும்.

இந்நிலையில் குமரனைக் கண்டு

எத்திக்கும் என் உளம் தித்திக்கும்
இன்பமே! என் உயிர்க்கு உயிராகும் ஓர்
ஏகமே! ஆனந்த போகமே! யோகமே!
என் பெரும் செல்வமே! நல்முத்திக்கு
முதலான முதல்வனே! மெய்ஞ்ஞான
மூர்த்தியே! முடிவிலாத முருகனே!
நெடியமான் மருகனே! சிவபிரான் முத்
தாடும் அருமை மகனே!...

என்று நாவாரச் சொல்லி உள்ளத்தில் பொங்கி எழும் பேரின்பத்தினை வாரி வாரி இறைக்கின்றார் திருஅருட் பாவையில் இராமலிங்க சுவாமிகள். எதற்காக? நாம் முருகனை அடைவதற்காக அல்லவா?

எனவே அடியார்களின் அருளினால்தான் நாம் ஞானபண்டிதனாய் விளங்கும் குமரனின் அருளைப் பெறமுடியுமே தவிர அன்னியில் முடியவே முடியாது.

ஆதலால் நாம் குருபரனாய் 'ஈசருடன் ஞானமொழி பேசும்' குழந்தை குமரனின் அருளைப் பெறுவதற்கு அந்தரங்க ஸாதனமாகவுள்ள தத்வமோவெனில்

அடியார்களின் பெருமையே ஆண்டவ
னின் பெருமையும் மஹிமையும்

என்பதேதான் ஆகும். ஆகஅடியார்களின் பெருமையை யெடுத்து உபதேசித்தருளுகிறார் அடுத்த பாட்டில்.

இந்த மனோபாவத்துடன் நாம் 'கந்தர் அநு பூதியை' பாராயணம் செய்து கொண்டிருப்போமாக.

இந்நிலையில் நாம் நம்முடைய உள்ளத்திலும் இல் லத்திலும் காண்பது எது தெரியுமா?

குழந்தை குமரன் ஈசருடன் ஞானமொழி
பேசும் திருக்கோலமேயாகும்.

பொற்கரத்தில் ஞானவேலும் - திருமேனியில் திருநீறும்—கைகளில் பொற்சலங்கையும்—கால்களில் பொற்சிலம்பும்—திருமார்பில் நவரத்தின மாலையுடன் பூணலும்—செந்தாமரை போன்ற முகத்தில் புன்னகையும்—கண்களில் கனிந்த அருளும் கருணு ரஸமும்-சிரஸில் மாணிக்கத்தினுல் ஜ்வலிக்கின்ற ஞானக்கொண்டையும் கொண்டு சிவந்த மேனியனுய்—சிவந்த பட்டு ஆடையனுய்—இன்னும் ப்ரும்மனின் கற்பனைக்கெல்லாம் அடங்காத அழகினையுடைய குழந்தை குமரனை ஞானபண்டிதனுய் நம்முடைய நெஞ்சில் காண்பதைவிட இந்த அரிதாகிய மானிடப் பிறவியில் நமக்கு என்ன மாபெரும் செல்வம் இருக்கிறது. ஒருவராலும் கவர முடியாத செல்வம் அன்ருே செல்வக்குமரன்.



# அடியார்களின் பெருமையே ஆண்டவனின் பெருமையும் மஹிமையும்

# 37



கிரிவாய் விடுவிக்ரம வேல்இறையோன்
பரிவா ரமெனும் பதம்மே வலையே
புரிவாய் மனனே பொறையாம் அறிவால்
அறிவாய் அடியோடும் அகந்தையையே.

**பதவுரை:**

மனனே—ஹே மனமே, கிரிவாய் விடு—கிரவுஞ்ச மலையைப் பிளந்த, விக்ரம வேல் இறையோன்—அதிபராக்கிரமத்தோடு கூடிய வேற்படையைத் தாங்கிய இறைவனாகிய முருகப் பெருமானின், பரிவாரம் எனும் பதம்—பக்தர்களாகிய அடியார்களின் திருக்கூட்டத்தைச் சேர்ந்தவன் என்று சொல்லப்படும் பதவியை, மேவலையே—அடைவதையே, புரிவாய்—(நீ)அடைய விரும்பி முனைவாயாக, அகந்தையை—நான் என்ற அகங்கார மாஹிய கொடியை, அடியோடும்-வேருடனே, பொறை ஆம்

அறிவால்-(பூர்வ ஜன்மாவில் செய்த நல்வினை தீவினை இவைகளால் வரும் சுக துக்கங்களை கர்ம வினையின் பயன் என்ற நினைவினால் இரண்டையும் சமமாகக் கருதி) பொறுமை என்னும் ஞானவாளினால், அறிவாய்-அறிந்து மீண்டும் வராமல் நீக்குவாயாக.

**தாத்பர்யம்:**

ஹே மனமே! முருக பக்தர்களில் நீயும் ஒருவனாயிருந்து அடியார்களின் கூட்டத்தில் மங்காத பொலிவுடன் விளங்கி, 'நான்' என்ற அகங்காரமற்றவனாய் ஆகி கந்தர் அநுபூதியில் லயித்திருப்பதை நான் என்றுதான் காணப்போகிறேனோ. அதற்குரிய நல்வழியை சொல்கிறேன் கேள்.

அடியார்களுக்கு முருகப் பெருமான் என்றென்றும் எளியவனே ஆவார். இதற்குக் காரணம் என்ன? பக்தர்களின் மூலமாகத்தான் குமரனின் பெருமையும் மகிமையும் தெரியவரும்.

இந்த நுட்பமான ரகசியத்தைத்தான் ஸ்ரீ ஆதி சங்கரரும் சிவானந்த லஹரியில்

பக்தேக்ஷு ப்ரகடித பலாப்யாம்

என்று சொல்கிறார்கள். அதாவது பக்தர்களின் மூலமாகத்தான் எல்லாம் வல்ல குமரனின் பெருமை தெரியவரும் என்கிறார்.

ஆனபடியால் பக்தர்களின் பெருமைதான் இறைவனுடைய பெருமையாகும். பக்தர்களின் சரித்திரமே இறைவனுடைய சரித்திரமுமாகும். இறைவனை விட்டு விட்டு பக்தர்களின் சரிதமுமில்லை. அதுபோலவே பக்தர்களை விட்டு விட்டு இறைவனின் சரிதமுமில்லை. எவ்விதம் வாக்கையும் அர்த்தத்தையும் பிரித்து பார்க்க

முடியாதோ, அதுபோலவே பக்தர்களைப் பிரித்து இறைவனுடைய மகிமையையும் கூறமுடியாது.

ஹே மனமே! முருகனுடைய பெருமையை புகழும் அடியார்களின் கூட்டத்தில் நீயும் ஒருவனுக விளங்குவாய். முருக பக்தர்களில் நானும் ஒருவனுக இருக்கிறேன் என்ற பெருமையுடன் வாழ்வாயாக. ஏன் தெரியுமா? பக்த கோடிகள் இருக்குமிடத்தில் புண்ணிய நதிகள் தலைவணங்குகின்றன. அடியார்களின் பாத ஸபர்சத்திஞல்தான் நதிகள் புண்ணிய நதிகளாக மாறுகின்றன. அவர்களுடைய சேர்க்கையினுல் நீ பரிசுத்தனுகி, அதன் மஹிமையினுல் முருகனைப் போற்றி வருவாய்.

அடியார்களுடைய ஸ்பர்ச மஹிமையினுல் நீ ராகத்துவேஷங்கள் அற்றவனுக வாழ்வாய். மேலும் ஸாதாரண நதியில் ஸ்னனம் செய்தால் தேக சுத்திதான் ஏற்படும். ஆத்ம சுத்தி உண்டாகாது. ஆனுல் அடியார்களுடைய பாததீர்த்தமாகிய நதியில் ஸ்னனம் செய்தால் ஆத்மசுத்தி ஏற்படுவதுமல்லாமல் முடிவில் கந்தர் அநுபூதியினையும் அடையலாம்.

ஹே மனமே! அடியார்களுடைய மஹிமையை நான் உனக்குப் புதிதாக எடுத்துச் சொல்லவில்லை.

அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஞானசம்பந்தர், ஆகிய மஹா புண்ணிய மூர்த்திகளான நால்வர்களின் பொன் மொழியைச் சொல்லுகிறேன். பொறுமையுடன் கேட்பாயாக.

விண்டொழிந்தன நம்முடை
வல்வினை விரிகடல் வருநஞ்சம்
உண்டிறைஞ்சுவானவர் தமைத்
தாங்கிய இறைவனை உலகத்தில்

வண்டு வாழ்குழல் மங்கையொர்
பங்கனை வலஞ்சுழியிடமாகக்
கொண்ட நாதன்மெய்த் தொழில்புரி
தொண்டரோடு இனிதிருந்தமையாலே

என்று சொல்கின்றார் சம்பந்தர். திருத்தொண்டர் களுடன் இனித்திருந்தமையினால் நம்முடைய கொடிய வினைகளெல்லாம் அழிந்துபோகின்றது என்கிறார்.

எனவே அடியார்களின் சேர்க்கையினால், அனுபவித்தே தீரவேண்டுமென்ற பூர்வ கர்மவினைகள் அனைத்தும் அழிந்து சக்தியற்றதாக மாறிவிடுகிறது அன்றோ.

அப்பர் சுவாமிகளோவெனில்,

உய்யப் போங்தேனுக்கும் உண்டுகொலோ
ஆரூர்த் திருமூலட்டானனுக்குப்
பொய்யன்பிலா அடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே

என்று தொண்டருக்குத் தொண்டராக இருப்பதே புண்ணியம் என்கின்றார். மேலும்

அடியேன் உன் அடியார்
நடுவுளிருக்கு மருளைப் புரியாய்.

என்றும். அதிசயத்தில்

அடியரில் கூட்டிய அதிசயங் கண்டாமே

என்கின்றார் மாணிக்கவாசகர். அடியார்களின் நடுவிலிருக்கும் பாக்கியமே பாக்கியமாகுமென்றும், அங்கேயே நாம் எல்லாவிதமான அதிசயங்களையும் காணலாம் மென்றும் இருப்பதினால் இறைவனிடம் அருளை யாசிக்கின்றார்.

தவிர அடியார்களுடன் கூடியிருப்பதையே இறைவன் இச்சிப்பதினுல் சிவபெருமானுனவர் சுந்தரருக்கு

தில்லைவாழ் அந்தணர் தம்
அடியார்க்கும் அடியேன்

என்று அடியெடுத்துக் கொடுத்தார்.

அதுமட்டுமா, சுந்தரரோவெனில் ஒவ்வொரு அடியார்களாகிய நாயன்மார்களின் பெயரைச் சொல்லி ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக அடியேன் அடியேன் என்று சொல்கிருர்.

இத்தகைய அடியார்களின் பெருமையை,

தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும்
அடியேன் என்று தொடங்கி... ஆரூரன்
அடிமை கேட்டுவப்பார் ஆரூரில் அம்மா
னுக் கன்பராவாரே.

என்று முடியும் திருத் தொண்டத் தொகையில் கண்டு அனுபவித்து மகிழ்வாய்.

ஹேமனமே, அடியார்களின் வாழ்க்கையே நல்வாழ்வாகும். ஏன் தெரியுமா? அவர்கள் வாழ்க்கையில் இறைவனைக் காண்கின்ருர்கள்.

அளவிலா பெருமையைக் கொண்ட அடியார்களின் பெருமையைச் சொல்லிச் சொல்லி, பெரியபுராணம் என்னும் மாபெரும் காவியத்தை எழுதி உலகிற்கு தந்தருளினுர் அருள் தெய்வமாகிய சேக்கிழார் சுவாமிகள். அடியார்களின் புகழைப் பாடுவதற்கென்றே அவதரித்த தெய்வமல்லவா சேக்கிழார் சுவாமிகள்.

ஹே மனமே, அடியார்களின் கூட்டத்தில் நீயும் ஒருவனுக இருப்பாய். அன்றி உலக வாழ்க்கையில் உழல்கின்றவனுகக் காலத்தை வீணுக்காதே.

குன்றெல்லாம் குமரன் விளையாடுகின்றான் என்பதை நீ அறியவில்லையா. 'குமரா! குமரா!' என்று அழைத்துப்பார். உன் உள்ளத்தில் குமரன் தோன்றுவான். பொய்யாகிய உலகில் நீ செல்லாதே.

குன்று தோறும் சென்று பார். கண்ணைக் கவரும் அடியார்களின் கூட்டத்தை அங்கே காண்பாய்.

'வேல் முருகா—வேல் முருகா' என்ற ஒலி எங்கும் நிலவுகிறதைப் பார். எத்தனை காவடிகள். எத்தனை வகை காவடிகள். முருகா முருகா என்று அடியார்கள் ஆரவாரம் செய்வதைப்பார்.

மெய்யெல்லாம் திரு நீறு அணிந்து ஞானப்பழமாய் திகழும் அடியார்கள் எத்தனை ஆயிரம். திருப்புகழைப் பாடிக்கொண்டே மலையேறும் அடியார்களுடன் நீயும் சேர்ந்துகொள்.

மனமே, மஹா பாபங்களை செய்து கொடியவனுகிய என்னை முருகன் ஆட்கொள்வாரா என்று கேட்காதே. தஞ்சமென்று சரணம் புகுவோர்க்கு முருகன் கை கொடுத்துத் தூக்கும் தெய்வமாக விளங்குபவன். எனவே முருகனுடைய பரிவாரங்களின் சக்தி முருகப் பெருமானையும் கடந்து நிற்கின்றது. அவ்வடியார்களை நீ சரணமடைவாய். உனது துன்பங்கள் அனைத்தும் மாயமாய் மறைந்து விடும். உனது வாழ்க்கையின் வெம்மையைத் தணிக்கச் செய்யும் அடியார்களின் சேர்க்கையை நீ அடைவாய்.

இவ்விதம் முருக பக்தர்களின் பெருமை யிருக்க, நீ அடையவேண்டிய இடம் அடியார்களின் கூட்டத்தையையேயாகும். அடியார்களின் கூட்டமே ஸத்ஸங்கமாகும். இதன் மஹிமையை ஸ்ரீ ஆதிசங்கரரும்

ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம்
நிர்மோஹத்வே நிஸ்சலிதத்வம்
நிஸ்சலிதத்வே ஜீவன் முக்தி:

என்று உபதேசித்தருளுகிறார்.

நல்லோர்களுடைய சேர்க்கை உண்டாகும்பொழுது இம்மாயா வுலகில் பற்றுதல் உண்டாகிறதில்லை. உலகில் பற்றுதல் இல்லாமை ஏற்பட்டால் மோகமற்ற நிலை உண்டாகி சிறிதும் சஞ்சலமிலாத நிர்மலமான ஞான நிஷ்டையும் உண்டாகிறது. பிறகு ஞான நிஷ்டையிலிருந்தே ஜீவன் முக்தி நிலையை அடைகிறான் மனிதன். எனவே இறைவனுடைய பக்தர்களின் சேர்க்கையே நல்ல சேர்க்கையாகும். அத்தகைய அடியார்களுடைய சேர்க்கையே முருகனின் திருவடிகளை அடைவதற்கு அந்தரங்க ஸாதனமாக விளங்குகிறது.

மேலும் 'நான்' என்ற அகங்காரமே மனிதனின் வாழ்க்கையை வீணாக்கிவிடுகிறது. அகங்காரமானது, தர்மத்தை அழிக்கும்--தீயகாரியங்களை செய்ய வைக்கும்-மஹான்களை துச்சமாகத் தள்ளும்படியும் பேசும்படியும் செய்யும்-தெய்வ-பக்தியைக் குறைக்கும்—செய்யத்தகாத காரியங்களைச் செய்யவைக்கும். இன்னும் அப்படியே எண்ணத்தகாத காரியங்களை எண்ண வைக்கும் அன்றோ.

அத்தகைய கொடிய அகங்காரத்தை பொறுமையாகிய மெய்ஞானத்தால்தான் ஒழிக்கமுடியும் என்பதினால்

பொறையாம் அறிவால் அரிவாய்
அடியோடும் அகந்தையையே

என்று சொல்கிருர் பாட்டில்.

மேலும் பாட்டில்,

அடியோடும் அரிவாய்

என்று சொன்னதிஞல் அகந்தையை ஒரு கொடியாக வர்ணிக்கின்ருர். பொருளோவெனில் ஒரு கொடியானது எவ்விதம் மேன்மேலும் படர்ந்துகொண்டே செல்லுமோ அதுபோலவே ஒருவனுடைய அகங்காரமும் கொடியைப் போல் மேன்மேலும் அதிகரித்துக் கொண்டேயிருக்குமே அன்னியில் குறையவே குறையாது. வேருடன் அரிந்தால்தான் கொடியானது படர்வதை நிறுத்தும். அது போலவே அகங்காரமும் அடியோடு ஒழிந்தால்தான் நாம் மெய்யறிவை அடைய முடியும்.

அதுபோலவே பாட்டில்,

அறிவால் அரிவாய்

என்று சொன்னதிஞல் அறிவானது வாளாகக் கருதப் பட்டது. அந்த வாளோவெனில் 'ஞானவாளே' ஆகும். அத்தகைய 'ஞானவாளை' அடைய பொறுமை வேண்டும். பொறுமையால்தான் நல்வினை தீவினை இவை களிஞல் வரும் இன்ப துன்பங்களை நாம் சமமாகக் கருதி ஞானமார்க்கத்தை அடைய முடியும்.

எனவே பேதபுத்தியிஞல் அகங்காரம் உண்டாகு கிறது. அத்வைத புத்தியிஞல் 'அகங்காரம்' அடியோடு அழிகிறது. நான் என்பதை இறைவனிடத்தில் கரைத்து விட்டால் அகங்காரம் அழிந்து எல்லாம் இறைவ ஞகவே பாஸித்துவிடும். ஆதலால் இறைவனை 'நான்' என்பதில் கறைத்து விடவேண்டும். அப்பொழுது 'எல் லாம் நானே-ஸர்வமும் நானே' என்ற மெய்ஞான போதம் உண்டாகி அத்வைத ஞான ஒளி சுடர் விட்டு உள்ளத்தில் எரிந்து கொண்டே யிருக்கும்.

எனவே ஹே மனமே! பேதத்தினுல் உண்டாகும் அகங்காரமாகிய கொடியை 'ஸர்வமும் முருகப் பெருமானே' ஆவான் என்ற மெய்யறிவாகிய ஞானவாளினுல் வேரோடு அறுத்துத் தள்ளுவாய்.

இத்தகைய மெய்ஞானம் உனக்கு உண்டாவதற்கு நீ என்ன செய்யவேண்டும் தெரியுமா? சொல்கிறேன் பொறுமையாகக் கேட்பாயாக.

கிரிவாய் விடுவிக்ரம வேல்இறையோன்
பரிவார மெனும் பதம்மேவலையே புரிவாய்

மனமே, கிரவுஞ்ச மலையைப்பிளந்துதள்ளின அதி பராக்ரமத்தோடு கூடிய வேலை தமது திருக்கரத்தில் தாங்கிவரும் இறைவனுகிய முருகப் பெருமானுடைய பரிவாரமாகிய பக்த கோடிகளின் கூட்டத்தைச் சேர்ந்தவன் நான் என்று சொல்லும் பெருமையுடன் கூடிய பதவியையே ஆசையுடன் அடைவாய். ஏனெனில் முருக பக்தர்கள்

பெருமையால் தம்மை ஒப்பார்
பேணலால் எம்மைப் பெற்ருர்
ஒருமையால் உலகை வெல்வார்
ஊனம்மேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்ருர்
அன்பினுல் இன்பம் ஆர்வார்
இருமையுங் கடந்து நின்ருர்
இவரை நீ அடைவாய்,

என்று அடியார்களின் பெருமையை இறைவனே எடுத்துச் சொல்கின்ருர் என்ருல் யாமோ அடியார்களின் பெருமையை எடுத்துச் சொல்ல வல்லோம்.

எனவே ஹே மனமே! இப்பயங்கரமான கலியுல கத்தில், முருகப் பெருமானைக் காட்டிலும் மேலான தெய்வமும் இல்லை, 'ஷடக்ஷரீ' என்பதைக் காட்டிலும் மேலான மந்திரமுமில்லை என்பதே பரம ஸித்தாந்த மாகும். இதில்

க்ருதேது ப்ரஹ்மஜிக்ஞாஸம்
த்ரேதாயாம் ஜாநகீ பதி:
த்வாபரே பகவாந் க்ருஷ்ண:
கலௌ ஸ்கந்த: ப்ரகீர்த்தித:

என்ற சாஸ்திரமே மேலான ப்ரமாணமாகும். தவிர

அடியார் நினைத்தபடியாடும் பெருமான்

என்று முருகனை அடியார்கள் புகழ்கின்றபடியால் நீயும் அடியார் கூட்டத்தில் சேர்ந்து ஒரு அடியாராக மாறி விடு. அங்கேதான் நீ இன்பத்தையும் அருளையும் காண் பாய். எல்லையில்லா மன நிம்மதியை அடைவாய். அங்கே நீ எல்லாவற்றையும் முருகனுகவே பார்ப்பாய். அடியார்களின் கூட்டத்தில்தான் நீ அரிதாகிய மானி டப் பிறவியின் முழுப்பயனையும் அடையமுடியும்.

நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்
நினையாது ஒருபோதும் இருந்தறியேன்

என்று சுந்தரர் மனமுருகி சொல்லியதுபோல் நீயும் சுந் தரமூர்த்திநாயனருடைய வாக்கிலேயே நிற்பாயாக.

மேலும் 'அறிவால் அறியவேண்டியது' ஆண்ட வனின் பெருமையும்—அடியார்களின் பெருமையுமே யாகும். ஆண்டவனின் பெருமையை நாம் அடியார் களின் மூலமாகத்தான் அறியமுடியும். அதுபோலவே

அடியார்களின் பெருமையை நாம் ஆண்டவனின் மூல மாகத்தான் அறியமுடியும்.

பூசலார் நாயனரின் திவ்ய சரிதத்தைப் படித்துப் பார். அப்பொழுது தெரியும் ஆண்டவனின் பெருமை எத்தகைய மஹிமையினைக் கொண்டது என்று.

எனவே ஹே மனமே! கடைசியாக நான் சொல்வது யாதெனில், நீ அடியார்களின் கூட்டத்தில் ஒருவனுக ஆகி இடைவிடாமல் முருகப் பெருமானின் பெருமையைப் பாடிக்கொண்டேயிருப்பாயாக. அப்பொழுது தான் நீ

## கந்தன் கருணையை

அடைந்து 'கந்தர் அநுபூதியில் ஒன்ருேடென்ருய் கலந்து பேரின்பக் கடலில் மூழ்கியிருக்க முடியு மன்ருே!



# கொடும்பாவியையும் தடுத்து ஆட்கொள்ளும் கருணையின் பெருக்கு

# 38



ஆதாளியை யொன் றறியேனை அறத்
தீதாளியை ஆண்டது செப்பு மதோ
கூதாள கிராத குலிக் கிறைவா
வேதாள கணம் புகழ் வேலவனே

**பதவுரை:**

கூதாள—கூதாளம் என்னும் மலரைத் தலையிலும் மலர் மாலையாகவும் அணிந்த, கிராதகுலிக்கு—வேடகுலத்திலே வளர்ந்த வள்ளிதேவியிற்கு, இறைவா—உபாஸனா மூர்த்தியாகிய நாதனே, வேதாள கணம்—பூதம்-பிரேதம்-பேய்-பிசாசு-ப்ரஹ்மராக்ஷஸ் என பலவகைகளான வேதாள கணங்களெல்லாம் ஒன்று கூடி, புகழ்—புகழ்ந்து துதிக்கின்ற, வேலவனே-வேற்படையையுடையவனே, ஆத(ம்) ஆளியை—அறியாமையை ஆள்கின்றவனும், ஒன்று(ம்)அறியேனை—நல்லதாகிய மெய்யறிவு ஒன்றும் அறியாத வெறும் மூடனை

கியவனும், அறத் தீது ஆளியை—முழுதும் (த்ரி கரணத்தால்) கொடுமையையே கையாளுபவனுயும் இருக்கிற என்னே, ஆண்டது—(ஒரு பொருளாக எண்ணி) தடுத்து ஆட்கொண்டருளிய கருணேயின் பெருமையை, செப்புமதோ-இத்தகைய மஹிமையை வாய்ந்தது) என்று சொல்லத்தான் முடியுமோ? ஒரு காலத்திலும் முடியாது என்பது திண்ணம்:

**தாத்பர்யம்:**

வள்ளிதேவியின் ஸௌந்தர்யத்தை வர்ணித்து அப்படியே வெற்றி வேலாயுத மூர்த்தியாகிய முருகப் பெருமானின் சக்திவிசேஷத்தைப் புகழ்கின்ருர் அருணகிரிநாதர்.

மலேகளில் வளரும் புஷ்பங்களில் மிகவும் விசேஷமான பூவிற்கு 'கூதாளம்' என்று பெயர். இப்புஷ்பத்திலேயே மேலான அழகை காண்கின்ருள் வள்ளிதேவி. எனவே வள்ளிதேவியானவள் தன்னுடைய நீண்ட கருங்கூந்தலே ஜடையாகச் செய்து அச் சடையை சுற்றி கூதாளி புஷ்பத்திஞல் அலங்காரம் செய்து கொள்வாள். அதுபோல அவ்வழகிய கூதாளி புஷ்பத்தைத் தொடுத்து மாலேயாகவும், காதில் குண்டலமாகவும் கைகளில் வளேயல்களாகவும், கங்கணங்களாகவும், கால்களில் காப்புகளாகவும் அணிந்து கொண்டு அபரிதமிதமான அழகுடன் விளங்குவாள்.

மின்னல் கொடியினேப்போல் தோன்றும் வள்ளிதேவியானவள் கூதாள புஷ்பத்திஞல் தன்னேமுழுதும் அலங்காரம் செய்து கொண்டு ஒரு மலர்க்கொடியைப் போல் காட்சி அளித்து எல்லோருடைய உள்ளங்களேயும் மலரச்செய்கிருள்.

இரக்கமற்ற வேடர்களுடைய மனதை யெல்லாம் கனியைப்போல் கனிந்துருகும்படி செய்கிருள் தன்

னுடைய அபரிச்சின்னமான அழகின் மஹிமையினுல் வள்ளிதேவி. எல்லையற்ற ஒரு பெரும் ஆற்றலை வேடர்களுடைய உள்ளத்தில் எழும்படி செய்கிருள்.

மேலும் வள்ளிதேவியானவள் வேடர்குலத்திற்கு தெய்வமாகத் திகழ்கின்ருள். அத்தகைய வள்ளிதேவியிற்கு உபாஸனு மூர்த்தியாக முருகப்பெருமான் விளங்குகிருர். அப்படியே அன்புக்குரிய நாதனுகவும் இருக்கிருர்.

இமைப்பொழுதும் என் நெஞ்சில்
நீங்காதான் தாள் வாழ்க

என்று மாணிக்கவாசக சுவாமிகள் சொல்லியது போல், வள்ளிதேவியானவள் இமைப்பொழுதும் கூட வீணுக்காமல் இறைவனுகிய முருகப்பெருமானையே தன்னுடைய நெஞ்சில் நிலைநிறுத்தி போற்றிவணங்குவாள்.

மேலும் வள்ளிதேவியின் அஸாதாரணமான கருணையின் வைபவத்தையே எடுத்துக் காட்டுகிறது பாட்டில் 'கூதாளம்' என்ற பதமானது.

பக்தர்களுடைய தீனக்குரலானது முதலில் வள்ளியின் செவியில்தான் விழுகிறது! இதற்குக் காரணம் முருகனின் பாதிபாகமாக சக்தியாகிய வள்ளிதேவி இருக்கிருள். இறைவனின் இடதுபாகம் இச்சா சக்தியாகிய வள்ளிதேவியாக இருப்பதால், வள்ளிதேவியிற்கே பக்தர்களுடைய உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களின் தாரதம்யம் நன்கு புலப்படும் அன்ருே.

'எனவே 'கூதாளம்' என்ற பதத்திலுள்ள 'கூ' என்ற எழுத்தானது பக்த கோடிகளுடைய தீனக் குரலையே முக்கியமாகக் குறிக்கின்றது.

அத்தீனக் குரலின் பரம ரகஸ்யத்தை உள்ளவாறு அப்படியே உணருபவள் வள்ளிதேவி. ஆகையால் எப்படி 'ராகத்தை அனுஸரித்தே தாளம் போகிறதோ' அது போலவே வள்ளிதேவியும் பக்தர்களுடைய மனோபாவத்தை அனுஸரித்தே அப்பக்தர்களுடைய இச்சையைப் பூர்த்தி செய்கிருள்.

கூறும் அடியார்கள் வினைதீர்க்கும்
முகம் ஒன்றே

என்ற பெருமையுடன் முருகப்பெருமான் விளங்கி வருவதாலும் அம்முருகப்பெருமானுடைய பெருமையையும் மஹிமையையும்உலகில் எடுத்து ப்ரகாசப்படுத்திக் கொண்டேயிருப்பவர்கள் பக்தர்களாக இருப்பதால், அப்பக்தர்களுடைய மனோபாவத்திற்கு ஒரு விதமான குறைவுமில்லாமல் அவர்களுடைய மனோபாவத்தைக் காப்பாற்றி வருகிருள் அன்னை வள்ளிதேவியானவள்.

தவிர அடியார்களுடைய தீனக்குரலில் மகத்தான அர்த்தங்கள் குடிகொண்டிருப்பதாக எண்ணங் கொண்டு, அவ்வடியார்களுடைய துதியிற்கு மேலான அர்த்தத்தில் பொருளைக் கொண்டு அடியார்களின் மஹிமையை வெளிப்படுத்துபவள் வள்ளிதேவி.

ஆகையால் 'கூதாளம்' என்பதிலுள்ள 'தாளம்' என்ற பதத்திற்கு, அடியார்களுடைய மனோபாவத்திற்கு ஏற்றவாறே வள்ளிதேவியானவள் அநுக்ரஹித்து வருவாளே தவிர, அதற்கு மாருக ஒருகாலும் இருக்க மாட்டாளென்பதே பரம ஸித்தாந்தமாகும்.

மேலும் 'தாளமானது' மாறி தனிப்பட்டமுறையில் யிருக்குமே யானுல், அந்த இடத்திலேயே 'பாவமும் ராகமும்' செத்து விடுகின்றதல்லவா. அதுபோலவே

அடியார்களுடைய தீனக்குரலைக் கேட்கும் பொழுது வள்ளிதேவியானவள் அதற்கு ஏற்றவாறு அவ்வடியார்களுடைய மனோபாவத்தில் தன்மைய பாவத்தை அடைகிறாள். இச்சா சக்தியான வள்ளிதேவியோ வெனில் அடியார்களுடைய யோகக்ஷேமத்தை வஹிக்கும் பொழுது அடியார்களுடைய இச்சையை எதிர்பார்க்காமலே அவர்களுக்கு வேண்டிய ஸகலவிதமான ஸௌகர்யங்களையும் சுகத்தையும் அளிக்கின்றாள்.

எனவே அடியார்களுடைய மனோபாவத்தை அனுசரித்தே நிற்பவள் வள்ளிதேவி, காரணமோவெனில் முருகப்பெருமான்.

அடியார் நினைத்தபடி யாடும் பெருமான்

அல்லவவா. அடியார்களுக்காகவே முருகன் திகழ்கின்றான். ஆதலால் அடியார்களிடம் காட்டும் கருணையெல்லாம் தம் நாதனாகிய முருகப்பெருமானுக்கு செய்யும் தொண்டேயாகுமெனக் கருதுபவள் வள்ளிதேவி. தனது சிந்தை பிரியாத இறையோனாகிய முருகனின் திருமேனியைத் தனது நெஞ்சில் வைத்து பூஜிப்பவள் வள்ளி.

இவ்வளவு அர்த்தத்தில் நம்மைக்கொண்டு செல்லுகிறது 'கூதாளம்' என்ற பதமானது. எனவே

கூதாள கிராதகுலிக் இறைவா

என்று உள்ளமுருகி முருகனை அழைக்கின்றார் அருணகிரிநாதர்.

தவிர முருகப்பெருமான் சூரபத்மாஸுரனுடன் செய்த யுத்தத்தில் மடிந்த அஸுரர்கள் எண்ணற்ற கோடிகள். சூரஸம்ஹாரமானதும் போர்க்களத்தை

பார்க்குங்கால் மலைகள் போல் பிணங்கள் குவிந்து கிடந்தன. ஒரே ப்ரேத பூமியாகக் காணப்பட்டது.

அப்பிணங்களை உண்டு புசித்து களிதீர அப்பிணங்களின்மேல் ஒரே வேதாள கணங்களாக இருந்தன. வேதாள கணங்கள் எண்ணற்ற வகைகளை கொண்டது. அவைகளை ஸுப்ரஹ்மண்ணிய மால மந்திரத்தில்

பூத ப்ரேத பிசாச வேதாளப்ரும்ம
ராக்ஷஸான் துஷ்டக்ரஹான்......

என்றும், தேவீ மாஹாத்ம்யதளத்தில்,

நாஞுபூத ப்ரேத பிசாசகணஸகஸ்ர
ஸஞ்சாரிணி

என்றும், அப்படியே கந்தர் சஷ்டிகவசத்தில்

பில்லி சூனியம் பெரும்பகை யகல
வல்லபூதம் வலாஷ்டிகப் பேய்கள்
அல்லற்படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைக டின்னும் புழக்கடை முனியும்
கொள்ளி வாய்ப் பேய்களும் குறளைப்
பேய்களும் பெண்களைத் தொடரும் பிரம
ராக்ஷதரும் அடியனைக்கண்டால் அலறிக்
கலங்கிட இரிசி காட்டேரி இத்துன்ப
சேனையும் எல்லினுமிருட்டிலும் எதிர்
படுமண்ணரும் கனபூசை கொள்ளும்
காளியோடனைவரும் விட்டாங் காரரும்
மிகுபலபேய்களும் தண்டியக்காரரும்
சண்டாளர்களும் என்பெயர் சொல்லவும்
இடிவிழுந்தோடிட

என்று பலவாருகக் கூறப்பட்டுள்ளன. இத்தகைய வேதாளங்களை யெல்லாம் நடுங்க வைத்துக் கொண்டிருந்தான் சூரபத்மன். ஆனுல்அவ்வேதாள கணங்கள் நிர்ப்பயமாகயிருந்துகொண்டு போர்க்களத்தில்குவிந்து கிடக்கின்ற பிணங்களாகிய மலையைத் தின்று தின்று தங்கள் பசியைத் தீர்த்துக்கொள்கின்றன. அவ்வேளை யில் அவ்வேதாள கணங்களினுல் புகழப்படுவது முருகனின் வேற்படையேயாகும். எவ்விதம் வேலைப் புகழ் கின்றன தெரியுமா?

ஆஹா! என்னே ஆச்சர்யம்! ஒரே ஒரு வேலானது மஹாமாயா சக்திவாய்ந்த சூரபத்மனின் எண்ணற்ற கோடி அஸுரக்கூட்டங்களை பிணமலை கூட்டங்களாக செய்து விட்டனவே. திரிபுரஸம்ஹாரம், தேவாஸுர யுத்தம் முதலியவைகளிலும் கூட இத்தகைய விருந்தை நாம் கண்டது இல்லை. வியப்பையும் அடைந்ததில்லை. பயத்தையுண்டு பண்ணும் ஆயுதங்களுக்கெல்லாம் பயத்தையே உண்டு செய்கின்றது முருகனின் வேல் அன்ருே!

நாம் மீண்டும் நமது ஜன்மாவை ஸபலம் செய்து கொள்ள வேண்டுமாளுல் நாம் உபாஸிக்க வேண்டியது முருகப்பெருமானின் மஹா மஹிமை தங்கிய மாபெரும் வேலேயாகும். வேலிருக்க நமக்கு இனி பயமில்லை. இனி எத்தனைநாள்தான் இம்மாதிரி வேதாள கணங்களாக அலைவது. இனியும் எங்களுக்கு வேறு பிறப்பு தேவையில்லை. இப்பிறவியிலேயே எம்மை ஆட்கொள்வாய் முருகா. என்ன என்ன பாபங்கள் செய்து நாங்கள் வேதாள கணங்களாக பிறந்தோமோ தெரியவில்லை. ஹே முருகா! நினது புனிதமான வேலினுல்குத்தப்பட்டு உயிரினை யிழந்தஅஸுரர்கள் நற்கதி

யையே அடைவார்கள் என்பதில் ஐயமில்லை. எனவே நினது வேலினால் குத்தப்பட்ட அடையாளங் களை ஒவ்வொரு பிணத்திலும் காண்கின்றோம். ஆத லால் ஒவ்வொரு பிணத்தையும் நினது ப்ரஸாதமாகவே நாங்கள் கருதி புசித்து வருகிறோம். எனவே இதுவே எங்களுடைய கடைசி பிறப்பாக நாங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஒரே மனதுடன் எண்ணுகிறோம். நாங் கள் எண்ணுகின்றது போலவே எங்களுடைய ஜன் மாவை ஸபலம் செய்வாய் முருகா. ஹே வெற்றிவேலா ஹே ஞானவேலா! ஹே சக்திவேலா!! நாங்கள் உன்னை துதிப்பது நினது செவியில் விழவில்லையா அப்பனே! என்று சொல்லி வேதாள கணங்கள் முருகனைப் புகழ் கின்றன. இதைத்தான் பாட்டில்

வேதாள கணம் புகழ் வேலவனே

என்று சொல்கிறார் அருணகிரிநாதர்.

இத்தகைய முருகனின் கருணையை எண்ணி எண்ணி அருணகிரிநாதர்

ஆதாளியை ஒன்றறியேனை அறத்
தீதாளியை ஆண்டது
செப்புமதோ?

என்கின்றார்.

ஹே முருகா, நான் எப்பேர்ப்பட்டவன் தெரியுமா? நானும் உன்னைப்போலவேதான் இருக்கிறேன். நீயோ வெனில் ஞானத்தை ஆள்பவனாய் இருக்கிறாய். நானோ வெனில் 'ஆதம்' என்று சொல்லப்படும் அறியாமையை ஆண்டுவருகிறேன். ஸகலவிதமான அறியாமையும் என்னிடம் குடிகொண்டிருக்கிறது. வீண் பேச்சைப் பேசியே என் காலத்தைக் கழிக்கின்றேன். அறியாமை யினால் என்னுடைய அறியாமையானது மேன்மேலும்

பெருகிக்கொண்டே போகிறது. தவிர சாஸ்திர ஞான மில்லாதவன்.

அதுமட்டுமல்ல. நல்லது எது? தீயது எது? என்ற பகுத்தறிவில்லாத முழுதும் மூடனுகவும் இருக்கிறேன். என்னுடைய மூடத்தன்மையானது அங்கியர்களையும் கெடுத்து விடுகிறது.

ஹே முருகா! ஒன்றும் அறியாத நான் குருடனுக இருந்துகொண்டு மற்றவர்களுக்கு ஞானமார்க்கத்தை புகட்ட முன்வர துணிந்தவனுக இருக்கிறேன். இதை விட மேலான ஸாகஸ கார்யம் என்ன வேண்டும்.

இதெல்லாம் போதாதென்று தீதாளியாகவும் இருக் கிறேன். இதை நினைக்கும்பொழுது என் நெஞ்சே வெடித்து விடும்போல் இருக்கிறது. மனதினுலும் வாக் கினுலும் காயத்தினுலும் இடைவிடாமல் மற்றவர் களுக்குக் கொடுமையையே இழைத்துவரும் பெருங் கொடியோன் நான். தீமையை செய்து அதில் இன் பத்தை காண்பவன் நான். கடவுள் என்று ஒருவர் இருக் கிருர் என்னும் தன்மையைக் கடுகளவும்கூட உணராத வன். நெஞ்சில் அன்பில்லாதவன்.

தவிர மனசாட்சியாக கடவுள் இருக்கிருர் என் பதை சிறிதும் நினையாமல் தீயநெறியாகிய, டம்பம்– கர்வம்-பேராசை - வஞ்சகம்-வெகுளி – பொய்–கொலை– களவு-பொருமை முதலிய அநேகவிதமான தீயகாரியங் களைச் செய்து வருகிறேன். வஞ்சனை செய்வதில் என் னைப்போல் மேலானவன் யாருமே இல்லை. இதனுல் தானே ஔவைத் தாயானவள்

வஞ்சனைகள் செய்வாரோ
டிணங்க வேண்டாம்

என்று சொல்லுகிறுர்கள். முருகா! என்போன்ற தீயவர் களிடத்தில் சேர்ந்தால் அது மாபெரும் தீவினையையே உண்டு பண்ணுமென்றல்லவா ஔவைத் தாயானவள்

தீயாரைக் காண்பது வுந் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே-தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே அவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது

என்று சொல்லி என்போன்ற தீயவர்களிடத்தில் சேரக் கூடாதுஎன்று சொல்லுகிறுர்கள். தமிழ்த்தாயேஎன்னை கைவிட்டு விட்டபொழுது ஹே முருகா! நீ மட்டும் என்னை எவ்விதம் ஆட்கொண்டாய். தாயினும் நல்ல வனுக நீ இருக்கிருயே. உன்னுடைய கருணையிற்கு நான் எவ்விதம் பாத்திரமாக ஆவேனோ தெரிய வில்லையே.

அடியார்களுக்குத்தான் நீ எளியவன்என்று நினைத் தேன். ஆனுல் நீயோவெனில் என்போன்ற தீயவர்களி டத்திலேயே உன்னுடைய கருணை முழுவதையும் முதன்முதலில் காட்டுகிருய். கருணுஸ்வருபனே!நினது கருணையின் தன்மையை எப்பேர்ப்பட்டது? என்று நான் எடுத்துச் சொல்வேன். இத்தகைய பெருமை வாய்ந்தது என்று எடுத்துச் சொல்லும் தரத்தோடு கூடியதா நினது கருணை.

வரம்பில்லாத கருணையைக் கொண்டவனே! வரம் பில்லாத எல்லையில் என்னை வைத்து வரம்பில்லாத உன்னுடைய கருணையினுல் என்னை ஆட்கொண்டாய்.

இஃது எப்பேர்ப்பட்டது என்பதை நான் அறி யேன் அப்படி அறிந்தாலும் அதை எடுத்து என்னுல் சொல்லமுடியாது என்பதே பரம தாத்பர்யமாகும்.

ஆதலால் முருகனின் கருணையை யாரால் எடுத்து சொல்லமுடியும். மிகவும் கொடியவர்களையும் மன்னித்து ஆட்கொள்பவன் செல்வக் குமரன் அல்லவா. இகபர சௌபாக்ய்ம் அதனை அருளும் அருள்மலையாகவும் மேலான ஆற்றலைத் தரும் தெய்வமாகவும் திகழ்கின்றான் செல்வக்குமரன்.

எனவே முருகனை பூஜிப்பவர்களுக்கு ஒருவிதமான பயமும் உண்டாகாது. வேதாள கணங்கள் பாடினால் அதன் பொருளின் ரகஸ்யத்தை அறிந்து முருகன்மகிழ்கிறான். அவ்வேதாள கணங்கள் செய்யும் ஆரவாரமோ வெனில்

டுண் டுண் டுடுடுடு டுடு டுடுடுடு
டுண்டு டுண்டு டிண் டிண்
டெனக கொட்டி ஆட

என்பதே ஆகும். இதன் பொருளை முருகப் பெருமானே அறிவார். இதனை அருணகிரியார் தமது சிதம்பரத் திருப்புகழில்

பாணிகள் கொட்டும் பேய்கள் பிதற்றும்
பாடலை மெச்சும் கதிர்வேலா

என்கின்றார். முருகப்பெருமானின் இத்தகைய கனிந்த கருணையினை நாம் என்னவென்று சொல்வது. நினைக்கும் பொழுதே நமது உள்ளம் முருகனை நாடிச் செல்கின்றது அன்றோ.

ஆதலால் முருக பக்தர்கள் பேய் பிசாசு முதலியவைகளை எண்ணிக் கவலைப்படவே வேண்டியதில்லை, அவ்வடியார்கள் விஷயத்தில்

கண்ணேறு வாராது பிணியொன்று
சேராது கவலைப்படாது நெஞ்சம்

கலியாது சலியாது நலியாது மெலியாது
கலியென்ற பேய் அடாது
விண்ணேறும் அணுகாது கர்மவினை
தொடராது விஷமஜ்வரமும் வராது
வெய்யபூதம் பில்லி வஞ்சனைகள்
தொடரா விஷம் பரவும் ஜந்துவு மடரா
எண்ணேறு ஜனனங்கள் கிடையாது
காலபயம் எள்ளளவுமே இராது ஏழைக்
கிரங்கி வரும் தெய்வம் உனையல்லாமல்
இன்னும் ஒரு தெய்வமுளதோ

என்று மேல்கூறிய வைகள் ஒன்றும் வந்து நல்கவோ பயமுறுத்தவோ செய்யாது.

வேதாள கணம் புகழ்வேலவனே என்று ஒருமுறை ஒருவன் சொல்வானேயாகில் அவ்விஞடியே வேதாள கணங்கள் அவனுக்குத் தலைவணங்கி தொண்டு செய்ய காத்துக் கொண்டிருக்கும் என்பதை எடுத்துச் சொல்ல வேண்டுமா. எனவே நாம் போற்றிப் புகழவேண்டிய தெய்வம் செல்வக்குமரனே ஆவான்.



# முருக தியானத்திஞல் பிறவிப் பெருங்கடலைத் தாண்டுதல்

## 39



மாவேழ் சனனங் கெடமாயை விடா
மூவேடணை யென்று முடிந்திடுமோ
கோவே குறமின் கொடிதோள்புணரும்
தேவே சிவசங்கர தேசிகனே.

பதவுரை

கோவே—(அண்ட சராசரங்களுக்கும்) அரசனுய் விளங்கு பவனே, குறமின் கொடி—குறவர் குலத்துதித்து வளர்ந்த மின்னல் கொடிபோன்ற வள்ளிதேவியின், தோள்—இரண்டு தோள்களையும், புணரும்—(தன்னுடைய பன்னிரு கைகளி ஞலும் பல்வேறு வகைகளிலும் அவ்வழகிய தோள்களின் மஹிமையைத் தெரிந்துகொண்டு) தழுவுகின்ற, தேவே—ஹே காயத்திரி மந்திர ஸ்வரூபனே, சிவசங்கர தேசிகனே—மங்கள ஸ்வரூபனுயும், சுகத்தை அளிப்பவனுயும் ஸத்குருவாயும் இருப்பவனே, மா ஏழ் சனனம் கெட—பெரிதாகிய ஏழுவகை

பிறப்புகளும் அடியோடு அழியும்படி, மாயை விடா—மாயையை விட்டு அகலாமல் அம்மாயையையே தொடர்ச்சியாகக் கொண்ட, மூ ஏடணை—மூன்று வகையான ஆசைகள் (ஈஷணத்திரயம்-புத்திர சுகம்—களத்ர சுகம்-லோக சுகம்), என்று—எப்பொழுதுதான், முடிந்திடும்—என்னைவிட்டு அகலும், ஓ-தெரியவில்லையே.

**தாத்பர்யம்:**

சக்திஸ்வரூபிணியாகிய வள்ளி தேவியினுடன் சிவஸ்ருபமாகிய முருகப்பெருமான் சேர்ந்து இருந்தால் தான் முருகப்பெருமானுல் ச்ருஷ்டி—ஸ்திதி—ஸம்ஹாரம் என்ற காரியங்களைச் செய்யமுடியுமே தவிர அன்னியில் முருகப்பெருமானுல் அசையக்கூட முடியாதென்பதினுல் சிவசக்தி ஐக்கிய ரூபமாக முருகப்பெருமானை அருணகிரிநாதர் இப்பாடலில்

கோவே குறமின் கொடிதோள் புணரும்
தேவே சிவசங்கர தேசிகனே

என்று புகழ்கின்ருர்.

அண்ட சராசரங்களுக்கும் உடனிருந்து துணை புரியும் தன்மையைக் கொண்ட தனிக்கடவுளே முருகப் பெருமானுவார். எண்ணற்ற கோடி உயிர்களின் ஸகல விதமான துன்பங்களையும் துயரங்களையும் வேரோடு அழிக்கும் அருட்கடலே செல்வக்குமரன். எனவே 'கோவே' என்ருர். இவ்வர்ணனை குமரனின் கருணை சக்தியை எடுத்துக் காட்டுகிறது.

இத்தகைய கருணமூர்த்தியின் ச்ருங்கார லீலையை வர்ணிக்கின்ருர்.

வர்ணிக்க இயலாத அழகினைக் கொண்டு ஒரு மின்னல் கொடியைப்போல் திகழ்கின்ருள் பராசக்தியாகிய

வள்ளி தேவி. இனிப்போடு கூடிய கரும்பு வில்லைப் போன்ற புருவங்களை வளைத்து கருணையுடன் கூடிய ச்ருங்கார ரசத்தை தன்னுடையபார்வையாகிய பாணங் களினால் முருகப்பெருமானின் உள்ளத்தை நிரப்பி மகிழவைக்கிறாள். மனோகரமான தன்னுடைய நடை யழகினை முருகப்பெருமான் பன்னிரு கண்களினாலும் இடைவிடாமல் பானம் செய்துகொண்டிருப்பதை வள்ளிதேவியானவள், தன்னுடைய ச்ருங்கார ரஸம் ததும்பும் கடைக்கண்ணினால் பார்த்து புன்னகை செய்து மகிழ்வாள் அன்றோ!

அவ்வேளையில் முருகனை ஆலிங்கனம் செய்து மகிழ வேண்டும் என்று எண்ணுகிறாள் வள்ளிதேவி. எனவே எண்ணத்தையே வெளிப்படுத்தும் வண்ணம் பூரித்தெழுந்த ஸ்தனங்களோடும், முருகனை அன்புடன் அழைக்கின்ற மங்கள ஓசைகளை செய்கின்ற கைவளை களோடும் காணப்படுகின்றாள் வள்ளிதேவி.

கொடியைப்போல் தன்னுடைய நுண்ணிய இடுப் புடன், மந்தஹாஸம் செய்துகொண்டு, ஸ்வர்ண கல சங்கள் போன்ற ஸ்தனங்களின் பாரத்தினால் மெது வான நடையையுள்ளவளுமாகிய வள்ளிதேவியான வள் எல்லா உயிர்களுக்கும் லோகமாதாவாக விளங்கி வருகிறாள். மஹா யோகிகளினாலும் ஞானிகளினாலும் தங்களுடைய ஹ்ருதய புண்டரீகத்தில் 'ஸோஹம்' பாவனையில் உபாஸிக்கப்பட்டு வரும் பரதேவதையே ஆவாள் வள்ளி தேவி.

எனவே பரதேவதையான வள்ளி தேவியானவள் எவ்விதம் ஒரு கொடியானது படர்ந்து மேலே செல்கின் றதோ அதுபோலவே மூலாதாரம்-ஸ்வாதிஷ்டானம்- மணிபூரகம் - அநாஹதம் - விசுத்தி - ஆக்ஞை என்று

சொல்லப்படும் ஆறு ஆதாரசக்கரங்களிலும் முறையே மூலாதாரத்திலிருந்து தொடங்கி ஒன்றின்மேல் ஒன்ருக பாஸித்துக் கொண்டு ஆருவது சக்கரமாஹிய ஆக்ஞையை அடைந்து, அப்படியே அங்கிருந்து மேல் நோக்கிச்சென்று முடிவில் சிரஸிலுள்ள ஆயிரம் தளங்களைக் கொண்ட ஸகஸர கமலம் என்பதினை மலரச் செய்து அங்கே பாஸித்து வருகிருள். இத்தகைய பாக்யத்தை ஞானிகளும் யோகிகளுமே அடைகிருர்கள்.

இத்தகைய வைபவத்தையே எடுத்துக் காட்டுகிறது ஞானிகள் விஷயத்தில் 'குறமின் கொடி' என்ற பதமானது.

நிற்க வள்ளி தேவியினுடைய ச்ருங்கார ரஸமானது முருகப்பெருமானை இன்பக்கடலில் மூழ்கி வைக்கின்றபடியால், முருகப்பெருமான் வள்ளியைத் தழுவுகின்ருர். எனவே

குறமின் கொடிதோள் புணரும் தேவே

என்ருர்.

'குறமின் கொடி' என்று வர்ணித்ததினுல் ஸகலவிதமான ஸௌந்தர்யங்களையும் கொண்டவள் வள்ளி தேவி என்பதை எடுத்துக்காட்டுகிருர். ஒரு ஸ்திரீயினுடைய இடையழகையே நாடிநிற்கிறது அவளுடைய நடையழகு. நடையழகு என்பது பாதத்தின் அழகையே நாடுகிறது. ஆதலால் மின்கொடியாக வள்ளியை வர்ணித்ததின் காரணம் வள்ளிதேவியின் ச்ருங்கார ரஸத்தின் பெருமையை எடுத்துக் காட்டி, சக்தியில்லையேல் சிவன் இல்லை என்பதை எடுத்துக் காட்டவேயாகும்.

எனவே சக்தியாகிய வள்ளி சிவனுகிய முருகனின் தோளைத் தழுவாதபோனுல், முருகன் சக்திஸ்வருபனுக விளங்கமுடியாது.

மேலும் கொடியினுடைய தர்மமோ வெனில் ஒன்றைநாடி அதன் மேலே படர்ந்து முடிவில், எதன் மேல் படர்ந்ததோ அதனைக் காணுமல் செய்து ஒரு கொடியாகவே பாஸித்துநிற்கும். எனவே கொடியாகிய வள்ளியானவள் முருகனை அழைத்தும், முருகனை நாடியும் முருகனின் பன்னிரு தோள்களையும் தன்னுடைய இரு திருக்கரங்களினுல் தழுவுகின்ருள்.

அதுபோலவே முருகப்பெருமானும் சக்தியாகிய வள்ளியின் தோள்களைத் தழுவும்போழுது வள்ளிதேவியானவள் ச்ருங்கார ரஸத்தைப் பெருக்கிக் கொண்டு கொடியைப்போல் இணைந்து முருகப்பெருமானை மகிழவைக்கிருள்.

எனவே பராசக்தியாகிய வள்ளிதேவி முருகனைத் தழுவும் திருவிளையாடலை

குறமின் கொடி புணரும்தோள் தேவே

என்று அங்வயம் செய்து கொண்டு அதாவது மின்னல் கொடிபோன்ற வள்ளியினுல் தழுவப்படுகின்ற தோள்களையுடைய இறைவனே என்றும் அப்படியே

குறமின் கொடிதோள் புணரும் தேவே

என்பதினுல் மின்னல்கொடிபோன்ற வள்ளி தேவியின் தோள்களைத் தழுவுகின்ற இறைவனே என்றும் அர்த்தம் வெளியாகின்றபடியால்

குறமின் கொடிதோள் புணரும் தேவே

என்பதினுல் வள்ளி முருகன் ஆகிய இருவர்களுடைய திருவிளையாடல்களையே எடுத்துக் காட்டுகிறது. தவிர 'தேவே' என்ற பதமானது மஹாமந்திரமாகவும் ஏழு கோடி மந்திரங்களுக்கும் மாதாவாக விளங்கும் காயத்

திரி மஹாமந்திரத்தின் ப்ரதிபாத்திய தேவதை முருகப் பெருமானே ஆவான் என்பதை எடுத்துக் காட்டுகிறது. இவ்வித மஹிமையுள்ள முருகனை மேலும்

சிவசங்கர தேசிகனே

என்றும் புகழ்கின்றார்.

ஸத்வகுணம் ரஜோகுணம் தமோகுணம் என்ற மூன்று குணங்களோடு கூடிய மாயையின் ஸம்பந்தம் கொஞ்சங்கூட இல்லாமல் மாயாதீதனாக இருக்கும் காரணத்தினால் நித்திய பரம மங்கள ஸ்வருபியாக விளங்கி வருகிறார் முருகப்பெருமான் என்பதை 'சிவ' என்ற பதத்தினாலும், அப்படியே ஜீவகோடிகளுக்கு 'சம்' ஸுகத்தையேமேன்மேலும் செய்கிறவனாகமுருகப் பெருமான் இருப்பதால் 'சங்கரன் என்ற பதத்தினாலும் அப்படியே ஞானபண்டிதனாக இருந்துகொண்டு

அயமாத்மாப்ரஹ்மா-பிரக்ஞானம்ப்ரஹ்மா
தத்வமஸி-அஹம்ப்ரஹ்மாஸ்மி

என்ற மஹா வாக்கியங்களை உபதேசித்தருளுகின்ற படியால் 'தேசிகனே' என்ற பதத்தினாலும் புகழ்கின் றார் அன்றோ அருணகிரிநாதர்.

முருகப்பெருமானின் அதிபுனிதமான திருவிளை யாடல்களின் சக்தியைப் போற்றிப் போற்றி அருண கிரிநாதருடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகி ஓடியது. முருகனின்மகிமையை நினைந்துநினைந்து ஹே முருகா! இக்கணமே என்னுடைய உடல் ஆவி பொருள் அனைத்தையும் உனது திருவடித்தாமரையின்கீழ் அர்ப் பணம் செய்துவிட்டேன். உனது திருவடியிலிருந்து எழும் அமுத பானத்தை இடைவிடாமல் எந்நேரமும் நான் பருகும்படி செய்வாய் அப்பனே. இதைத் தவிர

நான் மேலானதாக எதையுமே விரும்பவில்லை இம் மானிடப்பிறவியில் என்ற மனோபாவத்துடன்

மாவேழ் சனனங் கெடமாயைவிடா
மூவேடணை யென்று முடிந்திடுமோ

என்று காலவிளம்பனத்தை சகியாமல் முருகப்பெருமானைக் கேட்கின்றார் அருணகிரியார்.

மாயகல்பிதமாஹிய இவ்வுலகில் நிலையற்ற வாழ்வை நிலையுள்ள வாழ்வாகவே கருதி முடிவில் இறைவனின் அருளைப் பெறாமலேயே ஜீவ கோடிகள் மடிந்துபோகின்றார்கள். மாயையை விட்டு நீங்காதவரையில் மனிதர்கள் பிறந்து கொண்டும் இறந்து கொண்டும்தான் இருக்கவேண்டும்.

எனவே மிகப் பெரிய ஏழுவகையான பிறவிகள் என்று முடிந்திடுமோ? என்கின்றார்.

'மாவேழ்' சனனங்களோ வெனில் தேவத்வம்-மனுஷ்யத்வம்-விலங்கு-பறவை-ஊர்ந்து செல்லுபவைகள்—நீரில் வாழ்பவைகள் - தாவரம் என்பவைகள் இந்த ஏழுவகை பிறவிகளும் கடத்தற்கரியது என்பதினால் அதை இங்கு

மா வேழ் சனனம்

என்று சொல்லப்படுகிறது. பிறவியைத் திருவள்ளுவர்

பிறவிப் பெருங்கடல்

என்று சுட்டிக்காட்டும் அழகினை என்னவென்று சொல்வது.

இவ் ஏழுபிறப்புக்குள் ஒவ்வொரு பிறப்புகளிலும் எண்ணற்ற வகையான யோனிபேதங்கள் உண்டு. அவை யாவன:

தேவர்களில் பதினுன்கு லக்ஷமும்–மனிதர்களில் ஒன்பதுலக்ஷமும்-பறவைகளில்பத்துலக்ஷமும்-ஊர்ந்து செல்லும் ஜந்துக்களில் பதிஞென்று லக்ஷமும்-நீரில் வாழுகின்ற வகைகளில் பத்துலக்ஷமும்–தாவரங்களில் இருபது லக்ஷமும் ஆகமொத்தம் எண்பத்து நான்கு லக்ஷம் யோனிபேதங்களை சாஸ்திரமானது போதிக்கின்றன. இதைத் திருஞான சம்பந்தர் தமது தேவாரத்தில்,

உரைசேரு எண்பத்து நான்கு
நூருயிரமாம் யோனி பேதம்
நிரை சேரப் படைத்தவற்றின்
உயிர்க்குயிராய் அங்கங்கே நின்ருன்

என்று சொல்கின்ருர்.

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவயாய்ப்
பாம்பாகிக் கல்லாய் மனிதராய்ப்
பேயாய்க் கணங்களாய் வல்லசுர
ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா அநின்ற இத் தாவர
சங்கமத்துள் எல்லாப் பிறப்பும்
பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யே உன் பொன்னடிகள்
கண்டு இன்று வீடுற்றேன்

என்று ஸ்ரீமாணிக்கவாசக ஸ்வாமிகள் திருவாசகத்தில் பிறவிகளின் கொடுமையைச் சொல்லி இறைவனின் பொன்னடிகளைக் கண்டு வீடுற்றேன் என்கிருர்.

இதிலிருந்து பிறவியெடுப்பதே கொடுமை. அதிலும் அப்பிறவியில் இறைவனைத் தொழாவிடில் அது

அதிலும் கொடுமை. எனவே முக்தியை அடையும் விஷயத்தில் பிறவி தடங்கலாக இருப்பதில்லை. ஆசையே தடங்கலாக நிற்கின்றது. எனவே 'பிற வாமை வேண்டேன்' என்றும் அப்படி பிறப்புண்டேல் உம்மை மறவாமை வேண்டும்' என்று காரைக்கால் அம்மையார் கூறுகின்றார்.

அப்பர் சுவாமிகளோவெனில்

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா
உன்னடி யென் மனத்தே,
வழுவா திருக்க வரந்தர
வேண்டு மிவ் வையகத்தே

என்கின்றார். எப்பிறவியை வேண்டுமானாலும் தருவாய் ஐயனே. அதனைக் குறித்து நான் மனவருத்தமடைய வில்லை. ஆனால் நான் புழுவாய்ப் பிறந்தாலும் உன்னு டைய பொன்னடியிலிருந்து என்னுடைய மனம் நழு வாமல் இருக்க வேண்டும். இதுவே என்னுடைய உறுதியான ஆசை இறைவா, எனறு சொல்லுகிறார் அப்பர் சுவாமிகள்.

எனவே முருகனின் திருவடிகளே முக்தியளித்து வருகிறது என்பதைச் சொல்லவும் வேண்டுமா.

ஆதலால் ஈஷணாத்திரயமாகிய களத்ரேக்ஷணை புத்திரேக்ஷணை, அர்த்தேக்ஷணை என்பதே பிறவியை மேன்மேலும் எடுக்கும் வண்ணம் செய்கின்றது. அனைத்தும் பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை யென்பதில் அடங்கிவிட்டன. பிறவிப் பெருங் கடலைத்தாண்ட நாம் ஆசைகளை விடவேண்டும். ஆசை களே பந்தத்தை உண்டுபண்ணுகிறது. ஆசையே நல்வினை தீவினை இவைகளைச் செய்ய வைக்கிறது.

மேலும் பெண்ணாசையானது மூவேடணையில் தலை தூக்கி நிற்கின்றபடியால், அவ்வாசையே நம்மை மாயா உலகில் இன்பமிருப்பதாக எண்ணச் செய்து நமது பிறவியை மேன் மேலும் அதிகரிக்கச் செய்கிறது. நாம் இதுவரையில் எத்தனை எத்தனை கோடியோ பிறவிகளை எடுத்து இருக்கிறோம். அதன் எண்ணிக்கையைக் கூற நம்மால் இயலுமோ, இதை அருணகிரிநாதரே திருப்புகழில்

எழுகடல் மணலை அளவிடின்
அதிகம் என திடர் பிறவி அவதாரம்

என்று சொல்கின்றார். எனவே எண்ணிலா பிறப்புகளையும் ஏழு பிறவிக் கடலாகவே சொல்லவேண்டும். பிறவிக் கடலைத்தாண்ட முருகப்பெருமானின் அருள் வேண்டும். முருகனின் அருளை சுரக்கின்றது முருகனின் திருக்கரத்திலுள்ள வேல்-அவ்வேற்படையையே நாம் போற்றிப் புகழவேண்டும்.

அப்போது நாம் மூன்று விதமான ஆசைகளையும் அழித்துக்கொண்டு மாயையிலிருந்து விடுபட்டு பிறவிப் பெருக்கடலைக்கடந்து முருகப்பெருமானின் பொற்பாதங்களைக் காணலாம். அன்னியில் முடியவே முடியாது.

புனரபி ஜனனம் புனரபி மரணம்
புனரபி ஜனனீ ஜடரே சயனம்

என்று ஸ்ரீஆதிசங்கரர் சொல்லியதுபோல் நாம் பிறந்து கொண்டும் இறந்து கொண்டும் பிறவிக்கடலில் உழன்று கொண்டுதான் இருக்கவேண்டும். இறைவனாகிய முருகப்பெருமானே பிறவிக்கடலினைக் கடக்கச் செய்வதில் சக்தி வாய்ந்தவர்.

இதனை பரமஸித்தாந்தமாகத் திருவள்ளுவர்
பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேராதார்

என்று எவ்வளவு அழகாக சொல்லுகின்றார். பச்சை மரத்தில் ஆணியடிப்பதுபோல் உபதேசித்திருக்கிறார் திருவள்ளுவர்.

எனவே இச்சாசக்தி க்ரியாசக்தி, ஞானசக்தி என்று சொல்லப்படும் மூன்று சக்திகளும் ஒரே சக்தியாய் வேலின் ஸ்வரூபத்தில் திகழ்கின்றது.

அத்தகைய மாபெரும் மஹிமை தாங்கிய வேலின் உபாஸனையினால்தான் நாம் மாபெரும் ஏழு பிறவிகளாகிய ஏழு பெறும் பிறவிக்கடலையும் தாண்ட முடியும்.

எழு கடலும் எண் சிலம்பும் நிசி சரரும்
அஞ்ச, அஞ்சும் இமயவரை அஞ்சல்
என்ற பெருமாளே

என்று திருச்செந்தூர் முருகனின் முன்னிலையில் நின்று வேற்படையின் மஹிமையைப் புகழ்கின்றார் அருணகிரியார்.

செல்வக் குமரனாகிய முருகப்பெருமான் தமது திருக்கரத்தில் வேலைஎடுத்தவுடன், ஏழு பெருங்கடலும் எட்டு மாபெரும் மலைகளும் சூரன் முதலாகிய அஸுரக் கூட்டங்களும் அஞ்சி நடு நடுங்கினார்கள். ஆனால் தேவர்கள் அஞ்சவில்லை. ஏன் தெரியுமா? அடியார்களாகிய தேவர்களை அஞ்சேல், நானிருக்க பயம் ஏன்? என்று அபயமளித்தருளினார். எனவே முருகனின் வேல்

நல்லோர் நினைவில் நடனம் புரியும்
பொல்லாத்தவரை பொடிபொடியாக்கும்

என்பதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எடுத்துக் காட்டுகின்றது அன்ரே!

ஆதலால்

மாவேழ் சனனங் கெடமாயை விடா
மூவேடணை யென்று முடிந்திடுமோ?

என்று சொல்லிச் சொல்லி நாம் ஏங்கவேண்டியதில்லை. என்று குமரனின் வேலை நெஞ்சில் நிலைநிறுத்து கிறேமோ அவ்விநுடியே மூன்று விதமான ஆசை களும் நம்மைவிட்டு அகன்றுவிடும். அதன் காரண மாக பிறவியாகிய ஏழு பிறவிக் கடல்களும் வற்றிப் போய்விடும். ஒருவிதமான கர்மவினையும் நம்மை வந்து நலகாது.

செல்வக் குமரனிருக்கும்போது நாம் பயப்படு வதற்கு ஒன்றுமே இல்லை. எனவே பாட்டில்

என்று முடிந்திடுமோ

என்பதினின் பொருளோ வெனில் என்று உன்னுடைய மாபெரும் வேலின் அருள் என்மேல் விழும் என்பதே தாஞகும். உட்பொருளோவெனில் ஹேகுமரா! நினது அருளை பானம் செய்ய நான் உலகாசை அனைத் தையும் வெறுத்து ஸதாகாலமும்

கோவே குறமின் கொடிதோள் புணரும்
தேவே சிவசங்கர தேசிகனே

என்று புகழ்ந்து உனது திருவிளையாடல்களிலேயே மனதை அர்ப்பணம் செய்தவனுக இருக்கிறேன் ஐயனே, எனவே என்றென்றும் குமரன் என் நெஞ்சில் நிறைந்திருக்கிருன் என்று சொல்லும் ஒரு மேலான பாக்கியத்தைத் தந்தருள்வாய் அப்பனே. இதுவே எனது மேலான ஆசை.

எனவே,

ஆடுவதும் பாடுவதும் ஆனந்தமாக
நின்னைத் தேடுவதும் நின்னடியர்
செய்கை பராபரமே.

என்று தாயுமானவர் சொல்லியதுபோல் நாம் இடைவிடாமல் முருகப் பெருமானின் திருவிளையாடல் புகழ்ந்து ஆனந்தமாக பாடிக்கொண்டும் பற்பல காவடிகளை எடுத்து ஆடிக்கொண்டும் அப்படியே குன்றுதோறும் சென்று குழந்தை குமரனைத் தேடிக்கொண்டும் இருப்போமேயாகில் நாம் பிறவியிற்கு மூலகாரணமான கர்மவினைகளை வேருடன் அழித்துக் கொண்டு இப்பிறவியிலேயே குமரனின் திருவருளினல்

ஸ்கந்தானுபூதியை

அடைவோம் என்பது திண்ணம்.



# வேல் ஸ்மரணத்திருல் கர்மவினைகளை அழித்தல்

## 40



வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்
மனையோடு தியங்கி மயங்கிடவோ
சுனையோ டருவித் துறையோடு பசுந்
தினையோ டிதஞேடு திரிந்தவனே

**பதவுரை**

சுனையோடு-மலைகளிலுள்ள ஆழமான நீர் ஊற்று வரும் இடங்களிலும், அருவித் துறையோடு-மலையில் அருவிகள் பெருகிவிழும் இடங்களிலும், பசுந்தினையோடு-பசுமையாகிய தினைவயல்களிலும், இதஞேடு-(வயல்களை காக்கும்பொருட்டு வயல்களின் மத்தியில் கட்டியுள்ள பரணுக்கு மேலும் சமீப மாக உள்ள எல்லா இடங்களிலும், திரிந்தவனே-(வள்ளி தேவியை மணம் செய்துகொள்ளும் பொருட்டு தேடித் தேடித்) திரிந்தவனே, வினை ஓட-நல்வினை தீவினை ஆகிய இரு வினைகள் (வந்த வழி தெரியாமல்) ஓடும்படி செய்வதற்காக, விடும்-உன்னுல் விடப்படுகின்ற, கதிர் வேல்-கோடிக் கணக்

கான கிரணங்களையுடைய ஒளி பொருந்திய வேலாயுதத்தை, மறவேன்-(இமைப் பொழுதும்) மறக்காமல் தியானித்துக் கொண்டிருக்கின்றவனுகிய நான், மனையோடு-மனைவியோடு இல்வாழ்க்கையில், தியங்கி-கலங்கியவனுய் வருந்தி, மயங்கிடவோ-மெய்யறிவு ஞானம் இல்லாமல் மயங்கி இல்வாழ்க்கையே பேரின்பம் என்று கிடப்பதா, உனது வேலை உபாஸிப்பவர்கள் ஒருவிதமான கஷ்டங்களையும் அடையக்கூடாது என்பதே பரம தாத்பர்யமாகும்.

**தாத்பர்யம்:**

ஹே முருகா! உனது திருவிளையாடலை ஸதாகாலமும் பேசிக்கொண்டும் உனது மஹாமஹிமை தங்கிய வேலை மறவாமல் பூஜை செய்து கொண்டிருக்கும் நான் ஏன் இன்னும் மனைவி-மக்கள்—செல்வம் என்று சொல்லிக்கொண்டே மயங்கிக்கிடக்கிறேன். இவ்விதம் நான் அல்லல்பட்டு உழலுவது உனக்கு ஞாயமாகுமா?

உன்னுடைய ஞானவேலை பூஜை செய்யும்பொழுது நான் உன்னை வேல் ஸ்வருபமாகவே தியானம் செய்கிறேன். அதுவும் கதிர்வேல் ஆகவே உபாஸிக்கிறேன்.

கந்தா குகனே கதிர்வேலவனே

என்றும்

கதிர்காமத்துறை கதிர்வேல் முருகா

என்று கதிர்வேலானது புகழப்படுகிறது.

எண்ணற்ற கோடி கிரணங்களுடன் ஒளி பொருந்திய மாபெரும் ஞானவேலே கதிர்வேல் என்ற திவ்ய நாமத்துடன் திகழ்கின்றது. இத்தகைய ஞானவேல் ஆகிய கதிர்வேலைத் திருக் கரத்தில் தாங்கி முருகப் பெருமான் நிற்கிருர் 'கதிர்காமம்' என்னும் திவ்ய க்ஷேத்திரத்தில். இப்புண்ணிய க்ஷேத்திரமானது இலங்

கையிலுள்ளது. முருகப்பெருமான் கதிர்காமத்தில் பூர்ண கலையுடன் ஞானவேலைத் தாங்கி நிற்கிறார்.

மேலும் ஒரே வேலானது ஒவ்வொரு ஸமயத்தில் ஒவ்வொரு திவ்ய நாமத்துடன் விளங்குகிறது. அவைகளில் வைத்து 'கதிர்வேல்' மிகவும் மஹிமை தாங்கியது. ஞானவேலே கதிர்வேல் ஆகும்.

ஒவ்வொருவருடைய சிரஸிலும் ஸகஸ்ரகமலம் என்று சொல்லப்படும் ஆயிரம் தளம் தாமரைப் பூவானது இருக்கிறது. கதிர்வேலை உபாஸிப்பவர்களுடைய ஸகஸ்ரகமலத்தில் முருகப்பெருமான் கதிர் வேலுடன் தோன்றி காட்சி அளிக்கின்றபடியால், அக் கதிர்வேலினுடைய எண்ணற்ற கோடி அமுதமாஹிய கிரணங்கள் உபாஸிப்பவர்களுடைய சரீரத்திற்குள்ளிருக்கும் 72,000 நாடிகளிலும் ஐக்கியத்தை அடைகின்றன. இதன் மஹிமையினால் கதிர்வேலை உபாஸிப்பவர்கள் வீர்யம்-யசஸ் – தைரியம்-வாக்விலாஸம்-கீர்த்தி-ஸாமர்த்தியம்-சாந்தம்–காருண்யம்-தெய்வீகத்தன்மை இன்னும் அநேகவிதமான வைபவங்களை யடைந்து சிரஞ்சீவிகளாக விளங்குவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை அன்றோ. தவிர கந்தர் சஷ்டி கவசத்தில்

கதிர்வேல் இரண்டும் கண்ணினைக் காக்க

என்று ப்ரார்த்திக்கப்படுகிறது, ஏனெனில்?

ஸர்வேந்த்ரியாணாம் நயனம் ப்ரதானம்

என்பதினால் எல்லா இந்திரியங்களிலும் வைத்தும் கண்களே மேலானதாகும். இவ்விதமுள்ள கண்களை நாம் அடைந்த பயன்தான் என்ன. மனைவி மக்கள் செல்வம் இவைகளைக் கண்டு மயங்கி கிடக்கவா? இல்லை இறைவனைக் கண்டுகளிக்கவா?

மானிடப் பிறவியின் பயனைத் திருஞானசம்பந்தர் சொல்லும் பொழுது

கண்ணினால் அவர் நல் விழாப்
பொலிவு கண்டார்தல்

என்கின்றார். ஆலயங்களில் நடக்கும் மஹோத்ஸவங்களைக் கண்ணால் கண்டுகளிக்கவே நாம் கண்களை அடைந்திருக்கிறோம். கண்களை இழந்துவிட்டோமாகில் அதன் கொடுமையை எண்ணக் கூடமுடியாதன்றோ. கண்ணிருக்கும் பொழுதுதான் இறைவனை நாம் அலங்கரித்து கண்குளிரப் பார்க்கலாம்.

உன்னைச் சிங்காரித்தே உன் முகத்தைப்
பாராமல் என்னைச் சிங்காரித்தே
யிருந்தேன் பராபரமே.

என்று மெய்ஞானிகள் கண்ணிழந்தமையால் உண்டாகும் துயரத்தை போதிக்கிறார்கள்.

எனவே கண்களின் ஒளி மங்காமல் இருப்பதற்கு கதிர்வேல் உபாஸனையானது மிகவும் முக்கியம். முருகனின் வேற்படையானது நல்வினை தீவினையாகிய இரண்டையும் வந்தவழி தெரியாமல் ஓடச் செய்கிறது. நல்வினையும் தீவினையும் நம்மை நலிகாத பொழுது நமது மாம்ஸ கண்கள் கூட உலக வாழ்கையில் ஈடுபடாது. எனவே நமது ஞானக்கண்ணானது கதிர் வேலின் ஒளியினால் திறக்கப்படுகிறது.

ஞானக்கண்ணானது திறக்கப்படும்பொழுது ஸகலமும் முருகப்பெருமானின் ஸ்வருபமாகவே தோன்றும். இந்நிலையில்

பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும்
படிக்கப், பக்கம் நின்று கேட்டாலும்

பரிந்து வுணர்ந்தாலும் ஈர்த்தாலும்
பிடித்தாலும் கட்டிய ணைத்தாலும்
இத்தனைக்குந் தித்திக்கும் இனித்த
சுவைக் கரும்பே

என்று அடியார்கள் குமரனை அனுபவித்துக்கொண்டு இருப்பார்கள். கதிர்வேல் ஆகிய ஞானவேலை உயிருக்கு ஸமமாய் மறக்காமல் தியானிப்பார்கள்.

எனவே, ஹே முருகா! நினது வேலின்பெருமையை நான் நன்கு அறிவேன். நினது வேலின் மஹிமையினால் தான் எனது ஞானக் கண்ணானது திறக்கப்பட்டது. உன்னுடைய வேற்படையை நான் என் மூச்சுயிருக்கும் வரையில் மறவேன். என் சிந்தனை முழுமையும் உன்னுடைய வேல் மயமாகவே இருக்கிறது. இருந்தும் நான் எக்காரணத்தினால் மனைவி மக்கள் என்று மனம் கலங்கி வருந்தி மயங்கிக்கிடக்கிறேன்.

முருகா! இந்நிலையிலிருந்து எனக்கு விமோசனம் இல்லையா? உன்னுடைய வேலை சரணமடைந்த நான் சிற்றின்பத்தில் விழுந்து அல்லல்படுவது உனக்கே நியாயமாகத் தோன்றுகிறதா? நீயே சொல்வாய் அப்பனே!

என் மனோநிலையை நீ அறியமாட்டாயா? வள்ளி தேவியை மணம் செய்துகொள்ளும் பொருட்டு நீ எவ்வளவு அல்லல் பட்டாய். துன்பத்தின் நிலையை எடுத்துச் சொல்லித்தான் உனக்குத் தெரியவேண்டுமா.

எனினும் ஹே முருகா நீ பட்டதுன்பத்தை நினைக்கும் பொழுது, நான் படும் துன்பத்தை துன்பமாகவே சொல்லமுடியாது. வள்ளிதேவியை நீ மணக்கும் பொருட்டு செல்லாதயிடமில்லை. தேடாத இடமில்லை.

மலைகளிலுள்ள ஆழமான நீர் ஊற்று வரும்இடங்களிலெல்லாம் சென்று பார்த்தாய். ஏன்? ஒருவேளை சுத்தமான ஊற்று ஜலத்தை வள்ளிதேவியானவள் தான் செய்யும் பூசைக்காக எடுத்துச் செல்ல வருவாளோ யென்றல்லவா?

மீண்டும் மலையிலிருந்து அருவிகள் பெருகி நீர் வீழ்ச்சியாய் விழும் இடங்களிலெல்லாம் தேடினாய். எதற்காக? ஒருவேளை நீர்வீழ்ச்சியில் ஆனந்தமாக நீராடிக் கொண்டிருப்பாள் என்றல்லவா?

அப்படியே வயல்களில் வேலை செய்து கொண்டிருப்பாளோ வென்று பார்த்தாய். அங்கும் அவளைக் காணவில்லையென்பதினால், வயலைக் காவல் காத்துக் கொண்டிருப்பாளோ என்று எண்ணி வயலின் நடு நடுவிலுள்ள பரணையின் மீது ஏறியும், பரணையின் சமீப இடங்களிலும் தேடித்தேடி அலைந்தாயே, இதனால் உண்டான சிரமத்தினால், என்மீது உதாஸீனனாக இருக்கிறாயோ. இல்லை நான் சரியான முறையில் பக்தி செய்யவில்லையா?

கருணைக்கடலே! நெருப்பை தெரிந்துசுட்டால்தான் சுடுமா. தெரியாமல் தொட்டாலும் நெருப்பு சுடத்தானே செய்யும். அதுபோலவே தெரிந்தோ தெரியாமலோ உன்னுடைய கதிர்வேலை நான் மறக்காமல் தியானம் செய்து வருகிறேன். அம்மாபெரும் மஹிமையைக் கொண்ட கதிர்வேலானது என் கண்களுக்கு ஞானஒளியைத் தந்து என்னை இந்த உலக வாழ்க்கையிலிருந்து உத்தாரணம் செய்யவேண்டாமா?

முருகா, உன்னுடைய வேலை உபாஸித்து வரும் ஒருவன் மனைவி மக்கள் செல்வம் இவைகளுடன் மயங்கி அல்லல் பட்டுக்கொண்டிருக்கிறானென்றால்,

இவ்விழிவானது யாரைச் சேரும்? என்னையா? உன்னையா? அல்லது உனது வேற்படையையா? நீயே சொல்.

எனவே, இதுவரையிலும் நீ என்னிடத்தில் பாராமுகனாக இருந்துவிட்டாய். இனியும் நீ இவ்விதமிருக்கலாகாது ஐயனே.

நானோவெனில் அப்பர் சுவாமிகள் சொல்லியது போல்

நெஞ்ச முமக்கே யிடமாக வைத்தே
நினையாதொருபோது மிருந்தறியேன்

என்று உன்னையே நினைந்து நினைந்து உருகுகிறேன்.

எனவே ஹே குமரா! மனைவி மக்களைக் காக்க நான் அநேக பாபங்களை செய்கிறேன். அதன் பாபத்தை நான் ஒருவனாகவே இருந்து அல்லவோ அனுபவிக்கிறேன். சுழல் காற்றுபோல் துன்பமானது ஒன்றின் மேல் ஒன்றாக என்னை சுற்றிக் கொண்டே இருக்கிறது. ஒருபுறம் துன்பத்தினால் வாடுகிறேன். ஒருபக்கம் வறுமையினால் தவிக்கிறேன். ஒருபக்கம் பெண்ணாசை என்னைக் கொளுத்துகிறது.

இருந்தும் ஏதோ புண்ணியவசத்தினால் உன்னுடைய கதிர்வேலை இடைவிடாமல் பூஜை செய்து கொண்டு இருக்கிறேன். கதிர்வேலையே மறக்காமல் தியானம் செய்து கொண்டிருக்கிறேன். இந்நிலையில் இருந்து வருகிற நான் மனைவி மக்களுடன் எல்லையில்லாத துன்பங்களை அனுபவித்துக் கொண்டிருப்பது நியாயமாகாது. ஆதலால் உன்னுடைய அருளாகிய கடைக்கண்பார்வையை என்மேல் செலுத்தி என்னைத் தடுதது ஆட்கொள்வாயாக. இதுவே என்னுடைய பிரார்த்தனையாகும் அப்பனே.

எனவே குமரனின் கதிர்வேலே இமைப்பொழுதும் நாம் மறக்காமல் நம்முடைய நெஞ்சில் பெருஞ் செல்வமாக வைத்துக்கொண்டு கந்தர் அநுபூதியை பாராயணம் செய்து கொண்டே இருந்தால் அப்பொழுது தெரியும் கதிர்வேலின் பெருமை.

வீரவேல் ஆரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேல் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல்
சூர்மார்புங் குன்றுந்
துளைத்தவேல் உண்டே துணை.

என்று கதிர்வேலின் பெருமை திகழ்கின்றது.

ஆகையால் நாம் கதிர்வேலின் பெருமையைப் பாடிக்கொண்டே ஜன்பஸாபல்யத்தை அடைவோமாக.



# திருவடி தியானமே யமபாதையைத் தடுக்க சுலபமான வழியாகும்

# 41



சாகா தெனையே சரணங்களிலே
காகா நமனுர் கலகம் செயுநாள்
வாகா முருகா மயில்வா கனனே
யோகா சிவஞானெபதேசிகனே.

**பதவுரை**

*வாகா—வெற்றியாகிய புகழ்மாலையை அணிந்திருப் பவனே, முருகா-முருகா என்னும் அழகிய மந்திரவடிவனே, மயில்வாகனனே-ஓங்காரமாகிய மயிலின்மேல் விளையாடு பவனே, யோகா-ஞானபண்டிதனுய்யிருந்து ராஜயோகத்தை உபதேசிப்பவனே, சிவஞானெபதேசிகனே-ஆதியும் அந்தமு மில்லாத சிவபெருமானுக்கு ஞானமொழியை உபதேசித்து அருள்பவனே, நமனுர்-எமனுனவன், கலகம் செயுநாள்-(என் உயிரை எடுத்துச் செல்லும் பொருட்டு) என்மேல் பாசக் கயிற்றை வீசியெறிந்து கலகம் செய்யும் அந்த நாளில் அந்த*

குறிப்பிட்ட வேளையில், சாகாது-(இமயன் வசப்பட்டு மதி யிழந்து) மரணமடையாதபடி, எனையே-(மிகக் கொடியவனாகிய) என்னையே, காகா-வேகமாக வந்து காத்து அருள வேண்டும் குமரா.

**தாத்பர்யம் :**

முருகப்பெருமானின் இடைவிடாத பாதஸ்மரணம் ஒன்றே எமனின் கோரமான வருகையைத் தடுக்க சக்தி யுள்ளது என்பதை நிர்த்தாரணம்செய்து மரண காலத்தில் முருகனின் சரணங்களிலே தன்னை எமனுடைய கைகளில் சிக்காமல் தடுத்து ஆட்கொள்ளும்படி பிரார்த்திக்கின்றார் அருணகிரிநாதர்.

இறைவன் தன்னை ஆட்கொண்ட மஹிமையை அப்பர் சுவாமிகள்

சாகாமே காத்தென்னை ஆண்டாய் போற்றி

என்று புகழ்கின்றார்.

சரீரத்தில் சக்தியுள்ளவரையிலும்தான் நாம் அகங்கார மமகாரங்களுடன் இருக்கமுடியும். அகங்காரமும் மமகாரமுமே நம்மை இறைவனிடமிருந்து பிரித்துவிடுகிறது.

அரிதான மானிடப் பிறவியை அடைந்த நாம் அடைய வேண்டியது இறைவனுடைய திருவடிகளே ஆகும் அன்றோ. இருந்தும் நாம் இறைவனை தியானிப்பதில்லை. ஏன்? கர்ம வினையானது மனிதனை ஆட்டி வைக்கிறது. மேதையிருந்தும் மனிதன் அதை உபயோகப்படுத்துவதில்லை. ஸத்கர்மாவில் மனதை செலுத்தாமல் மேன்மேலும் பாப கர்மாவையே செய்து வருகிறான். தர்ம நெறியில் நிற்பதில்லை. செய்யத் தகாத பாபங்களைச் செய்கிறான். சிற்றின்பத்தையே

பேரின்பமாகக் கருதி பெண்ணுசையிலேயே மனதை செலுத்தியவண்ணமாய் காமபரதந்திரனுக உழலு கின்ருன்.

அடியார்களிடத்தில் அன்பைச் செலுத்துவதில்லை. தன்னுடைய மனைவி மக்கள் என்று சொல்லிக் கொண்டே அவர்களுடைய சரீரங்களைக் காப்பாற்று வதற்காக பாலை வாங்குகிருனே தவிர இறைவனைப் பாலினுல் அபிஷேகம் செய்ய வேண்டுமென்ற எண் ணமே மனிதனுடைய உள்ளத்தில் தோன்றுவதில்லை. பக்தி செய்வதில்லை.

இவ் அழியும் உலகில் சுகத்தைக் காண கொலை-களவு-திருட்டு-ஏமாற்றுதல் முதலிய கெட்ட காரியங் களைச் செய்கிருன். பரத்தையர்களுடைய இல்லங்களை அடைந்து அவர்களுடைய மோக வலையில் வீழ்ந்து மஹா பாபியாக மாறி விடுகிருன். இதெல்லாம் போதாதென்று ஈச்வர சிந்தனையிலேயே இருந்து வரு கிற குல ஸ்திரீகளுடைய கற்பை அழிக்கிருன். அவ் விதம் செய்வதில் இன்பத்தைக் காண்கிருன். என்னே பாபத்தின் கொடுமை.

ஆனுல் மனிதன் செய்யும் ஒவ்வொன்றையும் ஒருவன் பார்த்துக்கொண்டே அதை எழுதிவைக்கிருன். அவன்தான் சித்திரகுப்தன். எனவே நாம் செய்யும் ஒவ்வொரு பாபகர்மாவிற்கும் அதற்கு ஏற்றவாறு துன்பத்தை அனுபவித்தேதான் தீரவேண்டும்.

நாம் செய்யும் பாபகர்மாவின் கொடுமையானது மிகவும் அதிகமாக இருக்குமேயாகில் அதன் பலனை இவ்வுலகிலேயே அனுபவிப்போம் என்று சாஸ்திரங் கள் போதிக்கின்றன.

நாம் இவ்வுலகில் அனுபவிக்கும் சுகமெல்லாம் கானல்நீரைப் போன்றது. அனுபவிக்கும் அற்ப சுகத்தை அனுபவிக்கும்பொழுது அதை அற்ப சுக மென்றோ, நிலையில்லாததென்றோ மனிதன் எண்ணு கிறான் இல்லை. பின்பு அதை நிலையற்றது என்று எப்பொழுது எண்ணுகிறான் தெரியுமா? தன்னுடைய மரண காலம் வருகின்றபொழுதுதான் வாழ்க்கை நிலை யற்றது என்று எண்ணுகிறான். தான் மீண்டும் உயிர் பெற்று வாழ முடியாது என்று எண்ணுகிறான்.

இந்நிலையைத்தான் பாட்டில்

நமனார் கலகம் செயுநாள்

என்கின்றார் அருணகிரிநாதர்.

பாபிகளைத் துன்புறுத்தியே அவர்களுடைய உயி ரினை எடுக்கின்றான் இயமனானவன். அதற்கு முன்பாக மனிதர்களிடத்தில் பல வகையில் தோன்றுகிறான் இயமனானவன்.

பயங்கரமான வியாதிகள் மூலமாகவும்-விஷம சுரம்-சூலநோய் மூலமாகவும்-கண் பார்வையை அப ஹரித்தும்-பஞ்ச இந்திரியங்களுக்குத் துன்பத்தை உண்டுபண்ணிக் கொண்டும்-நடக்க முடியாமலும்- பிராணிகளைச் செய்கிறான் இயமனானவன்.

பேய் பிசாசு குட்டிச்சாத்தான் முதலிய க்ஷுத்திர தேவதைகளை சரீரத்தில் வைத்து பயமுறுத்துவான். புத்தியை இழக்க வைத்து பைத்யமாகச் செய்கிறான். அதுமட்டுமல்ல.

இயமனானவன் நம்முடைய உயிரினைப் பாசக் கயிறினால் இழுக்கும் துன்பத்தினை என்னவென்று சொல்லுவது. இயமன் வருவதற்கு முன்பாக எம

தூதர்கள் வந்து பயங்கரமான ரூபத்தில் பயமுறுத்து வார்கள். அவர்களுடைய கண்களிலிருந்து நெருப்பு பொறியானது வெளிவந்துகொண்டிருக்கும். நீண்ட நாக்குகளிலிருந்து இரத்தமானது வழிந்துகொண்டும், கைகளில் ஈட்டி-சூலம்-தோமரம்-முதலிய பயங்கரமான ஆயுதங்களை வைத்துக்கொண்டு மரணத்தையடையப் போகிறவனுடைய அருகில் வந்து அவனுடைய அகக் கண்களுக்கு மட்டும் புலப்பட்டுக்கொண்டு பயங்கர மான மொழிகளைப் பேசுவார்கள். அம்மொழிகளோ வெனில், ''இவன் மஹா பாபி. ஈவு இரக்கமில்லா தவன். கல் நெஞ்சம் படைத்தவன். அடியார்களைத் துன்புறுத்தியவன். சாதுக்களை ஏமாற்றி வஞ்சித் தவன். குலஸ்ரீகளின் கற்பை அழித்தவன். இவன் செய்யத்தகாத பாபத்தை செய்தவன். இவன் குழந் தைகளுக்கு ருசியுள்ள உணவைக் கொடுக்காமல் மறைத்து வைத்து பரத்தையர்களுக்குக் கொடுத்துத் தானுமுண்டு காம சுகத்தை நுகர்ந்த மஹா பாபி.

இவன் ஆலயங்களிலிருந்து பொருளைக் களவாடி யவன். இவன் அடியார்களின் பெருமையை இகழ்ந்து அவர்களைக் கொலை செய்தவன். இவன் மரணப்படுக் கையிலிருப்பர்களுக்கு ஜலம்கூட கொடுக்காதவன்.

இவன் தாய் தந்தையர்களை சதா காலமும் துன் புறுத்திக்கொண்டே மனைவியின் காம சுகத்தில் ஈடு பட்டவன். இவன் நல்லோர்களுடைய வீட்டில் கள வாடியவன். இவனை விடக்கூடாது. இவன் வேசியர் களிடத்திலேயே தமது வாழ்நாள் முழுமையும் கழித் தவன். இவன் ஈவுயிரக்கமில்லாதவன்.

எனவே இத்தகைய பாபியாகிய இவனை விடக் கூடாது. இவனை இழுத்துச்சென்று நரகத்திலிட்டு

பழுக்கப் பழுக்க காய்ச்சிய ஈட்டியினுல் இவனை குத்து வோம். வெப்பத்தினுல் பொறிந்து கிடக்கும் மணலில் போட்டு இவனை உருளச் செய்ய வேண்டும். ஊசி யினுல் இவன் நாக்கைக் குத்துவோம். கொந்தளிக்கும் சுணுணும்புக் கால்வாயிலிட்டு வேடிக்கை பார்ப்போம்.

அடியார்களை அடித்து பரத்தையர்களை அணைத்த இவன் கைகளை நெருப்பினுல் பொசுக்க வேண்டும்.

இவன் செய்த பாபத்திற்கு இவனை என்ன செய்தாலும் தகும். எனவே இவனை சித்திரவதை வோம். இவன் உடம்பு முழுதும் ஸர்ப்பங்களை சுற்ற வைத்து இவன் முகத்தில் விஷத்தைக் கக்கிக் கடிக்க வைப்போம். இவனை விஷ ஜந்துக்கள் நிறைந்திருக்கும் கிணற்றில் விட்டுத் துன்புறுத்துவோம். மங்கையர் களின் கொங்கையின்மேல் இன்பத்தைக் கண்ட இவன் கண்களைக் குத்துவோம்.''

என்று இவ்வாறு பலவாறு பேசுவதேயாகும். இத் தகைய நரக வேதனையானது புராணங்களில் விஸ்தார மாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆதலால் இயம தூதர்கள் இவ்விதம் மரண காலத் தில் பயமுறுத்துவார்கள். இந்நிலையில் நமக்கு துணை யார்? நாம் யாரைத் துணையாகக் கொள்வது? நம்மால் பேச முடியுமா? அல்லது நிற்கத்தான் முடியுமா? யாரை நினைப்பது? எப்படி நினைப்பது? எந்த உருவத் தில் நினைப்பது? யாரால் நம்மைக் காப்பாற்றமுடியும்? தாகத்தினுல் மரணப் படுக்கையில் தவித்துக்கொண் டிருப்போம். ஆனுல் பேசுவதற்கு நா வராது. ஏன் தெரியுமா? நம்மிடத்தில் புண்ணியமில்லை.

மரணப்படுக்கையிலிருக்கும் நம்முடைய கர்மேந் திரியம் ஞானேந்திரியம் ஆகியவைகளை இயமனுனவன்

வேலை செய்யாமல் அடக்கிவிடுகிருன். பிறகு இந்திரியங்களுக்கு உணர்ச்சியை உண்டுபண்ணி துன்புறுத்துகிருன். ஆனுல் அத்துன்பங்களை வெளிப்படுத்த முடியாமல் ஜீவனுனவன் துடி துடிக்கிருன்.

இத்தகைய துன்பங்கள் உண்டு மரண காலத்தில் என்பதை சாஸ்திரமானது பரம கருணையுடன் நமக்கு எடுத்து போதித்தபோதிலும் கூட நாம் அதை செவி கொடுத்து கேட்பதில்லை. ஏன், நாம் பெண்ணுசையில் மூழ்கி கிடக்கிருேம் அன்ருே.

ஆனுல் உண்மையில் பரத்தையர்கள் தமது காமப் பார்வையினுல் நமது உள்ளத்தை மறைத்துவிடுகிருள். நமது பொருள்களை அபகரிப்பதற்காக வாஸனுதி திரவ்யங்களினுலும் தைல வகைகளினுலும் பலவித வாஸனையைக் கொண்ட புஷ்பங்களினுலும் தம்மை அலங்கரித்துக்கொண்டு தங்களுடைய இன்பமான மொழிகளினுல் நம்மை மயக்கி அதன் மூலமாக நம்முடைய நற்புத்தி, பொருள், உடல் ஆகியவற்றை அபகரிப்பதுமில்லாமல் முடிவில் அவர்களிடமுள்ள பற்பல பிணிகளையும் நம்மிடம் தந்து முடிவில் நம்முடைய உயிரினையே அபகரித்து விடுகிருள், இதை நாம் அறிவதில்லை. காரணம்? காம சுகத்தையே நாடி நிற்கின்றது. நமது இந்திரியங்களும் மனதும். இதனுல்தான் மஹான்களும் சாஸ்திரங்களும் நம்மிடம் ஸதாகாலமும் பெண்ணுசையை விடுங்கள். அது உங்கள் வாழ்க்கையையே அழித்துவிடும். முடிவில் நீங்கள் வருந்துவீர்கள். நீங்கள் நற்கதியை அடைய மாட்டீர்கள். மானிடப் பிறவி எல்லாப் பிறவியிலும் வைத்து உயர்ந்ததும் அரிதுமாகும். இப்பிறவியில் நாம் இறைவனை அடைய வேண்டும். அதற்கு ஏற்ற

வாறு பக்தி செய்து பேரின்பத்தை அடைய யத்னம் செய்யவேண்டும்.

ஆதலால் மஹான்கள்

ஒன்றே செய்யவும் வேண்டும் ஒன்றும்
நன்றே செய்யவும் வேண்டும் அந்நன்றும்
இன்றே செய்யவும் வேண்டுமவ்வின்றும்,
இன்னே செய்யவும் வேண்டு மவ்வின்னும்
நாளை நாளை யென்பீராகில், நம்முடை
முறை நாளாவது மறியீர் நமனுடை
முறை நாளாவது மறியீர்

என்று போதிக்கின்றார்கள். எனவே நாம் இடைவிடாமல் நல்லதே செய்துகொண்டிருக்க வேண்டும். நாம் செய்யும் தர்மமே நம்மை மரண காலத்தில் காக்கும். அப்பர் சுவாமிகளின் மஹிமையை நாம் அறிவோமாகில் நாமும் தைரியமாகக் கூறலாம்.

நாமார்க்குங் குடியல்லோம்
நமனை அஞ்சோம்

என்று. எனவே இறைவனிடத்தில் உண்டாகும் பக்தியே நமக்கு சக்தியையும் மனோ தைர்யத்தையும் அளிக்கின்றது.

சிவபெருமானை மனதில் தியானித்தவண்ணமாய் சிவலிங்கத்தினை ஆலிங்கனம் செய்துகொண்டிருந்த மார்க்கண்டேயரை யமதர்ம ராஜாவானவர் பயமுறுத்தி அழைக்கையில் மார்கண்டேயரானவர் சிறிதும் அஞ்சினார் இல்லை.

சந்ரசேகர மாச்ரயே
மமகிம் கரிஷ்யதி வையம:

என்று சொல்லிக்கொண்டிருந்தார். அதன் பயன் என்னவாயிற்று. இயமனையே சரணமடைய வைக்கவில்லையா? அதுபோலவே நம்முடைய நாவில் நாம் முருகபெருமானின் வேற்படையை வைத்துக்கொண்டிருப்போமாகில் நம்மிடமும் காலன் அணுகி வரமாட்டான் என்பதை சொல்லவும் வேண்டுமா.

எனவே எம தூதர்கள் நம்மைப் பாசக் கயிற்றினுல் இழுக்க வரும்பொழுது நாம் அடைக்கலமடைய வேண்டிய இடம் முருகப்பெருமானின் சரணுரவிந்தங்களேயாகும். அதனுல்தான் பாட்டில்

சாகா தெனையே சரணங்களிலே
காகா நமனுர் கலகம் செயுநாள்

என்கின்ருர் அருணகிரிநாதர்.

ஹே முருகா! நமனுர் கலகம் செய்யும் நாளில் என் இந்திரியங்கள் எல்லாம் ஒடுங்கிவிடும் அன்ரே. அந்நிலையில் நான் உன்னை ஸ்மரணம் செய்யவோ அழைக்கவோ முடியாது அப்பனே! துன்மார்க்கத்தினுல் நோயற்றுக் கிடக்கும் எனது உடம்பு எமனின் வருகையைக் கண்டே மண்ணேடு மண்ணுய்விடும்.

நான் கொடியவன். தர்மநெறியில் நில்லாதவன். உன்னுடைய அடியார்களிடத்தில் அன்பில்லாதவன். சாஸ்திரங்களையும் புராணங்களையும் நம்பாதவன். கேவலம் பணம் பணம் என்று பொன்னுசை பிடித்து அலைந்தவன்.

நினது பெருமையை அப்பர் சுவாமிகள் தன்னுடைய ஸ்வானுபூதியில்

சங்கநிதி பதுமநிதி யிரண்டுங் தந்து
தரணியொடு வானுளத் தருவரேனு

மங்குவா ரவர் செல்வ மதிப்போ
மல்லோ, மாதேவர்க் கேகாந்த ரல்லாராகில்
அங்க மெலாங் குறைந்தழுகு தொழு
நோயராய் ஆவுரித்துத் தின்று
ழலும் புலையரேனுங் கங்கைவார்
சடைக் கரந்தார்க் கன்பராகில்
அவர் கண்டீர் நாம் வணங்குங்
கடவுளாரே.

என்று எடுத்துக் காட்டியிருக்கிறார்.

இதன் உண்மையை மஹான்கள் எத்தனையோ தடவை எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். முருகா! இருந்தும் நான் செவிகொடுத்துக் கேட்கவில்லை. எத்தகைய மஹிமையும் பெருமையும் வாய்ந்தவர்கள் உன்னுடைய அடியார்கள். அதை உணராமல் போய்விட்டேனே. செல்வக்குமரா! என்னைக் காப்பாற்றி அருள்வாய் அப்பனே. நானும் உன் அடியார்களில் ஒருவனாகி விட்டேன். எங்கும் உன்னுடைய ஸ்வரூபத்தையே கண்குளிரக் காண்கிறேன்.

ஆனால் நமனார் கலகம் செய்யும் நாளை நினைக்கும் பொழுது என் உடல் நடுங்குகின்றது. உயிரினை விட்டுப் பிரியும் காலம் வந்துவிட்டது. முருகா! நான் இப்பொழுது உன்னிடம் ஒன்று யாசிக்கிறேன். அடியார்களில் ஒருவனாக இருந்து யாசிக்கவில்லை.

ஆனால் மிகவும் கொடியவனாக யிருந்துகொண்டு என்னையும் உன்னுடைய அடியார்களில் ஒருவனாக சேர்த்துக்கொள்ளும்படி யாசிக்கிறேன். என்னுடைய கூக்குரலைக் கேட்டு பாராமுகனாக இராதே அப்பனே. எமதூதர்கள் என்னிடம் வந்துகொண்டே இருக்கிறார்

கள். அதற்குள்ள அறிகுறிகள் என்னிடத்தில் காணப் படுகின்றன. அது எனக்குத் தெரிகிறது. இந்நிலே யில் உன்னே வர்ணிக்க என்ஞல் இயலாது. வாக்குக்கு வராத அன்பின் உருவமல்லா நீ.

கா—கா என்று சொல்லிக் கதறுகின்றேன். சிறிது நேரம் பொறுத்து வரலாம் என்று இருந்துவிடாதே அப்பனே. அதற்குள் நான் உயிரற்றவஞக ஆகிவிடு வேன். கா-கா என்று சொல்லுகிறேன். எதற்காகத் தெரியுமா?

ஒரு காக்கையானது இறந்துவிட்டால் அதைச் சுற்றி நூற்றுக்கணக்காக காக்கைகள் அமர்ந்து 'கா-கா' என்று கதறுவதை நாம் உலகில் காண்கிருேம். அதன் பொருள்தான் என்ன? ஹே மானிடர்களே! எம் முடைய இனத்தைச் சேர்ந்த இக் காகம்-ஆனது இறைவனுடைய ஸ்மரணம் இல்லாமல் செத்துவிட் டது. அதனுடைய ஜன்மத்தை ஸபலம் செய்யும் பொருட்டு நாங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து காப் பாற்று காப்பாற்று என்ற அர்த்தத்தை வெளிப்படுத்து கிற 'கா-கா' என்ற சப்தத்தின் மூலமாக இறைவனிடம் முறையிடுகிருேம். பகுத்தறிவு இல்லாத நாங்களே இவ்விதம் செய்கிருேம்.

எனவே பகுத்தறிவோடு கூடிய அரிதாகிய மானிடப் பிறவியை அடைந்த நீங்கள் நமஞர் வந்து கலகம் செய்து உங்களின்மேல் பாசக்கயிற்றை போட்டு உங்களுடைய உயிரினே எடுத்துச்செல்லும் முன்பே முருகபெருமானுடைய திருவடிகளே அடைய் யத்னம் செய்யுங்கள் என்று போதிக்கின்றதே தவிர வெறும் காகத்தினுடைய கத்தல் என்று நான் நினேக்கவில்லே. மரண காலத்தில் என்னுடைய நாக்கானது உச்சரிக்

கும் தன்மையை இழந்துவிடும் யென்பதினால் நான்ஒரு காகத்தினைப்போல் 'நமனார் என்னைக் கலகம் செய்யு நாள்' என்னைக் காப்பாற்றுவாய், என்ற அர்த்தத்தில் 'கா-கா' என்று கதறுகிறேன். எப்படி கதறுகின்றேன். இடைவிடாமல் கதறுகின்றேன். இப்படி இடைவிடாமல் நான் கதறுகிறது என்னுடைய மரண காலமானது என்னை நெருங்கிவிட்டதென்பதை உனக்கு எடுத்துக் காட்டவில்லையா?

ஆதலால் நான் அடியாராக ஆவதற்கு உன்னுடைய சரணங்களில் என்னை எல்லையில்லா கருணையினால் ஆட்கொள்ள வேண்டும்.

"சாகாது எனையே" உன்னுடைய சரணங்களில் ஆட்கொள்ளவேண்டும். எடுத்த ஜன்மங்கள் போதும் ஐயனே. மறுபிறப்பில் ஆட்கொள்கிறேன் என்று சொல்லிவிடப் போகிறாயோ என்று பயந்து

சாகா தெனையே சரணங்களிலே

என்று யாசிக்கின்றேன்.

முருகா! உன்னுடைய சரணங்களின் பெருமையை யாரால் சொல்ல முடியும். மஹான்களினால்தான் சொல்லமுடியும்.

ஓராது தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட்கொள்வான்

என்று பாதமஹிமையை சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பொன்மொழிகளினால் போற்றிப் புகழ்கின்றார் அன்றோ. எனவே உனது சரணங்களில் காணமுடியாத பேரின் பத்தை வேறு எங்கே காண முடியும். 'சரணம்' என்ற பதத்தின் பொருளே உன்னுடைய திருவடிகளாகும் அன்றோ! அத்தகைய மஹிமை வாய்ந்த சரணங் களிலே என்னை ஆட்கொள்வாய் அப்பனே!

ஹே முருகா! ஊனடைந்த உடம்பின் பிறவியின் பயனும், செய்கின்ற நிறைதவமும், தேடும் அனைத்த நிதியும் உன்னுடைய திவ்ய சரணங்களை அடைவதற் காகவே ஏற்பட்டனவைகள் என்பதை நான் நன்கு தெரிந்துகொண்டேன். அதுமட்டுமல்ல. ஹே முருகா! உன்னுடைய திவ்ய சரணங்களிலே

அன்பு கலந்த இன்பமிருக்கிறது-எண்ணத்தை உருவாக்கும் சத்திவாய்ந்த உணர்ச்சியிருக்கிறது-முக் திக்கு வழிகாட்டும் ஞானம் இருக்கிறது-கற்பனைக்குக் கடந்த தத்வமிருக்கிறது-எண்ணற்ற கோடி மக்களின் வாழ்வுக்கும் சிந்தனைக்கும் புத்துயிர் அளிக்கிறது-எல்லையற்ற பேரின்பத்தைப் பெற அது வழி காட்டு கிறது-தர்ம நெறியில் அழைத்துச் செல்லுகிறது-உள் ளத்தில் தெய்வீக உணர்ச்சியை பொங்க வைக்கிறது-இதெல்லாம் போதாதென்று முக்தியாகிய தேவி தலை வணங்குகிறாள் உன்னுடைய சரணங்களில் அன்றோ.

கரணங்களெல்லாம் கடந்து நின்ற
கறைமிடற்றன்
சரணங்களே சென்று சார்தலுமே
தானெக்கு
மரணம் பிறப்பென்றிவை யிரண்டின்
மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய்
கோத்தும்பீ

என்று பாதமஹிமையை புகழ்கின்றார் அன்றோ! மாணிக்கவாசகர்.

அதுபோலவே தாயுமானவரும்,

அரும்பொனே மணியே யெனன்பே
யெனன்பான வறிவே யெனறிவி
லூறும், ஆனந்த வெள்ளமே
யென்றென்று பாடினே ஞடினே
ஞடிநாடி, விரும்பினே னுலறினே
னலறினேன் மெய்சிலிர்த் திருகை
கூப்பி, விண்மாரி யெனவெனிரு
கண்மாரி பெய்யவே வேசற்றயர்ந்
தேனியான், இரும்புநேர் நெஞ்சகக்
கள்வஞ ஞலுமுனை யிடைவிட்டு
நின்றதுண்டோ, வென்றுநீ யன்று
நானுன் னடிமை யல்லவோ
யாதேனு மறியாவெனுந், துரும்பனே
னென்னினுங் கைவிடுதனீ தியோ
தொண்டரொடு கூட்டு கண்டாய்,
சுத்தநிர்க் குணமான பரதெய்வமே
பரஞ் சோதியே சுகவாசியே

என்ற பொன்மொழிகளிஞல் அன்பின் மஹிமையை போதிக்கின்ருர். அத்தகைய அன்பானது எனது உள்ளத்தில் இப்பொழுது திகழ்கின்றது. எனவே உன்னுடைய திருவடியையடைய நான் அர்கதியுள்ளவஞக இருக்கிறேன். எனினும் நான் ஒன்று வேண்டுகிறேன்.

ஒருமையுடன் உனது திரு
வடிநினைக்கின்ற உத்தமர்
தம் உறவு வேண்டும்

என்று மஹான்கள் சொல்லியவண்ணம் உன்னுடைய அடியார்களின் கூட்டத்தில் என்னையும் ஒரு அடியாராகக் கருதி சேர்த்துக்கொள்வாய். பிறகு என்னை உன்

சரணங்களில் ஆட்கொள்வாய் என்று வேண்டுகிறார் முருகனிடம் அருணகிரிநாதர்.

எனவே மரணகாலத்தில் குமரனின் பொற்பாதங்களே நமக்கெல்லாம் சரணாலயம் அன்றோ. அத்தகைய பாதத்தை அடைய பக்தி வேண்டும். முருகபெருமானை இடைவிடாமல் துதித்துக்கொண்டே இருக்கவேண்டும்.

இன்றுநன்று நாளை நன்று என்று
நாளின் பெருமையை சொல்லிக்
கொண்டே நாளைத் தள்ளக்கூடாது

முருக பெருமானின் சக்தியை நினைந்து நினைந்து உள்ளம் மகிழவேண்டும்.

பட்டினத்தடிகள் போன்ற பரம ஞானிகளே

வாளான் மகவரிந் தூட்டவல்லே னல்லன்
மாதுசொன்ன சூளா லிளமை
துறக்க வல்லே னல்லன்
தொண்டுசெய்து நாளாறிற் கண்ணிடந்
தப்பவல் லேனல்ல
னினிச் சென்றாளாவ தெப்படியோ
திருக் காளத்தி யப்பனுக்கே

என்று சொல்லி பக்தியின் பரமநிலையை அடைய முடியாது என்று சொல்லி வருந்துகிறார்.

ஹே பரசிவமே! சிறுத்தொண்டர்போல் குழந்தையை அறுத்து சமைத்து உனக்கு திருவமுது அளிக்கும் சக்தி என்னிடத்தில் இல்லை. மனைவியின் ஆணையினைக் கேட்டு சிற்றின்பத்தில் வெறுப்பு ஏற்பட்டு திருநீலகண்ட நாயனார் வாழ்நாள் முழுவதும் இளமையை துறந்ததுபோல் என்னால்இளமையைத் துறக்க

முடியுமா ஐயனே. இதற்கெல்லாம் மேலாக ஆறு நாள் உனக்குத் தொண்டு செய்து முக்தியையடைந்த கண்ணப்ப நாயனர் போல் பக்தி செய்யும் ஒரு மாபெரும் ஆற்றல் என்னிடத்தில் எங்கிருக்கிறது. இவ்வித நிலையில் நான் உன்னை எவ்விதம் அடையப் போகிறேனே தெரியவில்லையே, என்று சொல்கிருர்.

எனவே எமன் பாசக்கயிற்றைக் கையில் எடுத்துக் கொண்டு பயங்கரமான எருமைக் கடாவின்மீது நம்மை நோக்கி வரும்பொழுது நாம் எப்படி முருகப் பெருமானை அழைப்பது என்பதை அருணகிரிநாதர்,

வாகா முருகா மயில்வாகனனே
யோகா சிவஞானெப தேசிகனே!

என்று உள்ளம் கரைந்து உருகி ஊறி உணர்ந்து உட்கசிவுடன் அழைத்துக் காட்டுகிருர் அன்ருே! என்னே அருணகிரியின் பெருமை. என்னே அருள்மலையின் தெய்வீகப் பொன்மொழி.

முதன் முதலாக வரும் எமதூதர்களுடைய செவியில் விழும் வண்ணம் 'முருகா' என்று குமரனை அழைக்கின்ருர். பொன்மொழியாகிய தமிழ் மொழியில் முருகா என்பதற்கு மேலான மந்திரமே கிடையாது. 'முருகா' என்ற மந்திரமானது செத்தவர்களுக்கு மீண்டும் ஜீவகலையை அளிக்கும் சக்தி வாய்ந்தது. 'முருகா' என்ற மந்திரத்தையே நாம் எக்காலும் மூச்சாகக் கொள்ளவேண்டும். ப்ரும்மனல் வர்ணிக்க இயலாத அழகினைக் கொண்டது முருகா என்ற மந்திரத்தின் ஸ்வருபம். 'வேல் முருகா—வேல் முருகா' என்று ஜபம் செய்பவர்களே 'முருகா என்ற மந்திரத்தின் அழகினைக் காண்பார்கள்.

எனவே மரண சமயத்தில் மிகவும் பயங்கரமாயும் கோரமாயும் உள்ள எமதூதர்களும் எமனும் நம் கண் முன்னே தோன்றும் முன்பே நாம் முருகனின் அழகில் ஈடுபட்டு அவ்வழகை கண்குளிரக் காணவேண்டும்.

ஆனல் உலக வாழ்க்கையில் ஈடுபட்டு பாப கர்மா வையே செய்துவரும் நாமோவெனில் மரணம் வருவ தற்கு முன்பாகவே பிணிகளினுல் பீடிக்கப்பட்டவர் களாக ஆகிவிடுகிறோம். இதனை அருணகிரியார் திருப் புகழில்

இருமலும் ரோக முயலதன் வாதம்
எரிகுண நாசி விடமே நீர்-இழிவு
விடாத தலைவலி சோகை எழுகள
மாலை இவை யோட-பெருவயிறீளை
எரிகுலை சூலை பெருவலி வேறு
முள நோய்கள்-பிறவிகள் தோறும்
எனைநலி யாதபடியுன தாள்கள்-.
அருள்வாயே

என்று தம்மை ஒருவிதமான வியாதிகளும் வந் தடையாதபடி வேண்டுகிறார். 'முருகா' என்ற மந்திர உச்சாரணமே நம்மை மரணகாலத்தில் காப்பாற்றும். எனவே

உருகா மனமுஞ் சிவஞான முணரா
வறிவு முனது புகழ்
ஓதாநாவு மோதக் கேட்டு வந்தே
யினிய நதி போலப்
பெருகா விழியு முடையேனைப்
பிறவிக் கடலில் வீழாமற்

பேணி யெடுத்திங் கெனதுள்ளம்
பிரியா விரிஞ்சைப் பதிவாழு
முருகா வருக சதுர்வேத முதல்வா
வருக வினை தீர்க்கு
முனைவா வருக மலராறு முகவா
வருக திருமாலின்
மருகா வருக மயிலேறு மன்னு
வருக அடியார்கள்
வாழ்வே வருக தெய்வ சிகா
மணியே வருக வருகவே

என்று பரம ஞானியான மார்க்கசகாய தேவர் முருகனை அழைக்கின்றார்கள் அன்றோ.

ஆதலால் எந்நேரமும் நாம் முருகப்பெருமானின் சரணங்களிலேயே மனதை நிலைநிறுத்தி வைக்க வேண்டும். இவ்வித முருக தியான மஹிமையை மஹான்கள் எப்படி அனுபவிக்கிறார்கள் தெரியுமா?

படிக்கினும் வேல் முருகா என்பேன்
பயந்துற்று மனந்
துடிக்கினும் வேல் முருகா என்பேன்
சொல்லும் வார்த்தை நிரை
முடிக்கினும் வேல் முருகா என்பேன்
முன்னை யூழ்வினைவந்
தடுக்கினும் வேல்முருகா என்பேன்
என்னை ஆண்டவனே.

என்று அனுபவிப்பார்கள். இத்தகைய புண்ணியவான்களிடத்தில் எமனவன் தலைவணங்கி அன்புடன் ஆட்கொள்வான். முருக பக்தர்களிடத்தில்

நமனுர் கலகம் செய்ய மாட்டார்கள். எனவே மந்திரங்களுக்குள் தெய்வமாக விளங்கும் மந்திரமே 'முருகா' என்பதாகும். அத்துடன் 'வேல்' என்ற மந்திரத்தையும் சேர்த்துக் சொண்டால், அவ்'வேல் முருகா' என்ற மந்திரமானது காலனுக்குக் காலனுய் விளங்கி வருகிறது.

ஏழு கோடி மந்திரங்களிலிருந்து மஹாமந்திரம் என்று தேர்ந்தெடுக்கப்பட்டு ஞானிகளிஞல் உபாஸிக்கப்பட்டு வரும் மஹா மஹிமை தாங்கிய மந்திரமே

## 'வேல் முருகா'

என்பது. பாலர்களிலிருந்து வ்ருத்தர்கள் வரையில் உச்சரித்துக்கொண்டிருக்கவேண்டிய மந்திரம். இம்மந்திரரூபமாகவே முருகன் விளங்குகிருன் என்பது மட்டுமல்ல. மந்திரரூபமாகவே விளையாடவும் விளையாடுகிருன். வேத மந்திர வடிவமே முருகன்.

மேலும்மயிலை ஓம்காரமென்று வேதங்கள் கோஷிக்கின்றன. அந்த ப்ரணவத்தையே வாகனமாகக்கொண்டு அதன் மேலும் உள்ளும் மின்னல்போல் காட்சி அளித்துக்கொண்டு திவ்யமான லீலாரவிந்தங்களை செல்வக் குமரன் செய்து காட்டுகிருன் அன்ருே.

ஓமெனும் ஓங்காரத் துள்ளேயொரு மொழி
ஓமெனும் ஓங்காரத் துள்ளே யுருவரு
ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே

என்று திருமந்திரம் புகழ்கின்றது.

எனவே முருகப்பெருமானே வெனில் ஞானபண்டிதனுக ஓங்காரத்தின் மேல் நின்று கொண்டு

'தத்வமஸி' என்ற மஹாவாக்கியத்தில் அந்தரங்கமாகவுள்ள ஜீவ ப்ரும்ம ஐக்கிய ஸாக்ஷாத்காரத்தைப் போதிக்கின்ற ராஜயோகத்தை, தன்னைத் தஞ்சமென்று வந்தடைந்தவர்களுக்கு மரண பயமில்லாமலிருப்பதற்கு உபதேசித்து அருளுகிறார்.

அது மட்டுமல்ல. உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பாலரூபத்தில் ஸகலவிதமான மங்கள அலங்காரங்களுடன், ஆதியும் அந்தமுமில்லாமல் அருட்பெரும் ஜோதியாய் திகழும் சிவபெருமானின் வலதுகரத்தில் அமர்ந்துகொண்டு, சிவபெருமானுக்கு ஞானோபதேசம் செய்யும் ஞானபண்டிதனான குமரனிடத்தில் எல்லா விதமான வைபவங்களும் தலைவணங்குகின்றன அன்றோ.

எல்லாம் வல்ல சிவபெருமானே தலைவணங்கி குமரனிடம் ஞானோபதேசம் பெறுகின்றார் என்றால், முருகனின் வெற்றியைப்பற்றி பேச யாமோ வல்லோம்? குமரனின் புகழைப்பற்றி பேசாத இடமில்லை. எண்ணாத தெய்வமில்லை. முருகனின் புகழிலேயே எல்லா உயிர்களும் உறைந்து நிற்கிறது. சொல்லிற்குள் அடங்காத புகழினையுடைய கண்கண்ட தெய்வம் அல்லவா முருகப்பெருமான். உயிருக்குயிராயுள்ள அருட்கடலே முருகப்பெருமான் ஆவார்.

எனவே வேதங்களும் புராணங்களும் சாஸ்திரங்களும் காவ்யங்களும் ஞானிகளும் யோகிகளும் சித்தர்களும் மஹான்களும், மற்றும் எண்ணற்ற கோடி தேவர்களும், அப்படியே யாவரும் முருகனையே மேலான தெய்வம் என்று சொல்லி போற்றிப் புகழ்கின்றார்கள்.

எனவே ஹே முருகா! உன்னுடைய சரணங்கள்

ஒன்றுதான் பேரின்பத்தை அளிக்க சக்தி வாய்ந்தது. எமனுடைய வருகையை தடுத்து என்னை தடுத்து ஆட்கொள்ளும் ஆற்றலுடன் கூடியது. ஆதலால் எமன் எப்பொழுது வருவான் என்றுஎனக்குத் தெரியாது அப்பனே. மரணப்படுக்கையை நினைக்கும் பொழுதே என்னுடைய உடல் நடுங்குகிறது, ஹேமுருகா எமனுடைய பாசக்கயிற்றில் நான் கட்டுப்படாத வண்ணம் என்னைக் காப்பாற்றி அருளவேண்டும்.

நினது அருளைப்பெற நினது அருள் எனக்கு வேண்டும். அவ்வருளைப் பெற நான் உன்னை இறுதியாக வேண்டுகிறேன். அது எதுவோவெனில் உன்னுடைய பொற்சிலம்பு அணிந்த சரணகமலங்களிலே:—

என்னேரமுமுன் னிருதாள் சரணம்
பொன்னே முருகா புரியும் பணியை
மன்னே அருள்வாய் வடிவேல்
மணியே
தென்னூர் மயில்வாகன சேகரனே

என்பதேயாகும். எனவே ஹே முருகா என்னுடைய மரண காலத்தில் நான் உன்னை ஸ்மரணம் செய்யாத போனாலும், நீயாகவே என்மீது உன்னுடைய மாறிலா கருணையை செலுத்தி என்னை உன்னுடைய சரணங்களிலே தடுத்து ஆட்கொள்வாய் அப்பனே. இதனையே நான் இடைவிடாமல் என்றென்றும் உன்னை யாசிக்கிறேன். இல்லையென்று சொல்லாமல் என்னை ஆட்கொள்வாய அப்பனே.

எனவே ஆறுபடை வீட்டினையுடைய முருகப் பெருமானின் பொற்பாதங்களே நமக்கெல்லாம் மேலான சரணாலயம் என்று போதிக்கின்றார் அருண

கிரிநாதர். இதனுல்தான் மஹான்கள்,

சிந்தனை செய்ய வருமுருகா நின்
திருவடியை வந்தனை செய்து
வணங்கி நின்ருல்-வந்தவல் வினையும்
அந்தகனுல் விடுமோலையுந் தூதரும்
இப்புவி மேற்
பந்தமுந் தொந்தமும் பாசமும்
நாசப்படும் இனியே

என்று சொல்லிக் குமரனின் பாதமஹிமையை சுட்டிக் காட்டுகிருர்கள்.

அதுமட்டுமல்ல. ஞானிகளும் யோகிகளும் அடியார்களும் ஒன்று சேர்ந்து கொண்டு ஹே உலகத்தினர்களே! கூறும் அடியார்களின் வினைதீர்க்கும் குழந்தை குமரனின் திருவடிகளையே சரணுலயம் என்று சரணமடையுங்கள். அப்பொழுது உங்களை

**காலபயம் எள்ளளவும் அணுகாது**

என்று சொல்லி ஸத்தியம் செய்கின்ருர்கள் அன்ருே!



# மெய்ப்பொருளின் உபதேச மஹிமையை எண்ணி எண்ணி மகிழுதல்

## 42



குறியைக் குறியாது குறித் தறியும்
நெறியைத் தனிவேலை நிகழ்த்திடலும்
செறிவற் றுலகோடுரை சிந்தையுமற்
யறிவற் றறியாமையும் அற்றதுவே.

**பதவுரை**

குறியை-சப்தரூபமாகிய வேதங்களுக்கும் மனம் வாக்கு இவைகளுக்கும் அப்பால் விளங்கி வருவதும், அப்படியே எல்லா உயிர்களும் முடிவில் குறிக்கோளாக அடையும் இடம் மாகிய மெய்ப்பொருளாகிய பரம்பொருளை. குறியாது—(காலத்திலும் தேசத்திலும் வஸ்துவிலும் கட்டுப்படும் உலக சம்பந்தமான பொருளைக் குறிப்பதுபோல) குறித்துக் காட்டமுடியாததான மஹிமையை, குறித்து-(அடியேன்) நன்றாக மனத்தினால் தியானம் செய்து, அறியும் நெறியை-உணர்ந்து அனுபவிக்கும் ஞானமார்க்கத்தையும், தனி

வேல் ஐ-ஒப்பற்ற வேலின் மாபெரும் மஹிமையையும், நிகழ்த்திடலும்-(அடியேனுக்கு முருகப் பெருமான்) உப தேசித்த அந்நேரத்திலேயே, உலகொடு-உலகத்தாரோடு, செறிவு-பற்றுதல்கள், அற்று-இல்லாமல் ஆகி அதாவது பற் றுதல்கள் அற்றுப்போய், உரை-வாக்கும், சிந்தையும்-சிந்தனைகளும், அற்று-ஒழிந்து, அறிவு-உலக அறிவு, அற்று-அழிந்து, அறியாமையும்-அஞ்ஞானமாகிய உலக மாயையும், அற்றதுவே-(என்னைவிட்டு அடியோடு) அகன்றதின் பெருமைதான் என்னே!

**தாத்பர்யம்**

எண்ணவொணுத அருந்தவத்தின் பயனுக முருகபெருமானிடமிருந்து தாம் பெற்ற உபதேச மஹிமையின் பேரின்பத்தினை இவ்வையகம் பெறவேண்டும் என்று எழுந்த பெருங்கருணையினுல் இவ்வநுபூதியை பாடுகின்ருர் அருணகிரிநாதர்.

எண்ணற்ற கோடி பிறவிகளில் மானிடப்பிறவியே மேலானதாகும். ஏனெனில் இம் மானிடப்பிறவியில் தான் நாம் இறைவனை அடையமுடியும். இறைவனை அடைவதற்கு ஏற்ற பகுத்தறிவு நம்மிடமிருக்கிறது.

எனவே இறைவனை அடைவது என்ருல் என்ன? நாம் 'அகம்ப்ரஹ்மாஸ்மி' அதாவது 'நான் ப்ரம்மமாக' இருக்கிறேன் என்ற நிலையை அடைவதே நம்முடைய மானிடப் பிறவியின் குறியாகும் அன்ருே.

எல்லா உயிர்களும் முடிவில் இலக்ஷியமான இடமாகக் கருதிவரும் பொருளே மெய்ப்பொருளாகும். எனவே அகண்டாகாரமாய் ஞான உருவாய் அங்கு இங்கு என்னுதபடி வியாபித்திருக்கின்ற மெய்ப் பொருளை சப்த ரூபங்களாகிய அபௌருஷமான வேதங்கள் கண்டுபிடிக்கச்சென்று முடிவில் மனதிற்

கும் வாக்கிற்கும் கடந்த வஸ்துவே மெய்ப்பொரு ளாகும் என்று திரும்பி வந்துவிட்டன.

ஆதலால் அம்மெய்ப்பொருளாகிய பரம்பொருளோ வெனில், ஒரு தேசத்திலிருந்து மற்றொரு தேசத்தில் இல்லை என்பதில்லை. எல்லா தேசங்களிலும் நிறைந்து இருக்கிறது. அதுபோலவே ஒரு காலத்திலிருந்து மற் றொரு காலத்தில் இல்லாமல் ஆகிவிடுகிறதில்லை. சென்ற காலம் நிகழ்காலம் வருங்காலம் என்று மூன்று காலங்களிலும் மாறுதலடையாமல் ஒரே மாதிரியாய் விளங்குகின்றது.

அதுபோலவே அம்மெய்ப்பொருளானது எல்லா மாய் எப்பொருளாயும் திகழ்கின்றது. அதாவது மெய்ப் பொருளைக் காட்டிலும் வேறான பொருளே கிடையாது.

ஆகையால் மெய்ப்பொருளைப்பற்றி விசாரிக்கும் பொழுது பரப்ரம்மமாகத் திகழும் ஈச்வரன்-இப்பிர பஞ்சம்-ஜீவன்-ஆகிய இம்மூன்றில் எது சத்தியம் எது அசத்தியம் என்று நிர்தாரணம் செய்ய முடியாமல் பிராணிகள் அல்லல் படுகிறார்கள். ஏனெனில் ஒரு சமயம் பிரம்மம் சத்தியமாகவும் ஒருசமயம் ப்ரபஞ்சம் சத்தியமாகவும் தோன்றி மறைகிறது. எனவே ஒவ் வொருவருடைய உள்ளத்திலும் எது சத்யம்? என்ற எண்ணமானது எழுகினறது.

எனினும் மாயா உலகில் ப்ராணிகள் ஈடுபட்டு வரு வதால் இவ்வுலக வாழ்வை ப்ராணிகள் ஸத்யம் என்றே எண்ணுகின்றார்கள். இதனால் அவர்கள் உலகத்தை சத்யம் என்று கருதி வாழ்க்கையை நிலையுள்ளதென்று எண்ணி வீண பேச்சுகளை பேசிக்கொண்டே வாழ்நாளை நயனம் செய்கின்றார்கள். ஆத்ம விசாரம் செய்வ தில்லை.

உலக பற்றுதலே நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே இருக்கிறார்கள். உலக விஷயங்களிலேயே அவர்களுடைய சிந்தனையானது இடைவிடாமல் நிலவி நிற்கின்றது. இந்நிலையில் ப்ராணிகள் வாழ்க்கையின் பயனைக் காண்பதே அரிது ஆகிவிடுகின்றது.

இவ்வித நிலையில் உழன்று கொண்டிருக்கும் நம்மை கரையேற்றுவது இறைவனின்பெருங்கருணையே யாகும். அவன் கருணையில்லையேல் நாம் மானிடப் பிறவியின் பயனை அடையவே முடியாதன்றோ இத னால் அன்றோ மாணிக்கவாசக சுவாமிகள்,

அவன் அருளாலே அவன் தாள் வணங்கி

என்று சொல்லுகின்றார், ஆக முருகப்பெருமானின் அருளானது நம்மேல் விழுமேயாகில் நாம் எல்லோரும் ஜன்ம ஸாபல்யத்தை அடைந்தவர்களாக ஆவோம்.

எனவே முருகப்பெருமான் உபதேசித்த தத்வ மஹி மையையும், தத்வ பொருளையும் அருணகிரிநாதர் இப் பாட்டில்

குறியைக் – குறித்து அறியும் நெறியைத்
தனிவேலை நிகழ்த்திடலும்

என்று சொல்லுகின்றார்.

'குறியை' என்றால் பரப்ரம்மமாகிய பரம்பொருளை என்று அர்த்தம்.

பரம்பொருளை அடைவதற்கு ஆயிரம் மாதாவி னுடைய ஸ்தானத்திலிருந்துகொண்டு வேதமானது வழிகாட்டுகிறது. வேத நெறியை நிலைநாட்டுவதற் காகவே முருகப்பெருமான் திருஞானசம்பந்தராக திரு அவதாரம் செய்தார் என்பதை இவ்உலகில் அறியாதார் யாருமே இல்லை.

இவ்வுண்மையை ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் பெரிய புராணத்தில் ஸ்ரீ திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளின் திவ்ய சரிதத்தில் முதலடியாக

வேத நெறி தழைத்தோங்க

என்று ஆரம்பிக்கின்றார். எனவே வேதங்களே முருக பெருமானின் மூச்சாக இருக்கின்றது. வேதங்களில் போதிக்கப்படுகின்ற இரண்டு நெறிகளையே முருகப் பெருமான் உபதேசிக்கின்றார்.

ஒன்று ஞானமார்க்கம்.
மற்றொன்று கர்மமார்க்கம்.

கர்ம மார்க்கத்தின் அங்கமே உபாஸனையும் பக்தியும் ஆகும். பக்தி மார்க்கமானது செய்யும் கர்மாவை ஸபலமாகச் செய்கிறது. செய்யும் கர்மாவானது பரிசுத்தமான மனதுடனிருக்குமேயானால் அதன் காரணமாக நாம் ஞான மார்க்கத்தை அடைகிறோம்.

ஞானமார்க்கத்தில் பக்தி மார்க்கமும் உபாஸனா மார்க்கமும் பொலிவுடன் திகழ்கின்றது. ஆகையால் உபாஸனா மார்க்கத்துடன் விளங்கும் ஞானத்தை சாஸ்திரங்கள் **'ஸகுண பக்தி'** என்றும் அதுபோலவே ஆத்மானுபவமான ஞானத்தை சாஸ்திரங்கள் **'நிர்குண பக்தி'** என்றும் போதிக்கின்றன.

ஆதலால் உபாஸனாமார்க்கமே ஞானத்தை அடைய முதல் படியாக யிருப்பதால் இப்பாட்டில், உபாஸனைக்கு மிகவும் ரம்யமாகயிருக்கும் மஹா மஹிமை தங்கிய முருகப்பெருமானின் வேலை

**தனி வேல் ஐ**

என்ற பதத்தினாலும், அப்படியே அவ் ஒப்பற்ற வேலே உபாஸனையின் மஹிமையினால் ஞான வேலாக மாறி

புத்தியில் ஞான வழியை பிரகாசிக்க வைத்து முடிவில் ப்ரம்மானந்தமாஹிய கடலில் லயிக்க வைக்கிறது என்பதை

அறியும் நெறியை

என்ற பதத்தினுலும் எடுத்துக் காட்டுகிருர் அருணகிரி நாதர்.

விஷயாதிகளில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும் புத்தியானது, உண்மையில் ப்ரம்மவிசாரம் செய்யும் சக்தியினைக் கொண்டது. அஞ்ஞானமானது புத்தியை மறைக்கின்றபடியால் புத்தியானது அவ் அஞ்ஞானத்தின் கார்யமாஹிய மாயா ப்ரபஞ்சத்தில் ஈடுபடுகின்றது.

எனவே மந்திரமாயும் ஒரே ஸ்வயம் ஜ்யோதிஸ்வரூபமாயும் விளங்கிவரும் குமரனின் வேலை இதயத்தில் நினைக்கும்கால், இதயத்தில் நிறைந்திருக்கும் இருளானது நாசத்தை அடைகிறது. அந் நிலையில் புத்தியானது பிரகாசத்தையடைகிறது. அப்பொழுது சக்ஷுரிந்த்ரியம்—ச்ரோத் ரேந்த்ரியம்—க்ராணேந்த்ரியம்—த்வகிந்த்ரியம்—ரஸனேந்திரியம் என்ற ஐந்து விதமான ஞானேந்த்ரியங்களும்மனதில் லயத்தை அடைகின்றன.

எனவே புத்தியானது ஜ்யோதிர் மயமான வேலில் ஐக்ய பாவத்தை அடைந்து, ஸர்வமும் வேல் ஸ்வருபமாகவே பாஸிக்கிறது. அப்பொழுது "எல்லாமாயும் எப்பொருளுமாயும் தோன்றுகின்ற" வேலானது புத்தியில் வேலை செய்ய ஆரம்பிக்கின்றது.

இதன் மஹிமையினுல் நாம் ப்ரம்ம விசாரம் செய்ய தொடங்குகின்ருேம். நமது புத்தியானது

ஞான பாகமாகிய உபநிஷத் தத்வங்களில் மகிழ்கின்றது. நாம் உபநிஷத் வாக்யங்களில் மகிழ்கின்ரோம்.

இந்நிலேயில் உண்மையான மெய்ப்பொருள் புத்தியில் ஸ்புரிக்கிறது.

ப்ரம்ம ஸத்யம் ஜகன்மித்யா
ஜீவப்ரம்மோ நபர :

என்ற ஞானம் உண்டாகிறது. ஆதலால் உண்மையில் ப்ரம்மம் ஒன்றுதான் ஸத்யம். காணப்படும் இவ்வுலகனைத்தும் பொய்யேயாகும். ஜீவாத்மாவானவன் பரமாத்மாவைக் காட்டிலும் வேறுபட்டவன் அல்ல. இரண்டு தத்துவங்களும் ஒன்றேயாகும். ப்ரம்மதத்வம் இரண்டல்ல. ப்ரம்ம தத்துவமானது இரண்டாகயிருக்கவே முடியாது. இரண்டாகயிருந்தால் பரமாத்மாவை பரம்பொருள் என்று சொல்லமுடியாது. 'பரம்பொருள்' பலவாயுமில்லே. அது மூன்று காலங்களிலும் அழியாத பொருளே ஆகும்.

ஸத்தாயும்–சித்தாயும்–ஆனந்தமாயும்—எப்பொருளாயும்—எங்குமாயும்—நிரவயமாயும்—நிர்குணமாயும்–ஸ்வயம் பிரகாசமாயும்–சிதேகரஸமாயும்-விளங்கி வருவதே பரம்பொருளாகும்.

இப் பரம்பொருளே 'இது—அது' என்று சுட்டிக் காட்ட முடியாது.

'இது பரம்பொருள் இல்லே—இது பரம்பொருள் இல்லே' என்றுதான் ப்ருஹதாரண்ய உபநிஷத்தானது **'நேதி நேதி'** என்ற வாக்கியத்திஞல் பரம்பொருளேப் போதிக்கின்றதே தவிர இது பரம்பொருள் என்று போதிக்கின்றதில்லே.

ஆதலால் உலகத்தில் காணப்படும் வஸ்துக் களெல்லாம் கானல் நீரினைப்போல் வெறும் நாம ரூபத் துடன் கூடிய தோற்றங்களே ஆகும். ஸத்யம்போல் தோன்றினுல் உண்மையில் ஸத்யமல்ல. ஸத்தாகிய பரம்பொருளே பொய்யாகிய உலகம் ஆச்சிரயித்திருப் பதால் இவ்வுலமானது ஸத்யம்போல் தோன்றுகிறது.

அஞ்ஞானத்தால் உலகமானது பாஸிக்கிறது. உண்மையில் அஞ்ஞானமானது ஸத்யமுமல்ல; அஸத் யமுமல்ல. இல்லாமலிருக்கிற ஜகத்தை இருப்பது போல்தோன்றச் செய்கிற அஞ்ஞானமானது உலக ரீதியில் ஸத்யம்போலும், யதார்த்த நிலையில் பொய் யாகவுமே ஆகின்றபடியால், அப் பிரபஞ்சத்தில் நாம ரூபத்தினுல் பல்வேருக தோன்றுகின்ற வஸ்துக்களெல் லாம் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' அதாவது நான் ப்ரம்ம மாக இருக்கிறேன் என்ற அனுபவநிலை வரும்வரையில் தான் ஸத்யமாகத் தோன்றும். 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற நிலையில் காண்கின்றவன்-காணப்படும் பொருள் என்ற பேத ஞானமே கிடையாது.

'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்பதுதான் ஜீவப்ரும்ம ஐக்ய ஸாக்ஷாத்காரமாகும். இந்த அனுபவ நிலையே மோக்ஷமாகும். இந்நிலையை நாம் இந்த ஜன்மாவி லேயே அடையலாம்.

இவர்களையே ஜீவன் முக்தர்கள் என்று அறிய வேண்டும். இவர்களோவெனில்,

நீரிலே முளைத்தெழுந்த
தாமரையினேரிலை
நீரினேடு கூடி நின்று
நீரிலாத வாறுபோல்

பாரிலே முளைத் தெழுந்த
பண்டிதப் பராபரம்
பாரிஞேடு கூடி நின்ற
பண்பு கண்டிருப்பரே

என்பதுபோல் ப்ராரப்தகர்மாவின் பலனை அனுபவித்துக்கொண்டே தாமரை இலையில் தண்ணீர் ஒட்டாதது போல், பரம்பொருளிலேயே லயத்தை அடைந்துயிருந்து வருவார்கள்.

முருகபெருமானுடைய அருளினுல் இத்தகைய நிலையை நாம் அடையலாம்.

மேலும் ஜீவன் முக்தர்கள் உலகிற்கு உபதேசம் செய்யும் தத்துவமோவெனில்,

எங்கு முள்ள ஈசனுர் எம்முடல்
புகுந்த பின்பு
பங்கு கூறுபேசுவார் அப்பன்
பாடு சென்று அணுகிலார்
உங்கள் தெய்வம் எங்கள்
தெய்வம் என்றுபேத முள்ளதோ
உங்கள் பேதமன்றி யந்த
வுண்மை பேதம் யில்லையே

என்பதேயாகும். இத்தகைய நிலையில் நம்மை எடுத்துச்செல்கிறது முருகபெருமானின் உபதேசம்

எனவே ஹே முருகா! நீ என்மீது கருணை கூர்ந்து வேலின் மஹிமையையும், ஞான மார்கத்தையும் உபதேசித்தருளிய மறு க்ஷணமே நான் ஞானவானுகி விட்டேன் அன்ரே.

உன்னுடைய உபதேச மஹிமையினுல் நான் இவ்வுலக வாழ்க்கையை பொய்யென்று உணர்ந்தேன். உலகத்தில் நான் வைத்திருக்கும் பற்றுதல்கள் தானுகவே என்னைவிட்டு ஒழிந்து போயின.

உலக விஷயங்களை சிந்தித்துக்கொண்டிருக்கும் எண்ணங்களெல்லாம் என்னை விட்டு அகன்றது. வீணுகிய பேச்சுகளை வெறுத்தவனுக ஆகி ஸதா காலமும் உன்னுடைய நினைப்பாகவே காலத்தை நயனம் செய்கிறேன்.

இதுவரையிலும் இவ்வுலகத்தை ஸத்யம் என்று எண்ணி வந்த அறிவானது அடியோடு அழிந்து போயிற்று.

எல்லாவற்றிற்கும் மூலகாரணமாகிய அஞ்ஞானம் என்னைவிட்டு அறவே ஒழிந்து போயின.

ஹே முருகா! உபதேச மஹிமையினுல் ப்ரம்ம நிர்வாண நிலையை நான் அடையும் பாக்கியத்தைப் பெற்றேன். ஞான மார்கத்திஞல் இந்த ஜன்மாவிலேயே கைவல்ய முக்தி நிலையை அடையலாம் என்று உபதேசித்தருளிஞயே.

எனவே பந்தத்திற்கு மூலகாரணம் அஞ்ஞான மாகையால் அவ் அஞ்ஞானத்தை போக்க ஞான தீபமே வேண்டும். ஞான தீபத்திஞல் அஞ்ஞானமானது அழிக்கப்பட்டவுடன், அஞ்ஞானத்தின் காரியமாயிருந்த உலகப் பற்றுதலானது தானுகவே நம்மைவிட்டு விலகிப் போகின்றது. பந்தமானது நம்மை விட்டு அகன்றதும் நாம் ஜீவன் முக்தி நிலையை அடைகிருேம்.

ஆதலால் ஜீவன் முக்தி நிலையை அடைந்தவர்கள் மறுபடியும் ஜன்மாவை எடுப்பதில்லை. காரணமோ

வெனில், ஞானியாகிய ஜீவன் முக்தனிடத்தில், பந்தத்தை உண்டுபண்ணக்கூடிய அஞ்ஞானமானது மறுபடியும் எக்காரணத்தைக் கொண்டும் உண்டாகவே உண்டாகாது என்பதில்

ந புநரா வர்த்ததே

என்ற வேத வாக்கியமே மேலான பிரமாணமாகும்.

எனவே குமரனின்

## உபதேச மஹிமையானது

முதன் முதலில் உலக வாழ்க்கையிலுள்ள பற்றுதலை அறுக்கிறது என்பதை

**செறிவற்று உலகோடு**

என்பதினுலும், இரண்டாவதாக வீண் பேச்சுகளை ஒழித்துமௌன வ்ரதத்தை அநுஷ்டிக்கும் சக்தியை அளிக்கிறது என்பதை

**உரை அற்று**

என்பதினுலும், அப்படியே மூன்ருவதாக உலக சிந்தனையை வேரோடு அறுத்துத் தள்ளுகிறது என்பதை

**சிந்தையும் அற்று**

என்பதினுலும், நான்காவதாக 'நிலையில்லாத அழியும் உலக அறிவை' போக்கடிக்கின்றது என்பதை

**அறிவு அற்று**

என்பதினுலும், ஐந்தாவதாக உலக வாழ்க்கையில் பந்தம் ஏற்படுவதற்கு மூலகாரணமாகிய அஞ்ஞானத்தை போக்கடிக்கின்றது என்பதை

**அறியாமையும் அற்றது**

என்பதினுலும் எடுத்துக்காட்டி, முடிவில் ஆருவதாக கந்தரலங்காரத்தில்,

சொல்லுகைக் கில்லை யென்றெல்லாம்
இழந்து சும்மாவிருக்கும் எல்லையுட்
செல்ல வெனை விட்டவா

என்று சொல்லி சுட்டிக்காட்டிய

**ஜீவன் முக்தி நிலையை**

அளிக்கிறது என்பதை 'அற்றதுவே' என்பதிலுள்ள

ஏகாரத்தினுலும் எடுத்துக் காட்டி போதிக்கின்ருர் அருட்கடலாகிய அருணகிரிநாதர். என்னே முருக பெருமானின் உபதேச மஹிமை. என்னே அதன் பெருமையை எடுத்துச் சொல்லும் அருணகிரிநாதரின் பெருமை. என்னே அவர் சொல்லின் அருமை!



# முருகனின் அருளினுல் பேசா அநுபூதி நிலையை அடைதல்

## 43



தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளம் துகளாயின பின்
பேசா அநுபூதி பிறந்ததுவே.

**பதவுரை:**

தூசு ஆம்-பரிசுத்தமான, மணியும்-முத்து-பவளம் முதலிய பலவிதமான மணிகளையும், துகிலும்-(பலவிதமான) வெண்பட்டாடைகளையும், புனைவாள்-விரும்பி அணிந்து கொள்பவர்களாகிய வள்ளி தேவயானியாகிய இருவர்களுடைய, நேசா-பிராண நாயகனே!, முருகா-அழகு வடிவமான மந்திர ரூபனே, நினது—உன்னுடைய, அன்பு அருளால்-அன்போடு கூடிய அருளினுல், ஆசா நிகளம் - ஆசையாகிய சங்கிலிகள் (விலங்குகளாகிய பூட்டுக்கள்,) துகள் ஆயின பின்-தூள் தூளாய் பொடி ஆன பின்பு, பேசா அநுபூதி-மௌன நிலை என்னும் ஆத்மானுபவ மெய்ஞான நிலை

அதாவது ஸ்கந்தானுபூதி, பிறந்ததுவே-(அடியேனிடத்தில்) சொல்ல முடியாமல்அநுபவ நிலேயாக உண்டாகியது என்னே ஆச்சர்யம்.

**தாத்பர்யம்**

இயற்கையிலேயே அபரிச்சின்னமான ஸௌந்தர் யாதிசயங்களுடன் விளங்கிவரும் வள்ளிதேவியும் தேவயானேயும், வைரம்–மாணிக்கம்–மரகதம்–வைடூரி யம்-பதுமராகம் – பவளம்–முத்து–நீலம் – கோமேதம் ஆகிய நவரத்தினங்களினுல் இழைக்கப்பெற்ற ஒட்டி யாணமும், கிரீடமும், அப்படியே அநேக ரத்தினங் களினுல் அலங்கரிக்கப்பட்ட ஹாரங்களும், வளேயல் களும் பொற்பாதங்களில் கொலுசு பொற்சிலம்பு முதலி யவைகளினுலும் பாஸித்துக் கொண்டு இச்சா சக்தி க்ரியா சக்தி என்ற இரு பரதேவதைகளாக விளங்கு கிருர்கள்.

அதுபோல மனதை கொள்ளே கொள்ளும் பட்டுப் புடவைகளேயும் அணிந்து கொண்டு, இரு காதுகளி லும் அசைந்துகொண்டிருக்கும் குண்டலங்களுடன் பக்தகோடிகளே ரமிக்க வைக்கிருர்கள்.

ஸ்வர்ண கலசங்கள் போன்ற ஸ்தனங்களினுல் அலங்கரிக்கப்பட்ட மார்பில் நவரத்தினங்களினுல் இழைக்கப்பெற்ற நாகாபரணமும், தளிர்கள் போன்ற விரல்களில் மோதிரவகைகள் இவைகளுடன் கனிந்த கருணேயினே எண்ணற்ற கோடி உயிர்களிடத்தில் பொழிகின்ருர்கள்.

இத்தகைய மஹிமையுள்ள வள்ளி தேவயானே இருவர்களுடைய உள்ளங்களேக் கொள்கிருர் முருகப் பெருமான்; முருகப்பெருமானின் அழகில் தங்கள்

உயிர்-ஆவி-உடல்-மனது-ஆகிய எல்லாவற்றையும் பறிகொடுத்தவர்களே வள்ளி தேவயானை ஆவார்கள்.

எனவே இருவர்களுக்கும் ப்ராணநாயகனுக விளங்குகிறுர் முருகப்பெருமான். எவ்விதம் நதிகளானது ஸமுத்திரத்தில் விழுந்து லயத்தை அடைகின்றதோ அதுபோலவே ஸகல சக்திகளும் முருகனிடத்திலேயே லயத்தை அடைகின்றன! இச்சா சக்தியில் மிளிர்கின்ற அழகும், க்ரியா சக்தியில் மிளிர்கின்ற அழகும் முடிவில் அடையவேண்டிய இடம் ஞானசக்தியாகிய அழகிலேயே அன்றே.

'தூசாமணியும் துகிலும்' என்பது ஆடை ஆபரணங்களின் பெருமையை சொல்லவந்த உபலக்ஷணமேயாகும். அதாவது இதன் உட்பொருளோவெனில் அழகினை இருவர்களும் விரும்பி அணிந்து கொள்கின்றுர்கள் என்பதே யாகும். அந்த அழகு வடிவமோவெனில் முருகப்பெருமானே ஆவார், முருகப்பெருமானின் மந்திர வடிவமே அழகு பொருந்திய 'சரவண பவ' என்ற ஷடக்ஷரீ மந்திரமாகும். இம்மந்திரத்திலுள்ள முதல் இரண்டு அக்ஷரமான 'சர' என்பது இச்சா சக்தியாகிய வள்ளிதேவியைபோதிக்கின்றது. அதுபோலவே கடைசி இரண்டு அக்ஷரமாகிய 'பவ' என்பது க்ரியா சக்தியாகிய தேவயானையை போதிக்கின்றது.

மத்தியிலுள்ள இரண்டு அக்ஷரமாகிய 'வண' என்பது ஞானசக்திவடிவமான முருகப்பெருமானைப் போதிக்கின்றது.

ஞானசக்தியிலேயே ஆதியிலிருந்து அந்தம் வரையில் அடங்கி விடுகின்றபடியால், 'முருகு' என்றசப்தத்தால் போதக்கப்படும் 'அழகு-என்றும் இளமை-இயற்கையான மணம்-தெய்வீகம்-ஆகியவைகள் அடங்கி

விடுகின்றன. எனவே ஷடக்ஷரீ மஹாமந்திரத்தை உபாஸித்து வரும் வள்ளிதேவியானவள் 'முருகு' அதாவது அழகின் வடிவினை போதிக்கின்ற 'வண' என்றஇரண்டு அக்ஷரங்களில் முதல் அக்ஷரமாகிய 'வ' காரத்தை 'சர' என்ற அக்ஷரங்களில் கரைத்து அந்தர்முகமாக உபாஸிக்கிருள். அதுபோலவே தேவயானையும் 'வண'என்ற இரண்டு அக்ஷரங்களில் இரண்டாவது அக்ஷரமாகிய 'ண' காரத்தை 'பவ' என்ற அக்ஷரங்களில் கரைத்து அந்தர்முகமாக இருந்து உபாஸிக்கின்ருள்.

எனவே இச்சா சக்தியாகிய வள்ளிதேவியும் க்ரியா சக்தியாகிய தேவயானையும் விரும்பி உபாஸித்துவரும் மூர்த்தியோவெனில் கேவலம் ஞான ஸ்வருபமான முருகப்பெருமானே ஆவார்.

ஆதலால் பாட்டில்,

தூசாமணியும் துகிலும் புனைவாள்

என்று சொன்னதினுல் அழகை விரும்பி நேசிப்பவர்களான வள்ளி தேவயானை என்கிற பரதேவதைகளே ஆகும். அந்த அழகோவெனில் 'முருகா' என்று சொல்லப்படும் மஹாமந்திரமேயாகும். அம்மந்திரத்தையே இடைவிடாமல் உபாஸித்து வருகிருர்கள் வள்ளி தேவயானை ஆகியவர்கள்.

ஆதலால் பாட்டில் 'புனைவாள்' என்ற பதத்தை ஒருமையில் எடுத்துக் கொள்ளாமல் பன்மையிலேயே எடுத்துக்கொள்ள வேண்டும்.

'வள்ளிதேவி' என்று மட்டும் பொருள் கூறினுல் அது மிகவும்தவறு. அதுபோலவே 'தேவயானை'என்று மட்டும் கூறினுல், அதுவும் தவறு. அதனுல்த்தான் பொதுவாக

தூசாமணியும் துகிலும் புனைவாள்
நேசா முருகா

என்று சொல்லியிருக்கிறார். வள்ளிதேவியிற்கும் தேவயானைக்கும் வித்தியாசம் இல்லை என்பதை எடுத்துக் காட்டவே 'புனைவாள்' என்று ஒருமையில் கூறி மகிழ் கிறார். இது அருணகிரிநாதரின் அபூர்வமான வாக்குப் ப்ரயோகம்.

அழகிற்கு அழகைக்கொடுப்பவன் முருகன். முருகனின் குன்றாத தெய்வீக அழகே வள்ளியினிடத்திலும் தேவயானை யிடத்திலும் திகழ்கின்றது. வள்ளி தேவயானை ஸமேதராய் பூர்ணகலையுடன் தியானம் செய்கின்றார் ஸுப்ரமண்யஸ்வாமியை அருணகிரிநாதர்.

எனவே 'நினதன்பு அருளால்' என்று சொல்லும் பொழுதுஅவ்வருளானது எதைக்குறிக்கின்றதென்றால் இச்சா சக்தியாகிய வள்ளியுடன் சேர்ந்துயிருக்கும் போதுள்ள அருளாலும்-க்ரியாசக்தியாகிய தேவயானையுடன் சேர்ந்திருக்கும் போதுள்ள அருளாலும், அப்படியே தன்னந்தனியாக ஞானசக்திவடிவமாக யிருக்கும் போதுள்ள அருளும், அதுபோலவே இச்சா சக்தி க்ரியாசக்தி இவைகளுடன் சேர்ந்து அகண்டாகார சக்தியாய் விளங்கும்போதுள்ள அருளாலும், நான் என்னுடைய ஆசையாகிய விலங்குகளைப் பொடிபொடியாக்கி தள்ளுகின்றேன் என்கின்றார் அகுணகிரிநாதர்.

அவ்வருளை அடைவதற்கு நாம் புண்ணியம் செய்ய வேண்டும். 'வேல் முருகா வேல்முருகா, என்று வாயால் கதறவேண்டும். ஒரு நாளைக்குக் குறைந்த பக்ஷம் ஆயிரம் தடவையாவது 'வேல் முருகா—வேல் முருகா' என்று உச்சரிக்க வேண்டும்.

ஞானத்தின் திருவுருவாக முருகனை உள்ளத்தில் தியானம் செய்யவேண்டும். எண்ணற்ற கோடி உயிர்களைத் தாபத்திரயத்திலிருந்து கைகொடுத்து தூக்கவத்த தனித்தெய்வம் என்று போற்றி புகழ வேண்டும்"

குமரன் இல்லையேல் 'அணுவும் அசையாது' என்று வெற்றி முரசு கொட்ட வேண்டும்.

வேல் முருகா—வேல் முருகா என்று சொல்லிக்கொண்டே குன்றின் மேல் ஏறிப்பாருங்கள். அங்கே காண்பீர்கள் அருள் கடலாகிய செல்வக்குமரனை. அங்கே காண்பீர்கள் அருளின் பெருக்மை.

ஆனால் நம்முடைய கர்மவினையானது பொய்யாகிய இவ்வுலகவாழ்க்கையையே நாடிநிற்கிறது. எட்டுக்கால்பூச்சியானது தன்னைச் சுற்றி கூடு கட்டிக்கொள்வதுபோல் நாம் ஆசையாகிய சங்கிலியினால் நம்மைகட்டிக்கொள்கிறோம். பிறகு அதிலிருந்து வெளிவரமுடியாமல் தவிக்கிறோம். தவிர மேன் மேலும் ஆசையை வளர்த்துக்கொண்டே போகிறோம்,

அரிதாகிய மானிடப்பிறவியை 'ஆசை ஆசை' யென்று சொல்லிக்கொண்டே வீணாக்குகிறோம். எத்தனை தடவை எண்ணியவைகளை அநுபவித்தாலும் ஆசையானது நம்மை அநுபவித்ததுபோதும் என்று எண்ண விடுவதில்லை. மேன்மேலும் அனுபவித்துக் கொண்டேயிருக்கவேண்டும் என்ற ஆசையே உள்ளத்தில் எழுகின்றதன்றோ. என்னே ஆசையின் கொடுமை.

எனவே ஸ்கந்தானுபூதியை அடைவதற்கு மேலான தடங்கலாக இருக்கிறது ஆசையானது. இதையே பாட்டில்

ஆசா நிகளந் துகளாயின பின்
பேசா அநுபூதி பிறந்ததுவே.

என்கின்றார் அருணகிரிநாதர்.

ஆசையானது முடிவில் பெரும் நோயையுண்டு பண்ணிவிடும் என்பதினால் அன்றோ முன்பு பதினாறு வது பாட்டில் 'பேராசையெனும் பிணி' என்று சொன்னார்.

ஆனால் இப்பொழுது 'ஆசையை ஒரு விலங்கு' ஆக சொல்கிறார். அதாவது ஆசையாகிய சங்கிலி யினால் நாம் கட்டப்பட்டு இருக்கிறோம்.

நாம் ஏன் ஆசையினால் கட்டுப்பட வேண்டும்? ஆசை என்பது என்ன? அதன் ஸ்வரூபம் என்ன? ஆசையே அநுபூதியை மறைக்குமானால் அதன் சக்தி தான் என்ன? ஆசையினுடைய ஆதாரம் என்ன? எதில் ஆசை நமக்கு உண்டாகிறது? ஏன் ஆசையை நாம் தாண்டிப்போகமுடிவதில்லை? ஏன்நம்மை ஆசையானது ஆட்டிவைக்கிறது? எனவே ஆசையானது நம்முடைய மானிடப்பிறவியின் பயனையே போக்கடித்து விட்டா லும், நாம் ஏன் இதன் உட்பொருளை வேதாந்த விசாரத்தினால் உணர்ந்துகொள்ள இச்சிப்பதில்லை?

ஆசைக்கு மூலகாரணம் அஞ்ஞானத்தினுடைய கார்யமாகிய இம்மாயாவுலகமே யாகும். நிலையுள்ள பரம்பொருளை நாம் அநுபவிப்பதற்கு, இந்நிலை யில்லா சரீரத்தை வைத்துக் கொண்டே தான் நாம் முயற்சி செய்யவேண்டும்.

இறைவனிடத்தில் உண்டாகும் ஆசையை ஆசை யென்று சொல்லமுடியாது. அது அன்பாகும். நம்மை அறியாமலே ஒரு வஸ்துவினிடத்தில் நமக்கு உண்டா கும் ப்ரேமையே அன்பாகும். அன்பிற்கும் ஆசையிற் கும் மலையிற்கும் மடுவிற்கும் உள்ள வித்தியாசம்

உண்டு. ஏன்—தர்மத்திற்கும் அதர்மத்திற்கும் உள்ள வித்தியாசம் உணடு என்று சொல்லலாம்.

அன்பினை தர்மம் என்றும் ஆசையை அதர்மம் என்றும் சாஸ்திரங்கள் போதிக்கின்றன.

அன்பானது பந்தத்தை அறுக்கிறது. ஆசையானது பந்தத்தை மேன்மேலும் உண்டுபண்ணுகிறது. எனவே ஆசையை 'கட்டும் சங்கிலியாக' அதாவது விலங்கு ஆக கூறுகின்ருர்.

எனவே இம்மாயா உலகில் நாமருபங்களாகத் தோன்றி மறையும் ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு ஆசையாகும். ஒவ்வொரு ஆசையும் ஒன்றுடன் ஒன்ருக சேர்க்கப்பட்டு ஒரு மாபெரும் சங்கிலியாக மாறி விலங்குபோல் இருந்து வருகிறது.

இம் மாயா வுலகில் உள்ள பிராணிகளுடைய மனதை முதன் முதலில் ஆசையாகிற சங்கிலி கட்டுகிறது. இந்நிலையில் பிராணிகளோ வெனில் விளக்கில் விழும் வெட்டுப் பூச்சிகள் போல் ஆகிவிடுகிருர்கள். இதனுல் ஸ்வாதந்திரியத்தை இழந்து விடுகிருர்கள். ஆசைக்கு அடிமையாகி விடுகிருர்கள்.

மனதானது ஆசையிற்கு அடிமையாகும் பொழுது பந்தத்தையும், அப்படியே ஆசையிற்கு அடிமையாகாமல் ஆசையற்றதாக இருக்கும் பொழுது முக்தியையும் அளிக்கிறது.

ஆதலால் மனதானது ஆசையிற்கு அடிமையாகி விட்டால், அம்மனதில் ஆசையானது மேன்மேலும் அதிகரித்துக் கொண்டே யிருப்பதுமல்லாமல், அவ்வாசையை அனுபவிக்க மனதானது ஞானேந்திரியங்களையும் கர்மேந்திரியங்களையும் இம்மாயா உலகில்

ஸஞ்சாரம் செய்யும்படி செய்கின்றது. முடிவில் மன தானது ஆசை ஸ்வரூபமாகவே ஆகிவிடுகிறது.

மேலும் சாஸ்திரங்கள் ஆசையை ‘மண்ணுசை—பொன்ணுசை-பெண்ணுசை’ என்று மூன்றுவிதங்களாக பிரித்திருக்கின்றன. இவ்வுலகில் நாம் சாகாமல் நோயற்ற வாழ்வோடும், த்ருடகாத்திரமான தேகவலி மையுடன் சுகமாக வாழவேண்டுமென்று தோன்றுகிற எண்ணமே மண்ணுசை ஆகும்.

மண்ணுசை பிடித்தவன் ‘இம்மண்ணுேடு மண்ணுக நாம் ஆகிவிடுவோமே’ என்று எண்ணுகிருன் இல்லை. மண்ணிலேயே சாச்வதமாக வாழலாம் என்று எண்ணு கிருன்.ஆசையை அதிகரித்துக்கொண்டேயிருக்கிருன்.

இதன் காரணமாக பற்பல விதமான ஆடையா பரணங்களினுல் தன்னை அலங்கரித்துக் கொண்டு ஆனந்திக்கிருன். அப்படியே வாஸனுத் திரவ்யங்கள் முதலியவைகளைக் கொண்டு சரீரத்திற்கு பரிமளமான வாஸனையை உண்டுபண்ணுகிருன். இவ்வித வாழ்க்கை யில் சுகத்தினைக் காண்கிருன்; இதுவே பொன்ணுசை ஆகும். இதற்கு எல்லையே இல்லை.

பின்பு மண்ணுசையினுலும் பொன்ணுசையினுலும் மனிதர்கள் திருப்தியடைகிருர்கள் என்பதில்லை. முடி வில் பெண்ணுசையை நாடுகின்றது அவர்களுடைய மனமானது. பெண்ணுசையினுல் சிற்றின்பத்தினை அனுபவிக்கிருன். அதையே பேரின்பமாகக் கருதவும் கருதுகிருன். பெண்ணுசையில் விழுந்தவனே மண்ணு சையையும் பொன்ணுசையையும் ஸ்திரப்படுத்திக்கொள் கிருன். ஏனெனில் பெண்ணுசையை நிரந்தரமாகசெய்து கொள்வதற்கு அன்ருே.

ஆதலால் ஒருவன் பெண்ணுசையை விடுவானே யாகில் அவன் எல்லா ஆசைகளையும் விட்டவனுக ஆகிருன். ஆசையை விடுவது சுலபமான காரியமல்ல.

ஆசையே எல்லாவற்றிற்கும் மூலகாரணம். இதனுல்தான் ஆசை அடியோடு அழிந்த பின்பு அநுபூதி உண்டாகிறது என்கிருர்.

ஆசைக் கோரளவில்லை; அகிலமெல்லாங்
கட்டியாளினும்

என்று தாயுமானசுவாமிகள் சொல்கிருர். அகிலமெல்லாம் தன்னுடையது என்ற நிலையை ஒருவன் அடைந்தாலும்கூட அவனுடைய ஆசையிற்கு அளவில்லை. இதனுல் என்ன தெரிகிறது? அளவுகோலினுல் அளக்க முடியாதது ஆசையென்பது ஒன்றேயாகும்.

எனவே 'தர்மம்-அர்த்தம்-காமம்-மோக்ஷம்' என்று சொல்லப்படும் நான்கு புருஷார்த்தங்களையும் ஜீவகோடிகள் அடையவேண்டும் என்பதற்காகத்தான் ஜீவகோடிகளுக்கு புத்தி இந்திரியம், மனது ப்ராணன் என்ற நான்குவிதமான ஸாதனங்களை இறைவன் மேலான கருணையினுல் கொடுத்திருக்கிருர் அன்ருே!

அர்த்தசுகத்தை அடைய இந்திரியங்களும், தர்மத்தை அடைய புத்தியையும், காமத்தை அனுபவிப்பதற்கு மனதையும், மோக்ஷத்தை அடைவதற்கு ப்ராணனும் முக்கியமான ஸாதனமாக விளங்குகிறது.

இந்திரியங்களினுல் அறியப்படுகின்ற விஷயங்களே அர்த்தமானதினுல், அவ் 'அர்த்தம்' என்ற புருஷார்த்தத்தை அடைய இந்திரியங்களே மூலகாரணமாக யிருந்து வருகிறது.

அதுபோலவே ஸத்கர்மாக்களை பக்தியுடன் அநுஷ்டிப்பதினுலேயே ‘ தர்மம் ’ என்ற புருஷார்த்த மானது அடையப்படுகிறது என்பதினுல், அந்த ஸத் கர்மாக்களை செய்வதில் ச்ரவணம்-கீர்த்தனம்-த்யானம் பாதஸேவனம்-மந்திர புரச்சரணம்-பாராயணம் முதலி யவைகளைச் செய்வதற்கு புத்தியே அந்தரங்க ஸாதன மாக விளங்கி வருகிறது.

அப்படியே பல்வேருன லோகங்களில் சென்று அமானுஷ்யமான போக சுகங்களை இடைவிடாமல் அனுபவிப்பதே ‘ காமம் ’ என்றும் ‘இன்பம்’ என்றும் சொல்லப்படும் புருஷார்த்தமாகும். காமம் என்ற புருஷார்த்தமானது பலவிதமான லோகங்களில் அநுப விப்பதினுலும், ஒரு லோகத்தை விட்டு மற்ஞெரு லோகத்திற்கு செல்ல லிங்கசரீரம் என்று சொல்லப் படும் மனதத்துவமே சக்தி வாய்ந்தது என்று சாஸ் திரங்கள் போதிப்பதினுலும், காமம் என்ற புருஷார்த் தத்தை அடைய மனதே அந்தரங்க ஸாதனமாகும்.

அதுபோலவே இறைவனை அடைவதற்கு ப்ராண ஙிக்கிரஹம் அந்தரங்க ஸாதனம் என்று சாஸ்திரங்கள் போதிக்கின்றபடியால், ப்ராணனே மோக்ஷம் என்ற மேலான புருஷார்த்தத்தை அடைய பரம ஸாதன மாகயிருக்கின்றது.

இவ்விதம் கருணைக்கடலான முருகப்பெருமான் நாம் க்ரமமாக ஒன்றின்பின் ஒன்ருக நாள்டைவில் நான்கு விதமான புருஷார்த்தங்களை அடையவேண்டு மென்று கருணையினுல் ‘இந்திரியம்-புத்தி-மனது-பிரா ணன்’ என்பதை தந்திருக்கிருரென்பதைச் சொல்லவும் வேண்டுமா.

எனவே இறைவனைப் புகழ்ந்து போற்றி மகிழ்வதற்கே புத்தியானது இருக்கிறது. புத்தியினால் அறிந்ததை அப்படியே ஒருவிதமான குறைவுமில்லாமல் அனுஷ்டிப்பதற்கே இந்திரியங்கள் இருக்கின்றன.

ஸத்கர்மாவினால் சித்த சுத்தியை அடைகிறான். சித்த சுத்தியினால் ப்ராணநிக்ரஹம் செய்கிறான். ப்ராணநிக்ரஹம் செய்து ஞானேந்திரியங்களை மனதில் லயிக்க வைத்து விட்டால் பின்பு மோக்ஷநிலையை அடைவது மிகவும் சுலபம்.

ஆனால் மனிதர்களோவெனில் ஆசையிற்கு அடிமையாகி விடுகிறார்கள். அவர்களுடைய புத்தியும்-மனதும் இந்திரியமும்-ப்ராணனும்—ஆசையாகிய சங்கிலியினால் கட்டப்பட்டு விடுகின்றன.

எனவே பொருளில் ஆசை, மண்ணில் ஆசை, பொன்னில் ஆசை, பெண்ணில் ஆசை என்று என்ன செய்தாலும் தணிக்க முடியாத ஆசையில் மனிதன் கட்டுண்டு கிடக்கிறான் அன்றோ.

இந்திரியங்கள் ஆசையை நாடுகின்றன. மனது காமசுகத்தை அனுபவிக்கவேண்டுமென்றே ஆசையால் வாடுகின்றது. புத்தியானது விவேகத்தை இழந்து ஆசையையே நாடிநிற்கின்றது. அதன் விளைவாக ப்ராணனோவெனில் மண்ணாசை—பொன்னாசை—பெண்ணாசை இவைகளிடத்திலேயே ஸஞ்சாரம் செய்து கொண்டிருக்கிறது.

இதனால் விளைவது யாதெனில், கேட்பதில் ஆசை—பேசுவதில் ஆசை, நினைப்பதில் ஆசை—உண்பதில் ஆசை—அனுபவிப்பதில் ஆசை—அடைவதில் ஆசை—மண்ணில் ஆசை—பொன்னில் ஆசை—பெண்ணில்

ஆசை-மீண்டும் மீண்டும் அனுபவிப்பதில் ஆசை-புணர்வதில் ஆசை-என்று எது எடுத்தாலும் ஆசை ஆசை என்று சொல்லிக்கொண்டே இருக்கிறோம் நாம்.

சாஸ்திரமானது ஆசையையே பந்தத்திற்குக் காரணமென்றும், அப்படியே காமத்திற்கும் காரணம் என்றும் போதிக்கின்றது. ஆசையிற்கு வசமாகக் கூடாது. மனதானது ஆசையற்றதாய் நிர்மலமான ஆகாசம்போலிருக்க வேண்டும்.

இந்த பரம ரகஸ்யமான தத்துவத்தையேபதஞ்சலி மஹர்ஷியானவர் தமது யோகஸூத்திரத்தில்

தஸ்யாபி நிரோதேஸர்வ
நிரோதாத் நிர்பீஜ: ஸமாதி:

என்ற ஸூத்ரத்தால், மனதை ஆசையிற்கு அடிமையாகாமல் நிக்ரஹம் செய்து விட்டால், அவனுடைய மனதானது நிர்மலமனதாக மாறி விஷயாதிகளில் ஸஞ்சரிக்காமல் ஆசையற்றதாக மாறிவிடுகின்றது என்று போதிக்கின்றார்.

இதனால், மனதில்உண்டாகும்ஆசையை இல்லாமல் செய்து கொள்வதே அநுபூதி என்று சொல்லப்படும்.

அநுபூதியை அடைவதற்குத் தடங்கலாகவுள்ள ஆசையென்கிற சங்கிலியை முருகப்பெருமானின் அன்பாகிய அருள் ஒன்றே அறுத்துத் தூள் தூளாகச் செய்கின்றபடியால். நாம் எல்லோரும் முருகனின் அருளைப் பெற யத்னம் செய்யவேண்டும்.

இறைவனுடைய அன்பானது ஜீவகோடிகளிடத்தில் எப்பொழுதும் இருந்து கொண்டுதான் இருக்கிறது. ஆனால் ஜீவகோடிகள் அதை அறிவதில்லை. ஏனெனில் அவர்கள் இறைவனுடைய அருளைப்

பெறவில்லை. இறைவனை அன்பின் வடிவம் என்று உணர்கின்றவன்தான் இறைவனின் அருளைப் பெறுகிறுன் அன்றோ.

எனவே உண்மையான நிலையில் 'அன்றும்–இன்றும்–என்றும்' நாம் இறைவனுடைய அன்பில்தான் நிலைபெற்று இருந்துவருகிறோம். அப்படியிருந்தும் கூட 'நாம் இறைவனுகிய அன்பில் உறைந்திருக்கிறோம்' என்பதை உணர்வதில்லை.

காரணமோவெனில் நாம் காணும்பொருளில் இறைவனைக் காண்பதில்லை. பொருளின் அழகையே காண்கிறோம். அவ்வழகிலேயே மோகத்தை அடைகிறோம். அம்மோகமே ஆசையாகப் பரிணமிக்கிறது. ஆசையானது இறைவனை மறைக்கிறது. இறைவனே அன்பின் வடிவமாக இருப்பதால் ஆசையானது அன்பினையே உண்மையில் மறைக்கிறது. அன்பில் ஆனந்தம் திகழ்கின்றது.

இறைவனது அன்பானது உயிர்களிடத்தில்பெருக்கெடுப்பதே அருளாகும். அம்மாறிலாத இறைவனின் அருளை நாம் பெறவேண்டும். அவ்வருளை இறைவனுடைய அருளைக்கொண்டே நாம் பெறவேண்டும்.

அவ்வருளினைக் கொண்டே நாம் ஆசையாகிய சங்கிலியைப் பொடி பொடியாக உடைத்துத்தள்ள வேண்டும். ஆசையானது நம்மைவிட்டு அகலும்பொழுது அஞ்ஞானத்தின் கார்யமாகிய உலகும், உலக வாழ்க்கையும் கானல் நீரினைப்போல் வெறும் பொய் என்று நம்முடைய புத்தியில் ஸ்புரிக்கிறது.

இந்நிலையில் நாம் இறைவனை அன்பின் வடிவமாக காண்கிறோம். அன்பே ப்ரேமையாகும். அந்தப் ப்ரேமையும் ஆத்ம ப்ரேமையே ஆகும், ஆத்ம ப்ரே

மையை நாம் ஒருகாரணத்தையும் அபேக்ஷிக்காமல் ஆத்மாவினிடத்தில் வைக்கிறோம். இதற்கு காரணம் ஆத்மாவானது அன்பின் வடிவமாக இருப்பதால் அன்றோ, “இறைவனுடைய அருள்” என்பதின் பொருளோவெனில் ‘அன்பு வடிவான இறைவனே, நாம்அன்பு வடிவான ஆத்மாவாகவே அனுபவிப்பதாகும்.

இவ்விதம் இறைவனுடைய அருளானது ஆசையை ஒழிக்கிறது. ஆசை அழிந்தவுடன் அநுபூதி பிறக்கிறது. என்னே இதன் பெருமை.

ஆசையானது உற்பத்தி விநாசத்தோடு கூடியது. ஒருவஸ்துவில் ஒரு ஸமயத்தில் தோன்றும் ஆசையானது மற்றொரு ஸமயத்தில் தோன்றுவதில்லை. எனவே ஆசையானது ஸ்வப்பிரகாசத்துடன் விளங்குவதில்லை. ஆசை என்பது மாயா கல்பிதம்.

ஆனால் அன்பும் அருளும் சேர்ந்ததே ‘ஸத்-சித்-ஆனந்தமாகும்.’ அன்பானது ஸ்வயமாகவே ஸத்தாயும் சித்தாயும் ஆனந்தமாயும் ஸ்வயம் பிரகாசமாயும் விளங்கி வருகின்றபடியால் அன்பும் அருளும் பிரகாசிக்கும் விஷயத்தில் ஞானேந்திரியங்களையோ கர்மேந்திரியங்களையோ அபேக்ஷிப்பதில்லை.

ஆனால் ஆசையோவெனில் மனதத்வத்தையே நாடி நிற்கின்றது. மனதிலேயே உருவத்தை அடைகின்றது. அதன் விளைவாக இந்திரியங்களில் பாஸிக்கின்றது. ஆதலால் ஆசையானது மனதத்வத்தையோ இந்திரியங்களையோ அபேக்ஷித்துத்தான் பிரகாசிக்கின்றது. எனவே ஆசையிற்கு ஸ்வயமாக இருப்பிடமில்லை. அதன் ஸ்வரூபம் மனதிலேயேதான் உணர்ச்சி ரூபமாக காணப்படுகின்றன.

எனவே அன்புவடிவமான ஆத்மாவினிடம் ஸகல ஜகத்தும் வெறும் கல்பிதமானதினாலும், அவ்விதம் கல்பிதமாகிய ஜகத்திற்கு மூலாதாரம் அன்பு வடிவமான ஆத்மாவாக இருப்பதாலும்; கல்பிதமான ஜகத்திற்கு நாமரூபமாகத்தோன்றும் வஸ்துக்களில் அஞ்ஞானத்தினால் ‘ஸத்தை ஆரோபணம் ‘செய்து, அதன் காரணமாக மாயா உலகில் ஆசையானது உண்டாகிறது.

இவ்வுலகை ‘ஸத்யம்’ என்று அநுபவிக்கும் வரையில் ஆசையானது நம்மை விடாது. ஏனெனில் ஆசையிற்கு இருப்பிடம் கல்பிதமாகிய உலகேயாகும். உலகம்தோன்றுவதற்கு மூலகாரணம் அஞ்ஞானமேயாகும். இதனால்தான் கீதையில்

ஞானமாகிய அக்னியினால் அஞ்ஞானத்தை
எரித்துவிடுகிறேன்

என்று கிருஷ்ணபரமாத்மா கூறியதுபோல் ஞானவடிமாக விளங்கும்

அன்பாகிய அருளால்

நம்முடைய அஞ்ஞானத்தை முருகப்பெருமான் போக்கடிக்கின்றார். உடனே அஞ்ஞானமாகிய ‘மாயா’ உலகம் மறைகிறது. எனவே ஆசையிற்கு இடமில்லை. ஆதலால் ஆசையாகிய சங்கிலியானதுஅறுபட்டு தூள் தூளாய்ப் பொடி ஆகிவிடுகிறது.

இந்நிலையில் ஜீவப்ரும்ம ஐக்ய ஸாக்ஷாத்காரம் உண்டாகிறது. ஜீவன் வேறு-ஈச்வரன் வேறு என்ற பேதம்போய் அன்புவடிவான ஈச்வரனும் அன்புவடிவான ஜீவனும் உண்மையில் ஒரே அகண்டாகார அத்வைத ஆனந்தமயமான வஸ்துவேயாகும் என்ற ப்ரும்

மானந்த நிலையில் கொண்டுபோய் விடுவதுமல்லாமல் மறுபடியும் அந்நிலையில் இருந்து திரும்பி வராமல் இருக்கும்படி செய்கிறது முருகப்பெருமானின் அருளானது.

ஒரே ஸமுத்திரத்தை எப்படி பற்பல பெயர்கள் சொல்லிச் சுட்டிக்காட்டுகிறோமோ அதுபோலவே இருக்கின்ற ஒரே பரம்பொருளை ஜீவனாகவும் ஈச்வரனாகவும் அவர் அவர்களுடைய அனுபவ நிலையை அனுஸரித்து சொல்லுகின்றார்கள்.

முருகப்பெருமானுடைய அருளானது நம்மை முருகப்பெருமானாகவே செய்கிறது. அதாவது

அஹம்ப்ரும்மாஸ்மி

அதாவது

நான் ப்ரும்மமாக இருக்கிறேன்

என்ற அநுபூதி நிலையை அளிக்கிறது. இந்நிலையில் காண்பவனும் இல்லை—காணப்படும் பொருளும் இல்லை—பேசுகிறவன் இல்லை—பேசப்படும் பொருள் இல்லை—அது இது—என்று சொல்வதற்கில்லை—நான்—நீ என்னுடையது உன்னுடையது—என்ற பேதஞானம் இல்லை. பின்பு என்ன இருக்கிறது? இருக்கின்றது மெய்ப்பொருள் ஒன்றுதான்.

அம்மெய்ப்பொருளோவெனில் அன்பு மயமாயும் அருள் மயமாயும் திகழ்கின்றது. இதன்பெருமையைத் திருவாசகம்

ஈறிலாப் பதங்கள் யாவையும்
கடந்த இன்பமே

என்று புகழ்கின்றது; அப்படியே

அங்கு இங்கு எனுதபடி எங்கும்
பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்தது

என்று மஹாஞானியாயும் யோகியாயு முள்ள தாயு மான சுவாமிகள் ஸ்வானுபூதியின் பெருமையைக் கருணையினுல் ப்ரகடனம் செய்கிருர்கள் அன்ருே.

மேலும் அநுபூதியானது இருவகைப்படும்

ஒன்று பேசும் அநுபூதி-மற்ருென்று
பேசா அநுபூதி.

ஸகுண ப்ரம்ம உபாஸனையினுல் உண்டாகும் இன்பநிலையே பேசும் அநுபூதியாகும். இவ்வாறு நிலையை அடைய பக்தி மார்க்கமே முக்கிய ஸாதனமும் மார்க்கமும் ஆகும். முருகப்பெருமானுடைய திருவிளை யாடல்களைப்பற்றிப் பேசிக் கொண்டும், சொல்லிக் கொண்டும், கேட்டுக் கொண்டும் இடைவிடாமல் காலத்தை நயனம் செய்து கொண்டிருப்பதே பேசும் அநுபூதியாகும்.

பேசா அநுபூதி என்பதோ நிர்குண உபாஸனையே ஆகும். 'ஸத்து சித்து ஆனந்தம்' இவ்வாறு இருப் பதே பேசா அநுபூதி. இதைத்தான் முருகப்பெருமான்

சும்மா இரு சொல் அற

என்று அருணகிரிநாதருக்கு உபதேசித் தருளினுர். இறைவனின் அருள் நம்மேல் விழுகின்றது என்ருல் நாம் பேசா அநுபூதியை அடையும் நிலையில் இருக்கின் ருேம், என்று அர்த்தம்.

இதன் உண்மையைத்தான் அருணகிரிநாதர் இப் பாட்டில்

பேசா அநுபூதி பிறந்ததுவே

என்று வியப்புடன் புகழ்கின்றார்.

ஹே முருகா! உன்னுடைய அன்பாகிய அருளானது, ஆசைகளாகிய விலங்குகளைத் தூள் தூளாக பொடிசெய்து என்னைப் பந்தமற்றவனாகச் செய்தது. அதன் காரணமாக நான் இம்மாயா உலகைப் பார்க்காமல், இவ்வுலகத்தையும் உன்னுடைய ஸ்வரூபமாகவே பார்க்கிறேன். எனவே 'நான்-என்னுடையது' என்ற பேதமற்று, உன்னை எல்லாமாயும் எப்பொருளாயும் காண்கின்றேன். அதுமட்டுமல்ல,

**நீயாகவே நான் ஆகிறேன்**
**நான் ஆகவே நீ ஆகிறாய்**

என்ற ஸ்வானுபவ நிலையான **பேசா அநுபூதி நிலையில்** இருக்கிறேன். ஹே குமரா! உன்னுடைய அருளானது என்ன என்னவெல்லாம் செய்து விடுகிறது. அதன் பெருமையை என்னால் எடுத்துச் சொல்லத்தான் முடியுமோ. என்னே உன் அருள்! என்னே உன் அருள்!



# வேதமுடியில் கமழும் சீர்பாத மஹிமையை எண்ணி எண்ணி மகிழ்தல்

## 44



சாடும் தனிவேல் முருகன் சரணம்
சூடும் படி தந்தது சொல்லுமதோ
வீடும் சுரர் மாமுடிவேதமும் வெங்
காடும் புனமும் கமழுங் கழலே.

**பதவுரை**

வீடும்-ஸாயுஜ்ய நிலையாகிய மோக்ஷம் என்ற வீட்டிலும், மாசுரர்-தேவர்களுக்கெல்லாம் மேலான தேவர்களாகிய அரி அரன் அயன் ஆகியவர்களுடைய (சிரஸிலும்), முடிவேதமும்- வேதங்களுடைய சிகரமாகிய உபநிஷத்துகளிலும், வெங்காடும்-கொடிய வெப்பத்துடன் கூடிய காட்டிலும், புனையும்-வயல்களிலும், கமழும் கழலே-(ஸஞ்சாரம் செய்து கொண்டிருக்கிற அந்த) திவ்ய மணத்தினையுடைய திருவடி

களைக் காட்டி, சாடும்-பொல்லாதவரை பொடிப் பொடியாக்கிஅழிக்கின்ற, தனிவேல்-ஒப்பற்ற தனிப்பெருமையினைக் கொண்ட வேலினைத் தாங்கி வருகிற, முருகன்-முருகப் பெருமான், சரணம்-(அடியேனிடம்) என்னுடைய பாதங்களே சரணாலயம் என்று சொல்லி, சூடும்படி தந்தது-(அதனை)நான் என்னுடைய சிரஸில் ஆபரணமாக சூட்டிக் கொள்ளும்படி தந்த பெருமையினை, சொல்லுமதோ-வாக்கினால் சொல்லி வெளிப்படுத்தும் அளவில் உள்ளதாக ஆகுமோ.

**தாத்பர்யம்:**

முருகப்பெருமானின் வேலின் மகிமையை வேல் வகுப்பு, வேல் வ்ருத்தம் இன்னும் திருப்புகழ் இவைகளில் பல்வேறு வகையில் வர்ணித்திருக்கிறார் அருணகிரிநாதர். எனினும் கந்தர் அநுபூதியில் அவர் வேலின் பெருமையைச் சொல்வதே ஒரு தனிப்பட்ட பெருமை வாழ்ந்ததாக இருக்கிறது. இந்தப் பாட்டில்,

சாடும் தனி வேல்

என்று சொல்கின்றார்.

உலகில் தர்மமானது தாழ்ந்து அதர்மமானது ஓங்கி நிற்குமேயாகில், அப்பொழுது அதர்மத்தை வேரோடு அழித்து தர்மத்தை ஓங்கி நிற்கும்படி செய்வதே வேலின் வேலையாகும். எனவே வேலானது,

துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலனம்

என்பதினை யிடைவிடாமல் செய்துவருகிறது.

சூரபத்மாஸுரன் முதலான அதிபராக்ரமசாலிகளான அஸுரர்களின் மமதையை அடக்கி அவர்களை மீண்டும் பாபச் செயல்களைச் செய்யாதவண்ணம் செய்ததுமல்லாமல் அவ்வஸுரர்களை முருகனுடைய அடியார்களாகவும் செய்த வேல் அன்றோ முருகனின் வேல்.

அடியார்களுக்குக் கொடிய விலங்குகளாலோ, பக்ஷிகளாலோ, கொடிய விஷத்தினைக்கொண்ட ஸர்ப்பங்களாலோ எண்ணற்ற விஷ ஜந்துக்களாலோ, அப்படியே ப்ராரப்த கர்மாவினாலோ ஏதாவது தீவினை வருமேயாகில், முருகப்பெருமானுடைய வேலானது அவைகளின்மேல் பாய்ந்து அவைகளை அடியோடு அழித்துவிடும்.

மேலும் குமரனுடைய வேலானது 'அடியார்களை நோக்கி வந்துகொண்டிருக்கும் துன்பங்களை சாடி அழிப்பதற்கு இடைவிடாமல் காத்துக்கொண்டேயிருக்கிறது. அடியார்கள் தங்களுடைய மனதில் வேலினை நினைந்து மனம் உருகி நினைப்பார்களேயாகில், அக்கணமே வேலானது இரவும் பகலும் பக்கத்திலிருந்து துணை புரிகின்றது. ஆக வேலானது நல்லவர்களுடைய உள்ளத்தில் நடனம் புரிகின்றது. பொல்லாதவரை பொடிப்பொடியாக்கித் தள்ளுகிறது.

இத்தகைய வேலினைத் 'தனிவேல்' என்று அழைக்கின்றார். 'தனிவேல்' என்றால் தனக்கு நிகர் எதுவுமே யில்லை என்று பொருள்.

இவ் ஒப்பற்ற வேலை பூஜை செய்பவர்கள் 'பயம் அற்றவர்களாகவும்—நோயற்ற வாழ்வோடும்—பொறுமை-தைர்யம் - வீரம்-தேஜஸ்—புகழ் - செல்வம்—சுகம்—இவைகளுடன் விளங்குவார்கள். வாராத செல்வம் அதனை வருவித்து அடியார்களுக்கு மேலான ஆற்றலை அளிக்கின்றது முருகப்பெருமானின் மஹா மஹிமை தாங்கிய 'தனிவேலா'னது.

அதுமட்டுமல்ல—தனிப் பெருமையினைக் கொண்ட முருகப்பெருமானின் வேலோ வெனில்,

எம் பயத்தைப் போக்கடிக்கிறது. மேலான ஆற்றலை உள்ளத்தில் உண்டுபண்ணுகிறது. ஆகாயம் போல் எங்கும் ஒரே ஞான சோதியாய் திகழ்கின்றது. உள்ளத்தில் புத்துணர்ச்சியை எழும்படிச் செய்கின்றது. உலகில் ஆயுதம் என்று சொல்லப்படும் ஆயுதங்களுக்கெல்லாம் உயிரினை அளிக்கின்றது.

இவ்விதம் முருகனின் வேல் மாபெரும் பெருமையுடன் விளங்கிவருவதால்த்தான் மற்ற தெய்வங்களுடைய ஆயுதங்கள் ஆயுதம் என்ற பெயருடன் விளங்குகிறது.

குமரனின் வேலினை நம்பியே தேவர்கள் நிலையற்ற ஸ்வர்க்கலோகத்தை நிலையுள்ளதாக வைத்திருக்கிறார்கள். வேலினைக் கண்டு நடுநடுங்கியே சூர்யனுனவன் உதிக்கிறான். பஞ்சபூதங்கள் ஒருவிதமான பிழையுமின்றித் தங்களுடைய கார்யங்களைச் செய்துவருகின்றன. எமதர்ம ராஜாவானவர் பக்ஷபாதமின்றி தன் கடமையைக் காலதாமதமின்றி செய்து வருகிறார்.

எண்ணற்ற கோடி உயிர்களில் உரம்பெற்று உரைகின்ற சக்தியே குமரனின் திருக்கரத்திலுள்ள 'வேல்' ஆகும். இந்தவேலை 'சாடும் தனிவேல்' என்றார்.

இத்தகைய பெருமையுள்ள வேலைத் தாங்கிவரும் முருகப்பெருமானின் சீர்பாத மஹிமையை வர்ணிக்கின்றார்.

விடும் சுரர்மா முடிவேதமும் வெங்
காடும் புனமும் கமழுங் கழலே

என்று அருணகிரிநாதர்.

ஹே முருகா! உன் பாத மஹிமையை என்னால் சொல்ல முடியுமா ஐயனே. எனினும் என்னுடைய

அளவிலா ஆசையானது உன் சீர்பாத மஹிமையை வர்ணிக்கும் ஆற்றலினை அளிக்கின்றது.

ஹே குமரா, உன்னுடைய பாதமானது 'மோக்ஷம்' என்று சொல்லப்படும் ஸாயுஜ்யமாகிய வீட்டில் ஒரு ஸமயம் வைக்கப்பட்டதாக யிருக்கிறது.

மற்றொரு ஸமயம் 'ச்ருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹாரம்' அதாவது படைத்தல்-காத்தல்-அழித்தல் என்ற மூன்று கார்யங்களைச் செய்துவரும் ப்ரும்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளுடைய சிரஸில்வைத்திருக்கிறாய்.

அதுபோலவே சப்தரூபங்களாயும், அநாதியாயும், அபௌருஷமாயுமுள்ள 'ருக் – யஜுர் – ஸாமம்-அதர்வணம்' என்னும் நான்கு வேதங்களுடைய சிகரமாய் விளங்கும் உபநிஷத்துக்களின்மேல், நீயோவெனில் உன்னுடைய திருப்பாதங்களினால் அலங்கரிக்கின்றாய்.

அதிலும் உபநிஷத்துக்களில் எத்தனையோ மகா வாக்யங்கள் இருந்தாலும் அதில் முக்யமாக நான்கு வாக்யங்களே மஹா வாக்யங்கள் என்று சொல்லப் படும். இந்த நான்கு வாக்கியங்கள்தான் வேதங்களின் உயிர் நாடியாகும். அம் மஹா வாக்கியங்களோ வெனில்,

ப்ரக்ஞானம் ப்ரஹ்ம-அயமாத்மா ப்ரஹ்ம
தத்துவமஸி-அஹம் ப்ரஹ்மாஸ்மி

என்பதேயாகும்.

எனவே 'சித்' ஸ்வரூபமே ப்ரம்மத்தினுடைய ஸ்வருபலக்ஷணம் என்று போதிக்கின்ற 'ப்ரக்ஞானம் ப்ரஹ்ம' என்ற மஹா வாக்யத்தினை உனது திருவடியே அலங்கரிக்கின்றது.

அதுபோலவே 'அயமாத்மா ப்ரஹ்ம' என்ற மஹா வாக்யத்திலுள்ள 'ஆத்மா' என்ற வஸ்துவானது

எப்படி மூன்று காலங்களிலும் ஸத்தாகவே இருந்து கொண்டு 'பிரத்யக்ஷமாக ஸ்புரித்துக்கொண்டு ப்ரத்யக்ஷ ப்ராமாண்யமாகவே யிருந்துவருகிறதோ, அது போலவே அந்த ஆத்மாவைக் காட்டிலும் ப்ரம்ம மானது வேறல்ல என்பதை சப்த ஞானத்தினுலேயே போதிக்கின்ற 'அயமாத்மா ப்ரஹ்ம' என்ற மஹா வாக்யத்திலும் உனது திருவடிகளையே ஞானிகள் கண்டு மகிழ்கின்றார்கள்.

மேலும் 'ஜீவன் ப்ரம்மம்தான்' என்பதை 'நீ ப்ரம்ம மாக இருக்கிருய்' என்று போதிக்கின்ற 'தத்வமஸி' என்ற உபதேச வாக்யத்திலும் உன்னுடைய திருவடி களையே காண்கின்றார்கள் யோகிகளும் ஞானிகளும்.

அப்படியே மேல்கூறிய 'ப்ரக்ஞானம் ப்ரம்ம—அயமாத்மா ப்ரஹ்ம—தத்வமஸி' என்ற மஹாவாக்யங் களில் உன் பொற்பாதங்களைக் கண்ட ஞானிகள், பேரின்பமாகிய மனத்தினுல் நிரம்பிய உன் பொற் பாதங்களையே 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற பல வாக்யமாகிய ஸ்வானுபவ நிலையிலும் காண்கின்றார் கள். இந்த நான்கு வாக்கியங்களினுலும் போதிக்கின்ற பொருளே உனது திருவடியாகுமென்பதினுல் அல்லவா உன்னுடைய திருவடியையே ஞானிகள் ஸதா தியானம் செய்கிருர்கள். ஸதா பூஜை செய்துகொண்டே போற்றி மகிழ்கின்றார்கள்.

ஹே முருகா! அரிதாகிய வேதங்களிலும் மோக்ஷ மாகிய வீட்டிலும் மட்டும்தான் நீ உன்டைய பொற் பாதங்களினுல் அலங்கரிக்கின்ருய் என்பதில்லை.

கொடிய வெப்பம் பொருந்திய காட்டிலும் பசுமை யான வயல்களிலும் எண்ணற்ற திருவிளையாடல்களைச்

செய்து அவ்விடங்களையெல்லாம் புண்ணிய பூமி யாகச் செய்திருக்கிறாயே? என்னே உன் கருணை.

ஞானிகளும் யோகிகளும் உன்னுடைய திவ்ய மான மணத்தினையுடைய பொன்னடிகளைக் கண்டு அதனைத் தங்களுடைய சிரஸில் அலங்காரமாக வைத் துக்கொள்வதற்கு வேதாந்தமாகிய அரண்யத்தில் சென்று அதன் மத்தியில் வானளாவி நிற்கும் உப நிஷத்தாகிய மலையில் ஏறி அதன்மேல் வர்ணிக்க இய லாத மஹிமையுடன் விளங்கும் உனது கமழும் திரு வடிகளைக் காண முயற்சிக்கின்றார்கள். அததகைய மஹிமையுள்ள உனது பொற்பாதங்களைக் கல்லும் முள்ளும் வெப்பமும் பொருந்திய காடுகளில் அடிமேல் அடிவைத்து ஓடி அலைந்தாயே? அனைத்தும் பராசக்தி யாகிய வள்ளிதேவியை அடைவதற்காக அல்லவா? அதுபோலவே தினைப்புனத்திலும் திருவிளையாடல் செய்திருக்கிறாயே.

இயற்கையிலேயே திவ்யமான மணம்பொருந்திய உன்னுடைய திருவடிகளின் வைப்பானது எல்லா இடங்களையும் பரிமளமான கந்தங்களுடன் திகழும் படிச் செய்கின்றது.

எனவே முருகனுடைய திருவடிகளிலே முக்தி யாகிய தேவி தலை வணங்குகின்றாள்.

முப்பத்து முக்கோடி தேவர்கள் உள்பட தேவாதி தேவர்களும், அப்படியே சூரபத்மன் முதலான அஸுரர் களும் தலைவணங்குகின்றார்கள். வேதங்கள் தலை வணங்குகின்றன. அறிவதற்கு மிகவும் கடினமாயும், ப்ரகதாரண்யம் என்று சொல்லப்படும் பெரிய காடா கிய உபநிஷத்துக்களும் தலை வணங்குகின்றன அன்றோ.

மேலும் தேவர்களை மட்டும் சொல்லியது உப லக்ஷணமேயாகும். தேவாஸுரர்களினுல் வணங்கப் படுகின்ற பாதமே முருகனுடைய பொற் பாதங்கள்.

தவிர 'கழலே' என்பதிலுள்ள 'ஏ'காரமானது முருகனின் கருணையின் பெருக்கை எடுத்துக் காட்டு கிறது. பொருளோ வெனில் முருகப் பெருமானுனவர் தன்னுடைய திருவடிகளின் பெருமையையும் மஹிமை யையும் எடுத்துச் சொல்லி ஸகல வைபவங்களும் தன்னுடைய திருவடிகளிலேயே குடிகொண்டிருக்கிறது என்பதினை எடுத்துக் காட்டுகிருர் என்பதையே 'கழலே' என்பதிலு ள்ள 'ஏ'காரத்தினுல் போதிக்கின்ருர்.

எனவே ஹே முருகா! உன்னுடைய கமழும் திரு வடிகளை எடுத்துக்காட்டி, நாயினிற்கும் கடையேனுகிய அடியேனிடம் அப்பனே! உங்கள் தெய்வம் எங்கள் தெய்வம் என்று சொல்லிக்கொண்டு அலையாதே.

அரி அயன் அரன் உள்பட முப்பத்து முக்கோடி தேவர்கள் என்ன, இந்திரன் அக்கினி யமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன் என்ற எட்டு திக் பாலகர்களென்ன, அஷ்டவஸுக்களென்ன, நவக்ரஹங் களென்ன அப்படியே தேவாள் சித்தாள் அஸுராள் தைத்யாள், கின்னராள், கிம்புருஷாள், கந்தர்வாள், பூதாள், பைசாசர், பூதம் ப்ரேத பிசாசுகள், உரகாள் அப்படியே எண்ணற்ற கோடான கோடி உயிர்கள் ஆகியவைகளுக்கு எல்லாம் சரணுலயம் எனது திரு வடியேயாகும்.'' என்று சொல்லி அருளினுய் மட்டும் இல்லை.

சொல்ல வொண்ணுத துன்பத்தினுல் நொந்து நொந்து வெந்து கிடக்கிற அடியேனுடைய நெஞ் சானது குளிரும் வண்ணம் உன்னுடைய திருவடிகளை

அடியேன் சிரஸில் சூட்டிக்கொள்ளும்படி தந்தாயே இதனை நான் என்னவென்று சொல்லி மகிழ்வேன். உலகமெல்லாம் பரவி நிலவியுள்ளது உன்னுடைய திருவடிகளின் திவ்யமான வாஸனை. இத்தகைய பாதங்களை: நான் சிரஸில் அணியும் வண்ணம் தந்தருளினுயே. நின் கருணையை எடுத்து என்னுல் சொல்ல முடியுமா ஐயனே. ‘சொல்லிற்கு எட்டாத கருணை, வரம்பிற்கு அடங்காதகருணை, கற்பனைக்கு அடங்காத கருணை எண்ணவொண்ணுத கருணை, அருள்மயமாய் திகழும் கருணை’ என்றெல்லாம் உன்னுடைய கருணையை சாஸ்திரங்கள் போற்றிப் புகழ்கின்றன.

எனவே ஞான சூன்யனு அடியேனுல் உன்னுடைய அருளின் தன்மையினை எடுத்துச் சொல்ல இயலுமோ. முருகா! ஒரு காலத்திலும் உன்னுடைய அருளின் பெருமையை எடுத்துச் சொல்லினுல் சொல்ல முடியாதன்ருே! என்னே உன்னுடைய அருளும் அன்புநிறைந்த கருணையும்.



# ஞானபண்டிதனிடம் ஞானப்பழத்தை அருளும்படி வேண்டுதல்

## 45



கரவாகிய கல்வியுளார் கடைசென்
றிரவா வகைமெய்ப்பொருள் ஈகுவையோ
குரவா குமரா குலிசாயுத குஞ்
சரவா சிவயோக தயாபரனே

**பதவுரை**

குரவா—ஞானபண்டிதனுய் காட்சியளிக்கும் ஸத்குரு நாதனே, குமரா—என்றும் மாருத இளமையை உடையவனே, குலிசாயுத குஞ்சரவா— குலிசம் என்று சொல்லப்படும் வஜ்ராயுதத்தையுடைய இந்திரனுடைய மகளாகிய தெய்வயானையினுடைய ப்ராணநாதனே, சிவயோக தயாபரனே—மங்களகரமான ராஜயோகத்தை அருளும்பொழுது கருணையையே மேலானதாகக் கொண்டவனே, கரவுஆகிய—(தான் கற்ற வித்தையை கற்றதுபோலவே உபதேசிக்காமல்)

மறைமுகமாக உபதேசிக்கின்ற, கல்வியுளார்—வித்தையை உடையவர்களுடைய, கடைசென்று—வீட்டு வாயிலினை அடைந்து அங்கே நின்று, இரவா வகை—(தாங்கள் கற்ற வித்தையை எனக்கு உபதேசம் செய்யுங்கள் என்று) யாசிக்காதவண்ணம் அடியேனுக்கு, மெய்ப்பொருள்—உண்மையான பரப்ரம்மக் ஞானத்தை அதாவது ஆத்மஞானத்தை, ஈகுவையோ—ஞானபண்டிதனாகிய நீயே என் முன் தோன்றி எனக்கு உபதேசித்து அருள்வாயோ? அதாவது எப்பொழுது மெய்ஞானத்தை அருளப்போகிறாய் அப்பனே என்பது பொருள்.

**தாத்பர்யம்**

முருகப் பெருமானை நேராக தன்முன்னே தோன்றி மெய்ப்பொருளை உபதேசித்தருளும்படிவேண்டுகின்றார் அருணகிரிநாதர். எனவே முருகப்பெருமானை,

குரவா குமரா குலிசாயுத குஞ்
சரவா சிவயோக தயாபரனே

என்று புகழ்ந்து அழைக்கின்றார்.

மானிடப் பிறவியை எடுத்த ஒவ்வொருவரும் முடிவில் பெறவேண்டியது மெய்ப்பொருளாகிய ஆத்ம ஞானமேயாகும். அந்த ஆத்ம ஞானத்தை உபதேசித்தருளுபவரே ஸத்குரு ஆவார். 'ஸத்' என்ற சப்தத்தினால் போதிக்கப்படுகின்ற பரம்பொருளே ஆத்மதத்வமாகும். இதுவே மெய்ப்பொருளாகும். இதையே சிவஞானம் என்றும், இந்த ஞானத்தை அடையும் மார்க்கத்தை சிவயோகமென்றும் ராஜயோகம் என்றும் சொல்வார்கள்.

'சிவ' என்ற சப்தத்திற்கு மங்களம் என்று பொருள். யோகம் என்பதற்கு 'ஜீவ–ப்ரம்ம' ஐக்யத்தைப் போதிக்கின்ற 'ஞானமார்க்கம்' என்று பெயர்.

இதையே ராஜயோகம் என்று கீதா சாஸ்திரம் போதிக்கின்றது. எனவே 'சிவயோகம்' என்பதினுல் பரம மங்களகரமான ராஜயோகத்தையே க்ரஹித்துக் கொள்ளவேண்டும்.

'சிவ' என்ற இரண்டு அக்ஷரங்களுக்குள்ளேயே ராஜயோகமானது உள்ளடங்கி இருக்கின்றது. இதனை திருமூலர் திருமந்திரத்தில் பின்வருமாறு சொல்கிருர்.

சிவ சிவ என்கிலர் தீவினை யாளர்
சிவ சிவ என்றிடத் தீவினை மாளும்
சிவ சிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவ சிவ என்னச் சிவகதி தானே.

அப்படியே தமிழ்த் தாயாகிய ஔவையாரும்,

சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்
கபாய மொருநாளுமில்லை—உபாயம்
இதுவே மதியாகு மல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்.

என்று அருளியிருக்கிருர். 'சிவ-சிவ' என்று உச்சரிப்பதால் பாபமானது அழிகிறது. நல்ல அறிவு உண்டாகுகிறது. உள்ளத்தில் அன்பு வளர்கிறது.

முருகப்பெருமானுனவெனில் மேலானகருணையினுல் அடியார்களுக்கு 'சிவ' என்ற இரண்டு அக்ஷரங்களின் சக்தியை உபதேசித்து அதன்பின்பு சிவயோகமாகிய ராஜயோகத்தைத் தந்து அருளுகிருர். முருகனுடைய தயையானது மிகவும் துர்லபமாயும் ரகஸ்யமாயும் உள்ள தத்வங்களை யெல்லாம் அடியார்களுக்கு அளிக்கின்றது. கருணை வடிவாய் விளங்கும் முருகப்பெரு

மான் ஞானகுரு ரூபமாகவே அடியார்களை ஆட்கொள்ள வருகின்றார்.

அவ்விதம் ஸத்குருவாய் வரும் முருகன் குமரனாய் விளங்குகிறார். என்றென்றும் பதினாறு வயசுடன் கூடிய இளமைப் பருவத்திலேயே சாந்தமூர்த்தியாய் ஞானவேலைத் திருக்கரத்தில் ஏந்தியவராய் இருக்கிறார்.

சிஷ்யர்கள் வயதான தொண்டு கிழவர்களாக இருக்கின்றார்கள். அதுமட்டுமல்ல. ப்ரம்மாதிதேவர்கள் அஞ்சலி செய்தவண்ணமாய் சிஷ்ய பாவத்தில் அமர்ந்து கொண்டிருக்கிறார்கள். பார்ப்பவர்களுடைய உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும்வண்ணமுள்ள யௌவன ரூபத்தில் ஞானகுருவாய் நின்றுவரும் முருகனின் அழகினை பானம் செய்துகொண்டு 'குமரா' என்று சொல்லித் தலைவணங்குகிறார் அருணகிரியார்.

இவ்விதம் மகிமையோடு ஸத்குருவாய் விளங்கும் முருகப்பெருமானே, சூரபத்மாஸுரனை ஸம்ஹாரம் செய்வதற்காக தேவர்களுக்கு ஸேனாதிபதியாக தோன்றி, இந்திரனுடைய மகளாகிய தேவயானையிற்கு ப்ராணநாதனாகவும் விளங்குகின்றார்.

'குஞ்சரம்' என்றால் யானை. இங்கு 'குஞ்சரம்' என்பது 'தேவயானையை'க் குறிக்கிறது. எனவே 'குஞ்சரவா' என்றால் தேவயானையின் ப்ராணநேசனே என்று பொருள்.

இவ்விதம் இப்பாடலில் தேவயானையை ஆறுபடை வீட்டினையுடைய முருகப்பெருமான் 'பாணிக்ரஹணம்' செய்துகொண்ட கல்யாண மஹோத்ஸவத்தை நினைவூட்டுகிறார் அருணகிரிநாதர்.

இவ்விதம் குமரகுருபரனுய் விளங்கும் தேவயானி ஸமேதரான முருகப்பெருமானிடம் அருணகிரிநாதர் பின்வருமாறு யாசிக்கின்றுர்.

ஹே முருகா, நான் ஒருவிதமான வித்தையையும் அறிந்தவன் அல்லன். ஏதாவது ஒரு வித்தையாவது தெரிந்திருந்தால்தானே உலகத்திலுள்ளவர்களுடைய அன்பிற்கு பாத்திரமாஹி இவ்வுலகில் வறுமையினுல் கஷ்டப்படாமல் வாழமுடியும்.

அப்படி யாரையாவது நாடி ஏதாவது ஒரு கலேயை தெரிந்துகொள்ளலாம் என்ற எண்ணத்துடன் யாரிட மாவது சென்ருல், ஒருவராவது அவர்கள் கற்ற கலேயின் முழு ரகஸ்யத்தையும் தான் கற்றபடியே சொல்வதில்லே. மாறுபாடாகவே சொல்கிருர்கள். இன்று வா நாளே வா என்று சொல்லிச் சொல்லியே நாளேக் கடத்துவதுமல்லாமல் என்னே ஏமாற்றியும் வருகிருர்கள்.

மேலும், அவர்கள் தாங்கள் கல்வியினுல் அடையும் உலகப் பயன்களே, அன்னியர்களும் அடைந்து விட்டால், நாளடைவில் தங்களே யாரும் நாடிவராமல் யிருந்துவிட்டால் என்ன செய்வது என்று கற்ற கல்வியின் உட்பொருளேச் சொல்லி உண்மையை உணர்த்துவது இல்லே.

தவிர அவர்கள் தாம் கற்ற கல்வி அறிவைப் பிறர்க்கு சொல்லிக்கொடுக்காமல் தமக்குள்ளே வைத்துக்கொள்கிருர்கள். அதுபோலவே அவர்கள் தாங்கள் கற்ற கல்வியின் பயனுக அடைந்த செல்வத்தையும் தானதர்மம் செய்வதில்லே. இவர்களே வஞ்சகர்கள் என்றுதான் சொல்ல வேணடும். மனதிலொன்றை எண்ணி, அதற்கு மாருக புறம்சொல்வார்கள். கல்வி

யாகிய செல்வமும், பொருள்களாகிய செல்வமும் இவர்களிடத்தில் செத்துவிடுகின்றன.

இத்தகைய பாபிகளோ வெனில் தங்களுடைய செல்வத்தையும் அப்படியே கல்வி அறிவையும் தாங்களே நுகர்ந்து அனுபவிப்பார்களே தவிர செல்வமில்லாதவர்களுக்கு செல்வத்தைக் கொடுத்தும், கல்வியில்லாதவர்களுக்குக் கல்வி அறிவாகிய செல்வத்தைக் கொடுத்தும் வாழவைக்க மாட்டார்கள்.

இவர்களையே இப் பாட்டில்,

கரவாகிய கல்வியுளார்

என்று சொல்லப்படுகிறது.

கற்றதனுல் ஆய பயன் என்கொல்
வாலறிவன் நற்றாள்
தொழா அர் எனின

என்று திருக்குறளில் கூறியதுபோல், எல்லா நூல்களையும் கற்றுணர்ந்த பயனே லெனில் இறைவனது நல்ல திருவடிகளை தொழுது பிறவி யில்லாமல் செய்து கொண்டு இறைவன் திருவடிகளை அடைவதேயாகுமன்றோ. இக் குறளின் பெருமையை உணர்ந்தும் அவர்கள் தாம் கற்ற கல்வியாகிய செல்வத்தை மற்றவர்களுக்கு ஒளிக்காமல் சொல்லிக் கொடுக்க மாட்டார்கள்.

இவ்விதம் கல்வியைப் பிறர்க்கு சொல்லிக்கொடுக்காமல் ஒளித்து வைத்துக்கொண்டிருப்பவர்களுடைய வீட்டின் வாசலில் நின்றுகொண்டு, நான் அவர்களிடம் 'எனக்குத் தாங்கள் கற்ற கல்வி அறிவைக் கொஞ்சம் சொல்லிக் கொடுங்கள். நான் செல்வமற்றவனுக இருக்

கிறேன். தாங்கள் ஏதாவது ஒரு கலையை எனக்கு சொல்லிக் கொடுத்தால் நானும் தங்களைப்போல் அதன் மூலமாக செல்வத்தை அடையலாம். நான் ஒன்றும் அறியாதவன். சாஸ்திர ஞானமில்லாதவன். தர்மம் தெரியாதவன். புராண ஞானம் இல்லாதவன்-நடனம், இசை, ஹாஸ்யம்—துதிப்பது-அப்படியே ஒருவிதமான கல்வியும் அறியாதவன். ஏதாவது ஒரு கலையாவது எனக்குத்தெரியுமேயாகில் அதன் மூலமாக நான் உலக பயன்களை அடைவேன். எனவே, ஏதாவது ஒரு கல்வி அறிவையாவது எனக்கு உபதேசிக்கக் கூடாதா. நான் மிகவும் உங்களைக் கெஞ்சிக் கேட்கின்றேன்'' என்று பலவாறு யாசித்துக் கேட்கும் ஒரு சங்கடமான நிலையில் என்னை வைக்காதே ஐயனே. இரந்து வாழ்வதைக் காட்டிலும் நான் மரணத்தையே விரும்புகிறேன்.

எனவே என்னுடைய குறையைச் சொல்லி நெஞ்சிலுள்ளதை மறைத்துப்பேசுபவர்களிடம் நான் யாசித்து ஒரு காலத்திலும் நிற்கமாட்டேன் ஐயனே. ஹே குமரா! ஞானபண்டிதனாகிய நீ இருக்கும்பொழுது, நான் கரவு ஆகிய கல்வியுளார் கடைசென்று இரந்து நிற்பதா. இதனைவிட நான் என் உயிரையே விட்டு விடத் தயாராக இருக்கிறேன்.

அப்பர் சுவாமிகளின் பொன்மொழியை இவர்கள் அறிந்தார் இல்லை. கல்வியாகிய செல்வமும், பொருளாகிய செல்வமும் உடையவர்களுடைய கடமையை,

இரப்பவர்க் கீய வைத்தார்
ஈபவர்க் கருளும் வைத்தார்
கரப்பவர் தங்கட்கெல்லாம்
கடுநரகங்கள் வைத்தார்

என்று சொல்லியிருக்கிறார்.

எனவே ஹே முருகா! நெஞ்சில் வஞ்சகமாக கல்வி அறிவை ஒளித்து வைத்துக்கொண்டிருப்பவர்களிடம் யிருந்து நான் மெய்ப்பொருள் ஞானத்தை ஒரு பொழுதும் அடைய முடியாது. தவிர அவர்கள் நல்ல மனதுடன் உபதேசிக்க வந்தாலும்கூட அவர்களுக்கு மெய்ப்பொருள் ஞானமானது புலப்படாது. ஞான பண்டிதனாகிய நீ ஒருவனே மெய்ப்பொருளினை உப தேசிக்க வல்லவன். எனவே நீயே அந்த மெய்ப் பொருளை எனக்கு அருளவேண்டும். நான் கேட்கும்படி நீ எனக்குத் தந்தருளுவாயா என்பதை,

மெய்ப்பொருள் ஈகுவையோ

என்று பணிவாகவும் அன்பாகவும், கருணை பெருக் கெடுக்குமாறும் கேட்கின்றார் அருணகிரிநாதர். இதனை சொல்லும்பொழுது நம்முடைய உடம்பில் மயிர் சிலிர்க்கின்றன.

மெய்ப்பொருள் என்றால் என்ன?

சென்ற காலம் நிகழ்காலம் வருங்காலம் என்ற மூன்று காலங்களிலும் அழியாப் பொருளாயும், எப்பொருளாயும், எல்லாமாயும் எந்த ஒரு வஸ்து வானது விளங்கி வருகிறதோ அதுவே மெய்ப்பொரு ளாகும். அறிவிலே தோன்றி மறைவதெல்லாம் மெய்ப் பொருளாக ஆகாது. எனவே 'மெய்ப்பொருள் ஈகு வையோ' என்ற வாக்கியத்திலேயே இதுவரையிலும் அனுபவித்துக்கொண்டிருந்ததெல்லாம்மெய்ப்பொருள் அல்ல என்பது ஸித்தாந்தமாக வெளியாகவில்லையா?

ஆதலால் மெய்ப்பொருளும் மெய்ப்பொருளை அருளுபவனும், மெய்ப்பொருளைப் பெற்றுக்கொள்ப வனும் ஒரே அகண்டமான வஸ்து என்று உணர்ந்து

அநுபவிப்பதேமெய்ப்பொருளாகும். அத்தகையமெய்ப் பொருள் அநுபவ நிலையை முருகப்பெருமானிடம் 'ஈகுவையோ' என்று கேட்கின்றார்.

மெய்ப்பொருளாகிய ஞானத்தில், உலகத்தினை யொட்டிய ஸகலவிதமான ஞானங்களும் அடங்கி விட்டன. மெய்ப்பொருள் ஞானம் வரும்பொழுது உலக ஞானம் மறைந்துபோய்விடும். ஆத்ம ஞானம் தானாகவே சுடர்விட்டு எரியும். இந்நிலையில் ஜீவனா னவன் மெய்ப்பொருளாகவே ஆகிறான். அதாவது மெய்ப்பொருளாகிய முருகப்பெருமானிடத்தில் 'நான் நீ' என்று சொல்லிக்கொண்டிருந்த ஜீவனானவன் கரைந்து விடுகிறான். ஜீவநிலையானதுபோய் ப்ரும்ம நிலையை அடைகிறான். இந்நிலையே மேலானதான மெய்ப்பொருள் நிலையாகும்.

எத்தனையோ எண்ணற்ற பிறவிகளில் ஈச்வர ஆராதன ரூபமாக கர்மாக்களைச் செய்திருந்தால்தான் ப்ரம்ம விசாரம் செய்ய வேண்டுமென்ற எண்ண மானது மனதில் உண்டாகும்.

அதுமட்டுமல்ல. இடைவிடாமல் உள்ளத்தில் ஒன்றின்பின் ஒன்றாகத் தோன்றிக் கொண்டிருக்கிற ஈச்வர சிந்தனையே ப்ரம்ம விசாரத்தை நிலைநிறுத்து கிறது. ப்ரம்ம விசாரத்தில் ஈடுபட்ட மனதானது வேதாந்தம் என்ற அரண்யத்தில்போய் ஸஞ்சாரம் செய்து முடிவில் உபநிஷத்துகள் ஆகிய மலையின் சிகரத்தை அடைகிறது. அதன் பின்பு நிலையற்ற தாகிய இவ்வுலக வாழ்க்கையைக் கொஞ்சம் கொஞ்ச மாக வெறுத்து வேதாந்த வாக்யங்களைக் கேட்பதிலும் உச்சரிப்பதிலும், மற்றவர்க்கு எடுத்துச் சொல்வதி லும், எல்லையற்ற ஆனந்தத்தைக் காண்கின்றது.

இதன் மகிமையினுல்,

ஆத்ம லாபத்திற்கு மேலான லாபமேஇல்லை என்ற மெய்யுணர்வானது ஏற்படுகிறது. மெய்யுணர் வினுல், 'நான்–நீ' என்ற பேத ஞானம் ஏன் தோன்று கிறது? நான் என்பது யார்? நீ என்றது என்ன? என்ற சிந்தனையில் ஈடுபட்டு அதன் மகிமையினுல் ஜாக்ரம்–ஸ்வப்பனம்-ஸுஷுப்தி-என்ற மூன்று அவஸ்தையிலும் 'நான்' என்பவன் மறைவதில்லை என்றும், அவஸ்தைகள்தான் மறைகின்றது என்றும், தெளிவாக அறிவில் ஸ்புரிக்கின்றது.

இந்நிலையில் புத்தியானது மறையும் பொருளைப் பொய்யென்றும், மறையாமல் ஸ்வப்ரகாசமாய் விளங்கிவரும் 'நான்' என்ற சப்தத்தினுல் சொல்லப் பட்ட ஆத்மாவை ஸத்யமான பொருள் என்றும் பிரித்துக் காட்டுகிறது.

எனவே ஸத்யத்தைப் பார்க்கும்பொழுது பொய் யானது தோன்ருது. உதாரணமாக கயிறைப் பார்க் கும்பொழுது பாம்பு இல்ல. ஸத்தாகிய கயிருனது புலப்படாத வரையில் அந்த ஸத்தாகிய கயிற்றை ஆதாரமாகக்கொண்டு பொய்யாகிய பாம்பு தோன்று கிறது. அது போலவே ஸத்தாகிய ஆத்மாவில் இந்தப் பொய்யாகிய உலகம் தோன்றுகிறது. பொய்யாகிய உலகம் ஆத்மஞானம் வந்ததும் மறைந்து விடுகிறது. மிஞ்சி நிற்பது ஆத்மதத்துவம் ஒன்றேயாகும். அந்த ஆத்மதத்வமே மெய்ப்பொருள். அந்த மெய்ப் பொருளே முருகப்பெருமான்.

எனவே முருகப்பெருமானைப்பார்த்து,ஹே முருகா! கோடிக்கணக்கான ஜன்மாவில் செய்த புண்ணி யத்தின் மஹிமையினுல்தான் மெய்பொருள் ஞான

மாகிய ஆத்ம ஞானத்தை அடையமுடியும் என்று சாஸ்திரங்கள் போதிக்கின்றபடியால், அம்மெய்ப் பொருளை எனக்குக்கொடுத்தருளுவாயோ. நான் அதை பெறுவதற்கு தகுதியுள்ளவனாக ஆகமுடியுமா? நான் அம் மெய்ப்பொருளை துணிந்து உன்னிடத்தில் கேட்க லாமா? உன்னுடைய மனோநிலை தெரியாமல் கேட்கின் றேனே. இல்லையென்று சொல்லிவிடுவாயோ? இல்லை எடுத்துக்கொள் என்று தந்தருள்வாயோ? என்ற பலவிதமான மனோநிலையைக் காட்டுகிறது.

## ஈகுவையோ

என்ற பதமானது. என்னே அருணகிரிநாதரின் வாக்கின் மாதுர்யம்.

ஆகஇப்பாடலை நாம் பாராயணம் செய்துவந்தால் 'மெய்ப்பொருள்' என்னும் அருட் செல்வத்தை நாம் அடைவோமென்பது திண்ணம்.



# எல்லா உயிர்களுக்கும் தாயும்-தந்தையும் முருகப் பெருமானே ஆவார்

## 46



எந்தாயு மெனக்கருள் தந்தையும் நீ
சிந்தா குல மானவை தீர்த் தெனையாள்
கந்தா கதிர் வேலவனே உமையாள்
மைந்தா குமரா மறைநாயகனே.

பதவுரை

கந்தா-கந்தப்பெருமானே (எதிரிகளின் பராக்கிரமத்தை வற்றும்படி செய்பவனே), கதிர் வேலவனே-ப்ரகாசத்துடன் கூடிய வேல் ஆகிய படையை யுடையவனே, உமையாள் மைந்தா-உமாதேவியின் புதல்வனே, குமரா-என்றும் பதினாறு வயதுடன் கூடியவனே, மறை நாயகனே-வேத புருஷனே. என் தாயும்-எனக்குத் தாயாகவும், எனக்கு அருள்-எனக்கு அருளுகின்ற, தந்தையும் நீ-தந்தையாகவும் நீயே (இருக் கின்ற படியால்) சிந்தாகுலம் ஆனவை தீர்த்து-(என்னுடைய)

மனதிலே உண்டாகுகின்ற துன்பங்களை இல்லாமல் தீருமாறு செய்து, எனை ஆள்-என்னை ஆட்கொண்டு அருள்வாயாக.

**தாத்பர்யம் :**

தன்னுடைய மனதிலுண்டாகும் துன்பங்களை யெல்லாம் அடியோடு போக்கடிக்கும்படி முருகப் பெருமானை வேண்டுகின்றார் அருணகிரிநாதர். எனவே முருகனை அன்புடன்

கந்தா கதிர்வேலவனே உமையாள்
மைந்தா குமரா மறைநாயகனே

என்று அழைக்கின்றார்.

'கந்தா' என்ற நாமத்திற்கு அனேக அர்த்தங்கள் உண்டு. ஆனால் இந்த 'கந்தா' என்ற நாமத்திற்கு

ஸ்கந்திர் கதி சோஷணயோ :

என்ற தாதுவை அனுசரித்து அதாவது பக்தர்களுடைய ஸகலவிதமான பாபங்களையும் போக்கடித்து மோக்ஷ பதவியை அளிக்கும் சக்தி வாய்ந்தவன் என்பதையே பொருளாக அறியவேண்டும்.

நாம் பாபங்களைச்செய்வதால்த்தான் மனதில் துன்பங்களை அடைகிறோம். பாபம் செய்வதற்கு காரணம் பூர்வ கர்மவினையே யாகும். கர்ம வினையானது காமம்-க்ரோதம்-லோபம்-மோகம்-மதம்-மாத்ஸர்யம் முதலியவைகளை மேன்மேலும் அதிகரிக்கச் செய்கிறது. இவைகளே நமக்கு சத்ருக்களாக இருக்கிறது. வெளியிலுள்ள சத்துருக்களைக் காட்டிலும் இதயத்தில் குடிகொண்டிருக்கிற காம - க்ரோத - லோப-மோக-மத-மாத்ஸர்யம் என்ற ஆறு சத்ருக்கள் எத்தனையோ கோடி அதிகமான சக்தியை வாய்ந்தவர்கள். இந்த உள் சத்ருக்களுக்கு காமமே தலைவனாக இருக்கிறது.

முதலில்நம்மிடத்தில் காமமாகஎழுகின்றதேபின்பு அதுவே க்ரோதமாகவும் அப்படியே லோப-மோக-மத-மாத்சர்யம் முதலியவைகளாகவும் மாறுகின்றன.

இந்நிலையில் நம்மிடத்தில் பலவகைத் துன்பங்கள் வரும்பொழுது அதனை நீக்க நாம் பாபகர்மாவை செய்கிறோம். மீண்டும் அக் கர்மாவானது துன்பத்தையே பெரிதாக்குகின்றது.

துன்பமோவெனில் பலவிதமான வியாதிகள் மூலமாக உடலையும், மனதையும் வந்தடைகின்றது. துன்பங்களானது நம்முடைய மானிடப் பிறவியின் பயனையே வீணாக்கி விடுகிறது. மனதில் வரும் துன்பங்களோ வெனில் ஒருவனுடைய வீர்யம்-தைர்யம்-ஈச்வர சிந்தனை-தானம்-தர்மம்-அஹிம்சை முதலிய நற்குணங்களை அபகரித்து விடுகின்றது: எப்பொழுது பார்த்தாலும் துன்பமாகிய கடலிலேயே மூழ்கிக் கிடக்கிறான் மனிதனானவன். துன்பங்கள் தன்னை விட்டு எப்பொழுதுதான் போகுமோ என்று புலம்பிக் கொண்டிருப்பானே தவிர, அத்துன்பங்களைப் போக்கடித்துக் கொள்ள முருகப்பெருமானை த்யானம் செய்யமாட்டான். என்னே துன்பத்தின் கொடுமை.

மனதில் வரும் ஸகல விதமான துன்பங்களையும் அடியோடு வற்றடித்து மீண்டும் அத்துன்பங்கள் வரா வண்ணம் செய்து கொள்வதற்கு 'கந்தா' என்ற நாம உச்சாரணமே மந்திரமாக விளங்குகிறது.

எனவே முருகப்பெருமானைக் 'கந்தா' என்று அழைத்து கதிர்வேலவனே என்றார். 'கதிர்வேல்' என்றால் ஸ்வப்பிரகாசத்தோடுகூடிய வேல்என்றுபொருள். எந்த வேலினுடைய பிரகாசத்தைக் கொண்டு, உலகிலுள்ள பொருள்களும் சூர்ய சந்திராதிகளும் பிரகாசிக்

கின்றதோ, அந்த ஞானவொளி பொருந்திய வேலே 'கதிர்வேல்' ஆகும். முருகப்பெருமானேவெனில் தன்னுடைய திருக்கரத்திலுள்ள கதிர்வேலினுல் ஜீவகோடிகளுடைய மனதிலுள்ள அஞ்ஞானமாகிய இருளைப் போக்கடிக்கிருர்.

எனவே 'கந்தா' என்ற மந்திரத்தை உச்சரிக்கும் பொழுது, மனதானது 'கந்தா' என்ற மந்திரத்தில் தன்மய நிலையை யடைகிறது. இந்நிலையில் மனதானது நிர்மலமாக ஆகிறது. நிர்மலமாகிய மனதில் முருகப் பெருமான் கதிர்வேலனுகத்திருவிளையாடல் செய்கிருர்.

மனதில் முருகன் திருவிளையாடல் செய்யும் பொழுது, அம் முருகனை அன்புடன்

உமையாள் மைந்தா குமரா

என்று புகழ்கின்ருர். ஏன் தெரியுமா?

குமரன் என எங்கே நினைப்பினும்
அங்கே யென் முன்வந்தெதிர்நிற்பனே

என்று அருணகிரிநாதரே சொல்லுகின்ருர்.

என்றென்றும் குமரனுகவே விளங்குகின்ற முருகப் பெருமானின் அழகை யாரால் வர்ணிக்க முடியும். வர்ணிக்க இயலாததும் வரம்பெல்லாம் கடந்து நிற்கின்ற அழகை உறைவிடமாகக் கொண்ட குமரனை

ஓவிய நான்முகன் எழுத வொண்ணுமை

என்று சேக்கிழார் சுவாமிகள் சொல்கின்ருர்.

குமரனை வெறும் குமரனுக எண்ணக்கூடாது. வேதபுருஷனுகவும் ஆகின்ருன் என்பதினுல் 'மறை நாயகனே' என்று அழைக்கின்ருர். எனெனில் 'ருக்-யஜுர்-ஸாமம்-அதர்வணம்' என்ற நான்குவேதங்களுக்

குள் அடங்காத தத்துவமே கிடையாது. ஸகல தத்துவங்களும் வேதங்களுக்குள் மறைந்து கிடக்கின்றன. அதனுல்தான் வேதங்களை 'மறை' என்று சொல்கிருேம். மந்திரங்களுடைய ஸ்வரூபமாயும் மந்திரமயமாயும் மங்காத பொலிவுடன் விளங்குகிறது வேதங்கள்.

அவ் வேதங்களுடைய ஸ்வரூபமே குமரனுவான். எல்லாவற்றிற்கும் மேலான ப்ரமாணம் வேதமாகும். அபௌருஷமான வேதங்களே ஆறுமுகக் கடவுளின் மூச்சாகும்.

எனவே வேதங்களுக்கு ப்ராமாண்யத்தை கொடுக்காமல் மற்ற பௌருஷமான நூல்களுக்கு ப்ராமாண்யத்தைக் கொடுத்து வேதபுருஷனுகிய குமரனை அடைய எண்ணுவோர்களை யெல்லாம், கங்கைக் கரையிலிருந்து கொண்டு தாகத்தைத் தணித்துக்கொள்வதற்கு கிணற்றினைத்தேடிக்கொண்டு வேறு இடம்சென்றவர்களாகவே தான்சொல்லவேண்டும். என்னே அவர்களின் அறியாமை.

கிணற்றிலிருக்கும் நீரைக் கடலில் அடக்கலாம். ஆனுல் கடலினைக் கிணற்றில் அடக்க இயலுமோ? அதுபோலவே வேதங்களை சரணமடைந்து குருமுகமாக வேத ரகஸ்யங்களைத் தெரிந்து கொள்ளாத போனுல் நாம் குமரனின் உண்மையான ஸ்வரூபத்தை அறிய இயலுமோ?

எனவே வேதமில்லையெல் குமரன் இல்லை. குமரன் இல்லையேல் வேதமில்லை. வேதமே குமரனுவான். குமரனே வேதமாகும். எத்தனையோ ஆயிரக்கணக்கான வருஷங்கள் வேதங்களை இடைவிடாமல் ஓதிக்கொண்டிருந்த முனிவர்களும் கூட முடிவில் வேதங்களின் உட்பொருளை **'அறியவொண்ணுது'** என்ற நிலையையடைந்து அதன் உண்மைப்பொருளை அறிய குமரனின்

அருளேயே நாடி நின்றார்களென்றால் யாமோ வேதங்களின் ஹ்ருதயத்தை அறியவல்லோம்? இதனால்தான் பரம கருணாமூர்த்தியான திருமூலநாயனார் உலகத்தினரை நோக்கி "மானிடப்பிறவியை அடைந்தவர்களே உண்மையை உபதேசிக்கிறேன் கேளுங்கள். இறைவனை இப்பிறவியில்தான் நாம் அடைய முடியும்... அதற்காகவே பகுத்தறிவை நமக்குத் தந்தருளியிருக்கிறார் கடவுள். எனவே அதில் அப்படி சொல்லியிருக்கிறது. இதில் இப்படி சொல்லியிருக்கிறது என்று சொல்லிக் கொண்டே அரிதான மானிடப் பிறவியை வீணாக்கி விடாதீர்கள். அபௌருஷமான வேதங்களே இறைவனின் உண்மைப் பொருளை அறிய முடியமல்

வேதங்கள் ஐயா என ஓங்கி

அழைத்து அதற்குமேல், சொல்ல முடியாமல், மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாத பொருளே பரம்பொருள் ஆகும் என்று திரும்பிவிட்டன வென்றால் யாமோ இறைவனைப் பற்றிப் பேசவல்லோம். இதனால் அல்லவா அப்பர் சுவாமிகள்

நால்வேதத் தப்பால் நின்ற

பொருள் இறைவன் என்று உலகத்தினருக்கு சுட்டிக் காட்டுகின்றார்.

ஆகையினால் ஹே மானிடர்களே நான் உங்களுக்கு கடைசியாக உபதேசிப்பது என்னவென்றால் ஒரே ஒரு தத்வம்தான். அதுவோ வெனில்

உரைற்யற தொன்றை உரை செயு மமர்
காள் கரையற்ற தொன்றை கரை காண
லாகுமோ திரையற்ற நீர்போல் சிந்தை
தெளிந் தேற்குப் புரையற்றி ருந்தான்
புரிசடையோனே.

என்பதேயாம். இதன் உண்மையை சிந்தித்துப் பாருங்கள். எண்ணற்ற தடவை சொல்லிப் பாருங்கள். பின்பு உண்மையை சிந்தியுங்கள். மீண்டும் திருப்பித் திருப்பிச் சொல்லிப்பாருங்கள். உண்மையானது உள்ளத்தில் உருவத்துடன் எழுவதை காண்பீர்கள். உடனே பெரும்வியப்பினை அடைந்து ஆ! என்ன கார்யம் செய்கிறோம். உரையற்றதாயும் கரையற்றதாயுமுள்ள இறைவனைப் பற்றி உரை செய்கின்றோமே. நம்மைவிட பெரிய ஊமைகள் இவ்வுலகில் யாருமே யிருக்க முடியாது அன்றோ! திரையற்ற நீர் போலுள்ள மனதில் தானே உரையற்று கரையற்றுள்ள இறைவன் தோன்றுவான்.

திரையற்ற நீர்போல் நமது உள்ளத்தைச் செய்வது அபௌருஷமான வேதங்கள் அன்றோ! அதனை நாம் சரணமடைந்தால்தான் நாம் குமரனின் திருவடியை அடையமுடியும் என்ற எண்ணத்துடன் மெய்யுணர்வை அடைவீர்கள். இது தர்ம சிந்தனையும் மெய்யுணர்வுமாகும். தவிர வேதங்களின் உண்மையுமாகும்.

எனவே முருகப்பெருமானை 'மறை நாயகனே' என்று போற்றுகிறார் அருணகிரிநாதர்.

ப்ரணவ மூர்த்தியாக முருகன் இருந்தாலும் தாயின் பெயரைச் சொல்லிக் குமரனை அழைத்தால், குமரன் குமரனாகவே நம் கண்முன்னால் தோன்றுவான். ஆதலால் குமரனை

உமையாள் மைந்தா

என்று அன்புடன் அழைக்கிறார். அன்னை பராசக்தியின் அநேக திரு அவதாரங்களில் உமாதேவியாக அவதரித்ததே மிகவும் மேலானதாகும். செல்வக்குமரனை

ஈன்றெடுக்க எடுத்த அவதாரமே உமாதேவியின் புனிதமான திவ்ய அவதாரமாகும்.

தவத்தின் சின்கமே உமையாள், ஸகல ஆபரணங்களையும் அவிழ்த்துவிட்டு, தவத்திற்குரிய வெறும் மரவுரியைத் தரித்துக் கொண்டிருக்கும் உமாதேவியை ஞானக் கண்ணினுல் பார்த்த கவி ஸார்வ பௌம காளிதாஸர், "உமாதேவியின் இயற்கை அழகானது, அவளுடைய இயற்கையான தெய்வீகத் தேகத்திற்கு, மேன்மேலும் புஷ்டியுடன் கூடிய அழகை அதிகரிக்க வைக்கிறது' என்று வர்ணிக்கிருர்.

எனவே அழகினுல் சிவபெருமானை ஒரு காலும் அடையமுடியாது என்ற மெய்ஞானத்தினுல் தவக் கோலத்தைப் பூண்டவள் உமாதேவி. உமாதேவியின் தவத்தினைக் கண்டு மனம் மகிழ்ந்து சிவபெருமான் உமாதேவியை ஆட்கொண்டாரே தவிர வெறும் அழகினைக் கண்டல்ல. உமாதேவின் அழகில் ஈடுபட வேண்டும் என்ற எண்ணத்துடன் மன்மதனுனவன் இறைவனின்மேல் மன்மதாஸ்திரத்தை ப்ரயோகம்செய்தான். அதன் காரணமாக இறைவனின் நெற்றிக் கண்ணினுல் எரிக்கப்பட்டான். இதன்முடிவோவெனில் உமாதேவியின் அழகானது அத்தேவியினுடைய உள்ளத்திலேயே அமுங்கி அடங்கிவிட்டது. ஆனுல் அதற்கு பதிலாக மாபெரும் தவத்தின் சக்தியானது உள்ளத்தில் மலைபோல் வளர்ந்து கொண்டே போய், முடிவில் ' சிவபெருமானுடைய தபோசக்தியில் ஐக்யத்தை அடைந்தது. உடனே சிவபெருமானுனவர் உமாதேவியின் மேல் வைத்த கண்ணை வாங்காமல் பார்த்துக் கொண்டே இருந்தார்.

அவ்வேளையில் உமாதேவியின் அழகெல்லாம் திரண்டு இறைவனிடத்தில் லயத்தை அடைய, அதன்

பயஞக சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணிலிருந்து என்றும் மாறாத இளமை-வர்ணிக்க இயலாத அழகு மேலான ஆற்றலையளிக்கும் தெய்வீகத் தன்மை-உள்ளத்தை கொள்ளை கொள்ளும் திவ்யமான நறுமணம் அண்ட சராசரங்களையும் அடக்கி ஆட்டிவைக்கும் வீரத் தன்மை-ஸகலத்தையும் சுட்டெரிக்கும் தபோ மஹிமை-' ஆகியவைகளே, ஆறுபொறிகளாக வந்து, பின்பு ஆறு குழந்தைகளாக வெளிவந்தது. அதனைக் கண்ட உமாதேவியானவள் ஸகல வைபவங்களையும் அந்தஆறு குழந்தைகளிடத்தில் கண்டு அனைத்தும் ஒரே இடத்தில் கண்டு மகிழ வேண்டுமென்று தனது திருகரத்தினுல் ஆறு குழந்தைகளையும் அள்ளி எடுத்து தன்னுடைய திருமார்பில் அணைத்துக் கொண்டு ஆறினையும் ஒன்ருகச் செய்து உச்சிமுகர்ந்து மகிழ்ந்தாள் அன்ருே!

இத்தகைய மகிமை வாய்ந்த குழந்தையே குமரனுவான். குமரனிடத்திலேயே ஸகலத்தையும்கண்டவள் அன்னை பராசக்தியாகிய உமாதேவி. தன்னிடத்திலுள்ள சக்தியனைத்தையும் திரட்டி,

ஞான வேல் ரூபமாக

குமரனிடத்தில் கொடுத்தருளினுள். அதுவே 'கதிர் வேல்' என்று திருநாமத்துடன் குமரனின் கையில் திகழ்கின்றது.

எனவே குமரனுடைய அவதாரத்தையும் பார்வதியின் தவமஹிமையையும், சிவபெருமானுடைய மாபெரும் சக்தியையும் ஒன்று சேர்த்து 'குமாரசம்பவம்' என்ற மாபெரும் காவிய ரத்தினத்தை உலகிற்கு தந்தருளியிருக்கிருர் கவி ஸார்வபௌம காளிதாஸ மகா கவியானவர் என்பதை உலகம் நன்கறியும் அன்ருே!

இத்தகைய பெருமையுடன் கூடிய குமார ஸம்பவத்தையே நினைவூட்டுகிறார் அருள்மலையாகிய அருணகிரிநாதர்,

கந்தா கதிர்வேலவனே உமையாள்
மைந்தா குமரா மறைநாயகனே

என்பதினால் அன்றோ.

எனவே உமாதேவியின் மாபெரும் தவத்தினால் சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து மஹா பராக்ரமத்தோடு ஆறு குழந்தைகளாக முருகப்பெருமான் அவதரித்ததை 'உமையாள் மைந்தா' என்பதினாலும், அப்படிப் பிறந்த ஆறு குழந்தைகளையும் ஒன்றாகச் செய்த உமையின் திருவிளையாடலை 'கந்தா' என்பதினாலும், அந்தக் கந்தபெருமானானவர் என்றென்றும் பதினாறு வயதுடன் கூடிய இளமையும் மாறாத அழகும் இவைகளுடன் இருக்கிறார் என்பதை 'குமரா' என்பதினாலும், அந்தக் குமரனிடத்தில் தன்னுடைய சக்தியை வேல் ரூபமாக கொடுத்து, அம்மாபெரும் வேற்படையையே தனக்கு ஆயுதமாக முருகபெருமான் வைத்துக் கொண்டிருக்கிறார் என்பதை

கதிர்வேலவனே

என்பதினாலும், அப்படியே அம் முருகப்பெருமான் வேத புருஷனாகவும், ஓம்கார ஸ்வரூபனாகவும் விளங்கி வருகிறார் என்பதை

மறைநாயகனே

என்பதினாலும் சுட்டிக் காட்டி போதித் தருளுகிறார் அருணகிரிநாதர் என்றால் யாமோ முருகனின் பெருமையை எடுத்துச் சொல்ல வல்லோம்.

என்னே அருணகிரிநாதரின் வாக்கின் மாதுர்யம். எத்தனைபெரிய சிந்தனையில் கொண்டுபோய் விடுகிறது நம்மையெல்லாம் அருணகிரிநாதரின் வாக்கு. குமரனை உள்ளத்தில் உரையவைக்கும் அருணகிரியின் பொன் மொழியின் பெருமைதான் என்னே!

இவ்வித மகிமையுள்ள முருகப்பெருமானே தாயகவும் தந்தையாகவும் இருக்கின்றார்.

இறைவனைத் தாயாகவும் தந்தையாகவும் அழைப்பது இயல்பாகும்!

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

அம்மையே அப்பா ஒப்பிலாமணியே
அன்பினில் விளைந்தவாரமுதே

என்று அழைக்கிறார் இறைவனை, அதுபோலவே அப்பர் சுவாமிகளும்,

அப்பன் நீ அம்மை நீ ஐயனு நீ

என்று பாடுகிறார். அதுபோலவே ஞான சம்பந்த பெருமானேவெனில்

தாயு நீயே தந்தை நீயே சங்கரனே

என்று இறைவனை அழைக்கின்றார்.

மேலும் சிவ வாக்கியரோவெனில்

தந்தை தாய் தமரும் நீ சகலதேவ—
தையும் நீ சிந்தை நீ தெளிவு நீ சித்தி
முத்தி தானும் பிந்து நீ விளைவு நீ மேல
தாய வேதம் நீ எந்தை நீ இறைவன் நீ
என்னை ஆண்ட ஈசனே

என்று எல்லாவற்றையும்இறைவனுகவே காண்கின்றார். மேலும் சாஸ்திரமானது

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ பந்துச்ச ஸகா த்வமேவ
த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தேவ தேவ

என்பதினுல் ஸகலமும் இறைவனே யாவான் என்று போதிக்கின்றது.

இவ்விதம் இறைவனை தாயாகவும் தந்தையாகவும் அழைப்பதின் தத்வமோவெனில், இறைவனுடைய உக்ரகலையை குறைப்பதற்காகவே யாகும். 'அம்மா' என்று அழைக்கும் குரலைக் கேட்டவுடன் அந்த இடத்திலேயே ஸ்திரீகளுக்கு புத்ரவாஸ்ஸல்யம் உண்டாகிறது என்று சாஸ்திரங்கள் போதிக்கின்றதுமல்லாமல் ப்ரத்யக்ஷமாகவே நாம் உலகில் காணவில்லையா.

எனவே வரம்பினை தாண்டிய அன்பின் வடிவமே தாயாவாள். அதுபோலவே அருளின் வடிவமே தந்தையாவர். அன்பினையே வடிவமாகக்கொண்ட தாயானவள் தன் குழந்தையை அணைத்து ஆட்கொள்ள வரும் பொழுது, அந்த இடத்தில், அத்தாயின் வருகையை தடுத்து அணைபோட எந்த சாஸ்திரமும் சக்தியுள்ளதாக ஆகிறதில்லை.

இதனுல்தான் வேதமானது

மாத்ருதேவோ பவ
பித்ருதேவோ பவ

என்று போதிக்கின்றது. இறைவனை தாய்தந்தையர்களாக வைத்து ஆராதிப்பதே மேலான பூஜையாகும். நம்முடைய தேகத்தை ஒட்டிய தாய்தந்தையர்களே இறைவன் ஆவார்.

அன்னையும் பிதாவும் முன்னெறி தெய்வம்.

என்றும்

தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை.
தந்தை சொற்மிக்க மந்திரமில்லை

என்றும் ஔவை தாய் உபதேசித்து அருளி இருக்கின்றார் அன்றோ. தாய்தந்தையர்களுக்கு நிகர் தாய்தந்தையர்களே ஆவார்கள்? எனவே இறைவனை தாய்தந்தையர்களாக அழைக்கின்றார்கள் ஞானிகளும் யோகிகளும்

எனவே அருணகிரிநாதர் வேதம்

மாத்ருதேவோ பவ பித்ருதேவோ பவ

என்று அழைப்பது போலவே முருகப்பெருமானை

எந்தாயும் எனக்கருள் தந்தையும் நீ
சிந்தா குலமானவை தீர்த்தெனை ஆள்

என்று அழைத்து வேண்டுகின்றார்.

ஆக முருகப் பெருமானனவர் தாயாக வரும் பொழுது அந்த இடத்தில் சிவதத்வமானது சக்தி தத்வத்தில் லயத்தை யடைந்து சக்தி தத்வமாகவே ஆகிவிடுகிறது. சக்தியின் வடிவமோவெனில் அன்பு மயமேயாகும். அன்பு மயமே தாயின் ஸ்வரூபம். உலகினிற்கெல்லாம் தாயாக இருக்கிற தாயின் அன்பினை இரண்டாகப் பிரித்துக்கூற முடியாது. தவிர அதற்கு சாஸ்திரமும் இடம் தராது.

ஆதலால் 'என் தாய்' என்று சொல்வதின் பொருளோவெனில்,

வள்ளி-தேவயானி

ஆகிய இவர்களுடைய ஐக்கிய நிலையையே போதிக்கின்றதாக ஆகும்.

இச்சா சக்தியாகிய வள்ளிதேவி யில்லையேல் கிரியா சக்தியாகிய தேவயானியும் இல்லை. இந்த இரண்டு சக்திகளையே 'சக்தி தத்வம்' என்று தேவீ தந்திரங்களிலும் தேவீ மாஹாத்மியம் முதலிய மந்திர சாஸ்திர க்ரந்தங்களிலும்கூறப்பட்டிருக்கிறது எனவே இச்சை ஏற்படாவிடில் அந்த இடத்தில் கிரியை உண்டாகாது. கிரியை ஏற்படுவதற்கு இச்சையே மூல காரணம்.

எனவே வள்ளி தேவியானவள் எண்ணற்ற கோடி உயிர்களுக்கு க்ரமமாக 'தர்மம்—அர்த்தம்—காமம்—மோக்ஷம்' என்ற நான்கு புருஷார்த்தங்களில் இச்சையை உண்டுபண்ணி முடிவில் அந்த இச்சையை எல்லாம் வல்ல முருகப்பெருமானிடத்தில் உண்டு பண்ணுகிருள். இச்சை என்ற ஒரு சக்தியானது நம் முள்ளத்தில் எழுகின்றதாதலால்தான் நாம் உயிரினை வைத்துக்கொண்டு சுக துக்கங்களை அனுபவித்து வருகிறோம்.

உள்ளத்தில் எழுகின்ற இச்சையை அடைவதற்கு மூலகாரணமான கர்மாக்களைச் செய்வதற்கு கிரியா சக்தியாகிய தேவயானியே மேலான ஆற்றலை அளிக்கின்ருள். எனவே ஒரே ஒரு சக்தியானது ஒரு ஸமயம் இச்சா சக்தி ரூபத்திலும், மற்ருெரு ஸமயத்தில் கிரியா சக்தி ரூபத்திலும் விளங்கி வருகிறது. பொருளோவெனில் இச்சா சக்தியின் பீஜாக்ஷரமாகிய 'சர' என்பதில் கிரியா சக்தியின் பீஜாக்ஷரமாகிய 'பவ' என்ற இரண்டு அக்ஷரங்களையும் ஐக்யம் செய்து உபாஸிப்பவர்களுடைய உள்ளத்தில் வள்ளி தேவியானவள் பாஸித்துக்கொண்டு,

அரிதாகிய மானிடப் பிறவியில் அடைய வேண்டியது முருகப்பெருமானே ஆவார்

என்ற மெய்யுணர்வை அவர்களுடைய புத்தியில் உரம் பெற்று வளரும்படி செய்கிருள். இதன் மகிமையினுல் சிந்தனையெல்லாம் தர்மத்தையே நாடி நிற்கின்றது. தர்ம சிந்தனையினுல் க்ரியா சக்தியின் பீஜாக்ஷரமாகிய 'பவ' என்ற இரண்டு அக்ஷரங்களில் 'சர' என்ற இச்சா சக்தியின் பீஜாக்ஷரங்களை ஐக்யம் செய்து உபாஸிக்கும்பொழுது தேவயானியானவள், உபாஸிப்பவர்களுடைய புத்தியில்

> வேத விகிதமான ஸத்கர்மாக்களை ஒரு விதமான பலனையும் இச்சிக்காமல் ஈச்வர ஆரா்தனமாக செய்தால், அந்த கர்மாவானது மனதிலுண்டாகும் துன்பங்களைப் போக்கி முடிவில் வேதங்களின் ஞானப் பாகமாகிய உபநிஷத்துகளில் திருவிளையாடல் செய்துகொண்டிருக்கிற முருகப் பெருமானைச் சுட்டிக் காட்டி, அம்முருகனை அடைய வேதங்களில் உள்ள கர்மகாண்டமே அந்தரங்க ஸாதனமாக இருந்து வருகிறது.

என்பதினை ஊர்ஜிதப்படுத்துகிருள்.

இந்த இரண்டு சக்திகளும் ஞான சக்தியாகிய முருகப்பெருமானிடத்தில் அடங்கிவிடுகின்றபடியால் உண்மையில் எல்லா சக்திகளிலும் நிலவி நிற்பது ஞான சக்தியே யாகும்.

எனவே 'எந்தாயும்' என்று சொல்லும்பொழுது 'சரவணபவ' என்ற 'ஷடக்ஷரீ' மஹா மந்திரத்தில் குமரகண்டம் என்று சொல்லப்படும் 'வண' என்ற பீஜாக்ஷரங்கள் 'சர' என்ற இச்சா சக்தியிலும் 'பவ'

என்ற க்ரியா சக்தியிலும் தன்மயபாவத்தை அடைந்து 'வள்ளி—தேவயானி' என்று இரு சக்திகளுக்கும் பேத மென்பதே கடுகளவும்கூட கிடையாது என்பதை எடுத்துக் காட்டுகிறது.

ஆகவே வள்ளி—தேவயானி இருவர்களுக்கும் பேதத்தை கற்பித்து வள்ளி தேவியானவள் தேவயானியைவிட சக்திவாய்ந்தவள் என்றோ, அல்லது தேவயானியானவள் வள்ளிதேவியைவிட சக்திவாய்ந்தவள் என்றோ, அல்லது வள்ளிதேவியின் திருமணம் சாஸ்திர ஸம்மதமாகாதென்றும், தேவயானியின் திருமணம்தான் சாஸ்த்திர ஸம்மதமாகும் என்றும், கேவலம் சாஸ்த்திர ப்ரமாணமில்லாமல் தோன்றியவாறு சொல்லிக்கொண்டு, வள்ளி—தேவயானி இருவர்களுக்கும் பேதபாவத்தைக் கற்பித்துக் கொண்டு இருந்துவருபவர்களெல்லாம் ஒரு காலத்திலும் முருகப்பெருமானின் திருவருளை அடையவே முடியாது என்பதில் ஐயமில்லை.

ஒரே தாயானவள் ஒரு ஸமயம் தன் குழந்தைக்கு அன்னம் ஊட்டி மகிழ்கிறாள். மறுசமயம் குழந்தையை அலங்கரித்து மகிழ்கிறாள். மற்றொரு சமயம் குழந்தையின் மழலைச் சொற்களைக் கேட்டு மகிழ்கிறாள். மற்றொரு சமயம் அன்பினால் இரு கைகளினாலும் வாரியெடுத்து மார்பில் அணைத்துக் கொண்டு உச்சிமோந்து ஆனந்திக்கிறாள். இவ்விதம் பலவிதங்களில்வரும் தாயினிடத்தில் தாரதம்யத்தை எவ்விதம் சொல்ல முடியாதோ அதுபோலவே உலகிற்கெல்லாம் தாயாக முருகப்பெருமான் வள்ளி—தேவியானியென்ற ஸ்வருபத்திலிருந்து வருகிறார்.

எனவே நோயற்ற வாழ்வோடும் குறைவற்ற செல்வத்தோடும் ஜீவகோடிகளை வைக்கும் விஷயத்தில்

வள்ளிதேவியாகவும், முருகப்பெருமானை அடைவதற்கு உள்ள ஆற்றலைத் தரும் விஷயத்தில் தேவயானியாக வும் ஒரே தாயே விளங்கி வருகிறுள். இதனுல் அன்ருே அருணகிரிநாதர்

12 ஆவது பாட்டில் முருகனை **அம்மா** என்று அழைக்கின்ருர்.

தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை

என்று ஔவைத்தாய் கூறியதின் உண்மைப்பொருளை சிந்தித்துப்பாருங்கள்.

**தாய்** என்ற சொல்லிற்கு மேலான சொல்லே இல்லை. தாயானவள் வரம்பில்லாத கருணையையும் அன்பினை யும் கொண்டவள். தாயிற்குமேலான இடமே இல்லை. அதனுல்தானே நாம் தாய்நாடு என்கிருேம்.

உலகிலுள்ள எண்ணற்றகோடி உயிர்களெல்லாம் ஒரே ஸமயத்தில் ஒரே மனதுடன் திரண்டு எழுந்தாலும் தாயின் பெருமையை எடுத்துச் சொல்ல இயலுமோ. மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாத இறைவனை பிடித்து இழுத்துவந்து நம் கண்முன் நிற்கும் மஹா மந்திரமே 'தாய்' என்ற சொல்லாகும். எனவே ப்ரும்மனின் கற் பனைக்கும் அடங்காத அன்பினைக் கொண்டவளே தாய் என்பவள் ஆவாள் அன்ருே.

'தாயை'க் கோயிலாகச் சொல்லி பின்பு தந்தையை சொல்லும்பொழுது

தந்தை சொல் மிக்க மந்திரமில்லை

என்று சொல்கிருர் ஔவைத்தாய். ஏன் தெரியுமா?

'தாய்'என்பதற்குள் ஸகலமும் அடங்கிவிடுகிறது. எனவே 'தாயாகிய கோயிற்குள்' தந்தையானவர்

அடங்கிவிடுவதால் அதாவது சக்தி தத்துவத்திற்குள் சிவ தத்வமானது அடங்கிவிடுவதால் தந்தையின் சொல்லிற்குமேல்மந்திரமே இல்லை. பொருளோவெனில் தாயாகிய கோயிற்குள் இறைவனுக விளங்குகிருர் தந்தை. எனவே தந்தையின் வாக்கிற்குமேல் மந்திரமே இல்லை என்கிருர்.

ஆதலால் இறைவன் தாயாக இருந்து கொண்டு அன்பினையும் தந்தையாக இருந்து கொண்டு அருளினையும் உயிர்களிடத்தில் இடைவிடாமல் பொழிந்து கொண்டிருக்கிருர்.

அன்பினுல் நோயற்ற வாழ்வையும் குறைவற்ற செல்வத்தையும் தந்து நம்முடைய மனத்திலே வரும் துன்பங்களை வேரோடு அறுத்துத் தள்ளி மனதை இன்பமயமாகச் செய்து, அதன் பின் அருளினுல்

சும்மா இரு சொல்லற

என்ற மஹா மந்திரத்தை உபதேசித்தருளி நம்மை முருகப்பெருமானுனவர் தடுத்து ஆட்கொள்கிருர் அன்ருே.

ஆதலால் முருகப்பெருமானே எண்ணற்றகோடி உயிர்களுக்கும் தாயாகவும்தந்தையாகவும் இருக்கின்ற படியால்

எந்தாயும் எனக்கருள் தந்தையும் நீ

என்று சொல்கின்ருர் அருணகிரிநாதர்.

எனவே ஹேமுருகா, நீயே எனக்குத் தாயும்தந்தையுமாக இருக்கிருய். நானேவெனில் வறுமையினுலும் பேராசை பொருமை முதலியவைகளினுலும் கட்டப் பட்டவனுக யிருந்து கொண்டு, ஸதா காலமும் அல்லல்பட்டுக்கொண்டு வேதனையை யுடைய மனதை யுடையவனுகவே இருக்கிறேன்.

கதிர்வேலவனே! உன்னுடைய ஞான வேலினுல் என் துன்பங்களை வற்றடித்து என்னை சிந்தாகுலமற்ற வனுக செய்யமாட்டாயா.

ஹே வேதஸ்வருபனே... உன் பெருமையை நான் எவ்வகையில் போற்றி மகிழ்வேன். ஒரு ஸமயம் குமரனுக வருகிருய். மற்றெரு ஸமயம் பார்வதிபால னுக காட்சியளிக்கிருய். குழந்தையாக வரும் உன்னை வாரி அணைத்து கொள்ளலாம் என்று வந்தால், உடனே நீ வேதபுருஷனுக மாறி மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாத தத்துவமாக ஆகிவிடுகிருய். எனவே உன் ஸ்வரூபம் அதனையறிவது அதிதுர்லபமாகி விடுகிறது.

ஹே முருகா, எப்படியிருந்தால் என்ன? நீயே எனக்குத் தாயும் தந்தையும் ஆவாய். எனவே என்னை சிந்தாகுலமற்றவனுகச் செய்து என்னை ஆட்கொள்வது உன்னுடைய கடமையேயாகும். ஆதலால் இடைவிடா மல் உன்னுடைய அன்பையும் அருளையுமே நான் எனக்கு மேலான பலமாகக் கருதியும் இருக்கிறேன்! அருள்வாய் அப்பனே !



# ஜீவ ப்ரம்ம ஐக்ய நிலையில் ஞானபண்டிதனிடம் மகிழுதல்

## 47



ஆறு றையும்நீத் ததன்மேல் நிலையைப்
பேறு அடியேன் பெறுமா றுளதோ
சீறு வருசூர் சிதைவித் திமையோர்
கூறு உலகங் குளிர்வித் தவனே.

**பதவுரை**

சீறு வரு சூர்-(பாம்பினைப் போல்) சீறிக் கொண்டு போர் செய்ய எதிர்த்து வந்த சூரபத்மாசுரனை, சிதைவித்து-(வேலினால்) அழித்து தள்ளி, இமையோர்-(இமைகொட்டாத) தேவர்களின் கூறு ஆ(க)-பங்காக ஆகும்படியே, உலகம்-(சூரபத்மனால் வெந்த) சுவர்கலோகத்தை, குளிர்வித்தவனே-(இன்பமாகிய அருள் மழையினால்) குளிரும்படி செய்தவனே, ஆறு ஆறையும் நீத்து-முப்பத்தாறு தத்துவங்களையும் நீக்கி, அதன் மேல் நிலையை-அந்த தத்வங்களுக்கு அப்பாற்பட்டு விளங்கும் மேலான அத்வைத பக்தி நிலையை, பேறு ஆ(க)—

பெறுதற்குரிய செல்வமாக, அடியேன்-அடியவணுகிய நான், பெறும் ஆறு-அடையும்படி ஒரு வழியானது, உளதோ-இருக்கின்றதோ.

அத்தகைய மஹாபெருமையுள்ள அத்வைத ஞான பக்தி நிலையை உபதேசித்தருள்வாய் என்பதே பரம தாத்பர்யம்.

**தாத்பர்யம்:**

வேதங்களுடைய சிகரமாகிய உபநிஷத்துகளின் மெய்யுணர்விஞல் ஸதா இன்புற்றிருக்கும் ஞானிகளும் கூட முருகப் பெருமானின் நிஜஸ்வருபத்தை ஒருவர் சொல்லியபடி மற்ருெருவர்சொல்வதில்லை. சிலர்முப்பத்தாறு தத்வங்களுக்கு மேல் முருகப்பெருமான் நிற்கிருர் என்றும், சிலர் 51 தத்வங்களுக்கு மேல் என்றும் சிலர் 96 தத்வங்களுக்கு மேல் என்றும் பலவாருக அனுபவிக்கின்ருர்கள்.

எப்படியிருந்தபோதிலும் 36 தத்வங்களில் ஸகல தத்வங்களும் அடங்கி விட்டதென்றும், அந்த 36 தத்வங்கள் வரையில்தான் அறிவானது நிலவி நிற்கும் என்றும், அதற்குமேல் அறிவானது உணரும் சக்தியை இழந்து இறைவனின் அருளேயே நாடி நிற்கின்றது என்றும் ப்ரத்யக்ஷ அநுபவஸித்தமாக இருப்பதால் முருகப்பெருமானின் திருவருளை அடைய முருகப்பெருமானை,

சீரு வருசூர் சிதைவித் திமையோர்
கூரு உலகங் குளிர்வித்தவனே

என்று புகழ்ந்து அழைத்து,

ஆருறையும் நீத்ததன்மேல் நிலையைப்
பேரு அடியேன் பெறுமாறுளதோ

என்று ப்ரார்த்திக்கின்ருர் அருணகிரிநாதர் இப்பாடலில்.

ஆயிரம் அண்டங்களையும் தன்னுடைய ஆதீனத்தில் வைத்துக் கொண்டிருந்த சூரபத்மாஸுரனே வெனில் முக்கியமாக தேவர்களையே இரவும் பகலும் துன்புறுத்தி வந்தான். தேவர்களுடைய ஸ்வர்க்க லோகத்தை அவர்களிடமிருந்து பிடுங்கி இந்திரன்-வருணன்-ஸோமன்-யமன்-அக்னி - சூர்யன் முதலிய எல்லா தேவர்களையும் தனக்கு பரிசாரகர்களாகயிருக்கும்படி செய்தான். தேவர்களோ வெனில் சூரபத்மனுடைய கொடுமையினல் சுண்ணும்புக்கால்வாயில் விழுந்தவர்போல் தவித்திருந்தார்கள்.

தேவர்களின் அபயக் குரலைக்கேட்டு முருகப்பெருமான்ஸேனுதிபதியாகத்தனதுதிருக்கரத்தில் வேலினைத் தாங்கி போர்க்களத்தில் வந்து நிற்கிருர் என்பதைக் கேட்ட சூரபத்மாஸுரன், படத்தையெடுத்துக்கொண்டு சீறும் பாம்பினைப்போல், முருகப்பெருமானை நோக்கி சீறிக்கொண்டு எதிர்த்து போர்க்களத்தில் அதிபயங்கரமான ரூபத்தில் வந்து நின்ருன்.

ஆனல் சூரபத்மாஸுரனைக் கண்டு குமரன் அஞ்சினுன் இல்லை. தமது வேற்படையினல் சூரனை பலவாறு சிதைத்து சூரனைத் தடுத்து அருளி மயிலாகவும் சேவலாகவும் ஆட்கொண்டார்.

ஆட்கொண்ட சூரபத்மாஸுரனின் உள்ளத்தையே முதன் முதலில் குளிரும்படிச் செய்தார். அதன் பின்பு சுவர்க்கலோகத்தை மீண்டும் இந்திரனிடம் கொடுத்து, இன்பமாகிய அருள் மழையை சுவர்க்க லோகத்தில் பொழிந்து, சூரபத்மாஸுரனுல் வெந்ததா வற்றையும் குளிரும்படி செய்தருளினுர். அடியவர்களிடத்தில் அருள் மழையைப் பொழியும் குமரனின் கருணையே முக்தியாகிய பேரின்பத்தை அளிக்க சாமர்த்திய முள்ளதாக விளங்குகிறதன்ருே.

எனவே அகண்டானந்தப் பொருளாய் எல்லா தத்வங்களையும் கடந்து நிற்கின்றது முருகப்பெருமானின் உண்மையான நிலை. இந்நிலையே 'அத்வைத நிலை' என்பதாகும். வேதங்களுடைய பரமதாத்பர்யமே அத்வைதத்வத்தில்தான். எந்த நிலையை அடைந்தால்

ந புனராவர்த்ததே

என்று வேதம் போதிக்கின்றதோ அந்த நிலையே அத்வைத நிலையாகும். இந்த அத்வைத நிலையே 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' நான் ப்ரும்மமாக இருக்கிறேன் என்ற நிலையாகும். இந்த நிலையே முருகப்பெருமானுடைய ஸ்வரூபமாகும்.

எனவே பரம்பொருளாகிய முருகப்பெருமானைக் காட்டிலும் வேறான வஸ்து ஒன்றுமே கிடையாது. ஸகல தத்வங்களும் முருகனிடத்தில் கல்பிதமேயாகும். கல்பிதமானதத்துவங்களை மெய்யென்று அனுபவித்து வரும் வரையில் அந்த தத்துவங்கள் மெய்யாகவே விளங்கிவரும். அவ்விதம் கல்பனையினால் மெய்போல் அனுபவித்துவரும் தத்துவங்கள் எண்ணற்றவைகள். இவைகளிலிருந்து முக்கியமான முப்தாறு தத்துவங்களை சுட்டிக்காட்டி இந்த தத்துவங்களெல்லாம் 'அறிவானது ஆத்மாவில் லயத்தையடையும்போது, தானாகவே அழிந்துபோய்விடுகிறது என்பதை போதித்து, அந்த 36 தத்வங்களிற்கு மேலான நிலையே முருகப் பெருமானுடைய ஸ்வரூபமாகுமென்றும் அதுவே பெறுதற்குரிய மேலான செல்வமென்றும் சுட்டிக் காட்டி போதிக்கின்றார் அருணகிரிநாதர்,

ஆறாறையும் நீத் ததன்மேல் நிலையை

என்பதினால்.

ஆக முப்பத்தாறு தத்துவங்களோவெனில்

ப்ருத்வீ-அப்பு-தேஜஸ் - வாயு-ஆகாசம் ஆகிய பஞ்ச மஹாபூதங்கள்.

கந்தம்-ரஸம்-ரூபம்-ஸ்பர்சம் - சப்தம் என்று சொல்லப்படும் பஞ்சபூதங்களின் குணங்களாகிய தன் மாத்திரைகள்.

கண்-காது-நாக்கு-மூக்கு-மெய் என்று சொல்லப்படும் பஞ்ச ஞானேந்திரியங்கள்.

வாக்கு-பாணி-பாதம்–பாயு-உபஸ்தம் ஆகிய ஐந்து கர்மேந்திரியங்கள்.

மனம்-புத்தி-சித்தம்-அகங்காரம் ஆகிய அந்தக் கரணங்கள் நான்கு.

காலம்-நியதி-கலை - வித்யை - மாயை ராகம்-புருஷன் என்கிற ஏழு வகையான வித்யாதத்துவங்கள்.

சுத்த வித்தை-ஈச்வர தத்துவம்-சாதாக்கிய தத்துவம்-சக்தி தத்துவம்-சிவதத்துவம் ஆகிய ஐந்து சிவ தத்துவங்கள்.

எனவே 'ஆறு ஆறையும்' முப்பத்தாறு தத்துவங்கள் என்று கொள்ளும் பொழுது,

| | | |
|---|---|---|
| பஞ்சமஹாபூதங்கள் | — | 5 |
| தன்மாத்திரைகள் | — | 5 |
| ஞானேந்திரியம் | — | 5 |
| கர்மேந்திரியம் | — | 5 |
| அந்தக்கரணங்கள் | — | 4 |
| வித்யாதத்துவங்கள் | — | 7 |
| சிவதத்துவங்கள் | — | 5 |
| | | 36 |

ஆக தத்துவங்கள் முப்பத்தாறு ஆகிறது. இந்த முப்பத்தாறு தத்துவங்களின் மேன் நிலையில் ஜீவவேச்வர ஐக்ய நிலையை போதித்தாலும், ஐக்கிய நிலையில் ஐக்கிய ஞானம் இருந்து வருகிறதென்று போதிப்பதால், அந்நிலையையும் மேலான நிலையாகிய முக்தி நிலையென்று சொல்ல முடியாது. தவிர அந்த நிலையை மேலான நிலையென்று வேதங்களும் போதிப்பதில்லை. எனவே,

ஆறு ஆறையும் நீத்து அதன் மேல் நிலையை

என்பதற்குப் பொதுவாக ஆறு ஆறையும் என்பதற்கு 36 தத்துவங்கள் என்று அர்த்தம் வெளிப்பட்டாலும் கூட, யதார்த்த தசையில் ஆறு ஆறையும் என்பதினுல் உபநிஷத்தின் பல வாக்கியமாகிய,

அஹம்ப்ரும்மாஸ்மி

அதாவது நான் ப்ரம்மமாக இருக்கிறேன் என்ற மேலான பரப்ரும்ம நிலையையே போதிக்கின்ருர்.

எனவே ஆறு ஆறையும் நீத்து என்பதின் உண்மைப் பொருளோவெனில்,

ஆறு=அதாவது மூலாதாரம் - ஸ்வாதிஷ்டானம்-மணிபூரகம் - அநாஹதம்-விசுத்தி-ஆக்ஞை-

என்று சொல்லப்படும் ஆறு ஆதார சக்ரங்களில்

ஆறையும் அடங்கியுள்ள ப்ருத்வி - அப்பு-தேஜஸ்-வாயு-ஆகாசம்-மனதத்துவம்

என்ற ஆறு தத்துவங்களையும், அப்படியே அதை யொட்டியுள்ள ஸகல தத்துவங்களையும்

நீத்து=அதாவது கடந்து

அதன் மேன் நிலையை அதற்கு மேலான நிலையை,

என்பதேயாகும்.

இந்த சரீரத்திற்குள் விளங்கிவருகிற ஸுஷும்ன நாடிக்குள் மூலாதாரம்-ஸ்வாதிஷ்டானம்-மணிபூரகம்-அநாஹதம்-விசுத்தி-ஆக்ஞை என்று பாஸித்துவருகிற ஆறு ஆதார சக்ரங்களையும், சாஸ்திரமானது ப்ருத்வி-அக்னி-ஜலம்-வாயு-ஆகாசம்-மனஸ் என்ற தத்துவங் களாக போதிக்கின்றன.

ஆதலால் மூலாதார சக்ரத்தில் 'ப்ருத்வி' தத்வ மானது 'கந்த' தன்மாத்ரையாகவும், மணி பூரக சக்ரத்தில் 'ஜல' தத்வமானது 'ரஸ' தன்மாத்ரையாக வும், அதுபோலவே ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் 'அக்னி' தத்வமானது 'ரூப' தன்மாத்திரையாகவும், அநாஹத சக்ரத்தில் 'வாயு' தத்வமானது 'ஸ்பர்ச' தன்மாத் திரையாகவும், அப்படியே 'விசுத்தி' சக்ரத்தில் 'ஆகாச' தத்வமானது 'சப்த' தன்மாத்திரையாகவும், அதுபோலவே் இரண்டு புருவங்களுடைய நடுப்ர தேசத்திலுள்ள 'ஆக்ஞா' சக்ரத்தில் 'மனஸ்' தத்வ மானது விளங்கி வருகிறது.

மனதாகிய தத்வத்தில் கண்-காது-நாக்கு-மூக்கு-மெய் ஆகிய ஐந்து ஞானேந்திரியங்களும், வாக்கு-பாணி-பாதம்-பாயு-உபஸ்தம் ஆகிய ஐந்து கர்மேந் திரியங்களும் அப்படியே பலவித நிலைகளையடைகிற அந்தக்கரணமும் அடங்கி விடுகின்றன.

எனவே ஜீவனானவன் ஸ்தூலம் - ஸுக்ஷ்மம்-காரணம் என்ற மூன்று சரீரங்களைத் தாங்கிக்கொண்டு ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கி கிடக்கிறான்.

ப்ருத்வி–அப்பு–தேஜஸ்–வாயு-ஆ கா ச ம்-என்ற ஐந்து பூதங்களும் சேர்ந்து உடலாக ஆகிய ப்ரத்யக்ஷ மான சரீரத்தைதான் ஸ்தூல சரீரமென்று அறிய வேண்டும்.

அப்படியே ஞானேந்திரிய பஞ்சகம்,–கர்மேந்திரிய பஞ்சகம்-பஞ்சப் ப்ரா ண ன்-ம ன து-புத்தி-சித்தம் அஹங்காரம்-ஆகிய இந்த 19 தத்வங்களும் சேர்ந் ததே ஸூக்ஷ்ம சரீரமாகும்.

அதுபோலவே 'நான்' என்ற சப்தத்திஞல் போதிக் கப்படும் ஆத்மாவினுடைய,மெய்ப்பொருளே தான் அறி யாத அஞ்ஞான தன்மையை 'காரண சரீரமென்றும்' சாஸ்திரங்கள் போதிக்கின்றன.

இவ்விதம் மூன்று சரீரங்களுடைய சேர்க்கையால்த் தான் ஜீவனுனவன் ஸகலவிதமான துன்பங்களே அனுபவித்துக்கொண்டு பிறந்துகொண்டும் இறந்து கொண்டும் இருக்கிருன்.

ஆனுல் யதார்த்த நிலேயில் இந்த ஜீவனுனவன் நிஷ்கள பரசிவம் என்ற பரப்ரும்மத்தைக்காட்டிலும் வேறுபட்டவன் அல்ல. ஆனுல் அனுபவத்திலேயோ ஜீவனுனவன் 'தான்வேறு–ப்ரம்மம்வேறு' என்று தோன்றும்படியான நிலேயிலேயேயிருந்து வருகிருன். இதற்குக் காரணமோ வெனில் மேல் கூறிய மூன்று சரீரங்களின் ஸம்பந்தமேயாகும்.

மூன்று சரீரங்களில் இருந்து 'நான்' என்பவனே பிரித்துப்பார்த்தால்,ஜீவனுனவன் பரப்ரும்மமாகவே பிரகாசித்து வருவான். ஆத்மஞானத்திஞல்தான் ஜீவனுனவன் ஆறு ஆறையும் நீத்து அதன்மேல் நிலேயை அடைய முடியும். இந்த உண்மையை ஆதி சங்கரரும்,

ஞானவிஹீன: ஸர்வமதேன
முக்திம் ந பஜதி ஜன்மசதேன

என்பதினுலும் அதாவது எந்த மதத்தாலும் ஆத்ம ஞானமில்லாதவன் நூறுப் பிறவிகள் எடுத்தாலும் பாரமார்த்திக முக்தியை அடைகிறதில்லை என்கிருர். அதுபோலவே கீதாபாஷ்யத்தில்,

தஸ்மாத் கேவலாத் ஏவஞாஞத்
மோக்ஷ: இதி ஏஷ: அர்த்த: நிஸ்சித:
கீதாஸு ஸர்வோப நிஷஸ்த்து ச

என்று பாஷ்யம் செய்தருளியிருக்கிருர். இதன் மெய்ப் பொருளோவெனில்,

"ஆகவே, ஞானம் ஒன்றிஞலேயே
மோக்ஷம் என்ற தத்துவமானது பகவத்
கீதையிலும் எல்லா உபநிஷத்துகளிலும்
ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது"

என்பதேயாகும்.

ஆஞல் ஜீவஞேவெனில் ஆத்மஞானத்தையடைய யத்னம் செய்வதில்லை. மனதிற்கு அடிமையாகி 'நான்' என்பவனுடைய ஸ்வருபத்தை அறியாத வஞகவே ஆகிவிடுகிருன்.

ஆத்மஞானமில்லாத ஜீவனேயே ஸகல தத்துவங் களும் கட்டுப்படுத்துகிறது.

அந்த தத்துவங்களோவெனில் ஸத்வகுணம்—ரஜோகுணம்—தமோகுணம் ஆகிய மூன்று குணங்கள். அப்படியே ஜாக்ரம்-ஸ்வப்னம்—ஸுக்ஷுப்தி—என்ற மூன்று அவஸ்தைகள். அதுபோலவே கௌமாரம்—யௌவனம்—வார்த்திக்யம் என்ற மூன்று தேஹ

அவஸ்தைகள். அதுபோலவே உண்டாகுதல்-அழிதல்-உண்டாகாமலிருத்தல் - அ ழி யா ம லிருத்தல்-இருக்கிறது-வளர்கிறது-குறைவது-நீளு வது-பி ரி ப் ப து-ஒன்று இரண்டு என்று நிற்பது-சேர்க்கையின் பிரிவினுல் நிலையின்நாசம்-பெரிது-சிறிது-ப்ரவஹிப்பது-நிற்பது-பறப்பது-குடிப்பது-ஸம்ஸ்காரம்-ஸ்நேகம்-அப்படியே அன்னமயம் ப்ராணமயம் மனோமயம் விக்ஞானமயம் ஆனந்தமயம் என்ற பஞ்சகோசங்கள். ஆத்யாத்மிகம்-ஆதிதெய்விகம்-ஆதிபௌதிகம் என்ற தாபத்ரயங்கள்

த்வக்- அ ஸ் ரு க் - மாம்ஸம் – மே த ஸ்--மஜ்ஜா--அஸ்தி-சுக்லம் ஆகிய ஏழு தாதுக்கள்.

ப் ரா ண ன்- அபானன்-வ்யானன்- உ தா ன ன்-ஸமானன்-என்னும் பஞ்ச ப்ராணன்கள். இதுவெல்லாம் போதாதென்று, இல்லாமலிருப்பதை இருப்பது போலவே காட்டுகிற மாயாதத்வம். இன்னும் இது போலவே எண்ணற்ற குணங்களும் ஜீவனை ஆட்டி வைக்கிறது.

எனவே ஜாக்ரா அவஸ்தையிலிருக்கும் ஜீவனுன வன் ஸ்வப்ன அவஸ்தையில் அனுபவிக்கப்போவதை சொல்ல முடியாத நிலையில் இருக்கிருன். ஸ்வப்ன அவஸ்தையில் ஸத்யம்போல் அனுபவித்ததை ஜாக்ரா அவஸ்தையில் பொய்யாகக் காண்கிருன்.

அதுபோலவே ஸுஷுப்தி அவஸ்தையிலிருந்து மீண்டும் ஜாக்ரா அவஸ்தையை அடைகிருன் ஜீவன். ஒவ்வொரு அவஸ்தையிலும் ஜீவனுனவன் தன்மயபாவத்தையே அடைகிருன். ஆயினும் ஸ்வப்னத்திலிருந்து ஜாக்ரா அவஸ்தையை அடைந்த ஜீவனுனவன் 'நான் ஸ்வப்பனம் கண்டேன்' என்று

சொல்லுகின்றபடியால், ஸ்வப்பன அவஸ்தையானது பொய்யென்றும், அந்த ஸ்வப்பன அவஸ்தையில் ஜீவனே சாக்ஷியாகவும் இருந்தான் என்பது ஸித்தாந்த மாக விளங்குகின்றபடியால் அவஸ்தையானது நாசம் அடையும்பொழுது ஜீவனானவன் நாசத்தையடைகிற தில்லை யென்பது ஸித்தாந்தமாக வெளியாகுகிறது. அதனால்தான்,

ஆறு ஆறையும் நீத்து அதன்மேல் நிலையை

யாசிக்கின்றார் அருணகிரியார்.

எனவே யதார்த்த நிலையில் ஜீவனானவன் பரப் ரும்மமாகவேயிருந்தாலும் மாயையில் ஸம்பந்தப்பட்ட ஜீவனானவன் தன்னை ப்ரும்மத்திற்கு வேறுபட்டவனா கவே எண்ணுகிறான். தவிர பஞ்ச பூதங்களினால் செய்யப்பட்ட ஸ்தூல சரீரத்தில் இருந்துவரும் ஜீவனா னவன், அந்த சரீரத்திற்கு கேவலம் ஸாக்ஷியாக மட்டும் இருந்த போதிலும்கூட, மாயையின் ஸம்பந் தத்தின் காரணத்தினால், சரீரத்தை யொட்டியுள்ள ஸகல தத்வங்களின் தன்மாத்ரைகளாகிய குணங் களினால் விகாரத்தையடைந்து, அந்த அந்த தத்துவங் களிலிருந்து ‘நான்’ என்பவனைப் பிரித்துப் பார்க்க சக்தியில்லாத காரணத்தினால் ‘நான்’ என்பவனைக் காட்டிலும் ‘ஆத்மா’ என்ற சப்தத்தினால், சொல்லப் படும் ப்ரம்மமானது வேறுபட்டதேயாகும் என்ற ஸித் தாந்தத்திற்கு வந்து, முடிவில் அந்த அந்த தத்வங் களைத்தாண்டி இறைவனை உபாஸனைசெய்ய சக்தியற்ற வனாய் அந்த அந்த தத்வங்களின் ஸ்வருபமே இறைவன் ஆகிறான் என்ற முடிவான எண்ணத்தையடைந்து அதன் காரணமாக அல்ப சுகத்தையே ஜீவனானவன் அனுபவிக்கிறான். எனவே,

ஆறு ஆறையும் நீத்து

என்பது

நேதி நேதி

என்ற உபநிஷத் வாக்கியத்தின் மெய்ப்பொருளே யாகும்.

இது ப்ரம்மம் இல்லை---இது ப்ரம்மம் இல்லை

என்று சொல்லிற்கு விஷயமாகிற வாக்கையெல்லாம் பொய்யென்று வேதமானது தள்ளி விடுகிறது. ஆதலால்,

நீத்து

என்ற சொல்லானது, சொல்லப்படும் தத்துவங்களை யெல்லாம் ப்ரம்மமாக சொல்ல முடியாதென்றும், அந்த சொல்லிற்கு விஷயமாகின்ற தத்துவங் களிலேயே ஜீவனானவன் கட்டுப்பட்டு, அந்த தத்துவத் திற்கு மேலான தத்துவம்இருக்கிறது என்பதை உணர யத்னம் செய்யாமலேயே அந்த தத்துவத்துடன் முடிவைக் காண்கிறான் என்பதையும் எடுத்துக்காட்டி, அனைத்தும் அழியக்கூடிய தத்துவங்களேயாகும் யென்பதை நிர்தாரணம் செய்து பாட்டில்,

அதன் மேல் நிலையை

என்பதினால் முருகப்பெருமானின் ஸ்வருபத்தைசுட்டிக் காட்டிப் போதிக்கின்றார். தவிர 'அதன் மேல் நிலையை' என்று சொன்னதினால் சொல்லப்படுகின்ற நிலைகளெல் லாம் பொய் யென்பதே ஸித்தாந்தமாகிறது. எனவே எந்த ஒரு நிலையானது தேசத்தாலோ, காலத்தாலோ வஸ்துவினாலோ பரிச்சேதம் பண்ணப்பட்டு சொல்லப்

படுகின்றதோ, அந்த நிலையானது மேலான நிலையாக ஆகவே முடியாது.

ஆதலால் தேசத்தாலும் காலத்தாலும் வஸ்துவினாலும் எந்த ஒரு நிலையானது பரிச்சேதம் செய்ய முடியாமல் இருந்து வருகின்றதோ, அந்த நிரதிசயமான நிலையையே வேதமானது,

ஸத்யம் ஞானம் அநந்தம் ப்ரஹ்ம

என்ற வாக்கியத்தினால் எல்லாவற்றிற்கும் மேலான நிலை என்று ஸித்தாந்தம் செய்கிறது.

இவ்விதம் வஸ்துவினாலோ, காலத்தினாலோ தேசத்தினாலோ பரிச்சேதமற்றதாயும், ஸ்வயம் பிரகாச சிதேக ரஸமாயும் உள்ள பொருளே பரப்ரம்மம் என்றும், அப்பரப்ரம்ம நிலையே எல்லாவற்றிற்கும் மேலான நிலையாகும்.

எத்தனையோ கோடி ஜன்மங்களில் செய்த புண்யத்தினால்தான் அத்தகைய நிலையை அடையமுடியும்.

எனவே 'ஆறு ஆறையும் நீத்து' என்பதினால் மனிதனுடைய சரீரத்திலுள்ள மூலாதாரம்-ஸ்வாதிஷ்டானம்-மணிபூரகம்- அநாஹதம்-விசுத்தி-ஆக்ஞை- என்ற ஆறு சக்ரங்களையும் கடந்து, அதற்குமேல் ப்ரம்ம க்ரந்தி, விஷ்ணுக்ரந்தி, ருத்ர க்ரந்தி என்ற மூன்று க்ரந்திகளையும் கடந்து அதற்குமேல்லுள்ள ப்ரம்மரந்திரமாகிய சிரஸிற்குள் விளங்கிவரும் ஆதார சக்ரமே, ஸகஸ்ரகமலம் ஆகும். இந்த ஆயிரம் தளம் முள்ள ஸகஸ்ரகமலம் என்ற ஸ்தானத்திற்கே சந்திர மண்டலம் என்று பெயர். இந்த ஸ்தானத்திற்கு மேலான நிலையே இல்லை. அதனால்த்தான்,

அதன் மேல் நிலையை பேறு ஆக

என்று சொல்கிருர் அருணகிரிநாதர்.

இத்தகைய மஹிமையுள்ள ஸகஸ்ரகமலம் என்று சொல்லப்படும் சந்தரமண்டலத்தில் திருவிளேயாடல் செய்து வருகிற முருகப்பெருமானே 'ஆத்மாவைக் காட்டிலும் வேருன வஸ்துவல்ல' என்று போதிக் கின்ற,

ப்ரக்ஞானம் ப்ரஹ்ம-அயமாத்மா

ப்ரஹ்ம-தத்வமஸி-அஹம் ப்ரஹ்மாஸ்மி

என்ற நான்கு மஹா வாக்கியங்களைக் கொண்டு, அந்த முருகப்பெருமானே (அஹம்) 'நான்' என்ற சப்தத் திஞல் போதிக்கப்படுகின்ற மெய்ப்பொருள் என்ற தத்வத்தை நிர்தாரணம் செய்துகொண்டு உபாஸித்து வரும் புண்ணியவான்கள் த்வாதசாந்தம்-ப்ரம்மரந் திரம்-ஸகஸ்ரகமலம்-என்றும் வர்ணிக்கப்படும் ஞான மண்டலமாகிய சந்திரமண்டலத்தில், நிஷ்களபரசிவ மாயும், நிரஞ்ஜனமாயும், த்ரிகாலபரிச்சேத சூன்ய மாயும்-குணதீதமாயும்- அத்விதீதமாயும்-கார்யகாரண விபாக ஞானமற்றதாயும்-சித்தாயும்-ஸத்தாயும்- ஆனந்தமயமாயும்-சாந்த ஸ்வருபமாயும்-அகண்ட ஞானமயமாயும்-கேவலம் ஸ்வப்ரகாச சிதேகரஸ மாயும்-ஆதியும் அந்தமுமில்லாத அருட்பெருஞ் ஜோதியாயும்-மங்கள ஸ்வருபமாயும்-ஸகலத்திற்கும் சாக்ஷி பூதமாயுமுள்ள பரஞ்ஜோதிஸ் ஸ்வருபமான முருகபெருமானிடத்தில் 'நான்—நீ' என்ற பேத ஞான மில்லமால் லயத்தை அடைந்து விடுகிருர்கள். அதாவது பரப்ரம்மமாகவே ஆகி விடுகிருர்கள்.

எனவே ஜீவனுனவன் முன்னுலும், பரப்ரம்ம மாகவே இருந்து வருகிருன். நிகழ்காலத்திலும் பரப்

ரம்மமாகவே இருந்து வருகிறுன் வருங்காலத்திலும் பரப்ரம்மமாகவே இருந்துவருகிறுன். இவ்விதம் காலத் திரயத்திலும் மாறுபடாமலிருக்கிற நிலையையே,

அதன் மேல் நிலையை

என்று சொல்கிறுர் அருணகிரிநாதர்.

எனவே ஆத்மதத்துவம் ஒன்றிஞல்தான் முருகப் பெருமான் ஐக்யபாவத்தைஅடைவார் யென்பதிஞலும், ஆத்மதத்துவமே முருகப்பெருமாஞக யிருப்பதாலும், ஆத்மதத்வத்திற்கு வேருக போதிக்கப்படுகின்ற வேருன தத்வங்களெல்லாம் வ்யவகார தசையில் ஸத்யமே தவிர யதார்த்த தசையில் கானல் நீரினைப்போல் பொய்யேயாகும். ஆதலால் 'தத்வமஸி' என்ற மஹா வாக்கியத்தில் அந்தரங்கமாகவுள்ள ராஜயோகத்தை ஸ்வானுபூதியில் அனுஷ்டித்துவரும் ஞானிகளுடைய விஷயத்தில் முருகபெருமாஞகிய பரம்பொருள் ஆத்ம தத்வமாகவேதான் விளங்கிவருகிறுர். எனவே அவர்கள் ஸகலதத்வங்களையும் ஆத்மாவில் கல்பிதமாகவே அனுபவிக்கிறுர்கள். காரணமோவெனில் ப்ருதிவீதத்வத்திலிருந்து தொடங்கி சப்தப்ரபஞ்சமாகிய தத்வம் வரையிலுள்ள தத்வங்களிலெல்லாம் அவர்கள் இறைவனை அடங்கியிருப்பதாக பார்க்காமல், அந்த தத்வங்களையெல்லாம் அவர்கள் இறைவனிடத்தில் கல்பிதமாகவே பார்க்கிறுர்கள். அதன்பிறகு அவர்கள் 'ஸோஹம்' என்ற உபாஸனையிஞல் முருகனையே ஆத்மாவாகவும்-ஆத்மாவையே முருகஞகவும் அனுபவிக்கிறுர்கள்.

எனவே அறிவிற்கு விஷயமாகும் ஸகலதத்வங்களும் எந்த முருகனிடத்தில் லயத்தையடைந்து, அதற்குக் காரணமான அறிவும் அறிவதற்கு விஷய

மில்லாமல் முருகனிடத்திலேயே லயத்தையடை கிறதோ, அந்தப் பரம்பொருளாகிய முருகப்பெரு மானுனவர் அறிவு-அறியப்படும்பொருள்—அறிகிறவன் என்ற நிலையை யெல்லாம்தாண்டி நிற்பதாலும், அந்த பரம்பொருளாகிய முருகப்பெருமானே ஆத்மாவாக அனுபவிப்பதைக்காட்டிலும் மேலான நிலையே இல்லை. இதனுலே ஆத்ம லாபத்தைக் காட்டிலும் மேலான லாபமே இல்லை என்று வேதமானது போதிக்கின்றது. எனவே,

தன்னந் தனி நின்றது தான் அறிய
இன்னம் ஒருவர் கிசைவிப்பதுவோ

என்ற 49 வது அநுபூதியில் இந்தப் பாட்டில்

ஆறு ஆறையும் நீத்து அதன்மேல் நிலையை

என்பதிலுள்ள;

அதன் மேல் நிலையின்

பெருமையை சொல்லி ஆனந்திக்கிருர் அன்ருே. அந்த பாட்டில் அதன் பெருமையை அனுபவிப்போம்.

எனவே ஹே முருகா! உன்னுடைய மேலான நிலையை நான் அடைந்து என்றுதான் அதையே மேலான பொக்கிஷமாக அடையப் போகிறேனே தெரியவில்லை. என்னிடத்தில் அத்தகைய பாக்யா திசயமானது சிறிதும் இல்லையே ஐயனே.

ஞானிகளும் யோகிகளும் பக்தர்களும் அடியார் களும் தங்களுடைய உள்ளத்தில் இடைவிடாமல் வைத்துப் போற்றிவரும் ஞானக்கடல் அன்ருே நீ.

உன்னுடைய மஹிமையானது இவ்விதமிருக்க, அந்நிலையை அடைய அடியேனுல் முடியுமோ?

நான் எப்பேர்ப்பட்டவன் தெரியுமா? மிகவும் கொடியவன். கொடியவனுகிய நான் எவ்விதம்

மேலான முக்தி நிலையை அடையமுடியும் ஐயனே. உனது மேலான நிலையை இவ்வுலகில் யார் அடைந்தாலும் அதை அடியேன் அடையமுடியாது. அத்தகைய பாதகன் நான். எனவே முருகனிடம் திருப்புகழில்,

மாப்பாதகனும் அடியேனை நின்
அருளாலே பார்ப்பாயலையோ!
அடியாரோடு சேர்ப்பாயலையோ!
உனதாள் அருள் கூர்ப்பாயலையோ!

என்று உள்ளம் உருகி பாடுகின்றார்.

பொருளோவெனில், முருகா! என்போன்ற கொடியவர்கள் உன்னுடைய மேலான நிலையை எவ்விதம் அடையமுடியும் என்பதேயாகும்.

குமரா! பாம்பினைப்போல் சீறிவந்த சூரனை உன்னுடைய வேலினால் சிதைத்துத் தள்ளி முதன் முதல் அந்த சூரனைத்தானே நீ ஆட்கொண்டருளினாய். அதன் பிறகு அல்லவா தேவர்களின் உள்ளங்களையும்லோகத்தையும் குளிர்வித்தாய்.

நான் கொடியவன் தான். இருந்தாலும் சூரனைவிட கொடியவன் அல்லவே.

தடுத்து ஆட்கொள்ளும் தனித் தெய்வமல்லவா நீ. ஆதலால் இவ்விதம் சூரனின் ஆணவத்தை அழித்து, அவனால் அபஹரிக்கப்பட்ட தேவலோகத்தை அவனிடமிருந்து பிடுங்கி மீண்டும் தேவர்களிடம் கொடுத்து தேவலோகத்தை குளிர்வித்தாயோ, அதுபோலவே ஹே முருகா! காமம்-க்ரோதம்-லோபம்-மோகம்-மதம்-மாத்ஸர்யம் ஆகிய அரக்கர்கள் என்னுடைய ஆத்ம ஞானத்தை என்னிடமிருந்து அபஹரித்து சென்று விட்டார்கள். இதனால் நான் மிகவும் கொடியவனாகவே

இருக்கின்றேன். உனது பெருமை தெரியாமல் இது வரையில் காலத்தை நயனம் செய்துவிட்டேன்.

குமரா! என்னிடம் அஹங்காரமும் மமகாரமும் இருக்கும் வரையில் நான் உன்னை அடையமுடியாது. என்னே உன்னுடைய திருக்கையில் யிருக்கும் ஞான வேலினால் என்னுடைய ஆணவத்தை சிதைத்து தள்ளி என்னுடைய உள்ளத்தை நிர்மலமாக செய்து, அதன் மூலமாக அத்வைத ஞானத்தினால் உன்னையடையும் படி செய்தருள்வாய் ஐயனே.

உன்னால் முடியாததொன்று உண்டோ. கருணைக் கடலே! அன்னியதேவதைகள் எதிரிகளைக் கொன்று மண்ணோடு மண்ணாக்கிவிடுகிறார்கள். ஆனால் நீயோ வெனில் சூரனைக் கொல்லாமல் அவனுடைய ஆண வத்தை மட்டும் கொன்று அவனைத் தடுத்து ஆட் கொண்டருளினாயே. குமரா! உன்னுடைய மாருத கருணையின் பெருக்கை நான் என்னவென்று சொல்லி போற்றுவேன்.

ஞானக் கடலே! உன்னுடைய மேலான நிலையை என்றுதான் நான் மேலான செல்வமாகக் கொள்ளப் போகிறேனோ? உலகிலுள்ள ஒவ்வொரு உயிர்களின் உள்ளங்களையும் குளிரும்படி செய்பவன் நீ அல்லவா. அத்வைத ஞானத்தை அடையும் வரையில் என்னு டைய உள்ளமானது குளிர்ந்ததாக ஆகாது ஐயனே.

நீவே றெனாதிருக்க நான்வே றெனாதிருக்க
நேராக வாழ்வதற்குன் அருள்கூர

(திருப்புகழ்)

என்ற மேலான நிலையை நான் அடையும்படியுள்ள ஒரு பாக்யாதிசயத்தை எப்பொழுது எனக்குத் தந்தருளப் போகிறாயோ. தெரியவில்லையே ஐயனே.

குமரா, உன்னுடைய அருள் ஒன்றையே பலமாக கருதிவரும் என்னைக் கைவிட்டுவிடாதே அப்பனே. கூறும் அடியார்கள் வினைகளை தீர்த்துவைக்கும் அருட் பெருங்கடல் அன்ருே நீ.

நீயே பெருஞ் செல்வமாவாய். உன்னை அடைவதே பெரும் செல்வமாகும். செல்வக் குமரா, அசுரர்களுக் கும் நீயே செல்வமாய் இருக்கிருய். தேவர்களுக்கும் நீயே செல்வமாய் இருக்கிருய். மும்மூர்த்திகளுக்கும் நீயே செல்வமாய் இருக்கிருய். எண்ணற்ற கோடான கோடி உயிர்களுக்கும் நீயே செல்வமாய் இருக்கிருய். இத்தகைய செல்வமாகிய உன்னைக் காட்டிலும் மேலான தெய்வமே இல்லை. உன்னை நான் என்றுதான் மேலான செல்வமாக அடையப்போகிறேனே தெரிய வில்லையே. ஆறுபடை வீட்டினையுடையோனே! என்னை ஆட்கொண்டு அருள்வாய் அப்பனே.



# அத்வைதாநுபூதியில் அடியார்களிடத்தில் கலந்து மகிழுதல்

## 48



அறிவொன் றறநின் றறிவார் அறிவிற்
பிறிவொன் றறநின்ற பிரான் அலையோ
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும் வேலவனே.

### பதவுரை

செறிவு அற-தன்னைக் காட்டிலும் வேறான தேகம் பிரபஞ்சம் இவற்றில் வைத்திருக்கும் அகங்கார மமகாரங்கள் அடியோடு அழிந்து போக, ஒன்றுவந்து-உன்னுடைய அருளாகிய அத்வைத ஞானம் வர, இருள் சிதைய-அம்மமகார அகங்காரங்களுக்கு மூலகாரணமான அஞ்ஞானம் எனும் இருட்டு அழிந்துபோக, வெறி வென்றவரோடு-(அவ்விதம் அத்வைத ஞானத்தினல்) பஞ்ச இந்திரியங்களினல் உண்டாகிற சுகத்தை வெறுத்து வென்றவர்களாகிய ஞானிகளோடு, உறும் வேலவனே-பேதமற்று ஒன்ருேடு ஒன்ருய் அத்வைத

மாக விளங்கும் வேலவனே, அறிவு-மண்ணேடு மண்ணுய் அழியும் தேகத்தையே 'நான்' என்று எண்ணியனுபவித்து வரும் பேதஞானமாகிய அறிவு, ஒன்று அற-(அந்த பேத ஞானமாகிய அறிவே ப்ரும்மநிலையை மறைத்து வருவதால் அந்த பேதஞானமாகிய அறிவு ஒன்றே அடியோடு அழியும் வண்ணம், நின்று—உன்னுடைய திருவருளைப் பெற்று பேத ஞானத்தைப் போக்கடித்துக் கொண்டு அத்வைத நிலையில் உன்னை அனுபவித்துக்கொண்டு நின்று வருகிற, அறிவார்—(அத்வைத பொருளாக உன்னை உணர்ந்து அனுபவித்து வருகிற) ஞானிகளின், அறிவில்—புத்தியில் அதாவது அறிவி னுள்ளே, பிறிவு ஒன்று அற நின்ற-பேதபாவமாகிய அறிவு ஒன்று அடியோடு இல்லாமல் நிற்கின்ற அதாவது ஜீவன்—ஈச்வரன் என்ற பேதமற்று ஒரே பரப்ரும்ம நிலையில் நின்ற, பிரான்-ஞானக் கடவுள், அலையோ—நீ அல்லவா.

**தாத்பர்யம்:**

இந்தப் ப்ரபஞ்சமானது பொய்யாக யிருந்த போதிலும், ப்ரபஞ்சத்தை ஸத்யமாகவே அனுபவிக் கிறாகள. ஏனெனில் இந்தப் பிரபஞ்சத்தினுடைய இருப்பை ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கிறார்கள். அனுப விக்கும் ஜகத்தை வ்யஷ்டியாகவும் ஸமஷ்டியாகவும் பிரித்து பார்க்கும்பொழுது, குடம், படம், வீடு,தேஹம் என்று தனித்தனியாக பிரித்து வகுக்கப்படும் ப்ரபஞ் சங்களெல்லாம் வ்யஷ்டி ஸ்வருபமாகவே காணப்படு கின்றன. பொருள்களை பாகப்படுத்தாமல் பொது வாக சொல்லுவதே ஸமஷ்டி ப்ரபஞ்சமாகும்.

எனவே வ்யஷ்டியாகிய ப்ரபஞ்சத்திலுள்ள தனித் தனிப் பொருள்களைப் பிரித்துப் பார்க்கும்பொழுது அப்பொருள்களுக்கு உற்பத்தியையும் விநாசத்தையும் நாம் அனுபவித்தில் காண்கிறோம்.

மேலும் பரப்ரம்மத்தினிடத்தில் சிற்றெறும்பிலி ருந்து தொடங்கி ப்ரம்மா பர்யந்தமுள்ள ஸகல வஸ் துக்களும் ஒரே காலத்தில் தோன்றுவதில்லை. காலபரிச் சேதமும் தேசப்பரிச்தேசமும், வஸ்து பரிச்சேதமும் இவைகளுடனேயே தோன்றுகிறது.

தவிர வ்யஷ்டியாக பொருள்களைப் பிரித்துப்பார்க் குங்கால், அந்த அந்த உற்பத்தியாகிற பொருள் களுக்கு ஜீவனே காரணமாக ஆகிறான். உதாரணமாக குடத்திற்கு குயவன் காரணமாவதுபோல்.

ஆனால் இந்த ப்ரபஞ்சத்தை ஸத்யம் என்று அனுப விக்கும்வரையில்த்தான் ஜீவனானவன் அந்த அந்தவஸ் துவிற்கு காரணமாகத் தோன்றுகிறானே தவிர,யதார்த்த நிலையில் ஜீவனானவன் ப்ரம்மமாகவே விளங்குகிறான்.

எனவே எந்த வஸ்துக்கள் அறிவிற்கு விஷய மாயும், ஜடமாயும், தேசத்தினாலும் காலத்தினாலும் வஸ்துவினாலும் பரிச்சின்னமாயும் இருக்கின்றதோ அந்த வஸ்துக்களெல்லாம் உண்மையில் கானல் நீரினைப்போல் பொய்யானவைகளே.

இந்த பஞ்சபூதங்களினால் ஆகிய தேகமோவெனில் நம்முடைய இந்திரியங்களின் மூலமாக அறிவிற்கு விஷயமாகின்ற படியால் இந்த ஸ்தூல தேகமானது ஜடமேயாகும். ஜடமான பொருளின் இருப்பானது பொய்யானதாக இருப்பதால், இந்த தேகத்தையொட்டி பாஸிக்கின்ற ஜகத்தானதும் ஜடமாகவே ஆகின்றது.

உதாரணமாக ஸ்வப்னவஸ்தையில் பார்க்கப்படும் பொருள்களெல்லாம் ஜாக்ரா அவஸ்தையில் மறைந்து விடுகின்றதைக் காண்கிறோம்! அதனால்தான் ஸ்வப்ன அவஸ்தையில் பார்க்கப்படும் பொருளை பொய்யென்று

தீர்மானிக்கிறோம். அதுபோலவே ஜாக்ர ப்ரபஞ்சமும் ஸ்வப்ன ப்ரபஞ்சத்தை அனுபவிக்கும் பொழுது பொய் யாய் விடுகிறது

மேலும் ஜாக்ரத்தில் உயிரோடு யிருப்பவர்களே ஸ்வப்னத்தில் இறந்தவர்களாகவும், இறந்து கொண்டு யிருப்பவர்களாகவும், அப்படியே ஜாக்ரத்தில் இறந்து போனவர்களே ஸ்வப்னத்தில் உயிருடன் யிருப்பவர் களாகவும் காண்கின்றோம் அல்லவா. இது அனுபவ ஸித்தம்.

ஆகையால் ஸ்வப்னப்ரபஞ்சமானது பொய்யாவது போலவே ஜாக்ர ப்ரபஞ்சமும் பொய்யானதாகவே ஆகின்றது. எனவே அனுபவமானது அனுமானத்தை ஆதாரமாகக்கொண்டு இந்த ஜகத்தைப் பொய்யென்று ஸித்தாந்தம் செய்கிறது.

எனினும் இந்த அழியும் தேகத்தில் 'நான்' என்றும் என்னுடையது என்றும் அஹங்கார மமகாராதிகள் ஏற்படுகின்றது. எதனால் இவ்விதம் ஏற்படுகிறது? இந்த உண்மையை விசாரித்துப் பார்க்கும்பொழுது ஸகலத்திற்கும் மூலகாரணம் அஞ்ஞானமேயாகும் என் பது ஸ்பஷ்டமாக வெளியாகிறது.

ஆதலால் இந்த ஜகத்தானது தோன்றுவதற்கு அஞ்ஞானமே காரணம். தோன்றின ஜகத்தில் அஹங் காரமும் மமகாரமும் ஏற்படுவதற்கும் காரணம் அஞ் ஞானமேயாகும்.

எனவே உண்மையிலேயே பொய்யான கயிற்றில் ஸர்பம்போல் தோன்றுவதற்கு அஞ்ஞானமே காரண மாக பவிக்கின்றது. தவிர ஜடமான வஸ்துவை ஆச்சிர யித்து அதில் பொய்யானதைத் தோன்றவைக்க

முடியாது. ஏனெனில் ஜடமான பொருள் அனைத்தும் பொய்யாகவே ஆகின்றபடியால் அன்றோ.

ஜடமான இந்த பிரபஞ்சமோவெனில் அஞ்ஞானத்திற்கு பின்புவந்தபடியால், அதாவது அஞ்ஞானத்தின் கார்யமாகின்றபடியால், இந்த ஜடப்ரப்ஞ்சமானது அஞ்ஞானத்திற்கு ஆதாரமாக ஆகமுடியாது என்பதை சொல்லவும் வேண்டுமா.

எனவே அஞ்ஞானத்திற்கு முன்பாகவே ஸ்வயம் ப்ரகாச சிதேக ரஸத்துடன் கூடிய பரப்ரும்மமே இந்த ப்ரபஞ்சம் தோன்றுவதற்கு காரணமாகிய அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாக இருந்து வருகிறது என்பதே வேதங்களுடைய பரம ஸித்தாந்தமாகும்.

இவ்விதம் அஞ்ஞானத்தினுல் பாஸிக்கின்ற பாஞ்ச பௌதிகமான ஸ்தூலதேகத்தை என்றும் அழியாத வஸ்து என்ற எண்ணத்துடன் நாம் அனுபவித்து வருவதால்த்தான் நம்மிடம் அஹங்காரமும் மமகாரமும் இருந்து வருகிறது. ஆதலால் சரீரத்தில் அபிமானம் இருக்கும்வரையில், நமக்கு இந்த அழியும் உலகில் அபிமானம் இருந்தே வரும். உலகத்தில் அபிமானம் வைத்திருக்கும் வரையில் நாம் அஞ்ஞானத்தினுல் கட்டப்பட்டவர்களே ஆவோம். இதன் காரண்மாக் நாம் ஆத்ம சிந்தனை அற்றவர்களாக யிருந்துகொண்டு

புனரபி ஜனனம் புனரபி மரணம்

என்று பிறந்துகொண்டும் இறந்துகொண்டும் பிறவிக் கடலில் மூழ்கி அல்லல்படுகின்றோம்.

இவ்விதம் நாம் அழியும் உலகில் வைத்திருக்கும் பற்றுதலையே

**செறிவு**

என்ற பதத்தினுல் அறியவேண்டும். இந்த ‘செறிவு’ ஆனது அழிந்தால்த்தான் நாம் ஆத்ம ஞானத்தை அடைய முடியும்.

எனவே ‘செறிவு அற’ என்று சொல்லப்பட்டது.

‘செறிவு அற’ அதாவது உலகபற்றுதல் அழிவதற்கு இறைவனுடைய அருள்வேண்டும். இடைவிடாமல் செய்துவரும் வேதாந்த விசாரமே இறைவனுடைய அருள் நம்மிடம் விழும்படி செய்கிறது. உடன் ஈச்வர பக்தியும் சேரும்பொழுது அருளானது அருள்மலையாக நம்மிடம் திகழ்கின்றது.

இறைவனுடைய அருள் எத்தனை எத்தனையோ எண்ணற்ற கோடி வகைகளில் தோன்றுகின்றபடியால் அந்த அருளை ஒப்பற்ற மாறிலா அருள் என்று நிர்தாரணம் செய்து, பாட்டில்

ஒன்று வந்து

என்று கூறினர், பொருளோவெனில்

ஒன்றுகிய அருள்-ஒரே அத்வைத ஞானத்தைப் போதிக்கும் அருள்-பேத ஞானம் தோன்றுவதற்கு மூலகாரணமான அஞ்ஞானத்தைப் பொடிப் பொடியாக்கித் தள்ளும் ஞானமாகிய அருள்-ஜீவனும் ஈச்வரனும் ஒரே அகண்டமான பரப்ரும்மம் என்று கோஷிக்கும் அருள்--ப்ரும்மம் ஒன்றுதான் ஸத்யம் என்று ஞானத்தைப் புகட்டும் அருள்-தத்வமஸி என்ற உபதேச வாக்யமாகத் திகழ்கின்ற அருள் - அஹம்ப்ரஹ்மாஸ்மி என்ற

நிலையை அளிக்கின்ற அருள்-வேதங்களின் ஸ்வாநுபவமாகிய அருள்-

**மேலும்**

ஒன்றும் ஒன்றும் ஒன்றுமே
உலக னைத்தும் ஒன்றுமே
அன்றும் இன்றும் ஒன்றுமே
அனாதியான தொன்றுமே
கன்னல் நின்ற செம்பொனை
களிம் பறுத்து நாட்டினால்
அன்று தெய்வம் உம்முளே
அறிந்ததே சிவாயமே.

என்ற அனுபவநிலையை அளிக்கும் அருள். இதற்கெல்லாம் மேலாகத் தனிப்பட்டமுறையில் தனித்தெய்வமாகிய முருகப்பெருமானால் உபதேசிக்கப்பட்ட அருள் மந்திரமாகிய

சும்மா இரு சொல் அற

என்ற மந்திரமயமான உபதேச வாக்கியமாய்த் திகழ்கின்ற அருள், என்பதேயாகும்.

இத்தகைய பெருமை வாய்ந்த முருகப்பெருமானுடைய ஞானமாகிய அருள் ஒன்றே பிராணிகளுடைய உள்ளத்தில் நிறைந்து நிற்கின்ற அஞ்ஞானமாகிய இருளைப் போக்கடிக்க சக்தி வாய்ந்தது. அஞ்ஞானத்திற்கு ஸ்வரூபமில்லாததினாலும், அவ்விதம் அஞ்ஞானத்தினுடைய கார்யமாகிய ப்ரபஞ்சமும் ஸ்வரூபத்துடன் தோன்றினாலும், அனைத்தும் ஞானம் வரும் வரையில்த்தான் ஸத்யம்போல் தோன்றும்.

ஆதலால் அஞ்ஞானத்தின் கார்யமாகிய உலகில் மயங்கி நிற்கின்ற ஆத்மாவை ஜீவாத்மாவென்றும்,

அஞ்ஞானத்திற்கு மேல் நிலையிலிருந்து வருகிற ஆத்மாவை பரமாத்மா வென்றும் வேதசாஸ்திரங்கள் போதிக்கின்றன. எனவே முருகப்பெருமானுடைய ஞானமாகிய அருளானது ஜீவாத்மாவை 'தான் ப்ரம்மம்' என்ற நிலையை அடையாத வண்ணம் செய் கின்ற அஞ்ஞானமாகிய இருளை அழியச்செய்கின்றது.

ஞானத்தினுல்த்தான் அஞ்ஞானம் நாசத்தை யடைய வேண்டுமே தவிர அன்னியில் இருளாகிய அஞ்ஞானம் அழிவதற்கு வேறுவழியே கிடையாது. அஞ்ஞானம் இருக்கும்வரையில் நாம் இந்திரியங்களை ஜயித்தவர்களாகவும் ஆகமாட்டோம். இதன்விளைவோ வெனில் நாம் மரணமடையும் வரையில் ஆத்மதத்து வத்தை உணராமலேயே அரிதாகிய மானிடப்பிறவியை கழித்து வருவோம்.

இதனுல்தான் பாட்டில்

செறிவு அற ஒன்றுவந்து இருளே சிதைய

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இறைவனுடைய ஞானமாகிய அருளானது முத லில் உலகபற்றுதலை இல்லாமல் செய்கிறது. பின்பு அஞ்ஞானமாகிய இருளைப்போக்கடிக்கிறது. அதாவது அஞ்ஞானத்தின் கார்யமாகிய ப்ரபஞ்சமானது அழிந் ததும், அதன் காரணமாகிய அஞ்ஞானம் தானுகவே அழிந்து விடுகிறது. எனவே கார்யமும்—காரணமும் நாசத்தை யடையும்பொழுது மிஞ்சி நிற்பது ப்ரம்மமே யாகும்.

இதனுலேயே

செறிவு அற இருளே சிதைய

என்றுர்.

ஆதலால் ப்ரம்மம் ஒன்றே ஸத்யமான வஸ்து என்ற உணர்வானது உள்ளத்தில் உண்டாகும்பொழுது உணர்வெல்லாம்.

ஏகமேவ அத்துவிதீயம் ப்ரஹ்ம

என்ற உபநிஷத் வாக்கியத்லேயே லயத்தையடைந்து யிருக்குமே அன்னியில் இந்திரியங்களினுலுண்டாகும் இன்பத்தை ஒரு காலத்திலும் நாடிநிற்காது. இந்திரியங்களினுல் அநுபவிக்கப்படும் இன்பங்களெல்லாம் பொய்யேயாகும்.

தவிர ஒருஸமயம் இன்பமாகத் தோன்றுவதே மறு ஸமயம் இன்பமற்றதாக மாறிவிடுகிறது. ஏனெனில் இந்திரியங்களினுலுண்டாகும் இன்பமானது பொய் யாக இருப்பதினுல் அல்லவா.

இதனுல்தான் துறவிகள் உலகவாழ்க்கையில் இன் பத்தை காண்கிருர்கள் இல்லே. உலக வாழ்க்கையின் இன்பமானது இந்திரியங்களுடன் முடிவை அடைந்து விடுகின்றன. ஆனுல் ஆத்மஞானத்தினுலுண்டாகும் இன்பமோ வெனில் மூன்று காலங்களிலும் அழியாத இன்பமாகத் திகழ்கின்றன.

இந்த இன்பத்தையே பேரின்பமென்றும், ஆத்மா னந்தமென்றும்

ரஸோவை ஸஹ:

என்ற மந்திரத்தினுல் வேதமானது கோஷிக்கின்றது.

இவ்விதம் பேரின்பரஸத்தை பானம் செய்துவரும் மஹான்களோடும், அடியார்களோடும், ஞானிகளோடும் முருகப்பெருமான் தன்மயபாவத்தையடைந்து மகிழ் கின்ருர். அவர்களுடைய உள்ளத்தில் செல்வக்குமா

ஞேவெனில் ஞானவேலினைத் தன்னுடைய திருக்கரத்தால் தாங்கி திருவிளையாடல்செய்து அவர்களை பேரின்பக் கடலில் மூழ்கவைப்பதுமல்லாமல் அவர்களுடன் உறைந்து அவர்களாகவே இருந்து வருகிறுர்.

இந்த உண்மையையே பாட்டில் அருணகிரிநாதர்

வெறி வென்றவரோடு உறும் வேலவனே

என்று சொல்லிக் குமரனை அழைக்கின்ருர்.

அடியார்களுடைய உள்ளத்தில் குமரனை உறும் வேலவனுக பார்க்கிறுர். பார்த்துப்பார்த்து மகிழ்கிறுர். மகிழ்ந்து மகிழ்ந்து உறும் வேலவனே–உறும் வேலவனே-என்று போற்றிப் புகழ்கிறுர். ஏன் தெரியுமா? உறும் வேலவனே என்ற பதமானது எத்தனை எத்தனையோ மஹிமையைக் கொண்டது. அடியார்களிடத்தில் கூடி விளையாடுபவன் முருகன். கூறும் அடியார்களின் வினைதீர்ப்பவன் அல்லவா முருகன்.

செல்வக்குமரனுடைய அன்பானதுஅடியார்களிடத்தில் கூடி உறைகிறது. ஏனெனில் அடியார்கள் இடைவிடாமல் முருகனையே ஆனந்த வடிவமாக பார்க்கிறுர்கள். எல்லாவிடத்திலும் குமரனைக் கண்டு குழைந்து குழைந்து பாடுகிறுர்கள். அவர்கள் தங்களுடைய உள்ளத்தில் திருவிளையாடல் செய்யும் முருகபெருமானையே ஆத்மதத்துவமாக அனுபவிப்பவர்கள்.

இத்தகைய ஞானிகளுடைய அறிவினுள் முருக பெருமான் ஞானமூர்த்தியாய் விளங்கி வருகிறுர் என்பதையே

அறிவொன் றறநின் றறிவார் அறிவிற்
பிறிவொன் றறநின் றபிரான் அலையோ

என்று சொல்கிறுர்.

அறிவானது உலக ஞானத்தை அறியும்பொழுது உலக ஞானத்திலேயே உறைந்து உலக இன்பத்தையே அனுபவிக்கின்றது. இந்த நிலையில் அறிவானது அஹங்காரத்துடனும் மமகாரத்துடனும் விளங்கி வருகின்றபடியால், அத்தகைய அறிவினுல் அறியப் படும் பொருளெல்லாம் ஆத்மாவைக் காட்டிலும் வேருன பொருளாகவே ஆகின்றது.

மேலும் ஆத்மதத்துவத்தைக் காட்டிலும் வேருன தத்துவமெல்லாம் ஆத்மஸ்வருபத்தினிடத்தில் கல் பிக்கப்பட்டதாகயிருப்பதால், கல்பிக்கப்பட்ட இந்த மாயா ப்ரபஞ்சத்திற்கு ஆதாரம் ஆத்மதத்துவமாகிய பரப்ரம்மமேயாகும். இவ்விதம் 'நான்' என்ற சப்தத்தி னுல், சொல்லப்படும் ஆத்மஸ்வருபமே 'பரப்ரம்ம மாகும்' என்று அறியும் அறிவுதான் பிறவிகடலி லிருந்து நம்மைக் கரையேற்றவைக்கிறது.

எனவே 'நான்' என்று சொல்லப்படும் ஆத்மஸ்வ ருபத்தை, பரப்ரம்மமாக உணராமல், கேவலம் ஆசா பாசங்களினுல் கட்டப்பட்ட ஜீவனுக அறியும் அறி வெல்லாம் மேன்மேலும் பந்தத்தையே உண்டு பண்ணுமே தவிர ஒரு காலத்திலும் முக்தியை அளிக் காது. ஆதலால் 'நான்' என்று சொல்லப்படும் ஆத்மஸ்வருபமே பரப்ரம்மமாகும் என்ற மெய்யுணர் வில்லாத அறிவெல்லாம் அடியோடு அழியவேண்டிய வைகளேயாகும்.

ஏனெனில் 'நான்' என்று அனுபவித்துவரும் ஆத்மஸ்வருபத்தை கேவலம் 'பத்த ஜீவனுக' (கட்டுப் பட்ட ஜீவனுக) எண்ணுவதால் தான், அறிவானது ஆத்ம தத்துவத்தை ப்ரம்மமாக அறிவதில்லை.

எனவே ஜீவாத்மாவும் பரமாத்மாவும் 'ஒன்ருக முடியாது' யென்றும், ஜீவாத்மாவேறு–பரமாத்மாவேறு என்று உணரும் அறிவெல்லாம் முருகப்பெருமானுடைய நிஜஸ்வருபத்தை அறிவதில்லை. ஆதலால் அந்த பேதத்தோடு கூடிய அறிவானது நீங்கவேண்டுமென்பதால்த்தான் பாடலில்

அறிவு ஒன்று அற

என்ருர். பேதஞானமானது நாசத்தை அடையும்பொழுது அறிவானது நிர்மலமாக ஆகி மெய்யுணர்வையே நாடி நிற்கும்.

இவ்விதம் மெய்யுணர்விஞல் இறைவனின் ஸ்வருபத்தை அறிகின்றவர்களுடைய அறிவில் முருகப் பெருமான்தன் மய பாவத்தை அடைகிருர். இதையே

அறிவார் அறிவில் பிரிவு ஒன்று
அற நின்ற பிரான் அலையோ

என்கிருர் அருணகிரிநாதர்.

அறிவானது உபநிஷத்துகளின் மஹாவாக்கியங்களான

ப்ரக்ஞானம் ப்ரஹ்ம–அயமாத்மா
ப்ரஹ்ம-தத்வமஸி-
அஹம் ப்ரஹ்மாஸ்மி-

என்பவைகளில் ஊறிஉரையும்பொழுது அந்த மேலான அத்வைத ஞானத்தோடு கூடிய அறிவில், அத்வைத மூர்த்தியாகவே முருகப்பெருமான் பாஸித்து வருகிருர். ஆதலால்

பிரிவு ஒன்று அற

என்பதினுல் ஜீவாச்வரபேத நிலையைத் தாண்டி நிற்கின்ற பேதமற்ற அத்வைத நிலையே முக்திநிலையாகும் என்பதை எடுத்துக்காட்டுகிருர்.

எனவே 'பிரிவு' என்பதினுல் ஜீவேச்வரபேதத்தையும், அப்படியே 'ஒன்று' என்பதினுல் ஜீவேச்வரபேதமே ஆத்மஸ்வருபமாக விளங்கி வருகிற பரப்ரம்ம நிலையை மறைக்கின்றதுஎன்பதையும், அப்படியே 'அற' என்பதினுல் ஜீவேச்வர பேத ஞானமானது மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை ஒருகாலும் தராதென்றும் அதனுலேயே பேத ஞானமானது வேரோடு அழியவேண்டியவைகளே என்பதையும் போதிக்கின்ருர் அருணகிரிநாதர்.

ஜீவாத்மா வேறு-பரமாத்மா வேறு என்ற பேத ஞானமில்லாமல், ஜீவாத்மாவே பரமாத்மாவென்றும் பரமாத்மாவே ஜீவாத்மாவென்றும், அப்படியேஜீவனும் ஈச்வரனும் ஒரே அகண்டமான ஆனந்த ஸ்வருபமென்றும்அறிந்து அனுபவித்துவரும் ஞானிகளினுடைய அறிவில் முருகப்பெருமானுனவர் தான் அறியப்படும் பொருளாக இல்லாமலும், அறியும் அறிவாக இல்லாமலும் அறிகின்றவனுக இல்லாமலும், கேவலம் அகண்டாகாரவ்ருத்திஞானஜோதியாகவே பிரகாசித்துவருகிருர். அதாவது ஆதியும் அந்தமுமில்லாத ஞானசோதியாய் இருந்துவரும் தெய்வமாக விளங்குகிருர்.

எனவே பிரிவுயென்பதில்லாமல் எல்லாப்பொருளாயும் எல்லாமாகவும், எங்கும் நிறைந்தும் விளங்கிவரும் முருகப்பெருமானே

பிரிவு ஒன்று அற நின்ற பிரான் அலையோ

என்று சொல்வதின் உட்பொருளே சிந்தித்துப் பாருங்கள். உண்மை நன்கு விளங்கும்.

**வேல்—53**

இல்லாமையைச் சொல்லி இல்லாமையினுலுண்டாகும் துன்பத்தைச் சுட்டிக்காட்டினுல்தான் இருப்பதின் பெருமையும் மஹிமையும் நன்கு விளங்கும். எனவே 'பிரிவு ஒன்று அற நின்ற பிரான்' என்பதினுல் பேதஞானத்தினுல் உண்டாகும் துன்பங்களைபோதித்து அந்த பேத ஞானமே ஆத்மஸ்வருபத்தின் ப்ரம்ம நிலையை மறைத்து ஜீவகோடிகளை பிறவிக்கடலில் உழலச்செய்கிறதென்பதைக் காட்டுகிருர்.

தவிர ஒருவன் எண்ணற்ற கோடி பிறவியெடுத்தாலும் அவனிடம் பேத ஞானமிருக்குமேயாகில், அவன் ஆத்மஞானமாகிய பேரின்ப நிலையை அடையவேமாட்டான். பேத ஞானமே ஜகத்தைத் தோன்றவைக்கிறது. பேத ஞானமே ஜீவன் வேறு-ஈச்வரன் வேறு என்று பிரிக்கிறது. பேதஞானமே மெய்யுணர்வை மறைத்து பொய்யாகிய உணர்வை உண்டுபண்ணுகிறது. பேதஞானமே காமம்-க்ரோதம்-லோபம்-மோகம்-மதம்மாத்ஸசர்யம்-முதலியவைகளை வளரச்செய்கிறது. பேதஞானத்தினுல் அறிவானது சக்தியை இழக்கிறது.

இத்தகைய துன்பங்களுக்கு மூலகாரணமான பேதஞானத்தினுல் பரம்பொருளாகிய முருகப்பெருமானை நாம் ஒருகாலத்திலும் அடையவே முடியாது.

இதனுல்தான் முருகப்பெருமான் ஞானிகளுடைய அறிவில் பேதஞானம் அற்ற நிலையாகிய அத்வைத நிலையில் நிற்கின்ருர். அதாவது தன்னைக்காட்டிலும் ஜீவன் வேறுபட்டவன் அல்ல என்ற நிலையில் நிற்கும் தெய்வமாக மங்காத பொலிவுடன் நிற்கிருர்.

எனவே ஹே முருகா! வேதங்களுடைய சிகரமாகிய உபநிஷத்வாக்யங்களிலே நீ தன்மயபாவத்தை அடை

கிருய். வேதங்களுடைய ஹ்ருதயமோவெனில் அத்வைத தத்வத்திலேயே லயத்தையடைகிறது. நீயும் அத்வைத மூர்த்தியாகவே விளங்கி வருகிருய்.

குமரா! நீ ஞானபண்டிதனுக வந்து

சும்மா இரு சொல் அற

என்று உபதேசித்தருளினுயே. இந்த உபதேசம் ஒன்று போதாதா நீஅத்வைத தத்வத்திலேயே ஆனந்திக்கிருய் என்பதை யெடுத்துக்காட்ட.

குமரா! அத்வைத மூர்த்தியாய், விளங்கிவரும் உன்னை உபாஸிப்பவர்களே புண்யவான்கள். அவர்களே தன்யர்களும் ஆவார்கள். அவர்களே அரிதாகிய மானிடப் பிறவியின் ஸாபல்யத்தை அடைந்தவர்கள். உன்னுடைய பக்திதான் மோக்ஷத்தை அளிக்க அந்தரங்க ஸாதனமாகும்.

குமரா! புண்யவான்களுடைய அறிவில்நீஅத்வைத மூர்த்தியாய் விளங்கிவருவதுமல்லாமல், ஸத்யம் அத்வைதம்-ஸத்யம் அத்வைதம்-ஸத்யம் அத்வைதம்— என்று அலையைப்போல் இமைப்பொழுதும் ஓயாமல் ஒரு மாபெரும் ஓம்காரத்வனியாய் இருந்து வருகிருய். குமரா! என்னே உன்பெருமை. என்னே உன் ஸ்வரூப மஹிமை! என்னே உன் எளிமை! என்னே உன்கருணை! என்னே உன் அருமை!

மேலும் பிரிவுஒன்று அற நின்ற பிரான் அலையோ' என்பதிலுள்ள 'அலையோ' என்பதினுல் 'பிரிவு ஒன்று அற நின்ற பிரான்' என்பதில் புதைந்து கிடக்கிற புதையலாகிய **தத்வமஸி** என்ற மஹா வாக்கியத்தினுல் இடைவிடாமல் கோஷிக்கப்படுகின்ற

**அத்வைதம் ஸத்யம் - அத்வைதம் ஸத்யம்**

என்ற மேலான உண்மையையே போதிக்கின்ருர்

அருணகிரிநாதர். பொருளோவெனில், எவ்விதம் ஸமுத்திரத்தில் அலையானது ஓயாமல் ஒன்றின்ஒன்ருக வந்துகொண்டேயிருக்கிறதோ அதுபோலவே வேதங்கள்–புராணங்கள்–உபநிஷத்துக்கள் – சாஸ்த்திரங்கள் -தேவாரம்-திருப்புகழ்-மந்திரம்-திருமந்திரம்-திருவாசகம் ஆகிய ஞானப் பெருங்கடலின் கரையில் ஓயாமல் எழுகின்ற அலைகளின் பேரிரைச்சல்கள் எதைப்போதிக்கின்றது தெரியுமா? ஹே உலகத்தினர்களே! ஞானப் பெருங்கடலாகிய எங்களுடைய நடுவில் 'பிரிவு ஒன்று அற நின்ற பிரான்' எல்லாம் வல்ல முருகப்பெருமானே ஆவான். அம்முருகனே அத்வைத தத்துவத்தைப் போதிக்கிற ஞானவேலைத் திருக்கரத்தில் தாங்கி அத்வைத மூர்த்தியாய் அங்கு இங்கு எனுதபடி எங்கும் திகழ்கின்ருன். எனவே நாங்கள் பேரிரைச்சல் செய்வது

## ஸத்தியம் அத்வைதம்

என்பதேயாகும். இம்மந்திரமே குமரனுடைய மூச்சு மாகும் என்பதை உணர்ந்து குமரனின் மாபெரும் அருளைப் பெறுங்கள்.



# தன்னந் தனி நின்றதுதான் பேசவொண்ணுத ஸ்கந்தானுபூதி நிலை

# 49



தன்னந் தனி நின்றது தான் அறிய
இன்னம் ஒருவர்க் கிசைவிப்பதுவோ
மின்னுங் கதிர்வேல் விகிர்தா! நினைவார்
கின்னங் களையும் க்ருபைசூழ் சுடரே.

**பதவுரை**

மின்னுங் கதிர்வேல்—மின்னலைப் போல் பிரகாசிக்கின்ற ஒளிபொருந்திய வேற்படையையுடைய, விகிர்தா - பலவித மான ரூபங்களில் வந்து உயிர்களை மகிழ்விக்கத் திருவிளை யாடல் செய்பவனே, நினைவார்—உன்னை உள்ளத்தில் அன் போடோ அல்லது அன்பில்லாமலோ ஸ்மரணம் செய்கின்ற வர்களுடைய, கின்னம்களையும் – பிறவித்துன்பத்திற்கு மூல காரணமான அஞ்ஞானமாகிய இருளை நீக்குகின்ற, க்ருபை சூழ்சுடரே-கருணைகளினுல் சூழப்பட்டிருக்கிற பேரொளியே,

தன்னந்தனி - ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிலும் வேருகத் தோன்றுபவைகள் எல்லாம் பொய்யே யாகும் என்ற அத்வைத ஞானனுபவத்தினுல் தனிமையாகவே, நின்றது — நான் ப்ரும்மமாக இருக்கிறேன் என்ற நிலேயை, தான்-நான் என்ற சப்தத்தினுல் சொல்லப்படும் கூடஸ்த சிதேகரஸமான சைதன்யமாகிய பரப்ரும்மமே யாகும், அறிய-அறிகிறவன் அறிவு அறியப்படும் பொருள் என்ற பேதஞானமற்ற ஆத்மஞானத்தை. இன்னம்-தான் ப்ரும்மமே தவிர ப்ரும்மத்தை அறிந்தவன் அல்ல என்ற ஞானம் வந்த பிறகு அதாவது இந்த நிலேயை அடைந்த பிறகும், ஒருவர்க்கு-என்னேக் காட்டிலும் வேருன வஸ்துவே யில்லாமலிருக்கும்பொழுது, மற்றவன் இருக்கிருன் என்று கல்பித்துக்கொண்டு, அத்வைத நிலேயிலிருந்து கீழேயிறங்கி பேத ஞானத்தோடு கூடிய த்வைத நிலேயில் நின்று கொண்டு அஹம் ப்ரும்மாஸ்மி என்ற அனுபவ நிலேயை ஒருவர்க்கு, இசைவிப்பதுவோ-சொல்வது என்பது முடியும் காரியமா? சொல்லத்தான் முடியுமா? நான்-நீ என்ற பேதஞானமில்லாமல் நீயே நான்—நானே நீ என்ற நிலேயில் ப்ரும்மமாக இருப்பவனுக்கு சொல்வதற்கு தத்வமும்மில்லே. தான் சொல்லிக் கேட்க ஆளுமில்லே என்பதே பரம தாத்பர்யமாகும்.

**தாத்பர்யம்**

கந்தர் அநுபூதியின் ஸ்வரூபமே இப் பாடல் ஆகும். உபநிஷத்துக்களில்

ப்ரக்ஞானம் ப்ரஹ்ம-அயமாத்மா ப்ரஹ்ம
தத்வமஸி-அஹம் ப்ரஹ்மாஸ்மி

என்ற நான்கு மஹா வாக்கியங்கள் வடிவமாக உலாவிக்கொண்டிருக்கிற முருகப்பெருமானே அருணகிரி நாதர்

யோஸாவஸௌ புருஷ:
ஸோஹமஸ்மி

என்று வேத மந்திரத்தினுல் சுட்டிக்காட்டி அதோ அங்கு காணுகின்ற சூர்யனுக்குள் அந்தர்யாமியாக இருந்துகொண்டு விளங்குபவனும் நானும் ஒருவனே தான் என்று போதிக்கின்ற எல்லாவற்றிற்கும் மேலான அத்வைத நிலையை இப்பாடலினுல் ஸித்தாந்தம் செய்து நம்மையெல்லாம் கந்தர் அநுபூதியில் ஒன்றுே டொன்ருய் லயிக்க வைக்கிருர். எனவே அருணகிரி நாதரின் கருணைப் பிரவாகம் கசிந்து கனிந்து கரைந்து உலாவுகிறது இப்பாடலில்.

தன்னந் தனி நின்றது - தான்

என்பதின் மெய்ப்பொருளோ வெனில், தன்னந் தனி யாக இருந்து வருகிற நிலை ஒன்றேதான் பரப்ருமத் தினுடைய நிரங்குசமான நிலையாகும். எந்த நிலை யிற்குமேல் ஒரு நிலை கிடையாதோ அந்த நிலையே பரப்ரம்மத்தினுடைய நிலையாகும்.

எனவே தான் ஒரு நிலையிற்கு கீழாகயிருக்கும் நிலையிலில்லாமலும், தானே எல்லா நிலைகளுக்கும் மேலான நிலையிலிருந்துகொண்டும் இருந்து வருகிற நிலையே,

தன்னந் தனி நின்றது

என்ற நிலையாகும்.

எனவே வேதங்களின் சிகரமாகிய உபநிஷத்து களினுல் போதிக்கப்படுகின்ற,

ஸதேவ ஸௌம்ய இதம் அக்ரே ஆஸீத்.
ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம

என்ற ப்ரஹ்ம ஸ்வருபமே ஆத்மஸ்வருபமாகும்.

இந்த ப்ரஹ்ம நிலையைத்தான் 'ஆறுறையும் நீத்ததன்மேல் நிலையை' என்றதிலுள்ள அதன்மேல் நிலையை என்றதினுல் சுட்டிக் காட்டியிருக்கிருர்.

ஆதலால் ஸத்யமாக அனுபவித்துவரும் இந்த ப்ரபஞ்சமோவெனில் அஞ்ஞானத்தின் கார்யமாகும். கார்யமாகிய ஜகத்திற்கு முன்பாகவே காரணமாகிய அஞ்ஞானம் இருந்துவருகிறது. அஞ்ஞானமானது ஜகத்திற்கு காரணமாக இருந்தாலும் ப்ரும்மத்தை ஆதாரமாகக்கொண்டு இந்த ஜகத்தை ப்ரும்மத்தினிடத்திலேயே கற்பிக்கிறது.

எனவே அஞ்ஞானமானது ஞானத்தினுல் நாசமடையும்பொழுது மிஞ்சி தன்னந்தனியாக நிற்பது ப்ரும்மமேயாகும்.

அந்த ப்ரும்மத்தையே லிங்கம் என்றும், அரி அயன் அரன் என்றும், முருகனென்றும் ஸத் சித்து ஆனந்தம் என்றும் பலவாறு போற்றிப் புகழ்கின்றது வேதங்களும் உபநிஷத்துகளும்.

ஆனுல் உண்மையில் வேதங்களினுல் போதிக்கப்படுகின்ற மெய்ப்பொருளோவெனில் ஒரே அகண்டாகாரமாய் விளங்கிக்கொண்டுவருகிற பரப்ரும்மமேயாகும்.

ஆதலால் இந்த ஜகத்தானது உற்பத்தியாவதற்கு முன்னுல் ப்ரும்மம் ஒன்றைத் தவிர வேருன வஸ்து ஒன்றுமே இல்லை. அப்படியே இந்த ஜகத்தானது உற்பத்தியான பிறகும் ப்ரும்மத்தைக் காட்டிலும் வேருன இரண்டாவது வஸ்து ஒன்றுமே இல்லை. அதுபோலவே வருங்காலத்தில் ஞானத்தினுல் அஞ்ஞானமும் அதன் காரணமாகிய ஜகத்தும் அழிந்துபோன

பிறரம் ப்ரும்மத்தைக் காட்டிலும் வேருன இரண்டாவது வஸ்து ஒன்றுமேயில்லை.

எனவே தன்னந்தனி நின்றதுதான், ப்ரம்மத்தினுடைய ஸ்வருப லக்ஷணமாகும். ப்ரம்மத்தைக் காட்டிலும் இரண்டாவது வஸ்துவே கிடையாது. ஆதலால் பேத நிலையற்ற வஸ்துவே ப்ரம்மமாகும்.

பேதமோவெனில் மூன்றுவகைப்படும். கற்கண்டு கட்டியிலும் உப்புக்கட்டியிலும் எவ்விதம் உள்-வெளி அடி-நுனி என்ற பேதத்தைக் கறபிக்க முடியாதோ அதுபோலவே ப்ரம்மமும் உள்-வெளி-அடி-நுனி என்ற பேதமில்லாமல் கேவலம் ஒரே பரஞ்ஜோதி ஸ்வருபமாக விளங்கிவருகிறது.

மேலும் ஒரு மரத்தில் கிளைகள், இலைகள் காய்கள் கனிகள் வேர் நுனி என்ற பேதம் ஏற்படுவது போல் ப்ரம்மத்தினிடத்தில் அத்தகைய 'ஸ்வகதபேதம்' கிடையாது.

இதனுல் கேவலம் கற்கண்டுகட்டியிலும் உப்புக் கட்டியிலுமே பேதத்தைக் கற்பிக்க முடியாதிருக்கும் பொழுது எவ்விதம் ஒரே சித்தாயும் ஸத்தாயும் ஆனந்தமாயும் உள்ள பரப்ரம்மத்தினிடத்தில் பேதத்தைக் கற்பித்து காட்டமுடியும்.

எனவே ஸ்வகத பேத சூன்யமாக இருக்கும் ப்ரம்மத்தையே,

ஏகமேவ அத்துவிதீயம் ப்ரஹ்ம

என்ற வேத வாக்யத்திலுள்ள 'ஏகம்' என்ற பதம் போதிக்கின்றது.

இதையே இந்தப் பாட்டில் 'தன்னந் தனி' என்ற பதம் ஸித்தாந்தம் செய்கிறது,

அப்படியே மர ஜாதியில் மாமரம் என்று சொன்ஞல், எத்தனேயோ மரங்கள் உண்டு. இதை 'ஸஜாதீய பேதம்' என்று சொல்வார்கள். அதுபோல் ஸஜாதீய பேதம் ப்ரம்மத்தினிடம் சொல்லமுடியாது. ஏனெனில் பேதஞானமாகிய அறிவெல்லாம் ப்ரம்மத்தினிடம் கல்பிதமானவைகளே. இந்த உண்மையைத்தான் 'ஏகமேவ' என்பதிலுள்ள 'ஏவ' காரமானது போதிக்கின்றது. அதையே பாட்டில்,

தன்னந் தனி நின்றதுதான்

என்ற வாக்யத்திலுள்ள **நின்றது** என்ற பதம் எடுத்துக் காட்டுகின்றது.

அதுபோலவே வேதத்திலுள்ள 'ஏகமேவ அத்விதீயம் ப்ரஹ்ம' என்ற வாக்யத்திலுள்ள 'அத்விதீயம்' என்ற பதமானது பரப்ரம்மத்தினுடைய 'விஜாதீய சூன்யம்' என்ற மஹிமையை எடுத்துக் காட்டுகிறது.

உதாரணமாக பழவகைகளில் எண்ணற்ற பழவகைகளேக் காண்கிருேம். மாம்பழத்திற்கு வாழைப் பழம் 'விஜாதீய' பேதமாகும்

ஆனல் ப்ரம்மத்தைக் காட்டிலும் வேருன வஸ்துவே யில்லாமலிருப்பதால் 'விஜாதீய பேதம்' ப்ரம்மத்தினிடத்தில் இல்லே.

இந்த தத்துவத்தைப் பாட்டில் 'தன்னந் தனி நின்றது தான்' என்பதிலுள்ள '**தான்**' என்ற பதம் ஸித்தாந்தம் செய்கிறது.

ஆதலால் 'ஸ்வகத பேதம்-ஸஜாதீய பேதம்-விஜாதீய பேதம்' என்ற மூன்று விதமான பேதங்களும் எந்த வஸ்துவில் காணமுடியாதோ அந்த வஸ்துவைத்தான்

இறைவன் என்றும் கடவுள் என்றும் முருகப்பெரு மான் என்றும் நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

தவிர ஜகத்தின் உத்பத்திக்கு முன்னுலும் ஜகத் தானது இருந்துவருகிற ஸமயத்திலும், ஜகத்தின் நாசத்திற்கு முன்பும், அதாவது சென்ற காலம் நிகழ் காலம் வருங்காலம் என்ற மூன்று காலங்களிலும் ப்ரம்மமானது 'ஸ்வகதபேதம்–ஸஜாதீயபேதம்-விஜா தீய பேதம்' அற்றதாயும், அப்படியே திரிகால பரிச் சேத சூன்யமாயும் இருந்துகொண்டு கேவலம் ஸத்சித் ஆனந்தமயமாகவே பிரகாசித்து வருகிறது என் பதையே, சாந்தோக்யோ உபநிஷத்திலுள்ள,

ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம

என்ற வாக்யமானது ப்ரகாசப்படுத்துகின்றது.

ஆதலால் இந்தப் பாட்டில் மேல்கூறிய உபநிஷத் வாக்யத்தின் பொருளையே போதிக்கின்ருர் அருணகிரி நாதர்.

எனவே 'தன்னந்தனி நின்றதுதான்' என்ற வாக்ய மானது பரம்பொருளுடைய ஸ்வாநுபவ நிலையை மாத் திரம் ப்ரகாசம் செய்கின்றதே தவிர க்ரியா நிலையை போதிக்கவில்லை. ஆதலால் நிஷ்க்ரியமாயும்-நிரஞ் சனமாயும்–திரிகால பரிசேத சூன்யமாயும்-ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேத சூன்யமாயும்-விளங்கிவரு கின்ற - ஸத்-சித்-ஆனந்த ரூபமான பரப்ரம்மமே உற்பத்திக்கு முன்னுல் இருந்துவருகிறது.

ஜகத்தானது முன்னுல் இல்லாமலிருந்து உற்பத்தி யானதுபோல், பரப்ரம்மமானது முன்னுல் இல்லாம

லிருந்தது என்பது இல்லாததால்த்தான் ப்ரம்மத்தை ஆதியற்ற பரம்பொருள் என்று சொல்லுகிறார்கள்.

இதனால் அண்டசராசரங்களுக்கும் எது மூல காரணமாயும் இருந்துகொண்டு, தனக்கு ஒரு காரணம் இருக்கிறது என்பது இல்லாமல் விளங்கி வருகிறதோ அத்தகைய வஸ்துவைத்தான் வேதமானது பரம் பொருள் என்று போதிக்கின்றது. இப்பரம்பொருளின் ஸ்வருபலக்ஷணத்தை மாணிக்கவாசக சுவாமிகள்,

ஆதியும் அந்தமும் இல்லா
அரும்பெருஞ் சோதியை

என்று வர்ணிக்கின்றார்கள்.

இத்தகைய பெருமைவாய்ந்த பரப்ரம்மமாகிய பரம்பொருளே ஆத்மஸ்வருப்பமாகும் என்று போதிக்கின்றது,

அயமாத்மா ப்ரஹ்ம -
தத்வமஸி

என்ற வேதவாக்யமானது. ஆதலால் 'தன்னந்தனி யாக நிற்பது' ஆத்மஸ்வருபமேயாகுமே தவிர ஆத்ம ஸ்வருபத்திற்கு வேறாக ஆத்மாவினிடத்தில் கற்பிக் கப்பட்ட ஜகத்தாக ஒருகாலத்திலும் ஆகவே முடி யாதென்பது பரம தாத்பர்யமாகும்.

உதாரணமாக மண்ணால் செய்யப்பட்ட குட மானது குடமாக ஆவதற்கு முன்னாலும் மண்ணாகத் தான் இருந்தது. குடமான பிறகும் மண்ணாகத்தான் இருக்கிறது குடத்தினுடைய ஸ்வருபத்தில் தோன்றி னாலும்கூட மண்ணிற்கு வேறானதாக குடத்திற்கு இருப்பு கிடையாதல்லவா.

ஆதலால் வாக்கு ஆகிய இந்திரியத்தினால் உண்டு பண்ணப்படும் 'குடம்' என்ற சப்தத்தை தவிர குடத்திற்கு மண்ணைக்காட்டிலும் வேறான தனி உருவம் கிடையாதென்பதே உபநிஷத்துக்களின் ப்ரமதாத்பர்யமாகும். எனவே ப்ரம்மமாகிய ஆத்ம ஸ்வருபத்தில் கற்பிக்கப்பட்ட இந்த ப்ரபஞ்சமானது வ்யவகார தசையில் ஆத்மாவைக் காட்டிலும் வேறானதாக நாம் அனுபவித்தாலும்கூட, உண்மையில் இந்த ஜகத்தானது 'வாக்கு' ஆகிய இந்திரியத்தினால் உண்டு பண்ணப்பட்ட 'சப்தத்துடன்' முடிவையடைகின்றதே தவிர, பரப்ரம்மமாகிய ஆத்மஸ்வருபத்தைவிட்டு வேறாக ஒன்றை இந்த் தத்ருச்யமாக தோன்றுகின்ற ப்ரபஞ்சத்திற்கு இருப்பிடமாக சொல்லமுடியாது.

ஆகையால் இந்த ப்ரபஞ்சமானது ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கப்படும் காலத்தில் கடவுளானவர் 'ப்ரபஞ்சமாக' விளங்குகிறார். ப்ரபஞ்சமானது தோன்றுவதற்கு முன்னால் கடவுளானவர் 'சுத்த ப்ரம்மாய்' விளங்குகிறார். அதுபோலவே ப்ரபஞ்சமானது நாசத்தை அடைகின்ற ப்ரளய காலத்தில் கடவுளானவர் 'ஸாக்ஷியாக' இருக்கிறார்.

ஆதலால் அழியும் தன்மையையுடைய எந்த வஸ்துவும், தான் அழிந்த பிறகு தனக்கு மூலகாரணமாய் நின்ற வஸ்துவாகவே ஆகிவிடுகின்றது.

உதாரணமாக மண்ணிலிருந்து உண்டான குடமானது, உடைந்துபோன பிறகு மண்ணாகவே ஆகிவிடுகிறது. தவிர தங்கத்தினால் செய்யப்பட்ட நகைகளை உருக்கினால் முடிவில் தங்கமாகவே நகைகள் ஆகிவிடுகிறதை நாம் பார்க்கிறோம்.

இதுபோலவேதான் ப்ரம்மமாகிய ஆத்மஸ்வ ருபத்தில் கல்பிதமாக சப்தருபமாய் உண்டுபண்ணப் பட்ட ப்ரபஞ்சமானது, தான் அழியும்பொழுது, தனக்கு மூலகாரணமாய் விளங்கிவந்த ஆத்மஸ்வருப மாய் ஆகிவிடுகிறது.

ஆதலால் சென்ற காலம் நிகழ்காலம் வருங்காலம் என்ற மூன்று காலங்களிலும் ஒருவிதமான குறைவு மின்றி அகண்டாகாரமாய் விளங்கிவருகின்றபடியால் முக்காலத்திலும் அழியாமலிருப்பது என்ற தன்மை யானது பரம்பொருளாகிய ஆத்மஸ்வருபத்திற்கு மட்டுமே இருந்துவருமே தவிர வேறு கல்பிதமாகிய ப்ரபஞ்சத்திற்கு ஏற்படாது. இதனுல்தான் வேத மானது ,ப்ரம்மம் ஒன்றுதான் ஸத்யம்' என்று போதிக் கின்றது. எனவே ப்ரம்மஸ்வருபமாகிய ஆத்மா விற்கு வேருன பொருளெல்லாம் கானல் நீரினைப்போல் பொய்யே ஆகும். அதாவது கல்பிதமேயாகும்.

ஆதலால் மிஞ்சி நிற்பது ஆத்மஸ்வருபம் ஒன்றே ஆகும்.

இப்பொழுது அநுபூதியை ஒருதரம் சொல்லிப் பாருங்கள். சிந்தித்துப் பாருங்கள்.

தன்னந் தனி நின்றது எது? 'தான்' என்ற பதத் தினுல் நிர்தாரணம் செய்யப்படும் 'நான்' என்ற ஆத்ம ஸ்வருபம் என்பது அல்லவா! இந்த உண்மையை நாம் அறியவேண்டும். 'அறிவது' என்ருல் 'தன்னந் தனி நிற்கின்றது' என்ற நிலையில் நாம் இருக்க வேண்டும்.

இத்தகைய ப்ரம்மதத்வத்தையே போர்க்களத்தில் போர் செய்யமாட்டேன் என்று நிற்கும் அர்ஜுனனுக்கு

கிருஷ்ணபரமாத்மா உபதேசம் செய்கிறார். ஏன் தெரியுமா? நாம் செய்யும் யுத்தத்தினால் நமக்கு வேறான பீஷ்மர், துரோணர் முதலிய எண்ணற்ற பேர்களைக் கொல்லவேண்டி வருமே! அதற்கு நாம் ஏன் ஆளாகவேண்டும்? அவர்களுடைய ஆத்மாவிற்கு போரினால் நாசம் வந்துவிடுமே என்று விவேகமில்லாமல் ஆத்மாவைக் காட்டிலும் வேறாகத் தோன்றுபவைகளை யெல்லாம் ஸத்யமாக அனுபவித்துக் கொண்டு சஞ்சலமான மனதுடன் இருக்கும் அர்ஜுனனிடம் பகவானேனவெனில்,

அர்ஜுனா,

ந த்வே வாஹம் ஜாது நாஸம்
ந த்வம் நேமே ஜநாதிபா :
ந சைவ நபவிஷ்யாம :
ஸர்வே வயமத : பரம்

என்று சொல்லி உபதேசிக்கின்றார்.

மெய்ப்பொருளோவெனில், அர்ஜுனா! போர்க்களத்தில் நாம் அழிந்துவிடுவோமென்றோ, அல்லது பீஷ்ம துரோணர் முதலாகிய தன்னைக்காட்டிலும் வேறானவர்கள் அழிந்துவிடுவார்கள் என்றோ அல்லது அவர்களுடைய அழிவிற்குத் தான் காரணமாவோமென்றோ அல்லது தன்னுடைய அழிவிற்கு அவர்கள் காரணமாவார்கள் என்றோ அல்லது தன்னைக் காட்டிலும் அவர்கள் வேறு என்றோ அல்லது அவர்களைக் காட்டிலும் தான் வேறு என்றோ என்று நீ பலவாறு எண்ணி மனம் வருந்துகிறாய். அப்பனே! நீ உண்மையை நன்கு அறிகிறாய் இல்லை. மெய்ப்பொருளை உணராததினால்த்தான் பேத ஞானமானது உண்டாகு

கிறது. ப்ரம்ம தத்துவத்தை சொல்கிறேன் கேள். உண்மை அப்பொழுது உனக்கு நன்ருக விளங்கும்.

அர்ஜுனு! அண்டசராசரங்களையும் ஆட்டிவைக்கும் மாயா அதீதனுய் விளங்கிவரும் ஈச்வரனுகிய நான் சென்ற காலத்தில் இல்லை என்பது இல்லை. இந்த ஜகத்தானது உற்பத்தியாவதற்கு முன்பே இருக்கத்தான் இருந்தேன். அதுபோலவே த்ன்னை ஜீவனுக எண்ணி வருகிற ஜீவனுகிய நீயும் சென்ற காலத்தில் அதாவது ஜகத்தானது உற்பத்தியாவதற்கு முன் காலத்திலும் இல்லை என்பது இல்லை. இருக்கத்தான் இருந்தாய். அதுபோலவே தன்னைக் காட்டிலும் வேருனவர்கள் என்று நினைத்து வருந்துகிருயே அப்பேர்ப்பட்ட மற்ற பிராணிகளும் சென்ற காலத்தில் இல்லை என்பதுஇல்லை. அவர்களும்உன்னைப்போலவும் என்னைப்போலவும் இருக்கத்தான் இருந்தார்கள்.

அதுமட்டுமல்ல அர்ஜுனு, வருங்காலத்தில் நானே நீயோ மற்றவர்களோ இல்லாமல் ஆய்விடுவோம் என்பதும் இல்லை. இருக்கத்தான் இருக்கப் போகிருேம். மேலும் இப்பொழுது என்னுடைய இருப்பில் எனக்கோ, உன்னுடைய இருப்பில் உனக்கோ, மற்றவர்களுடைய இருப்பில் அவர்களுக்கோ, கொஞ்சம்கூட ஸந்தேஹம் என்பது இல்லை என்பது ப்ரத்யக்ஷானுபவ ப்ரமாணமாக இருக்கிறது.

எனவே ஒரே ஆத்மஸ்வருபத்தில்,

நீ என்றும்-நான் என்றும்-அவன் என்றும்

அஞ்ஞானத்திஞல் தோன்றுகிறதே தவிர உண்மையில் ஒரே அகண்டமான ஸச்சிதானந்த பரம்பொருளே 'நான்' என்பதிஞல் சொல்லப்படும் வஸ்துவாகும்.

ஆதலால் அழியக்கூடியது ஜடமான தேகமே தவிர ஆத்மா அல்ல. எனவே 'தன்னந்தனி நின்றது' ஆத்மஸ்வருபமேயாகும்.

அதனுல் ஜீவனும் ப்ரம்மமும் ஒரே அகண்டமான தத்வம்தான் என்று போதிக்கின்ற நிலையே 'தன்னந் தனி நின்ற நிலையாகும்'

இத்தகைய அத்வைத ஸித்தாந்தத்தில்தான் ஸகல வேதங்களுக்கும் சாஸ்திரங்களுக்கும் புராணங்களுக் கும் தேவாரம் திருமந்திரம் திருப்புகழ் முதலிய அரிய நூல்களுக்கும் பரமதாத்பர்யம் என்பதை எடுத்துச் சொல்லவும் வேண்டுமா.

எனவே ஜாக்ரம்ஸ்வப்னம் ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளிலும் ஆத்ம ஸ்வருபம் ஒன்றே பரிபூர்ணமாக ஒரு குறைவுமின்றி விளங்கி வரு கிறது.

அவஸ்தைகளுக்குள் ஒரு அவஸ்தையானது மற்றொரு அவஸ்தையை அறிவதில்லை! அவஸ்தை யானது ஜடமாக ஆகிவிடுகிறது. எனவே அவஸ்தை களெல்லாம் ஆத்மஸ்வருபத்தினிடத்தில் கற்பிக்கப் பட்டதேதாகும். கல்பிதமான வஸ்துவிற்கெல்லாம் ஆச்ர்யமான வஸ்து ஆத்மாவாகவே ஆய்விடுகிறது. ஆதலால் ஆத்மாவை ப்ரம்மம் என்று அறியும் அறிவு தான் பிறவிக் கடலிலிருந்து நம்மைத் தூக்கிவிடுமே யொழிய ஆத்மாவைக் காட்டிலும் ப்ரம்மம் வேறு என்று அறியும் அறிவெல்லாம் பேதஞானத்தையுண்டு பண்ணி மனதில் காமம்-க்ரோதம்-லோபம் மதம்-மாத் சர்யம்முதலியவைகளை வளரச்செய்துமுடிவில் நம்மை,

புனரபி ஜனனம் புனரபி மரணம்

என்ற ஸம்ஸார சக்கரத்தில் கட்டி சுழன்றுகொண்டே யிருக்கும் வண்ணம் செய்கிறது.

ஆதலால் 'ஸ்தூலமான உலகானுபவம்' என்ற ஜாக்ரா அவஸ்தையிலும், 'வாஸனமயமான அனுபவம்' என்ற ஸ்வப்ன அவஸ்தையிலும் 'ஸுகானுபவம்' என்ற ஸுக்ஷுப்தி அவஸ்தையிலும்,

தன்னந் தனி நின்றது தான்

ஸாக்ஷியாக இருந்துவருகிறது. அதுவே பர ப்ரம்மம் ஆகும். எனவே ஞானவடிவமான பர ப்ரம்மம் ஒன்றேதான் சிற்றெறும்பிலிருந்து ப்ரும்மா பர்யந்தமுள்ள ஸகல ஜீவகோடிகளுடைய உள்ளத்தில் 'நான்' என்று சொல்லப்படும் ப்ரத்யக ஆத்ம ஸ்வருபமாக விளங்கிவருகிறது.

எனவே பாட்டில்,

தன்னந் தனி நின்றது

என்பதினுல் முடிவாகிய நிலையைச் சுட்டிக்காட்டி, தன்னந்தனியாக நிற்காமல் பேதஞானத்தோடு நின்றுவரும் நிலைகள் எல்லாம் ஜடமான நிலைகள் என்றும் அறிவிற்கு விஷயமாகும் நிலையென்றும் ஸித்தாந்தம் செய்கிறுர் அருணகிரிநாதர். அதுமட்டுமல்ல, காணப்படும் 'ஸ்தூல சரீரமானது' உற்பத்தி விஞசத்துடன்கூடியது. அதனுல் சரீரமானது ஆத்மாவாக ஆகமுடியாது. அப்படியே ஞானேந்திரிய பஞ்சகம் - கர்மேந்திரிய பஞ்சகம் - பஞ்சப்ராணன்— மனது-புத்தி ஆகியவைகளெல்லாம் ஸ்தூல சரீரம் போலவே அறிவிற்கு விஷயமாவதால் இவைகளும் ஆத்மாவாக ஒருகாலத்திலும் ஆகமுடியாது.

அதுபோலவே கல்பிதமான உலகிலுள்ள விஷய ஸுகத்தை ஸத்யம்போல் அனுபவிக்கின்ற போக்தாவான புத்தியில் சித்வஸ்துவான ப்ரம்மத்தின் பிம்பமாகிய 'ஜீவன்' என்று வ்யவஹரிக்கப் படுகின்ற ஆனந்தமய கோசமும் ஆத்மாவாக ஆகமுடியாது.

பார்க்கப்படுகின்றதும், கேட்கப்படுகின்றதும் அனுபவிக்கப்படுகின்றது. அறிவினுல் அறியப்படுகின்றதுமான ஸகல த்ருச்யமானவைகளுக்கும் கேவலம் ஸாக்ஷியாக மட்டுமே விளங்கிவருகிற, 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்திலுள்ள 'த்வம்' பதத்தின் லக்ஷ்யார்த்தமாகிய கூடஸ்தசிதேகரஸமான 'நான்' என்ற சப்தத்தினுல் சொல்லப்படுவது ஆத்மஸ்வரூபமே ஆகும்.

அந்த ஆத்மவஸ்துவே 'தன்னந் தனியாக நின்ற' வஸ்துவாகும். ஆதலால் ப்ரத்யக்ஷ அனுபவத்திற்கோ, அல்லது அநுமானத்திற்கோ த்ருச்யமாகத் தோன்றும் இந்த உலகமானது வாக்கிலிருந்து வெளிவருகிற சப்தத்துடனே நாசத்தையடைந்து விடுகிறது என்ற ஒரு த்ருடமான ப்ரக்ஞையுடன், மூன்று காலங்களிலும் ஒரே சித்தாயும் ஸத்தாயும் அகண்டமாயும் அசலமாயும் ஆனந்தமயமாயும் விளங்கிவரும் பரிபூர்ணமான பரப்ரம்மம் ஒன்றே உண்மையான மெய்ப்பொருள் என்று உபநிஷத் வாக்யங்களினுல் அறிந்து, அப்படியே பரப்ரம்மம்தான் 'நான்' என்ற சப்தத்தினுல் சொல்லப்படும் வஸ்துவாகும் என்று அறிவதுதான் ப்ரம்மஞானமாகும். அதாவது அறிகிறவன்-அறிவு-அறியப்படும் பொருள் யாவும் ஒரே தத்வம்தான் என்று அறியவேண்டும்.

இந் நிலையில் இந்தப் பாட்டைப் படித்துப் பாருங்கள். சிந்தித்துப் பாருங்கள்.

தன்னந் தனி நின்றது எது? ஆத்மாவா? அல்லது இந்த கல்பிதமான உலகமா?

'தான்' என்ற சப்தத்தினுல் சொல்லப்படும் ஆத்மஸ்வருபத்தைத் தான் 'தன்னந் தனி நின்றது' என்று அறியவேண்டும்.

எனவே 'தன்னந் தனி நின்றது' என்று சொன்னதிலிருந்தே ஆத்மாவிற்கு வேருன வஸ்துக்களெல்லாம் அழிந்துவிட்டது என்பது ஸ்பஷ்டமாக வெளியாகவில்லையா.

இதனுல் தன்னந் தனி நிலேயில் ப்ரம்மத்தை அறிகிருன் என்பது இல்லே. ப்ரும்மமாகவே ஆகிவிடுகிருன்.

எனவே எந்த நிலேயை வேதமானது எண்ணவொண்ணுதது - பேசவொண்ணுதது - சொல்லவொண்ணுதது-விடவொண்ணுதது என்று சொல்லுகிறதோ அந்த நிலேதான்,

தன்னந் தனி நின்றது தான்

என்ற நிலேயாகும்.

இந்த நிலேயின் பெருமையைப் பாட்டில்

இன்னம் ஒருவர்க் கிசைவிப்பதுவோ?

என்று சொல்கின்ருர். இதன் உண்மையோவெனில் 'தன்னந் தனி நின்றது' என்பது ப்ரம்மமேயாகும். அந்த ப்ரம்மத்தைத் 'தான்' என்று அறிந்தவன் சரீரம் இருக்கும்பொழுதே முக்தனுக ஆகிருன். அதாவது ப்ரம்மமாக யிருக்கிருனே தவிர ப்ரம்மத்தை அறிந்தவனுக ஆகிறதில்லே.

எனவே ஸகுண ப்ரம்மத்தைப் பற்றித்தான் பேசமுடியுமே தவிர நிர்குண ப்ரம்மத்தைப்பற்றி பேசவே

முடியாது. ஆதலால் பாட்டிலுள்ள 'இன்னம்' என்ற பதமானது 'இன்னமும்' என்ற அர்த்தத்தை போதிக்கின்றபடியால், 'இதுவரையிலும் என்ற நிலையையே' குறித்துக் காட்டுகிறது.

அதாவது 'அறிகிறவன்—அறிவு—அறியப்படும்' பொருள் என்பதெல்லாம் பேத ஞானமேயாகும். இந் நிலையில்தான் நாம் ப்ரம்ம விசாரம் செய்யமுடியும். விசாரமற்ற நிலையே அத்வைத நிலையாகும்.

ஆகையால் ப்ராரப்த கர்மாவினுல் அடைந்த தேஹத்தைக் காட்டிலும் ஆத்ம ஸ்வருபமானது வேருனதென்றும், தேஹத்திற்கு மூலகாரணமான கர்மாக்கள் ஆத்மாவை ஒட்டினதல்ல என்றும் அறிகின்றவர்களே ஞானிகள் ஆவார்கள். இவர்களுடைய விஷயத்தில் கர்மாக்களை போதிக்கின்ற சாஸ்திரங்களுக்கு ப்ராமாண்யம் கிடையாது. ஆனுல் இதற்கு மாருக தேகத்தையே ஆத்மாவென்றும், தேகத்திற்கு காரணமான கர்மாக்களையும், அந்தக் கர்மாவினுடைய பலஞகிய அனுபவங்களையும், ஆத்மாவினுடைய தர்மமாகவே பார்க்கின்ற அஞ்ஞானிகளுடைய விஷயத்தில்தான் 'இதைச் செய்' என்ற விதி ருபமான சாஸ்திரமோ, அல்லது 'இதைச் செய்யாதே—இதைச்செய்யக் கூடாது' என்று தடுக்கும் விதி நிஷேத ருபமான சாஸ்த்ரமோ ப்ரமாணமாக ஆகின்றது.

ஆனுல், ஜலமும் அக்னியும் எவ்விதம் வேறுபட்டவைகளோ அதுபோலவே தேகமும் ஆத்மாவும் ஒன்று ஆகாது என்ற த்ருடமான ஞானத்தினுல் தேஹத்தை வேருகவும் ஆத்மாவை வேருகவும் பிரித்து அனுபவிப்பது மல்லாமல் ஆத்மாவை பரப்ரும்ம ஸ்வருபமாகவும் அனுபவிக்கிருர்கள். இவர்களுடைய

விஷயத்தில் ஒருவிதமான சாஸ்திரமும் ப்ராமாண்யத்தை அடைகிறதில்லை.

எனவே பிராணிகளுக்கு 'தான் ப்ரம்மம்' என்ற ஞானம் வருவதற்குமுன் தேஹாபிமானம் இருந்தாலும், 'தான் ப்ரம்மம்' என்ற ஞானம் வந்த பிறகு தேஹாபிமானம் அடியோடு அழிந்தே போய்விடும்.

எனவே தேஹாபிமானம் உள்ளவர்களுக்கு ஏற்பட்ட விதி நிஷேத சாஸ்திரங்களை தேஹாபிமானமில்லாத ஞானிகளிடத்தில் ஆரோபணம் செய்வது, ஒரு வயலில் பயிர் நன்ருக வளர்ந்த பிறகு உழுவது போலிருக்கிறதே தவிர வேதப் ப்ரமாணமாக ஆகாது.

எனவே அத்வைத அனுபவத்தை அடையும்வரையில், பேத ஞானத்தோடு அத்வைத ஞானத்தின் மஹிமையை பேசிவந்தவர்கள், அத்வைத ஞானத்தை அனுபவத்தில் அடைந்த பிறகு, அதாவது,

தன்னந் தனி நின்றதுதான்

தன்னுடைய நிஜமான ஆத்மஸ்வருப நிலையாகும் என்ற எல்லாவற்றிற்கும் மேலான நிலையையடைந்த பிறகு ப்ரம்மமாகவே இருந்துவிடுகிருர்கள். அவர்கள் 'ஸர்வம் ப்ரம்மமயம்' என்று யிருப்பதால், அவர்களுக்குத் தங்களைக் காட்டிலும் வேருன வஸ்து ஒன்றுமே புலப்படாது. ஏனெனில் வேருன வஸ்து தோன்றுவதற்கு மூலகாரணம் பேத ஞானமன்ருே.

ஆகையால் ப்ரும்மத்தை அறிந்தவனுக இல்லாமல் ப்ரம்மமாகவே இருந்துவருகின்ற படியாலும், ப்ரம்மத்தைக்காட்டிலும் வேருன வஸ்துவே இல்லாமலிருப்பதாலும், ஆத்ம ஸ்வருபமாகிய ப்ரம்மத்தைக் காட்டிலும் வேருன வஸ்து ஒன்று இருக்கிறது என்ற

அஞ்ஞானமானது இல்லாமலிருப்பதாலும், சொல்கின்றவன்-சொல்லப்படும் பொருள்-சொல்வதை கேட்பவன்-என்ற பேத ஞானமில்லாமலிருப்பதாலும், ஒருவர்க்கு எப்படி ப்ரம்மானுபவத்தையெடுத்து சொல்ல முடியும் என்பதே அருணகிரிநாதரின் பரமஸித்தாந்த மாகும். அது உபநிஷத்துகளின் பரம ரகஸ்யமுமாகும். பரம தாத்பர்யமும் ஆகும்.

மேலும் பேத ஞானத்திலிருப்பவன் கோடிக்கணக்கான பிறவிகள் எடுத்தாலும் ப்ரம்மக்ஞானத்தை அடையவேமாட்டான். அவனுக்கு ப்ரம்மதத்வத்தின் பெருமையைச் சொல்லவும் முடியாது.

தவிர 'இன்னம்' என்பது, ஆத்மலாபத்திற்கு மேலான தத்வம் ஒன்றுமே கிடையாது என்ற மெய்ஞ் ஞானத்தைக் காட்டிலும் மேலான ஞானத்தை ஒருவன் மற்றவனுக்கு எடுத்துச் சொல்ல இயலவேயில்லை என்பதேதானாகும். எனவே,

அத்வைதானுபவமே ஆத்மானுபவமாகும். ஆத்மானுபவமே ப்ரம்மானுபவமாகும். ப்ரம்மானுபவமே முருகானுபவமாகும். முருகானுபவமே மோக்ஷானுபவமாகும். மோக்ஷானுபவமே கந்தர் அநுபூதியாகும். கந்தானுபவமே நம்முடைய நிஜஸ்வருபமாகும்.

ஆதலால் முருகப்பெருமானே 'நான் என்றும்-நானே முருகப்பெருமான் என்றும்-'முருகனைக் காட்டிலும் நான் வேறல்ல என்றும்-என்னைக் காட்டிலும் முருகன் வேறல்ல என்றும் ஒரே அகண்டாகாரமாயும்-அத்விதீயமாயும் – ஸத்தாயும் - சித்தாயும் – ஆனந்தமயமாயும்-திரிகால பரிச்சேத சூன்யமாயும் – எண்ண

வொண்ணுததாயும்–வாதத்திற்கு அப்பால் நின்ற தாயும்–ஆதியும் அந்தமுமில்லாததாயும்-தானே எல்லா மாயும்–யாவற்றிலும் தானுயும்-விளங்கி வருகிற பரப்ரம்மத்தையே,

தன்னந் தனி நின்றது

என்பதினுல் சுட்டிக் காட்டி, அந்த பரப்ரம்மமே 'நான்' என்ற சப்தத்தினுல் சொல்லப்படும் ஆத்மஸ்ருப மாகும் என்பதை இப்பாடலில்,

'**தான்**' என்பதினுல் ஸித்தாந்தம் செய்கிருர் ஞானக் கடலாகிய அருணகிரிநாதர். எனவே,

தன்னந் தனி நின்றதுதான்

மெய்ஞ்ஞானமும் மெய்ப்பொருளுமாகும் என்பதை,

பரம ஞானியாயும் யோகியாயுமுள்ள தாயுமான சுவாமிகள்,

அங்கு இங்கு எனுதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்தது

என்று எவ்வளவு அழகாக பாடி அருளியிருக்கிருர் பார்த்தீர்களா? தம்முடைய பாடல்களுக்குப் பரம மங்களமாக முதன் முதலில் பரப்ரம்மத்தையே தியானம் செய்கிருர்.

இத்தகைய பெருமையுடன் ஆத்ம ஸ்வருபமாய் விளங்கிவரும் பரம்பொருளாகிய முருகப்பெருமானின் திருவிளையாடல்களின் பெருமையையும் வேலின் ஸ்மரணமஹிமையையும் சொல்லி தன்னுடையபிறவித் துன்பங்களை நீக்கும்படி யாசித்து செல்வக்குமரனை ஆராத காதலுடன்,

மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினைவார்
கின்னங் களையும் க்ருபை சூழ்சுடரே

என்று அழைக்கின்றார் அருள்தெய்வமாகிய அருண கிரிநாதர்.

'விகிர்தா' என்றால் பலரூபங்களில் திருவிளை யாடல் செய்பவனே என்று பொருள். தன்னுடைய திருக்கரத்தில் மின்னுகின்ற கதிர்வேலைத் தூக்கி இன்னிசையுடன் ஆடும்செல்வக்குமரனைக் கண்குளிரக் காண்கின்றோம். இந் நிலையில் நமது உள்ளம் எல்லை யில்லா ஆனந்தத்துடன் மகிழ்கின்றது.

திருவிளையாடல்களைச் செய்து ஜீவகோடிகளு டைய உள்ளத்தைக் கொள்ளை கொள்கிறான் செல்வக் குமரன். அதுமட்டுமல்ல எண்ணற்றகோடி உயிர்களை யெல்லாம் தெய்வீக சிந்தனையில் கொண்டுவந்து விடுகிறான் குமரன் தன்னுடைய திருவிளையாட லினால். எனவே ஜீவகோடிகளின் ஜீவநாடியாகவிளங்கு கிறது முருகப்பெருமானின் திருவிளையாடல்கள்.

செல்வக்குமரனின் லீலைகளைச் சொல்லி மகிழ் கிறார்கள் ஞானிகளும் அடியார்களும். ஏன் தெரியுமா?

அருளோடும் அன்போடும் இணைந்த கருணை அங்கு வற்றாத பொய்கையாகத் திகழ்கின்றது. அத்வைதமாகிய மெய்ஞ் ஞானம் அங்கே மிளிர்விட்டுக்கொண்டு உல்லாசமாக உலாவுகிறது.

எனவே சாதாரண பக்தி நிலையிலிருந்து அத்வைத பக்திபர்யந்தமுள்ள நிலைகளிளெல்லாம் முருகப் பெருமான் அந்த அந்த நிலைகளுக்குத் தகுந்தவாறு

தோன்றி காட்சியளிக்கிறுர் என்பதே ‘விகிர்தா’ என்ற ஸம்போதனையின் பரம தாத்பர்யமாகும்.

இவ்வாறு லீலாவிநோதம் செய்யும் முருகப் பெருமானை,

க்ருபை சூழ் சுடரே

என்று வர்ணிக்கிறுர். இது ஒரு அபூர்வமான வர்ணனை. ‘க்ருபை’ என்ருல் காரணமின்றி ஏற்படும் கருணை என்று பொருள். ‘க்ருபை சூழ்’ என்பதி லுள்ள ’சூழ்’ என்ற பதமானது முருகப்பெருமானின் கருணையானது எண்ணிக்கையில் அடங்காதது என் பதையே எடுத்துக் காட்டுகிறது. ‘சுடரே’ என்ருல் பேரொளியே என்று பொருள்.

எனவே ஞானச் சுடராய் விளங்கும் முருகப் பெருமான் கருணையினுல் சூழப்பட்டவராய் இருக் கிறுர். கருணையென்பதே முருகனைக் கட்டிவைக்கிறது. ஒன்றினுலும் மறைக்கமுடியாத முருகப்பெருமானை கருணையானது மறைத்துவிடுகிறது. அம்மாபெரும் கருணையையே ‘அரி–அயன்–அரன் முதலிய தேவர்கள்

## கந்தன் கருணை

என்று சொல்லி அதையே நாடி நிற்கிறுர்கள். கந்தன் கருணையானது சூரபத்மாஸுரனைக் கொல்லாமல் அந்த சூரபத்மாஸுரனை,

‘மயிலாகவும் - சேவலாகவும்’

ஆட்கொண்டது. சூரபத்மாஸுரனின் உயிரினை எடுப்ப தற்காக சூரபத்மனின் மார்பைநோக்கி அதிவேகமாய்ப் பாய்ந்துவந்த வேற்படையைத் தடுத்து நிறுத்தியது எது? கந்தன் கருணை அல்லவா!!! எனவே முருகப் பெருமானின் கருணை விழாத இடமே இல்லை.

அன்பெனும் பிடியில் அகப்படும் கருணை-அடியார்களுடைய உள்ளத்தில் உறையும் கருணை-தாபங்களை போக்கடிக்கும் கருணை-அஷ்டலக்ஷ்மிகளை அளிக்கும் கருணை-அடியார்களுடைய குறைகளைத் தீர்த்துவைக்கும் கருணை - பகைவர்களை ஆட்கொண்டருளும் கருணை—ஞானத்திலே கருணை-இன்பத்திலே கருணை-அருளுவதில் கருணை-உள்ளத்திலே கருணை என்று எல்லாவற்றிலும் கருணை வடிவமாகவே சுடர்விட்டு எரிகிறது எது? கந்தன் கருணை அல்லவா!!!

எனவே கருணையின் வடிவமாகத் திகழ்கின்ற முருகப்பெருமான் 'தளிர்போன்ற' தன்னுடைய திருக்கரத்தில் 'மகிமையுள்ள மின்னும் கதிர்வேலை' தாங்கி வருகிறார். எதற்காக தெரியுமா? உயிர்களின் உள்ளத்தில் எழும் துன்பங்களை வேரோடு அறுத்து தள்ளுவதற்காக அல்லவா! துன்பங்கள் நாசத்தையடைந்தால்த்தான் உள்ளமானது ஞானத்தை நாடி நிற்கும். அத் துன்பங்களைப் போக்குவதற்கு ஒரே ஒரு சுலபமான வழிதான் இருக்கிறது அந்த வழியையே பாட்டில்,

நினைவார் கின்னங்களையும்

என்று சொல்கிறார்.

ஆகையினால் ச்ரவணம்-கீர்த்தனம் - ஸ்மரணம்—பாதஸேவநம்-அர்ச்சநம்—வந்தநம்-தாஸ்யம் - ஸக்யம்-ஆத்ம நிவேதநம்-என்ற ஒன்பது விதமான பக்திகளால் முருகனை ஆராதிப்பதற்கே இந்த அரிதாகிய மானிடப் பிறவியை எடுத்த ஒவ்வொருவனும் கடமைப்பட்டவனாகிறான். ஆகையால் முருகனை ஆராதிப்பதற்கு எவ்வளவு தூரம் இந்த ஸ்தூல சரீரத்தை காப்பாற்ற வேண்டுமோ அவ்வளவு தூரம் தேகாபிமான

மில்லாமல் ஒவ்வொருவனும் சரீரத்தைக் காப்பாற்றிக் கொண்டு முருக பக்தியில் ஈடுபடவேண்டும். தவிர எல்லா பக்திகளிலும் வைத்து,

## ஸ்மரண பக்தியே

மேலானதாகும். அதையே பாட்டில், 'நினைவார்' என்ற பதத்தினுல் அறியவேண்டும். ஆகையால் ஒவ்வொருவரும் 'ஸ்மரணம்' என்ற பக்தியையே கடைப்பிடிக்க வேண்டும்.

ஆகையால் ஹே முருகா! உன்னுடைய ஸ்மரணமே உன்னை அடைவதற்கு காரணமாக ஆகின்றது. நீயோ வெனில் ஸ்மரணத்திற்கு காரணத்தைப் பார்ப்பதில்லை. சிலர் பக்தியுடன் உன்னை நினைக்கிருர்கள். வேறு சிலர் துன்பம் வரும்பொழுதுமட்டுமே உன்னை நினைக்கிருர்கள். சிலர் சத்ருபாவத்தோடு உன்னை ஸ்மரிக்கிருர்கள். அவர்களிடத்திலும் நீ மேலான கருணையையே காட்டுகிருய்.

ப்ராணன்-மனது – இந்திரியங்கள்–புத்தி – இவைகளை அடக்கிக்கொண்டு உன்னைத் தியானம் செய்து வரும் மஹர்ஷிகளுக்கும், நீ கருணையைக் காட்டுகிருய். அதே கருணையை உன்னுடைய சத்ருக்களிடத்திலும் தாரதம்மியமின்றி காட்டுகிருய். காரணம்? அவர்களும் உன்னை ஸ்மரணம் செய்தார்கள் என்பதற்காக அல்லவா? ஆக நீ ஸ்மரணத்திற்கு காரணத்தைப் பார்க்காமல், 'நம்மை ஸ்மரித்தானு இல்லையா' என்பதையே பார்க்கிருய். காரணம் என்ன தெரியுமா? ஸ்மரணத்திற்கு ஈடாக எதையுமே சொல்லமுடியாது. சூரபத்மாஸுரனேவெனில் முருகப்பெருமானை சத்ருபாவத்துடன் இமைப்பொழுதும் நீங்காவண்ணம் உள்ளத்தில் ஸ்மரணம் செய்துகொண்டே இருந்தபடியால்த்

தான் முருகப்பெருமான் சூரபத்மாஸுரனை கருணை யுடன் அளவிலா அன்பினால் ஆட்கொண்டருளினர்.

ஸ்மரணத்தினாலேயே உன்னை அடைந்தவன் சூரபத்மன். அவனுடைய மனதிலுண்டாகும் துன்பங்கள் அனைத்தையும் கருணைக் கடலாகிய நீ உன்னுடைய மின்னும் கதிர்வேலினால் அழித்து வீழ்த்தினாய்.

ஹே குமரா! சூரியனுக்கு ஒப்பான எண்ணற்ற கோடி கிரணங்களைக் கொண்ட உன்னுடைய கதிர் வேலினை ஸ்மரணம் செய்யும்பொழுது அந்தக் கதிர் வேலானது அஞ்ஞானமாகிய பெரும் இருட்டினால் நிறைந்த உள்ளத்தில் மின்னலைப்போலத் தோன்றி அஞ்ஞானமாகிய இருட்டையழித்து ஞானமாகிய சுடரினை மிளிர்விட்டு எரியும்படிச் செய்து ஒரு நொடியில் மறைந்துவிடுகிறது அன்றோ.

எனவே வேலினுடைய ஸ்மரணமோ அல்லது 'வேலே முருகன்-முருகனேவேல்' என்ற அபேதஞான தோடுகூடிய ஸ்மரணமோ ஏற்படுமேயாகில் அவர்களுடைய ஸகலவிதமான பிறவித் துன்பங்களையும் அடியோடு யழித்து அருளுகின்ற கண்கண்ட தெய்வமாக விளங்கும் அருள் தெய்வமல்லவா நீ.

எனவே ஹே முருகா! உன்னுடைய கருணையினால் ஏதோ அரிதாகிய மானிடப் பிறவியை அடைந்திருக்கிறேன். இனிமேல் மனுஷ்ய ஜன்மாவை எடுப்பேன் யென்பதில் எனக்கு நம்பிக்கையில்லை ஐயனே. ஆகையால் இந்த மானிடப் பிறவியிலேயே என்னுடைய மனதானது உன்னிடத்தில் ரமிக்கட்டும். இடைவிடாமல் உன்னுடைய ஸ்மரணமாகவே நான் இருக்க வேண்டும். குமரா! என்னுடைய துன்பங்களை போக்-

கடித்து எனக்கு மேலான அத்வைத ஞானத்தைத் தந்து,

தன்னந் தனி நின்றது தான்

மெய்ப்பொருள் என்ற ஸ்வானுபவ நிலையாகிய,

அஹம்ப்ரும்மாஸ்மி

நிலையில் என்னை வைத்து அருள்வாய் அப்பனே என்று முருகப் பெருமானை வேண்டுகிறார் அருணகிரிநாதர்.

ஆகையால் பரப்ரம்மமாகிய முருகப்பெருமானைப் போல் மேலான கருணைக் கடலான மற்றொரு கண் கண்ட தெய்வம் உண்டு என்று சொல்லமுடியாததினால் அந்த மாபெரும் ஆறுபடை வீட்டினையுடைய முருகப்பெருமானின் சரணாரவிந்தத்தின் ஸ்மரணத்தையே,

ஜன்ம ஸாபல்ய தார்க மந்திர ஸ்மரணம்

என்று கருதி, அத்தகைய ஸ்மரணமானது எத்தனையோ கோடிக்கணக்கான ஜன்மாக்களில் செய்த தவத்தின் பலனேயாகும் என்ற ஒரு த்ருடமான எண்ணத்துடன், பரமப்ரேமையோடு அந்த முருகப் பெருமானின் பாதாரவிந்த ஸ்மரணத்தை கடைப் பிடித்துக்கொண்டு ஜன்ம ஸாபல்யத்தை அடைவதே நம்முடைய இந்த அரிதாகிய மானிடப் பிறவியின் மேலான கடமையாகும்.

என்வே 'நான்' என்ற சப்தத்தினால் சொல்லப் படும் ஆத்மஸ்வருபமே பரம்பொருளாகிய பரப்ரும்மம் ஆகும் என்ற மேலானஉண்மையை போதிக்கின்ற,

சும்மா இரு சொல் அற

என்ற மஹா மந்திரத்தின் மெய்ப்பொருளினையே,

தன்னந்தனி நின்றதுதானறிய
இன்னம் ஒருவர்க் கிசைவிப்பதுவோ

என்பதினுல் போதித்து அருளுகிருர் அருணகிரிநாதர். அதாவது ஹே உலகத்தினர்களே!

ஜீவப்ரும்ம ஐக்கிய ஸாக்ஷாத்கார பூர்ண அகண்டாகாரவ்ருத்தி ஞானுனுபவ ஆத்ம ஸ்வரூப நிலேயே பேரின்பமெனச் சொல்லப்படும் ப்ரும்மானந்த ஸ்வரூப மாகும். இவ்வாத்ம ஸ்வரூபத்தையே,

அயமாத்மா ப்ரஹ்மா

என்று நான்மறைகள் ஓயாமல் பறையடித்துக் கொண் டிருக்கின்றன. இத்தகைய பேரின்ப நிலேயில் ஆத்ம ஸ்வரூபமானது இருந்து வருகிறதென்பதை அறியா மலிருப்பதே நம்முடைய வாழ்க்கையில் ஏற்பட்டிருக் கிற மேலான துன்பமாகும். ஆக 'நான்' என்ற சப்தத் திஞல் அழைக்கப்படும் ஆத்மஸ்வரூபமே பரப்ரும்ம மாகும் என்பதினே நாம் உணராமலிருப்பதே மாபெரும் துன்பமாகுமென்றும் அதுவே எல்லாவிதமான துன்பங் களேயும் மேன்மேலும் அதிகரிக்க வைக்கிறது என்பதி ஞலும், அதுவே,

புனரபி ஜனனம் புனரபி மரணம்

என்பதை உண்டுபண்ணிக் கொண்டே யிருக்கிறது என்பதிஞலும், அம்மாபெரும் துன்பத்தையே இப் பாடலில்,

## கின்னம்

என்ற பதத்திஞல் போதித்து அம்மாபெரும் துன்பத்

தினை வேரோடு அழித்துத் தள்ளி முடிவில் எல்லாமாய் அல்லதுமாயிருந்து கொண்டிருக்கிற,

### ஸ்வஸ்ரூபானந்த நிலையில்

நாமிருப்பதற்கு ஆறுபடைவீட்டினை யுடைய முருகப் பெருமானுடைய வேல் உபாஸனையே மேலான உப நிஷத் மார்க்கமாகு மென்றும் அதனையே நாம் கடைப் பிடிக்க வேண்டுமென்றும்,

மின்னும் கதிர்வேல் விகிர்தா! நினைவார்
கின்னம் களையும் க்ருபைசூழ் சுடரே!

என்பதினால் போதித்தருளுகிறார் அருணகிரிநாதர்.

எனவே அருள்மயமாகிய அருணகிரிநாதரின் பொன்மொழிகளை சிரமேற்கொண்டு அப்பொன்மொழி களே 'முக்திக்கு வழிகாட்டி' என்பதினை நன்குணர்ந்து நாம் இடை விடாமல்,

### வேல்முருகா - வேல்முருகா

என்பதினையே தாரகமந்திரமாய் வைத்துக்கொண்டு இப்பாடலின் மூல்மாக கந்தர் அநுபூதியில், பேத ஞானத்தோடு கூடிய நமது உள்ளத்தைக் கரைத்து **'நான்-நீ'** என்ற வேற்றுமையோடு கூடிய பேத ஞானத்தை அடியோடு அறுத்துத்தள்ளி,

எல்லாமாய் அல்லதுமாய்

விளங்கி வருகிற ஆத்மஸ்வருபமே முருகப் பெருமானு வார் என்ற ஒரு த்ருடமான உணர்வுடன்,

### முருகானந்தத்தில்

கலந்து இமைப்பொழுதும் நீங்காமல் இன்புற்று இருப்போமாக.

யம் லப்த்வா சாபரம் லாபம்
மந்யதே நாதிகம் தத :

என்று பகவான் கீதையில் சொல்கிறார். அதாவது எது ஒன்றை அடைந்து விட்டால் வேறு லாபத்தை, அதைக் காட்டிலும் மேலானதாக எண்ணமாட்டானோ அது ஒன்றுதான் அடையத்தக்க பொருளேயாகும். அப்பொருளை அடைய சித்த சுத்தி நிறைய வேண்டும். சித்த சுத்தியை அடைய 'வேல் முருகா—வேல்முருகா' என்று சொல்லிக் கொண்டே யிருக்க வேண்டும். அப்பொழுது சித்தமலம் அழிகிறது. நாம் சிவம் ஆகிவிடுகிறோம். சிவம் ஆகிறோம் என்பதுதான் ஜீவன் முக்தி நிலை. எனவே கந்தர் அநுபூதியின் பாராயணத்தினால் நாம் அடைய முடியாதது எதுவுமே யில்லை. இது முற்றும் உண்மையே ஆகும்.



# தர்மத்தின் வடிவமே வீரஸேஞதிபதியாகிய முருகப்பெருமான்

# 50



மதிகெட் டறவாடி மயங்கி யறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்
நதிபுத்திர ஞான சுகாதிபவத்
திதிபுத்திரர் வீறடுசேவகனே.

**பதவுரை**

நதி புத்திர-கங்கா தேவியின் புத்திரனே, ஞான சுகாதிப—ஞானத்திஞல் வரும் சுகங்களுக்கெல்லாம் மேலான சுகஸ்வருபமாய் விளங்குபவனே, அத்-அந்த, திதி-(காச்யபமஹர்ஷியின்) தர்மபத்தினியான திதி என்பவளின், புத்திரர்-புதல்வர்களான அசுரர்களின், வீடு அடு—அஹங்காரம் மமகாரம் இவைகளிஞல்எழுந்தகர்வத்தைஅழித்த,சேவகனே-வீரஸேஞதிபதியே, மதிகெட்டு—புத்தியானது விவேக சக்தியை இழந்து கெட்டு, அறவாடி—அறநெறியில் நில்லாமல் அதஞல் மனதானது வாட்டத்தை அடைந்து, மயங்கி—(அதன் காரண

மாக) பொய்யாகிய உலக வாழ்க்கையில் மயங்கி அதையே பேரின்பம் எனக் கொண்டு, அற கதி கெட்டு-தர்மத்தினுல் அடையக் கூடிய பரகதியாகிய மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை இழந்து, அவமே-(மானிடப் பிறவியை அடைந்ததற்கு ஒரு விதமான) பயனுமில்லாமல் வீணுக, கெடவோ-அழிந்து கெட்டு போவதற்காகவா, கடவேன்—நான் அரிதாகிய இந்த மானிடப் பிறவியை அடைந்திருக்கிறேன்.

தர்மநெறியில் நின்று உன்னுடைய திருவடி நிழலேயடைவதற்காக அல்லவா நான் இந்த அரிதாகிய மானிடப் பிறவியை அடைந்திருக்கிறேன் என்பது பொருள்.

**தாத்பர்யம்:**

கங்காதேவியானவள் சிவபெருமானுடையநெற்றிக் கண்ணிலிருந்து வெளிவந்த ஆறு செஞ்சுடர்களேயும் சரவணப்பொய்கையில் விட்டமையினுல் 'நதிபுத்திர' என்று அழைக்கிருர். ஆனுல் இங்கு கங்காதேவியின் புதல்வனே என்று முருகனேயழைப்பதில் அருணகிரி நாதரின் தாத்பர்யமல்ல. ஆகவே என்றென்றும் வற்ருமல் பெருகி ஓடிக்கொண்டிருக்கும் கங்கையின் ஸ்மரணத்தை உண்டு பண்ணுகிருர். ஏன் தெரியுமா? கங்காதேவியின் கருணேயை எடுத்துக் காட்டவே அன்ருே.

எனவே ஹே முருகா! கங்காதேவியானவள் பக்த கோடிகளே ரக்ஷிக்கவேண்டும் என்ற ஒரே கருணேயினுல் ஜன்குமஹர்ஷியினுல் சபிக்கப்பட்டு சாம்பலாகிய ஸகர மஹாராஜாவினுடைய அறுபதினுயிரம் புத்திரர்களேயும், தன்னுடைய ஸ்பர்சத்தினுல் அம்ருதாளகச் செய்தாளோ, அத்தகைய அம்ருதஸஞ்ஜீவினியைப் போல் விளங்கிவரும் உனது தாயாகிய கங்காதேவியின் கருணேயெல்லாம் உன்னிடமே குடி

கொண்டிருக்கின்றனவே. இவ்விதம் நீ அம்ருதஸ்வரூப மாக இருந்துகொண்டு எண்ணற்ற ஜீவகோடிகளின் மேல் கருணையாகிய அம்ருதத்தை வர்ஷித்து அவர் களுடைய தாபத்திரயங்களையும் போக்கடித்து அவர் களை உஜ்ஜீவிக்கச் செய்கிறாய்.

அதுமட்டுமல்ல நீ 'ஞானசுகாதிபவனாகவும்' இருக் கிறாய்.

ஞானம் என்றால் அத்வைத ஞானமேயாகும். மற்ற பேத ஞானத்தினால் உண்டாகும் சுகமெல்லாம் கொஞ்சகாலம் சுகமாகத் தோன்றுமேயொழிய நாளடை வில் சுகமற்றதாகவே ஆகிவிடுவதுமல்லாமல் துன்பத் தினையே விளைவிக்கும்.

ஆதலால் ஞானத்தினால் உண்டாகும் சுகமோ வெனில் மோக்ஷத்திற்கு அந்தரங்க ஸாதனமான ஜீவ-ப்ரம்ம ஐக்யஸாக்ஷாத்காரமேயாகும். இதுவே மெய் யறிவும் மெய்யுணர்வும் ஆகும். பேதஞானத்திலிருந்து ப்ரம்ம ஞானம்வரையிலுள்ள ஸகல ஞானங்களையும் பந்தத்திற்கு மூலகாரணமென்று நீ ஸகல பேத ஞானங்களையும் அத்வைத ஞானமாகிய நெருப்பினால் பொசுக்கி விடுகிறாய் அன்றோ. பேத ஞானமே கர்மாவை செய்வதற்கு மூலகாரணம்.

ஆனால் நீயோவெனில் 'த்வம்' பதார்த்தமாகிய ஜீவனுக்கும் 'தத்' பதார்த்தமாகிய ஈச்வரனுக்கும் ஐக்யத்தை போதிக்கின்ற 'தத்வமஸி' என்ற வாக்கி யத்திலிருந்து ஸ்வானுபவமாக உண்டாகிற ஞானானந்தமயசுகஸ்வரூபமாகவேஇருக்கிறாய். எனவே ஸகல ஞானங்களுக்கும், அந்த அந்த ஞானங்களினால் உண்டாகிற சுகத்திற்கும் நீயே இருப்பிடமாய் விளங்குகிறாய். எனவே ஸகல சுகங்களும் ஞானசுகா

திபனுன உன்னிடம்தான் ப்ரதிஷ்டிதமாயிருந்து வரு கிறது. ப்ரளயகாலத்திலும் உன்னிடமே ஸகல சரா சரங்களும் லயிக்கிறது. இதனுலேயே உன்னை ஞானிகள் ஞானசுகாதிபனுகப் பார்த்து அனுபவிக்கிருர்கள்.

இவ்விதம் ப்ரம்மானந்த சுகஸ்வருபனுய் விளங்கி வருகிற நீ கருணையினுல் தேவஸேனுதிபதியாகத் தோன்றினுய். எதற்காக? 'திதி' என்பவளுடைய புத்திரர்களான அஸுரர்களுடைய கர்வத்தை வேரோடு அழித்துத் தள்ளுவதற்காக அல்லவா.

மேலும் 'திதி' என்பவள் காச்யப மஹர்ஷியின் தர்மபத்தினியாவாள். 'திதி' புத்திரர்களான அஸுரர் களே தைத்யாள் என்று சொல்லப்படுகிருர்கள்.

தவிர 'அத்-திதி-புத்திரர்' என்பதிலுள்ள, 'அத்' என்ற பதமானது அந்த ஸுப்பிரஸித்தமான அஸுரர்களையே குறிக்கிறது. அதாவது அஸுரர்களிடத்திலுள்ள பாபச்செயல்களையும், கெட்ட எண்ணங்களையும், அவர்களுடைய ஆணவத்தையும், அவர்களுடைய பலவிதமான மாயாசக்திகளையும், அஹங்காரமமகாரங் களின். பாபச்செயல்களையும் எடுத்துக்காட்டி அத் தகைய துர்குணங்கள் தேவர்களிடத்தில் இல்லையென் பதை த்வனிக்க வைக்கிறது.

தவிர தர்மமானது தேவர்களிடத்திலும் அதர்ம மானது அஸுரர்களிடத்திலும் தலைதூக்கி நின்றுவருவ தாலும், அப்படியே

துஷ்ட நிக்கிரஹ சிஷ்டபரிபாலனம்

செய்வதற்கென்றே முருகப்பெருமானின் அவதாரம் ஏற்பட்டிருப்பதால் முருகப்பெருமான் வீரஸேனுதி

பதியாகத் தோன்றி அஸுரர்களுடைய கர்வத்தை அடியோடு அழித்துத் தள்ளினர். எனவே

வீறு அடு சேவகனே

என்ருர். 'சேவகன்' என்ற பதத்திற்கு 'வீரன்' என்று பொருள். உட்பொருளோவெனில் சேதனரூபமாயும் அசேதனரூபமாயுமுள்ள இந்தஜகத்தை இச்சமாத்திரத்தால் ஸ்ருஷ்டிக்கவோ-பரிபாலிக்கவோ - ஸம்ஹரிக்கவோ-சக்தியுள்ளவனுக முருகப்பெருமான் இருந்து வருவதால் முருகப்பெருமானை எதையும் செய்ய சக்தி வாய்ந்த 'மஹா ஸமர்த்தன்' என்ற அர்த்தத்தினுல் 'வீறு அடு சேவகனே' என்று புகழ்கின்ருர். ஆதலால் அஞ்ஞானத்தையும் ஆணவத்தையும் அழிப்பதும், முருகனே. ஞானத்தை அளித்து ஆத்மசுகத்தை தருப வனும் முருகப்பெருமானே ஆவார் அன்ருே.

ஆகையினுல் **'நதிபுத்திர'** என்பதினுல் கங்கா தேவியின் மாபெரும் கருணையெல்லாம் முருகனிடம் குடிகொண்டிருக்கிறது என்பதையும், அப்படியே **'வீறு அடு சேவகனே'** என்பதினுல் நிக்ரஹ சக்தி மஹிமையும், அப்படியே **'ஞானசுகாதிப'** என்பதினுல் அனுக்கிரஹ சக்தி மஹிமையும் முருகப்பெருமானிடம் அலங்காரமாக விளங்கி வருகிறதென்பதை சுட்டிக் காட்டுகிருர் அருணகிரிநாதர்.

எனவே பக்தகோடிகள் பக்தியின் உச்சநிலையிலும் ஞானிகள் தங்களுடைய ஆத்மானுபவ உச்சநிலையிலும் அனுபவித்து வருகிருர்களே 'பேரின்பம்-பேரின்பம்' என்று ஒரு நித்யானந்தமான சுகம்—அந்த சுகமே முருகப்பெருமானுவர். உயிர்களுக்கெல்லாம் அமரத்துவம் அளித்துவரும் ஞானப்பெருங்கடலாகிய செல்வ குமரனிடம் அருணகிரிநாதர்

மதிகெட் டறவாடி மயங்கி யறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்

என்று வேண்டுகிருர்.

'மதி' என்ருல் 'புத்தி' என்று பொருள். எல்லா வற்றிற்கும் மேலான தத்துவமே 'புத்தி தத்துவ மாகும்.' மனதிற்கு மேலான நிலையில் புத்தி நிற்கிறது.

ஒரு காரியத்தைச் செய்ய வேண்டுமா அல்லது செய்ய வேண்டாமா என்ற தீர்மானத்தைச் செய்யும் சக்தி விசேஷமே புத்தியாகும்.

புத்தியானது, விவேக சக்தியை இழக்குமேயாகில் அந்த புத்தியானது அதர்மத்தையே 'தர்மம்' என்று தீர்மானித்து அதர்மநெறியிலேயே நின்றுவரும். இத ஞல் மனதானது வாட்டத்தை அடைந்துவிடும். வாட் டத்தையடைந்த மனதானது பொய்யாகிய உலகி லிருந்து இன்பத்தையடைய எண்ணுகிறது.

உலக சுகத்தில் 'புத்தியும்-மனதும்' ஈடுபடுமே யாகில் அந்த புத்தியானது விவேகத்தை முற்றிலும் இழந்ததாகவே ஆகிறது.

எனவே மனதானது மயங்கிநிற்கும்போது இந்திரி யங்கள் ஆகிய குதிரைகள் தம்மிஷ்டம்போல் ஸஞ் சரித்துக்கொண்டேயிருந்துவரும். புத்தியானது மனதை அடக்கிஞல் இந்திரியங்கள் தாஞகவே அடங்கிவிடும். ஆஞல் மனதை அடக்குவது சுலப மான கார்யமல்ல.

புத்தியானது ப்ரம்மவிசாரம் செய்யாதவரையில் உலக ஆசையானது புத்தியை வ்யாமோகப்படுத்திக் கொண்டேதானிருக்கும். இந்திரியங்களோ வெனில்

மனதை பலாத்காரமாகத் தன் வசமாக்கிக்கொண்டு மனதை அழித்துவிடும். இந்திரியாதிகள் பரம சத்துருக்களேயாகும். இந்திரியநிக்ரஹம் இல்லாதவனுக்கு ப்ரம்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படாது.

மேலும் மனதினுடைய சேர்க்கையினுல்த்தான் இந்திரியங்களுக்கு ராக த்வேஷம் உண்டாகிறது. மனதிலேயே 'ராக—த்வேஷத்தை' இல்லாமல் செய்துவிட்டால் மனதினுடைய ஸம்பந்தத்திஞலும்கூட இந்யங்களுக்கு ராகத்வேஷம் ஏற்படாது அன்ரு.

ஆகையால் ஸகலத்திற்கும் மூலகாரணம் புத்திதிரியானது விவேகத்தை இழப்பதினுல் அல்லவா.

புத்தி கெட்டுவிடுமேயாகில் மனதானது அழுக்கடைந்ததாக மாறி பாபகர்மாக்களேயே செய்துவரும். பாபகர்மாக்களினுல் தர்ம நெறியானது அழிந்து விடுகிறது. முடிவில் அதர்மத்தை செய்துவரும் நாம் அரிதாக அடைந்த மானிடப் பிறவியின் பயனேயடையாமல் பிறந்துகொண்டும் இறந்துகொண்டும் பிறவிக் கடலில் மூழ்கித் தத்தளிக்கிரும் அன்ரு.

இந்த உண்மையை பகவத் கீதையில் கிருஷ்ண பரமாத்மாவானவர்,

வாயுர் நாவாமிவாம்பஸி

என்று சொல்கிருர். அதாவது கடலில் காற்றினுல் பாதிக்கப்பட்ட கப்பல்போல் என்று பொருள்.

ஸமுத்திரத்தில் கப்பல் போய்க்கொண்டிருக்கும் பொழுது ஒருபெரியபுயல்காற்ருனது அடிக்குமேயாகில் அவ்வேளேயில் கப்பலே ஓட்டுகிறவன் நங்கூரத்தை ஸமுத்திரத்தில் இறக்கிக் கப்பலே அசையாவண்ணம்

செய்து கப்பலைக் காப்பாற்றுகிருன். இதற்கு மாருக கப்பலை ஒட்டுகிறவன், புயல் காற்றை அனுஸரித்தே கப்பலை ஓட்டுவானேயாகில் முடிவில் கப்பலானது புயல் காற்றில் சிக்கிக்கொண்டு ஸமுத்தி ரத்தில் மூழ்கி நாசத்தையடைகிறது.

அதுபோலவே பிறப்பு இறப்பு என்ற ஸம்ஸார ஸமுத்திரத்தில் தத்வஞானம் என்ற கப்பலில் ஏறிக் கொண்டு மோக்ஷம் என்ற முக்திஸ்தலத்தை நோக்கிச் சென்று கொண்டிருப்பவனுக்கு அவனுடைய புத்தியே கப்பலை ஓட்டுகிறவனுக ஆகிறது.

விஷயாதிகளில் அதாவது 'பெண்ணுசை-பொன் ஞசை-மண்ணுசை' இவைகளை அனுபவிப்பதற்காக இவைகளிடத்தில் ஸஞ்சாரம் செய்து கொண்டிருக்கிற 'மனதையும் இந்திரியங்களையும்மே புயல்' என்று அறிய வேண்டும். அந்த மனதின் நிலையை அனுஸரித்தே புத்தியாகிய கப்பலோட்டுபவன் 'தத்வஞானம்' என்ற கப்பலை ஓட்டாமல் கவனிக்கவேண்டும்.

விஷய சுகங்களை பானம் செய்துகொண்டிருக்கிற மனதாகிய புயல்காற்று அடிக்கும்பொழுது 'தத்வ ஞானம்' என்ற கப்பலை ஓட்டிக்கொண்டிருக்கும் புத்தி யாகியவன் விவேகத்தினுல் ஞானமாகிய கப்பலை நிறுத்தவேண்டும். எதனுல் தெரியுமா?

முருகப்பெருமானுடைய திவ்யமான மங்கள விக் ரஹத்தை இடைவிடாமல் அனுஸந்தானம் செய்கிறது என்ற நங்கூரத்தைப்போட்டு ஞானமாகிய கப்பலை ரக்ஷிக்கவேண்டும். இதனுல்தான் ஔவைத்தாயானவள் பச்சைமரத்தில் ஆணியடிப்பதுபோல்

மனம் போன போக்கெல்லாம் போகவேண்டாம்

என்று சொல்லி நமக்கு வழிகாட்டியிருக்கிருர்கள்.

அப்படி 'மதியானது' என்றும் கெடாமல் ஒரே தர்மநெறியிலிருக்கவேண்டுமானல் நாம் ஸதாகாலமும் முருகப்பெருமானின் திவ்யகதாம்ருதத்தையே பானம் செய்து கொண்டிருக்கவேண்டும். மனதை முருகனிடத்தில் அர்ப்பணம் செய்து செய்கின்ற காரியங்களையெல்லாம் முருகப்பெருமானின் ஆராதனை ரூபமாகவே பக்தியுடன் செய்யவேண்டும்.

அவ்விதமான மனதிற்குவச்யமான இந்திரியங்கள் விஷயாதிகளுடன் கலந்துயிருந்தாலும் ராகத்வேஷம் இல்லாத காரணத்தினுல் ஒருவிதமான துன்பத்தையும் உண்டுபண்ணுது. இது எதைப்போல் என்ருல் ஒரு குழந்தையினிடத்தில் ஒரு யுவதியின் ஸ்பர்சம் உண்டாகுமேயாகில், அந்த யுவதியின் ஸ்பர்சத்தினுல் அந்தக்குழந்தையானது ஒருவிதமான வ்யாமோகத்தையும் அடைவதில்லை. இதற்குக் காரணம் என்ன? அந்த குழந்தையினிடத்தில் ராகத்வேஷமில்லை. ராகத்வேஷத்தோடு கூடிய விஷய ஸம்பந்தமே மனிதனுடைய வாழ்க்கையை நாசமாக்குகிறது.

மனதானது ராகத்வேஷத்தினுல் கட்டப்படும் பொழுது, விஷயசுகத்தையே மேலானதாக எண்ணுமே தவிர தர்மத்தினுல் உண்டாகும் சுகத்தை மேலானதாக எண்ணுது. இதன் காரணமாக 'அற–கதி' கெட்டு விடுகிறது. 'அற-கதி' என்ருல் மோக்ஷஸாம்ராஜ்யம் என்று பொருள். அதாவது 'அறம்' என்று சொல்லப்படும். தர்மத்தின் வீடே மோக்ஷமாகும். எனவே மனதானது அழுக்கடைந்து தர்மத்தை மறைத்து அதர்மத்தை தர்மம் என்று நினைக்குமேயாகில் அந்த இடத்திலேயே தர்மம் செத்துவிடுகிறது.

ஆதலால் மதிகெட்டு மனதானது விஷயசுகத்தை அனுபவித்துக் கொண்டிருக்குமேயாகில் அந்த மன தானது அழுக்கடைந்ததாகவேயாகிறது. இவ்விதம் அழுக்கடைந்த மனதுடன் அனுஷ்டிக்கும் மௌன விரதமோ, பூஜைகளோ முதலியவைகள் மனதிலுள்ள இருளைப் போக்கடிக்காது. மேலும் பிறவியாகிய துன் பத்தையும் அறுக்காது. இதை சிவவாக்கியர்

மனத்தகத் தழுக்கருத
மௌன யோக ஞானிகள்
வனத்தகத் திருப்பினும்
மனத்தகத் தழுக்கறுர்,
மனத்தகத் தழுக்கறுத்த
மௌனயோக ஞானிகள்
முலத்தடத் திருப்பினும்
பிறப்பறுத் திருப்பரே

என்று சொல்கிறுர்.

எனவே புத்தியான ஸாரதியானவன் சரீரமென் னும் தேரில் அமர்ந்துகொண்டு இந்திரியங்களாகிய குதிரையைப் பூட்டி, அந்தக் குதிரைகளை மனதாகிய கயிரால் கட்டி விவேகமென்ற சாட்டையால் அடித்து தர்மமாகிய பாதையில் ஒட்டிச் செல்லும் பொழுது இந்தச் சரீரமானது ஒருவிதமான ஆபத்துமில்லாமல் முக்தியாகிய வீட்டைநோக்கி சென்றுகொண்டிருக்கும்.

எனவே ‘மதியாகிய புத்திகெட்டு’ விட்டால் ‘கதியே’ கெட்டுப்போய்விடும். நாம் அடையவேண்டிய லக்ஷ்யமே ‘கதி’யாகிய பேரின்ப நிலையாகும். மதி கெடாமல் இருக்கும் வரையில்தான் நாம் தர்மசிந்தனை யில் இருப்போம். மதியானது கெடுமேயாகில் அப் பொழுது ‘விதியானது’ தீவிரமாக வேலை செய்யும்.

தவிர எதைச் செய்ய வேண்டும்? எதைச் செய்யக் கூடாது? தர்மநெறியிலிருந்து நழுவி அதர்மத்தை செய்கிறோமே. இதனால் நாம் நரகத்தை அடைவோமே.

அரிது அரிது மானிடப்பிறவி அது அரிது அரிது என்று இருக்கும்பொழுது எத்தனையோ பிறவிகளில் செய்த புண்ணிய வசத்தினால் அரிதாக அடைந்த இந்த மானிடப்பிறவியை வீணாக்குகிறோமே. தர்மத்தினால் சுகமும் அதர்மத்தினால் துன்பமும் ஏற்படும்பொழுது நாம் ஏன் தர்ம நெறியில் நில்லாமல் அதர்ம நெறியில் நிற்கிறோம் என்ற விவேக ஞானமே நம்மைவிட்டுப்போய் விடும். அதனால் விளையும் துன்பங்களே எண்ண முடியாத அளவில் உண்டாகுகிறது.

இதனால் ஹே முருகா! அறிவும் அறியாமையும் கடந்த 'அறிவு' உன்னுடைய திருமேனி என்று உணர்ந்து உன்னுடைய திருவடியை என்று நான் அடையப் போகிறேனோ தெரியவில்லை. அடியார்களுடைய துன்பங்களைப் போக்கடிக்கும் அருள் தெய்வமே! நான் மதிகெட்டு அதனால் கதியும் கெட்டு அழிந்துபோவது உனக்கு ஞாயமாகுமோ ஐயனே? முருகா! ஞானபண்டிதனே உன்னுடைய பெருமையைநான் நன்குஅறிவேன்.

குமரா! அறிவினால் உண்டான செருக்கை அடியோடழிக்கும் தெய்வமே, உனது பெருமையை அறியாமல் நான்முகனாகிய ப்ரம்மாவானவர் புத்தியில்லாமல்செருக்கினால் உன்னை மதிக்காமல் சென்றபொழுது அவருடைய கதியையே அழித்து ப்ரம்மாவை சிறையிலிட்டு பின்பு கருணையினால் ப்ரம்மாவிற்கு நற்புத்தியைப் புகட்டிய அருள் தெய்வமல்லவா நீ.

குமரா! அணுவுக்கு அணுவாயும் பெரிதிற்கு பெரிதாயும் இருந்துவருகிற ஞானக்கடலே! விதியானது

என்னிடம் விளையாடும் பொழுது என்னுடைய மதி யானது கெட்டுவிடுகிறது. அதனுல் நான் கதிகெட்ட வனுக ஆகிறேன்.

ஹே குமரா! சிலர் மதியினுல் விதியை வெல்லலாம் என்கிருர்கள். வேறு சிலர் விதியை வேறு ஒன்றினுலும் வெல்லமுடியாதென்கிருர்கள். ஆனுல் விதியை மதி யினுல் வெல்லமுடியாதென்பது உண்மையே. அதுவே சாஸ்திர ஸம்மதமும் ஆகும்.

ஸ்ரீ ராமபிரானை விதியானது கானகத்திற்கு செல்ல வைத்தது. அந்த விதியை ராமபிரான் எவ்விதம் வென்ருர். மதியினுல் வென்ருர். விதியை மதியினுல் வெல்லமுடியாததென்று வென்று உலகத்திற்கு காட்டி அருளினுர்.

அதுபோல் விதியானது என்னிடம் விளையாடும் பொழுது என்னுடைய மதியானது கெட்டுவிடும் அன்ருே. ஆகையினுல் என்னுடைய புத்தியை உன் னுடைய அருளினுல் நிறைந்ததாக செய்வாயேயாகில் அப்பொழுது அந்த அருள் நிறைந்த மதியினுல் விதியை வெல்லமுடியுமே, அதாவது விதியானது என் னிடத்தில் விளையாடினுலும் கூட அந்த விதியினுல் உண்டு பண்ணப்படும் துன்பங்களைத் தாங்கும் சக்தியைஅருள் நிறைந்த 'மதி' தருமல்லவா!

ஆதலால் செல்வக் குமரா!

அவன் அருளாலே அவன்தாள் வணங்கி

என்று மாணிக்கவாசக சுவாமிகள் ஏன் சொல்லியிருக் கிருர். உன்னுடைய அருளினுல் ஆகாதது ஒன்றுமே இல்லை என்பதற்காக அல்லவா!

குமரா! உன்னுடைய அருள் ஒன்றுமட்டும் இருக்குமேயாகில், விதிமட்டுமல்ல, அந்த விதியை ஒவ்வொரு பிராணிகளுடைய தலையில் எழுதும் ப்ரம்மாவையே வென்று விடலாமே, அழியக்கூடிய ப்ரும்ம பதவியை வஹிக்கும் ப்ரும்மாவை ஏன் உனது அருளினுல் வெல்ல முடியாது.

ஆப்ரம்ஹ புவநான் லோகா :
புநரா வர்த்திஞேர்ஜுன
மாமுபேத்யது கௌந்தேய
புநர்ஜன்ம ந வித்யதே

என்று கீதா சாஸ்திரமானது ப்ரும்மலோகத்தை யடைந்தாலும் திரும்பி வந்து பிறவியை எடுத்துதான் ஆக வேண்டுமென்றும், என்னையடைந்தாயே யாஞல் புனர்ஜன்மமே யில்லையென்றும் போதிக்கும் பொழுது உன்னுடைய அருளினுல் அடைய முடியாதது என்ருே, ஆகாதது என்ருே ஒன்றுமே இல்லை.

ஆகையினுல் குமரா! நான் உன்னுடைய அருளையே நாடி நிற்கிறேன், அந்த அருளை அடைவதற்குள்ள ஆற்றலை எனக்கு அளிப்பாய். உன்னைப் பற்றிப் பாடுவதையே எனக்குப் பணியாக அளிப்பாய். குன்றெல்லாம் சென்று உனது திருவிளையாடலைக் காணும்பாக்கியத்தை தருவாய்! கனவிலும் நினைவிலும் உன்னை நினைக்கும் வண்ணம் செய்வாய்.

குமரா! உனது அருளின் பெருமையானது எண்ணவொண்ணுததாக திகழும்பொழுது நான் மதிகெட்டு மயங்கி தர்ம நெறியிலிருந்து தவறி பாபகர்மாக்களைச் செய்துகொண்டு முடிவில் என்னுடைய அரிதாகிய மானிடப்பிறவியை வீணுக்கிக் கொண்டு, முடிவில் மண்ணேடு மண்ணுய் அழிந்து போவது அருள்கடலாய் விளங்கும் உனக்கு நியாயமாகுமா அப்பனே.

எனவே ஹே கங்காதேவியின் செல்வக்குமரனே! ஞானசுகாதிபனே வீராதி வீரனே உன்னை கபடமற்ற நெஞ்சினால் கையாற தொழுது வேண்டுவது ஒன்றே ஒன்றாகும்.

அந்த ஒன்றேவெனில், நீ ஒருவனே தெய்வமென்ற ஞானம் வேண்டும். நீ ஒருவனே விதியையழிக்க வல்லவன் என்று ஞாலமெல்லாம் நான் புகழ்ந்து பேச வேண்டும். நீ ஒருவனே அண்டசாரங்களையும் ஆட்டி வைக்கிறாய் என்ற மெய்யுணர்வு எனக்கு வேண்டும். நீ ஒருவன் ஆடினால்த்தான் உலகனைத்தும் ஆடும் என்ற அநுபவ ஞானம் எனக்கு உண்டாக வேண்டும். முடிவில் ஒருவனாய் எல்லாவற்றிலும் உறைந்து நிற்கின்ற உன்னிடத்தில்நான் ஒன்றேடொன்றாய் கலந்துஎல்லாம் முருகனின் ஸ்வரூபமே யாகும் என்ற நிலையை அடைவேண்டும். என் இச்சையைப் பூர்த்தி செய்து அருள்வாய் அப்பனே. முருகா! வீரஸேனாதிபதியாகிய நீ என் இதயத்தில் இருக்க நான் ஒரு காலத்திலும் அழிய மாட்டேன்.



# ஞானப்பழமே!

## ஞான குருவாய் வந்து அருள்வாய் அப்பனே!

# 51



உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

**பதவுரை**

உருவாய்–உருவத்தோடு விளங்கும் ஸகுண ப்ரம்மமாயும், அருவாய்-ரூபமில்லாத நிர்குண ப்ரம்மமாயும், உளதாய்-முக்காலத்திலும் பரிச்சேதமில்லாமலிருக்கிற ஸத்தான பொருளாயும்–பக்தர்களுக்கு ப்ரத்யக்ஷமாய் விளங்குபவனுயும், இலதாய்–மூன்று காலங்களிலும் உண்மையிலேயே இல்லாத அஸத்தான வஸ்துவாயும்–பக்தியில்லாதவர்களிடத்தில் புலப்படாமல் மறைந்து இருக்கிறவனுயும், மருவாய்–நறுமணமாயும், மலராய்–மலராகவும், மணியாய்-மணியாகவும், ஒளியாய்–ஒளி ஸ்வரூபமாயும், கருவாய்–உடலாகவும் அவ்

வுடலில் உயிராகவும், உயிராய்—உயிருக்கு உயிராகவும், கதியாய் - மோக்ஷஸ்வரூபமாயும், விதியாய் — அம்மோக்ஷத்தையடைய அந்தரங்க ஸாதனமாயுள்ள வேதம்-சாஸ்திரம்-புராணம்-ஆகமம் முதலிய அறநெறி ஸ்வரூபமாயும் விளங்கி வருகின்ற, குகனே—இதயமாகிய குகையில் வசிக்கின்ற ஹே முருகப் பெருமானே, குருவாய்-நீ ஞானகுருவாய், வருவாய்—(என் கண்முன்) எழுந்தருளி வந்து, அருள்வாய்—அடியேனுக்கு அருள் புரிவாயாக.

**தாத்பர்யம்**

எல்லாவற்றையும் முருகனையும், முருகனிடத்தில் எல்லாவற்றையும் பார்த்து அனுபவித்துக்கொண்டே

**எல்லாம் முருகமயம்**

என்று கந்தர் அநுபூதியை பூர்த்தி செய்கிறார் அருணகிரிநாதர்.

பரம்பொருளாகிய முருகப் பெருமானுடைய ஸ்வரூபத்தை அறிவதென்பது மிகவும் ஸாஹஸமாகும். வேதங்களெல்லாம் ஒன்று சேர்ந்து பரம்பொருளை அழைத்தாலும்கூட, அம்மூலப் ப்ரமாணங்களான வேதங்களுக்கே இறைவன் புலப்படாமல் விளங்கி வருகிறார்.

எனவே முருகப்பெருமானை அருவாய் என்றழைக்கிறார் அருணகிரியார். ஒரு ரூபத்தைக்கொண்டு அதன் மூலமாக இறைவனை அறிய முடியுமோ? எல்லாவித பேத ஞானங்களையும் தன்னுள் அடக்கிக்கொண்டு எவ்விதம் ஆகாசமானது ஒப்புயர்வு அற்று விளங்குகிறதோ, அதுபோலவே இறைவனும் ஸகலவிதமான பேதங்களையும் பேதமற்ற தன்னிடத்தில் அடக்கிவிடுகிறார். ஆகவே இறைவனைக் காட்டிலும் வேறான

வஸ்து ஒன்று இருந்தால் அன்றோ இறைவனுடைய நிர்குண ஸ்வரூபத்தைப்பற்றிப் பேசுவதற்கு.

'ஜீவாத்மா வேறு—பரமாத்மா வேறு' என்று சுட்டிக்காட்டுவதற்கு 'த்வைதம்' என்ற சொல்லானது ஆளப்படுகிறது. த்வைத நிலையைத் தாண்டிவிட்டால் இருப்பது ஒரே ஒரு பொருள்தான் யிருக்கிறதென்ற நிலை வரும்பொழுது 'ஏகம்' என்று சொன்னால் போதாதா? ஏன் 'அத்வைதம்' என்று சொல்கிறோம் தெரியுமா?

உண்மையில் வேதங்களுக்கு ஒன்று என்றோ இரண்டு என்றோ மூன்று என்றோ வாதிப்பதில் நோக்கமில்லை. ஆனால் ப்ரம்மத்தைக் காட்டிலும் வேறான வஸ்துவேயில்லை என்பதைப் போதிப்பதிலேயேதான் மேலான நோக்கமாகும். ஆகவே 'அருவாய்' என்பதினால் ரூபமில்லாமலும் ஒருவித குணமும் இல்லாமலும் விளங்கி வருகிற நிர்குண ப்ரம்மத்தையே சுட்டிக்காட்டி ஸகலமும் முடிவில் நிர்குண ப்ரம்மத்திலேயே பர்யவஸானத்தை அடைகின்றது என்ற மேலான உபநிஷத் தத்வத்தையே போதிக்கின்றார் அருணகிரிநாதர்.

சாந்தோக்யோபநிஷத்தில் உத்தாலகர் என்ற மஹர்ஷியானவர் ச்வேதகேது என்கிற தன் சிஷ்யனை அழைத்து, அப்பா ச்வேதகேது!

ஸதேவ ஸெளம்ய இதமக்ரே ஆஸீத்

என்று உபதேசித்து, முடிவிலும்

ஐததாத்ம்யமிதம் ஸர்வம்

என்று உபதேசிக்கின்றார். ஆதலால் ஆரம்பத்திலும் முடிவிலும் நிர்குண ப்ரம்மமே போதிக்கின்றபடியால்

ப்ரம்மத்தைக் காட்டிலும் வேருன வஸ்துவேயில்லை யென்பதுதான் வேதங்களின் பரம ஸித்தாந்தமாகும்.

எங்கும் எல்லாமாய் பரப்ரம்மமானது நிறைந்து விளங்குகின்ற படியால் பரப்ரம்மத்தை ஒரு ருபத்தில் ஆரோபணம் செய்து ப்ரம்மத்தினுடைய ஸ்வருப லக்ஷணத்தைச் சொல்லமுடியாது. இதனுல்த்தான் அநுபூதியில் பன்னிரண்டாவது பாட்டில்

சும்மா இரு சொல் அற

என்று உபதேசிக்கப்பட்டிருக்கிறது. எனவே ஒன்ருய் விளங்குகின்ற ப்ரம்மத்தையே மீண்டும் மஹர்ஷியானவர் ச்வேதகேது என்ற தன் புத்திரனுக்கு

ஏகமேவாத்விதீயம் ப்ரம்ம

என்ற மந்திரத்திஞல், அப்பா ச்வேதகேது! ஸஜாதீய-விஜாதீய-ஸ்வகதபேதமாகிய பேதங்களில்லாமல் நிர்குணமாய் விளங்குகிற அத்விதீயமான ப்ரம்மத்திலேயேதான் வேதங்களுக்கெல்லாம் பரம தாத்பர்யம்.

மேலும் ஹே ச்வேதகேது! நிர்குணமாயும் ருபமில்லாமலும் இருந்துவருகிற ப்ரம்மத்தை ப்ரத்யக்ஷமாக பார்க்க முடியுமா? முடியாதா? என்பதைக் குறித்து நீ சிந்திக்கவேண்டாம். மெய்ப்பொருளைச் சொல்கிறேன் கேள்—என்று சொல்லி ஒரு ஆலமரத்தின் பழத்தை யெடுத்து அவன் கையில் கொடுத்து அதை உடை என்று சொன்ஞர். பழத்தை ச்வேதகேதுவும் உடைக்க மஹர்ஷியானவர் ச்வேதகேதுவினிடம், உடைத்த பழத்தினுள் என்ன அதிசயத்தைக் கண்டாய் என்று வினவ சிஷ்யனும் அதற்குள் அனேக, அதிஸூக்ஷ்மமான எண்ணற்ற விதைகளையே பார்க்கிறேன் என்ருன்.

மீண்டும் மஹர்ஷியானவர் சிஷ்யனிடம் அவ் எண்ணற்ற விதைகளுக்குள் ஒரு விதையை மட்டு மெடுத்து அதை உடையென்று கூறினர். ச்வேதகேது வும் அவ்விதமே செய்ய குருவானவர் அவனிடம் அதி லென்ன அதிசயம் காண்கிருய்? என்று வினவினர்.

அதற்கு ச்வேதகேது ஒன்றும் தெரியவில்லையே என்று பதில் சொன்னன்.

உடனே உத்தாலகர் என்னும் மஹர்ஷியானவர் ஹே ச்வேதகேதோ! நீ ஆலம்பழத்திற்குள் எண்ணற்ற அதிஸூக்ஷ்மமான விதைகளைப் பார்த்தாய். அது போலவே விதையை உடைத்ததும் அதனுள் ஸூக்ஷ்ம மான விதையைப் பார்க்கவில்லையே? எனவே அந்த விதையினுள் நுட்பமான விதை இல்லையென்று உன்னுல் சொல்ல முடியுமா? சொல்லமுடியாதல்லவா?

ஆதலால் பழத்தினுள் விதை யிருந்ததுபோல் விதைக்குள்ளும் ஸூக்ஷ்மமான விதையிருக்கவேண்டு மல்லவா. எனினும் அது உனக்கு ப்ரத்யக்ஷமாக எப்படி தெரியவில்லையோ அதுபோலவேதான் இந்த ப்ரபஞ்சத்திற்கெல்லாம் மூலகாரணமாய் விளங்குகிற ஸ்த்ருபமான ப்ரம்மத்தையும் ப்ரத்யக்ஷ ப்ரமாணத் திற்குப் பொருளாகச் செய்துகொள்ள முடியாது.

எனவே ச்வேதகேதோ! பழத்திற்குள்ளிருக்கும் விதையானது ப்ரத்யக்ஷமாகுமேயானுல் ஸத்ருபமான ப்ரம்மமும் ப்ரத்யக்ஷமாகும் அன்றோ.

ஆதலால் கண்களுக்குப் புலப்படும் பொருள்க ளெல்லாம் ரூபத்தோடும் குணத்தோடும் கூடியவை களே. ரூபத்தோடு கூடியவைகள் தேசபரிச்சேதத்தினு லும் வஸ்து பரிச்சேதத்தினுலும் இருந்து வருவதால்

கால பரிச்சேதத்திஞல் இருந்தே வருகிறதென்பதே பரம தாத்பர்யம்.

எனவே முருகப்பெருமானுடைய ஸ்வருபமானது 'அருவாய்' இருப்பதால் அதாவது நிர்குணமானதிஞல் ப்ரத்யக்ஷ ப்ரமாணத்திற்கோ, அல்லது அனுமான ப்ரமாணத்திற்கோ, அல்லது உபமானத்திற்கோ அல்லது சப்த ப்ரமாணத்திற்கோ, அல்லது அர்த்த ப்ர மாணத்திற்கோ, அல்லது அனுபவப்ரமாணத்திற்கோ விஷயமாகாததேயாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா.

ஆகையால் ரூபமற்ற நிர்குண ப்ரம்மத்தைப்பற்றி ஞானிகள் பேசாமல் அந்த நிர்குண ப்ரம்மமாகவே இருந்து வருகிருர்கள்.

எனவே ஹே முருகா! நீ 'அருவாய்' அதாவது ரூபமில்லாமல் கேவலம் நிர்குணப்ரம்மமாய் விளங்குங் காலத்தில் அபௌருஷமான வேதங்கள்கூட உன் னுடைய அருகில் வருவற்கு சக்தியில்லாததாக ஆகி விடுகிறது. இங்ஙிலையில் உன் ஸ்வருபத்தை யாரால் அறியமுடியும்? பேசமுடியும்? எண்ணமுடியும்?

ஹே பரம்பொருளே! உலகிலுள்ள எண்ணற்ற கோடி ஜீவன்கள் அவர் அவர்களுடைய கர்மவசத்தால் அதற்கேற்றவாறுள்ள சரீரத்தை யடைந்து பலவித மான துன்பத்தை அனுபவிக்கிருர்கள். அப்படியெடுக் கப்படுகின்ற சரீரங்களும் எண்ணற்ற கோடி யோனி வகைளைச் சேர்ந்ததாக இருக்கின்றன. அதுமட்டுமல்ல ஜிவகோடிகளோ வெனில் மாயைக்கு அடிமையாகவும் ஆகிவிடுகிருர்கள்.

முருகா! இவ்விதம் அல்லல் பட்டு வருகிற ஜீவ கோடிகளையெல்லாம் கைகொடுத்துதூக்குவதற்காகவே

நீ மேலான கருணையினால் இந்தப் புண்ணிய பூமியில் அப்ராக்ருதமான மங்கள ஸ்வரூபத்தோடு பற்பல திரு அவதாரங்கள் ஆங்காங்கு எடுத்து உனது பொற் பாதங்களினால் இந்தப் பூமியை அலங்கரித்து வரு கிறாய். அதுமட்டுமல்ல.

அந்த அந்த பக்தர்களுக்குத் தகுந்தவாறும், அவர் அவர்களுடைய மனோபாவத்திற்கு தகுந்தவாறும் உரு வத்தை யெடுக்கின்றாய்.

எனவே ஹே முருகா! உன்னை 'உருவாய்' என்று சொல்லி 'வருவாய்' என்று அழைக்கின்றேன். ஏன் தெரியுமா?

உருவத்தோடு வரும் பொருளெல்லாம் உன் னுடைய ஸ்வரூபமேயாகும். திருவிளையாடல் செய்து ஜீவகோடிகளின் ஜன்மாவைஸபலம் செய்வதற்காகவே நீ கருணையினால் உருவத்தை யெடுக்கின்றாய்.

ஹே பரம்பொருளே! நீ குகனாக அவதாரம் செய்து ஸ்ரீ ராமபிரானை ஆனந்திக்கச் செய்தாய், மாசற்ற பர தனின் பெருமையை உலகில் நிலை நாட்டினாய், மழலைச் சொற்களினால் இடையனாகயிருந்து ஔவைத் தாயை ஆனந்திக்க வைத்தாய். திருஞானசம்பந்தசுவாமியாக அவதரித்து தென்னகத்திற்கே ஒரு புத்துயிரை அளித் தாய்.

அண்டசராசரங்களும் உன்னுடைய அதீனத்தி லிருக்கிற தென்பதை நிலைநாட்டினாய்.

முருகா 'அருவாய்' இருக்கின்ற நீ 'உருவாய்' வருகின்றாய், அதனாலேயே நீ அருள்வாய் அப்பனே.

குமரா! உன்னுடைய லீலாவினோதங்கள் சிற்றெ றும்பிலிருந்து சிவபெருமான் உள்பட எல்லோரு டைய உள்ளங்களையும் கொள்ளை கொள்ளுகின்றது.

நிர்குண ஸ்வருபத்தில் அதாவது அருவ நிலையில் உன்னுடைய ஸ்வருபமகிமையை அறிய முடியவில்லை ஐயனே. நீ உருவத்துடன் ஸகுண மூர்த்தியாய் வரும் பொழுது ஒவ்வொரு உயிர்களும் உன்னுடைய திரு விளையாடலில் பிணைந்து விடுகின்றன.

முதன் முதலில் உனது திருவிளையாடலை ஜகத்தின் ச்ருஷ்டிகர்த்தாவான ப்ரும்மாவிடம் செய்து காட்டினாய்.

இரண்டாவதாக ஞானப்பெருங்கடலாகிய சிவ பெருமானுடன் ஞானமொழிபேசித் திருவிளையாடல் செய்தாய்.

மூன்ருவதாக, எப்படி சூரபத்மாஸுரனை அழிப்பது–எப்படி சூரபத்மாஸுரனை அழிப்பது என்ற ஒரே சிந்தனையினுல் மூழ்கிக் கிடந்த மும்மூர்த்திகளுக்கும்'' ஒரு விளையாட்டாகத் தோன்றும்படி சூரசம்ஹாரம் என்ற மாபெரும் திருவிளையாடலைச் செய்து காட்டி மும்மூர்த்திகளையும் அதிசியிக்கும் வண்ணம்செய்தாய்.

நான்காவதாக

தீராத விளையாட்டுப்பிள்ளை கண்ணன்
தெருவிலே பெண்களுக்கு ஓயாத தொல்லை

என்றும்

நவனீத சோரன்

என்றும் புகழப்படும் லீலாவினோதங்களை செய்துவரும் கிருஷ்ண பரமாத்விற்கெல்லாம் மேலான திருடனாக நீ இருந்துகொண்டு செம்மான் மகளாகிய வள்ளி தேவியைத் திருவடிவந்து

'வள்ளித் திருமணம்'

என்ற திருவிளையாடலைச் செய்து காட்டிய மங்கள ஸ்வருபமல்லவா உன்னுடைய திவ்ய ஸ்வருபம்.

ஹே பரம்பொருளே உன்னுடைய கல்யாணகுணங்களையும் உன்னுடைய திருவிளையாடலாகிய கதாம்ருதத்தையும் ச்ரவணம் செய்தும் மனனம்செய்தும் அரிதாகிய மானிட ஜன்மாவை ஸபலம் செய்து கொள்ள முன்வரும் ஜீவகோடிகளுக்கு உன் ஸ்வருபத்தைக் காட்டாமல் மாயையானவள் மறைத்துவருகிறாள்.

எனவே ஜீவகோடிகள் மாயையின் கார்யமாகிய இந்த நச்வரமான உலக சுகத்திலேயே இன்பத்தைக் காண்கிறார்களே தவிர உன்னுடைய கதாம்ருதத்தில் லயிக்கிறதில்லை. ஆதலால் அவர்கள் பக்திமார்க்கத்தின் பெருமையை அனுபவிக்க முடியாமல் ஆகி விடுகிறார்கள்.

அதுபோலவே ஹே முருகா! உன்னுடைய 'ஸத்–சித்–ஆனந்தம்' என்ற ஸ்வருபத்தில் முதன் முதலாக விளங்குகின்ற தத்வமே 'ஸத்' என்ற தத்வமாகும். அந்த 'ஸத்' என்ற தத்வத்தையே 'உளதாய்' என்று சொல்லுகிறார்கள். அதாவது நீ மூன்று காலங்களிலும் அழியாத பரம்பொருளாகவே இருக்கிறாய்.

ஆக ஜாக்கிரம்–ஸ்வப்பனம்–ஸுஷுப்தி என்ற மூன்று நிலைகளிலும் அப்படியே கௌமாரம்–யௌவ்வனம் வார்த்திக்யம் என்ற மூன்று அவஸ்தைகளிலும் அழியாமல் சாக்ஷிருபமாய் விளங்குகிறாய்.

தவிர நீ 'சித்' ஸ்வருபமாய் அதாவது ஸ்வப்பிரகாசமாய் இருக்கிறாய்.

எனவே மாயையானவள் 'ஸத்' என்ற தத்வத்தையும் 'சித்' என்ற தத்வத்தையும் மறைக்கிறதில்லை.

ஒவ்வொருவனுக்கும் தன்னுடைய இருப்பில் அதாவது ‘தான்’ இருக்கிறேமோ இல்லையா யென்பதில் சந்தேகம் ஏற்படுவதில்லை. இதுஅநுபவஸித்தமாயிருப்பதால் ‘உளது’ என்பதினுல் சொல்லப்படுகிற ‘ஸத்’ என்ற அம்சத்தை மாயை யானவள் மறைப்பதில்லை.

அதுபோலவே வித்வானுக்கு ‘தான்’ வித்வானென்றும் அவித்வானுக்கு ‘தான்’ அவித்வானென்றும் ஸ்பஷ்டமாக ப்ரகாசிக்கிறபடியினுல் ‘சித்’ என்று சொல்லப்படும் ‘அறிவு’ ஆகிய அம்சத்தையும் மாயை யானவள் மறைப்பதில்லை.

ஆனுல் ஒருவனுக்கும் ‘தான்’ ஸுகஸ்வருபியென்ற அனுபவமில்லை. அதாவது ஆத்மா ஆனந்தமயம் என்ற ஞானமும் அனுபவமும் இல்லை. அதனுல் ‘ஸத்-சித்-ஆனந்தம்’ என்ற ஆத்மஸ்வருபத்தின் ஆனந்தாம்சத்தையே மாயையானவள் மறைக்கிருள்.

ஆனந்தாம்சமே ‘ஸத்-சித்-ஆனந்தம்’ என்பதிலுள்ள முக்கியமான அம்சமாகயிருப்பதினுலும் அதையே மாயையானவள் மறைத்து, ஆத்மாவை பிரும்மமாக அனுபவிக்க முடியாமல் செய்கிருள். இதனுல் ஜீவகோடிகள் யதார்த்த நிலையில் ஆனந்தஸ்வருபிகளாகயிருந்தாலும் கூட தங்களைக் கேவலம் துக்கஸ்வருபிகள் என்றே கருதி உலக வாழ்க்கையில் சுகத்தைக்காண அல்லல்பட்டு உழலுகிருர்கள்.

ஆக மாயையினுல் மறைக்கப்பட்ட ஜீவகோடிகளுக்கு மாயையை ஜயித்து ஸ்வயமாக வெளிவர சக்தியில்லை. ஹே முருகா! உன்னுடைய கதாம்ருத ஸாகரத்தில் எவர்கள் ஸதாகாலமும் ரமித்து வருகிருர்களோ அவர்களே மாயையை ஜயித்தவர்களாக ஆகிருர்கள். நீ பக்திக்கு கட்டுபட்டதினுல்தான் ‘அருவ

நிலையிலிருந்து 'உருவ' நிலையை அடைகிருய். உருவ நிலையில் நீ செய்த திருவிளையாடல்களை ஸதாகாலமும் ச்ரவணம் செய்து கொண்டும் பேசிப் பேசி மகிழ்ந்து கொண்டுமிருப்பதே பக்தியோகமாகும்.

நிர்விகல்ப ஸமாதி நிலையிலிருந்து கலைந்து வந்து சுகப்ரும்ம ஸ்வாமியானவர் ஏழு நாட்களில் உயிரை விடப் போகும் பரீக்ஷித் மஹாராஜாவிற்கு ஸ்ரீமத் பாகவதம் என்று சொல்லப்படும் கிருஷ்ண கதையை சொல்ல வந்தாரென்ருல், யாரால் பக்தியோகத்தின் பெருமையையெடுத்து சொல்ல முடியும்.

ஆதலால் இறைவனுடைய ஆனந்தாம்சமான தத்வத்தை மறைக்கிற மாயையைப் போக்கடிக்க ச்ரவணம் —கீர்த்தனம்—ஸ்மரணம்—பாதஸேவனம் —அர்ச்சனம் —வந்தனம்—தாஸ்யம்— ஸக்யம் — ஆத்மநிவேதனம் என்ற ஒன்பதுவிதமான பக்திகளுக்குள் ஏதாவது ஒரு பக்தியை செய்வானேயாகில் அவன் ஜன்மஸாபல்யத்தை அடைவான் என்பதில் ஐயமில்லை.

ஆதலால் ஹே முருகா! நீ அருவ நிலையிலிருந்து உருவ நிலையில் தோன்றி எல்லா உயிர்களையும் ரமிக்க வைக்கிருய். எல்லா தேசத்திலும் எல்லா காலங்களிலும் எல்லா வஸ்துவிலும் உன்னுடைய ஸ்வரூபத்தை தியானம் செய்துவரும் ப்ராணிகளே பக்தர்களாவார்கள்.

அதிலும் எவன் ஒருவன் தன் கண்முன் புலப்படும் பிராணிகளையெல்லாம் உன்னுடைய வாஸஸ்த்தலமாகிய தேவாலயம் என்ற மனேபாவத்துடன் பாவித்து, அந்த பிராணிகளுடைய சரீரத்திற்குள் அந்தர்யாமியாக நீயே இருக்கிருய் என்ற திருடமான ப்ரக்ஞையினுல் 'நான்-நீ' என்ற பேத புத்தியினுல் உண்டாகும் த்வேஷ

மில்லாத மனதினுல் உன்னை பூஜித்து வருகிருனே அவனே பக்தகோடிகளுக்குள் மேலான பக்தனுக விளங்குகிருன் அன்ருே.

எனவே பக்தர்களிடத்திலும் அவர்களுடைய சொல்லிலும் அறிவிலும் செயலிலும் நீ ப்ரத்யக்ஷமாகவே இருந்து வருகின்ருய். அதிகம் சொல்வானேன்.

எல்லாவற்றிலும் இறைவனையே பார்த்துக்கொண்டிருந்த குழந்தை ப்ரஹ்லாதனிடம் அம்மாபெரும் ஹிரண்யக கசிபுவானவன் ஆணவத்தினுல் ஹே ப்ரஹ்லாதா! இடைவிடாமல் நாராயணு - நாராயணு என்று சொல்லிக்கொண்டே ஒரு மூல சக்தியை சுட்டிக்காட்டிக் கொண்டிருக்கிருயே, அவ்விதம் நீ சொல்லும் அந்த நாராயணன் இந்தத் தூணில் இருக்கிருனு என்று கேட்டவுடன், ப்ரஹ்லாதனுேவெனில் தூணிலும் இருப்பார் - துரும்பிலும் இருப்பார் என்று சொல்ல அதனைக் கேட்ட ஹிரண்யக கசிபுவானவன் தூணை உடைக்க அதிலிருந்து அக்கணமே இறைவன் நரஸிம்ம மூர்த்தியாய் தோன்றவில்லையா?

தனது காலானது முதலையினுல் கௌவப்பட்டு நதியிற்குள் இழுக்கப்பட்டபோது கஜேந்திரன் என்ற யானையானது ஆதிமூலமே என்று கதறினதும் இறைவன் தோன்றிக் காப்பாற்றவில்லையா?

ஆதலால் ஒருவனுடைய எண்ணத்திலேயே நீ உருவாகிருய், எண்ணத்தினுலேயே நீ உள்ளவனுக இருந்துவருகிருய். எண்ணத்திலேயே நீ உறைகிருய். நல்லோர் நினைவில் நீ நடனம் செய்கிருய். அவர்களுடைய நினைவிலிருந்து நீ இமைப்பொழுதும்கூட நீங்குவதில்லை.

ஆனல் இதற்கு மாருக சரீரத்தையே ஆத்மா வென்றும் மரணத்திற்கு பிறகு ஜன்மாவேயில்லை என்று தேகாத்மவாதிளாகவும், ஈச்வரனே இல்லை யென்று சொல்லும் நாத்திகர்களாகவும்யிருந்து வருப வர்கள் விஷயத்தில் நீ இலதாய் ஆகவே இருக்கிருய். அதாவது அவர்களுடைய எண்ணத்தில் நீ அஸத் தாகவே இருக்கிருய். அவர்களிடத்தில் நீ இருந் தாலும் இல்லாதவன் போலவே நீ மறைந்திருக்கிருய். மலடிமகன், முயல்கொம்பு முதலியவைகளை எவ்விதம் நாம் எண்ணிப் பார்க்க முடியாதோ, அதுபோல் எண்ணிக்கூட பார்க்கமுடியாத அளவில் நீ அவர் களிடத்தில் அஸத்தாகவே இருந்துவருகிருய்.

எனவே உலகில் நீயோவெனில்,

நம்பினவர்க்கு உளதாய் ஆகவும்
நம்பாதவர்க்கு இலதாய் ஆகவும்

என்றவாறு தோன்றுகின்ருய். உன்னிடத்தில் பக்தி யில்லாமல் பாபகர்மாவை செய்துவருபவர்களிடத்தில் நீ ப்ரகாசிப்பதில்லை. நீ இலதாய் ஆகயிருக்கிருய் கருணையினுல் நீ அருவ நிலையிலிருந்து உருவநிலை யில் வந்தும்கூட உன்னை பக்தி செய்யாமலிருப்பவர் கள் முடிவில் பிறந்து கொண்டும் இறந்து கொண்டும் மாறிமாறித் துன்பத்தினை அடைந்துகொண்டே இருக் கிருர்கள்.

ஆனல் ஹே முருகா! உன்னை அடைவதற்கு பக்தி மார்க்கமே சுலபமானதென்று காட்டுவதற்கே நீ உருவாய் திகழ்கின்ருய். அதுமட்டுமல்ல. அறம்– பொருள் – இன்பம் – வீடு என்று சொல்லப்படுகிற தர்மம்–அர்த்தம்-காமம்-மோக்ஷம் என்கிற நான்கு

புருஷார்த்தங்களில் மோக்ஷமென்கிற புருஷார்த்தமே மேலான புருஷார்த்தமாகயிருப்பதாலும், அந்த மோக்ஷ நிலேயே உன்னுடைய ஸ்வருபமாய் இருப்பதாலும், நீயே எண்ணற்ற கோடான கோடி உயிர்களுக்கும் 'கதியாய்' இருக்கின்ருய்.

அந்த 'கதியாய்' என்று சொல்லப்படும் மோக்ஷத்தையடைவதற்கு நீயே 'விதியாய்' தோன்றி நிற்கிருய்.

அதாவது உன்னே அருவ நிலேயில் அறிவது ரொம்ப கஷ்டமானபடியாலும், அந்த அருவநிலேயே 'அஹம்ப்ரம்மாஸ்மி' என்ற மோக்ஷ நிலேயாயும் இருக்கின்றபடியால், உருவநிலேயில் நீ மங்கள விக்ரஹத்தோடு விளங்கிவரும் ஸ்வருபத்தை அனுஸந்தானம் செய்வதே பிராணிகளுக்கு நாளடைவில் அருவநிலேயை உபாஸிக்கும் ஆற்றலேத் தரும் என்ற தத்வத்தை போதிக்கின்ற வேதங்கள் என்ன, சாஸ்திரங்கள் என்ன, புராணங்கள் என்ன, இவைகளின் ருபமாக நீ விளங்கி வருகிருய். எனவே நீ விதியாய் உலகில் திகழ்கின்ருய்.

ஆகையால் உன்னுடைய சரணுரவிந்தத்தில் மனதை அர்ப்பணம் செய்து உன்னுடைய கதாம்ருத ஸாகரத்தில் மூழ்கிக்கொண்டே இரவும் பகலும் ஒருவன் பக்திசெய்வானேயாகில் அவன் எமனுடைய கோர பற்களின் இடையில் அகப்படாமல் பிறப்பு-இறப்பு என்று சொல்லப்படும் பிறவிக்கடலேத் தாண்டுகிருன். அதாவது அத்தகைய பக்தனுேவெனில் எமனே ஒரு பொருளாக பொருட்படுத்துகிருன் இல்லே.

அரி-அயன்-அரன் ஆகிய மும்மூர்த்திகளிஞலும் அடைய முடியாததான உன்னுடைய திவ்ய சரணுர

விந்தங்களை அந்த பக்தனானவன் ஸகுண பக்தியினால் பெறும் பாக்கியத்தை அடைந்து, உன்திருவடி நிழலை வந்தடைவதற்காக அவனுக்கெதிரில் வந்து நிற்கின்ற நவரத்தினங்களினால் இழைக்கப்பட்ட விமானத்தில் ஏறும்பொழுது 'ம்ருத்யு' என்று சொல்லப்படும் இயம னுடைய சிரஸையே படியாக வைத்துக்கொண்டு அந்த நவரத்தின விமானத்தில் ஏறுகிறான் என்னும் விஷ யத்தில்,

தவ பரியே சரந்த்யகில
ஸத்வ நிகேத தயா சிரோ
த உத பதாக்ரமந்த்ய--
விகணய்ய நிர்ருதே:

என்ற வேதஸ்துதியே மேலான ப்ரமாணமாகும்.

ஆகையால் ஹே குமரா! எவ்வளவு வேதாந்தம் படித்தாலும்கூட உன்னிடத்தில் பக்தி இல்லாத போனால்மோக்ஷம் என்ற பாரமார்த்திகமான புருஷார்த் தத்தை ஒருகாலும் அடையவே முடியாது.

எனவே அடியார்களுடைய விஷயத்தில், அவர்கள் நச்வரமான ஸ்தூல சரீரத்தைவிடும் காலத்தில் நீயே திவ்யமங்கள ரூபத்துடன் அவர்களுக்குத் தரிசனம் கொடுத்து, அவர்களை ஆட்கொண்டருள்கின்றாய் அன்றோ. என்னே உன் அன்பு!

ஆனால் ஹே முருகா! மஹாதபஸ்வியானாலும் சரி, அஷ்டசித்திகளையடைந்தவனாய் இருந்தாலும் சரி, மலையினுடைய சிகரத்திலிருந்து தலைகீழாகவிழுந்தும் சரீரத்தில் ஒருவிதமான துன்பங்கள் ஏற்படாம லிருக்கும் பரமயோக வலிமையையுடையவனாக இருந் தாலும் சரி, எண்ணற்ற புண்ணிய தலங்களுக்குச்

சென்று புண்ணிய நதிகளில் ஸ்நானம்செய்து இறைவனை தொழுதவனுயிருந்தாலும் சரி, நான்கு வேதங்களையும் கரைகண்டவனுக இருந்தாலும் சரி, அநேக தான தர்மங்கள் செய்தவனுயிருந்தாலும் சரி, எண்ணற்ற யாகங்களைச்செய்தவனுனுலும் சரி, உலகில் நாம் எல்லோரையுஞ் ஜயித்துவிட்டோம் என்றமேலான கீர்த்தியை அடைந்தவனுனுலும் சரி, உன்னிடத்தில் அவர்களுக்கு மேலான பக்தி இல்லாதபோனுல் அவர்கள் ஒருகாலத்திலும் மோக்ஷமாகிய ஸாம்ராஜ்யத்தை அடையவே முடியாது என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவர்களிடத்திலுள்ள சக்திகளெல்லாம் அவர்களுக்கு பயன்படாமலேயே ஆகிவிடுகின்றன.

எனவே ஞானக் கடலாகிய உன்னை ஜீவகோடிகளாகிய நாங்கள் அடையும் பொருட்டு, அதற்கு அந்தரங்க ஸாதனமாயுள்ள பக்தி மார்க்கத்தின் மேலான நிலையை போதிக்கவே பரம்பொருளாகிய நீ,

மருவாய் மலராய்-மணியாய்
ஒளியாய்-கருவாய்-உயிராய்

என்றவாறு விளங்கித் திகழ்கின்ருய்.

ஹே முருகா! திவ்யமான மணத்தோடு நீ மருவாய் இருக்கின்ருய், நீயே மலராயும் இருக்கின்ருய். மீண்டும் நீயே அந்த மலரில் மணமாய் நிறைந்திருக்கிருய்.

அப்படியே நவரத்தினங்களாகத் திகழ்கின்ருய் அந்த ரத்தினங்களில் 'ஒளியாய்' விளங்குகிருய். நீயே சூர்யனுகவும் அக்னியாகவும் திகழ்கின்ருய்.

அதுபோலவே நீயே 'கருவாய்' இருக்கிருய். நீயே அந்த கருவிற்கு உயிராயும் இருக்கிருய்,

எனவே 'மலராய்' என்பதில் 'மருவாய்' என்பது நிறைந்திருக்கிறது. 'வருவாய்-மலராய்' என்பதினுல் மலரின் இளமைத்தன்மையே எடுத்துக் காட்டப்படுகிறது. தவிர மலர் என்று சொன்னுலே அந்தயிடத்தில் அழகானது திகழ்கின்றது என்பது இயல்பு. ஆகவே மருவாய் மலராய் என்பதினுல் இயற்கையான மணம், இளமை-அழகு-தெய்வீகத்தன்மை இவைகளேபோதிக்கப்படுகின்றன. மேலும் இறைவனுடைய கண்களையும் பாதத்தையும் மலராக வர்ணிப்பதினுலும், மலர்களானது இறைவனுடைய பாதத்தில் அர்சனுரூபமாக ஆகி மந்திர சக்தியுடன் ஐக்யத்தையடைவதினுலும் மலர்கள் தெய்வீகத்தன்மையை கொண்டவைகளே. தெய்வீகமென்பதில் வ்யாபகமான சக்தியானது முக்கியமானதாயிருப்பதாலும், அந்த வ்யாபக சக்தியுடன் கூடியதாகவே மணமும் இருந்துவருகிறது.

எனவே மணம்-இளமை-கடவுள் தன்மை-அழகு ஆகிய இந்த நான்கும் முருகப்பெருமானுடைய ஸ்வரூபமாகையினுல் 'மருவாய்-மலராய்' என்பதினுல் முருகனையே போதிக்கின்ருர்.

மேலும் 'மலராய்' என்பதினுல் ஒவ்வொரு பிராணிகளுடைய இதயமாகிய மலரையே அறியவேண்டும். அந்த மலரில் 'மருவாய்' நிற்கிருன் முருகப்பெருமான். இந்நிலையில் இதயமும் முருகன், இதயத்தில் நிலவி நிற்கும் நறுமணமும் முருகன் என்ற அபேதானுபவம் உண்டாகிறது.

ஆதலால்மலரிலிருந்து மணத்தை எப்படிப்பிரித்து பார்க்கமுடியாதோ, அதைப்போலவே ஜீவனையும் ஈச்வரனையும் பிரித்து ஜீவாத்மா பரமாத்மா என்று பிரித்துப் பார்க்கமுடியாது. இதுவே அனன்ய பக்தியாகும். தவிர பக்தியின் உச்ச நிலையும் ஆகும்.

நிற்க 'மணி' வகைகளாகவும் அந்த மணிகளில் ஒளியாகவும் முருகப்பெருமானே விளங்குகின்றார். மணிகளுடன் ஒளியானது ஐக்யபாவத்தையடைந்திருக்கும் நிலையில் இது மணி இது ஒளி என்று தனித் தனியாகவைத்து பார்க்கமுடியாது. ஒளியை நாம் பார்க்கிறோம் என்பதுதான் மணியைப் பார்ப்பது என்பது. எனவே அஹம்ப்ரும்மாஸ்மி' என்ற நிலையை அடையும் வரையில்த்தான் 'ஜீவன்—ஈச்வரன்' என்ற பேதம் தோன்றுகிறதே தவிர, பரம நிலையை அடைந்த பிறகு மணியில் ஒளிபோல் ஜீவன் விளங்குகிறான்.

தவிர மணியானது எவ்விதம் சப்தப்ரபஞ்சத்தை அடக்கி வைத்துக்கொண்டு அசையும் பொழுது சப்தத்தை யுண்டுப்பண்ணுகின்றதோ, அதைப் போலவே இந்த ஜீவனிடத்திலும் ப்ரும்ம தத்துவமானது அஞ்ஞானத்தினால் உள்ளடங்கியே இருந்து வருகிறது.

பக்திமார்க்கத்தில் ஜீவனானவன் ஈடுபடும்பொழுது பக்தியின் மஹிமையினால் ஜீவனானவன் அஞ்ஞானத்தையும் பாபகர்மாக்களையும் போக்கடித்துக் கொண்டு முடிவில்

சிவக் கேவ்லோஹம்

என்று இருந்து விடுகிறான்.

அதுபோலவே எல்லாவற்றிற்கும் மேலாக விளங்கி வரும் ஒளியாய் இறைவன் இருக்கிறான். அந்த இறைவனுடைய ஜோதியே ஆத்ம ஜோதியாகயிருப்பதாலும் அந்த ஆத்ம ஜோதியின் ப்ரகாசத்தினால்த்தான் ஸகலமும் பிரகாசிக்கின்றது என்ற ப்ரக்ஞையை யடைந்த ஜீவனானவன் ஸ்வப்ரகாசசிதேகரஸமாகிய ஆத்ம ஜோதியையே உபாஸிக்கிறான் அன்றோ.

ஆத்ம ஜோதியானது இந்த சரீரத்தில் பிரகாசிப்பதனுல்த்தான் நமது கண்களானது ஒளியையுடையதாக இருந்து வருகிறது.

அதுபோலவே 'கருவாய்' என்பதினுல் ஸ்தூல பூதங்களினுல் செய்யப்பட்ட சரீரமாய் விளங்குவது மல்லாமல் அந்த சரீரத்தை சேதனமாய் செய்கிறவன் என்றும் அறியவேண்டும். தவிர அந்த சரீரத்திலுள்ள உயிருக்கு உயிராய்விளங்குகிருன் என்பதை, உயிராய் என்பதினுல் அறிய வேண்டும். எனவே உயிருக்கு உயிராய் இறைவன் விளங்குகின்றபடியால், இந்த மானிடப்பிறவியானது இறைவனை அடைவதற்காகவே ஏற்பட்டது என்ற ஒரே எண்ணத்துடன் செய்யும் பக்தியே தீவ்ர பக்தியாகும்.

எனவே இந்தப் பாட்டில் **'அருவாய்'** என்பதினுல் நிர்குண ப்ரும்ம உபாஸனையும், **'உருவாய்'** என்பதினுல் ஸகுண ப்ரும்ம உபாஸனையும், **'மருவாய் மலராய்'** என்பதினுல் இதயாகாசமே ப்ரும்மம் என்ற உபாஸனையும், **'மணியாய்'** என்பதினுல் சப்தப்ரும்ம உபாஸனையும், **'ஒளியாய்'** என்பதினுல் ஜோதி ப்ரும்ம உபாஸனையும், **'கருவாய் உயிராய்'** என்பதினுல் சைதன்யமே ப்ரும்மம் என்ற உபாஸனையும் **'விதியாய்'** என்பதினுல் வேதப்ரும்ம உபாஸனையும், **'கதியாய்'** என்பதினுல் மோக்ஷ ப்ரும்ம உபாஸனையும், குருவாய் என்பதினுல் குருவே ஸாக்ஷாத் பரப்ரும்மம் என்ற ப்ரக்ஞையுடன் கூடிய குரு உபாஸனையும் போதிக்கப் படுகின்றது.

ஆதலால் இந்தப் பாட்டில் உருவாய் என்பதினுல் ஸகுண ப்ரும்ம உபாஸனையின் மூலமாகத்தான் முடிவில் நிர்குண ப்ரும்ம உபாஸனை செய்யும் பாக்

கியாதிசயத்தை அடைய முடியுமென்றும், அதுவே வேதங்களின் பரம ஸித்தாந்தமாக இருக்கின்றபடி யினுலும்

உருவாய் அருவாய்

என்று சொல்கிருர் அருணகிரிநாதர்.

எனவே ஒரே பரம்பொருளானது உருவாயும்–அருவாயும்–உளதாயும்–இலதாயும்-மருவாயும்-மலராயும்–மணியாயும்– ஒளியாயும் – கருவாயும் - உயிராயும்-கதியாயும்–விதியாயும் என்று பல ரூபங்களில் மாறி மாறி ஜீவகோடிகளின் அறிவில் தோன்றுவதால் பரம்பொருளின் உண்மையான ஸ்வரூபம் எது என்பதை நிர்தாரணம் செய்ய முடியாமல் ப்ராணிகள் அல்லல் பட்டு உழலுகின்ருர்கள்.

குருவின் அனுக்கிரஹத்தினுல்தான் இதன் உண்மையை அறிந்து அனுபவிக்க முடியுமென்பதினுல்த்தான் முருகப்பெருமானை

## குருவாய் வருவாய்
## அருள்வாய் குகனே

என்று குருவாய் அழைக்கின்ருர் அருணகிரியார். முருகப்பெருமான் ஞானபண்டிதனுய் விளங்கும் ரூபமே அருணகிரிநாதரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது–ஏன் தெரியுமா?

மோக்ஷ ஸாதனமான ஜீவப்ரம்ம ஐக்ய ஸாக்ஷாத்காரத்தை போதிக்கின்ற குருவைத்தான் மஹா குருவென்றும் ‘ஸத்குரு’வென்றும் சாஸ்த்திரங்கள்போதிக்கின்றது. ‘ஸத்’என்ற சப்தமானது ஸகலத்திற்கும்மூல காரண பூதமான பரப்ரும்மமே யாகும். ‘அயமாத்மா

ப்ரம்ம' என்ற வேத வாக்கினுல் பரப்ரம்மமே ஆத்மஸ்ரூபமாக பாஸித்து வரும்பொழுது, நான் ப்ரம்மம்' என்று அனுபவம் வராமலிருக்கும்படி செய்கிற மூலாக் ஞானத்தையே 'கு' என்ற சப்தத்தினுலும், அந்த மூலாக் ஞானத்தை வேதமஹாவாக்கியங்களினுல் போக்கடிக்கின்ற ஆசார்யனையே 'ரு' என்ற சப்தத்தினுல் சாஸ்த்திரங்கள் சுட்டிக் காட்டுகின்றது.

'ஸத்' ரூபமான ப்ரம்மத்தை ஆத்மஸ்வரூபமென்று உபதேசித்து ஸ்வானுபவத்தில் வரும்படி செய்கிற குருவே 'ஸத்குரு' என்ற சப்தத்தினுல் அழைக்கப்படுகிறுர்.

எனவே 'த்வம்' பதார்த்தமான ஆத்ம ஸ்வருபமும் 'தத்' பதார்த்தமான பரப்ரம்ம ஸ்வருபமும் அப்படியே த்வம் பதார்த்தமும் தத் பதார்த்தமும் ஒரே அகண்டமான வஸ்து என்று போதித்தருளுகிற ஸத்குருவும் ஒரே தத்துவம்தான் என்பதே சகலவேதங்களினுடைய பரம ஸித்தாந்தமாகும்.

ஆகவே, ஒரே பரப்ரம்மம்தான் ஆத்மாவாகவும் ஈச்வரனுகவும்–சத்குருவாகவும் வ்யவஹாரதசையில் தோன்றுகிறதே தவிர உண்மையில் ஸத்யமாகத் திகழ்வது 'அத்வைதமே' யாகும்.

எனவே ஹே செல்வக்குமரா! நான் உன்னைக் கடைசியாக வேண்டுவது என்ன தெரியுமா? ஒன்றே ஒன்றுதான்.

அப்பனே! நீ எத்தனையோ கணக்கற்ற உருவங்களில் தோன்றித் தோன்றி மறைகிறுய். ஒவ்வொரு உருவத்திலும் என்னுடைய உள்ளமானது இன்பத்தையே காண்கின்றது. எனினும் என்னுடைய உள்ளத்தில்

கரைபுரண்டு ஓடும் இன்பமாகிய அமுத வெள்ளத்தை உண்டு செய்வது எந்த ரூபம் தெரியுமா. சொல்கிறேன் கேள்.

அன்று நீ என்னைத் தடுத்தாட்க் கொள்ளும் பொருட்டு ஸகலவிதமான அலங்காரத்துடன் நின் திருக்கரத்தில்ஞானவேலைத் தாங்கிக்கொண்டு அருணை கோபுரத்தின்மேல் பாலரூபத்தில் ஞானபண்டிதனாய்த் தோன்றி எல்லையில்லாத கருணையினால் என்னைநோக்கி ஒப்பில்லாத புன்னகை நிறைந்த முகத்துடன் என்னை அப்பா! அருணகிரி என்று அழைத்து

சும்மா இரு சொல்அற

என்று உபதேசித்தருளினாயே, அத்தகைய பாலஞான ரூபத்தில் உன்னைக் காண என் உள்ளம் துடிக்கிறது.

எனவே குருவாய் வந்து அருள்வாய் குகனே என்று இதயபுண்டரீகமாகிய குகையில் ஸதாகாலமும் வாஸம் செய்துகொண்டிருக்கிற முருகனை அழைக்கின்றார் அருணகிரிநாதர்.

இவ்விதமாக கந்தர் அநுபூதியை 'ஆடும்' என்ற சப்தத்தில் ஆரம்பித்து 'குகனே' என்ற சப்தத்தில் முடிக்கிறார். பொருளோவெனில்

அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளோடு நிறைந்தது

என்று சொல்லப்படுகிற பரம்பொருளின் அதி புனித மான வாஸஸ்தலமாக இதய புண்டரீகமிருப்பதால் இதயத்தில் வாஸம் செய்துவருகிற முருகனை குருவாய் வந்து அருளும்படி வேண்டுகிறார்.

மேலும் 'ஆடும்' என்பதை குகனே என்பதுடன் சேர்த்தால்

ஆடும் குகனே

என்ற மந்திரம் கிடைக்கிறதன்றோ. ஆதலால் முருகப் பெருமான் ஆனந்தமாய் இதயபுண்டரீகத்தில் ஆடினுல்த்தான் அண்ட சராசரங்களும் ஆடுமே தவிர அன்னியில் ஒரு துரும்புங்கூட அசைவதற்கு சக்தியற்றதாகவே ஆகிவிடும். தவிர 'குகனே' என்ற சொல்லானது இதய புண்டரீகத்திற்குள் மங்காத பொலிவுடன் சுடர்விட்டு எரியும் ஆத்மஸவருபத்தை முதலில் தெரிந்துகொள்ள யத்னம் செய்வாய் என்பதை காட்டி, பிறகு வெளியில் புலப்படும் பொருள்களை பார், அப்பொழுது உண்மைப்பொருள் எதுவென்பது நன்கு தெரியும் என்பதையே எடுத்துக் காட்டுகிறது.

அவ்விதம் இறைவனை இதயமாகிய குஹையில் பார்க்கும்சக்தியை ஸத்குரு ஒருவரினுல்த்தான் அளிக்க முடியும். குருவினுடைய பூர்ணமான அருளைப்பெற்ற புண்ணியவானுடைய மெய்ஞான அனுபவ நிலையைத் தாயுமானவர் பின்வருமாறு சொல்கிறுர்.

பந்தமறு மெய்ஞ்ஞானமான மோனப்
பண்பொன்றை யருளியந்தப் பண்புக்கேதான்

சிந்தையில்லை நானென்னும் பான்மையில்லை
தேசமில்லை காலமில்லை திக்குமில்லை

தொந்தமில்லை நீக்கமில்லை பிரிவுமில்லை
சொல்லுமில்லை இராப்பகலாந் தோற்றமில்லை

அந்தமில்லை யாதியில்லை நடுவுமில்லை
யகமுமில்லை புறமுமில்லை யனைத்துமில்லை

இல்லை யில்லை யென்னினென்று மில்லாதல்ல
வியல்பாகி யென்றுமுள்ள வியற்கையாகிச்

சொல்லரிய தன்மையதா யான்றனென்னத்
தோன்றுதெல்லாம் விழுங்குஞ் சொருபமாகி

யல்லையுண்ட பகல்போல அவித்தையெல்லா
மடையவுண்டு தடையறவுன்ன றிவைற்தானே

வெல்லவுண்டிங் குன்னையுந் தானகக்கொண்டு
வேதமாய்ப் பேசாமை விளங்குந் தானே.

இத்தகைய நிலையில் நிற்பவனே கந்தர் அநுபூதி நிலையை அடைந்தவனாக இருக்கிறான். ஸ்கந்தானு பூதியை அடைந்த மஹானுபாவனோ வெனில் ப்ரம்ம மாகவே ஆகிவிடுகிறான்.

மேலும் குருவாய் வருவாய் அருள்வாய் குகனே என்பதிலுள்ள அருள்வாய் என்ற பதத்தினால் குருவின் அருளின் பெருமையை உலகத்தினர்களுக்குப் புகட்டு கிறார் அருணகிரிநாதர்.

ஹே உலகத்தினர்களே! அன்பெனும் பிடியில் அகப்படும் தெய்வமென்று ஒன்று இருக்குமேயானால் அந்தத் தெய்வம் குமரனைக் காட்டிலும் வேறில்லை.

எல்லாமாய் அல்லதுமாய் இருக்கக்கூடியது ஒரே ஒரு வஸ்துதான். அதுவே இறைவனாகும். இறைவன் ஒருவனாகவே இருக்கிறான். ரூபமற்றவனாயும் ரூப முள்ளவனாயும் இறைவன் திகழ்கிறான்.

உலகில் காண்கின்ற எல்லா தெய்வங்களும் கோடான கோடி ஜீவன்களும் முருகப்பெருமானே யாகும். முருகனே பரமகுருவாகவிளங்குகிறார். எனவே எந்த வஸ்துவை ஸத்குருவானவர்

காணவொண்ணுதது - பேசவொண்ணு
தது-காணும் நான்மறை முடிவாய்
நிறைந்தது-அத்வைதமாய் திகழ்வது-
தொடமுடியாதது - எண்ணவொண்ணு
தது-ஓத வரிய துரியங்கடந்தது-நெஞ்ச
மான ஏணிக்கெட்டாதது - காலதேசங்
கடந்தது - அடிநுனியில்லாதது-ஆதி
அந்தமற்றது - மாயையைக் கடந்தது-
தன்னந் தனியாக நின்றது-அதுவின்றி
அணுவும்அசையாது எனதிகழ்வது-மும்
மூர்த்திகளுக்கும் முதல்வனுய் நின்றது,

என்றெல்லாம் சொல்கிருரோ அந்த மஹா மஹிமை தாங்கிய எல்லாம்வல்ல பரம்பொருளே ஞானப்பழமாய் திகழும் செல்வக் குமரனுவான்.

எனவே நாம் அடைய வேண்டியது குமரனின் அருளேயாகும். அன்பெனும் வலையை நாம் வீசினுல் அவ்வலையில் அகப்படும் அருள் தெய்வமன்ருே முருகப்பெருமான்.

**வேல்முருகா - வேல்முருகா - வேல்முருகா** என்று இடைவிடாமல் சொல்லிக் கொண்டே அன்பெனும் வலையை வீசுங்கள். காவடியை எடுத்துக்கொண்டு ஆடுங்கள். குன்றெல்லாம் சென்று குன்ருதபக்தியுடன் குமரனைக் கண்குளிரக் கண்டு மகிழுங்கள்.

மனது செல்லுமிடமெல்லாம் குமரனையே பாருங்கள். வெற்றிவேல்-வீரவேல்-ஞானவேல் – சக்திவேல் என்று வீர கோஷம் செய்யுங்கள்.

கருணையாகிய பிரவாகத்தை தன்னுடைய பன்னிரு கண்களினுலும் பொழியும் பன்னிரு கை பாலகனை அநு

பூதியினுல் வாயாற அழையுங்கள். அழைத்துக் கொண்டே இருங்கள்.

நொந்து நொந்து வாடுகின்ற நெஞ்சங்களின் துயரத்தைத் துடைத்து புத்துயிர் அளிக்கும் அருள் மலேயல்லவா குமரன்.

தஞ்சமென்று சரணமடைந்தவர்களுக் கெல்லாம் அபயம் அளிக்கின்ற சக்திவேலேப் போற்றிப் போற்றிப் பாடுங்கள். அருளோடு நிறைந்த உள்ளதில் திகழ் கின்றவன் யார்? முருகப்பெருமான் அல்லவா.

எண்ணற்ற கோடி உயிர்களுக்கெல்லாம் தாயும் தந்தையுமாக முருகப்பெருமான் விளங்குகிருர். பக்தி மார்க்கத்தில் காலடியெடுத்து வைப்பவர்களின் நெஞ்ச மதனே இன்பமாகிய அமுதத்தினுல் நிரப்பி வைக்கும் சக்தி வாய்ந்ததல்லவா குமரனுடைய தர்சனம்.

எனவே குமரனின் பெருமை முழுவதும் எழுத்தில் அடங்கக்கூடியதா? அல்லது எழுதி முடிகிற விஷயமா? வாக்கினுல் சொல்லி மாளுகிற விஷயமா? அல்லது குமரனின் மகிமையை எண்ணி எண்ணி உணரத்தான் இந்த உள்ளத்திற்கு சக்தி உண்டா?

உலகத்தினர்களே! முருகனின் அருளேப்பெறவழி சொல்கிறேன் கேளுங்கள். இரு கண்களினுல் குன்று தோறும் திருவிளேயாடல் செய்யும் குமரனேக் கண்ணுர கண்டுகளியுங்கள். காதுகளினுல் குமரனின் லீலாவிநோதமான கதைகளேச் ச்ரவணம் செய்யுங்கள். நாக்கினுல் திருப்புகழையும் அனுபூதியையும் பாடுங்கள். கைகளினுல் எண்ணற்ற திருநாமங்களேச் சொல்லி அர்ச்சனே

செய்யுங்கள். நீங்கள் செய்யும் ஒவ்வொரு கார்யத்தை யும் முருகப்பெருமானுக்கே அர்ப்பணம் செய்யுங்கள்.

கரைபுரண்டு வானளாவ எழுவதற்கு வேகமாக வரும் அலைகள் அடங்குவதுபோல் உங்களுடைய எல்லா இன்னல்களும் 'வேல்முருகா' என்று ஒருதரம் சொன்னால் அடியோடு அழிந்து போகும்.

எல்லாவற்றையும் முருகனாகவே பாருங்கள். முருகனில் எல்லாவற்றையும் பாருங்கள். ஏன் தெரி யுமா? எண்ணற்ற கோடானகோடி உயிர்களெல்லாம் முருகனே ஆவான் என்ற தியானதில் பக்தி செய் யுங்கள். அப்பொழுது உங்கள் உள்ளத்தில் முருகன் தோன்றுவான். உங்கள் பக்கத்தில் முருகன் தோன்று வான். அன்புக் கடலும் அருட்கடலும் உங்கள் உள்ளத்தில் அலைமோதிக்கொண்டே இருக்கும்.

'ஸர்வம் ப்ரம்மமயம்' என உணர்வீர்கள். 'தன்னை யின்றி வேறில்லை' என்ற நிலையில் முருகனைக் காண் பீர்கள். எல்லாம் முருகன் செயல் என்ற ஒரே எண்ணத் தில் முருகப்பெருமானைத் தியானம் செய்யுங்கள்.

முருகனை ஞான பண்டிதனாய்ப் பாருங்கள். ஞானப் பழமாய்ப் பாருங்கள். ஞான குருவாய் விளங்கும் குமரனுடைய மௌனத்துடன் கூடிய புன்னகையே நமக்கு 'ப்ரம்மதத்வத்தின்' வ்யாக்யானம் ஆகும். எனவே உள்ளே இருக்கிறது ஒரே ஒரு வஸ்துதான். மண்ணினால் செய்யப்பட்ட குடம் உடையாமலிருக்கும் வரையில்தான் குடம்-மண் என்ற பேதம் தோன்றும். குடம் ஆகிய ரூபம் உடைந்துவிட்டால் மிஞ்சி நிற்பது மண் ஒன்று மட்டும்தான்.

அதுபோலவே மனமென்றும் – தேகமென்றும் சொல்லப்படும் சட்டையை நாம் அணிந்திருப்பதால்த்

தான் உள்ளேயிருக்கும் வஸ்து வேருகத் தோன்று கிறது. உடலாகிய சட்டைஅழிந்துவிட்டால், ஸத்தாக நிற்பது உள்ளே இருக்கும் ஆத்மஸ்வரூபம் ஒன்று தான். இந்த உண்மையானது அநுபவத்திஞல்தான் உண்டாகும். அந்த அநுபவம் வரவேண்டுமாஞல் குமரனின் அருள்வேண்டும். அந்த அருளும் அவன் குருவாய் வந்து அருளவேண்டும். ஆதலால்,

இடரினுந் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உன் கழல் தொழுது எழுவேன்

என்ற திருஞானசம்பந்தரின் அருள்மொழியையும்,

துடைக்கினும் போகேன்

என்ற அப்பர் சுவாமிகளின் அருள்வாக்கையும்,

அன்னே உன்னே அல்லால்
இனி யாரை நினேக்கேனே

என்றசுந்தரமூர்த்திசுவாமிகளின் பொன்மொழியையும்--

யான் உனேத் தொடர்ந்து
சிக்கெனப் பிடித்தேன்

என்ற மாணிக்கவாசக சுவாமிகளுடைய அருள் நிறைந்த மணிவாக்கையும் சிரமேற்கொண்டு, அவ் அருள்வாக்குகளில் அடங்கியுள்ள மெய்ப்பொருளே நன்குணர்ந்து, இந்த அரிதாகிய மானிடப் பிறவி யானது இறைவனே அடைவதற்காகவே ஏற்பட்டிருக் கிறது என்ற ஒரு த்ருடமான எண்ணத்துடனும் பக்தியுடனும் இருந்துகொண்டு இந்தப் பாடலேத் திருப்பித் திருப்பிசொல்லுங்கள். மனனம் செய்யுங்

கள். அப்பொழுதுகாண்பீர்கள் குமரனின் பெருமை நிறைந்த அருளினை!

எனவே குமரனை அருள்மயமாகவே பாருங்கள். அருள்மயமாகவே அனுபவியுங்கள். அருளின் வடிவமே குமரன் என்று புகழுங்கள்.

குமரனுடைய அருள் உலவாத இடமேயில்லை. அடியார்களுடைய உள்ளத்தில் அருள்மயமாகத் திகழ் கின்றான். அன்பிலும்–அழகிலும்–அறிவிலும்–கருணை யிலும் – புன்னகையிலும் – பேச்சிலும் – மணத்திலும்– இன்பத்திலும்–உருவத்திலும் – உயிரிலும் – உள்ளத் திலும்-முருகப்பெருமானின் அருளே தனக்கு நிகர் எதுவுமே இல்லையென்று உலாவுகிறது என்றால் அம் மாபெரும் அருளின் மகிமையை எப்படிப் பேசுவது? எப்படி சித்திரிப்பது? எப்பது காண்பது? எப்படி எழுதுவது? எப்படி பிடிப்பது? உண்மை இவ்விதம் திகழ, அதனை யாமோ சொல்லவல்லோம்!!! என்று சொல்லுகிறார் அருணகிரிநாதர்.

எனவே ஹே முருகா! உனது அருளினாலே,

ஆடும் பரிவேல்

என்று கந்தர் அநுபூதியை ஆரம்பித்தேன் – உனது அருளினாலேயே அனுபூதியை,

அருள்வாய் குகனே

என்று பூர்த்தி செய்தேன்.

ஹே குமரா! நான் அடைந்த அனுபூதிநிலையை ஒவ்வொரு உயிரும் அடையவேண்டுமென்பதே எனது மாறிலாத ஆசை. ஆதலால் இந்த கந்தர் அநுபூதியை யார் மேலான அத்வைத பக்தியினால் பாராயணம் செய்து வருகிறார்களோ அவர்களுடைய இதயத்திலும்

அவர்களுடைய இல்லத்திலும் நீ செல்வக் குமரனுக யிருந்து லீலாவினேதங்கள் செய்துகொண்டே இருக்க வேண்டும். அதன் மஹிமையினுல் அவர்கள் எந் நேரமும்,

வேல்முருகா வேல்முருகா வேல்முருகாவே
வேல்முருகா வேல்முருகா வேல்முருகாவே
வேல்முருகா வேல்முருகா வேல்முருகாவே
வேல்முருகா வேல்முருகா வேல்முருகாவே

என்று சொல்லிச்சொல்லி அவர்களுடைய இல்லத்தை

## வேல் முருகா

என்ற மந்திரத்தினுல் நிரப்பவேண்டும். அதை நான் செவிகொடுத்து கேட்டுக்கொண்டே யிருக்கவேண்டும்.

ஹே முருகா! எதிலும் கட்டுப்படாத அகண்டானந்த ஸ்வரூபியாகிய அத்வைதமாகிய அம்ருதத்தை வர்ஷிக்கின்றகந்தர் அநுபூதியில் நாலுமஹா வாக்யங்களின் பொருளாகிய,

சும்மா இரு சொல் அற

என்ற மந்திர ரூபமாக உலாவிக்கொண்டிருக்கிருய் என்பதில் சிறிதும் ஐயமில்லே. உனது அருள் முழுவதும் கந்தர் அநுபூதியில் சுடர்விட்டு பிரகாசிக்கின்றது. அத்தகைய அன்பு கனிந்த அருளினே என் மேலும் எண்ணற்ற கோடிக்கணக்கான உயிர்களின் மேலும் பொழிந்துகொண்டே அருள்வாய் அப்பனே.

இவ்விதம் அன்பே வடிவமான அருணகிரிநாதர் கிளி ரூபத்தில் முருகப்பெருமானின் வலது தோளில் அமர்ந்துகொண்டு முருகானந்தமாகிய ப்ரும்மா

னந்தத்தை மந்திர ரூபமான ஐம்பத்தொன்று பாடல்களாகப் பாடி உள்ளத்தையுருக்கும்படி அதற்கு

## கந்தர் அநுபூதி

என்ற திவ்ய நாமத்தையும் சூட்டி அருளினூர்.

அநுபூதியினுல் அடையப்படுவது எல்லாம் தழுவும் அத்வைதமேயாகும். ஞானத்தின் சிகரத்தையும் அபேதத்தின் உயிரையும் போதிக்கின்ற கந்தர் அநுபூதியானது முருகப்பெருமானின் பரிபூர்ணமான அருளும் அன்பும் நிறைந்த ஸ்வரூபமேயாகும்.

கந்தர் அநுபூதி புஸ்தகத்தை முருகப்பெருமானுகவேதியானித்து எவனெருவன் ப்ரதிதினமும் அதன் மேல் ஒரு பில்வதளத்தை வைக்கின்ருனே அவன் எல்லா துன்பங்களிலிருந்தும் விடுபடுகிருனென்பதில் சிறிதும் ஐயமில்லை. நவக்ரஹங்களும் அவனுக்குத் துணையாகவே இருந்துவரும். இது முற்றிலும் உண்மையேயாகும். வெறும் வாத்தையல்ல.

ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்
வியாழம் வெள்ளி சனி பாம்பிரண்டு
முடனே ஆசறு நல்லநல்ல அவை
நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே

என்னும் திருஞானசம்பந்தமூர்த்தியின் அருள்வாக்கே இந்த விஷயத்தில் மேலான ப்ரமாணமாகும் அனருே!!

**இத்தகைய மஹிமையுள்ள கந்தர் அநுபூதிக்கு அருணகிரி ஹ்ருதயம் என்ற தத்வார்த்த வ்யாக்யானமானது என்னை ஈன்றெடுத்த (காலம் சென்ற) என் தாயின் அருள் ஒன்றையே துணை**

யாகக்கொண்டு ஏதோ எனக்குத்தெரிந்த
வரையிலும் எழுதி முடிக்கப்பட்டது.

அன்பே வடிவான நீ அருணகிரிநாதரின் அருள் க்ரந்தமாகிய கந்தர் அநுபூதிக்கு எழுதிய அருணகிரி ஹ்ருதயம் என்னும் இந்த வியாக்யானத்தில் குறை ஏதேனும் இருந்தால், அக்குறைகளைப் பொறுத்து அருளுமாறு அடியார்களுக்கு எளியவனான முருகப் பெருமானையும் அருணகிரிநாதரையும் அப்படியே பக்த கோடிகளையும் தலைவணங்கி பிரார்த்தித்துக்கொண்டு,

# அருணகிரிஹ்ருதயம்

என்ற திருநாமத்தோடு கூடிய வ்யாக்யானத்தை ஸ்ரீவள்ளி தேவஸேனா ஸமேதரான ஸ்ரீசிவஸுப்ரமண்ய ஸ்வாமி திருபாதாரவிந்தங்களில் பரம பக்தியுடனும் அப்படியே மேலான வினையத்துடனும் ஸமர்ப்பிக்கிறேன்.

வேலுண்டு வினையில்லை மயிலுண்டு
பயமில்லை குகனுண்டு குறையில்லையே.



# வேல் முருகா



ஸ்ரீ

கந்தர் அநுபூதி

மஹா அநுக்கிரஹ சக்ரம்

# கந்தர் அநுபூதி மஹா அனுக்கிரஹ சக்ரத்தின் பெருமையும்-மஹிமையும்

கந்தர் அநுபூதியில் ப்ரதிஷ்டிதமாய் விளங்கும் தெய்வமோவெனில் பரப்ரம்மமாகிய முருகபெருமானே ஆவார். பரப்ரம்மமாகிய முருகப்பெருமானை ஆத்மா விற்கு வேறுபடுத்தாமல் ஆத்மஸ்வரூபமாகவே பாவித்துக்கொண்டு அநுஸந்தானம் செய்வோமே யாகில் அதுவே அகண்டாகாரவ்ருத்தி உபா ஸனையாகும்.

இவ்விதம் அந்தர் முகமாய் யிருந்துகொண்டு ஆத்மஸ்வரூபமாக முருகனை உபாஸிக்க சக்தியில்லா தவர்கள் ஆத்மஸ்வரூபமாய் பாஸித்து வரும் முருகப் பெருமானை மந்திர ரூபமாகவோ யந்திர ரூபமாகவோ பாடல் ரூபமாகவோ திவ்யமான விக்ரஹ ரூபமாகவோ அல்லது அர்ச்சனு ரூபமாகவோ உபாஸித்து வருகிறுர் கள் என்பது ஸுப்பிரஸித்தம்.

எனவே நிர்மலமாயும் ஸ்வப்பிரகாச சிதேகரஸ மாயும் சிதாநந்த மயமாயும் ஹ்ருதயமாகிய குஹையில் விளங்குவதாயுமுள்ள ஆத்மஸ்வரூபத்தை பரப்ரம்மம் என்று தியானித்து, அந்த பரப்ரம்மமாகிய ஆத்மாவே ஸுப்ரமண்ணிய கடவுளாகுமென்ற ப்ரக்ஞையுடன் அம் முருகப்பெருமானைக் கந்தர் அநுபூதி மஹா அநுக்

கிரஹ சக்ரத்தில் ஆவாஹனம் செய்து அதன் பின் அந்த சக்ரத்தில் திவ்ய புஷ்பங்களினுல் அர்ச்சனை செய்து உபாஸித்து வருவோமேயாகில் அதுவே மேலான பக்தி யோகமாகுமென்பதில் சிறிதும் ஐய மில்லை. இதில்,

முக்தா அபி லீலையா விக்ரஹம்
க்ருத்வா பஜந்தே

என்று ஆதிசங்கரபகவத்பூஜ்ய பாதாளுடைய ஸூக் தியே மேலான ப்ரமாணமாகத் திகழ்கின்றது.

## சக்ரத்தில் அடங்கிய தத்துவ மஹிமை

அபௌருஷமான வேதங்களே எல்லாவற்றிற்கும் மேலான ப்ரமாணமாக விளங்குகின்றது. ஆதலால் எதற்குமேல் ஒரு ப்ரமாணத்தை நம்மால் சுட்டிக்காட்ட முடியாதோ அந்த ப்ரமாணமே வேதமாகும்.

வேதங்களை ப்ரமாணமாக வைத்துக்கொண்டால்த் தான் நாம் கந்தர் அநுபூதியின் மெய்ப்பொருளைத் தெரிந்துகொள்ள முடியும். ஏனெனில் அநுபூதியில் உலாவிக்கொண்டிருப்பவன் வேதபுருஷனுகிய முருகப் பெருமானே ஆவான் அன்ருே!

ஆதலால் சக்ரத்திலுள்ள நாலு வாசல்கள் ருக்வேதம்—யஜுர் வேதம்—ஸாம வேதம்—அதர்வண வேதம் என்கிற நான்கு வேதங்களையே குறிக்கின்றது.

அந்த நான்கு வேதங்களின் ஆறு அங்கங்களே சிக்ஷை—வியாகரணம்—நிருக்தம்—கல்பம் —சந்தஸ்— ஜ்யோதிஷம் என்பவைகளேயாகும்.

இன்ன எழுத்துக்கு இன்ன ஸ்வரமென்பது வேதத்தின் முதல் அங்கமாகிய சிக்ஷையில் விஸ்தாரமாக சொல்லப்பட்டிருக்கிறது. எழுத்துக்களில் 'அ' காரத்திலிருந்து 'க்ஷ'காரம் முடிய 51 எழுத்துக்கள். இதில் 16 உயிர் எழுத்துக்களும் 35 மெய்யெழுத்துக்களும் அடங்கியுள்ளது. ஆக இந்த 51 அக்ஷரங்களும் பராசக்தியினுடைய ஸ்வரூபமாகும். எனவே இந்த 51 அக்ஷரங்களையும் **மாத்ருகா** அக்ஷரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த 51 அக்ஷரங்களே வேதங்களின் ஜீவநாடியாக இருந்து வருகிறது.

இந்த 51 பீஜாக்ஷரங்களை ஸ்வரூபமாகக் கொண்ட 51 பாடல்களையே யந்திரத்திலுள்ள 51 தளங்கள் சுட்டிக்காட்டுகிறது.

வேதங்களின் பரமகாஷ்டை ஞானத்தில் முடிவடைந்தாலும்கூட அந்த வேத புருஷனாகிய முருகப்பெருமானை அடைவதற்கு பக்தி மார்க்கமே சிறந்ததாக் விளக்குகின்றபடியால், நான் செய்கிறேன் என்ற கர்த்ருத்வ அபிமானமும் பலாபிமானமும் இல்லாமல் ஈச்வர ஆராதனையாகிய கர்ம மார்க்கத்தை செய்து கொண்டும், அப்படி செய்கிற ஸத்கர்மாவினால் மனதை நிர்மலமாகச் செய்துகொண்டு எல்லாம் முருகப்பெருமானின் ஸ்வரூபமே என்ற ஞானத்தையடைந்து, முருகப் பெருமானால் கந்தர் அநுபூதியில் 12-வது பாட்டில் உபதேசித்தருளிய

## சும்மா இரு சொல் அற

என்ற மந்திர மயமான மஹாவாக்கியத்தை இடைவிடாமல் பொருளுணர்ந்து அநுஸந்தானம் செய்து வருவதே மேலான ஞான மார்க்கமாகும்.

'சும்மா இரு சொல் அற' என்னும் மந்திரத்தின் பொருளை உணர்கிருன் என்பதே ஆத்ம ஸ்வருபத்தை முருகப்பெருமாளுக அனுபவிக்கிருன் என்பதாகும். எனவே அத்வைத ஞானத்தையடைந்த மஹான்கள் செய்து வரும் ஸகுண பக்தியைத்தான் மேலான கீதா சாஸ்திரமானது அனன்ய பக்தியென்று போதிக்கின்றது.

ஆதலால் எவ்விதம் ஒருவன் தன்னுடைய அழகை கண்ணுடியில் பார்த்து இதயத்தில் மகிழ்கிருனே, அதுபோலவே ப்ரும்ம ஞானியும்கூட தன்னுடைய ஸ்வருபத்தை முருகப்பெருமாளுக ஸகுண மூர்த்தியில் பார்த்து மகிழ்ச்சியடைகிருனே தவிர, அன்னியில் தான் உபாஸிக்கும் வஸ்து தன்னைக்காட்டிலும் வேறுபட்டது அதன் மூலமாக நாம் மகிழ்கிறோம் என்று எண்ணி மகிழ்கிருன் இல்லை.

ஆதலால் யந்திரத்தில் நான்கு திக்குகளிலும் த்வாரமுள்ள மூன்று ப்ரகாரங்களோவெனில் முருகப் பெருமானின் கடாக்ஷத்திற்கு நாம் எல்லோரும் பாத்திரமாவதற்கு அந்தரங்க ஸாதனமாகவுள்ள கர்ம மார்க்கமென்ன—ஞான மார்க்கமென்ன—அனன்ய பக்தி மார்க்கமென்ன—இவைகளையே எடுத்துக் காட்டுகின்றது. எனவே அனன்ய பக்தியினுல் முருகப்பெருமாளுனவர் கட்டுப்பட்டுவிடுகிருர் என்ற உண்மையையே எடுத்துக்காட்டுகிறது யந்திரத்தில் '51' ன்று தளங்களையும் ஒட்டியிருக்கிற வளையம் போன்ற ரேகையானது

மேலும் பக்தி மார்க்கத்தில் காலடி எடுத்து நாம் வைப்போமேயாகில், அக்கணமே அஷ்டதிக்கு பாலகர்களான இந்திரன்—அக்னி—யமன்—நிருதி—வருணன்—

வாயு—குபேரன்—ஈசானன் ஆகிய தேவதைகள் நமக்கு துணையாகவும் நம்மை அனுக்கிரஹிப்பதற்காகவும் அவர் அவர்களுடைய ஸ்தானத்தில் வந்து நின்று கொள்கிறார்கள். இதையே உள்பாகத்திலுள்ள எட்டுத் திக்குக்களைக் குறித்துக் காட்டுகிறது.

மேலும் இவ்வுலகில் ஸமஸ்த்த விதமான க்ஷேமங்களை நாம் அடைவதற்கு மூலகாரணம் ஆறுபடை வீட்டினையுடைய முருகப்பெருமானுடைய கடாக்ஷவீக்ஷணமேயாகுமென்பது யாவரும் அறிந்த உண்மையாகும். இந்த தத்வத்தை ஒட்டியே யந்திரத்திலுள்ள 12 தளங்கள் முருகப்பெருமானுடைய 12 கனிந்த இன்ப ரஸத்துடன் கூடிய திருநயனங்களை எடுத்துக் காட்டுகிறது.

முருகப் பெருமானுடைய பன்னிரு கண்களின் கருணை நிறைந்த பார்வையாகிய அம்ருதவர்ஷத்திற்கு நாம் பாத்திர பூதர்களாவோமேயாகில் நம்மை பன்னிரு கை பாலன் தனது பன்னிரு கைகளினால் அணைத்துக் கொள்கிறான் என்பதையே விளக்குகிறது உள்ளடங்கியிருக்கிற 12 தளங்கள்.

இத்தகைய நிலையையடையும் பக்தர்களிடத்திலும் அவர்களுடைய இல்லத்திலும் அஷ்டலட்சுமிகள் தாண்டவமாடுவார்கள். அஷ்ட ஸித்திகள் அவர்களிடத்தில் தலைவணங்குகின்றன.

எனவே அடியார்களிடத்தில்அடங்காத தத்துவமேயில்லை. அடியார்களிடத்தில் ஸகலமும் அடங்குவதற்கு மூலகாரணம் அவர்களுடைய பேதமற்ற அனன்ய பக்தியேயாகும். அனன்ய பக்தியை ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் அலை மோதி ஓயாமல் அடிக்கும்படிச் செய்வது கந்தர் அநுபூதியேயாகும்.

கந்தர் அநுபூதியில் நிறைந்து நிலவி நிற்கின்ற முருகப்பெருமானுடைய மூலமந்திரமே 'சரவணபவ' என்ற ஷடக்ஷரீ மஹா மந்திரமாகும்.

அந்த 'சரவணபவ' என்கிற ஆறு அக்ஷரங்களின் ஸ்தானமே, யந்திரத்தின் மத்தியிலுள்ள 'ஷட்கோண மாகும்.'

ஷடக்ஷரீ மந்திரமே மந்திரங்களுக்கு தாரக மந்திர மாக இருந்துவருகிறது. சாற்றும் ஏழு கோடி மந்திரங் களும் சரவணபவ என்கிற மந்திரத்தில் அடங்கிவிடு கின்றபடியால் ஷடக்ஷரீ மந்திரோபாஸனையே மேலான மந்திரோபாஸனையாகும்.

இந்த உண்மையை எடுத்துக்காட்டுகிறது ஷட் கோணத்திற்கு மத்தியிலுள்ள ஏழு மேகலையாகிய ரேகைகள்.

மேலும் யந்திரத்திலுள்ள ஏழு மேகலையாகிய ரேகைகளின் மத்தியில் காணப்படுகின்ற 'பிந்துவில்' 'இச்சாசக்தி—கிரியா சக்தி—ஞான சக்தி' ஆகிய மூன்று சக்திகளும் ஒன்ருய் கலந்து சிவசக்தி என்ற நிலையில் ஒரே சக்தி ஸ்வரூபமாய் வள்ளி தேவஸேனு சமேத சுப்ரமண்ணிய ஸ்வாமியினுடைய பரிபூர்ண ஸ்வரூபம் நித்திய ஸாந்நித்யத்தை அடைந்திருப் பதினுல் பிந்துவில்

### ஏக மேவா த்வித்தீயம் ப்ரம்ம

என்ற ப்ரம்ம தத்வமானது மிளிர்விட்டுப் பிரகாசிக் கின்றது. இந்நிலையில் முருகப்பெருமானேவெனில் அணுவிற்கு அணுவாயும் மகத்துக்கு மகத்தாயும் இருந்துவருகிருர்.

ஆகவே, எவனொருவன் வேதங்களைசரணமடைந்து கந்தர் அநுபூதியை அனன்ய பக்தியுடன் பாராயணம் செய்து வருகிருனே, அவன் நாளடைவில் முருகப் பெருமானுடைய 12 விதமான கருணைநிறைந்த கடாக்ஷங்களுக்குப் பாத்திரமாகிருன். அந்த பன்னிரண்டு விதமான கடாக்ஷங்கள்

ஞாநம் ச ஸத்யம் ச சம: ச ச்ருதம் ச
அமாத்ஸர்யம் ஹ்ரீ: திதிக்ஷா அநஸூயா
யக்ஞச்ச தாநம்ச்ச தம: த்ருதிச்ச
ஏதே வ்ரதா த்வாதச: ப்ராஹ்மணஸ்ய

என்று சாஸ்திரங்கள் வர்ணிக்கின்றன.

அதாவது அத்வைத ஆத்ம ஞானம், ஸத்யம் பேசுதல், மனோ நிக்ரஹம், வேதாந்த விசாரம், பொருமையில்லாமை, அதர்மம் செய்வதில் வெட்கம், சீதோஷ்ணுதிகளை சமமாக பார்ப்பது, குணத்தில் குற்றத்தை ஆரோபணம் செய்யாமலிருப்பது, யாகம் செய்வது, ஸத்பாத்திரத்தில் தானம் செய்வது, இந்திரியங்களை அடக்குவது, ஸத்கர்மாவில் தைர்யத்தை அடைவது ஆகிய இந்தப் பன்னிரண்டு குணங்கள் ப்ரம்ம நிஷ்டர்களை அலங்கரிக்கின்றபடியால், இந்த 12 மங்களகரமான கல்யாண குணங்களையே பக்தர்களிடத்தில் முருகப்பெருமான் தன்னுடைய பன்னிரண்டு நேத்திரங்களினுல் வர்ஷிக்கின்ருர். அதுமட்டுமல்ல.

இத்தகைய பாக்யத்தையடைந்த அந்த புண்ணியவானனவன் முருகப்பெருமானின் பன்னிருகைகளினுல் வாரியெடுத்து அணைக்கப்படவும் படுகிருன். இந்நிலையில் அஷ்டலக்ஷிமிகள் அவனை கடாக்ஷிக்கிருர்கள்.

அஷ்டதிக்கு பாலகர்கள் துணையாகயிருந்து நோயற்ற வாழ்வோடும் குறைவற்ற செல்வத்தோடும் அவனை காப்பாற்றி வருகிறார்கள். மேலும் அஷ்ட ஸித்திகளும் தலைவணங்குகின்றபடியால் அப் பக்தனானவன் அஷ்ட ஸித்திகளின் மஹிமையைக் கண்டு வியப்படைகிறான் இல்லை. எல்லாம் முருகனின் திருவிளையாடலேயென்று எண்ணி உள்ளத்தில் மகிழ்கிறான்.

இதன் மஹிமையினால் முருகப்பெருமானே திவ்யமான மங்கள விக்ரஹத்தோடு கூடிய ரூபத்தில் ஞான பண்டிதனாய் தோன்றி ஷடக்ஷரீ மஹா மந்திரத்தின் பெருமையையும் ரகஸ்யத்தையும் உபதேசித்தருளி, அம் மஹா மஹிமை தாங்கிய சரவணபவ என்ற ஷடக்ஷரீமந்திரத்தினுள் ஏழு கோடி மந்திரங்களும் அடங்கியிருப்பதை அப் பக்தனுக்கு காண்பித்து அதன்பின்பு, பிந்துவில் ஸானித்யத்தை யடைந்திருக்கிற

பரப்ரம்ம தத்துவமே
ஆத்மஸ்வருபமாகும்

என்பதைப் போதித்து முடிவில் அப் பக்தனுக்கு பேரின்பமாகிய

## அஹம்ப்ரஹ்மாஸ்மி

என்ற நிலையையடையும்படி செய்கிறார் என்றால், என்னே முருகப்பெருமானின் மாறிலாத கருணை.



# அனுக்கிரஹ சக்ரத்தின் பூஜா விதியும் பெருமையும்

இந்த சக்ரமானது மேன்மேலும் அனுக்கிரஹத்தையே செய்து வருமே தவிர, அன்னியில் பக்த கோடிகளுக்கு ஒரு விதமான துன்பத்தையும் உண்டு பண்ணவே பண்ணுது. பூர்ணசந்திரனுனது எப்படி நம்முடைய உள்ளத்தைக் குளிரும்வண்ணம் செய்கிறதோ அதுபோலவே இந்த சக்ரமும் நம்முடைய துன்பங்களே போக்கி உள்ளத்தை குளிரும்வண்ணமே செய்யும். இதனுலேயே இதற்கு **கந்தர் அநுபூதி மஹா அநுக்கிரஹ சக்ரம்** என்று பெயர்.

இந்த சக்ரத்தை தங்கத்திலோ, வெள்ளியிலோ தாம்ரத்திலோ, பஞ்சலோகத்திலோ அல்லது விபூதியிலோ வரைந்து தினமும் எவன் பூஜை செய்துவருகிருனே, அவனுக்கு வள்ளி தேவஸேன ஸமேதராக முருகப்பெருமான் காட்சியளித்து அவனுக்கு ஸகல விதமான ஆபீஷ்டங்களேயும் அளித்துவருகிருர் என்பதில் சிறிதும் ஐயமில்லே.

எனவே சக்ர பூஜையை ஆரம்பிப்பதற்கு முன்னுல் சுத்தமாக ஸ்னனம் செய்து உடல் முழுவதும் விபூதி தாரிகளாகயிருந்துகொண்டு விக்கின நிவாரணத்திற்காக விக்னேச்வரரை

**ஸுமுகாய நம:**

என்று தொடங்கும் ஷோடச நாமங்களிஞல் அர்ச்சனே செய்து தேங்காய் பழம் பாயஸம் வடை முதலியவைகளே வைத்து மஹா நிவேதனம் செய்யவேண்டும்.

முதன் முதலில் அஷ்டோத்திரத்திலுலோ அல்லது ஸகஸ்ர நாமத்தினுலோ அல்லது திரிசதியினுலோ சக்ரருபமாய் விளங்கும் முருகப்பெருமானே அர்ச்சிக்க வேண்டும்.

பிறகு கந்தர் அநுபூதியிலுள்ள பாடல் ஒவ்வொன்றையும் சொல்லிக்கொண்டு நமஸ்காரம் செய்வானேயாகில் அவன் அதிசீக்கிரத்தில் அமோகமான பலனை அடைகிருன் என்பதில் ஐயமில்லை. நமஸ்காரம் செய்ய சக்தியில்லாதவர்கள் பாராயணம் செய்தாலே போதும். அதுவே அர்ச்சனையாகும்.

ஏனெனில் தூய்மையான வாயினுல் வேதங்களைப் பாடுகின்ற சிவபெருமானே சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பார்த்து அன்பனே!

அன்பில் பெருகிய சிறப்பில் மிக்க
அர்சனை பாட்டே ஆகும் ஆதலால்
மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடு

என்று சொல்லி அருளுகிருர் என்ருல் வெறும் கந்தர் அநுபூதி பாராயணமே அர்ச்சனையாக மாறி முருகப் பெருமானை மகிழ வைக்கிறது என்பதைச் சொல்லவும் வேண்டுமா.

எனவே சக்ர பூஜையில் பக்தியின் பெருமையே பொலிவுடன் தலைதூக்கி நிற்கின்றது.

கந்தர் அநுபூதியிலுள்ள 51 பாடல்களும் 51 மாத்ருகா அக்ஷரங்களின் ஸ்வருபங்களாக விளங்குகின்றபடியாலும், அந்த 51 பாடல்களே 51 தளங்களாக சக்ரத்தில் விளங்குகின்றபடியாலும், ஒவ்வொரு தளங்களையும் ஒவ்வொரு ஸகஸ்ரமாக பாவித்துக்கொண்டு 51,000 ஆவர்த்தி கந்தர் அநுபூதியை எந்த ஒரு பக்தனுனவன் பாராயணம் செய்கிருனே

அந்த பக்தனானவன் தன்னுடைய பாராயண ஆவர்த்தி பூர்த்தியாகும் காலத்தில், ஞானிகளும் யோகிகளும் முனிவர்களும் எந்த முருகப்பெருமானை தங்களுடைய இதய புண்டரீகத்தில் குழந்தை ரூபமாய் பாவித்துக் கொண்டு ஸதாகாலமும் ரமித்துவருகிறார்களோ, அந்த ஞானப்பழமாய் விளங்கும் முருகப்பெருமானை தன்னுடைய இதயத்தில் பரம்பொருளாக அனுபவித்துக்கொண்டு அதன் மஹிமையினால் அந்தப் பரம் பொருளையே ஸகலவிதமான ஸௌந்தர்யாதிசயங்களுடன் கூடிய குழந்தை ரூபத்தில் திருக்கரத்தில் ஞானவேலைத் தாங்கி கொஞ்சிக் கொஞ்சி மழலைச் சொற்களை தேன் சொட்டச் சொட்ட பேசிக்கொண்டு திருவிளையாடல் செய்துவருகிற குழந்தை குமரனை கந்தர் அநுபூதி அநுக்ரஹ சக்ரத்தின் மத்தியிலுள்ள பிந்து ஸ்தானத்தில் கண்குளிர முதன் முதலில் ஸகுண மூர்த்தியாகப் பார்த்து அநுபூதியாகிய கடலில் மூழ்கி,

வேல்முருகா வேல்முருகா வேல்முருகா
வேல்முருகா வேல்முருகா வேல்முருகா

என்று நாவினால் உச்சரித்துக்கொண்டே நாதப்ரும்மத்தில் லயத்தினையடைகிறான் அன்றோ.

இத்தகைய புண்யவானேவெனில் அனுக்கிரக சக்ரத்திலுள்ள ஒவ்வொரு தத்வங்களிலும் புன்னகை பொழியும் குழந்தை முருகனையே பார்த்துப் பார்த்து கண்குளிரும் வண்ணம் மகிழ்வான் அன்றோ.

பிந்து ஸ்தானத்தில் கண்ட முருகனையே ஏழு வளைந்த ரேகையினால் குறிக்கப்படுகின்ற ஏழுகோடி மந்திரங்களில் அந்தர்யாமியாகயிருந்து அந்த அந்த மந்திரரூபமாக விளங்கும் தெய்வமாகக் காண்கிறான்.

பிறகு ஷட்கோணத்தினுல் ஸூசிப்பிக்கப்படுகின்ற ஷடக்ஷரீ என்று சொல்லப்படும் சரவணபவ என்ற மூலமந்திரத்தில் முருகனை பார்க்கிருன். மறுக்ஷணமே ஏழுகோடி மந்திரங்களையும் ஷடக்ஷரீ மந்திரத்தில் அடங்கியிருப்பதையும் பார்த்துப் பார்த்து மகிழ்வான்,

அதுமட்டுமல்ல. குழந்தை குமரனுடைய பாத ரேணுவில் குடிகொண்டிருக்கும் அஷ்டலக்ஷ்மிகள் தன்னிடத்தில் தாண்டவமாடுவதையும், அஷ்டஸித்திகள் தன்னிடத்தில் தலைவணங்கி நிற்பதையும் கண்டு குமரனின் பெருமையை எண்ணி எண்ணி மகிழ்ந்து கொண்டிருக்கும்பொழுதே சக்ரத்திலுள்ள எட்டு தளங்களில் குழந்தை குமரன் மாறி மாறி விளையாடிக் கொண்டு பக்தனை ஆனந்திக்கச் செய்கிருர்.

தன்னை அன்பினுல் மார்பில் அணைத்துக் கொள்ளும் பன்னிரு திருக்கரங்களின் பெருமையை பிரகாசப் படுத்துகின்ற, பன்னிரு தளங்களில் குழந்தை குமரன் ஞானவேலைத் தன்னுடைய பொற்கரத்தில் வைத்துக்கொண்டு லீலை செய்கிற ஒரு அதியற்புத மான வைபவத்தை அந்த பக்தனுனவன் பார்த்துப் பார்த்து இன்பமயமாய் திகழ்கின்ருன் அன்ருே.

இதற்கெல்லாம் மூலகாரணம் முருகப்பெருமானின் திருஷ்டியில் ததும்புகின்ற கனிவுடன் கூடிய கருணு ரஸம் அல்லவா! ஆஹா! அந்த மாபெரும் கருணை யானது என்ன என்ன காரியங்களை செய்துவிடுகிறது. ஞானத்தை அள்ளி அள்ளியெடுத்து ஊட்டுகிறது.

முருகப்பெருமானின் பன்னிரு திரு நயனங்களோ வெனில் கருணுகரஸத்தால் பூரிதமாக இருக்கின்றது. இத்தகைய கருணுத்ருஷ்டியினுல் நாம் பரிசுத்தனுக

வேண்டுமானல் எத்தனை புண்ணிய கர்மாவை செய்திருக்க வேண்டும் தெரியுமா? வேல்முருகா வேல் முருகா என்ற மந்திரத்தை எத்தனைகோடி வாய்விட்டுக் கதறி சொல்லியிருக்க வேண்டும் தெரியுமா?

பூர்வ ஜன்மாக்களில் செய்திருக்கிற புண்ணியமே இந்த ஜன்மாவில் நமக்கு இடைவிடாமல் முருக பக்தியை ஊட்டுகிறது.

எனவே சக்ரத்தில் 51 தளங்களுக்குள் முதல் ரேகையில் ப்ரதிஷ்டிதமாயுள்ள 12 தளங்கள், தாமரை இதழ்களைப்போல் மிருதுவாயும், பூர்ண சந்திரனைப் போல் குளிமையாயுமுள்ள முருகனின் 12 திரு நயனங்களையே எடுத்துக்காட்டுகின்றபடியால், அந்த பன்னிரண்டு தளங்களிலும் குமரன் தன்னுடைய லீலாவிநோதங்களைச் செய்துகொண்டு கருணையாகிய அம்ருதத்திறல் நிறைந்த கடாக்ஷத்தால் பக்தனை நினையும்படி செய்து வைப்பதுமல்லாமல், அந்த பக்தனை தன்னுடைய புன்சிரிப்போடுகூடிய கடாக்ஷமாகியஅமுதத்தை பானம் செய்யும்படியும் செய்கிறுர் முருகப்பெருமான்.

ஆதலால் அனைத்திற்கும் முருகப்பெருமானின் ஒப்பிலாத கருணையும் அருளுமே மூலகாரணமாக இருக்கின்றதென்பதினுல் அல்லவா,

அவன் அருளாலே அவன்தாள் வணங்கி

என்று திருவாசகத்தில்மாணிக்கவாசகசுவாமிகள் ஸித்தாந்தம் செய்கிறுர்கள். என்னே அருளின் பெருமை. அருளினுல் அடையமுடியாததொன்றுண்டோ.

ஆதலால் முருகப்பெருமானுடைய அருளினையடைவதற்கு மூலகாரணமாய் விளங்கும் மஹாமந்திரமே 51 மாத்ருகா அக்ஷரங்களைக் கொண்ட

கந்தர் அநுபூதியாகும். அந்த 51 அருள்பாடல்களே 51 தளங்களாக சக்ரத்தில் விரிவடைந்து அந்த 51 தளங்களாகிய 51 பாடல்களிலிருந்து தனித்தனியாக எடுக்கமுடியாமல் ஒவ்வொரு பாடல்களிலும் ஆழ்ந்து அகன்று புதைந்து கிடக்கும் தத்வம்,

## ஏகமேவ அத்விதீயம் ப்ரம்ம.

என்று அதாவது 'பரப்ரம்மமாகிய முருகப்பெருமானைக் காட்டிலும் வேறு வஸ்துவே இல்லை, ஸர்வமும் பரம் பொருளாகிய முருகப்பெருமானின் மயம்' என்ற தத்துவமேயாகும் என்பதையே ஸித்தாந்தம் செய்து காட்டுகிறது சக்ரத்தில் 51 பாடல்களைச் சுட்டிக் காட்டுகிற 51 தளங்களை ஒட்டி வெளிமுகமாக இருக்கிற அந்த வளைந்த ரேகையானது.

ஆதலால் சக்ரபூஜை செய்கிற பக்தனானவன் மேலான பக்தியினால் 51 ஆவர்த்தி கந்தர் அநுபூதியைப் பாராயணம்செய்து வள்ளிதேவஸேனா ஸமேதராய் விளங்கும் பரம மங்களமூர்த்தியாகிய ஸுப்ரமண்ணியஸ்வாமியை திருப்தி செய்வானேயாகில், அவன் தன்னுடைய பாரயாணமுடிவில், எல்லாம்வல்ல முருகப்பெருமானை 51 ன்று தளங்களில் ஒரே ஸமயத்தில் பற்பல கல்யாணகுணங்களோடு கூடிய ரூபத்தில் கண்டு மகிழ்வான் என்பதில் சிறுதும் ஐயமில்லை.

அதுமட்டுமல்ல, குழந்தை ரூபத்தில் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வண்ணம் திருக்கரத்தில் ஞான வேலும், திருமேனியில் திருநீறும் கைகளில் பொற்சலங்கையும், கால்களில் பொற்சிலம்பும், இன்னும் வர்ணிக்க இயலாத அலங்காரத்துடனிருந்து கொண்டு

சக்கரத்தில் ஒரு தளத்திலிருந்து மற்ருெரு தளத்திற்கு போவதும் வருவதுமாக மாறி மாறி திருவிளையாடல்களைச் செய்து கொண்டும், மாறி மாறி மறைந்து கொண்டும், தோன்றிக்கொணடும், அநுபூதியிலுள்ள ஒவ்வொரு பாடலின் தத்வார்த்தங்களை திருவிளையாடல் மூலமாக ப்ரகடனம் செய்து கொண்டும் முடிவில் சக்ரத்தின் நாலு வாயிலாக திகிழ்கின்ற அபௌருஷமான நாலுவேதங்களை ஞானவேலினுல் சுட்டிக் காட்டி, அவ்வேதங்களின் சிகரமாஹிய **தத்வமஸி** என்ற மஹாவாக்கியத்தில் நின்று திவ்யகாட்சியையும் அளிக்கின்ற படியால், வேதப்ரமாணத்திஞல்த்தான் கந்தர் அனுபூதியின் மெய்பபொருளை அறிந்து அனுபவிக்க முடியுமென்பதை எடுத்துச் சொல்லவும் வேண்டுமா? இதஞல்தான் திருப்புகழில் அருணகிரிநாதர்,

நாத விந்து கலாதீ நமோ நம
வேத மந்த்ர ஸ்வரூபா நமோ நம
ஞானபண்டித ஸ்வாமி நமோ நம

என்று முருகப்பெருமானை வேதபுருஷஞகப்பாடி மகிழ்கிருர். நாதப்ரம்மமாகிய முருகனே

ருக்-யஜுர்-ஸாமம்-அதர்வணம்

என்ற நான்கு வேதங்களுக்குள்ளே புதைந்து கிடக்கும் புதையல். அந்த முருகப்பெருமானையே கந்தர்அநுபூதி அநுக்கிரஹ சக்ர ஸவரூபமாகக்கொண்டு கந்தர் அநுபூதி பாராயண மூலமாக சக்ர ஸவரூபத்தில் முருகனை தியானம் செய்து பக்தி செய்கிரும்.

ஆதலால் பக்தனுனவன் எந்த மனோபாவத்துடன் உபாஸித்து பக்தி செய்கிருனே, அவ்வாறே அவன் ஆகிருன், ஆலயத்திலுள்ள விக்ரகத்தை வெறும் கல்

என்று எண்ணுவானேயாகில் அது அவனுக்கு வெறும் கல்லாகவேதான் இருந்துவரும். ஆனல் அந்த விக்ரகத்தை ஒருவன் அண்டசராசரங்களையும் ஆட்டிவைக்கின்ற அகண்ட சக்தி என்று எண்ணுவானேயாகில் அது அவனுக்கு கண்கண்ட தெய்வமாகவே காட்சியை அளித்தவண்ணம் திகழ்கின்றது.

எனவே கந்தர்அநுபூதி அநுக்கிரஹ சக்ரத்தில் ''முருகப்பெருமான் பூர்ண கலையுடன் திருவிளையாடல் செய்கிருர்'' என்ற மேலான மனேபாவத்துடன் ஷோடச உபசாரங்களுடன் பூஜைசெய்து கந்தர் அநுபூதியைப் ப்ரதினமும் ஒரு ஆவர்த்தி பாராயணம் செய்துவருவோமேயாகில் நமக்கு அந்த சக்ரமே ப்ரத்யக்ஷ தெய்வமாக விளங்கிவருமென்பதில் ஐயமில்லை. இதற்கு மேலான ப்ரமாணம் பின்வரும் வேதவாக்யங்களேயாகும்.

தத்ப்ரதிஷ்டேத்யுபாஸீத | ப்ரதிஷ்டாவான் பவதி | தந்மஹ இத்யுபாஸீத | மஹான் பவதி | தந்மந இத்யுபாஸீத | மானவான் பவதி | தந்நம இத்யுபாஸீத | நம்யந்தேஸ்மை காமா: | தத் ப்ரஹ்மேத்யுபாஸித | ப்ரஹ்மவான் பவதி | தத் ப்ரஹ்மண: பரிமர இத்யுபாஸீத | பர்யேண ம்ரியந்தே த்விஷந்த: ஸபத்ந : | பரியே அப்ரியா ப்ராத்ருவ்யா: |

பொருளோவெனில் அதாவது,

“அதை நிலை என்று உபாஸித்தால் நிலையுள்ளவனுகின்ருன், அதைப் பெரிது என்று உபாஸித்தால்

பெரியவனுகவே ஆகின்ருன். அதை மனம் என்று உபாஸிப்பானேயாகில் மனதின் தத்துவங்களை அறிந்தவனுகின்ருன், அதையே சரணம் என்று உபாஸித்தால் ஸகல காமங்களும் அவனேச் சரணமடைகின்றன. அதை பரப்ரம்மம் என்று உபாஸித்தால் ப்ரம்மத்தின் தன்மையை உடையவனுக ஆகின்ருன். அதை ப்ரம்மத்தினுடைய அழிக்கும் சக்தியென்று உபாஸிப்பானேயாகில் அவனுக்கு வேண்டாதவர்கள் எல்லோரும் அழிகின்றனர்" அன்ருே,

ஆகவே அனன்யபக்தியுடன் கந்தர்அநுபூதியை பாராயணம் செய்துகொண்டு கந்தர் அநுபூதி அநுக்கிரஹசக்ரத்தில் ஒவ்வொரு பாட்டு முடிந்ததும் விபூதியினுலேயோ அல்லது பில்வதளத்தினுலேயோ அல்லது திவ்யமான புஷ்பங்களினுலேயோ அர்ச்சனே செய்து முருகப்பெருமானே எவர்கள் பூஜித்து வருகிருர்களோ, அவர்கள் முருகப்பெருமானுடைய ப்ரஸாத விசேஷத்தால் நோயற்ற வாழ்வோடும் குறைவற்ற செல்வத்துடனும் பூர்ண ஆயுளுடன் விளங்குவார்கள் என்பதில் மேல் கூறிய வேதவாக்கியமே ப்ரமாணம்.

இந்த சக்ரமானது அநுக்கிரஹிப்பதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளதால், இந்த சக்ரபூஜையானது மேன்மேலும் ஐச்வர்யத்தையேதான் தந்துகொண்டிருக்குமே தவிர அதற்கு மாருக ஒருவிதமான துன்பத்தையும் அளிக்கவே அளிக்காது.

எனவே கந்தர் அநுபூதியின் பாராயண ஆவர்த்தி அதிகரிக்க அதிகரிக்க செல்வக்குமரனின் ஸாநித்யமானது கந்தர்அநுபூதி மகா அநுக்ரஹயந்திர சக்ரத்தில் அதிகரித்துக்கொண்டே வரும். இதன் உண்

மையை பக்தர்கள் தங்களுடைய ஸ்வாநுபூதியிலேயே காண்பார்கள். இது அநுபவத்தில் காணவேண்டியது.

ஒளியும் குளிர்ச்சியும் சந்திரனிடத்திலிருப்பது போலவே கந்தர் அநுபூதியில் அன்பும் அருளும் நிறைந்திருக்கிறது. கந்தர் அநுபூதியில் நிலவி நிற்கின்ற செல்வக்குமரனே அநுபூதி யந்திர சக்ரத்தில் நிலவி நிற்பதால் கந்தர் அநுபூதி யந்திர சக்ரமானது அன்புடன்கூடிய அருளையே பக்தர்களிடம் வர்ஷித்துக் கொண்டிருக்கிறது.

எனவே கந்தர்அநுபூதி யந்திர சக்ரத்தில் விபூதியினுல் அபிஷேகம் செய்து ஒரு ஆவர்த்தி கந்தர் அநுபூதி முழுவதையும் பாராயணம்செய்து, அந்த சக்ரத்திலிருந்து விபூதியை எடுத்து குஷ்டம் முதலான தீரா நோய்களினுல் பீடிக்கப்பட்டு அல்லல்பட்டுவரும் மஹா ரோகிகளுக்குக் கொடுத்து அவர்களை

## வேல் முருகா-வேல் முருகா

என்று சொல்லிக்கொண்டே தரித்துக்கொள்ளும்படி செய்தால் அவர்களிடத்திலுள்ள தீராத நோய்கள் வந்த வழி தெரியாமலேயே வேரோடு அழிந்துவிடும் என்பதை இன்றும் ப்ரத்யக்ஷமாகக் காணலாம்.

எனவே படைத்தல் காத்தல் அழித்தல் என்ற முக்காரியங்களை செய்து வரும் மும்மூர்த்திகளும் முப்பத்து முக்கோடி தேவர்களும்—ரிஷீச்வரர்களும்—யோகிகளும் ஞானிகளும்—அண்ட சரா சரங்களில் நிலவி நிற்கிற கோடான கோடி உயிர்களும் கடலிலெழும் அலையினைப்போல் ஓயாமல்

## ‘பேரின்பம்—பேரின்பம்’

என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்களே அது எது? எல்லையில்லா துன்பத்தினால் நொந்து நொந்து வெந்து கிடக்கும் நெஞ்சுகளெல்லாம் தஞ்சமென சொல்லும் பொழுது அக்கணமே மின்னல் போல் தோன்றி இன்பமதனை வெந்து கிடக்கும் நெஞ்சமதில் நிரப்பி தன் மார்புடன் அணைத்துக் கொள்கிறதே அது எது? வாராத செல்வமதனை வரவழைத்து தீராத நோய்களைத் தீர்த்து வைக்கிறதே அது எது? அதைத்தான்

# கந்தன் கருணை

என்று வேதங்களும் உபநிஷத்துக்களும் ஓயாமல் பறை சாற்றுகின்றன. இத்தகைய கந்தன் கருணையின் வடிவமே கந்தர் அநுபூதி. கந்தர் அநுபூதியில் உலாவுகின்ற கருணையோவெனில்:— பொற்கரத்தில் ஞான வேலும்—திருமேனி முழுதும் திருநீறும்—வண்ணமலர் கைகளில் பொற் சலங்கையும்—கால்களில் பொற் சிலம்பும்—திருமார்பினில் நவரத்தினங்களினால் இழைக்கப்பட்ட ஆபரணங்களுடன் பூணலும்—நெற்றியில் திருநீற்றின்மேல் சிவந்த திலகமும்—மலர்ந்த செந்தாமரை போன்ற முகத்தில் ‘யாமிருக்க பயம் ஏன்? என்பதினைக் காட்டும் புனிதமான புன்னகையும்— சிரஸில் மாணிக்கக் கரைகட்டிய ஞானக் கொண்டையும்—கோடான கோடி உயிர்களுடைய துன்பங்களை

யெல்லாம் சுட்டெரிக்கும் வில்போன்ற புருவங்களும்—கண்களில் அன்பும் அருளும் கருணையும் நிறைந்த கனிந்த பார்வையும் கொண்டு, சிவந்த செம்பொன் திருமேனியனாய்—சிவந்த பட்டு ஆடையணிந்தவனாய்—இன்னும் ப்ரம்மனுடைய கற்பனையெல்லாம் சென்று கண்டறிய முடியாத அழகினையுடையவனாய்—ஞானப் பழமாய்—ஞான குருவாய்—ஞான பண்டிதனாய்—'ஈசருடன் ஞான மொழி பேசும்' குழந்தை குமரனாய் திருவிளையாடல் செய்கின்றது.

அக்கருணையின் வடிவமாகிய குழந்தையின் அழகினை யெல்லாம் ஒன்றாய்த் திரட்டி அன்னை பராசக்தியானவள் முத்தமிழினால் அக்குழந்தையை உள்ளம் குளிரும் வண்ணம்

# முருகா

என்று அழைக்கிறாள். அழைத்து ஸ்வர்ண கலசங்கள் போன்ற தன்னுடைய ஸ்தனங்களிலிருந்து ஞானப்பாலை ஊட்டி மகிழ்கிறாள். உடன் குழந்தை குமரனை திருமார்பினில் ஆராத காதலுடன் அணைத்துக் கொள்கிறாள். பின்பு சிவசக்தியனைத்தையும் வேல்ரூபமாகச் செய்து குழந்தை குமரனிடம் அன்புடன் கொடுக்கிறாள்.

பொற் கரத்தில் சக்தி வேலை தாங்கிவரும் குமரனை கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டே

தாரதாரையாக இரு கண்களிலிருந்தும் ஆனந்தக் கண்ணீரை விட்டுக் கொண்டு

## வேல் முருகா-வேல் முருகா

என்று அழைக்க அப் புனிதமான சொல்லிலே மேலான வியப்பினைக் கண்டு அன்னை பராசக்தி யானவள் எல்லாம் வல்ல சிவபெருமானை அழைத்து ச்ருங்காரரஸத்தினுல் புன்னகைசெய்து அப்புன்னகையின் மூலமாக இறைவனிடம் ஈசருடன் ஞானமொழி பேசப் போகிற ஞானப் பெருங்கடலையே சிவசக்தியாய் திகழும் நாம் வேல்முருகா என்று அழைக்கிறோம் தெரியுமா? என்பதினை சுட்டிக் காட்டி மகிழுகிறுள். என்னே பெருமை. பெருமையிலேமஹிமை! மஹிமையிலே அருமை! அருமையிலே உரிமை!

எனவே சாற்றும் ஏழுகோடி மந்திரங்களும்

## சரவணபவ

என்னும் 'ஷடக்ஷரத்தில்' அடக்கமென இருப் பதால் இம்மாபெரும் மந்திரத்தில் சுடர்விட்டு மிளிர்கின்ற ஞானப் பெருங்கடலே குழந்தை செல் வக் குமரனுவான்.

இத்தகைய மஹிமையுள்ள செல்வக் குமர னையே அன்னை பராசக்தி யுள்பட அண்ட சரா சரங்களும் கோடான கோடி உயிர்களும் ஒன்று சேர்ந்து கொண்டு இனிமையான முத்தமிழினுல்

## ‘வேல் முருகா’

என்று அழைக்கின்றார்கள். எனவே சொல்லச் சொல்ல மாளாத மஹிமையைக் கொண்டது வேல் முருகா என்னும் மாபெரும் தாரகமந்திரம்.

ஆகவே செல்வக் குமரனைப் பற்றி பேசாத இடமில்லை—புகழாத நாக்கில்லை—எழுதாத கையில்லை—கேட்காத காதில்லை—காணாத கண்ணில்லை—சொல்லாத நூல் இல்லை. ஏன் தெரியுமா?

அழகு அழகு என்று சொல்லுகின்றார்களே அவ் அழகனைத்தும்

## முருகு

என்பதில் அடங்கி விட்டது. அழகின் சிகரமாய் விளங்கிவரும் அன்னை பராசக்தியே ‘முருகு’ என்னும் சொல்லில் மிளிர்கின்ற அழகில் அடங்கி ஒடுங்கி விடுகிறாளென்றால் அந்த எல்லாம் வல்ல முருகப் பெருமானின் மந்திரமான வேல் முருகா என்ற நாம ஒலியில் கலந்து லயித்துயிருப்பதைக் காட்டிலும் இவ்வரிதாகிய மானிடப் பிறவியில் நாம் மேலாக அடையவேண்டிய செல்வம் என்ன இருக்கிறது?

ஸாக்ஷாத் தசரத சக்ரவர்த்தியின் ஒப்புயர் வில்லாத பெருமையையும் மஹிமையையும் வர்ணித்த பகவான் வால்மீகி மகர்ஷியாவனர்

தஸ்யத் வேவம் ப்ரபாவஸ்ய
தர்மக்ஞயஸ்ய மஹாத்மன:
ஸுதார்த்தம் தப்யமானஸ்ய
நாஸீத் வம்சகர: ஸுத:

என்று சொல்கிருர். அதாவது ஸகலவிதமான வைபவங்களுடன் கூடிய ஐச்வர்யங்களையுடைய தசரத சக்ரவர்த்தியானவர் இருந்த போதிலும் கூட கொஞ்சிக் கொஞ்சி மழலைச் சொற்களினுல் தன்னை மகிழவைக்க ‘ஒரு செல்வக் குழந்தையில்லையே—ஒரு செல்வக் குழந்தையில்லையே’ என்ற தீராத தாபத்துடனேயே தவித்துக்கொண்டிருந்தார் ரென்ருல் புத்திர செல்வமானது எத்தகைய பெருமை வாய்ந்த செல்வம் என்பதினை எடுத்துச் சொல்லவும் வேண்டுமா?

அப்புத்திர செல்வமும் செல்வக் குமரனுகவே இருந்துவிட்டால்—என்னே அதன் பாக்கியம்!!!

எனவே எவர்கள் இந்த மந்திர மயமான கந்தர் அநுபூதியை பொருளுணர்ந்து இடைவிடாமல் ப்ரதி தினமும் பாராயணம் செய்கிருர்களோ, அல்லது பாராயணம் செய்யச் சொல்லிக் கேட்டு மகிழ்கிருர்களோ அவர்கள் நிச்சயமாக நோயற்ற வாழ்வோடும் குறைவற்ற செல்வத்துடனும் இருந்து வருவதும் அல்லாமல் அவர்களுடைய இல்லத்தில் எல்லாம் வல்ல முருகப் பெருமான் செல்வக் குமரனுக அவதரித்து அவர்களை என்றென்றும் ஓயாமல் கொஞ்சிக் கொஞ்சிப் பேசும்

மழலைச் சொற்களால் எல்லையில்லாத இன்பக் கடலில் மூழ்க வைப்பார் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# ○ இது ஸத்தியம் ○

கூறும் அடியார்களின் வினை தீர்த்து அருளும் முருகப் பெருமானே இதயத்திலும் உலகத்திலும் ஒவ்வொரு உயிர்களிடத்திலும் நிறைந்து நிலவி நிற்கின்ற செல்வமாவான் என்று நாம் நமது கடைசி மூச்சுயிருக்கும்வரையில் ஒரே மனதுடன் குமரனின் மலர்சிலம்படியை இடைவிடாமல் வாழ்த்தி வணங்குவோம்.

கந்தர் அநுபூதி மஹா அநுக்கிரஹயந்திர
சக்கரத்தின் மஹிமையும் பெருமையும்
பூஜா விதியும் முற்றிற்று.

# வேல் முருகா



# !!! வேலும் மயிலும் துணை !!!

இறைவனின் அருள்மயமாகிய அருணகிரி நாதர் ஞானப்பழமாய் திகழும் முருகப் பெருமானின் வலது தோளில் கிளி ருப்த் தில் அமர்ந்து கொண்டு அருளிய கந்தர் அநுபூதிக்கு **அருணகிரி ஹ்ருதயம்** என்ற திருநாமத் துடன் கூடிய தத்துவார்த்த வியாக்யானமும்—ஸ்ரீ அருண கிரிநாதருடைய திவ்ய சரித மும்—ஸ்ரீ கந்தர் அநுபூதி மஹா அநுக்கிரஹ சக்ரத்தின் பெருமை யும் மஹிமையும் பூஜாவிதியும் தாராகாடு கிருஷ்ணய்யர் ஸ்ரீபத்மநாபன் அவர்களால் எழுதப்பட்டு ஸ்ரீ விசாலாக்ஷீ ஸமேதரான ஸ்ரீ விருபாக்ஷேச்வர ஸ்வாமி ஸன்னிதியில் பூர்த்தி செய்யப்பட்டது.

## ஸாம்பசிவார்ப்பணமஸ்து



வேல் முருகா

திருமயிலாப்பூரில்

# கந்தர் ஷஷ்டி மஹிமை

கும்மிமெட்டு

மயிலை கந்தர் ஷஷ்டி மஹிமைதனை
கண்டு களிக்க கண்ணுயிரம் வேணும்
கார்த்திகேயா உந்தன் பாதம் தனிலே
தண்டனிட்டேன் என்னைக் கார்த்தருளும்.

பஞ்சாம்ருத பால் அபிஷேகத்தை
பக்ஷமாய் கண்டு மன மகிழ்ந்தேன்
சந்தனம் விபூதி கும்பாபிஷேகம்
கண்குளிரவே கண்டு கொண்டேன்

மங்களமான அபிஷேகங்கள்
மகிழ்வுடனே ஆனபின்பு
சிங்கார வேலனே உந்தனுக்கு
திவ்ய அலங்காரம் செய்து வைத்தார்.

அர்ச்சனைகள் பல தட்டு தட்டாகவே
பக்தர்கள் எல்லாம் கொண்டு வர
வள்ளி தெய்வானை நாதருக்கு மிக
ஆனந்த மாகவே அர்ச்சித்தார்.

அன்றைய தினம் மாலைப்பொழுதினில்
கோடி ஆதித்யனை போல் ஜ்வலிக்க
மங்கள ரதத்தில் ஏறிக்கொண்டு
மங்கை உமை பாலர் வந்துநின்றார்.

சக்திவேலை முன்நிறுத்திக் கொண்டு
சூரன் இடத்தில் போர் செய்திடவே
சீக்கிரமாகவே சூரன் சிரஸை
சிங்கார வேலரும் கொய்துவிட்டார்.

யானை முகத்தோடு வந்ததொரு
அஹங்காரமான சூரன் சிரஸை
அரைநொடிதனில் கொய்துவிட்டார்
ஆறுமுகரும் ஆனந்தமாய்.

வ்யாக்ர முகம் கொண்ட சூரன் அப்போ
ஊக்க முடனே சண்டை செய்ய
ஸ்கந்தனும் மிக களிப்புடனே
சூரன் சிரஸைக் கொய்தெறிந்தார்.

சூரனும் மாயா சக்தியினுலே
கோடிக் கணக்கான ரூபங்கொண்டு
வேலவரிடத்தில் போர் செய்திடவே
சிங்கார வேலரும் சிரித்து நின்ருர்.

பாம்பினைப் போல் சீறியெழுந்த
சூரனும் அப்போர்க் களத்தினிலே
மின்னலைப் போல் தோன்றி மறையும்
வேலின் பெருமையைக் கண்ட பின்பு

இவரை ஜயிக்க முடியா தென்று
பாதத்தில் பணிய எண்ணங் கொள்ள
கார்த்திகேயா! உந்தன் கருணைவேல்
சூரனை இரு கூருய் பிரித்தனவே.

ஆடும் மயிலாய் கூவும் சேவலாய்
குஹன் பாதத்தில் வந்து பணிந்தான்
பணிந்தவுடன் பார்வதி பாலர்
பன்னிரண்டு கையால் தூக்கியெடுத்து

ஆடும் மயிலை வாகனமாய் வைத்து
கூவும் சேவலை கொடியாய் பிடித்த
குங்கும வர்ண குமரனுக்கப்போ
வானேர்கள் எல்லாம் புஷ்பம் சொரிய

மானிட ரெல்லாம் பக்தி மனதுடன்
உந்தன் திருநாமத்தை ஓதி
ஆனந்தமான காட்சி தனை
கண் குளிரவே கண்டு மகிழ்ந்தார்.

மயிலை கந்தர் சஷ்டி மஹிமைதனை
மகிழ்வுடன் நான் எடுத்துரைத்தேன்
வள்ளி தெய்வானை நாத நீரும்
குற்றம் இருந்தால் க்ஷமித்துக் காரும்.

**திருமயிலை கந்தர் சஷ்டி மஹிமை முற்றிற்று**

(பம்பாய்) ஸ்ரீமதி ஸரஸ்வதி ஸுப்ரமணியன் அவர்களால் 1944-ல் திருமயிலை ஸ்ரீ கபாலீச்வரர் கோயிலில் நடக்கும் கந்தர்சஷ்டி சூரஸம்ஹார மஹோத்ஸவத்தை பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே இயற்றப்பட்டது.

**வேலும் மயிலும் துணை**





# மங்களம்

வள்ளித்திரு நாயகர்க்கு
வடிவேலா யுதருக்கு
வடிவழகு முருகருக்கு —**மங்களம்**

எங்கும் நிறைந்ததொரு
நாதருக்கு —**மங்களம்**

மங்கையர்கள் இருவருடன்
மங்களமாய் வீற்றிருக்கும்
பக்தபரி பாலருக்கு —**மங்களம்**

பழனிமலை தன்னில்
வாழ்பவர்க்கு —**மங்களம்**

அருணகிரிக்கு அருள்
புரிந்தவர்க்கு —**மங்களம்**



# பார்வை ஒன்றே போதுமே